# முத்துத்
# தமிழ் உரை நூல்

புகுமுக வகுப்பு—1970



"பேராசிரியர்"

முத்துத் தமிழ் நிலையம்
66, பெரிய தெரு,
திருவல்லிக்கேணி : : சென்னை-5

# நன்றியுரை

இவ்வுரை நூல், புகுமுக வகுப்பு மாணவர்களுக்குப் பெரிதும் பயன்தரும் வகையில் சிறப்பாக அமைந்துள்ளது.

செய்யுட் பகுதி, பதவுரை, தெளிவுரை, விளக்கவுரை, இலக்கணக் குறிப்புக்களுடன் மிகத் தெளிவாகவும், விளக்கமாகவும் சிறப்பான குறிப்புக்களுடன் ஆக்கப் பெற்றுள்ளது.

மாணவர்கட்குப் பெரிதும் பயன்தரும் இந்நூலினை மாணவர் அனைவரும் பொன்னே போற் போற்றிப் பயன் பெற வேண்டுமென்று விரும்புகிறோம்.

இந்நூல் செம்மையாக, அமைய எல்லாவகையாலும் எங்கட்கு உதவிய பேராசிரியர் திரு. லெ. ப. கரு. இராமநாதன் செட்டியார் அவர்களுக்கும், பேராசிரியர் திரு. எஸ். வி வரதராச அய்யங்கார் அவர்களுக்கும் எங்கள் நன்றி என்றுமுரியது.

பதிப்பகத்தினர்.

# உள்ளுறை

# 1

# புறநானூறு

**சங்க இலக்கியங்கள் :** இற்றைக்குச் சற்றேறத்தாழ 2000 ஆண்டுகளுக்கு முற்பட்ட காலத்தினைச் சங்ககாலம் எனக் கூறுகின்றோம். இக் காலம், பொற்காலம் எனப் போற்றப்படும். இக் காலத்தில் தோன்றிய இலக்கியங்களே, சங்க இலக்கியங்கள் ஆகும். அவை பத்துப்பாட்டு, எட்டுத்தொகை என இரு பெரும் பிரிவுகளுள் அடங்கும். எட்டுத் தொகை நூல்கள் : 1. நற்றிணை, 2. குறுந்தொகை, 3. ஐங்குறுநூறு, 4. பதிற்றுப்பத்து, 5. பரிபாடல், 6. கலித்தொகை, 7. அகநானூறு, 8. புறநானூறு என்பன. இவற்றை,

> ''நற்றிணை நல்ல குறுந்தொகை ஐங்குறுநூறு
> ஒத்த பதிற்றுப்பத்து ஓங்கு பரிபாடல்
> கற்றறிந்தார் ஏத்தும் கலியோடு அகம்புறம் என்று
> இத்திறத்த எட்டுத் தொகை''

எனப் பழைய வெண்பா ஒன்று தொகுத்துரைக்கின்றது.

**புறநானூறு :** எட்டுத் தொகை நூல்களுள் புறநானூறு, தமிழ் மக்களின் வீரத்திற்கும், நாகரிக வாழ்விற்கும் எடுத்துக்காட்டாகத் திகழ்கின்றது. புறப்பொருளைப் பற்றிக் கூறும் நானூறு பாடல்களைக் கொண்ட நூல் ஆதலால், இந்நூல், புறநானூறு எனப் பெயர் பெற்றது. எனவே புறநானூறு என்னும் தொடர், இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்க தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை ஆகும். நானூறு என்னும் எண்ணுப் பெயர், அவ் எண்ணிக்கையைக் கொண்ட செய்யுட்களுக்கு ஆகி வந்தமையால், நானூறு—எண்ணலளவை ஆகுபெயர்.

புறம்+நானூறு=புறநானூறு. 'மவ்வீறு ஒற்று அழிந்து உயிர் ஈறு ஒப்பவும்'' என்னும் நன்னூல் விதிப்படி, நிலைமொழியில் உள்ள மகர ஒற்றுக் கெட்டுப் புறநானூறு என இயையும். நான்கு+நூறு=

நானூறு. நிலைமொழி ஈற்றில் உள்ள உயிர் மெய் கெட்டு, னகரம், லகரமாகத் திரிய, வருமொழியில் உள்ள நகரம், னகரமாகத் திரியும், பின் நிலைமொழியில் உள்ள னகரம் திரிந்த லகரம் கெடும். கெட்டு. நானூறு என இயையும்.

இந்நூல், புறப்பொருள் பற்றிக் கூறுவது; ஆதலால் இப்பொருளினாலும், நானூறு என்னும் அளவு உடையது; ஆதலால் இவ் அளவினாலும் புறநானூறு எனப் பெயர் பெற்றது. இந் நூலுக்குப் புறநானூறு என்னும் பெயரேயன்றிப் புறம், புறப்பாட்டு என்னும் வேறு பெயர்களும் வழங்கப்படுகின்றன.

**புறப்பொருள் :** எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி எனத் தமிழ் இலக்கணம் ஐந்து வகைப்படும். இவற்றுள் ஒன்றாகிய பொருள், அகப் பொருள், புறப் பொருள் என்னும் இரு பிரிவினை உடையது.

மக்கள் அடைய வேண்டிய உறுதிப் பொருள்கள் அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கு என்பர். இவற்றுள் 'வீடு' என்பது, சிந்தையும் மொழியும் செல்லா நிலைமையை உடையது; எடுத்துச் சொல்ல இயலாதது. ஆதலால், எடுத்துக் கூறத்தக்க ஏனைய மூன்றனுள் அறம், பொருள் ஆகிய இரண்டும் புறப்பொருள் என்றும், இன்பம் அகப்பொருள் என்றும் வழங்கப்படும்.

புறப் பொருளாவது அறம் செய்தலும், பொருள் ஈட்டுதலும், போர் புரிதலும் முதலிய சமுதாய வாழ்க்கை பற்றிய செய்திகளைக் கூறுவது ஆகும். ஒத்த அன்புடையார் தாமேயன்றி, எல்லாராலும் துய்த்து உணரப்பட்டு, இஃது இவ்வாறு இருந்தது எனப் பிறருக்குக் கூறப்படுவதாய்ப் புறத்தே நிகழும் ஒழுக்கம் ஆதலால், புறப்பொருள் எனப்பட்டது. இத்தகைய அறம், பொருள் ஆகிய புறப் பொருள் பற்றிக் கூறும் அரிய நூலே புறநானூறு ஆகும்.

**நூலின் சிறப்பு :** இந்நூல், பழந்தமிழகத்தில் சிறப்புடன் திகழ்ந்த முடியுடைய மூவேந்தர்களான சேர, சோழ, பாண்டியர்கள், குறுநில மன்னர்கள், வரையாது வழங்கிய வள்ளல்கள், அமைச்சர்கள், படைத் தலைவர்கள், வீரர்கள் முதலியோரின் வரலாறுகளை விளக்குகின்றது; தமிழ்நாட்டு நாகரிகத்தையும், பலவகை நீதிகளையும் உணர்த்துகின்றது. கவிதையுள்ளம் மிக்க புலவர்களின் பேருள்ளத்தைப் புலப்படுத்துகின்றது; சொற்சுவையும், பொருட்சுவையும் உடைய பாடல்களைக் கொண்டு மிளிர்கின்றது. இந் நூலின் அருமையையும், பெருமையையும் உணர்ந்த உரையாசிரியர்கள், இந்நூற் பாடல்களைத் தம் உரைகளில் மேற்கோளாகக் காட்டியுள்ளனர்.

**பாடிய புலவர்கள் :** இந் நூற் பாடல்களைப் பாடிய புலவர்களில் ஆடவரும் உள்ளனர்; மகளிரும் உள்ளனர். இவர்கள் அனைவரும் ஓர் ஊரினர் அல்லர்; ஒரு காலத்தினர் அல்லர். இவர்களால் பாடப் பெற்றவர்களும் ஒரு நாட்டினரோ, ஓர் ஊரினரோ, ஒரு காலத்தினரோ அல்லர்.

**காலம் :** இந் நூற் பாடல்களைப் பாடியவர்களின் காலம், இற்றைக்குச் சற்றேறத் தாழ 2000 ஆண்டுகளுக்கு முற்பட்டது என்பர்.

# 1. மூப்பும் உண்டோ?

## பிசிராந்தையார் பாட்டு

இவர், பாண்டிய நாட்டில் இருந்த பிசிர் என்னும் ஊரினர்: ஆந்தையார் என்பது இவரது இயற்பெயர்; எனவே, ஊர்ப் பெயருடன் சேர்த்துப் பிசிராந்தையார் என வழங்கப் பெற்றார். இவர், சோழ நாட்டு மன்னனான கோப்பெருஞ் சோழனின் வள்ளன்மையையும், புலமையையும் கேள்வியுற்று அவனைக் காணாமலேயே அவனிடம் பெருநட்புக் கொண்டார். அவ்வாறே கோப்பெருஞ் சோழனும் இவரிடம் நட்புப் பூண்டான். இந் நிலையில் கோப்பெருஞ் சோழன், வடக்கிருந்து உயிர் நீத்தான். அச் செய்தி கேட்டுப் பிசிராந்தையாரும் உயிர் நீத்தார். உணர்ச்சியொத்த உயர்ந்த நட்பிற்குக் கோப்பெருஞ் சோழனும் பிசிராந்தையாரும் சிறந்த எடுத்துக்காட்டாகத் திகழ்கின்றனர்.

பிசிராந்தையார், பாண்டியன் அறிவுடை நம்பி, கோப்பெருஞ் சோழன் ஆகியோரின் காலத்தில் இருந்தவர்; பெருமிதத்தோடும், மன அமைதியோடும் நிறைந்த பெருவாழ்வு வாழ்ந்தவர்.

**முன்னுரை :** கோப்பெருஞ் சோழன் வடக்கிருந்தான். அவனைக் காண்பதற்காகப் பிசிராந்தையார் பாண்டிய நாட்டை விட்டுப் புறப்பட்டார். அவர் வருவதற்குள், கோப்பெருஞ் சோழன், உயிர் துறந்தான். அங்கு வந்த பிசிராந்தையார் மிகவும் வருந்தினார். இந்நிலையில் அங்கிருந்த சான்றோர்கள், பிசிராந்தையாரைப் பார்த்தனர். அவர்கள், பிசிராந்தையாரைப் பற்றி நெடுங்காலமாகவே கேள்விப் பட்டவர்கள். எனவே, பிசிராந்தையார், ஆண்டில் முதியவர் என்பதனை அறிந்திருந்தனர்; ஆயினும் தலையில் நரையே இல்லாமல் பிசிராந்தையார் காட்சியளித்ததைக் கண்டு அவர்கள் வியப்புற்றனர்; நரையில்லாமைக்குக் காரணம் யாது என அவரை வினவினர். அவர்களின் கேள்விக்கு விடையாக அமைந்ததே இப்பாடல்.

"நரை வருவதற்குக் காரணம், முதுமையன்று; மனக்கவலையே ஆகும். இம் மனக் கவலை எனக்கு அறவே இல்லை. என் மனைவியும் மக்களும் அறிவு நிரம்பியவர்கள்; என்னுடைய ஏவலாளர்கள் நான் கருதியதனையே கருதும் இயல்புடையவர்கள். எனது நாட்டினை ஆளும் அரசன், முறையல்லாதனவற்றைச் செய்ய மாட்டான்; அற நெறிப்படி மக்களைக் காக்கின்றான். அதற்கு மேலாகச் சான்றோர்கள் பலர், யான் வாழும் ஊரில் வாழ்கின்றனர். எனவே மனக் கவலை இல்லாமல் இருக்கின்றேன். அதனால் என் தலை, நரைக்கவில்லை" என விடை அளித்தார் பிசிராந்தையார்.

இப் பாட்டில் அமைந்துள்ள திணை:—**பொதுவியல்;** துறை:—**பொருண்மொழிக் காஞ்சி.**

**பொதுவியல் திணை:** வெட்சி முதலிய புறத்திணைகளுக்கெல்லாம் பொதுவான இலக்கணங்களையும், அத்திணைகளில் சொல்லப் பெறாத இலக்கணங்களையும் தொகுத்துக் கூறுவது.

**பொருண்மொழிக் காஞ்சித் துறை:** இம்மை மறுமைகளில் உயிருக்கு உறுதி தரும் நிலைத்த பொருள் இன்னது என்று முனிவரும்

அவரைப் போன்ற பிறரும் அறிந்த பொருளை ஒருவனுக்கு எடுத்துச் சொல்வது.

## உரை

**யாண்டு பலவாக** - நுமக்குச் சென்ற ஆண்டுகள் பலவாக இருக்க,
**நரை இல ஆகுதல்**-தலையில் நரை இல்லை ஆகுதல்,
**யாங்காகியர் என**-எப்படி ஆயினீர் என்று,
**வினவுதிராயின்**-கேட்பீராயின்,
**என் மாண்ட மனைவியொடு மக்களும் நிரம்பினர்**-என்னுடைய மாட்சிமை பொருந்திய குணங்களை உடைய மனைவியுடன் மக்களும் அறிவு நிரம்பப் பெற்றனர்,
**என் இளையரும் யான் கண்டனையர்** - என்னுடைய ஏவலரும் யான் கருதியதனையே கருதுவர்.
**வேந்தனும் அல்லவை செய்யான்**- அரசனும் முறையல்லாதனவற்றைச் செய்யமாட்டான்,
**காக்கும்**-அறநெறிப்படி மக்களைக் காக்கின்றான்.
**அதன்தலை**-அதற்குமேல்,
**யான் வாழும் ஊர்**-யான் வாழும் ஊரில்,
**ஆன்று அவிந்து அடங்கிய கொள்கைச் சான்றோர் பலர்** - நற்குணங்களால் அமைந்து, பணியவேண்டும் உயர்ந்தோரிடத்துப் பணிந்து, ஐம்புலனும் அடங்கிய கொள்கையினையுடைய சான்றோர் பலர் வாழ்கின்றனர். (ஆதலால் நரை இல்லை.)

## தெளிவுரை

நுமக்குச் (சென்ற) ஆண்டுகள் பலவாக இருக்கத் தலையில் நரை இல்லையே! இத்தன்மையை எப்படிப் பெற்றீர்? என்று கேட்பீராயின், என்னுடைய மாட்சிமை பொருந்திய குணங்களை உடைய மனைவியுடன் மக்களும் அறிவு நிரம்பப் பெற்றனர்; என்னுடைய ஏவலரும் யான் கருதியதனையே கருதுவர்; அரசனும் முறையல்லாதனவற்றைச் செய்யமாட்டான்; அறநெறிப்படி மக்களைக் காக்கின்றான். அதற்குமேல், யான் வாழும் ஊரில் நற்குணங்களால் அமைந்து, பணிய வேண்டும் உயர்ந்தோரிடத்துப் பணிந்து, ஐம்புலனும் அடங்கிய கொள்கையினையுடைய சான்றோர் பலர் வாழ்கின்றனர். ஆதலால் நரை இல்லை!

## விளக்கவுரை

ஒருவனது வாழ்க்கை இன்பம் பெற, அவன் வாழும் வீடு, அவன் வாழும் ஊர், அவன் வாழும் நாடு என்னும் மூன்றும் இன்பம் தருவனவாக இருத்தல் வேண்டும்.

**மாண்ட என் மனைவியொடு மக்களும் நிரம்பினர் யான் கண்டனையர் என் இளையரும்**—இவ் வடிகளால், வீட்டில் இன்பமாக வாழ்ந்ததைக் கூறினார். மனைவி மக்களும் ஏவலரும் குடும்பத் தலைவனின் கருத்தறிந்து நடந்தால், வீட்டில் இன்பம் நிலவும் என்பது இதனால் பெறப்படும்.

**மாண்ட**-மாட்சிமை பொருந்திய, "மனைத்தக்க மாண்புடையளாகி," "மனைமாட்சி" என்னும் திருக்குறள்களை ஒப்பு நோக்குக.

**வேந்தனும் அல்லவை செய்யான் காக்கும்** - இதனால் நாட்டில் இன்பம் நிலவியது என்பதைக் கூறினார். நாடாள் வேந்தன் செங்

கோலனாக இருந்தால், அவனது நாட்டில் வாழும் குடிமக்கள் இன்பமாக வாழ்வர் என்பது இதனால் பெறப்படும்.

**அல்லவை** - முறையல்லாதன. இங்கே முறை என்றது, அறநூலும் நீதிநூலும் சொல்லும் நெறிகளை ஆகும். அவற்றிற்கு மாறாக நடப்பவை, அல்லவை. "அல்லவை செய்தார்க்கு அறம் கூற்றமாம்" என்னும் சிலப்பதிகாரக் கூற்றையும் ஒப்பிட்டு உணர்க.

**ஆன்று அவிந்து அடங்கிய கொள்கைச் சான்றோர் பலர்**-இதனால் ஊரில் இன்பம் நிலவியது என்பதனைக் கூறினார். நன்மக்கள் மிகுதியாக இருந்தால் இன்பமாக வாழலாம் என்பது இதனால் பெறப்படும்.

"நற்றவ முனிவரும் கற்றடங் கினரும், நன்னெறி காணிய தொன்னூற் புலவரும், எங்கணும் விளங்கிய...வஞ்சி" என்னும் மணிமேகலையையும் இங்கு ஒப்பு நோக்குக.

இம்மையில் உயிருக்கு இன்பம் தரும் நிலைத்த பொருள், வீட்டிலும் ஊரிலும், நாட்டிலும் இன்பமாக வாழ்தலே எனப் பிசிராந்தையார் கூறியுள்ளமையால் இப் பாடல், **பொருண்மொழிக் காஞ்சி என்னும் துறை ஆயிற்று.**

**இலக்கணம்**

**ஆகுதல்**-தல் விகுதி பெற்ற தொழிற் பெயர்.
**செய்யான்**-எதிர்மறை வினைமுற்று.
**காக்கும்**-செய்யும் என்னும் வாய்பாட்டு வினைமுற்று.
**ஆன்று, அவிந்து**-வினையெச்சங்கள்.
**அடங்கிய**-பெயரெச்சம்.
**வாழும்**-செய்யும் என்னும் வாய்பாட்டுப் பெயரெச்சம்.

# 2. யாதும் ஊரே

## கணியன் பூங்குன்றன் பாட்டு

இவர், சங்க காலத் தமிழ்ப் புலவர் பெருமக்களுள் ஒருவர். கணியன்—சோதிடம் வல்லவர்; பூங்குன்றன்—பூங்குன்றம் என்னும் ஊரில் வாழ்ந்தவர். எனவே இவருக்கு இப்பெயர் தொழிலாலும் இடத்தாலும் ஏற்பட்டது போலும் என்பர். பூங்குன்றம் என்பது, ஒரு நாட்டின் தலைநகர் என்று கருதுவர். இராமநாதபுரம் மாவட்டத்தில் உள்ள மகிபாலன்பட்டி என்னும் ஊரே, பண்டைக் காலத்தில் பூங்குன்றம் என வழங்கப்பட்டது. இவர் பாடியனவாக நற்றிணையில் ஒரு பாடலும் புறநானூற்றில் ஒரு பாடலும் காணப்படுகின்றன.

**முன்னுரை :** எல்லா ஊர்களும் எம்முடைய ஊர்களே; உலக மக்கள் எல்லாரும் எம் சுற்றத்தாரே என்ற பெருங் கொள்கையைக் கணியன் பூங்குன்றனார் இப்பாட்டில் எடுத்துரைக்கின்றார். எண்ணமும் சொல்லும் செயலும் திருந்திய நிலையையே பண்பாடு என்பர். இப் பண்பாட்டினை அறிந்தவர்கள், எல்லோருடைய இயல்புகளையும் அறிந்து அவருடன் ஒத்து ஒழுகுவர். அவ்வாறு ஒழுகும்போது ஏற்படும் வாழ்க்கை நிலைகளை உயிரின் இயல்பு என மதித்து நடப்பார்கள். இம் மன இயல்பினை எடுத்துக்காட்டுவதே இப்பாடல்.

இப்பாட்டில் அமைந்துள்ள **திணை: பொதுவியல். துறை: பொருண்மொழிக்காஞ்சி.** இவற்றின் விளக்கத்தை முதற்பாட்டின் முன்னுரையில் பார்க்க.

## உரை

**யாதும் ஊரே**-எல்லா ஊர்களும் எம்முடைய ஊர்களே,
**யாவரும் கேளிர்**-உலக மக்கள் எல்லாரும் எம்முடைய சுற்றத்தார்களே,
**தீதும் நன்றும்**-எமக்கு வரும் கேடும் ஆக்கமும்,
**பிறர் தர வாரா**-தாமே வருவன அன்றிப் பிறர் கொடுக்க வாரா :
**நோதலும் தணிதலும்**-துன்பப்படுதலும் அது தீர்தலும்,
**அவற்றோர் அன்ன**-கேடும் ஆக்கமும் ஆகிய அவற்றைப்போலத் தாமே வருவனவே;
**சாதலும் புதுவது அன்று**-சாதலும் இவ்வுலகில் புதிய செய்தியன்று; கருவில் தோன்றிய நாளே தொடங்கியுள்ளது.
**வாழ்தல் இனிது என**-வாழ்தலை இனியது என்று,
**மகிழ்ந்தன்றும் இலம்**-யாம் மகிழ்ச்சியடைந்ததும் இல்லை;
**முனிவின்**-வாழ்வில் வெறுப்பு வந்தபோது,
**இன்னாது என்றலும் இலம்**-வாழ்தலைக் கொடுமையுடையது என்று யாம் நினைப்பதும் இல்லை;
**மின்னொடு**-மின்னலுடனே,
**வானம் தண்துளி தலைஇ**-மழை குளிர்ந்த துளியைப் பெய்ய (அதனால்),
**ஆனது**-அமையாது,
**கல்பொருது இரங்கும்**-கல்லைப் பொருது ஒலிக்கும்,
**மல்லல்பேர்யாற்று**-வளம் பொருந்திய பெரிய ஆற்றில்,
**நீர்வழிப் படூஉம்**-நீரின் வழியே செல்லும்,
**புணைபோல்**-தெப்பம் போல,
**ஆருயிர் முறைவழிப் படூஉம் என்பது**-அரிய உயிர், ஊழின் வழியே செல்லும் என்பது,
**திறவோர் காட்சியின் தெளிந்தனம்**-நன்மையும்-தீமையும் பகுத்து அறிவோர் கூறிய நூலால் தெளிந்தோம் ;
**ஆகலின்**-ஆதலால்,
**மாட்சியின் பெரியோரை**-நன்மையால் மிக்கவரை,
**வியத்தலும் இலம்**-மதிப்பதும் இல்லை,
**சிறியோரை இகழ்தல் அதனினும் இலம்**-சிறியோரைப் பழித்தலும் அதினினும் இல்லை.

## தெளிவுரை

எல்லா ஊர்களும் எம்முடைய ஊர்களே! உலக மக்கள் எல்லாரும் எம்முடைய சுற்றத்தார்களே! எமக்கு வரும் கேடும் ஆக்கமும் தாமே வருவன. அவை பிறரால் தரப்படுவன அல்ல; துன்பப்படுதலும் அதிலிருந்து நீங்குதலும், கேடும் ஆக்கமும் போலத் தாமே வருவனவே. சாதலும் இந்த உலகத்தில் புதிய செய்தியன்று; கருவில் தோன்றிய நாளே, சாதல் தொடங்கியுள்ளது. வாழ்தலை இனியது என்று மகிழ்ச்சியடைந்ததும் இல்லை. வாழ்வில் வெறுப்பு வந்தபோது வாழ்தலைக் கொடுமையுடையது என்று யாம் நினைப்பதும் இல்லை. மின்னலுடனே மழை, குளிர்ந்த துளியைப் பெய்ய, அதனால் அடங்கியிராமல் கல்லை மோதி ஒலிக்கும் வளம் பொருந்திய பெரிய ஆற்றில் நீரின் வழியே செல்லும் தெப்பம்போல, அரிய உயிர், ஊழின் வழியே செல்லும் என்பதனை நன்மையும் தீமையும் பகுத்து அறிவோர் கூறிய நூலால் தெளிந்தோம். ஆதலால் நன்மையால் மிக்கவரை மதிப்பதும் இல்லை; சிறியோரைப் பழித்தலும் இல்லை.

**விளக்கவுரை**

கணியன் பூங்குன்றனர், அறிவு நிறைந்த பெருங் கவிஞர். நன்மை, தீமை; துன்பம், இன்பம்; சாதல், வாழ்தல்; பெருமை, சிறுமை என்பனவற்றை நன்முக அறிந்தவர்; உயிரின் இயல்பினை உணர்ந்தவர். ஆதலால் எத்தகை வேந்தரையும், வள்ளலையும் பாராட்டிப் பாடாமல் இருந்தார். இதனைக் கண்ட அவர் காலத்து அறிஞர்கள், பாடாததற்குக் காரணம் யாது என்று அவரை வினவினர். இவ்வினவிற்கு விடையாக அமைந்ததே இப்பாடல்.

**யாதும் ஊரே யாவரும் கேளிர்** :—கணியன் பூங்குன்றனர் பேரறிஞர்; சாகும் வரையில் படித்துக்கொண்டே இருக்கும் மனநிலை பெற்றவர். அதனல் அவருக்கு அனைவரும் உறவினராகவே காணப்பட்டனர். அனைவரும் உறவினராகவே, அவர்கள் வாழும் இடங்களும் அவருடைய ஊராகவே இருந்தன. "யாதானும் நாடாமால் ஊராமால் என்னொருவன், சாந்துணையும் கல்லாத வாறு" என்னும் குறளை ஒப்பு நோக்குக.

'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்னும் இவ்வடி, தமிழ்ப் புலவர்களின் உயர்ந்த—விரிந்த மனப்பான்மைக்குக் குன்றிலிட்ட விளக்காக ஒளி விடுகின்றது.

**தீதும் நன்றும் பிறர்தர வாரா** :—ஒருவருக்கு ஏற்படும் தீமையும் நன்மையும் பிறரால் வருவன அல்ல; அவரவர் செயலால் ஏற்படுவனவே. இவ்வாறு உணரும் மனநிலையை ஒருவர் பெற்ருல், யாவரும் சுற்றத்தார் ஆகிவிடுவர்.

> "பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் தத்தம்
> கருமமே கட்டளைக் கல்"

என்னும் திருக்குறள், இங்கு நினைக்கத்தக்கது.

**நோதலும் தணிதலும் அவற்ரோரன்ன** :—துன்பப்படுதலும், அத்துன்பத்தினை நீக்கிக் கொள்ளுதலும் ஒருவருக்குப் பிறரால் வருவன அல்ல. அவரவர் மன நிலையால்—செயலால் வருவனவே. இவ்வாறு ஒருவர் உணர்ந்தால், யாவரும் சுற்றத்தார் ஆகிவிடுவர்.

**சாதலும் வாழ்தலும்** :—ஒருவன், எப்போது கருவில் உருவானுனே அப்போதே சாவும் தொடங்கி விடுகின்றது; சாவு என்பது புதியதாக ஏற்படுவது அன்று. எனவே வாழ்தலை இனிமையானது என்று எண்ணி மகிழும் நிலை அவனுக்கு ஏற்படுவதில்லை. ஏனெனில் வாழ்வின் முடிவு, சாவு என்பது அவனுக்கு நன்ருகத் தெரிந்து விடுகின்றது. மேலும் வாழ்வில் வெறுப்பு வந்தபோது வாழ்க்கை கொடுமையானது என்றும் அவன் நினைப்பதில்லை. ஏனெனில் விரைவில், அவன், சாவு என்னும் கொடுமைக்கு ஆளாகப் போகின்றுன். எனவே சாதலும் வாழ்தலும் அவனது வாழ்வை—மனநிலையைப் பாதிப்பதில்லை.

> "வருந்தும் உயிர் ஒன்பான் வாயில் உடம்பில்,
> பொருந்துதல் தானே புதுமை"

என்னும் நன்னெறியின் வாக்கினையும் ஒப்பிட்டுக் காண்க.

**உயிரின் இயல்பு** :—ஆற்றில் நீர் போகும் போக்கில் தெப்பம் ஓடும். அதுபோல உலகில் ஊழ்வினைப்படி உயிர் செல்லும். அவ்

வாழ்வினைக்கு ஏற்ப இன்பமும் துன்பமும் உயர்வும் தாழ்வும், செல்வமும் வறுமையும் ஏற்படும் என்பதாம். உலகம்—ஆறு; ஊழ்—நீர். உயிர்—தெப்பம். இவ் உண்மையைப் பகுத்தறிவாளர்கள், தம் நூல்களில் கூறியுள்ளனர். ஆதலால் உயிர் என்னும் பொதுத் தன்மையால் ஒன்றுபட்டு நல்லூழினால் பெரியவராகிய மக்களைப் பாராட்டுதலும், தீயூழினால் சிறியோராகிய மக்களைப் பழித்தலும் அறிஞர்கள் செய்யார். ஆதலால் யாமும் பெரியோரைப் பாராட்டுதலும் சிறியோரை இகழ்தலும் செய்யோம்; எனவே மானிடரைப் பாடும் தொழிலில் ஈடுபடோம் என்று கூறினார். இப்பாடலால் வாழ்க்கை என்பது என்ன என்ற தெளிவான உண்மை புலப்படும். இம்மையிலும் மறுமையிலும் சென்று சேரும் உயிருக்கு உரிய உறுதிப் பொருளைக் கூறுவதால், இப்பாடல் பொருண்மொழிக் காஞ்சி என்னும் துறை ஆயிற்று.

**இலக்கணம்**

**யாதும்**-உம்-முற்றும்மை.
பிறர் **தர**-'செய' என்னும் வாய்பாட்டு வினையெச்சம்.
**வாரா**-எதிர்மறைப்பன்மை வினைமுற்று.
**வாழ்தல்**-தொழிற்பெயர்.
**இலம்**-தன்மைப்பன்மை வினைமுற்று.
**தண் துளி**-பண்புத் தொகை.
**தலைஇ**-சொல்லிசையளபெடை.
நீர்வழிப் **படூஉம்**-இசைநிறையளபெடை.
**ஆருயிர்**-பண்புத் தொகை.
**வியத்தலும்**-எதிரது தழீஇய எச்சவும்மை.

# 3. படைத்தோன் பண்பிலாளன்!

## பக்குடுக்கை நன்கணியார் பாட்டு

இவர், சங்ககாலச் சான்றோர்களுள் ஒருவர். நன்கணியார் என்பது இவரது இயற்பெயர். இவர், இவ்வுலகத்தை வெறுத்த ஞானி. ஆதலால் இவர் பையையே உடையாகக் கொண்டிருந்தார். இதனால் பக்குடுக்கை என்னும் அடைமொழி, இவரது பெயருக்கு முன் கொடுக்கப்பட்டது என்று சிலர் கூறுவர்; பக்கு-பை. உடுக்கை-ஆடை. இனி, பக்குடுக்கை என்பது இவரது ஊர்ப் பெயராக இருக்கலாம் என்றும் வேறு சிலர் கருதுவர்.

**முன்னுரை :** பக்குடுக்கை நன்கணியார், தம் வாழ்நாளில் கண்ட உண்மையை இப்பாடலால் உலகிற்கு உணர்த்துகின்றார். ஒரு வீட்டில் சாப்பறை ஒலிக்கின்றது; மற்றொரு வீட்டில் மணப்பறை முழங்குகின்றது. காதலரோடு கூடின மகளிர், பூவை அணிகின்றார்கள்; காதலரைப் பிரிந்த மகளிர், கண்ணீரைப் பொழிகின்றார்கள். இதுவே உலகம். இந்தத் தன்மைகளை அறிந்தவர்கள், இவ் உலக இன்பத்தை விரும்ப மாட்டார்கள்; வீட்டின்பத்தையே விரும்புவார்கள் என்று இவர் கூறும் மெய்ஞ்ஞானம், இவரது அனுபவத்தை-தெளிவை நன்கு காட்டுகின்றது.

இப்பாட்டில் அமைந்துள்ள திணை : பொதுவியல். துறை: பெருங் காஞ்சி.

திணை பற்றிய விளக்கத்தினை முதற்பாட்டின் முன்னுரையில் பார்க்க.

துறை: பெருங்காஞ்சி : வீடுபேறு காரணமாக நிலையாமையை உணர்த்துவது.

## உரை

**ஓர்இல் நெய்தல் கறங்க**-ஒரு வீட்டில் சாக்காட்டுப் பறைஒலிக்க,
**ஓர்இல் ஈர்ந்தண் முழவின்**-ஒரு வீட்டில் மிகக் குளிர்ந்த முழவினது (மணப்பறையினது),
**பாணி ததும்ப**-ஓசை மிக ஒலிக்க,
**புணர்ந்தோர்**-காதலருடன் கூடி மகிழும் மகளிர்,
**பூ அணி அணிய**-பூவால் ஆகிய மாலையை அணிய,
**பிரிந்தோர்**-காதலரைப் பிரிந்து வருந்தும் மகளிரது,
**பைதல் உண்கண்**-வருத்தத்தையுடைய மையுண்ட கண்கள்,
**பனிவார்ப்பு உறைப்ப**-நீர் வார்ந்து துவிர்ப்ப,
**படைத்தோன் மன்ற**-இவ்வாறு துன்பமும் இன்பமும் ஒருசேரப் படைத்தோன் உறுதியாக,
**அப்பண்பிலாளன்**-அப் பண்பில்லாதவனாகிய படைப்புக் கடவுளாம் நான்முகன்,
**இவ்உலகம் இன்னாது அம்ம**-இவ் உலகத்தினது இயல்பு கொடிது.
**இதன் இயல்பு உணர்ந்தோர்**-ஆதலால், இவ் உலகினது தன்மையினை அறிந்தவர்கள்,
**இனிய காண்க**-வீட்டின்பத்தைத் தரும் நல்ல செய்கைகளை அறிந்து செய்து கொள்க.

## தெளிவுரை

ஒரு வீட்டில் சாக்காட்டுப் பறை ஒலிக்கின்றது; மற்றொரு வீட்டில், மிகக் குளிர்ந்த முழவினது (மணப்பறையினது) ஓசை மிக ஒலிக்கின்றது. காதலருடன் கூடி மகிழும் மகளிர், பூவால் ஆகிய மாலையினை அணிகின்றார்கள். காதலரைப் பிரிந்து வருந்தும் மகளிரது துன்பத்தைக் காட்டும் மையுண்ட கண்களிலிருந்து நீர் ஒழுகுகின்றது. இவ்வாறு துன்பமும் இன்பமும் ஒருசேர இவ் உலகைப் படைத்தோன் யார் தெரியுமா? உறுதியாகப் பண்பில்லாதவனாகிய அப் படைப்புக் கடவுளாம் நான்முகனே ஆவான். இவ் உலகத்தினது இயல்ப், கொடுமையுடையது ஆகும். ஆதலால் இவ்வுலகத்தின் உண்மைத் தன்மையினை அறிந்தவர்கள், இவ்வுலக இன்பத்தினை விரும்பாமல், வீட்டின்பத்தைத் தரும் நல்ல செய்கைகளை அறிந்து செய்து கொள்க.

## விளக்கவுரை

**சாப்பறையும் மணப்பறையும்:** இவ்வுலகம், இன்பத்தின் இருப்பிடம் என்று சிலர் எண்ணினர். இதனால் போர் செய்வதிலும், செல்வம் தேடுவதிலும் ஈடுபட்டனர். இவர்களின் வாழ்வைக் கண்ட பக்குடுக்கை நன்கணியார், இவ்வுலகில் துன்பமும் உண்டு எனக் காட்ட எண்ணினார். ஓர் ஊரில் ஒரு தெருவில் ஒரு வீட்டில் சாப்பறை ஒலிக்கின்றது; அதே ஊரில் அதே தெருவில் மற்றொரு வீட்டில் மணப்பறை முழங்குகின்றது. இப்போது எண்ணிப் பார்க்க! இவ்வுலகம் இன்பமா? துன்பமா?

**மகிழ்ச்சியும் துன்பமும்:** காதலரோடு கூடி வாழ்பவர்கள் பூமாலை அணிகின்றார்கள் பிரிந்தவர்கள் கண்ணீர் சொரிகின்றார்கள். இவ்வுலகம் இன்பத்தின் இருப்பிடம் என்றால் இந்நிலை ஏன்?

இவ்வாறு இன்பமும் துன்பமும் இவ்வுலகில் நாணயத்தின் இரு புறங்களாக அமைந்துள்ளன என்பதனை எடுத்துக் 'காட்டுகின்றார். எனவே, இதற்காக இவ்வுலகத்தைப் பழித்துப் பயனில்லை. இவ்வுலகத்தைப் படைத்த நான்முகன் இருக்கின்றானே அவனே பண்பில்லாதவன். அவனால் படைக்கப்பட்ட இவ்வுலகம் கொடுமை நிறைந்தது. ஆதலால் இவ்வுலகத்தில் உள்ள இன்பத்தைக் காண்பதிலும் துன்பம் இல்லாத வீட்டுலக இன்பத்தைக் காண்பதே மெய்யறிவுடையவர்கள் செயல் ஆகும். ஆதலால் அவ்வாறு காணும் செயலில் ஈடுபடுக எனக் கூறுகின்றார்.

> *"மன்றம் கறங்க மணப்பறை ஆயின்*
> *அன்றவர்க்கு ஆங்கே பிணப்பறையாய்ப்—பின்றை*
> *ஒலித்தலும் உண்டாம் என்று உய்ந்துபோ மாறே*
> *வலிக்குமாம் மாண்டார் மனம்"*

என்னும் நாலடியார்ச் செய்யுளையும்,

> *"நிறையும் செல்வத்து எதிர்மனைகள்*
> *இரண்டில் நிகழ்மங்கல வியங்கள்*
> *அறையும் ஒலி ஒன்றினில் ஒன்றில்*
> *அழுகையொலி வந்து எழுதலும்"*

என்னும் சேக்கிழார் திருவாக்கினையும் ஒப்பிட்டு அறிக.

வீடுபேற்றின்பத்தைச் சிறந்தது என்று உணர்த்தி இவ்வுலக இன்பம் நிலையாதது என்று கூறியதால், இப்பாடல் **பெருங்காஞ்சி என்னும் துறை ஆயிற்று.**

**இலக்கணம்**

**நெய்தல்**-நெய்தல் பறை-ஆகுபெயர்.
**ஈர்ந்தண்**-மிகக் குளிர்ந்த; ஒரு பொருட்பன் மொழி.
**முழவின் பாணி**-ஆறும் வேற்றுமைத் தொகை.
**புணர்ந்தோர், பிரிந்தோர், படைத்தோன்**-வினையாலணையும் பெயர்கள்.
**வார்பு**-செய்பு என்னும் வாய்பாட்டு வினையெச்சம்.
**மன்ற**-இடைச்சொல்.
**அப் பண்பிலாளன்**-உலகறிசுட்டு.
**இன்னாது+இனிய**—முரண் தொடை.
**அம்ம**—இடைச்சொல்.
காண்க+இதன்—**காண்கிதன்**—தொகுத்தல் விகாரம்.

# 4. நல்ல நெறி

## நரிவெரூஉத் தலையார் பாடியது

இவர், ஆழ்ந்த புலமை மிக்க அறிஞர். "இவர், யாது காரணத் தாலோ தம் உடம்பு வேறுபட்டிருந்து சேரமான், கருவூர் ஏறிய

ஒள்வாட் கோப்பெருஞ்சேரல் இரும்பொறையைக் கண்ட நாளில் அவ்வேறுபாடு நீங்கித் தம் உடம்பு பெற்றனர்'' என்று புறநானூற்றின் 5-ஆம் பாட்டின் அடிக்குறிப்பும் தொல்காப்பியப் பொருளதிகாரத்தின் பேராசிரியர் உரைக் குறிப்பும் கூறுகின்றன. இவர் பாடிய பாடல்களாகக் குறுந்தொகையில் இரண்டும் புறநானூற்றில் இரண்டும் காணப்படுகின்றன.

**முன்னுரை :** சங்க காலப் புலவர்களில் பலர், அரசர்களின் போர்ச் செயல்களைப் புகழ்ந்துபாடினர். அதனால் அரசர்கள் போர் செய்வதில் மிகுந்த ஆர்வம் காட்டினர். போரால் நன்மையைக் காட்டிலும் தீமையே மிகுந்தது. இதனைக் கண்ட நரிவெரூஉத் தலையார், அச் சான்றோர்களைப் பார்த்து, 'நல்வினையைச் செய்ய முடியவில்லை ஆயினும், தீவினையைச் செய்யாதீர்கள். அதுவே யாவரும் புகழ்வது'' என எடுத்துரைத்தார். இப் பண்பாட்டினை விளக்குவதே இப் பாடல்.

இப் பாட்டில் அமைந்துள்ள திணை : **பொதுவியல்.** துறை : **பொருள் மொழிக் காஞ்சி.**

இவற்றின் விளக்கத்தை முதற்பாட்டின் முன்னுரையில் பார்க்க :

## உரை

**பல் சான்றீரே பல் சான்றீரே**-குணங்கள் பலவும் அமைந்த சான்றோரே! குணங்கள் பலவும் அமைந்த சான்றோரே!
**கயல்முள் அன்ன**-மீனினது முள்ளைப் போன்ற,
**நரை முதிர்**-நரை முதிர்ந்த,
**திரை கவுள்**-சுருங்கிய கன்னத்தினையும்,
**பயனில் மூப்பின்**-பயன் இல்லாத முதுமையையும் உடைய,
**பயன்பல் சான்றீரே** - குணங்கள் பலவும் அமைந்த சான்றோரே!
**கணிச்சிக் கூர்ம்படை** - மழுவாகிய கூரிய படைக்கலத்தினையும்,
**கடுந்திறல் ஒருவன்**-மிக்க வலியினையும் உடைய ஒருவனாகிய யமன்,
**பிணிக்கும் காலை**-பாசக்கயிற்றால் கட்டிக்கொண்டு போகும் காலத்து,
**இரங்குவிர்**-நீவிர் வருந்துவீர்.
**நல்லது செய்தல் ஆற்றீராயினும்**-நல்வினைகளைச் செய்தல் மாட்டீராயினும்,
**அல்லது செய்தல் ஓம்புமின்**-தீவினைகளைச் செய்தலை நீக்குங்கள்,
**அதுதான்**-அதுதான்.
**எலலாரும் உவப்பது** - யாவரும் புகழ்வது,
**அன்றியும்**-அல்லாமலும்,
**நல்லாற்றுப் படூஉம்**-நல்ல நெறியின்கண் செலுத்தும்
**நெறியும் அது**—வழியும் அது தான்.

## தெளிவுரை

சான்றோரே! சான்றோரே! மீனினது முள்ளைப் போன்ற நரை முதிர்ந்த சுருங்கிய கன்னத்தினையும், பயனில்லாத முதுமையையும் உடைய சான்றோரே! மழுவாகிய கூரிய படைக்கலத்தினையும் மிகுந்த வலியினையும் உடைய யமன், பாசக் கயிற்றால் கட்டிக் கொண்டு போகும் காலத்தில் நீவிர் வருந்துவீர்; ஆதலால் நல்வினைகளைச் செய்யமாட்டீராயினும் தீவினைகளைச் செய்தலை நீக்குங்கள்.

அதுதான் யாவரும் புகழ்வது; மேலும் நல்ல நெறியின் கண் செலுத்தும் வழியும் அதுவே !

### விளக்கவுரை

**பல்சான்றீரே பல்சான்றீரே.** இரண்டுமுறை அடுக்கிக் கூறியது விரைவுபற்றி ஆகும். இவ்வாறு விளித்தவர், மீண்டும் பயனில் மூப்பில் பல் சான்றீரே என்றது இகழ்ச்சி பற்றியாகும். வயது முதிர்ந்தும் நன்னெறியறியாமல் பயனின்றி வாழ்ந்துவிட்டீர்களே என்பது குறிப்பு.

**கயல் முள்ளன்ன நரை.** மீனினது முள்ளைப் போன்ற நரைமயிர். நரைத்த மயிருக்கு மீனின்முள் உவமை. **திரைகவுள்**—சுருங்கிய கன்னம். இதனால் வயது முதிர்ந்தமை புலனாகும்.

**கணிச்சிக் கூர்ம்படைக் கடுந்திறல் ஒருவன்**-மழு ஆயுதம் ஏந்தியவன்; மிக்க வலிமையுடையவன்; இவனை வெல்லுதல் யாராலும் இயலாது; ஆதலால் 'கடுந்திறல் ஒருவன்' என்றார். அவன், கயிற்றினால் கட்டி உயிரை இழுத்துச் செல்வான் என்று கூறுதற்கு ஏற்ப, **பிணிக்குங் காலை** என்று குறிப்பிட்டார்.

**நல்லதும் தீயதும் :** நல்வினைகளைச் செய்தல் நல்லது. அவ்வாறு செய்ய இயலவில்லை என்றால் தீவினைகளைச் செய்யாமலாவது இருத்தல் வேண்டும். எனவே **அல்லது செய்தல் ஓம்புமின்** என்றார். அல்லது—நல்வினை அல்லாதது; தீவினை. தீவினை என வாயால் சொல்லுதற்குக் கூட அஞ்சி **அல்லது** எனக் கூறினார். இதனால் தீயது நினைக்காத—சொல்லாத இவரது பேருள்ளம் புலனாகும்.

தீயது செய்யாது இருத்தல், எல்லோருக்கும் எளிதின் இயைவது ஆதலால். 'எல்லாரும்' என்றும், நன்மைகள் செய்து நலம் பெறுதற்கு உரிய நல்ல வழியும் அதுவாக இருத்தலால், 'நல்லாற்றுப் படூஉம் நெறியுமார் அதுவே' என்றும் கூறினார்.

இம்மை மறுமைகளில் உயிருக்கு உறுதிதரும் பொருள், நல்லது செய்தலும், அல்லது செய்யாது இருத்தலும் என்று கூறினமையால், இப்பாடல், **பொருள் மொழிக் காஞ்சி என்னும் துறை** ஆயிற்று.

### இலக்கணம்

**சான்றீரே**-விளிவேற்றுமை.
**பல்சான்றீரே பல்சான்றீரே**-அடுக்குத் தொடர்; விரைவுப் பொருளில் வந்தது.
**திரை கவுள்**-வினைத் தொகை.
**பயனில் மூப்பில் பல்சான்றீரே**-இகழ்ச்சிக் குறிப்பு.
**கணிச்சிக் கூர்ம்படை**-இருபெயரொட்டுப் பண்புத் தொகை.
**கடுந்திறல்**-உரிச்சொற்றொடர்
**மாது ஓ**—முன்னிலை அசைகள்.
**செய்தல்**-தொழிற் பெயர்.
**ஓம்புமின்**-ஏவல் பன்மை வினைமுற்று.
**எல்லாரும்**-உம்—முற்றும்மை.
**நெறியு மார்**-மார் அசை.

# 5. வீரப் பெண்

## ஒக்கூர் மாசாத்தியார் பாட்டு

இவர், சங்க காலத்தில் வாழ்ந்த பெண்பாற் புலவர். ஒக்கூர் என்னும் ஊரினர். இதனால், இவர் ஒக்கூர் மாசாத்தியார் எனப் பெயர் பெற்றார். இப்பெயருள்ள ஊர்கள் சோழ நாட்டில் ஒன்றும் பாண்டி நாட்டில் ஒன்றும் உள்ளன என்பர். இவ்வூர், பாண்டி நாட்டில் திருக்கோட்டியூர்ப் புறத்தேயுள்ள ஓர் ஊர் என்பதே பலரின் கருத்தாகும். இவ்வூரில் வாழ்ந்தவரே ஒக்கூர் மாசாத்தனார் என்னும் தமிழ்ப் புலவர் ஆவர்.

ஒக்கூர் மாசாத்தியார் பாடிய பாடல்கள் அகநானூற்றில் இரண்டும், குறுந் தொகையில் ஐந்தும், புறநானூற்றில் ஒன்றும் காணப்படுகின்றன.

**முன்னுரை:** மறக்குடி மகள் ஒருத்தியின் வீர உணர்வை இப் பாடல் காட்டுகின்றது. பெண்கள் உணர்ச்சியே உருவானவர்கள். அதிலும் இப் பெண் மறக்குடியில் வந்தவள்; எனவே சிறந்த வீரப் பெண்ணாக விளங்கினாள். தன் தமையனும், தன் கணவனும் போர்க் களம் சென்று போரிட்டு மடிந்ததை அறிந்திருந்தும் தன் குடிக் கென்றுஇருந்த ஒரே மகனையும் போருக்கு அனுப்பினாள்; என்றால், இவளின் வீர உணர்வை என்னென்று பாராட்டுவது!

இப்பாட்டில் அமைந்துள்ள திணை: **வாகை:** துறை: **மூதின் முல்லை:**

திணை: **வாகை:** வாகைப் பூவைத் தலையில் சூடிப் பகைவரைக் கொன்று போர்க்களத்தில் பெறும் வெற்றியைச் சிறப்பித்துக் கூறுவது.

துறை: **மூதின்முல்லை:** மறக்குடியில் பிறந்த வீரருக்கு அல்லாமல், அக்குடியில் பிறந்த மகளிருக்கும் வீர உணர்ச்சி உண்டு என்பதனை மிகுத்துச் சொல்லுதல்.

**உரை**

**இவள் சிந்தை கெடுக**-இவளது சிந்தை கெடுக.
**இவள் துணிவு கடிது**-இவளது துணிவு, நினைக்கவே அச்சம் பொருந்தியதாக உள்ளது.
**மூதில் மகளிர் ஆதல் தகும்**-இவள் பழைய மறக்குடியில் பிறந்த மகளிர் என்பது தகுதியுடையதே ஆகும்.
**மேல் நாள் உற்ற செருவிற்கு**-முன்னாளில் நடை பெற்ற போரில்,
**இவள் தன்னை**-இவளுடைய தமையன்,
**யானை எறிந்து களத்து ஒழிந்தனன்**-யானையைக் கொன்று தானும் போர்க்களத்தில் வீழ்ந்து மாண்டான்.
**நெருநல் உற்ற செருவிற்கு**-நேற்று நடைபெற்ற போரில்
**இவள் கொழுநன்**-இவளுடைய கணவன்,
**பெருநிரை விலங்கி ஆண்டுப் பட்டனன்**-பெரியவாகிய ஆநிரைகளைப்பகைவர்கள் கவர்ந்து செல்லாதவாறு குறுக்கிட்டுப் போர்செய்து அவ்விடத்தே மாண்டான்
**இன்றும்**-இன்றும்,
**செருப்பறை கேட்டு**-போருக்கு

வருமாறு வீரரை அழைக்கும் பறையினது ஒலி கேட்டு,
**விருப்புற்று**-வீரத்தால் பெறும் புகழில் விருப்பங்கொண்டு,
**மயங்கி**-செய்வது அறியாது மயங்கி,
**ஒரு மகன் அல்லது இல்லோள்**-இந்த ஒரு மகனை அல்லாது வேறு பிள்ளைகள் இல்லாத அவள்,
**வேல் கைக்கொடுத்து**-வேலினை அவன் கையிலே கொடுத்து,
**வெளிது விரித்து உடீஇ**-வெண்மை நிறமுள்ள ஆடையை விரித்து அவனது அரையில் உடுத்தி.
**பாறு மயிர் குடுமி**-அவனது கலைந்த தலை மயிர் பொருந்திய குடுமியில்.
**எண்ணெய் நீவி**-எண்ணெயைத் தடவி சீவி,
**செருமுகம் நோக்கி**-போர்க்களம் நோக்கி,
**செல்க என விடும்**-செல்வாயாக எனச் சொல்லி அவனை விடுக்கின்றாள்.

### தெளிவுரை

முன்னாளில் நடைபெற்ற போரில் இவளுடைய தமையன், யானையைக் கொன்று தானும் போர்க்களத்தில் வீழ்ந்து மாண்டான்; நேற்று நடைபெற்ற போரில் இவளுடைய கணவன். பெரியவாகிய ஆநிரைகளைப் பகைவர்கள் கவர்ந்து செல்லாதவாறு குறுக்கிட்டுப் போர் செய்து அவ்விடத்தே மாண்டான். இன்றும் போருக்கு வருமாறு வீரரை அழைக்கும் பறையினது ஒலி கேட்டு, வீரத்தால் பெறும் புகழில் விருப்பம் கொண்டு, செய்வது அறியாது மயங்கி ஒரு மகனைத் தவிர வேறு பிள்ளைகள் இல்லாத அவள், அவன் கையில் வேலினைக் கொடுத்து, வெண்மை நிறமுள்ள ஆடையை விரித்து அவனது அரையில் உடுத்தி, அவனது கலைந்த தலைமயிர் பொருந்திய குடுமியில் எண்ணெயைத் தடவிச் சீவிப் போர்க்களம் நோக்கிச் செல்வாயாக எனச் சொல்லி அவனை விடுக்கின்றாள். இவளது சிந்தை கெடுக. இவளது துணிவு, நினைக்கவே அச்சம் பொருந்திய தாக உள்ளது. இவள் பழைய மறக்குடியில் பிறந்த மகளிர் என்பது தகுதியுடையதே ஆகும்.

### விளக்கவுரை

**கெடுக சிந்தை கடிது இவள் துணிவு:** வெளிப்படையாகப் பார்க்கும் போது இவ்வடி, பழிப்பது போலத் தோன்றுகின்றது. ஆயினும், புலவர் அவளது சிந்தையையும் துணிவையும் வியந்து பாராட்டுகின்றார் ஆதலால் இவ்வடி, எதிர்மறைக்குறிப்புமொழி யாகும். இவள் சிந்தை வாழ்க! இவள் துணிவு பாராட்டுக்கு உரியது என்பது பொருள்.

**மூதின் மகளிர்:** முதிய மறக் குடியில் பிறந்த மகள். இதற்கு ஏற்ப இவள் தமையனும், இவள் கணவனும் போரில் இறந்து பட்டமை கூறினார். 'யானை எறிந்து' என்பதனால் இவளுடைய தமையனின் வீரமும், 'பெருநிரை விலங்கி' என்பதனால் இவளுடைய கணவனின் வீரமும் புலப்படும். இத்தகைய மறக்குடியில் வந்த அவள் தன் மகனையும் போர்க்களம் அனுப்பினாள் எனின், அவள் மூதின் மகளிர் ஆதலுக்கு ஐயம் என்ன!

**மகனை அனுப்பிய மனம்:** மிகச் சிறந்த வீரர்களாகிய தன் தமையனும் தன் கணவனும் போரில் இறந்துவிட்டார்கள் என்பது அறிந்தும், தன் மகனை—வயது முதிராத இளைய மகனை—ஒரே மகனை

அனுப்பினுள் எனின், அவள் வீரத்தை என்னென்பது? ஆடை உடுத்து எண்ணெய் தடவி, வேல் கொடுத்து என்பதனுல் அவன், இளையவன்—பாலகன் என்பது பெறப்படும். வீரத்தால் உண்டாகும் புகழில் கொண்ட விருப்பத்தால், தன் குலத்துக்கு உரிய ஒரே மகனை—இளையவனைப் போருக்கு அனுப்புகின்றேம் என்ற மனநிலை கூட இல்லாது இருந்தாள் என்பதனை 'மயங்கி' என்னும் சொல்லால் அறிகின்றேம். எனவே இவள், மகன்மீது கொண்ட பற்றுதலைக் காட்டிலும், மறப்புகழ்மீது மிகுந்த பற்றுடையவள் என்பது பெறப்படும்.

திணை: **வாகை:** போர்க்கண் வெற்றியின் சிறப்பை எடுத்துக் கூறுவதால், இப்பாடல் வாகைத் திணை ஆயிற்று.

துறை: **மூதின் முல்லை:** தன் தமையனும், கணவனும் போர்க் களத்தில் இறந்துபட்டார்கள் என்பதும் உணராமல், தன் குலத் துக்கு உரிய ஒரே மகன் இளையவன் என்பதும் உணராமல், அவனைப் போர்க்களம் அனுப்பிய வீரப் பெண்ணினைப் பற்றிக் கூறும் பாடல் இது ஆதலால், இப்பாடல் **மூதின் முல்லை என்னும் துறை** ஆயிற்று.

**இலக்கணம்**

**கெடுக**-வியங்கோள் வினைமுற்று.
**முதுமை+இல்=மூதில்**-பண்புத்தொகை.
**செருவிற்கு**-செருவின்கண்-உருபுமயக்கம்.
**பெருநிரை**-பண்புத்தொகை.
**இவள் கொழுநன்**-ஆறும் வேற்றுமைத் தொகை.
**இன்றும்-உம்**-இறந்தது தழீஇய எச்சவும்மை.
**உடீஇ**-சொல்லிசையளபெடை.
**செல்க+என=செல்கென**-தொகுத்தல் விகாரம்.

# 2

# திருக்குறள்

**திருக்குறள்:** திருவள்ளுவரால் இயற்றப்பட்டது திருக்குறள். பெருமை பொருந்திய குறள் வெண்பாக்களினுல் ஆகிய நூல் ஆதலால் இப்பெயர் பெற்றது. திரு+குறள்=திருக்குறள். திரு என்னும் சொல்லுக்குப் பல பொருள் உண்டு; இங்கே திரு என்பது, யாவராலும் விரும்பப்படும் தன்மை என்னும் பொருளில் உள்ளது.

குறள்—குறுமை; குறுகியது. குறுகிய பாவினைக் குறட்பா என்பர். முதலடியில் நான்கு சீரும் இரண்டாம் அடியில் மூன்று சீரு மாக ஏழு சீர்களைக்கொண்டது, குறட்பா ஆகும். குறுமை என்னும் பண்புப் பெயர், குறுகிய பாவுக்குப் பண்பாகு பெயராய்ப் பின், அப் பாக்களால் ஆகிய நூலுக்கு ஆகி வந்தமையால் கருவியாகு பெய ராய், இருமடி யாகு பெயர் ஆயிற்று. குறள் என்பது, கருவியாகு பெயராய் நூலை உணர்த்தி, திரு என்னும் அடைமொழி பெற்ற மையால் அடையடுத்த கருவியாகு பெயர் ஆகும்.

**நூற் பகுப்பு :** இந் நூல் அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பால், என்னும் மூன்று பெரும் பிரிவுகளையும், இல்லற இயல், துறவற இயல், அரசியல், அங்கவியல், ஒழிபியல், களவியல், கற்பியல் என்னும் ஏழு இயல்களையும், 133. அதிகாரங்களையும் உடையது. அதிகாரத்திற்குப் பத்துக் குறட்பாக்களாக 1330 குறட்பாக்களால் ஆக்கப்பட்டது. அறம், பொருள், இன்பம் என்னும் முப்பொருளும் பற்றிக் கூறும் அறநூல் ஆகும்.

இந்நூல், அறம், பொருள், இன்பம் பற்றிக் கூறும் பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்றாகும். பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள் : 1. நாலடியார். 2. நான்மணிக் கடிகை. 3. இனியவை நாற்பது, 4. இன்னா நாற்பது. 5. கார் நாற்பது. 6. களவழி நாற்பது. 7. ஐந்திணை ஐம்பது, 8. ஐந்திணை எழுபது. 9, திணை மொழி ஐம்பது. 10. திணைமாலை நூற்றைம்பது. 11. திருக்குறள் (முப்பால்) 12 திரிகடுகம். 13. ஆசாரக்கோவை. 14. பழமொழி நானூறு. 15. சிறுபஞ்ச மூலம். 16. முதுமொழிக் காஞ்சி. 17. ஏலாதி. 18. கைந்நிலை என்பன. இவற்றை,

> **"நாலடி நான்மணி நானாற்ப தைந்திணைமுப்**
> **பால்கடுகம் கோவை பழமொழி மாமூலம்**
> **இந்நிலைய காஞ்சியோ டேலாதி என்பவே**
> **கைந்நிலைய வாம்கீழ்க் கணக்கு '**

எனப் பழைய வெண்பா ஒன்று தொகுத்துரைக்கின்றது.

**திருக்குறளின் பெருமை :** (1) திருக்குறள், ஆங்கிலம், ஜெர்மன், லத்தீன் போன்ற உலகப் பெருமொழிகள் பலவற்றில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது. (2) "ஆலும் வேலும் பல்லுக்கு உறுதி; நாலும் இரண்டும் சொல்லுக்கு உறுதி" என்றும் "பழகு தமிழ்ச் சொல்லருமை நாலிரண்டில்" என்றும் அமைந்த தமிழ்ப் பாராட்டுரைகள், இதன் ஆற்றல் மிக்க பெருமைக்குச் சான்றுகள். (3) திருக்குறளினைப் பற்றிப் புலவர் பெருமக்கள் கூறிய பாராட்டுப் பாடல்கள், திருவள்ளுவமாலை என்னும் ஒரு தனி நூலாய் அமைந்திருப்பது, வேறு எந்நூலிற்கும் இல்லாத பெருஞ்சிறப்பாகும். (4) இந் நூல், சாதி, மத, சமய பேதமின்றி விளங்கும் பொது நூல். (5) திருக்குறளுக்குப்பின் தோன்றிய நூல்களில் திருக்குறட் கருத்துக்களை எடுத்தாளாத நூல்கள் இல்லை. (6) தமிழ் மொழியில் மிகுதியான உரைகளை உடைய நூல் இதுவேயாகும். பழம்பெரும் புலவர் பதின்மர் உரை எழுதியிருக்கின்றனர். அவர்கள்: தருமர், மணக்குடவர், தாமத்தர், நச்சர், பரிதியார், பரிமேலழகர், திருமலையர், மல்லர், கவிப்பெருமாள், காளிங்கர் என்போர். இவர்கள் எழுதிய உரைகளுள் பரிமேலழகர் உரையே சிறந்தது; எல்லாராலும் பாராட்டப்படுவது. (7) இந் நூலுக்குப் பல பெயர்கள் வழங்கப் படுகின்றன. இதுவும் இந்நூலின் பெருமைக்குச் சான்று. இந் நூலுக்கு உரிய வேறு பெயர்கள் : **முப்பால், பொய்யாமொழி, பொருளுறை. வாயுறை வாழ்த்து, தமிழ் மறை, பொது மறை, தெய்வ நூல்** எனப்பலவாம்.

**திருவள்ளுவர் வரலாறு :** இவரது வரலாறு பலவாறாகக் கூறப் படுகின்றது. வள்ளுவர் என்னும் பெயர், குலம் பற்றி வந்தது என்றும், வள்ளுவன் ஒருவனால் வளர்க்கப்பட்டமையால் வந்தது என்

றும், தொழில் பற்றி வந்தது என்றும், இயற்பெயர் என்றும் கூறுவர். திரு என்பது இவரது பெருமையை விளக்க வந்த அடைமொழி யாகும். இவருடைய தாயின்பெயர் ஆதி; தந்தையின் பெயர் பகவன் என்றும் கூறுவர். இவர் மயிலாப்பூரில் பிறந்து, வாசுகி என்னும் பெண்மணியை மணந்து நெசவுத் தொழில் நடத்தி வந் தார் என்பர். இவர், தாம் இயற்றிய திருக்குறளை, மதுரையில் கடைச் சங்கத்தில் புலவர்கள் முன்னிலையில் அரங்கேற்றினர் என்றும் கூறுவர்.

**காலம் :** இந் நூல், கடைச் சங்க காலத்தில் இயற்றப்பட்டது என்பதாலும், பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்ருகக் கருதப் படுகின்றது ஆதலாலும், சங்க இலக்கியங்களிலும் சிலப்பதிகாரம், மணிமேகலை முதலிய நூல்களிலும் இந் நூலின் கருத்துக்கள் காணப் படுகின்றன ஆதலாலும் இந் நூல் இயற்றப்பட்ட காலம் இற்றைக்கு இரண்டாயிரம் ஆண்டுகட்கு முற்பட்டது என்பர். திருவள்ளுவர், கி. மு. 31இல் தோன்றினர் என்பது பேரறிஞர் மறைமலையடிகளா ரின் கருத்தாகும்.

## 1. வாய்மை

**வாய்மை :** வாய்மையின் தன்மை; வாய்மையாவது, சொல்லின் தூய்மை. அதாவது, சொல்லும் சொற்களில் பொய் கலவாமை; என்றும் உண்மையே சொல்லுதல் என்பதாம். மனந்தூய்மையை உண்மை என்றும், செய்வினைத் தூய்மையை மெய்மை என்றும் சொல்லின் தூய்மையை வாய்மை என்றும் தமிழ் அறிஞர்கள் குறிப் பிடும் அழகினை அறிக.

### அதிகாரப் பகுப்பு

*1, 2* குறள்கள்-வாய்மையின் இலக்கணம்.
*3,* குறள்-பொய் கூறற்க.
*4, 5, 6, 7* குறள்கள்-வாய்மையால் ஏற்படும்பயன்கள்.
*8,* குறள்-புறத்தூய்மையும் அகத் தூய்மையும்.
*9, 10.* குறள்கள்-வாய்மையின் சிறப்பு.

### வாய்மையின் இலக்கணம்

## 1. தீங்கு பயவாத சொற்களே வாய்மை

### உரை

**வாய்மை எளப்படுவது**-வாய்மை என்று சிறப்பித்துச் சொல்லப் படுவது,
**யாது எனின்**-எது என்று கேட் டால், (அது)
**யாது ஒன்றும்**-(பிற உயிர் களுக்குச் சிறிதும்
**தீமை இலாத**-தீமை இல்லாத சொற்களை
**சொலல்**-சொல்லுதல் ஆகும்.

### தெளிவுரை

வாய்மை என்று சிறப்பித்துச் சொல்லப்படுவது எது என்று கேட்டால் அது, பிற உயிர்களுக்கு ஒரு சிறிதும் தீமையை விளைவிக் காத சொற்களைச் சொல்லுதல் ஆகும்.

### விளக்கவுரை

**தீமைஇலாத சொலல் :** பிற உயிர்களுக்கு ஒரு சிறிதும் தீங்கு ஏற்படாதவாறு சொல்லுதல் வேண்டும். இதனால் உள்ளவை உள்ள படியே கூறுதல் வாய்மையானது என்பது பெறப்படும். அச் சொல், பிற உயிர்களுக்கு நன்மை பயக்காவிட்டாலும் தீங்கு விளைவிக்கக் கூடாது என்பதாம். தீங்கு இல்லாத சொற்களே வாய்மை என்று அறிக. இக் கருத்துடன் "நல்லது செய்தல் ஆற்றீராயினும், அல்லது செய்தல் ஓம்புமின்" என்னும் புறநானூற்றுப் பாடலின் அடிகளையும் ஒப்பிட்டுக் காண்க.

### இலக்கணம்

படுவதியாதெனின் — படுவது + யாதெனின் — குற்றியலிகரம்.
**யாது**— யா'என்னும் வினாவடியாகப் பிறந்த பெயர்.

**இலாத**-இல்லாத என்னும் எதிர்மறைப் பெயரெச்சத்தின் இடைக்குறை;

**சொலல்**-அல்விகுதி பெற்ற தொழிற்பெயர்.

## 2. குற்றமற்ற பொய்யும் வாய்மையாம்

### உரை

**புரைதீர்ந்த நன்மை**-(பிறருக்குக்) குறறமற்ற நன்மையை,
**பயக்கும்எனின்**-விளைக்குமானால்,
**பொய்ம்மையும்** பொய்யானசொற்களும்,
**வாய்மை இடத்த**-வாய்மை என்று கருதத்தக்க சொற்களின் தன்மையை உடையன.

### தெளிவுரை

பிறருக்குக் குற்றமற்ற நன்மையை விளைக்குமானால், பொய் யான சொற்களும், வாய்மை என்று கருதத்தக்க சொற்களின் தன் மையை உடையன ஆகும்.

### விளக்கவுரை

**புரை தீர்ந்த நன்மை :** நாம் கூறும் பொய்யால் பிறருக்குப் பழி யும் பாவமும் ஏற்படாதவாறு கூறுதல் வேண்டும். அதனால் அவர் கள் அடையும் பயனே, புரை தீர்ந்த நன்மை எனப்படும். அதுவே அறம் என்பதாம். புரை—குற்றம்.

**பொய்ம்மையும் வாய்மை இடத்த :** பிறருக்கு நன்மைபயக்கு மானால் பொய்மையும் வாய்மையாகக் கருதப்படும். எனவே பிறருக்குத் தீமை பயக்கும் உண்மையைச் சொல்லுவதும், பிறருக்கு நன்மை ஏற்படாத பொய்யைச் சொல்லுவதும் வாய்மையாகாது என்பது பெறப்படும். ஒருவனை அவன்அடையும் துன்பத்திலிருந்து நீக்குதற்காகப் பொய் சொன்னால் அது பொய்யாகாது; வாய்மை எனப்படும் என்பதாம். 'மணம் கூட்டுவித்தல் முதலிய சில நன்மை யின் பொருட்டுப் பொய் சொன்னாலும் சொல்லலாம்' என்னும் அற நூல்கள் சிலவற்றின் கருத்தையும், மெய்ம்மையே ஒருவர்க் குற்ற விபத்தினை மீட்கு மாயின், "பொய்ம்மையும் மெய்ம்மை போலப் புண்ணியம் பயக்கும் மாதோ" என்னும் பாரதச் செய்யுளை இங்கு ஒப்பிட்டு உணர்க.

### இலக்கணம்

**பொய்ம்மை**-பால்பகா அஃறிணைப் பெயர்.
**இடத்த**-பலவின்பால் வினைமுற்று.
**புரை தீர்ந்த**-ஐந்தாம் வேற்றுமைத் தொகை.
**நன்மை**-பண்புப் பெயர்.
**எனின்**-செயின் என்னும் வாய்பாட்டு வினையெச்சம்.

### பொய் கூறற்க

## 3. தன் நெஞ்சே தன்னைச் சுடும்

### உரை

**தன் நெஞ்சு அறிவது**-ஒருவன், தன் நெஞ்சம் அறிவதாகிய ஒன்றனை,
**பொய்யற்க**-பிறர் அறிந்திலர் என்று எண்ணிப் பொய் சொல்லக் கூடாது.
**பொய்த்தபின்**-பொய் கூறுவானாயின்,
**தன்நெஞ்சே**-அதைக் குறித்துத் தன் நெஞ்சமே,
**தன்னைச் சுடும்**-அப் பொய் சொன்ன பாவத்திற்குச் சாட்சியாக நின்று தன்னை வருத்தும்.

### தெளிவுரை

ஒருவன், தன் நெஞ்சம் அறிவதாகிய ஒன்றனைப் பிறர் அறிந்திலர் என்று எண்ணிப் பொய் சொல்லக் கூடாது. அவ்வாறு இல்லாமல் பொய் கூறினால் அதைக் குறித்துத் தன் நெஞ்சமே அப்பொய் சொன்ன பாவத்திற்குச் சாட்சியாக நின்று தன்னை வருத்தும்.

### விளக்கவுரை

ஒருவன் தன் மனச்சாட்சிக்கு மாறாகப் பொய் கூறுதல் கூடாது; பொய் கூறினால் பின்புதானே வருந்துவதற்கு அப்பொய் காரணமாகிவிடும் என்பதாம். 'தன் நெஞ்சு அறிவது பொய்யற்க' எனப் பொய் கூறல் ஆகாது என்றார். பொய் கூறினால் ஏற்படும் பயனை, 'தன் நெஞ்சே தன்னைச் சுடும்' என்பதனால் எடுத்துரைத்தார். பிறருக்குத் தெரியாமல் எதனையும் மறைக்கலாம். ஆனால் மனத்திற்குத் தெரியாமல் மறைக்க இயலாது. எனவே பிறருக்குத் தெரியாது என்பதற்காகப் பொய் சொல்லுதல் கூடாது. அங்கே மனம் சாட்சியாக இருக்கும். ஆதலால் மனத்தைக் காட்டிலும் சிறந்த சாட்சி வேறு இல்லை. எனவே பொய் சொன்னால் அம் மனமே சாட்சியாக இருந்து, பொய் கூறியதன் பயனாக துன்பத்தைத் தனக்கு எய்துவிக்கும்.

### இலக்கணம்

**அறிவது**-ஆகுபெயர்.
**பொய்யற்க**-வியங்கோள் வினைமுற்று.
**நெஞ்சே**-ஏகாரம், தேற்றேகாரம்.
**சுடும்**-செய்யும் என்னும் வாய்பாட்டு வினைமுற்று.

### வாய்மையால் ஏற்படும் பயன்கள்

## 4. பொய்யை நினையாதவரை உலகம் போற்றும்

### உரை

**உள்ளத்தால்**-ஒருவன் தன் மனத்திற்கு ஏற்ப,
**பொய்யாது**-பொய் கூறாது,
**ஒழுகின்**-ஒழுகுவானாயின் அவன்,
**உலகத்தார் உள்ளத்துள் எல்லாம்**-உலகத்தாரின் உள்ளங்களில் எல்லாம்,
**உளன்**-நிலைத்து நிற்பான்.

### தெளிவுரை

ஒருவன் தன் மனத்திற்கு ஏற்பப் பொய் கூறாது ஒழுகுவானாயின் அத்தகைய அவன், உலகத்தாரின் உள்ளங்களில் எல்லாம் நிலைத்து நிற்பான்.

### விளக்கவுரை

ஒருவன் பொய் சொல்லாது உண்மையையே பேசினால் அவன் எக்காலத்தும் எவ்விடத்தும் எல்லோராலும் நன்கு மதிக்கப் பெற்றுப் புகழ்ந்து போற்றப்படுவான் என்பதாம். வாய்மையாகிய அறத்தை அவன் மேற்கொள்ளும் சிறப்புக் கருதியே அவனை உலகத்தார் நன்கு மதிப்பர் என்க.

### இலக்கணம்

**உள்ளத்தால்**-உள்ளத்திற்கு,வேற்றுமை மயக்கம்.
**பொய்யாது**-எதிர்மறை வினையெச்சம்.
**உளன்**-குறிப்பு வினைமுற்று.

## 5. உண்மை பேசுபவன் துறவிகளைக் காட்டிலும் உயர்ந்தவன்

### உரை

**மனத்தொடு**-ஒருவன் தன் மனத்தோடு பொருந்த,
**வாய்மை மொழியின்**-உண்மை பேசுவானானால் (அவன்)
**தவத்தொடு தானம் செய்வாரின்**-தவமும் தானமும் ஒருங்கு செய்யும் துறவிகளினும்,
**தலை**-மேலான சிறப்புடையவன்.

### தெளிவுரை

ஒருவன், தன் மனத்தோடு பொருந்த உண்மை பேசுவானானால் அவன் தவமும் தானமும் ஒருங்கு செய்யும் துறவிகளைக் காட்டிலும் மேலான சிறப்புடையவன் ஆவான்.

### விளக்கவுரை

அகத்துறுப்பாகிய மனம் மொழிகளால் செய்யப்படுவது வாய்மைஆகும்; புறத்துறுப்பாகிய உடம்பினால் செய்யப்படுவன தவமும் தானமும் ஆகும். புறத்துறுப்பால் செய்யப்படும் தவம், தானம், ஆகியவற்றைக் காட்டிலும் அகத்துறுப்பால் செய்யப்படும் வாய்மை, பயனுடையது என்பதாம்.

### இலக்கணம்

**தவத்தொடு**-'ஒடு', மூன்றும் வேற்றுமை உருபு; உடனிகழ்ச்சிப் பொருளில் வந்துள்ளது.

**செய்வாரின்**-'இன்',ஐந்தாம் வேற்றுமை உருபு. உறழ்ச்சிப் பொருளில் வந்தது.

## 6. வாய்மை, எல்லா அறமும் தரும்

### உரை

**பொய்யாமை அன்ன**-ஒருவனுக்கு இப்பிறப்பிற்குப் பொய்யாமையைப் போன்ற,
**புகழ் இல்லை**-புகழுக்கு வழி இல்லை,
**எய்யாமை**-மறுமைக்கு மெய் வருந்தாமல், (அவனுக்கு)
**எல்லா அறமும் தரும்**-எல்லா அறங்களையும் தானே கொடுக்கும்.

### தெளிவுரை

ஒருவனுக்கு இப்பிறப்பிற்குப் பொய்யாமையைப் போன்ற புகழுக்கு வழி இல்லை; மறுமைக்கு அவனுக்கு எல்லா அறங்களையும் அப்பொய்யாமையே கொடுக்கும் என்பதாம்.

### விளக்கவுரை

ஒருவன் பொய் கூறுதிருந்தால் இம்மைப் பயனும் கிடைக்கும்; மறுமைப் பயனும் கிடைக்கும். இம்மைப் பயனுவது புகழ்; அப்புகழினை அடைதற்கு உரிய வழி, பொய்யாமையைத் தவிர வேறு இல்லை என்பதாம். மறுமைப் பயனுவது வீடுபேறு. அதனை அடைதற்காக இல்லறத்தார்கள், பொருள் ஈட்டி அறம் செய்வார்கள்; துறவறத்தார்கள் உண்ணுமை முதலிய நோன்பிருந்து தவம் செய்வார்கள். பொருள் ஈட்டுதலும் உண்ணுதிருத்தல் முதலியனவும் மெய்வருத்தத்தைக் கொடுக்கும். வாய்மையைப் பேசினுல், இம் மெய் வருத்தம் அடையாமலேயே வீடுபேறு அடையலாம் என்பதாம். வாய்மையைப் பேசினுல், அவ்வாய்மை, பேசிய அவனுக்கு அறியாமலேயே எல்லா அறமும் கொடுக்கும் என்பார், 'தரும்' என்று கூறியுள்ளார்.

### இலக்கணம்

**பொய்யாமை**-எதிர்மறைத் தொழிற்பெயர்.
**புகழ்**-புகழ் என்பது காரியம்; அது அதற்குக் காரணமாகிய பொய் பேசாமையைக் குறித்தலால் காரியவாகு பெயர்.
**எய்யாமை**-எதிர்மறை வினையெச்சம்.
**அறமும்**-'உம்'-முற்றும்மை.

## 7. வாய்மையை மேற்கொள்ளின் வேறு அறங்களைச் செய்ய வேண்டா

### உரை

**பொய்யாமை**-ஒருவன் பொய்யாமையை (வாய்மையை)
**பொய்யாமை**-தவருமல்,
**ஆற்றின்**-மேற்கொண்டால்,
**பிற அறம்**-அவன்வேறு அறங்களை,
**செய்யாமை செய்யாமை**-செய்யாதிருத்தலும்
**நன்று**-நல்லது.

### தெளிவுரை

ஒருவன் பொய்யாமை என்னும் வாய்மையாகிய அறத்தைத் தவறாமல் மேற்கொண்டால் அவன் வேறு அறங்களைச் செய்ய வேண்டா.

### விளக்கவுரை

பொய்யாமை-வாய்மை. பொய்யாமை-தவறாமல். செய்யாமை செய்யாமை என்னும் அடுக்குத் தொடர், வேறு அறங்களை உறுதியாகச் செய்ய வேண்டாம் என்னும் துணிவினைக் காட்டியது.

வேறு அறங்கள் தரும் பயனை எல்லாம் வாய்மையே தரும். ஆதலால் ஒருவன் வாய்மையாகிய அறத்தை மேற்கொண்டால் பிற அறங்களைச் செய்ய வேண்டா என்பதாம். இதனால் வாய்மையின் சிறப்பு, நன்கு புலனாகும்.

### இலக்கணம்

**பொய்யாமை பொய்யாமை**-முதலில் உள்ள பொய்யாமை-பெயர்ச்சொல்; அடுத்துள்ள பொய்யாமை-எச்சம்.
**செய்யாமை செய்யாமை**-அடுக்குத் தொடர்; துணிவுப் பொருளில் வந்தது.
**நன்று**-குறிப்பு வினைமுற்று.

### புறத்தூய்மையும் அகத்தூய்மையும்

## 8. வாய்மை, உள்ளத்தைத் தூய்மை செய்யும்

### உரை

**புறம் தூய்மை**-ஒருவனுக்கு உடம்பு தூயதாகுதல்,
**நீரான் அமையும்**-நீரினால் ஏற்படும், (அதுபோல)
**அகந்தூய்மை**-ஒருவனுக்கு மனம் தூயதாகுதல்,
**வாய்மையால்**-உண்மை பேசுதலால்,
**காணப்படும்**-உண்டாகும்.

### தெளிவுரை

ஒருவனுக்கு உடலின் தூய்மை, நீரினால் உண்டாகும். அதுபோல மனத்தின் தூய்மை வாய்மையால் உண்டாகும் என்பதாம்.

### விளக்கவுரை

நீரினால் உடலின் தூய்மை உண்டாகும்; வாய்மையினால் மனத்தின் தூய்மை உண்டாகும் என்பது கருத்தாகக் கொள்க. உடல் தூய்மையாவது-உடலிலுள்ள அழுக்கு நீங்குதல். மனத் தூய்மையாவது-அறியாமை நீங்குதல்; மெய்யுணர்தல். ''சேய்மை யண்மையில் உயிர்க்கொரு துணையெனச்சிறந்த, வாய்மையால் அகந் தூய்மையாம்'' என்னும் அரிச்சந்திர புராணச் செய்யுள், இத் திருக்குறளினைப் பின்பற்றிப் பாடப்பெற்றதாகும்.

வாய்மையால் ஏற்படும் மனத் தூய்மைக்கு, நீரால் ஏற்படும் புறத் தூய்மையை எடுத்துக் காட்டியமையால் இத்திருக்குறளில் **எடுத்துக் காட்டுவமை அணி** அமைந்துள்ளது. உவமையையும் பொருளையும் வேறு வேறு தொடர்களாக நிறுத்தி, இன்னது உவமை

இன்னது பொருள் என்று தோன்ற இடையில் உவம உருபு இல்லாமல் கூறும் அணி, எடுத்துக் காட்டுவமை அணி ஆகும்.

### இலக்கணம்

**புறம் × அகம்**-முரண் தொடை.
**புறந் தூய்மை**, **அகந்தூய்மை** -ஆறும் வேற்றுமைத் தொகைகள்.
**தூய்மை**-பண்புப் பெயர்.
**இச்செய்யுள்** எடுத்துக்காட்டுவமையணி.

### வாய்மையின் சிறப்பு

## 9. வாய்மையே நல்விளக்கு

### உரை

**எல்லா விளக்கும்**-புற இருளைப் போக்குகின்ற ஞாயிறு, திங்கள், தீ என்னும் விளக்குக்கள் எல்லாம்,
**விளக்கு அல்ல**-விளக்குக்கள் அல்ல;
**சான்றோர்க்கு**-பெரியோருக்கு,
**விளக்கு**-விளக்காவது,
**பொய்யா விளக்கே**-மனத்தில் உள்ள இருளைப் போக்கும் பொய்யாமையாகிய விளக்கே ஆகும்.

### தெளிவுரை

புறத்தில் உள்ள இருளைப் போக்குகின்ற ஞாயிறு, திங்கள், தீ என்னும் விளக்குக்கள் எல்லாம் விளக்குக்கள் அல்ல; பெரியோருக்கு விளக்காவது, மனத்தில் உள்ள இருளைப் போக்குகின்ற பொய்யாமையாகிய விளக்கே ஆகும்.

### விளக்கவுரை

புற இருளைப் போக்குவன ஞாயிறு, திங்கள், தீ என்பன. இவை, பொருள்களை விளங்கச் செய்வதால்-இருளைப் போக்குவதால் விளக்கு எனப்பட்டன. இவ்விளக்குக்களால் அகத்தில் உள்ள அறியாமையாகிய இருள் நீங்காது. ஆதலால் இவற்றை விளக்கல்ல என்றார். வாய்மையால் அகத்தில் உள்ள அறியாமையாகிய இருள் நீங்கி மெய்யுணர்வு ஏற்படும் ஆதலால் அதனையே விளக்கு என்று சிறப்பித்துக் கூறினார்.

### இலக்கணம்

**விளக்கு**-ஆகுபெயர்.
**பொய்யா**-ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.
**விளக்கே**-'ஏ'-தேற்றேகாரம்.

## 10. எந்த அறமும் வாய்மைக்கு ஈடாகாது

### உரை

**யாம் மெய்யாக் கண்டவுற்றுள்**-யாம் மெய்ந் நூல்களாகக் கண்டவற்றுள்,
**வாய்மையின்**-வாய்மையைவிட,
**எனைத்தொன்றும் நல்ல**-எத்தன்மையாலும் மிகச் சிறந்தவைகளாகச் சொல்லப்பட்ட,
**பிற**-பிற அறங்கள்,
**இல்லை**-இல்லை.

### தெளிவுரை

யாம் கண்ட மெய்ந் நூல்களுள், வாய்மையைவிட எத்தன்மை யாலும் மிகச் சிறந்தவைகளாகச் சொல்லப்பட்ட பிற அறங்கள் இல்லை.

### விளக்கவுரை

மெய்யை உணர்த்தும் நூல்களையே மெய் என்றார். இம் மெய்ந் நூல்கள், அறியாமையே இல்லாமல், பொருள்களின் தன்மைகளை உள்ளவாறு உணர்ந்து உரைக்கும் திறம் பெற்ற மேலோரால் இயற் றப்பட்டன ஆகும். இத்தகைய மெய்ந் நூல்களே அறநூல்கள் எனப் படும். இவ் அற நூல்களில் கூறப்பட்ட அறங்களில் எல்லாம் வாய்மையே மிகச் சிறந்த அறமாகச் சொல்லப்பட்டுள்ளது. வாய்மை யைப் போன்ற வேறு அறங்கள் அந்நூல்களில் காணப்படவில்லை என்பதாம். திருவள்ளுவர், தம்மை உளப்படுத்திக் கூறிய இடங்களுள் இது ஒன்று.

### இலக்கணம்

**மெய்**-மெய்ம்மையை உணர்த்தும் நூல்கள். காரியவாகு பெயர்.

**மெய்யா**-மெய்யாக-கடைக்குறை.

## 2. வெகுளாமை

வெகுளாமை-கோபியாமை; கோபம் கொள்ளுதற்குக் காரணம் உண்டான போதும் கோபம் கொள்ளாமை. வாக்கினுல் பொய் சொல்லாதது போலவே மனத்தினுல், குற்றமாகிய கோபத்தையும் விடுதல் வேண்டும் என்பதாம்.

பிறரிடத்துப் பொய் முதலிய குற்றங்களைக் கண்டபொழுது அவை காரணமாக அவர் மேல் உண்டாகும் கோபத்தை நீக்க வேண்டும் என்பதனை இவ் அதிகாரத்தில் எடுத்துரைக்கின்றார்.

### அதிகாரப் பகுப்பு

1. குறள்-வெகுளாமல் காக்கவேண்டிய இடம்.
2, 3, 4. குறள்கள்-வெகுளியது தீங்கு.
5, 6, 7 குறள்கள்-வெகுண்டாருக்கு வரும் தீங்கு.
8. குறள்-வெகுளா திருத்தலால் வரும் நன்மை.
9. குறள்-வெகுளாதாருக்கு வரும் நன்மை.
10. குறள்-வெகுண்டவர் அடையும் பயனும் வெகுளாதார் அடையும் பயனும்.

### சினம் பலிக்குமிடத்தும் சினம் காக்க வேண்டும்

### 1. வெகுளாமல் காக்க வேண்டிய இடம்

### உரை

**சினம்**-தன் கோபம்,
**செல் இடத்து**-பலிக்கும் இடத்தில்,
**காப்பான்**-அது வராமல் தடுப்பவனே,
**காப்பான்**-சினத்தைக் காப்பவன் ஆவான்.
**அல்இடத்து**-சினம் பலிக்காத இடத்தில்,
**காக்கின்என்**-சினத்தை வராமல் தடுத்தால் என்ன?
**காவாக்கால்என்**-சினம் வராமல் தடுக்காவிட்டால் என்ன?

### தெளிவுரை

தன் கோபம் பலிக்கும் இடத்தில் அது வராமல் தடுப்பவனே, சினத்தைக் காப்பவன் ஆவான்: சினம் பலிக்காத இடத்தில் சினத்தை வராமல் தடுத்தால் என்ன? சினம் வராமல் தடுக்கா விட்டால் என்ன?

### விளக்கவுரை

தன்னைவிட மெலியார் மீது கோபம் வரும்போது, அக்கோபம் வராமல் தடுத்தல் வேண்டும். இவ்வாறு தடுப்பதே செல்லிடத்துக் காக்கும் சினம் ஆகும். தன்னைவிட வலியார் மீது கோபம் வரும்போது, அதனைத் தடுத்தாலும் தடுக்காவிட்டாலும் ஒன்றே. ஏனெனில் தன்னைவிட வலிமையுடையார்மேல் கோபம் கொண்டால், அக் கோபத்தால், வலிமையுடையாருக்கு யாதொரு தீங்கும் ஏற்படுவ தில்லை என்பதாம்.

எனவே, தன்னைவிட மெலியாரிடத்தில்-தன் கோபம் பலிக்கும் இடத்தில் சினத்தைக் காக்க வேண்டும் என்பது பெறப்படும்.

### இலக்கணம்

**செல்லிடம்**-வினைத்தொகை.
**காப்பான்**-வினையாலணையும் பெயர்.
**அல்லிடம்**-பண்புத்தொகை.

## வெகுளியது தீங்கு

## 2. சினத்தினும தீயது இல்லை

### உரை

**சினம்**-ஒருவனுடைய கோபம்,
**செல்லாவிடத்து**-தன்னை விட வலிமையுடையார் மேல் ஏற்பட்டால்,
**தீது**-அக்கோபம், அவனுக்கே தீதாம்.
**செல்இடத்தும்**-அக்கோபம் மற்றை எளியார் மேல் ஏற்பட்டாலும்,
**அதனின் தீய**-அக்கோபத்தை விட தீயவை
**பிறஇல்**-வேறு இல்லை.

### தெளிவுரை

ஒருவனுடைய கோபம், தன்னைவிட வலிமையுடையார்மேல் ஏற்பட்டால் அக்கோபம், அவனுக்கே தீதாம். அக்கோபம், மற்றை எளியார்மேல் ஏற்பட்டாலும் அக்கோபத்தைவிடத் தீயவை வேறு இல்லை.

### விளக்கவுரை

தன்னைவிட வலிமையுடையார்மேல் கோபம் கொண்டால், இப் பிறப்பில் கொடிய பயன்கள் ஏற்படும். எனவே இக்கோபத்தைத் 'தீது' என்றார். தன்னைவிட மெலியார்மேல் கோபம் கொண்டால் இப்பிறப்பில் பழியை உண்டாக்கும்; மறுபிறப்பில் அநுபவிப்பதற்குப் பாவத்தைத் தரும். எனவே இப்பிறப்பில் பழியும் மறுபிறப்பில் பாவமும் உண்டாகும் என்பதாம். எனவே தன்னைவிட மெலியார் மேல் கொள்ளும் கோபத்தைவிடத் தீமை பயப்பவை வேறு இல்லை என்பார், 'இல் அதனின் தீயபிற' என்று கூறினார்.

### இலக்கணம்

**செல்லா** இடத்து-ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.
செல்இடத்தும்-உம், இறந்தது தழீஇய எச்சவும்மை.
**தீய**-பெயர்ச்சொல்.

## 3. யார்மாட்டும் வெகுளியை மறக்க

### உரை

**யார்மாட்டும்**-யாவரிடத்திலும்,
**வெகுளியை**-சினம் கொள்ளாமல் அதனை,
**மறத்தல்**-மறந்துவிட வேண்டும்.
**தீயபிறத்தல்**-தீமையான விளைவுகள்.
**அதனான் வரும்**-அக்கோபத்தால் வரும்.

### தெளிவுரை

யாரிடத்திலும் கோபம் கொள்ளாமல், அக்கோபத்தினை மறந்துவிடவேண்டும். ஏனெனில் தீமையான விளைவுகள் அக்கோபத்தாலேயே ஏற்படும்.

### விளக்கவுரை

**யார்மாட்டும்**-வலியார், ஒப்பார், மெலியார் என்னும் யாவரிடத்தும். தன்னைவிட வலிமையுடையார் மேலும், தன்னை ஒப்பானவர் மேலும், தன்னைவிட மெலியார் மேலும்கோபம் கொள்ளுதல் கூடாது என்பார் 'யார்மாட்டும்' என்றார்.

**தீய பிறத்தல்**-தீய விளைவுகள். மனத்தால் துறந்தவர்களுக்கு வேண்டாதவைாகிய தீய நினைவுகள் எல்லாவற்றையும் விளைவிக்கும் ஆதலால் யாரிடத்தும் கோபம் கொள்ளற்க என்றார்.

'மறத்தல் வெகுளியை யார்மாட்டும்' என்றார். இவ்வாறு ஏன் கூறினார் என்பதற்கு உரிய காரணத்தைத் 'தீய பிறத்தல் அதனான் வரும்' என்பதனால் கூறினார்.

### இலக்கணம்

**யார்மாட்டும்**-உம், முற்றுப் பொருளது.
**பிறத்தல்**-தல் விகுதி பெற்ற தொழிற் பெயர்.
**அதனான்**-மூன்றும் வேற்றுமை உருபு ஏற்ற சுட்டுப் பெயர்.

## 4. சினமே பெரும்பகை

### உரை

**நகையும்**-முகமலர்ச்சியையும்,
**உவகையும்**-அக மகிழ்ச்சியையும்,
**கொல்லும்**-கொல்கின்ற,
**சினத்தின்**-சினத்தைவிட (ஒருவனுக்கு),
**பகையும்**-பகைகளும்.
**பிறஉளவோ**-வேறு உள்ளனவோ? (இல்லை.)

### தெளிவுரை

சினமானது, முகமலர்ச்சியையும் அகமகிழ்ச்சியையும் கொல்லும். ஆதலால், அச்சினத்தைவிட ஒருவனுக்கு வேறு பகைகள் இல்லையாம்.

### விளக்கவுரை

ஒருவனுக்குப் புறப்பகை இல்லாவிட்டாலும் சினம் இருந்தால் அது அவனுக்கு உட்பகையாக அமையும். இவ் உட்பகை, மனத்தில் தோன்றும் அன்பையும் அருளையும் போக்கும். இவை நீங்கவே அவனுக்குப் பிறர் பகைவர் ஆகிவிடுவர். ஆதலால் சினத்தைக் காட்டிலும் பிற பகைகள் உண்டோ என்றார்.

### இலக்கணம்

**கொல்லும்**-செய்யும் என்னும் வாய்பாட்டுப் பெயரெச்சம்.
**சினத்தின்**-'இன்' ஐந்தாம் வேற்றுமை; உறழ்ச்சிப் பொருளது.
**பகையும்**-உம், இழிவு சிறப்பு.
**உளவோ**-ஓகாரம், எதிர்மறைப் பொருளில் வந்துள்ளது.

## வெகுண்டாருக்கு வரும் தீங்கு

## 5. சினம் தன்னையே கொல்லும்

### உரை

**தன்னைத் தான் காக்கின்**-ஒருவன் தன்னைத் தானே துன்பம் வராமல் காத்துக் கொள்ள நினைத்தால்,
**சினம் காக்க**-தன் மனத்தில் சினம் வராமல் காத்துக் கொள்ள வேண்டும்;
**காவாக்கால்** - காக்காவிட்டால்,
**சினம்**-அக் கோபமானது,
**தன்னையே கொல்லும்**-அவன் தன்னையே அழித்துவிடும்.

### தெளிவுரை

ஒருவன் தன்னைத் தானே துன்பம் வராமல் காத்துக்கொள்ள நினைத்தால், தன் மனத்தில் சினம் வராமல் காத்துக்கொள்ள வேண்டும். அவ்வாறு காக்காவிட்டால் அக் கோபமானது அவன் தன்னையே அழித்துவிடும்.

### விளக்கவுரை

ஒருவன் தன்னைக் காக்க நினைக்கின் தன் சினத்தைக் காக்க வேண்டும். ஏனெனில் அவனிடத்துத் தோன்றிய சினம், அவனையே அழித்துவிடும். ஆதலால் 'சினம் காக்க' என்றார். 'கொல்லும்' என்னும் சொல், துன்ப மிகுதியை உணர்த்தி நின்றது.

### இலக்கணம்

**காக்கின்**-செயின் வாய்பாட்டு வினையெச்சம்.
**காக்க**-வியங்கோள் வினைமுற்று.
**தன்னையே**-ஏகாரம், தேற்றப் பொருளில் வந்தது.

## 6. சேர்ந்தாரைக் கொல்லி

### உரை

**சினம் என்னும்**-சினம் என்று சொல்லப்படுகின்ற,
**சேர்ந்தாரைக் கொல்லி**-நெருப்பு,
**இனம் என்னும்**-இனம் என்று சொல்லப்படுகின்ற,
**ஏமப்புணையை**-இன்பத் தெப்பத்தையும்,
**சுடும்**-சுட்டு அழிக்கும்.

### தெளிவுரை

சினம் என்று சொல்லப்படுகின்ற நெருப்பு, இனம் என்று சொல்லப்படுகின்ற இன்பத் தெப்பத்தையும் சுட்டு அழிக்கும்.

### விளக்கவுரை

**சேர்ந்தாரைக் கொல்லி**-நெருப்பு. தான் சேர்ந்த இடத்தை அழிக்கும் தன்மையது; ஆதலால் நெருப்புக்கு இது காரணப் பெயர். இந் நெருப்பினைப் போலவே, சினமும், தான் தோன்றிய இடத்தை அழிக்கும். ஆதலால், சினத்தைச் சேர்ந்தாரைக் கொல்லி எனக் கூறினர். ஒரு பொருளின் தன்மையை மற்றொரு பொருளின்மேல் ஏற்றிக் கூறுவது, உருவக அணி எனப்படும். நெருப்பின் தன்மையைச் சினத்தின்மேல் ஏற்றிக் கூறியமையால் இது **உருவக அணி** எனப்படும்.

நெருப்பு, தான் சேர்ந்த இடத்தை மட்டுமே அழிக்கும். ஆனால் சினம், தன்னைக் கொண்டவரை அழிப்பதோடு அவருக்கு இன்பம் பயக்கும் சுற்றத்தையும் அழிக்கும். இவ் வேறுபாடு இக்குறளில் அமைந்திருப்பதால் இக்குறளில் **வேற்றுமை அணியும்** அமைந்துள்ளது.

**இனம் என்னும் ஏமப்புணை**-இனமாகிய இன்பத் தெப்பம். இங்கே இனமென்றது, ஒருவன் பிறவிக் கடலில் அழுந்தாமல் அவனைக் காக்கும் மரக்கலம் போன்ற மெய்யறிவாளர்களை ஆகும். இத்தகைய இனமான மெய்யறிவாளர்களையும், சினம் அழிக்கும் என்று கூறவே சினத்தின் ஆற்றல் பெறப்படும்.

சினம், தன்னைக் கொண்டவரை இம்மை மறுமைத் துன்பங்களில் சேர்ப்பித்து அழிப்பதோடு, அவருக்கு நன்மொழி கூறி அவரைக் கரையேற்றவல்ல நல்லோரையும் அழிக்கும் என்பதாம்.

### இலக்கணம்

**சேர்ந்தாரைக் கொல்லி**-இகர விகுதி பெற்ற காரணப்பெயர்.
**ஏமப்புணை**-பண்புத் தொகை.

## 7. சினம் கொண்டவன் உறுதியாக அழிவான்

### உரை

**சினத்தை** - தன் வலிமையைப் புலப்படுத்தச் சினத்தை,
**பொருள் என்று கொண்டவன்**- சிறந்த குணம் என்று தன்னிடத்தே கொண்டவன்,
**கேடு**-கெடுதல்,
**நிலத்து அறைந்தான்**- நிலத்தின் மேல் அறைந்தவனது,
**கை**-கையானது,
**பிழையாதது அற்று** - தப்பாதது போல ஆகும்.

### தெளிவுரை

சினத்தைச் சிறந்த குணம் என்று தன்னிடத்தே கொண்டவன் கெடுதல், நிலத்தை அறைந்தவனுடைய கை, அந் நிலத்திலே பட்டுத் துன்புறுதல் எவ்வளவு உறுதியோ அவ்வளவு உறுதியாகும்.

### விளக்கவுரை

நிலத்தை ஒருவன் அடித்தால், அவனுடைய கை நிலத்தில் பட்டுத் துன்புறும்; இது உறுதி. இது போலவே சினத்தை ஒருவன் சிறந்த குணமாகக் கருதினால், அவன் துன்புறுவது உறுதி என்பதாம்.

### இலக்கணம்

**கேடு**-முதனிலை திரிந்த தொழிற் பெயர்.
**நிலத்தறைந்தான்**-வேற்றுமைத் தொகை.
**பிழையாதற்று**-பிழையாதது அற்று என்பதன் தொகுத்தல் விகாரம்.

## 8. வெகுளாதிருத்தலால் வரும் நன்மை

### உரை

**இணர்எரி**-பல சுடர்களை உடைய பெரிய நெருப்பில்,
**தோய்வு அன்ன**-தோய்வது போன்ற,
**இன்னா செய்யினும்**-துன்பததை ஒருவன் செய்தபோதிலும்,
**புணரின்**-கூடுமானால்,
**வெகுளாமை**-அவன் மேல் கோபம் கொள்ளாதிருத்தல்,
**நன்று**-நல்லது.

### தெளிவுரை

பல சுடர்களையுடைய நெருப்பில் தோய்வது போன்ற துன்பத்தை ஒருவன் செய்தபோதிலும், கூடுமானால், அதன்மேல் கோபம் கொள்ளாதிருத்தல் நல்லது.

### விளக்கவுரை

ஒருவன் செய்யும் துன்பத்தின் மிகுதியைக் காட்ட 'இணர்எரி தோய்வன்ன' என உவமையால் கூறினார். அத்துன்பத்தைப் பொறுத்துக் கொள்ளுதல் அரிது என்பார், 'புணரின்' என்றும் உரைத்தார். ஒருவன், தனக்குப் பெருந்துன்பம் செய்த போதினும், கோபம் கொள்ளாதிருத்தல் நல்லது என்பதாம்.

### இலக்கணம்

**அன்ன**-உவம உருபு.
**செயினும்**-உம்மை இழிவு சிறப்பு.
**நன்று**-ஒன்றன்பாற் குறிப்பு வினைமுற்று.

## 9. வெகுளாதாருக்கு வரும் நன்மை

### உரை

**உள்ளத்தால்**-ஒருவன் தன் மனத்தால்,
**வெகுளி**-வெகுளியை,
**உள்ளான்**-நினையான்,
**எனின்**-என்றால்,
**உள்ளிய எல்லாம்**-அவன் தான் கருதிய பேறுகள் எல்லாம்,
**உடன் எய்தும்**-ஒருங்கே பெறுவான்.

### தெளிவுரை

ஒருவன், தன் மனத்தால் வெகுளியை நினையானாயின், அவன், தான் கருதிய பேறுகள் எல்லாவற்றையும் ஒருங்கே பெறுவான்.

### விளக்கவுரை

**உள்ளிய எல்லாம்**-கருதிய பேறுகள் எல்லாம். ஒருவன் கருதுவன இம்மை, மறுமை, வீடு என்பனவே, இவை ஒவ்வொன்றும் ஒவ்வொரு வகை இயல்புடையன. ஆயினும், ஒருவன் கோபத்தை மனத்தாலும் நினைக்காமல் இருப்பானுனல், வெவ்வேறு வகைப்பட்ட இப்பேறுகளெல்லாம் ஒருங்கே அவனுக்குக் கிடைக்கும் என்பார், "உள்ளிய எல்லாம்" என்று கூறினர்.

**உடனெய்துதல்**-ஒவ்வொரு நெறியில் நின்று ஒவ்வொரு பேறுகளைப் பெறவேண்டும். அப் பேறுகள் எல்லாவற்றையும் கோபத்தை மனத்தாலும் நினைக்காத ஒன்றே தரும். ஆதலால் 'உடனெய்தும்' என்ருர்.

**உள்ளத்தால் உள்ளல்**-உள்ளல்-நினைத்தல்; இது மனத்தின் தொழில். எனவே உள்ளல் என்ருலே போதும். உள்ளத்தால்உள்ளல் என்று சொல்லுவானேன்? உள்ளத்தால் என்று வேண்டாது கூறிய அதனுல், துறவிகளின் அருளுள்ளமும் நினைக்கக்கூடாது என்பதாம்.

### இலக்கணம்

**எய்தும்**-செய்யும் என்னும் வாய்பாட்டு வினைமுற்று.
**உள்ளத்தால்**-ஆல், மூன்ரும் வேற்றுமை யுருபு.
உள்ளான்-எதிர்மறை வினைமுற்று.

## 10. வெகுண்டவர் அடையும் பயனும் வெகுளாதார் அடையும் பயனும்

### உரை

**இறந்தார்**-சினத்தில் மிகுந்தவர், **இறந்தார் அனையர்** - உயிருடன் இருந்தாலும் இறந்தவரைப் போன்றவர்; **சினத்தைத் துறந்தார்**-சினத்தை அடியோடு துறந்தவர், **துறந்தார் துணை** - துறந்தவர்களுக்கு ஒப்பாவர்.

### தெளிவுரை

சினத்தில் மிகுந்தவர், உயிருடன் இருந்தாலும் இறந்தவரைப் போன்றவர்; சினத்தை அடியோடு துறந்தவர், துறந்தவர்களைப் போன்றவர்.

### விளக்கவுரை

**இறந்தார் இறந்தார் அனையர்**-சினத்தில் அளவு கடந்து சென்றவர், இறந்தவரைப் போன்றவர். இறந்தவர்கள், ஞானத்தை அடைய முடியாது; ஏனெனில் ஞானத்தை அடைவிக்கும் உயிர், அவர்களிடத்தில் இல்லை. ஆனுல் சினத்தில் மிக்கவர்களிடம் உயிர் இருக்கின்றது; என்ருலும் கோபம் இருப்பதால், ஞானத்தை அடைய முடியாது. எனவே ஞானத்தை அடைய முடியாத இவ் ஒப்புமை கருதி 'இறந்தார் அனையர்' என்ருர். வெகுண்டவர், ஞானத்தினை அடையார் எனப் பயன் கூறினர்.

**துறந்தார் துறந்தார் அனையர்**-சினத்தை விட்டவர், துறவிகளைப் போன்றவர். துறவிகள், உறுதியாக முத்தி பெறுவர். ஏனெனில், ஞானம் அவர்களிடத்தில் நிலையாக இருக்கும். அவர்களைப் போலவே

சினத்தை விட்டவர்களும் ஞானம் இருப்பதால் முத்தி பெறுவர். முத்தி பெறுகின்ற இவ் ஒப்புமை கருதித் 'துறந்தார் அனையர்' என்றார். வெகுளாதார், முத்தியினை அடைவர் எனப் பயன் கூறினார்.

**இலக்கணம்**

**இறந்தார்**-இறந்த காலத் தெரிநிலை வினைமுற்று.
**அனையர்**-குறிப்பு வினைமுற்று.
**துணை**-ஆகு பெயர்.

## 3. இன்னா செய்யாமை

**இன்னா செய்யாமை:** தனக்கு ஒரு பயன் விளையும் என்று கருதிச் சினம் காரணமாகவோ, சோர்வு காரணமாகவோ எந்த ஒருயிர்க்கும் இன்னாதவற்றைச் செய்யாமை என்பதாம்—இன்னாதன—துன்பம் தருவன.

### அதிகாரப் பகுப்பு

1. குறள்—ஒரு பயன் நோக்கியும் இன்னா செய்தல் கூடாது.
2, 3, 4. குறள்கள்—சினம் பற்றியும் இன்னா செய்தல் கூடாது.
5. குறள்—சோர்வாலும் இன்னா செய்தல் கூடாது.
6, 7, 8. குறள்கள்—இன்னா செய்தல் எப்பொழுதும் கூடாது.
9, 10. குறள்கள்—இன்னா செய்தலால் வரும் குற்றம்.

### 1. ஒரு பயன் நோக்கியும் இன்னா செய்தல் கூடாது

**உரை**

**சிறப்பு ஈனும்**-சிறப்பைத் தருகின்ற,
**செல்வம் பெரினும்**-செல்வங்களைப் பெறுவதாக இருந்தாலும்,
**பிறர்க்கு**-பிறருக்கு,
**இன்னா செய்யாமை**-இன்னாதன செய்யாதிருத்தலே,
**மாசு அற்றார்**-குற்றமற்ற தூய்மையுடையாரது,
**கோள்**-கொள்கையாகும்.

**தெளிவுரை**

சிறப்பைத் தருகின்ற செல்வங்களைப் பெறுவதாக இருந்தாலும், பிறருக்கு இன்னாதன செய்யாதிருத்தலே குற்றமற்ற தூய்மையுடையாரது கொள்கையாகும்.

**விளக்கவுரை**

**சிறப்பு ஈனும் செல்வம்**-நாம் காணும் பொருட் செல்வத்திலிருந்து பிரிப்பதற்காகச் ''சிறப்பு ஈனும் செல்வம்'' என்றார். பொருட் செல்வம், பழியையும் தரும். எனவே பழியைத் தராத செல்வமே 'சிறப்பு ஈனும் செல்வம்' ஆகும். அச் செல்வமாவது, யோகத்தால் சித்திகள் பெற்று முத்தியடைதல் ஆகும்.

**மாசற்றார்கோள்**-குற்றமற்ற தூய அறிவினை உடையவர்களின் கொள்கை. பிறருக்குத் துன்பம் செய்தால் முத்தி பெறலாம் என்ற நிலை ஏற்பட்ட காலத்தும், பிறருக்குத் துன்பம் செய்தல் கூடாது என்பதே அறிஞர்கள் கொள்கை. பிறருக்குத் துன்பம் செய்தால்

முத்தி கிடைக்காது. ஒருவேளை முத்தி கிடைத்தாலும் கிடைக்கலாம் என்ற நிலை ஏற்பட்டாலும் என்பார் 'பெறினும்' என்றார்.

இக் குறளால், தமக்கு வரும் ஒரு பயன் நோக்கி இன்னா செய்தல் கூடாது என்பது பெறப்படும்.

### இலக்கணம்

ஈனும்-செய்யும் என்னும் வாய்பாட்டுப் பெயரெச்சம்.
பெறினும்-உம், உயர்வு சிறப்பு.
கோள-"கொள்" என்னும் முதனிலை திரிந்த தொழிற் பெயர்.

### சினம் பற்றியும் இன்னா செய்தல் கூடாது

## 2. இன்னா செய்தார்க்கும் இன்னாசெய்தல் கூடாது

### உரை

**கறுத்து**-தம்மேல் சினங்கொண்டு
**இன்னா செய்த அக் கண்ணும்**-ஒருவன் இன்னாதனவற்றைச் செய்தவிடத்தும்,
**மறுத்து**-அவனுக்குத் திரும்ப,
**இன்னா செய்யாமை**-தாம் இன்னாதவற்றைச் செய்யாமையும்,
**மாசு அற்றார்**-குற்றமற்ற தூய்மையுடையாரது,
**கோள்**-கொள்கையாகும்.

### தெளிவுரை

தம்மேல் சினங்கொண்டு ஒருவன் இன்னாதனவற்றைச் செய்தவிடத்தும் அவனுக்குத் திரும்பத் தாம் இன்னாதனவற்றைச் செய்யாமையும் குற்றமற்ற தூய்மையுடையாரது கொள்கையாகும்.

### விளக்கவுரை

இதற்கு முன்னுள்ள குறளால், தமக்கு வரும் ஒரு பயன் நோக்கி தீங்கு செய்தல் கூடாது என்றார். இக் குறளால் பிறர் நமக்குத் தீங்கு செய்தாரே என்பதற்காகத் தாம் தீங்கு செய்தலும் கூடாது என்றார். எனவே "இன்னா செய்யாமை மாசற்றார்கோள்" என்பதனை "இன்னா செய்யாமையும் மாசற்றார்கோள்" என இறந்த தழீஇய எச்சவும்மை கொடுத்து விரித்துக் கொள்ள வேண்டும். பிறர், நமக்குத் தீங்குகள் செய்தால், அதற்கு எதிராக நாமும் அவருக்குத் தீங்குகள் செய்யாமல், அவர் செய்த தீங்குகளை மனத்தில் வையாமல் மறந்துவிட வேண்டும் என்பதாம்.

### இலக்கணம்

கறுத்து-கோபமாகிய குறிப்புப் பொருளை உணர்த்தும் இடைச் சொல்.
செய்தவக் கண்ணும்-உம்மை, இழிவு சிறப்பு.
இன்னா செய்யாமை-இன்னா செய்யாமையும். உம்மை இறந்தது தழீஇய எச்சவும்மை; விகாரத்தால் தொக்கது.
கோள்-முதனிலை திரிந்த தொழிற் பெயர்.

## 3. இன்னு செய்தால் இடும்பை வரும்

### உரை

**செய்யாமல்**-தான் ஒன்றும் செய்யாதிருக்க,
**செற்றூர்க்கும்**-தன்மேல் கோபம் கொண்டு தீங்கு செய்தவருக்கும்,
**இன்னுத செய்தபின்**-தான் இன்னுதனவற்றைச் செய்தால், அச் செயல் அவனுக்கு,
**உய்யா விழுமம் தரும்**-கடக்க முடியாத துன்பத்தைக்கொடுக்கும்.

### தெளிவுரை

தான் ஒன்றும் செய்யாதிருக்கத் தன்மேல் கோபம் கொண்டு தீங்கு செய்தவருக்கும், தான் இன்னுதனவற்றைச் செய்தால், அச் செயல் அவனுக்குக் கடக்க முடியாத துன்பத்தைக் கொடுக்கும்.

### விளக்கவுரை

காரணமின்றி ஒருவன் நமக்குத் தீங்கு செய்தாலும் நாம் அவனுக்கு எதிர்த் தீங்கு செய்தல் கூடாது; அவ்வாறு இன்றி எதிர்த் தீங்கு செய்தால் பழியும் பாவமும் கிடைக்கும் என்பதாம். **உய்யா விழுமம்**—கடக்க முடியாத துன்பம்; அது பழியும் பாவமும் ஆகும். இவை ஏனைய துன்பங்கள் போல உடலைச் சார்ந்து வருவன அல்ல; உயிரைச் சார்ந்து வருவன ஆதலால், 'உய்யா விழுமம்' என்றூர். செற்றூர்க்கு இன்னு செய்தல் உய்யா விழுமம் தரும் எனவே, செருதார்க்கு இன்னு செய்தல் உய்யா விழுமம் தரும் என்பது கூருமலேயே பெறப்படும்.

### இலக்கணம்

**செற்றூர்**-வினையாலணையும் பெயர்.
**செற்றூர்க்கும்**-உம்மை, இழிவு சிறப்பு.
**இன்னுத**-எதிர்மறைப் பலவின்பால் வினையாலணையும் பெயர்.
**செய்தபின்**-எதிர்கால வினையெச்சம். பின்-காலம் காட்டும் விகுதி.
**உய்யா**-ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.
**தரும்**-செய்யும் என்னும் வாய்பாட்டு வினைமுற்று.

## 4. இன்னு செய்தார்க்கும் இனியவே செய்க

### உரை

**இன்னு செய்தாரை**-தமக்கு இன்னுதனவற்றைச் செய்தாரை,
**ஒறுத்தல்**-தண்டித்தல்,
**அவர் நாண**-அவரே நாணும்படியாக,
**நல்நயம் செய்துவிடல்**-அவருக்கு நல்லுதவி செய்து, அவருடைய தீமையையும் அவருக்குத் தாம் செய்த நன்மையையும் மறந்துவிடுதல் ஆகும்.

### தெளிவுரை

தமக்கு இன்னுதனவற்றைச் செய்தாரைத் தண்டித்தல், அவரே நாணும்படியாக அவருக்கு நல்லுதவி செய்து அவருடைய தீமையையும் அவருக்குத் தாம் செய்த நன்மையையும் மறந்துவிடுதல் ஆகும்.

### விளக்கவுரை

தமக்குத் தீங்கு செய்த ஒருவரைத் தண்டிக்க வேண்டுமானால், அவர் வெட்கும்படியாக அவருக்கு நன்மைகள் செய்க! செய்தபின் அவர், தமக்குச் செய்த தீமையை மறந்துவிடுக; மேலும் தாம் அவருக்குச் செய்த நன்மைகளையும் மறந்துவிடுக என்பதாம். அவருக்குச் செய்த நன்மைகளை மறக்காதிருந்தால், அந் நன்மைகள் செய்வதற்குக் காரணமாக அமைந்த அவர் செய்த தீமைகள், நெஞ்சில் தோன்றவும் கூடும். ஆதலால் நன்மைகளையும் மறந்துவிடுக என்றார்.

### இலக்கணம்

**ஒறுத்தல்**-தண்டித்தல், தொழிற்பெயர்.
**நாண**-'செய' என்னும் வாய்பாட்டு வினையெச்சம்.
**செய்து**-வினையெச்சம்.
**விடல்**-தொழிற் பெயர்.

## 5. சோர்வாலும் இன்னா செய்தல் கூடாது

### உரை

**பிறிதின் நோய்**-பிறிதோர் உயிருக்கு வரும் துன்பத்தினை,
**தம் நோய் போல** - தம்முடைய துன்பம் போலக் கருதி,
**போற்றாக் கடை**-காப்பாற்றா விட்டால்,
**அறிவினான்**-பெற்றுள்ள அறிவினால்,
**ஆகுவது உண்டோ**-ஆகும் பயன் உண்டோ?

### தெளிவுரை

பிறிதோர் உயிருக்கு வரும் துன்பத்தினைத் தம்முடைய துன்பம் போலக் கருதிக் காப்பாற்றாவிட்டால், பெற்றுள்ள அறிவினால் ஆகும் பயன் உண்டோ?

### விளக்கவுரை

பிறிதோர் உயிரின் துன்பத்தைத்தான் உற்ற துன்பமாகக் கருதிக் காப்பதே கற்ற கல்வியின் சிறப்பாகும். எனவே நடத்தல், இருத்தல், கிடத்தல், நிற்றல், உண்டல் முதலிய தம்தொழில்களாலும் பிறவாற்றாலும் உயிர்கள் அடையும் துன்பங்களை யறிந்து அத் துன்பங்கள் வாராமல் காக்க வேண்டும். "என்றும், பிறர்நோயும் தம்நோய் போல் போற்றி அறன் அறிதல், சான்றவர்க் கெல்லாம் கடன்" என்னும் கலித்தொகைப் பாடலில், இக் குறளின் கருத்து அமைந்திருத்தலைக் காணலாம்.

### இலக்கணம்

**அறிவினான்**-ஆன், மூன்றாம் வேற்றுமை யுருபு.
**ஆகுவது**-எதிர்கால வினையாலணையும் பெயர்.
**உண்டோ**-ஓகாரம் எதிர்மறைப் பொருளில் வந்துள்ளது.
**பிறிதின்நோய்**-ஆறாம் வேற்றுமைத் தொகை.
**போற்றாக்கடை**-எதிர்மறை எதிர்கால வினையெச்சம்.

## இன்னா செய்தல் எப்பொழுதும் கூடாது

## 6. துன்பம் செய்யற்க

### உரை

**இன்னா எனா** - ஒருவன் துன்பமானவை என்று, **தான் உணர்ந்தவை**-தன் வாழ்க்கையில் கண்டு உணர்ந்தவைகளை, **பிறன்கண்**-மற்றவனிடத்தில், **செயல் துன்னாமை வேண்டும்**-செய்யாமல் தவிர்க்க வேண்டும்.

### தெளிவுரை

ஒருவன் துன்பமானவை என்று தன் வாழ்க்கையில் கண்டு உணர்ந்தவைகளை மற்றவனிடத்தில் செய்யாமல் தவிர்க்கவேண்டும்.

### விளக்கவுரை

ஒருவனுக்கு எது துன்பம் தருமோ அது பிறனுக்கும் துன்பம் தரும் என்ற உணர்ச்சி, மனத்தில் எழுவதாகும். எனவே, மனத்தின் செயலாக "உணர்ந்தவை" என்றார். இவ் உணர்ச்சியையுடைய ஒருவன், பிறனுக்குத் துன்பம் செய்யமாட்டான் என்பதாம்.

### இலக்கணம்

**உணர்ந்தவை**-பலவின்பால் வினையாலணையும் பெயர்.
**துன்னாமை**-எதிர்மறை
**வேண்டும்**-வியங்கோள் வினைமுற்று.
**பிறன்கண்**-கண், ஏழாம் வேற்றுமை யுருபு.

## 7. மனத்தாலும் இன்னாமை செய்யற்க

### உரை

**எனைத்தானும்**-எவ்வளவு சிறிய துன்பச் செயலாயினும், **எஞ்ஞான்றும்**-எக்காலத்தும், **யார்க்கும்**-எவரிடத்திலும், **மனத்தான் ஆம்** - மனத்தால் எண்ணி உண்டாகின்ற, **மாணா செய்யாமை தலை**-துன்பச் செயல்களைச் செய்யாதிருத்தலே சிறந்த அறமாகும்.

### தெளிவுரை

எவ்வளவு சிறிய துன்பச் செயலாயினும், எக்காலத்தும் எவரிடத்திலும் மனத்தால் எண்ணிச் செய்கின்ற துன்பச் செயல்களைச் செய்யாதிருத்தலே சிறந்த அறமாகும்.

### விளக்கவுரை

**எனைத்தானும்**-பிறருக்குச் செய்கின்ற துன்பம் சிறிதாக இருந்தாலும், அதனால் செய்தவன் அடையும் பாவம் பெரிதாக இருக்கும் ஆதலால் 'எனைத்தானும்' என்றார்.

**எஞ்ஞான்றும்**-பிறருக்குத் துன்பம் செய்கின்ற ஆற்றல் படைத்த காலத்தும், துன்பம் செய்தல் கூடாது. எனவே 'எஞ்ஞான்றும்' என்றார்.

**யார்க்கும்**-இவர், வலிமையில்லாதவர், எளியர் என்றுகூட நினைத்துத் துன்பம் செய்யக் கூடாது என்பார் 'யார்க்கும்' என்றார்.

**தலை**-தலையாய அறம். அறங்கள் பல. அவற்றுள், இன்னா செய்யாமையே சிறந்த அறம் என்பதாம்.

### இலக்கணம்

**எனைத்தானும்**-உம்மை, இழிவு சிறப்பு.

எஞ்ஞான்றும் }
யார்க்கும் } உம்மைகள், முற்றும்மைகள்.

**மாணா**-எதிர்மறைப் பலவின்பால் வினையாலணையும் பெயர்.

## 8. இன்னாமை செய்வானேன்?

### உரை

**தன் உயிர்க்கு இன்னாமை**-தன் உயிருக்குத் துன்பமானவை இவை என்று,
**தான் அறிவான்**-உணர்ந்தவன்,
**மன் உயிர்க்கு**-நிலை பேறு உடைய பிற உயிர்களுக்கு,
**இன்னா செயல்**-அத் துன்பங்களைச் செய்தல்,
**என் கொலோ?**-என்ன காரணத்தாலோ?

### தெளிவுரை

தன் உயிருக்குத் துன்பமானவை இவை என்று உணர்ந்தவன் நிலைபேறு உடைய பிற உயிர்களுக்கு அத் துன்பங்களைச் செய்தல் என்ன காரணத்தாலோ?

### விளக்கவுரை

தன் உயிருக்குத் துன்பம் இவை என்று உணர்ந்தவன், அவ்வாறு உணர்ந்திருந்தும் பிறருக்கு அவற்றைச் செய்தல் பெரும் பாவமாகும். இப் பாவத்தினைப் போக்க இயலாது. அவன் இவ்வாறு செய்வதற்குக் காரணம், நல்லுணர்வின்மையே ஆகும்.

### இலக்கணம்

**அறிவான்**-வினையாலணையும் பெயர்.

**என்**-எவன் என்னும் குறிப்பு வினைமுற்று, விகாரப்பட்டு என் என்று நின்று வினாப்பொருள் உணர்த்தியது.

**கொல், ஓ**-அசை நிலைகள்.

**செயல்**-தொழிற் பெயர்.

இன்னா செய்தலால் வரும் குற்றம்.

## 9. முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும்

### உரை

**முற்பகல்**-முற்பகலில்,
**பிறர்க்கு இன்னா செய்யின்**-பிறருக்குத் துன்பமானவற்றைச் செய்தால்,
**பிற்பகல்**-பிற்பகலில்,
**இன்னா**-இன்னாதனபல,
**தாமே**-தாமாகவே,
**தமக்குவரும்**-தமக்கே வரும்.

### தெளிவுரை

முற்பகலில் பிறருக்குத் துன்பமானவற்றைச் செய்தால், பிற்பகலில் இன்னாதனபல, தாமாகவே தமக்கே வரும்.

### விளக்கவுரை

'முற்பகல் செய்யின் பிற்பகல்விளையும்' என்பதாம். பிற்பகலில் தமக்கு வரும் துன்பம், முற்பகலில் தாம் செய்த துன்பத்திற்கு ஆட்பட்டவரால் வராது என்பார், தாமே வரும் என்றார்.

### இலக்கணம்

**முற்பகல்**, **பிற்பகல்**-பின்முன்னாகத் தொக்க ஆறும் வேற்றுமைத் தொகை.

**வரும்**-செய்யும் என்னும் வாய்பாட்டு வினைமுற்று.

## 10. நோய் செய்யார் நோயின்மை வேண்டுபவர்

### உரை

**நோய் எல்லாம்**-துன்பம் எல்லாம், **நோய் செய்தார்**-துன்பம் செய்தவரையே, **மேலவாம்** - சார்வனவாம். ஆதலால், **நோய் இன்மை வேண்டுபவர்**-துன்பம் இல்லாமல் வாழ விரும்புகின்றவர், **நோய் செய்யார்**-பிறருக்குத் துன்பம் செய்யார்.

### தெளிவுரை

துன்பம் எல்லாம் துன்பம் செய்தவரையே சார்வனவாம்; ஆதலால் துன்பம் இல்லாமல் வாழ விரும்புகின்றவர், பிறருக்குத் துன்பம் செய்யார்.

### விளக்கவுரை

பிறருக்குத் தீங்கு செய்தால், அதன் பயனாகத் தமக்கும் தீங்கே வரும். விதைக்கு ஏற்ற விளைவுதானே கிடைக்கும்? ஆதலால் துன்பம் இல்லாமல் வாழ நினைப்பவர்கள், பிறருக்குத் துன்பம் ஒரு போதும் செய்தல் கூடாது.

### இலக்கணம்

**நோய்**-பால்பகா அஃறிணைப்பெயர்.

**நோய் செய்யார்**-இரண்டாம் வேற்றுமைத் தொகை.

இக்குறளில், நோய் என்னும் சொல், இன்னாதன என்ற பொருளில் பலமுறை வந்துள்ளதால், இக்குறளில் சொற் பொருட்பின் வருநிலையணி அமைந்துள்ளது.

## 4. ஊழ்

ஊழ் : ஊழ், பால், முறை, உண்மை, தெய்வம், நியதி, விதி என்பன ஒருபொருளை உணர்த்தும் சொற்கள். நல்வினைப் பயனும் தீவினைப் பயனும் செய்தவனையே சென்று அடையும். அதற்குக் காரணமாக இருக்கின்ற நியதியே ஊழ் எனப்படும்.

### அதிகாரப் பகுப்பு

1, 2, 3, 4, 5, 6-குறள்கள்-பொருட்குக் காரணமாகிய ஊழின் வலி.

7, 8, 9-குறள்கள்-இன்ப துன்பங்களுக்குக் காரணமாகிய ஊழின் வலி.

10-குறள்-பொருள், இன்ப துன்பம் ஆகியவற்றிற்குக் காரணமாகிய ஊழின்வலி.

### பொருட்குக் காரணமாகிய ஊழின்வலி

## 1. ஆகூழும் போகூழும்

**கைப்பொருள் ஆகு ஊழால்**-கைப்பொருள் ஆவதற்குக் காரணமான ஊழால்,
**அசைவு இன்மை**-சோர்வு இல்லாத முயற்சி,
**தோன்றும்**-உண்டாகும்;
**கைப் பொருள் போகு ஊழால்**-கைப்பொருள் போவதற்குக் காரணமான ஊழால்,
**மடி தோன்றும்**-சோம்பல் உண்டாகும்.

### தெளிவுரை

கைப் பொருள் உண்டாவதற்குக் காரணமான ஊழால் சோர்வு இல்லாத முயற்சி உண்டாகும்; கைப் பொருள் போவதற்குக் காரணமான ஊழால் சோம்பல் உண்டாகும்.

### விளக்கவுரை

**ஆகு ஊழ் :** நல்வினைப்பயன்; இப் பயனால் முயற்சி உண்டாகும்; செல்வம் பெருகும்.

**போகு ஊழ் :** தீவினைப் பயன்; இப் பயனால் சோர்வு உண்டாகும்; செல்வம் அழியும்.

### இலக்கணம்

**ஆ கூழ், போ கூழ் :**-வினைத்தொகைகள். எதிர்காலத்தால் விரிக்கப்பட்டுக் காரணப் பொருளாய் நின்றன.

## 2. அறிவும் அறியாமையும் ஊழால் வரும்

### உரை

**இழவு ஊழ்**-கைப்பொருள் இழத்தற்குக் காரணமாகிய ஊழ்,
**உற்றக் கடை** - பொருந்திய இடத்து,
**பேதைப் படுக்கும்**-அறிவற்றவனாக்கும்.
**ஆகல் ஊழ்**-கைப்பொருள் ஆகுதற்குக் காரணமாகிய ஊழ்,
**உற்றக் கடை** - பொருந்திய இடத்து,
**அறிவு அகற்றும்** - அறிவைப் பெருக்கும்.

### தெளிவுரை

ஒருவனுக்குக் கைப்பொருள் இழத்தற்குக் காரணமாகிய ஊழ் பொருந்திய இடத்து, அவனை அறிவற்றவனாக்கும்; கைப்பொருள்

ஆதற்குக் காரணமாகிய ஊழ் பொருந்திய இடத்து அவனுடைய அறிவைப் பெருக்கி அறிஞனுக்கும்.

### விளக்கவுரை

**இழவூழ் பேதைப் படுக்கும்**-ஒருவனுக்கு எல்லா அறிவும் இருந்தாலும் தீயூழ் பொருந்தினால் அவனை அறிவற்றவனாக்கும்.

**ஆகலூழ் அறிவகற்றும்** :-ஒருவனுக்கு அறிவு குறைவாக இருந்தாலும் நல்லூழ் பொருந்தினால் அவனை அறிவுடையவனாக்கும்.

### இலக்கணம்

**இழவூழ்**
**ஆகலூழ்** } நான்காம் வேற்றுமைத் தொகைள்.
**அகற்றும்**-செய்யும் என்னும் வாய்பாட்டுப் பிறவினை முற்று.
**உற்றக் கடை**-எதிர்கால வினையெச்சம்.

## 3. கல்வியினும் ஊழ் வலியுடைத்து

### உரை

**நுண்ணிய நூல் பல**-ஒருவன் நுட்பமான நூல்கள் பலவற்றை,
**கற்பினும்**-கற்றாலும்,
**மற்றும்**-அவனுக்குப் பின்னும்,
**தன் உண்மை அறிவே** - தன் ஊழாகிய பேதைமை உணர்வே,
**மிகும்**-மேம்பட்டுத் தோன்றும்.

### தெளிவுரை

ஒருவன் நுட்பமான நூல்கள் பலவற்றைக் கற்றாலும் அவனுக்குப் பின்னும் தன் ஊழாகிய பேதமை உணர்வே மேம்பட்டுத் தோன்றும்.

### விளக்கவுரை

**நுண்ணிய நூல்**-நுட்பமான பொருள்களைப் பற்றிக் கூறும் நூல்.

**உண்மை அறிவே மிகும்** : ஒருவனுக்குப் பேதைப்படுக்கும் இழவூழ் பொருந்திய காலத்தில், அவன் எவ்வளவு நுட்பமான நூல்களைக் கற்றாலும், அவ் இழவூழால் அவனுக்கு அறியாமையே மிகும் என்பதாம்.

### இலக்கணம்

**நுண்ணிய**-பெயரெச்சம்.
**கற்பினும்**-உம்மை, உயர்வு சிறப்பு.
**மற்றும**-உம்மை, இறந்தது தழீஇய எச்சவும்மை. (படித்தற்கு முன்பு அல்லாமல் பின்னும்)
**அறிவே**-ஏகாரம், தேற்றப் பொருளில் வந்தது.

## 4. திருவேறு; தெள்ளியராதல் வேறு.

### உரை

**உலகத்து இயற்கை**-உலகத்தின் இயற்கை,
**இருவேறு**-ஊழின் காரணமாக இரண்டு பகுப்பினை உடைத்தாகும்;

**திரு வேறு-ஆதலால்** செல்வம் உடையராதலும் வேறு? | **தெள்ளியர் ஆதலும் வேறு**-அறிவு உடையராதலும் வேறு.

### தெளிவுரை

உலகத்தின் இயற்கை, ஊழின் காரணமாக இரண்டு பகுப்பினை உடையதாகும். ஆதலால், செல்வம் உடையராதலும் வேறு; அறிவு உடையராதலும் வேறு.

### விளக்கவுரை

ஒருவர் செல்வம் உடையர் ஆதலும் அறிவு உடையர் ஆதலும் வெவ்வேறு ஊழினால் விளைபவைகள் ஆகும். செல்வத்தினைப் படைத்தும் பயன் கொள்ளுதலும் அறிவுடையார்க்கு அல்லது ஏனையோருக்குக் கூடாத காரியமல்லவா? ஆயினும் அறிவுடையார், வறுமையில் வாடக் காண்கிறோம்; அறிவில்லாதவர் செல்வத்தில் திளைக்கக் காண்கின்றோம்; எனவே அறிவுடையராதற்கு வேண்டிய ஊழ், செல்வமுடையர் ஆதலுக்குத் துணை செய்யாது என்பதும், செல்வமுடையராதற்கு வேண்டிய ஊழ், அறிவுடையராதற்குத் துணை செய்யாது என்பதும் பெறப்படும்.

### இலக்கணம்

**ஆதலும்**-உம்மை, இறந்தது தழீஇய எச்சவும்மை.

## 5. நல்லவும் தீயவும்

### உரை

**செல்வம் செயற்கு**-செல்வத்தை ஆக்குதற்கு,
**நல்லவை எல்லாம்**-நல்லவை எல்லாம்.
**தீய ஆம்**-ஊழ்வகையால் தீயவை ஆதலும் உண்டு.
**தீயவும்**-தீயவைகளும்
**நல்லவாம்**-ஊழ்வகையில் நல்லவை ஆதலும் உண்டு.

### தெளிவுரை

செல்வத்தை ஆக்குதற்கு நல்லவை எல்லாம் ஊழ் வகையில் தீயவை ஆதலும் உண்டு; தீயவைகளும் ஊழ் வகையால் நல்லவை ஆதலும் உண்டு.

### விளக்கவுரை

**நல்லவை எல்லாம் தீயவாம் :** செல்வத்தை ஈட்டும் முயற்சியில் ஈடுபடும்போது, அழிக்கும் ஊழ் பொருந்தினால் நல்ல காலம் நல்ல இடம், நல்லகருவி, நல்ல தொழில் முதலாய அனைத்தும் தீயவைகள் ஆகிவிடும்.

**தீயவும் நல்லவாம் :** செல்வத்தை ஈட்டும் முயற்சியில் ஈடுபடும் போது, ஆக்கும் ஊழ் பொருந்தினால் தீய காலம், தீய இடம், தீய கருவி தீயதொழில் முதலாய அனைத்தும் நல்லவைகள் ஆகிவிடும்.

### இலக்கணம்

**எல்லா அம்**-இசை நிறை அளபெடை.
**செயற்கு**-நான்காம் வேற்றுமை உருபு ஏற்ற தொழிற் பெயர்.

## 6. செல்வமும் ஊழும்

### உரை

**பால் அல்ல**-ஊழால் தமக்கு உரியவை அல்லாத பொருள்களை,
**பரியினும்**-வருந்திக்காப்பினும்,
**ஆகா ஆம்**-நில்லாமல் போகும்;
**தம**-ஊழால் தமக்கு உரிய பொருள்களை,
**உய்த்துச் சொரியினும்**-புறத்தே கொண்டுபோய்க் கொட்டினாலும்,
**போகா**-தம்மை விட்டு நீங்கா.

### தெளிவுரை

ஊழால் தமக்கு உரியவை அல்லாத பொருள்களை வருந்திக் காப்பினும் அவை இல்லாமல் போகும்: ஊழால் தமக்கு உரிய பொருள்களைப் புறத்தே கொண்டுபோய்க் கொட்டினாலும் அவை தம்மைவிட்டு நீங்கா.

### விளக்கவுரை

பொருள்கள் நிலைத்து நிற்பதற்கும் அழிவதற்கும் காரணம் ஊழே தவிர, அப்பொருள்களைக் காப்பாற்றுவதும் உதறித்தள்ளுவதும் காரணம் அல்ல என்பதாம்.

### இலக்கணம்

**பரியினும்**-உம்மை, உயர்வு சிறப்பு.
**ஆகா**-வினையாலணையும் பெயர்.
**சொரியினும்**-உம்மை, இழிவு சிறப்பு.
**போகா**-வினைமுற்று.
**தம**-பலவின்பால் குறிப்பு வினையாலணையும் பெயர்.

### இன்ப துன்பங்களுக்குக் காரணமாய ஊழின் வலி

## 7. வகுத்தான் வகை

### உரை

**வகுத்தான் வகுத்த**-ஊழ் ஏற்படுத்திய,
**வகை அல்லால்**-வகையால் அல்லாமல்,
**கோடி தொகுத்தார்க்கும்**-முயன்று கோடிக் கணக்கான பொருள்களைச் சேர்த்தவர்களுக்கும்,
**துய்த்தல்**-அவற்றை நுகர்தல்,
**அரிது**-முடியாது.

### தெளிவுரை

ஊழ் ஏற்படுத்திய வகையால் அல்லாமல் முயன்று கோடிக் கணக்கான பொருள்களைச் சேர்த்தவர்களுக்கும் அவற்றை நுகர்தல் முடியாது.

### விளக்கவுரை

**வகுத்தான்**-ஓர் உயிர் செய்த வினையின் பயன், பிறிதோர் உயிரின்கண் செல்லாமல் அவ் உயிர்க்கே செல்லுமாறு ஏற்பாடு செய்வது ஆதலின் 'ஊழ்', வகுத்தான் எனக் கூறப்பட்டது. ஊழ்த் தெய்வத்தை, உயர்திணைப்பாலில் வைத்து 'வகுத்தான்' என்று சுட்டினார்.

முயற்சியால் பொருளை ஈட்ட முடியும்; ஆனால் அதனை அநுபவிக்க ஊழ் வேண்டும். இல்லையேல் அநுபவிக்க இயலாது என்பதாம். எனவே இன்ப துன்பங்களுக்கும் ஊழே காரணம் என்பது பெறப்படும்.

"கைக்கெட்டியது வாய்க்கு எட்டவில்லை" என்பதனையும் இங்கு ஒப்பு நோக்குக.

### இலக்கணம்

**வகுத்தான்**-அஃறிணை, உயர்திணை ஆண்பாலாகக் கூறப்பட்டது.
**வகுத்த**-பெயரெச்சம்.
**அல்லால்**-எதிர்மறை வினையெச்சம்.
**தொகுத்தார்க்கும்**-உம்மை, உயர்வு சிறப்பும்மை.
**துய்த்தல்**-தல் விகுதிபெற்ற தொழிற்பெயர்.
**அரிது**-குறிப்பு வினைமுற்று.

## 8. வறியவர் துறவி யாவர்!

### உரை

**உறற்பால**-அநுபவிக்க வேண்டிய துன்பங்களை,
**ஊட்டா**-அடைவிக்காமல்.
**கழியும் எனின்**-ஊழ் நீங்குமானால்,
**துப்புரவு இல்லார்**-வறுமையால் பொருளை அநுபவிக்கும் தன்மையில்லாதவர்,
**துறப்பார்மன்**-துறவறம் மேற்கொள்வர்.

### தெளிவுரை

அநுபவிக்க வேண்டிய துன்பங்களை அடைவிக்காமல் ஊழ் நீங்குமானால், வறுமையால் பொருளை அநுபவிக்கும் தன்மையில்லாதவர் துறவறம் மேற்கொள்வர். ஆனால் வறியவர்கள், துறவறம் மேற்கொள்ளவில்லை. இதற்குக் காரணம் ஊழே ஆகும்.

### விளக்கவுரை

**துறப்பார்மன் :** உலகத்தில் பொருளுள்ளவர்கள், அப்பொருளில் பற்றும், அப்பொருளால் பயன் அநுபவித்தலில் விருப்பமும் உடையவர்களாய் உள்ளனர். அவ்வாறானால் இயற்கையாகவே பொருளில்லாத வறியவர்கள் அப்பொருளில் பற்றும், இன்ப நுகர்ச்சியில் விருப்பமும் இல்லாமல் துறவறத்தையல்லவா மேற்கொள்ள வேண்டும்? ஆனால் வறியவர்கள், அவ்வாறு துறவறம் மேற்கொள்வதில்லை. இதறகுக் காரணம், அவர்களின் அறிவை அவர்களின் ஊழானது துறக்காமல் தடுத்து, பொருளாசையில் செலுத்தி, பிறவித் துன்பம் அடையச் செய்தலே ஆகும் என ஊழின்

வலிமையை 'மன்' என்னும் இடைச்சொல்லால் பெற வைத்தார். எனவே 'மன்' என்னும் இடைச்சொல், ஒழியிசைப் பொருளில் வந்தது.

### இலக்கணம்

**துறப்பார்**-ஆரீற்று எதிர்கால முற்றுச்சொல்.
**மன்**-இடைச்சொல்; ஒழியிசைப் பொருளில் வந்தது.
**ஊட்டா**-எதிர்மறை வினையெச்சம்.

## 9. அல்லற்படுவானேன்?

### உரை

**நன்றுஆம்கால்**-நல்வினை விளையும் போது, **நல்லஆகாண்பவர்** - நல்லவை எனக் கருதி மகிழ்கின்றவர், **அன்றுஆம்கால்-தீவினை விளையும்** போது, **அல்லல்படுவது எவன்**-துன்பப் படுவது ஏனோ?

### தெளிவுரை

நல்வினை விளையும்போது நல்லவை எனக் கருதி மகிழ்கின்றவர் தீவினை விளையும்போது துன்பப்படுவது ஏனோ?

### விளக்கவுரை

நல்வினைபோலத் தீவினையும் தாமே முன்னர்ச் செய்துகொண்டது ஆகும். எனவே இவ் இருவினைகளும் அவற்றிற்கு உரிய பயன்களைக் கொடுத்தே செல்லும். ஆதலால் நல்வினைப் பயனை அநுபவிப்பவர்கள், தீவினைப் பயனை அநுபவிக்க மாட்டாது துன்பப்படுவது ஏன்? அவ்வாறு தீவினைப் பயன் விளையும்போது அல்லற்படுபவன், அறியாமையுடையவனே ஆவான்.

### இலக்கணம்

**நன்றாங்கால்**-வினையெச்சம்.
**காண்பவர்**-வினையாலணையும் பெயர்.
**எவன்**-குறிப்பு வினைமுற்று; வினாப்பொருளில் வந்துள்ளது.

## 10. இருவகை ஊழின் வலி

### உரை

**மற்றுஒன்று**-ஊழை விலக்குதற் பொருட்டு மற்றோர் உபாயத்தை, **சூழினும்**-ஆராய்ந்தாலும், **தான்முந்துறும்**-அங்கும் அவ்வூழே முற்பட்டு நிற்கும்; ஆதலால், **ஊழின்**-ஊழைப்போல, **பெருவலி**-மிக்க வலிமையுடையன, **யாஉள**-யாவை உள?

### தெளிவுரை

ஊழை விலக்குதற் பொருட்டு மற்றோர் உபாயத்தினை ஆராய்ந்தாலும், அங்கும் அவ்வூழே முற்பட்டு நிற்கும். ஆதலால், ஊழைப் போல மிக்க வலிமையுடையன யாவை உள? ஒன்றும் இல்லை.

**விளக்கவுரை**

ஊழைப்போல வன்மையுடையது வேறொன்றும் இல்லை. எல்லாம் முறைப்படி நடக்கின்றன. இதற்குக் காரணம், ஊழே ஆகும். இவ்வூழைப் புறங்காண வேண்டும் என்று ஆராய்ச்சி செய்தால், அந்த இடத்தில் ஊழ் குறுக்கிட்டு நிற்கும்.

**இலக்கணம்**

**ஊழின்**-இன், உவம உருபு. ஐந்தாம் வேற்றுமை.
**பெருவலி**-ஆகுபெயர்.
**யா**-அஃறிணைப்பன்மை வினாப் பெயர்.
**உள**-பன்மைக் குறிப்பு வினைமுற்று.
**மற்றொன்று**-ஒன்று-ஓர் உபாயம்-ஆகுபெயர்.
**சூழினும்**-உம்மை, இறந்தது தழீஇய எச்சவும்மை.

# 3

# சிலப்பதிகாரம்

1. **நூலாசிரியர் பெயர்-இளங்கோ வடிகள்** : பெயரின் முற்பகுதியால் (இளங்கோ) தெரியும் செய்தி இவர் **அரசனின் தம்பி**; பெயரின் பிற்பகுதியில் (அடிகள்) தெரியும் செய்தி இவர் **ஒரு துறவி.**

**தந்தையும் தாயும்** : சேரநாட்டிலே வஞ்சி நகரத்து இருந்து செங்கோல் ஓச்சி, குமரியொடு வட இமயத்து ஒரு மொழி வைத்து உலகாண்ட சேரலாதற்கு(இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன்). திகழ் ஒளி ஞாயிற்றுச் சோழன் மணக்கிள்ளி ஈன்ற மகள் நற்சோணைக்குப் பிறந்த பிள்ளைகள் இருவரில் மூத்தவன் செங்குட்டுவன்; இளையவன் இளங்கோ.

**பிறப்பிடம்** : சேர நாட்டின் தலைநகராய திருவஞ்சைக்களம்.

**துறவுக்குக் காரணம்** : வஞ்சிமூதூர் மணிமண்டபத்து ஒரு நாள் தந்தையுடன் மைந்தர் இருவரும் அமர்ந்திருந்தனர். நிமித்திகன் ஒருவன் அங்கே வந்து அந்தம் இல் இன்பத்து அரசு ஆள் உரிமை இளையோர்க்கு உண்டு என மொழிந்தனனாக, கேட்ட இளங்கோ, அண்ணன் இருக்க யான் அரசாள்வதா ! என மொழிந்து துறவு பூண்டு வஞ்சிநாட்டுக் குணவாயில் (கீழ்வாயில்) கோட்டத்திலேயே தங்குவாராயினர்.

**சமயம்** : இளங்கோவடிகள் சமயப் பொது நோக்குடையவர். அறவாழ்க்கையைப் போற்றி வாழ்வதே இவர் சமயநோக்கு. எல்லாச் சமயத்து நல்லவற்றையெல்லாம் எடுத்துக் கூறி உயர்வு படுத்தும் தனிப்பண்பே இவர் **சமயப்பண்பு.**

**சமகாலப் புலவர்** : மதுரைக் கூல வாணிகன் சீத்தலைச் சாத்தனார்; இவர் கோவலனுக்கும் மாதவிக்கும் பிறந்து துறவெய்திய மணிமேகலையின்மேல் மணிமேகலை என்ற நூலைப் பாடியவர்.

**2. நூல் வந்த வழி :** சிலப்பதிகாரம் **முதல் நூல்.** தமிழில் எழுதப்பெற்ற முதல் நூல் இது. கோவலன் **கண்ணகி** வரலாறு நடந்த காலமும் ஆசிரியர் காலமும் ஒன்றே. புகார்நகரத்தும், மதுரையிலும், வஞ்சியிலும், வடநாட்டிலும் நடைபெற்ற வரலாற்றைக் கேட்டும் கண்டும் இந்நூலை முதன் முதல் இயற்றினர்.

**3. நூலின் எல்லை :** குமரியொடு வடஇமயத்தை எல்லையாகக் கொண்டது இந்நூல். சந்தத் தமிழில் முந்தித் தோன்றிய **முத்தமிழ்க் காப்பியம்** என்ற உயர் எல்லையை எட்டியது இந்நூல்.

**4. நூற்பெயர்-சிலப்பதிகாரம் :** ''சூழ்வினைச் சிலம்பு காரண மாகச் சிலப்பதிகாரம் என்னும் பெயரால் நாட்டுதும் யாம் ஓர் பாட்டுடைச் செய்யுள்'' என்பது பதிகம் **சிலம்பினுல் அதிகரித்த வரலாற்றைக் கூறும் நூல்**. சிலம்பு+அதிகாரம். அதிகரித்தல்-முக்கிய மாகக் கொள்ளுதல் (மையமாகக் கொள்ளல் இக்காலவழக்கு). 'சிலம்பு' ஒருவகைக் காலணி. சிலம்பு என்ற மென்றொடர்க்குற்றிய லுகரம் 'சிலப்பு' என வன்தொடராயிற்று.

**வேறு பெயர்கள் :** **இயலிசை நாடகப் பொருள் தொடர் நிலைச் செய்யுள்; நாடகக் காப்பியம்; உரையிடையிட்ட பாட்டுடைச் செய்யுள்.** இதையும் மணிமேகலையையும் இணைத்து **இரட்டைக் காப்பியங்கள்** எனவும் வழங்குவர்.

**5. நூலின் யாப்பு :** புகார்க் காண்டம், மதுரைக் காண்டம் வஞ்சிக் காண்டம் என்ற மூன்று காண்டங்களை உடையது. முறையே பத்துக்காதை, பதின்மூன்றுகாதை, ஏழுகாதை ஆகிய முப்பது காதைகளை உடையது. பெரும்பாலும் ஆசிரியப்பாவும் இடையிடையே வரிப்பாட்டுக்களும் கலந்து வர உரைநடையும் அமையப் பெற்ற நூல்.

**6. நூல் கூறும் பொருள் :** கோவலன் கண்ணகி வரலாற்றைக் கூறுவதைப் பொருளாகக் கொண்டது.

**7. காலம் :** சேரன் செங்குட்டுவன் காலமும், இளங்கோவடிகள் காலமும், இலங்கைக் கயவாகு மன்னன் காலமும் ஒன்றே. கடைச்சங்கப் புலவரான சீத்தலைச் சாத்தனுர் இளங்கோ வடிகள் காலத்தவர். எனவே கடைச்சங்க காலமான கி. பி. இரண்டாம் நூற்றுண்டில் இந்நூல் தோன்றியது.

**8. இடம் :** சேரன் செங்குட்டுவன் அவையில் மதுரைக் கூல வாணிகன் சீத்தலைச் சாத்தனுர் கேட்க அரங்கேற்றப்பெற்றது

**9. காரணமும் பயனும் :** மலைவளங்காணச் சென்ற செங்குட்டுவன் பேரியாற்றங் கரையில தன் மனைவி வேண்மாளோடு இருந்தான். அப்போது, ஒரு முலையிழந்த நங்கை ஒருத்தி வானவர் போற்றக் கணவனெடு கூடி விண்வழி விமானத்திற் சென்றதை நேரிற்கண்ட குறவர்கள் அவனிடம் உரைத்தனர்; குணவாயிற் கோட்டத்து அரசு துறந்திருந்த இளங்கோவடிகளிடமும் கூறினர். அப்போது செங் குட்டுவனைக் கண்டு போந்த 'சாத்தனுர்' அடிகளைக் காண வந்தார்; அவரும் தமக்குத் தெரிந்த அந்நங்கையின் வரலாற்றைக் கூறி, இவ் வரலாற்றைக் காப்பியமாக ஆக்கித் தருக என வேண்டினர்; இளங்கோவடிகள் எழுதினர். இதுவே காரணம்.

**பயன் :** ''அரசியல் பிழைத்தவர்க்கு அறம் கூற்று ஆகும்; உரை சால் பத்தினிக்கு உயர்ந்தோர் ஏத்துதல் உண்டு; ஊழ்வினை உருத்து

வந்து ஊட்டும் என்ற மூன்று கருத்துக்களையும் மக்கள் உணருமாறு செய்வதே பயன்.

**10. பிற சிறப்புக்கள்:** தமிழில் காப்பிய அமைப்பில் எழுந்த முதல் நூல் இதுவே. ஐம்பெருங்காப்பியங்களுள் (சிலப்பதிகாரம், மணிமேகலை, சீவகசிந்தாமணி, வளையாபதி, குண்டலகேசி) முதலாவதாக நின்ற பெருமையுடையது. ஆண்மையையன்றிப் பெண்மையைப் பாடாத புலவரினம் நாண, பெண்மையே யன்றி அது அணியும் சிலம்பையும் பாடுவேன் என்ற பாட்டிலே புரட்சி தான் சிலப்பதிகாரம். தமிழ் நங்கைக்குத் துறவி அளித்த பரிசு சிலம்பு. "நெஞ்சை அள்ளும் சிலப்பதிகாரம் என்றோர்-மணியாரம் படைத்த தமிழ்நாடு" எனப் பாரதியாரிடம் பாராட்டுப் பெற்ற நூல். குமரியொடு வட இமயத்தையும் இலங்கையையும் ஒருங்கு இணைத்துக் காட்டி ஒற்றுமைக்கு வித்தூன்றிய காப்பியம். பெண்மையின் இலக்கணத்தை வரையறை செய்து உணர்த்தும் வரலாற்று நூல் இது. **துன்பியல் நாடக மாக** இவ்வுலகோர் கருத்துக்கும், **இன்பியல் நாடக மாக** சமயக் கணக்கர் கருத்துக்கும் இணைய முடித்த நாடகக் காப்பியம்.

## வழக்குரை காதை

மதுரைக் காண்டத்தின் பத்தாவது காதையாக வழக்குரை காதை அமைந்துள்ளது. இது நூலின் இருபதாவது காதை. கணவனை இழந்த கண்ணகி, பாண்டியனிடம் சென்று வழக்குரைத்து, கோவலன் கள்வன் அல்லன் என்பதை நிலைநாட்டிய வரலாற்றுப் பகுதியைக் கூறுவது. பேசாப் பெண்மை பேசும் பெண்மையாக, அன்று ஒற்றைப் பெண்மையாக உலகாளும் கொற்றவனை எதிர்த்து வெற்றி முழக்கமிட்ட வீரத்தை வெளிப்படுத்தும் பகுதி இது.

### பாடப்பகுதியின் தொகுப்புரை

**தென்னவன் அமளிமிசை இருத்தல்:** பாண்டிமாதேவியானவள் தான் கண்ட தீக்கனவுகளை எடுத்துரைத்தாள்; சிங்கஞ் சுமந்த ஆசனத்தில் அமர்ந்திருந்த திருவீழ் மார்பினையுடைய பாண்டிய மன்னன் அவற்றைக் கேட்டுக் கொண்டிருந்தான்.

**கண்ணகியின் அறிவிப்பு:** கணவனைக் கொன்றது நீதிக்குப் புறம்பு என்பதை நிலைநாட்டப் புறப்பட்ட கண்ணகி அரசவாயிலை அடைந்து வாயிற் காவலனைப் பார்த்து, அறிவு வேற்றிடம் குடிபோக, அறமும் அன்புமாகிய பொறி அற்ற நெஞ்சத்தினால் அரசநீதியிற் பிழைத்தவனின் வாயிலைக் காப்பவனே! சிலம்பேந்திய கையளாய், கணவனை இழந்த காரிகை யொருத்தி கடையகத்தாள், என்று அறிவிப்பாயே என்று அறிவிப்புச் செய்தாள்.

**வாயிலோன் மன்னனிடம் அறிவித்தல்:** அரசே வாழி! தென்னவ வாழி! வெற்றிவேல் தடக்கைக் கொற்றவை அல்லள்; அறுவர்க்கிளைய நங்கை, இறைவனை ஆடல்கண்டருளிய அணங்கு, கானகம் விரும்பிய காளி, தாருகன் பேருரம் கிழித்த பெண்ணும் அல்லள். சிலம்பு ஒன்று ஏந்திய கையாள்; கணவனை இழந்தாள் கடையகத்தாள் என்றனன் வாயிலோன். வருக; அவளைத் தருக என்றனன் பாண்டியன்.

**அரசன் வினு:** நீர் பொழியும் கண்ணளாய் எம் முன் வந்தோய் நீ யார் என்ருன்.

**கண்ணகி தன் வரலாறு கூறல்:** தேரா மன்னு! செப்புகின்றேன்; புருவின் துயர் தீர்க்கத் தன்னையே அரிந்து கொடுத்த சிபியும்; பசுவொன்றன் துயர் துடைக்க அரும்பெறற் புதல்வன் ஒருவனைத் தேர்க்காலில் இட்டுக் கொன்ற மனுநீதியும் ஆண்டு காத்த, பெரும்பெயர்ப் புகாரே என் பதி. அவ்வூர்ப் பெருங்குடி வணிகன் மகனுகப் பிறந்து வாழ்தலை விரும்பிய அவனே ஊழ்வினை செலுத்த நின்னகர்ப் புகுந்து, என் காற் சிலம்பு விலை பேசுவதற்காகப் புறப்பட்டுவர நின்னுற் குற்றம் சாட்டப் பெற்றுக் கொலைக்களத்தில் இறந்த கோவலன் மனைவி நான்; என் பெயர் கண்ணகி.

**பாண்டியன் கொலைக்குக் காரணம் நீதி எனல்:** கள்வனைக் கொல்வது செங்கோலுக்குப் புறம்பான கொடுங் கோலன்று; பயிரின் வளர்ச்சிக்குத் தடையாக அமைந்த களையைப் பிடுங்குவது போன்ற செயல்; அரசனுக்கு வெற்றியை அளிக்கும் செயல்.

**கண்ணகி வழக்கை வளர்த்தாது முடித்தல்:** நல்வழியிற் செல்லாத அரசே! என் காற் சிலம்பின் உள்ளிருக்கும் அரகள் மாணிக்கங்கள் என்ருள். "யாமுடையச் சிலம்பு முத்துடை அரி" என்ருன் மன்னன்; உடனே சிலம்பினைக் கொண்டுவரப் பணித்தான். வந்த சிலம்புகளில் ஒன்ருயிருந்த தன் சிலம்பை எடுத்து உடைத்தனள் கண்ணகி; மன்னவனுடைய நீதி கூறிய வாயின்கண் மணியொன்று தெறித்து வீழ்ந்தது.

**மன்னனும் மாதேவியும் இறத்தல்:** இது கண்ட பாண்டியன், "யான் தாழ்ந்த குடையன்; தளர்ந்த செங்கோலன். பொன் செய் கொல்லன் தன் சொற் கேட்ட யானே கள்வன். தென்னவர் அரசு காவல் என் முதலாகப் பிழையுடையதாயிற்று. என் ஆயுள் கெடுக" எனக் கூறி மயங்கி வீழ்ந்து உயிர் துறந்தான். கோப்பெருந்தேவி, குலைந்து நடுங்கி, கணவனை இழந்தோர்க்கு ஆறுதல் கூறித் தெரிவிக்க இயலாது எனக் கூறிக் கற்புடைத் தெய்வமாம் கண்ணகியைத் தொழுது கீழ்வீழ்ந் திறந்தாள்.

## அடிகள்: 1-3. தேவி தீக்கனுவுரைப்ப, திருவீழ்மார்பன் கேட்டல்.

உரை

**கோப்பெருந்தேவி**-அரசமாதேவி,
**சென்று**-அரசன் இருக்கும் இடத்துக்குச் சென்று,
**தன் தீக்கனுத் திறம் உரைப்ப**-தான் முன்னுள் இரவிற் கண்ட தீமை தரும் கனுக்களையும்; அவற்றின் தன்மைகளையும் எடுத்துக் கூற அவைகளைக் கேட்டுக்கொண்டு,
**அரிமான்**-சிங்கம் என்ற விலங்கு,
**ஏந்திய**-தாங்கிக் கொண்டிருக்கிற,
**அமளிமிசை**-பீடத்தின் மேல்,
**திரு வீழ் மார்பின்**-இலக்குமியும் விரும்பும் மார்பினுகிய,
**தென்னவர் கோ**-பாண்டியர் தலைவனுன நெடுஞ்செழியன்,
**இருந்தனன்**-அமர்ந்திருந்தான்,
**இப்பால்**-இங்கே இது இவ்வாறு நிகழ,

## தெளிவுரை

'கோப்பெருந்தேவி' என்னும் பெயருடைய அரசமாதேவி அரசன் இருக்கும் இடம் சென்று தான் முன் இரவிற் கண்ட தீய கனுக்களையும் அவைகளின் தன்மைகளையும் எடுத்துக் கூற, அவை களைக் கேட்டுக் கொண்டு சிங்கந் தாங்கிய பீடத்தின்மேல் இலக்குமி யும் விரும்பும் மார்பையுடையவனுகிய பாண்டியர் தலைவன் நெடுஞ் செழியன் அமர்ந்திருந்தான். இது இவ்வாருக.,

## விளக்கவுரை

கோப்பெருந்தேவி-பாண்டியன் நெடுஞ்செழியனின் மனைவியின் பெயர். நாள்தோறும் அரசவை கூடும்போது அரசனும் அரசியும் சிங்கம் அமைந்த பீடத்தில் இணைந்து வீற்றிருந்து அரசியற் காரியங் களை ஆராய்வர். பாண்டியன் நெடுஞ்செழியன் அன்று சற்று முன் பாகவே வந்து பீடத்தில் அமர்ந்திருந்தான். கோப்பெருந்தேவி மகளிர் வாழ்த்துக் கூற வந்தவள், மன்னனிடம் இணைய அமர்ந்து, தான் முதல் நாள் இரவிற் கண்ட தீய கனவையும் அதன் தன்மை களையும் முதலில் கூறினுள். அன்றைய நாள் அரசவைத் தொடக்கம் தீய அடிப்படையில் தொடங்குகிறது

**அரிமான் ஏந்திய அமளி :** அரியணை-சிம்மாசனம்; வடசொல். அரசவையில் அரசன் அமரும் இருக்கை (பீடம்), சிங்கம் தாங்கிக் கொண்டிருப்பதாக அமைக்கப் பெறும். பெருமையை நிலைநாட்டும் பிறப்பே சிங்கப் பிறப்பு. மக்கள் விலங்கைவிட உயர்ந்தவர்களே யாயினும் மக்களால் தம் முதுகு எப்படி இருக்கிறது என்பதைப் பார்க்க முடியாது. சிங்கம் தன் பின்புறத்தைத் தானே பார்க்கும் ஆற்றலுடையது. மக்கள் அடுத்தவர் குற்றங்களை ஆராய்வார்களே யல்லாமல் தங்கள் குற்றங்களை ஆராய்வதில்லை.

> "ஏதிலார் குற்றம் போல் தம் குற்றம் காண்கிற்பின்
> தீதுண்டோ மன்னும் உயிர்க்கு"

என்பது குறள். அரசவையில் வரும் வழக்குகளை ஆராய வேண்டிய வன் அரசன். குற்றம் யார் செய்தது? தன் ஆட்சியில் உள்ள மக்கள் செய்தது. தன் ஆட்சி மக்கள் குற்றம் செய்தார்களாயின் அக்குற் றம் நிகழ்வதற்குத் தன்னுடைய ஆட்சி எந்த வகையில் துணை செய் தது என்று தன் குற்றம் அல்லது தன் ஆட்சிக் குற்றம் பற்றியும் ஆராய்தல் வேண்டும். பிறர் குற்றம் என்ற நேர்ப்பார்வையும், தன் ஆட்சிக் குற்றம் என்ற பிற்பக்கப் பார்வையும் அமைய இரண் டையும் இணைத்தே நீதி சொல்லல் வேண்டும். இதை உணர்த்தவே இருபக்கங்களையும் பார்க்குந் தன்மையுடையதும் பெருமை உடைய தும் ஆகிய சிங்கம் சுமப்பதாக ஆசனம் அமைப்பது முறை. மான் என்ற சொல் மிருகத்தைக் குறிக்கும் சொல்.

'அமளி' என்ற சொல் படுக்கையைக் குறிப்பது; பொதுச் சொல் கோப்பெருந்தேவி கனவைப் பற்றிப் பேசத் தொடங்கிய தும் இது பள்ளியறைப் படுக்கையன்று; அரசவைப் பீடம் என்பதை இச் சொல்லால் நினைவுபடுத்தினுர் இளங்கோவடிகள்.

**வீழ்தல்**-இருபொருள் தரும் சொல்; விரும்புதல்; வீழ்ந்துவிடுதல். அரசர்கள் மார்பு, திருமகள் விரும்பித் தங்கும் இடம் ஆகும். அரச னைத் திருமாலாகச் சொல்லும் மரபு உண்டு. அதே கருத்தில் திரு

மகள் விரும்பும் மார்பினையுடைய தென்னவர் கோ என்று இளங்கோ வடிகள் கூறினாலும், இந்நாள்வரை விரும்பித் தங்கியிருந்த திருமகள் இன்று வீழ்ந்து விட்டாள். (போய்விட்டாள்). ஆதலின் அவன் மார்பு திருமகள் வீழ்ந்து போக, வெறுமார்பு ஆக இருந்தது என்ற கருத்தும் தோன்றுமாறு கூறினார்.

இம்மூன்று அடிகளிலும் இளங்கோவடிகள் அவலச் சுவையையே அமைத்துப் பாடியுள்ளார்.

### இலக்கணம்

**தீக்கனு**-பண்புத்தொகை.
**கனுத் திறம்**-உம்மைத் தொகை.
**அரிமான்**: இருபெயரொட்டுப் பண்புத்தொகை.
**அமளிமிசை**-ஏழாம் வேற்றுமை உருபின் பொருள்பட வந்த சொல்.
**இருந்தனன்**-உயர்திணை ஆண்பால் ஒருமைப் படர்க்கை இறந்த காலத் தெரிநிலை வினைமுற்று.
**வீழ் மார்பு**-வினைத்தொகை.
**மார்பின் தென்னவன்**-இன் சாரியை. இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்க தொகை.

## அடிகள் 4-9 கண்ணகி தன் வருகையை அறிவித்தல்

### உரை

**வாயிலோயே! வாயிலோயே!** - வாயில் காவலனே! வாயில் காவலனே!
**அறிவு அறைபோகிய**-அறிவானது தானே தன்னுடைய முறை யற்ற ஆராய்ச்சியால் அழிந்து போக,
**பொறி அறு நெஞ்சத்து**-அறம் என்ற இயக்குங் கருவி இல்லா மற் போய்விட்ட நெஞ்சத்தை உடைய,
**இறை முறை பிழைத்தோன்**-அரச நீதியில் தவறிழைத்தவனு டைய,
**வாயிலோயே!** - அரசவையின் வாயிலைக் காப்பவனே!
**அரி**-பரல்களோடு கூடிய,
**இணைச் சிலம்பு** - இரண்டாக இணைந்தே இருக்கும் சிலம்பி னுள்,
**ஒன்று ஏந்திய கையள்** - ஒரு சிலம்பை மட்டும் கொண்டிருக் கின்ற கையினை உடையவ ளாய்,
**கணவனை இழந்தாள்**-கணவனை இழந்தவள் ஒருத்தி,
**கடையகத்தாள்** - வாயிலின் கண் இருக்கின்றாள்,
**என்று அறிவிப்பாயே அறிவிப்பாயே**-என்று அறிவிப்பாயாக, அறிவிப்பாயாக,
**என**-என்று கண்ணகி கூற.

### தெளிவுரை

வாயிலோனே! அறிவானது முறையற்ற ஆராய்ச்சியால் தானே தன்னை அழித்துக்கொண்டு இல்லாமற் போக, அறம் என்ற இயக்குங் கருவி அழிந்துபட்ட நெஞ்சத்தை உடையவனாய் அரச நீதியில் தவறு இழைத்தவனுடைய அரசவையின் வாயிலைக் காப்பவனே! பரல்க ளோடு கூடிய - என்றும் இணைந்தே இருக்கின்ற சிலம்புகளுள் ஒன்றை மட்டும் ஏந்திய கையளாய்க் கணவனை இழந்தாள் ஒருத்தி வாயிலின் கண் வந்திருக்கிறாள் என்று அறிவிப்பாயாக என்று கண்ணகி கூற,

## விளக்கவுரை

வாயிலோயே என இருமுறை வந்தது விதித்தற் பொருள் உணர்த்த. வாய் இல்லோயே எனப் பிரித்து வாயில்லாதவனே! அரசவையில் என்ன நடைபெற்றாலும் எடுத்துச் சொல்லும் வாய் இல்லாமல் 'காவலன்' என்ற பெயரில் இருப்பவனே என இழித்துக் கூறியதாகவும் ஒரு பொருள்பட இருக்கின்றது. அவ்வுரைக்கு அடுக்கு, இழிவுப் பொருள். அறிவிப்பாயே அறிவிப்பாயே என்பதற்கும் இவ்வாறே கொள்க.

நெடுஞ்செழியன் அரச நீதி பிழைத்தமைக்கு இரண்டு காரணங்கள் கூறுகிறாள் கண்ணகி. ஒன்று: அறிவு தானே தன்னை அழித்துக் கொண்டு அறியாமைக்கு இடம் கொடுத்துவிடுதல். அறிவு, தீமையை அகற்றி நன்மையிற் செலுத்த வேண்டும். அதற்கு மாறாக, அறிவு சில சமயம் விரிவான ஆராய்ச்சியைத் தொடங்கி எதிர்மாறான பயனைக் கொடுத்துவிடும். "களவுப் பொருள் அவன் கையகத்ததாயின் கொன்றச் சிலம்பு கொணர்க" என்ற வழி கொன்று அச் சிலம்பு கொணர்க என்பது ஆராய்ச்சியின் முடிவு. களவுப் பொருள் அவன் கையகத்ததாயின் என்பது ஆய்வு இல்லாமே ஏற்றுக்கொண்ட முடிவு. இவ்வடிப்படையில் எழுந்த ஆராய்ச்சி உண்மைபோலத் தோன்றினாலும் அறிவின் முடிவு அல்ல; அறியாமையின் முடிவு. இரண்டு: நெஞ்சத்தை இயக்குங் கருவிகள் இரண்டு. ஒன்று அறம்; இன்னொன்று காமம். அறம் காரண காரியத் தொடர்பை எடுத்துக் காட்டி இயக்கும் இயந்திரம் போன்றது. அதனால் அதனைப் 'பொறி' என்றார். காமம் அவ்வாறு இன்றி, அறம், அறிவு முதலியவைகளை மறையச் செய்யுமாறு பண்ணி நெஞ்சத்தைத் தன்பால் இழுத்துக் கொள்ளும். இங்கே பாண்டியனுடைய நெஞ்சத்தை இயக்கும் அறம் என்ற பொறி பாழ்பட்டுவிட்டது. இவ்விரண்டு காரணங்களால் மன்னன் அரச நீதியிற் பிழை செய்தான்.

**அரி**-சிலம்பின் உள்ளே இருந்து ஒலியுண்டாக்குவதற்காகப் போடப் பெறும் பரல்கள். **இணைச் சிலம்பு**: சிலம்பு என்னும் காலணி எப்பொழுதும் இணைந்தே இருக்கும். பிரிந்து நின்றால் பயன் தராது. இணைச் சிலம்பினுள் ஒன்று ஏந்தி வருதல் புதுமை என்று உணர்த்தினாள். **கடையகம்**-வாயிற்கண்.

## இலக்கணம்

| | |
|---|---|
| வாயிலோயே வாயிலோயே<br>அறிவிப்பாயே அறிவிப்பாயே | } அடுக்குத் தொடர். |

**வாயிலோயே**-விளி; வாயிலான் என்ற சொல் வாயிலோன்! என்றாகி வாயிலோயே என விளியாயிற்று.

**அறிவிப்பாய்**-முன்னிலை ஒருமை வினைமுற்று, பிறவினைப் பொருள் தந்தது. ஏ-அசைநிலை.

**அறைபோகிய**-செய்த என்னும் வாய்பாட்டுப் பெயரெச்சம்; 'அறைபோகு' பகுதி.

**அறுநெஞ்சம்**-வினைத் தொகை.

**இறைமுறை**-நான்காம் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்க தொகை.

**பிழைத்தோன்**-வினையாலணையும் பெயர்.
**கையள்**-குறிப்பு வினைமுற்று.
**கடையகம்**-ஏழாம் வேற்றுமை உருபின் பொருள்பட வந்த சொல்.

## அடிகள் : 10-24 வாயிலோன் அரசனிடம் அறிவித்த செய்தி

### உரை

**வாயிலோன்**-சென்ற வாயிற் காவலன்,
**வாழி**-வாழ்வாயாக;
**எம் கொற்கை வேந்தே வாழி**-எமது கொற்கை நகரத்து அரசனே வாழ்வாயாக;
**தென் அம் பொருப்பின் தலைவ வாழி**-தெற்கின்கண் அமைந்த அழகிய பொதிய மலையின் தலைவனே வாழ்வாயாக;
**செழிய வாழி**-பாண்டியனே வாழ்வாயாக!
**தென்னவ வாழி**-தென்புலங்காவல் செய்யும் பாண்டியனே வாழ்வாயாக;
**பழியொடு படராப் பஞ்சவ வாழி**-இழிவைத் தரும் பழிச் செயல்களோடு என்றும் பொருந்தாத பாண்டியனே வாழ்வாயாக;
**அடர்த்து எழு குருதி**-வெட்டப்பட்ட வாயினின்றும் தொகுதியாகச் செறிந்து மேல் நோக்கி எழுகின்ற இரத்தம்,
**அடங்காப் பசுந்துணி**-அடங்காமல் பீறிட்டுக் கொண்டு வருகிற பச்சைத் துண்டமாகிய,
**பிடர்த்தலை** - எருமை வடிவமாய அசுரனின் (மகிஷாசுரன்) கழுத்துடன் கூடிய தலையை,
**பீடம்**-ஆசனமாகக் கொண்டு,
**ஏறிய**-ஏறி நின்று கொண்டிருக்கிற.
**மடக்கொடி**-இளங்கொடி போன்றவள்,
**வெற்றிவேல்**-வெற்றியைத் தரும் வேலினை,
**தட கை**-பெரிய கையில் ஏந்திக் கொண்டிருக்கிற,
**கொற்றவை அல்லள்** - கொற்றவையோ எனில் அல்லள்;
**அறுவர்க்கு இளைய நங்கை (அல்லள்)**-கன்னிப் பெண்கள் ஏழு பேர்களில் இறுதி நின்ற இளையவளாகிய பிடாரியோ எனில அல்லள்;
**இறைவனை ஆடல் கண்டருளிய அணங்கு (அல்லள்)**-சிவனைத் தன்னுடன் போட்டியாக நின்று ஆடுமாறு செய்தருளிய வருத்தும் நிலையினளாகிய பத்திரகாளியோ எனில் அல்லள்;
**சூர் உடை கானகம் உகந்த காளி (அல்லள்)**-அச்சத்தைத் தருகிற காட்டைத் தனக்கு இருப்பிடமாகக் கொண்டு விரும்பித் தங்கியிருக்கிற காளியோ எனில் அல்லள்;
**தாருகன் பேர் உரம் கிழித்த பெண்ணும் அல்லள்**-தாருகாசுரனுடைய பெரிய மார்பைக் கிழித்த துர்க்கையும் அல்லள்,
**செற்றனள் போலும்**-தன் உள்ளத்தில் பழிவாங்கும் எண்ணங் கொண்டவளைப் போலவும்.
**செயிர்த்தனள் போலும்** - மிக்க சினம் கொண்டவள் போலவும் தோற்றம் உடையவளாய்,
**பொன் தொழில்**-அழகிய வேலைப் பாடுகள் பொருந்திய,
**சிலம்பு ஒன்று ஏந்திய கையள்**-ஒற்றைச் சிலம்பினை வைத்துக் கொண்டிருக்கிற கையையுடையவள்.
**கணவனை இழந்தாள்**-கணவனை இழந்தவள்,
**கடையகத்தாள்**-வாயிலின் முன்னால் நின்றுகொண்டிருக்கிறாள்,
**என**-என்று வாயிற் காவலன் கூற,

## தெளிவுரை

வாயில் காப்பாளன், "வாழ்வாயாக; எம் கொற்கை நகரத்து அரசே வாழ்வாயாக; தெற்கின்கண் அமைந்த அழகிய பொதிய மலையின் தலைவனே வாழ்வாயாக! பாண்டியனே வாழ்வாயாக! தென் புலம் காவல் செய்யும் பாண்டியனே வாழ்வாயாக! இழிவைத் தரும் பழிச் செயல்களோடு என்றும் பொருந்தாத செழியனே வாழ் வாயாக!

வெட்டு வாயிலிருந்து தொகுதியாகச் செறிந்து, மேல் நோக்கி எழுகின்ற இரத்தமானது, அடங்காமல் பீறிட்டுக் கொண்டு வருகிற பச்சைத் துண்டமாகிய, எருமை வடிவமைந்த அரசனின் கழுத்துடன் கூடிய தலையை ஆசனமாகக் கொண்டு ஏறி நின்று கொண்டிருக்கிற இளங்கொடி போன்றவள், வெற்றியைத் தரும் வேலினைப் பெரிய கைகளில் ஏந்திக் கொண்டிருக்கின்ற **கொற்றவையோ** எனில் அவளும் அல்லள்; கன்னிப் பெண்கள் எழுவரில் இளையவளான **பிடாரியோ** எனில் அல்லள்; சிவனைத் தன்னுடன் போட்டியாக நிறுத்தி ஆடுமாறு செய்தருளிய வருத்தும் நிலையினளாகிய **பத்திரகாளியோ** எனில் அவளும் அல்லள்; அச்சத்தைத் தருகிற காட்டைத் தனக்கு இருப்பிடமாகக் கொண்டு விரும்பித் தங்கியிருக்கிற **காளியோ** எனில் அவளும் அல்லள்; தாருகனுடைய பெரிய மார்பைக் கிழித்த **துர்க்கையும்** அல்லள். தன் உள்ளத்தில் பழிவாங்கும் எண்ணங் கொண்டவள் போலவும் மிக்க சினங்கொண்டவள் போலவும் தோற்றம் உடையவளாய் அழகிய வேலைப்பாடுகள் பொருந்திய ஒற்றைச் சிலம்பினை ஏந்திய கையள்; கணவனை இழந்தவள்; வாயிலின் முன்னிடத்தாள் என்று கூற,

## விளக்கவுரை

பாண்டிய நாட்டின் கடல் துறைப் பட்டினம் கொற்கை ஆகையால் கொற்கை வேந்தே என்றான். தென்னம் பொருப்பு - பொதிய மலை. பழிச் சொல்லோடு என்றும் பொருந்தாத பாண்டியன். கோவலனை ஆராயாமல் கொன்றமையால் பழி வந்ததே எனின், தவறு என்று தெரிந்ததும் உயிர் விட்டான் ஆதலின் அது அவன் வளைந்த செங்கோலை நியிர்த்தியது ஆதலின் பழியொடு சென்றான் இல்லை.

கண்ணகி கூறச்சொல்லிய செய்திகளோடு வாயிற் காவலன் மேலும் சில செய்திகளைச் சேர்த்துக் கொள்கிறான். அது கண்ணகி தோற்றம், கண்ணகியின் கருத்து ஆகிய இரண்டும்.

கொற்றவை, பிடாரி, பத்திரகாளி, காளி, துர்க்கை ஆகிய ஐவரைப் போல இருக்கிறாள் என்று கூறிப் பிறகு மறுத்துவிடுகிறான்.

கொற்றவை மகிஷாசுரனைக் கொன்று, அவனுடைய வெட்டப் பெற்ற தலையைப் பச்சைத் துண்டம் என்றார். துணி-துணிக்கப் பெற்ற துண்டம். சூர்-அச்சம் பேர்+உரம்-பெரிய மார்பு. தோற்றம் இவ்வாறாக, செற்றனள் போலவும் செயிர்த்தனள் போலவும் இருக்கிறாள் என்பது கண்ணகியின் கருத்தைப் பற்றிய வாயிற்காவலன் கூற்று. செறுதல்-கறுவு கொண்டு அழித்தல். செயிர்த்தல்-சினம் கொள்ளுதல்.

'கணவனை இழந்தாள் கடையகத்தாள்' என வந்த அடிமுழுவதும் மீளவும் வருதல் இரட்டைத் தொடை.

### இலக்கணம்

வேந்தே, தலைவ, செழிய, தென்னவ, பஞ்சவ என்பன விளிப் பெயர்கள்.
முதலாவதாக உள்ள வாழி-முன்னிலை அசை.
ஏனைய வாழி-இகர ஈற்று வியங்கோள் வினைமுற்றுக்கள், வாழ்த்துப் பொருள்.
படரா, அடங்கா } ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.
பகந்துணி-தொழிலாகு பெயர் அடையடுத்தது.
பிடர்த்தலை-மூன்றும் வேற்றுமை உடனிகழ்ச்சிப் பொருள்.
தலைப்பீடம்-உருவகம்.
மடக்கொடி-பண்புத் தொகைப் புறத்துப் பிறந்த அன் மொழித் தொகை.
போலும் இரண்டும்-உவமைப் பொருள் தந்தன.

## அடிகள்: 25-29 இருவரின் சந்திப்பும் பாண்டியன் வினாவும்

### உரை

**வருக** - உன்னால் சொல்லப்பட்டவள் இங்கே வருவாளாக,
**அவள் தருக ஈங்கு என**-அவளை அழைத்து வருக இவ்விடத்துக்கு என்று பாண்டியன் கூற,
**வாயில் வந்து**-வாயிற் காவலன் வந்து அழைத்துச் சென்று,
**கோயில் காட்ட** - அரண்மனைக்கண் உள்ள அரசனைக் காட்ட,
**கோயில் மன்னனை** - கோயிலின்கண் அமர்ந்திருக்கும் அரசனை,
**குறுகினள் சென்றுழி** - கண்ணகியானவள் நெருங்கிச் சென்ற போது,
**நீர் வார் கண்ணை**-நீர் ஒழுகுகின்ற கண்களை உடையவளாய்,
**எம் முன் வந்தோய்**-எம் முன்னே வந்து நின்றோய்,
**மடக் கொடியோய்** - இளமை வாய்ந்த கொடியைப் போன்றவளே!
**நீ யார்**-,
**என**-என்று அரசன் கேட்க.

### தெளிவுரை

(வாயிலோனே) உன்னால் சொல்லப்பட்டவள் இங்கே வருவாளாக; அவளை அழைத்து வருக இவ்விடத்துக்கு என்று பாண்டியன் கூற, வாயிற்காவலன் வெளியில் வந்து கண்ணகியை அழைத்துச் சென்று அரண்மனைக்கண் உள்ள அரசனைக் காட்ட, கோயிலின்கண் அமர்ந்திருக்கும் அரசனைக் கண்ணகியானவள் நெருங்கிச் சென்ற போது, நீர் ஒழுகுகின்ற கண்களை உடையவளாய் எம்முன்னே வந்து நின்றோய்! இளமை வாய்ந்த கொடியைப் போன்றவளே! நீ யார்? என்று அரசன் கேட்க;

### விளக்கவுரை

'வருக' என்பது கண்ணகி வருவதற்கு உடன்பட்டான் என்பதே. கோ+இல்-கோயில். அரசனுடைய இல்லம் என்பது பொருள். வாயிலோன் கண்களுக்குக் கொற்றவை, துர்க்கை என்றெல்லாம் எண்ணும்படித் தோன்றிய கண்ணகியின் வடிவம் பாண்டியனுக்கு இரக்க

வடிவமாகவே தோன்றியது. நீர் ஒழுகுகின்ற கண்களே அவனுக்குத் தோன்றின.

**இலக்கணம்**

**வருக**-வியங்கோள் வினைமுற்று.
**தருக**- ,,
வாயில் } இடவாகு பெயர்கள்.
கோயில் }
**குறுகினள்**-முற்றெச்சம்.
**சென்றுழி**-ஏழாம் வேற்றுமை உருபின் பொருள்பட வந்த சொல்
நீர் **வார் கண்ணை**-வினைத்தொகை.
**கண்ணை**-முன்னிலை ஒருமைக் குறிப்பு வினைமுற்று எச்சப் பொருளில் வந்தது.
**வந்தோய்**-வினையாலணையும் பெயர்.
யார் ஐ ஓ-அசை நிலைகள்.
**மடக்கொடியோய்**-உவமையடியாகப் பிறந்த பெயர் விளி யேற்றது.

## அடிகள் 30-43: நீ யார் என்ற வினாவுக்குக் கண்ணகி விடை கூறுதல்

**உரை**

**தேரா**-மன்னனுக்கு இருக்க வேண்டிய ஆராய்ச்சி இல்லாத,
**மன்ன**-அரசே,
**செப்புவது உடையேன்**-நீ கேட்ட கேள்விக்கு விடை சொல்லுவதை உடையேன்;
**எள்அறு சிறப்பின் இமையவர் வியப்ப**-இகழ்தல் இல்லாத சிறப்பினையுடைய தேவர்களும் வியக்கும் வண்ணம்,
**புள் உறு புன்கண் தீர்த்தோன்**-புறு ஒன்று அடைந்த துன்பத்தைத் தீர்த்தவனாகிய சிபி,
**அன்றியும்**-அவனன்றியும்,
**வாயிற் கடை மணி நடு நா நடுங்க**-அரண்மனை வாயிலில் கட்டப்பெற்ற மணியின் உள்ளே தொங்கும் நாக்கு நடுங்கி ஒலிக்க,
**ஆவின் மணிகடை உகுநீர் நெஞ்சுசுட**-பசுவின் கண்களின் ஓரத்திலிருந்து சிந்துகின்ற நீர் தன்னுடைய நெஞ்சினைச் சுடவே,
**தான்**-அரசனாகிய அவன்,
**தன**-தன்னுடைய,
**பெறல் அரும் புதல்வனை**-பெறுவதற்கு அருமையான ஒரே மகனை,
**ஆழியில் மடித்தோன்**-தேர்ச் சக்கரத்தில் இட்டுக் கொன்றவனாகிய மனுச் சோழன் ஆகிய இவர்களால் அரசாட்சி செய்யப்பெற்ற,
**பெரும் பெயர்**-புகழையுடைய,
**புகார்**-புகார் நகரமே,
**என்பதி**-யான் பிறந்த ஊர்;
**அவ்வூர்**-அதே ஊரில்,
**ஏசா சிறப்பின்**-பிறரால் இகழப்பெறாத சிறப்பினை உடையதும்,
**இசை விளங்கு**-புகழ் ஓங்க விளங்குவதும் ஆகிய,
**பெருங்குடி**-பெருங்குடிக்கண்,
**மாசாத்து வாணிகன்**-மாசாத்துவான் என்ற வாணிகனின்,
**மகனையாகி**-மகனாகத் தோன்றி,
**வாழ்தல் வேண்டி** - பொருளீட்டி வாழ்க்கை நடத்துதலை விரும்பி

யும்,
**ஊழ்வினை துரப்ப**-விதியானது எங்களைப் பின்நின்று செலுத்தவும்,
**சூழ்கழல்**-சுற்றியிருக்கும் கழல் அணிந்த,
**மன்னா**-அரசனே !
**நின்நகர் புகுந்து** - நின்னுடைய மதுரை மாநகர் புக்கு,
**இங்கு என் கால் சிலம்பு** - இவ்வூரில் என்னுடைய காலுக்கு அணியாகிய சிலம்பை,
**பகர்தல் வேண்டி**-விலை பகர்தலை விரும்பிப் புறப்பட்டு,
**நின்பால்**-நின்னிடத்து,
**கொலைக்களம் பட்ட**-கொலைக் களத்தில் கொலை செய்யப் பெற்ற,
**கோவலன் மனைவி**-கோவலன் என்பானுடைய மனைவியாவேன்,
**கண்ணகி என்பது என் பெயரே என**-கண்ணகி என்பதே என் பெயர் என்று கூற,

## தெளிவுரை

"மன்னர்களுக்கு இருக்க வேண்டிய ஆராய்ச்சி இல்லாத அரசே ! நீ கேட்ட கேள்விக்கு விடை சொல்லுவதும் உடையேன். இகழ்தல் இல்லாத சிறப்பினை உடைய தேவர்களும் வியக்குமாறு புறாவினது துன்பத்தைத் தீர்த்தவனாகிய சிபி, அவனேயன்றியும் அரண்மனை வாயிலிற் கட்டப்பெற்ற பெரிய மணியின் உள்ளே தொங்கும் நாக்கு நடுக்கத்தோடு ஒலிக்க, அதை இழுத்து அடிக்கும் பசுவின் கண்களின் ஓரத்திலிருந்து சிந்துகின்ற கண்ணீர் தன்னுடைய நெஞ்சினைச் சுடவே, அரசனாகிய அவன் தானே தன்னுடைய பெறுதற்கரிய ஒரே மகனைத் தேர்ச் சக்கரத்தில் இட்டுக் கொன்ற மனுச்சோழன் ஆகியோர் சிறப்புற ஆட்சி செய்யப்பெற்ற புகழையுடைய புகார் நகரமே யான் பிறந்த ஊர்; அதே ஊரில் பிறரால் இகழப் பெறாத சிறப்பினை உடையதும், புகழ் ஓங்க விளங்குவதும் ஆகிய பெருங்குடிக் கண் மாசாத்துவான் என்ற வணிகனின் மகனாகத் தோன்றி, பொருளீட்டி வாழ்க்கை நடத்துதலை விரும்பியும், விதியானது எங்களைப் பின் நின்று செலுத்த, சுற்றியிருக்கும் கழல் அணிந்த அரசே! நின்னுடைய மதுரை மாநகர் புக்கு, என்னுடைய காலுக்கு அணியாகிய சிலம்பை விலைகூறி விற்றலை விரும்பிப் புறப்பட்டு, நின்னிடத்துக் கொலைக்களத்தில கொலை செய்யப்பெற்ற கோவலன் என்பானுடைய மனைவியாவேன் நான்; கண்ணகி என்பதே என் பெயர்" என்று கூற.

## விளக்கவுரை

தேர்தல்-ஆராய்தல். தேரா-ஆராயாத; மன்னா என்று நெடுஞ்செழியனைக் கூறினாள் கண்ணகி. மிகச் சாதாரணச் சிற்றரசனும்கூட கொலைத் தண்டனை அளிக்கக்கூடிய வழக்கைச் சபையில் மந்திரிகள் மற்றவர்கள் மத்தியில் விசாரணை செய்வான்; இதைச் செய்வதற்குப் பெரிய அனுபவமோ ஆராய்ச்சியோ தேவையில்லை. அவ்வாறிருக்க, பேரரசு ஒன்றின் தலைவன் தனித்து இருந்து கொலைத் தண்டனை வழங்கினான்; குற்றம் செய்தவனைக் கண்ணால் பார்க்கவும் இல்லை என்பவைகளை மனத்திற்கொண்டு மன்னர்களுக்கு இருக்க வேண்டிய பொதுவியல்பு கூட இல்லாத மன்னா! என்று விளித்தாள் கண்ணகி. **தேரா மன்னா** என்று கண்ணகி கூற வேறும் ஒரு காரணம் உண்டு. கண்ணீர் உகுத்து வருபவளைப் பார்த்த ஓர் அரசன் கேட்க வேண்டிய முதற் கேள்வி உனக்கு நேர்ந்த துன்பம் யாது? என்பதே. அதை

விடுத்து நீ யார்? என்று கேட்பது அரசனுக்குப் பொருந்துவதன்று. எவ்வளவு விரைவாகப் பிறர் துன்பம் துடைக்கப் பாடுபட வேண்டுமோ அவ்வளவு விரைவாகத் துன்பம் துடைக்கவேண்டும். அதை விடுத்து 'நீ யார்' என்ற வினவை எழுப்பி, விடை தெரிந்து பின் துன்பம் என்ன என்று கேட்டுக் கொண்டே இருத்தல் மன்னனுக்கு அழகன்று என்பதே. மேலும், 'கணவனை இழந்தவள்' என்று வாயிலோனால் அறிமுகப்படுத்தப் பெற்ற பிறகும் ''இளமை வாய்ந்த கொடி போல்வாய்'' என்ற அடைமொழியாற் கூறியது பெருந்தவறு.

'செப்புவதும் உடையேன்' என்றாள். உம்மை தொக்கது. வழக்கைச் செப்புவதற்காக வந்த நான் அதற்கு முற்றிலும் தேவையில்லாததாய் உன்னால் கேட்கப்பட்ட ஒரு கேள்விக்குப் பதில சொல்ல வேண்டியதும் ஆயிற்று. செப்பு என்ற சொல் வினவுக்கு விடையாகக் கூறுவதை மட்டுமே குறிக்கும் மரபுச் சொல்.

## சிபியின் வரலாறு

பருந்து ஒன்று புறாவினைத் துரத்தி வந்தது. புறாவோ சிபியைச் சரண் அடைந்தது. பருந்து தனக்கு இரை வேண்டும் என்று கூறுகிறது. அப்போது புறாவின் எடையளவு தன் தசையை அரிந்து பருந்திற்கு அளித்துப் புறாவின் துன்பம் தீர்த்தான்.

## மனுச் சோழன் வரலாறு

அரண்மனை வாயிலில் கட்டப்பெற்றிருந்தது பெரிய மணி ஒன்று; துன்புற்றவர் யாரும் சென்று அதனை அடிக்கலாம். அரசன் அங்கே வந்து முறை செய்வான். மணி அடிக்கப்பெற்றது ஒரே முறைதான். பசு ஒன்று அடித்தது. அரசன் வந்து பார்த்து, அதன் கன்று தன் மகன் தேர்க்காலில் அகப்பட்டு இறந்தது ஆதலின் நீதி கேட்க வந்ததை உணர்ந்தான். தன் மகனைத் தேர்க்காலில் இட்டுக் கொன்று பசுவின் துயர் தீர்க்க எண்ணி மந்திரி முதலானோரிடம் கூற, எவரும் ஒருப்படவில்லை. தானே தேரை ஓட்டித் தன் ஒரே மகனை-அரசிளங் குமரனைத் தன் தேர்க்கால் செல்லும் வழியிற் கிடத்திக் கொன்றான்.

கண்ணகி இவர்கள் இருவரையும் இங்கே கூறுவதன் நோக்கம், பறவை, பசு முதலியவற்றின் துன்பம் இவ்வாறு துடைக்கப்பெற்றது. ஆனால் நீயோ உயர்திணையைச் சார்ந்த ஒரு பெண் மகள் அழுது வந்து நின்று கொண்டிருக்கும் போதும் துன்பம் தீர்க்க முற்படாமல் வாழ்க்கை வரலாறு கேட்கிறாயே என்பதுதான்.

மதுரை புகுந்தமைக்குக் காரணம் சொல்லுகிறாள் கண்ணகி. பொருளீட்டித்தான் வாழவேண்டும் என்ற எண்ணம் எங்களை முன்னிருந்து இழுத்தது; விதிப்பயன் எங்களைப் பின்னிருந்து தள்ளியது. நாங்கள் வந்தோம். ஆனால் மதுரைக்கு வருவானேன்? உன்னைச் சுற்றியிருக்கும் விதி எங்களை இங்கே கொண்டுவந்து சேர்த்தது என்பதைச் **சூழ்கழல் மன்னா** என்பதனுள் 'சூழ்' என்ற சொல்லாற் குறித்தாள்.

பெரும் பெயர்-மிக்க புகழ். புகார்-காரணப் பெயர்-புகார் நகரத்திலுள்ளவர்கள் குறை காரணமாக வேறு நாட்டிற் குடிபுகார்; வேற்று நாட்டவர்கள் புகாரைக் கைக்கொள்ள வேண்டும் என்ற

எண்ணத்தோடு அங்கே புகார் எனப் பொருள் தந்தது. பெருங்குடி-வணிகர் பிரிவுகளுள் ஒன்று.

**இலக்கணம்**

**தேரா**, **ஏசா** } ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சங்கள்.
**மன்ன**-விளி இழிவை நோக்கியது.
செப்புவ**தும்-உ**ம்மை தொக்கது.
**வியப்ப**-செயஎன்னும் வாய்பாட்டு வினையெச்சம்.
**தீர்த்தோன்**-வினையாலணையும் பெயர்.
**கடைமணி**-முன்பின்னாகத் தொக்க ஆறும் **வேற்றுமைத்** தொகை.
**உகுநீர்-வினைத்**தொகை.
**மடித்தோன்-**வினையாலணையும் பெயர்.
மகனை-ஐ, சாரியை
**வேண்டி, துரப்ப**-உம்மை தொக்கன.
**பகர்தல்**-தொழிற்பெயர்.
நின்**பால்**-ஏழாம் வேற்றுமை உருபின் பொருள்பட வந்த சொல்.
**களப்பட்ட**-ஏழாம் வேற்றுமைத் தொகை.

## அடிகள் 44-45 மன்னன் கூறிய மாற்றம்

**உரை**

**பெண் அணங்கே** - அணங்கை ஒத்த பெண்ணே! **கள்ளனைக் கோறல்**-களவு செய்தவனைக் கொல்லுதல், **கடுங்கோல் அன்று** - கொடுங்கோலுக்கு உரிய செயல் என்று கருதப்படமாட்டாது, **வெள்வேல் கொற்றம் காண்**- வெள்ளிய வேலினால் எய்தும் வெற்றியைப் போன்றது என்பதை நீ உணர வேண்டும், **என**-என்று மன்னன் கூற,

**தெளிவுரை**

அணங்கைப் போலும் பெண்ணே! களவு செய்தவனைக் கொல்லுதல் கொடுங்கோன்மை அன்று; அரசனுக்கு அது வெள்ளிய வேலினாற் பெறும் வெற்றியைப் போன்றது என்பதை நீ அறி என்றான்.

**விளக்கவுரை**

தெய்வத்தன்மையும் தன்னைக் காண்பாரை வருத்தும் தன்மையும் அமைந்த பெண்ணை 'அணங்கு' என்ற சொல்லாற் குறிப்பது மரபு. கண்ணகியைப் பெண்ணணங்கே என்றான் பாண்டியன்.

> "கொலையிற் கொடியாரை வேந்து ஒறுத்தல் பைங்கூழ்
> களை கட்டதனோடு நேர்"

என்ற திருக்குறளை அடிப்படையாகக் கொண்டு அமைக்கப்பெற்ற அடிகளே இவை. கொடுங்கோலைக் 'கடுங்கோல்' என்றான். கள்வனைக் கொல்லுதல் போரில் வேலாற் பெறும் வெற்றியைப் போன்றது என்று கூறினான். உவமை அணி.

### இலக்கணம்

**கோறல்-தொழிற்பெயர்.**
**வெள்வேல்-பண்புத்தொகை.**
**காண்-ஏவல் வினை.**

## அடிகள் 46-52 வழக்கின் முறையும் வெற்றியும்

### உரை

**ஒள்இழை**-ஒளி பொருந்திய அணிகளை அணிந்த கண்ணகி,
**நல்திறம் படரா**-அறவழியிற் செல்லுதல் இல்லாத,
**கொற்கை வேந்தே**-கொற்கை நகரத்து அரசனே!
**என் கால் பொன் சிலம்பு உடை**-என்னுடைய காலணியாகிய பொன்னுற் செய்யப்பெற்ற சிலம்பினுடைய,
**அரி**-பரல்கள்,
**மணியே**-மாணிக்கங்களே,
**என**-என்று கூற,
**தேமொழி**-தேன் போன்ற மொழி பேசும் கண்ணகியானவள்,
**உரைத்தது**-வழக்கை ஆராய்வதற்குத் துணை செய்யும்படியாகக் கூறிய வார்த்தை,
**செவ்வை நன்மை மொழி**-தீமை கலவாத அறம் சார்ந்த மொழியே,
**யாம் உடை சிலம்பு உடை அரி முத்து ஏ**-எம்முடைய சிலம்பினுடைய பரல் முத்துக்களே (என்று கூறி),
**தருக என**-சிலம்பினைக் கொண்டு வந்து தருக என்று ஏவலர்களிடம் கூற,
**தந்து**-அவர்கள் கொண்டு வந்து தந்த அதை,
**தான் முன்வைப்ப**-அரசனே கண்ணகியின் முன்னுல் வைக்க,
**கண்ணகி அணி மணி காற்சிலம்பு உடைப்ப** - கண்ணகியானவள் அங்கேயிருந்த தன் அணியாகிய மாணிக்கப் பரலை உடைய காற்சிலம்பை எடுத்து உடைக்க,
**மன்னவன் வாய் முதல் தெரித்து மணியே** - அரசனுடைய 'கொன்று கொணர்க' என்று நீதி கூறிய வாயின்கண் சென்று அம் மாணிக்கப் பரல்கள் தெறித்தன.

### தெளிவுரை

ஒளி பொருந்திய அணிகளை அணிந்த கண்ணகி. அறவழியிற் செல்லாத கொற்கை நகரத்து அரசனே! என்னுடைய காலில் அணிகின்ற பொன்னுற் செய்யப்பெற்ற சிலம்பினுடைய பரல்கள் மாணிக்கங்களே என்று கூற, மன்னன் தேன்போன்ற மொழியாளாகிய கண்ணகி வழக்கை ஆராய்வதற்குத் துணை செய்யும்படியாகக் கூறிய வார்த்தை தீமை கலவாததும் அறத்தைச் சார்ந்ததும் ஆகிய மொழி. எம்முடைச் சிலம்பினுடைய பரல்கள் முத்துக்களே என்று கூறி, சிலம்பினைக் கொண்டு வந்து தருக என ஏவலர்களைப் பணிக்க, அவர்கள் கொண்டுவந்து தந்த அச் சிலம்புகளைத்தான் கண்ணகியின் முன்னே வைக்க, கண்ணகியானவள் தன் அணியாகிய மாணிக்கப் பரலை உடைய காற்சிலம்பை எடுத்து உடைப்ப, அரசனுடைய வாயில் மாணிக்கங்களே சென்று தெறித்தன.

### விளக்கவுரை

மற்றவர் அணியும் அணிபோலன்றித் தனித்த சிறப்புக்களையுடைய அணிகளை அணிந்தவளாதலின் கண்ணகியை "ஒள்ளிழை"

என்றார்: சிலம்பில் பொதுவாகப் போடப்பெறும் பரல்கள் முத்துக்களே. ஆனால் கண்ணகியின் சிலம்பில் மாணிக்கப் பரல்கள் இருந்தன என்பது இதனை உறுதிப்படுத்தும்.

நன்மை-அறம். நற்றிறம்-அறவழி. ஆராயாது கொன்றாய் என்று கண்ணகி கூற, கள்வனைக் கொல்வது அரச நீதியே என்றான். இங்கே கள்வன் என்று தெரிந்த பிறகு அவனை என்ன செய்வது என்பது ஆராய்ச்சிக்குரியதன்று; கோவலன் கள்வனா? என்பதுதான் ஆராய்ச்சி. ''அறவழியையே சிந்தித்தவன் இல்லை பாண்டியன்'' என்று கண்ணகி கூறினாள்.

பொற்சிலம்பு என்பதற்கு அழகிய சிலம்பு என்று சிலர் பொருள் கூறுவர், காலில் பொன் அணியக்கூடாது என்ற மரபு நோக்கி.

தேன்+மொழி=தேமொழி. கருத்துடை அடைமொழி. கண்ணகியைத் தேன் போன்ற மொழியைப் பேசுபவள் என்றான் மன்னவன். தேன் முதலில் இனித்து, பிறகு சிறிது புளிப்பைத் தரும். கண்ணகி கூறிய வார்த்தையாகிய 'என் காற்சிலம்பு மணியுடை அரியே' என்பது வழக்குக்கு மிகவும் தேவையானது என்ற நிலையில் முதன் முதலில் மன்னனுக்கு இனிப்பாக இருந்தது. சற்று நேரத்துக்கெல்லாம் அதுவே புளிப்பையும் தருவதாக அமைந்தது. செவ்வை-தீமை கலவாதது; நன்மைமொழி-அறத்தைச் சார்ந்த மொழி. தந்த அதை என்பது தந்து என நின்றது. வாய்முதல்-வாயில்.

### இலக்கணம்

ஒள்ளிழை-பண்புத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை.

நற்றிறம்-ஆறாம் வேற்றுமைத் தொகை.

படரா-ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.

தேமொழி-உவமைத் தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை.

வாய்முதல்-ஏழாம் வேற்றுமை உருபின் பொருள்பட வந்த சொல்.

## அடிகள் 53-58 மன்னனின் மாண்பு

### உரை

**மணிகண்டு** - வாயில் வந்து தெறித்த சிலம்பின் பரலாகிய மாணிக்கத்தைப் பார்த்து,

**தாழ்ந்த குடையன்**-நீதி பிழைத்ததால் தாழ்ந்து நிற்கின்ற குடையை உடையவன் ஆனேன்,

**தளர்ந்த செங்கோலன்**-வளைந்த செங்கோலை உடையவன் ஆனேன்,

**பொன்செய் கொல்லன் தன்**-பொன்வேலை செய்யும் கொல்லனுடைய,

**சொல் கேட்ட** - பொய்யுரையை உண்மையெனக் கேட்டு நீதி வழங்கிய,

**யானோ அரசன்** - யான் அரசனோ வேனோ?

**யானே கள்வன்**-கோவலன் கள்வன் அல்லன், கள்வன் யானே;

**மன்பதை காக்கும்**-மக்கட் கூட்டத்தைக் காக்கும்,

**தென் புலம் காவல்**-தென்னாடெனப்பெறும் பாண்டிநாட்டு ஆட்சி,

**என் முதல் பிழைத்தது** - என்னை முதல்வனாக் கொண்டு தவறு பட்டு விட்டது ;
**கெடுக என் ஆயுள் என**-அழிவதாகுக என்னுடைய வாழ்நாள் என்று கூறி,
**மன்னவன்**-அரசன்,
**மயங்கி வீழ்ந்தனன்** - மயக்கமடைந்து கீழே விழுந்தான்.

### தெளிவுரை

சிலம்பின் பரல் மாணிக்கம் என்பதைக் கண்ட மன்னன் நீதி பிழைத்ததால், தாழ்ந்த குடையை உடையவன் ஆனேன்; வளைந்த செங்கோலை உடையவன் ஆனேன்; பொன் வேலை செய்யும் கொல்லனின் பொய்யுரையை மெய்யுரையாகக் கொண்டு நீதி வழங்கிய நானோ அரசன் ஆவேன்; கோவலன் கள்வன் அல்லன்; யானே கள்வன். மக்கட் கூட்டத்தைக் காக்கும் தென்னாட்டாட்சி எனப் பெறும் பாண்டியராட்சி என்னை முதல்வனாகக் கொண்டு தவறுபட்டு விட்டது. அழிவதாகுக என் வாழ்நாள் என்று கூறி, அரசன் மயக்கமடைந்து கீழே வீழ்ந்தான்.

### விளக்கவுரை

அமைச்சரோடு கூடி, ஆராய்ந்து அவர்கள் சொல்வதைக் கேட்டு முறை செய்ய வேண்டிய யான், பொற்கொல்லன் சொல்வதைக் கேட்டு நீதி வழங்கினேன். ஆதலால் நான் அரசன் ஆகேன் என்றான். கோவலன் சிலம்பை, என் சிலம்பு என்று கூறிவிட்டதால் நானே கள்வன் என்றான். இவனுக்கு முன் பாண்டிய நாட்டை ஆண்ட எவரும் நீதி பிழைத்தார் இலர். இவன் பிழைத்ததால் இவன் முதலாக இவன் வழி வருவார் எல்லார்க்கும் இப்பழி நின்று நிலைத்து விடும். ஆகையால் ''தென்புலங் காவல் பிழைத்தது'' என்றான். பாண்டிய நாட்டின் தெற்கே வேறு ஆட்சிக்குரிய நிலம் இன்மையின் தென்புலம் என்பது பாண்டிய நாட்டையே குறித்தது.

### இலக்கணம்

**குடையன், செங்கோலன்**-தன்மை ஒருமைக் குறிப்பு வினை முற்றுக்கள்.
**யானோ** அரசன்-ஓகார இடைச்சொல், எதிர்மறைப் பொருளில் வந்தது.
**யானே** கள்வன்-ஏகார இடைச்சொல் தேற்றப் பொருள்.
**மன்பதைகாக்கும்**-இரண்டாம் வேற்றுமைத் தொகை.
**தென்புலம்**-திசையும் பண்பாதலின், பண்புத்தொகை.
**கெடுக**-வியங்கோள் வினைமுற்று, வைதற்பொருள்.
**வீழ்ந்தனனே**-ஏகாரம் அசைநிலை.

## அடிகள் 59-61 கோப்பெருந்தேவியின் அறக்கற்பு

### உரை

**தென்னவன்**-பாண்டியனின்,
**கோப்பெருந்தேவி** - மனைவியாகிய கோப்பெருந்தேவி,
**குலைந்தனள் நடுங்கி**-உள்ளம் நிலையழிந்தவளாகி, உடல் நடுங்கி,
**கணவனை இழந்தோர்க்குக் காட்டுவது இல்**-தந்தை தாய் முதலானோரை ஒருவன் இழந்தால் அவனிடம் சென்று என்னை உன் தந்தையாக அல்லது என்னை

உன் தாயாக அமைத்துக் கொள். அவர்கள் செய்ய வேண்டிய கடமையை நான் செய்கிறேன் என்று எடுத்துக் காட்டி ஆறுதல் கூறலாம். ஆனால், கணவனை இழந்த பெண்ணுக்கு அவ்வாறு முறைப்படுத்திக் காட்டுதல் இயலாத ஒன்று என்று கருதி, கண்ணகிக்கு எத்தகைய ஆறுதலும் சொல்ல மாட்டாதவளாய்,

**இணையடி தொழுது**-அக்கற்புடைத் தெய்வத்தின் இரண்டாக இணைந்த திருவடிகளை வணங்குவது ஒன்றுதான் செய்யத்தக்கது என நினைத்துக் கண்ணகியின் இணையடிகளைத் தொழுது,

**மடமொழி வீழ்ந்தனள்** - மடப்பம் வாய்ந்த மொழியினளாகிய கோப்பெருந்தேவியும் நிலத்து வீழ்ந்தாள்.

## தெளிவுரை

பாண்டியனின் மனைவியாகிய கோப்பெருந்தேவி உள்ளம் நிலையழிந்தவளாகி, உடல் நடுங்கி, தந்தை தாய் முதலானோரை இழந்தார்க்கு அம்முறை சொல்லிப் பிறரைக் காட்டலாம்; ஆனால், கணவனை இழந்த பெண்ணுக்கு அவ்வாறு முறை சொல்லிக் காட்டி ஆறுதல் கூற இயலாது என்று கருதி, கண்ணகிக்கு எத்தகைய ஆறுதலும் சொல்ல மாட்டாதவளாய், அக்கற்புடைத் தெய்வத்தின் இணையடிகளைத் தொழுது, மடப்பம் வாய்ந்த மொழியினளாகிய கோப்பெருந்தேவியும் நிலத்தில் வீழ்ந்தனள்.

## விளக்கவுரை

'கணவனை இழந்தோர்க்குக் காட்டுவது இல்' என்ற தொடர் கண்ணகிக்குச் சமாதானமோ ஆறுதலோ கூறவேண்டும் என்பதைக் கோப்பெருந்தேவி எண்ணினாள் என்பதை நமக்கு உணர்த்துகிறது. இணையடி தொழுது என்பதற்குப் பாண்டியன் திருவடிகளைத் தொழுது வீழ்ந்தாள் எனப் பொருள் கூறுவர். கண்ணகிக்கு ஆறுதல் தான் கூற முடியவில்லையாயினும் அவளடியைத் தொழுதேனும் அவள் மன்னிப்பைப் பெறுவோம் என்ற கருத்தில் அவளை வணங்கினாள் எனக் கொள்வதே பொருத்தம். கணவனையன்றிப் பிறரைத் தொழுதல் கூடாது எனின், கண்ணகி கற்புடைப் பெறற்கரும் பெண் தெய்வம் ஆதலின் இவ்வறையறை பொருந்தாது.

## இலக்கணம்

**குலைந்தனள்** நடுங்கி-முற்றெச்சம்.

**நடுங்கி**-செய்து என் வாய்பாட்டு வினையெச்சம்.

**இழந்தோர்க்கு**-வினையாலணையும் பெயர், நான்கன் உருபேற்றது.

**இணையடி**-வினைத்தொகை.

**மடமொழி**-பண்புத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை.

# 4

# பெரியபுராணம்

**1. நூலாசிரியர் பெயர் : சேக்கிழார்.** இக்காலத்தில் வழங்கும் சாதிப் பெயர் போலக்குடிப் பெயர் வழங்கியிருந்த காலமும் உண்டு. 'சேக்கிழார்' என்பது குடிப் பெயர். தமிழ் இலக்கிய உலகத்தில் 'பிள்ளை' என்றால், மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளையையும் 'ஐயர்' என்றால், உ. வே. சாமிநாதையரையும் குறிப்பது போலச் சேக்கிழார் என்ற குடிப் பெயர் கல்வி, கேள்வி, ஒழுக்கங்களிற் சிறந்து புகழ் பெற்ற காரணத்தால் இவரையே குறிப்பதாயிற்று.

**இயற்பெயர் :** அருண்மொழித் தேவர்.

**சிறப்புப் பெயர்கள் :** இவர் அரசியல் முறையிலும், சமயத் துறையிலும் வல்லவராக விளங்கிய காரணத்தால் **இரண்டு** சிறப்புப் பெயர்கள் இவருக்கு உண்டு. **அநபாய சோழன்,** பல துறைகளிலும் சிறந்து விளங்கியவராய் ஒழுக்கத்திலும் உயர்ந்த இவரை முதன் மந்திரியாக்கினான். தம் பதவிக்காலத்தில் இவர் நாட்டுக்குச் செய்த அருஞ் செயல்களையும் வீரச் செயல்களையும் எண்ணி இவருக்கு **"உத்தம சோழப் பல்லவர்"** என்ற சிறப்புப் பெயரிட்டு வரிசைகள் பல செய்தான்.

சமயத்துறையில் சிறந்த தெய்வபக்தி உடையவராகத் திகழ்ந்து, பெரிய புராணம் பாடி அரங்கேற்றிய பொழுது அவரை யானை மீதேற்றி, அவருக்குத் **'தொண்டர் சீர் பரவுவார்'** என்ற சிறப்புப் பெயரை அளித்துச் சிறப்புச் செய்தான் அநபாய சோழன். அரசனே பக்கத்தமர்ந்து வெண்சாமரம் வீசி வந்தான்.

**பிறப்பிடம் :** தொண்டை நாட்டுக் குன்றத்தூர்.

**மரபு :** தொண்டை மண்டல வேளாளர் மரபு; சேக்கிழார்குடி.

**பிற சிறப்புக்கள் :** இறைவனே 'உலகெலாம்' என்று அடியெடுத்துக் கொடுத்துப் புராணம் பாடச் சொல்லுமளவுக்குத் திருவருட் சிறப்புடையவர். கல்வெட்டுக்கள், சாத்திரம், தோத்திரம், வரலாறு ஆகியவைகளிற் பயிற்சி மிக்குடையவர். இவர்மேல் சேக்கிழார் புராணம், சேக்கிழார் பிள்ளைத்தமிழ் என இரண்டு நூல்கள் பாடப் பெற்றுள்ளன. இவர் பெருமையை மனத்தில் வைத்து இவர் தம்பி 'பாலறுவாய'ருக்கு முதல் அமைச்சர் பதவி அளித்தான் அரசன் என்றால், இவர் சிறப்புக்கு ஈடேது? பக்திச்சுவை நனி சொட்டப் பாடிய கவி வலவர்" இவர்.

**2. நூல் வந்த வழி :** சுந்தரமூர்த்தி நாயனார் சிவனடியார்களை வணங்கி, **திருத்தொண்டத் தொகை** என்றொரு நூல் பாடினார். அதன் வழிநூலாக, சற்று விரிவாக, **நம்பியாண்டார் நம்பிகள்** என்பார் **திருத்தொண்டர் திருவந்தாதி** என்றொரு நூல் பாடினார்.

இவ்விரண்டு நூல்களையும் அடிப்படையாகக் கொண்டு, விரிந்த நூலாகப் **பெரிய புராணம்** என்ற இந்நூலைப் பாடினார். எனவே, இது **விரிநூலாம்**.

**3. நூலின் எல்லை :** தமிழும் சைவமும் நின்று மணம் பரப்பும் இடம் எலலாவற்றிலும் இந்நூல் பெருவழக்காக வழங்கும் தன்மையுடையது. சைவ சமயத் திருமுறைகள் பன்னிரண்டு. அவற்றுள் பன்னிரண்டாந் திருமுறையாக நின்ற அளவும் பெருமையும் உடையது.

**4. நூற்பெயர்: பெரிய புராணம், திருத்தொண்டர் புராணம்.** ''செயற்கரிய செய்வார் பெரியர்'' என்ற வள்ளுவர் வாக்குக்கு ஏற்பச் செயற்கருஞ் செயல்களைச் செய்த சிவனடியார்களின் வரலாறுகளைக் கூறுவதால் **பெரிய புராணம்** என்று பெயர் பெற்றது. பெரியர்+புராணம். புராணம்—பழைமையான வரலாறு.

சேக்கிழார் தாம் பாடிய நூலுக்குத் தாம் இட்ட பெயர் **'திருத்தொண்டர் புராணம்'** என்பதே. திருத்தொண்டர்-சிவனடியார்.

**5. நூலின் அமைப்பு :** பெரிய புராணம் இரண்டு காண்டங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. திருமலைச் சருக்கம், தில்லைவாழ் அந்தணர் சருக்கம், இலைமலிந்த சருக்கம், மும்மையால் உலகாண்ட சருக்கம், திருநின்ற சருக்கம், வம்பறு வரிவண்டுச் சருக்கம், வார் கொண்ட வனமுலையாள் சருக்கம், பொய்யடிமையில்லாத புலவர் சருக்கம், கறைகண்டன் சருக்கம், கடல் சூழ்ந்த சருக்கம், பத்தராய்ப் பணிவார்கள் சருக்கம், மன்னிய சீர்ச் சருக்கம், வெள்ளானைச் சருக்கம் ஆகிய பதின்மூன்று சருக்கங்களைக் கொண்டது. 4253 பாட்டுக்களை உடையது.

**6. நூல் கூறும் பொருள் :** சுந்தரமூர்த்தி சுவாமிகளால் திருத்தொண்டத் தொகையில் பாடிச் சிறப்பிக்கப் பெற்ற சிவனடியார்களின் வரலாற்றை விரிவாக எடுத்துக் கூறுகிறது. சிவனடியார்களின் வரலாற்றுடன் தேவாரம், திருவாசகம், காரைக்காலம்மையார் நூல்கள், சேரமான் பெருமாள் நாயனார் பாடிய பொன்வண்ணத் தந்தாதி, திருமந்திரம் முதலிய சைவ சமய நூல்களின் கருத்துக்களை ஆங்காங்கே இணைத்தும் இந்நூற் பொருளை வளப்படுத்தியிருக்கிறார் சேக்கிழார்.

**7. காலம் :** அநபாய சோழன் காலத்தில் சேக்கிழார் இயற்றினார். கி. பி. பன்னிரண்டாம் நூற்றாண்டு.

**8, இடம் :** சேக்கிழார் சிதம்பரம் எனப்பெறும் தில்லையில் தங்கி இந்நூலைப் பாடினார். சிவனடியார்களின் வரலாறுகளைப் பாட விரும்பிச் சேக்கிழார் தில்லைக்கு வந்து கூத்தப் பெருமானை வணங்கிய போது **''உலகெலாம்''** என இறைவன் அடியெடுத்துக் கொடுத்தார். தில்லையிலேயே தங்கி நூல் முழுவதையும் முடித்தபின்னர், அநபாய சோழன் தலைமையில் ஓராண்டுக் காலம் (சித்திரை மாதம் திருவாதிரை தொடங்கி அடுத்த ஆண்டு சித்திரைத் திருவாதிரை) தாமே விளக்கம் கூறி அரங்கேற்றினார்.

**9. நூல் தோன்றக் காரணம் :** சேக்கிழார் அநபாய சோழனின் முதல் அமைச்சர். அரசன் சைவ சமயத்திற் பிறந்தவனாயிருந்தும் அக்காலத்தில் சிறப்புற்றிருந்த சமண சமயத்திற் பற்றுடையவனாகி,

சீவகசிந்தாமணி போன்ற சமணக் கதைகளைக் கேட்பதில் ஆர்வம் காட்டினன். சேக்கிழார் அவனிடம் சைவசமயத்து அடியார் பெருமைகளையும் அவர்தம் வாழ்க்கை நுட்பங்களையும் கதைகளாக எடுத்து மொழிந்தார். கேட்டு மகிழ்ந்த அரசன் தன் தவற்றுக்கு நாணி, தானேயன்றிப் பிறரும் உணர்ந்து கொள்ள வேண்டும் என விரும்பி அவ்வடியவர்களின் வரலாறுகளை ஒரு நூலாக ஆக்கித் தர வேண்டும் என வேண்டினன். அதனல் பாடப்பெற்றது இது.

**10. பெருமை :** சைவசமய உண்மைகளை அறிந்து கொள்வதற்கு உரிய நூல்களில் மிகவும் சிறந்து விளங்குவது இந்நூல். இறைவனலேயே உலகெலாம் என்று அடியெடுத்துக் கொடுக்கப் பாடப்பெற்ற பெருமையுடையது. ஆண்டவனைவிட அவன் அடியவர்களே சிறந்தவர்கள் என்பதை ஆணித்தரமாக நிலைநாட்டிய புரட்சிநூல். சாதி, இனம், தொழில் இவற்றைக் கடந்த நிலையில் அடிமைத் தொண்டு செய்வதையே குறிக்கோளாகக் கொண்டு வாழ்ந்த சிவனடியவர்கள் வரலாற்றை உள்ளவாறு வெளிப்படுத்துவதால் இது ஒரு வரலாற்று நூல். இனிய எளிய நடையும், கவிச் சுவையும், கற்பனை நயமும் உடைய இந்நூலில் பக்திச்சுவை நனி சிறந்து காணப்படுகிறது. இடைக்காலத் தமிழ்ப் பண்பாட்டுக்கு இது ஒரு கண்ணடி.

## அப்பூதி அடிகள் நாயனர் புராணம்

அப்பூதி அடிகள் நாயனரைப் பற்றிய பழமையும் பெருமையும் மிக்க வரலாறு என்பது பொருள். சேக்கிழார் இவ்வரலாற்றை நாற்பத்தைந்து பாட்டுக்களால் பாடுகின்றார். இது பெரியபுராண முதற் காண்டத்தில், **திருநின்ற சருக்கம்** என்ற ஐந்தாவது சருக்கத்தில் ஐந்தாவது புராணமாக அமைந்துள்ளது.

அப்பூதி-காரணப் பெயர். பூதி-செல்வம். இவ்வுலகத்திற்கு வேண்டிய செல்வங்களேயன்றி, வீட்டுலகச் செல்வத்தையும் (மோட்சம்) உடையவர் என்பது பொருள். 'அடிகள்' என்ற சொல் ஞானமுடையவர் என்ற பொருளையும், நாயனர் என்ற சொல் இறைவனின் தொண்டர் என்ற பொருளையும் தந்தன.

## அப்பூதி அடிகள் நாயனர் வரலாறு

**ஊரும் பேரும் :** திங்களூரில் மறையவர் குலத்தில் தோன்றியவர் அப்பூதி அடிகள். தாண்டவமாட வல்ல கூத்தப் பெருமானின் அன்பர்; நிறைந்த புகழுடையவர்; சிறந்த தவவொழுக்கம் உடையவர். களவு, காமம், கோபம் முதலான குற்றங்களை நீக்கியவர். இல்லற நெறியில் இனிது வாழ்ந்தவர்.

**திருநாவுக்கரசரிடம் அன்பு :** திருநாவுக்கரசு சுவாமிகளிடம் பேரன்பு வாய்ந்தவர். அவரைக் கண்டதில்லையாயினும் திருநாவுக்கரசர் இறைவனுக்குத் தொண்டுசெய்யும் தன்மையையும் இறைவன் அவரை ஆட்கொண்ட முறையையும் அறிந்து அவரிடம் பக்தி கொண்ட அப்பூதி அடிகள், அப்பக்திக்கு அறிகுறியாகத் தம் வீட்டிலுள்ள அளக்கும் பொருள்கள் (படி, மரக்கால் முதலியன), நிறுத்தல் அளவைப் பொருள்கள், நிறைகோல் (தராசு), பிள்ளைகள், பசு,

எருமை ஆகியவைகளுக்கெல்லாம் 'திருநாவுக்கரசு' என்ற பெயரையே இட்டு வழங்கி வந்தார்.

தண்ணீர்ப்பந்தல் முதலாக உள்ள தருமங்களையெல்லாம் உண்டாக்கி அவைகளுக்கெல்லாம் 'திருநாவுக்கரசர் தண்ணீர்ப் பந்தல்' என்பது போலவே பெயர்களை அமைத்து வாழ்ந்து வந்தார்.

**திருநாவுக்கரசர் தண்ணீர்ப்பந்தரைக் காணுதல் :** தலங்கள் தோறும் வழிபாடு செய்து வரும் திருநாவுக்கரசர் திங்களூர் வழியாகச் செல்பவர் தண்ணீர்ப்பந்தரினைக் கண்டார். தமமுடைய பெயரை எல்லா இடங்களிலும் அழகாக எழுதியிருப்பதைக் கண்டு வியந்தார்.

**திருநாவுக்கரசரின் வினாவும் பெற்ற விடையும் :** தண்ணீர்ப் பந்தரின பக்கத்தே, அதைப்பற்றிய செய்திகள் எல்லாவற்றையும் தெரிந்தவர்களாயுள்ளவர்களிடம் இப்பந்தரை இப்பெயரால் இங்கே அமைத்தவர் யார்? என்று கேட்டார். "திருநாவுக்கரசு என்னும் பெயரால் "அப்பூதி அடிகளார்" அமைத்தார். இதுமட்டுமல்ல, பல வகையான தருமச்சாலைகள், குளங்கள், சோலைகள் எல்லாவற்றையும் இப்பெயராலேயே அமைத்துள்ளார்"—என்று கூறினர்கள். இவ்வாறு என் பெயர் எழுதுவதற்கு என்ன கருத்து? என்று நினைந்தவராய் "அப்பூதியடிகள் எங்கிருக்கிறார்?" என்றார். அவர் இதே ஊரினர்; இப்பொழுதுதான் வீட்டுக்குச் சென்றார்; அவ்வீடும் தூரத்தில் இல்லை; பக்கத்தில் தான்" என்றார்கள்.

**இருவரின் சந்திப்பு :** திருநாவுக்கரசர் அப்பூதியடிகள் வீட்டு வாயிலை அடைந்தார். அடிகளார் ஒருவர் வந்திருக்கிறார் என்பதை அறிந்த அப்பூதியடிகள் வாகீசரை விரைந்து வந்து வரவேற்று, அவர் திருவடிகளை வணங்கினார். (திருநாவுக்கரசர் இவர் என்பதை அவர் அறியார்). வாகீசரும் எதிர் வணங்கினார். தாங்கள் வந்தது யார் செய்த தவம் என்று கூறி, தாங்கள் வந்த காரணம் என்ன? என்றார். அதற்கு நாவரசர், "திருப்பழனம் வந்து வணங்கி இவ்வூர் வந்துகொண்டிருக்கும்போது தண்ணீர்ப்பந்தரைக் கண்டேன். அவ்வாறே தாங்கள் புரிகின்ற அறம் பலவற்றையும் கேள்விப்பட்டு இங்கே வந்தேன்" என்றார்.

**'வேறொரு பேர்' என்ற வாசகம் விளைவித்த செயல்:** அடியவர்களுக்கு நீங்கள் வைத்த தண்ணீர்ப்பந்தலில் தங்கள் பெயர் எழுதாமல் **'வேறொரு பேர்'** எழுதக் காரணம் என்ன? என்றார் நாவுக்கரசர். அவர் கேட்ட அந்த அளவிலேயே அப்பூதியடிகள் உள்ளம் நிலையழிந்து, "நல்ல வார்த்தை சொல்லவில்லையே தாங்கள்! நாணம் இல்லாச் சமணர்களோடு மன்னனும் சேர்ந்து செய்த வஞ்சகச் செயல்களைத் தம் திருத்தொண்டின் வன்மையினால் **வென்றவர் பெயரையா வேறொருபேர்!** என்று கூறினீர். இவ்வுலகில் தொண்டு செய்தால்தான் பிழைக்க முடியும் என என்போன்றவரும் தெளிவாக உணரும் வகையில் நன்மை செய்த திருநாவுக்கரசர் என்னும் திருப்பெயரை யான் எழுத அதன் உண்மை அறியாது 'வேறொருபேர்' என்ற கொடுமை நிறைந்த மொழியை யான் கேட்குமாறு சொன்னீரே ஐயா! கல்லில் கட்டிக் கடலில் தள்ளியபோது, அக்கல்லையே தெப்பமாகக்கொண்டு கரையேறிய அவர் பெருமையை இவ்வுலகத்து அறியாதார் யாருளர்? சிவனடியாராக வேடமும் தரித்துக்கொண்டு, அவ்வேடத்துக்கு மாறுபட்ட இவ்வார்த்தைகளைச்

சொன்ன நீவிர் எங்கிருப்பவர்? யார்? சொல்லும்'' என்ருர். சைவ ரல்லாத பிற வழிகளில் சென்று உழன்ற நிலையில், அங்கிருந்து கரை யேறுமாறு கொடிய வயிற்றுவலியினுல் ஆட்கொண்டருள, அதனுல் சைவத்தை அடைந்து பிழைத்த தெளிவமைந்த அறிவில்லாத சிறு மையேன் யான்'' என்ருர் நாவுக்கரசர்.

**அப்பூதி அடிகளார் செயல்:** நாவுக்கரசர் வார்த்தைகளைக் கேட்டவுடனேயே அப்பூதியடிகள், கைகள் தலைமேற் கும்பிட, கண் அருவியாக நீரைப் பொழிய, தரையில் விழுந்து கிடந்தார். வாகீ சரும் எதிர் வணங்கி, அவரைத் தூக்கி நிறுத்தினுர். அப்பூதியடிகள் ஓடினுர், பாடினுர்; அவர் மகிழ்வுக்கு அளவேது! மனைவி, மக்கள் ஆகிய வீட்டிலுள்ளவர்க்கும், வெளியில் உள்ள சுற்றத்தவர்களுக்கும் சொல்லி அனைவரையும் வந்து வாகீசரை வணங்கி அருள் பெறுமாறு செய்தார். பின்னர்த் ''திருவமுது செய்ய வேண்டும்'' என்று வாகீச ரிடம் விண்ணப்பித்து, தூய, சுவையமைந்த இனிய உணவுகளைத் தயார் செய்தார்.

**அரவு காரணமாக நடைபெற்ற அற்புதம்:** வாகீசர் திருவமுது செய்ய உணவுகளை அமைத்த பிறகு, தம்பிள்ளையாகிய மூத்த திருநா வுக்கரசை (அப்பூதி அடிகளின் பிள்ளைகளில் மூத்தவன் ஆகையால் மூத்ததிருநாவுக்கரசு) அழைத்து 'வாழைக் குருத்துக் கொண்டு வா' என்ருர் அப்பூதியடிகள். அவனும் விரைந்து வாழைக் குருத்தினை அரியும் போது பாம்பு ஒன்று அவன் கையில் தீண்டியது; கையில் சுற்றிக்கொண்டு, கண்ணினுல் நெருப்பைக் கக்குகின்ற பாம்பை உதறித் தள்ளி, விஷம் தலைக்கேறிக் கீழே விழுவதற்குமுன் இவ் வாழையிலையைக் கொடுப்பேன் என்று அவன் ஓடிவந்தான்; விஷத் தின் வேகம் அதிகரித்தது. பாம்பு கடித்ததைச் சொன்னுல் அடியவர் அமுது செய்யக் கால தாமதமாகும் ஆகையால் சொல்லமாட்டேன் என்று மனம் திடம் செய்து கொண்டு வீட்டினுள் புகுந்து தாயாரின் பக்கத்தில் வைத்துப் பூமியில் விழுந்தான்.

வீழ்ந்து மாளும் புதல்வனைக் கண்டு, உளம் பதறிய தாய் தந்தை யர், குறிகளைக் கண்டு இவன் பாம்பு தீண்டி இறந்தான் என்று அறிந்து, 'வாகீசர் அமுது செய்ய வேண்டும்' என்பதால் மன வருத் தம் நீங்கி, அவனை ஒரு பாயினுள் மறைத்து, வீட்டிற்கு வெளியே உள்ள சிறு வீட்டின் பக்கத்தில் உள்ள ஓர் இடத்தில் மறைத்து வைத்து, ''ஒருவருக்கும் இது தெரியா வண்ணம் அடியவருக்கு அமுது செய்விப்போம்'' என்று கருதி வந்து, உணவுகளை எடுத்து வைத்து, வாகீசரிடம் உணவுண்ண வருக என விண்ணப்பித்தனர். வாகீசரும் எழுந்து வர, அவர்தம் திருவடிகளை நன்னீராற் கழுவி, நல்ல ஆதனத்தில் அமரச்செய்து, வாழையிலையை அமைக்கும் முன் னர், வாகீசர் தாம் விபூதி அணிந்து, அப்பூதி அடிகளாருக்கும் மனை விக்கும் திருநீறளித்துப் பிள்ளைகளுக்குத் திருநீறு வழங்க முற்படு பவர், அப்பூதியாரை நோக்கி, ''உம்முடைய பிள்ளைகளில் மூத்த பிள்ளையைக் காட்டு, முன்னம் திருநீறு கொடுக்க வேண்டும்'' என்ருர். அப்பூதி அடிகளார் வேறொன்றும் சொல்லாமல் ''இப்போது இங்கு அவன் உதவான்'' என்ருர்.

இறைவன் அருளால், அப்பூதியடிகள் உள்ளத்தில் அமைந்த தடுமாற்றத்தை நோக்கி, 'உண்மையைச் சொல்லும்' என்ருர் வாகீசர். அடியவர் அமுது செய்வது கெடுமே என்று சொல்லா

திருந்த அப்பூதியார் அடியவர் வினவிய பிறகு உண்மையைச் சொல்லவே வேண்டும் என்ற ஒழுக்கத்தால் மனம் வருந்தி மைந்த னுக்கு உற்றதை மொழிந்தார்.

நன்று நன்று உமது செயல்! யாவர் இவ்வாறு செய்தவர்? என்று சொல்லி எழுந்து, சவம் கிடக்கும் இடம் சென்று, இறைவன் அருள் செய்யும் வண்ணம், பதிகம் பாடி நஞ்சு நீங்கச் செய்தார். மூத்த திருநாவுக்கரசும் நஞ்சு நீங்கி, உறங்கி யெழுவானைப் போல் எழுந்து வாகீசரின் அடி வணங்க அவனுக்கு வெண்ணீறு நல்கினார் வாகீசர்.

**அப்பூதி அடிகளார் மனம்:** உயிர் பெற்றெழுந்த பிள்ளையைக் கண்ட தாயும் தந்தையும் மகிழ்ச்சி அடைதற்குப் பதிலாக, வாகீசர் காலந் தவறாது உணவு உண்ணுவதற்குச் **"சிறிது இடையூறு செய் தான்" இவன்** என வருந்தினர். இவ்வாட்டத்தை அறிந்த வாகீசர் அப்பூதியடிகளாருடன் வீட்டினுள் சென்று, அமுது செய்வதற்கு வேண்டிய செயல்களை முறையுறச் செய்து, அப்பூதி அடிகளாரும், பிள்ளைகளும் தாமும் ஒருங்கே அமர, அப்பூதி அடிகளாரின் மனைவி யார் திருவமுது எடுத்துப் படைக்க, **தமிழாளியார்** அமுது செய்தார். பின்னர்ப் பன்னாள் வாகீசர் அப்பூதி அடிகளார் மனையில் தங்கியிருந் தார்.

பின்னர் வாகீசர் திருப்பழனம் சென்று வணங்கிப் பதிகம் பாடும் போது அப்பூதி அடிகளாரின் தொண்டின் திறமையைச் சிறப்பித்துப் பாடினார். அப்பூதியடிகளாரும் திருநாவுக்கரசரின் திருவடிகளையே நினைந்து வாழ்ந்து சின்னாட் சென்றபின் கூத்தன் திருவடி அடைந் தார்.

## 1. வாகீசரிடம் கலந்த அன்பு

### உரை

**தாண்டவம் புரிய வல்ல தம்பிரரனுக்கு அன்பர்**-நாட்டியம் ஆடுவதில் வல்ல சிவபெருமானிடம் அன்புடையவர்,
**ஈண்டிய**-மிகுந்த,
**புகழின் பாலார்**-புகழை உடையவர்,
**எல்லை இல் தவத்தில் மிக்கார்**-அளவு இல்லாத தவத்திற் சிறந்தவர்,
**ஆண்ட சீர் அரசின் பாதம் அடைந்தவர்**-இறைவனால் ஆட்கொள்ளப்பெற்ற பெருஞ்சிறப்பினை உடைய திருநாவுக்கரசரின் திருவடிகளையே உறுதிப் பொருள் என அறிந்து, மனத்தால் அத்திருவடிகளை அடைந்தவர்,
**அறியா முன்னே**-திருநாவுக்கரசர் இவரைப் பற்றி அறிவதற்கு முன்னமேயே,
**காண் தகு காதல் கூர**-கண்ணுற் காணும் தகுதியை உண்டாக்கும் வல்லமை அமைந்த காதலானது மெல்ல மெல்ல வளர்ந்து வர,
**கலந்த அன்பினராய் உள்ளார்**-வாகீசரின் நினைவு ஒன்றே கலந்த அன்புடையவராக வாழ்ந்தார்.

### தெளிவுரை

கூத்தப் பெருமானிடம் கொண்ட அன்பினர்; நிறைந்த புகழினர்; அளவில் தவம் உடையவர்; இறைவனால் ஆட்கொள்ளப் பெற்ற சிறப்பினை உடைய நாவுக்கரசரைக் காணுமுன்பே, அவர்தம் திருவடி

கலையே மனத்திற் பதித்துப் பேரன்பு பூண்டு வாழ்ந்து வருபவராக உள்ளவர் (அப்பூதி அடிகள்).

### விளக்கவுரை

தம் பிரான்-தம்முடைய தலைவன். உலகில் காணப்பெறும் தலைவர்கள் எல்லாம் 'தம்பிரான்' என்று சிவனைக் கொண்டாடுவ தால் சிவனுக்குத் 'தம்பிரான்' என்ற பெயர் வந்தது; அவர் நாட்டி யம் ஆடுவதில் வல்லவர்; நடராசர். புகழின்பாலார்-புகழின்கண் வாழ்பவர்; அப்பூதி அடிகளார் அறம் பலவும் செய்து வருகிறார் ஆதலின் நிறைந்த புகழ் அவரை வந்தடைந்தது. தவத்தின் மிக்கார்-ஒழுக்கத்திற் சிறந்தவர். அறம் செய்பவருக்கு ஒழுக்கம் இல்லையேல் புகழ் வராது என்பதாம்.

ஆண்ட சீர் அரசு-திருநாவுக்கரசர். இறைவனால் ஆட்கொள்ளப் பெற்ற காரணத்தால் அப்பெயர். கண்டபின் கொண்ட காதல் அன்று; அவர் சிறப்பைக் கேள்விப்பட்டுக் கொண்ட அன்பு; அவர் திருவடிகளைத் தவிர மற்றைப் பொருள்கள் பயனற்றவை என்று கருதிச் செய்யும் அன்பு; காணும் நிலையை உண்டாக்கும் தன்மையுடைய அன்பு: அதுவே கலந்த அன்பு.

### இலக்கணம்

தம்பிரானுக்கு-உருபு மயக்கம்; ஏழாம் வேற்றுமையாகக் கொள்க.

புகழின் பாலார்-'பால்' ஏழாம் வேற்றுமை உருபு.

## 2. அப்பூதி அடிகளாரின் ஒழுகலாறு

### உரை

**களவு, பொய், காமம், கோபம் முதலிய குற்றம்**-களவு, பொய், காமம், கோபம் முதலிய குற்றங்களை,
**காய்ந்தார்** - வெறுத்து அழித்தவர்,
**வளம் மிகு**-வளப்பத்தில் மிகுந்த,
**மனையின் வாழ்க்கை நிலையினர்**-இல்லற வாழ்க்கை நிலையைக் கொண்டவர்,
**மனைப்பால் உள்ள**-வீட்டின் கண் உள்ள,
**அளவைகள்**-அளக்கும் கருவிகள்,
**நிறைகோல்**-நிறுக்கும் பொருள்கள், தராசு,
**மக்கள்**-பிள்ளைகள்,
**ஆ ஒடு** பசுவுடன்,
**மேதி**-எருமை,
**மற்றும் உள எலாம்**-மற்றும் இவ்வாறு வீட்டிலுள்ள பொருள்கள் எல்லாம்,
**அரசின் நாமம் சாற்றும்**-திருநாவுக்கரசு என்னும் பெயரையே பெயராகக் கொள்ளுமாறு சொல்லும்,
**அ ஒழுகலாற்றார்** - அத்தகைய ஒழுகக நெறியை அமைத்துக் கொண்டவர்.

### தெளிவுரை

அப்பூதி அடிகள் களவு, பொய், காமம், கோபம் முதலிய குற்றங் களை நீக்கியவர்; இல்லற வாழ்க்கையினர்; வீட்டில் உள்ள அளக்கும் பொருள், நிறுக்கும் பொருள், தராசு, பிள்ளைகள், பசு, எருமை என்று இவ்வாறு வீட்டில் உள்ள எல்லாப் பொருள்களுக்கும் 'திருநாவுக்கரசு' என்ற பெயரையே வைத்து, அழைப்பதையே ஒழுக்கமாகக் கொண்டவர்.

### விளக்கவுரை

வெளிப் பகைவர்களைவிட உள்ளிருக்கும் பகைவர்களே கொடியவர்கள். களவு முதலிய குற்றங்கள் உட்பகைவர்கள் என்று கொண்டு அவர்களை அழித்தார். இல்லறம், துறவறம் என்ற இரண்டு அறங்களில் துறவிகளுக்கும் உதவி செய்யக் கூடியதாய், எல்லா இன்பங்களையும் அனுபவித்துக்கொண்டே இறைவனை அடையும் வழியாக இருப்பதால் **வளமை மிகுந்த வாழ்க்கை நிலை** என்று இல்லறத்தைக் குறிப்பிட்டார். **நிறைகோல்**-நிறுக்கும் படிக்கல் முதலியவைகளும் தராசும். எருமையைவிடப் பசுக்கள் சிறந்தவை ஆகையால் **ஆவொடு மேதி** என்றார். அரசு-திருநாவுக்கரசு நாயனார்.

### இலக்கணம்

மனையின் வாழ்க்கை-வீட்டில் வாழும் வாழ்க்கை. ஏழாம் வேற்றுமை உருபு.
மனைப்பால்-'பால்' ஏழாம் வேற்றுமை உருபு.
**நிறைகோல்**-உம்மைத் தொகை.
ஆவொடு மேதி-மூன்றாம் வேற்றுமை 'ஒடு' உருபு உயர்வுப் பொருள்.
உள எலாம்-குறிப்பு வினையாலணையும் பெயர்.
அவ்வொழுகலாறு-சுட்டு.

## 3. அரசின் பேரிட்டு அமைய வாழ்தல்

### உரை

**மன்னு சீர்** - நிலைபெற்ற மிகு புகழை உடைய,
**வாக்கின் வேந்தர்**-நாவுக்கு அரசரின்,
**வடிவு**-திருவுருவத்தை,
**தாம் காணாராயும்**-தாம் காணும் தன்மையைப் பெறாதவராக இருந்தும்,
**அடிமையும்**-திருநாவுக்கரசர் செய்த தொண்டின் தன்மையும்,
**தம்பிரானார் அருளும்**-சிவபெருமான் அவருக்குச் செய்த அருள் தன்மையையும்,
**கேட்டு**-கேள்விப்பட்டு,
**படி திகழ்**-இவ்வுலகில் விளங்குகின்ற,
**மடங்கள்**-அடியவர் தங்கும் அறச்சாலைகள்,
**தண்ணீர்ப் பந்தர்கள் முதலாய் உள்ள**-தண்ணீர்ப் பந்தல்கள் முதலாகச் சொல்லப்பெறுகிற,
**முடிவு இலா அறங்கள்**-எல்லையில்லாத தருமங்களை,
**அவர் நாமத்தால் செய்து**-திருநாவுக்கரசர் பெயராலேயே நிலைபெறுமாறு செய்து,
**முறைமையால் வாழும் நாளில்**-தன்னுடைய ஒழுக்க முறைமையால் வாழ்ந்து வரும்போது.

### தெளிவுரை

திருநாவுக்கரசருடைய வடிவத்தைத் தாம் காணாதபோதிலும் அவர் செய்த அடிமைத் திறத்தையும், இறைவன் அவருக்கு அருள் செய்த தன்மையையும் கேள்விப்பட்டு, உலகின்கண் விளங்குகின்ற அறச்சாலைகள், தண்ணீர்ப் பந்தல்கள் முதலாக உள்ள எல்லையில்லாத அறங்களைத் திருநாவுக்கரசர் பெயராலேயே நிலைபெறுமாறு செய்து, ஒழுக்க முறைமையால் மேம்பட்டு வாழும் நாளில்;

### விளக்கவுரை

வாக்கின் வேந்தர்-நாவுக்கரசர். அப்பூதியடிகள், திருநாவுக்கரசரைப் பார்த்ததில்லை; அவர் உழவாரப் படையினுல் தொண்டு செய்து வருவதையும், இறைவன் அவருக்குச் சூலைநோய் தீர்த்தல், கல்லில் கட்டிக் கடலில் போட்டபோது கல்லே தோணியாக மிதந்து வரச் செய்தல் என்பன போன்று இறைவன் செய்த அருட்செயல் களையும் கேள்விப்பட்டார். முடிவிலா அறங்கள்-எண்ணிக்கையில் முடிவு செய்யப் பெற முடியாத அறங்கள் என்பதாம். தாம் ஏற் படுத்தும் அறக்கட்டளைகளுக்கெல்லாம் தன் பெயரை வைக்காமல், 'திருநாவுக்கரசு' என்னும் பெயரை வைத்ததோடன்றி, அவர் பெயரில் வைத்து அறம் நடத்துவது நாமே என்ற எண்ணம்கூடச் சிறிதும் இல்லாமல், தன் சொத்துக்களெல்லாம் அவர் சொத்துக்கள் ஆனமையால், தான் ஒரு வேலைக்காரனே என்ற எண்ணம் தோன்ற வாழ்ந்து வந்தார் என்பதை **முறைமையால் வாழுநாளில்** என்முர். மடங்கள், தண்ணீர்ப் பந்தர்கள் எனப் பிரிக்க.

### இலக்கணம்

**பந்தர்**-பந்தல் என்ற சொல்லின் போலி.

**இலா** அறங்கள்-ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.

இச் செய்யுளின் கருத்து அடுத்த செய்யுளில் சென்று முடிவதால் குளகம்.

## 4. திருநாவுக்கரசர் திங்களூருக்கு வருதல்

### உரை

**பொருப்பு அரையன்**-மலைகளுக்கு அரசனுகிய இமவானின் மகளாகிய,
**மடப பிடியினுடன்** - இளமை அமைந்த பெண் யானை போன்றவளாகிய உமையம்மையுடன்,
**புணரும்**-சேர்ந்திருக்கிற,
**சிவக் களிற்றின்**-சிவபெருமானுகிய ஆண் யானையின் தலமாகிய,
**திருப்பழனம்**-திருப்பழனம் என்ற தலத்துக் கோயிலை.
**பணிந்து**-வணங்கி,
**பணி செய்**-தொண்டு செய்கின்ற
**திருநாவுக்கரசர்,**
**ஒருப்படு காதலின்** - ஒருமைப் பட்ட அன்பினுல்,
**உடையவர் தம் பதி பிறவும்** - தம்மை ஆளாக உடையவராகிய சிவபெருமானுடைய தலங்கள் பிறவற்றையும்.
**வணங்கும் விருப்பினெடும்**-வழி வணங்க வேண்டும் என்ற ஆசையோடும்,
**திங்களூர் மருங்கு வழி**-திங்களூரின் பக்கத்தே அமைந்த வழியாக.
**மேவுவார்** - பொருந்தி வந்து கொண்டிருப்பார் ஆயினர்.

### தெளிவுரை

மலையரசன் மகளாகிய உமா தேவியாருடன் கலந்து மகிழும் சிவ பெருமான் தங்கியிருக்கும் 'திருப்பழனம்' என்ற தலத்தை வணங்கி, உழவாரத் தொண்டு செய்துவந்த திருநாவுக்கரசர், மேலெழுந்து வரும் அன்பினுல் தம்மை ஆளாகக் கொண்ட சிவபெருமான் தங்கியிருக்கும் தலங்கள் பலவற்றையும் வணங்க வேண்டும் என்று ஆசையோடும் திங்களூர் வழியாக வருவாராயினர்.

### விளக்கவுரை

பொருப்பு-மலை. மலைகளுக்கெல்லாம் அரசன் இமயமலை. இமய மலையை மனித இனத்தவனாகக்கொண்டு கூறும் வரலாறுகள் உள்ளன. மலைகளுக்கெல்லாம் அரசனாகிய இமவான்—இமயமலை யரசன் தவம் செய்யவே உமையம்மை அவனுக்கு மகளாகப் பிறந் தாள். 'பார்வதி' என்பது பெயர். தந்தை மலையாகையால் மகளைப் 'பெண் யானை' என்றார். உமையம்மையை மணந்து கொண்ட சிவ பெருமானைக் 'களிறு' (ஆண் யானை) என்றார். இது **உருவகம்**. திருப் பழனம்-சிவபெருமான் கோயில் கொண்டிருக்கும் ஒரு தலம். **பணிதல்**-வணங்குதல்; பணிசெய்தல்-உழவாரத் தொண்டு செய்தல்; திருநாவுக்கரசர் தம் கையில் வைத்திருக்கும் ஆயுதத்துக்கு உழ வாரப்படை என்று பெயர். அதனால் புல் செதுக்குதல் முதலிய பணி செய்வார். ஒருப்படு காதல்-வேறொன்றை நினையாமல், கற்புடைப் பெண்கள் கணவரைத் தவிர வேறொன்றை நினையாமைபோல, இறைவனையே நினைக்கும் அயரா அன்பு. உடையவர்-தம்மை ஆளாக-உடைமையாகக் கொண்டவர்.

### இலக்கணம்

அரசன்-அரையன், இடைப்போலி.
**ஒருப்படு காதல்**-வினைத்தொகை.
தண்ணீர்ப் பந்தலை-பந்தர், கடைப்போலி.
**மடப்பிடி**-அடையடுத்த உவமையாகு பெயர்.
**சிவக்கன்று**-உருவகம்.

## 5. வாகீசர் தண்ணீர்ப் பந்தரை அடைதல்

### உரை

**அளவு இல் சனம்** - எண்ணிக் கைக்கு அப்பாற்பட்ட மக்கள்.
**செலவு ஒழியா**-செல்லுதல் நீங் காத,
**வழிக்கரையில்**-சாலையோரத்தில்,
**அருளுடையார் உளம் அனைய**-அருள் நிறைந்த சான்றோர் களின் உள்ளத்தைப்போன்ற,
**தண் அளித்தாய்**-குளிர்ந்த கருணையை உடையதாய்,
**உறு வேனில்**-வந்து தாக்குகின்ற கோடைக்காலம் தருகின்ற,
**பரிவு**-துன்பங்களை,
**அகற்றி**-நீக்கி,
**குளம் நிறைந்த** - பள்ளமாகிய இடம் நிறைந்த,
**நீர்த்தடம் போல்**-நீரையுடைய தடாகம் போல,
**குளிர் தூங்கும்**-குளிர்ச்சியை எந் நாளும் நிலைபெறக் காக்கும்,
**பரப்பினதாய்** - இடப் பரப்பை உடையதாய்,
**வளம் மருவு**-வளப்பம் பொருந் திய,
**நிழல் தரு**-நிழலைத் தருகிற,
**தண்ணீர்ப் பந்தர்**-தண்ணீர்ப் பந் தலை,
**வந்து அணைந்தார்**-வந்து சேர்ந் தார்.

### தெளிவுரை

மக்கட் போக்குவரத்து எப்பொழுதும் நிறைந்திருக்கிற சாலை யோரத்தில் அருளுடையவர்களின் உள்ளம் போன்ற கருணை உடைய தாய், கோடைக்காலம் தருகின்ற துன்பங்களை நீக்கிக் குளிர்ந்து

தடாகத்தைப் போன்று குளிர்ச்சியை எப்பொழுதும் காத்துவரும் இடப்பரப்பை உடையதாய், வளப்பம் பொருந்திய நிழலைத் தருவ தாய் அமைந்த தண்ணீர்ப்பந்தலை வந்தடைந்தார் வாகீசர்.

**விளக்கவுரை**

சனம் என்பது 'ஜனம்' என்ற சொல்லின் திரிபு. நெடுஞ்சாலையில் மக்கட் போக்குவரத்து எப்பொழுதும் அதிகமாக இருக்கும் என்பதை **அளவுஇல் சனம் செலவு ஒழியா வழிக்கரை** என்றார். மக்கட் போக்கு வரத்து இல்லாத இடத்தில் அல்லது யாருக்கும் தெரியாத மூலையில் தண்ணீர்ப் பந்தல் வைப்பது அறமாகாது. ஆகையால் அவ்வாறு கூறினார். பெயரளவில் தண்ணீர்ப் பந்தலாக இல்லாமல் வருவோர் களுக்குக் கருணையோடு நீர், மோர் முதலியவைகளை வழங்கும் தன்மையுடையதாகவும் இருக்க வேண்டும். கோடைக்காலம் தரும் வெம்மையை நீக்கக்கூடிய வகையில் குளிர்ச்சி தரும் இடப்பரப்பு மிக்குடைதாய் வளப்பம் பொருந்தி நிழல் தருவதாகவும் இருக்க வேண்டும். **குளம்** என்ற சொல் பள்ளமாக உள்ள இடத்தை மட்டுமே குறிக்கும்.

**இலக்கணம்**

**செலவு + ஒழியா** = செலவொழியா.
**செலவு**-தொழிற் பெயர்
**ஒழியா** வழிக்கரை-ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.
**உறு வேனில்**-வினைத்தொகை.

தண்ணளித்தாய், அகற்றி, பரப்பினதாய் - செய்து என்னும் வாய்பாட்டு வினை யெச்சங்கள்.

## 6. வாகீசர் தம் பெயரைத் தாம் காணல்

**உரை**

**வந்து அணைந்த** - திருப்பழனத்தி லிருந்து புறப்பட்டு வந்து திங் களூர்த் தண்ணீர்ப் பந்தரை அடைந்த,
**வாகீசர்**-திருநாவுக்கரசர்,
**மந்தம்**-மென்மையாக வருகின்ற,
**மாருதம்**-காற்றுடன்,
**சீத**-குளிர்ச்சியும் அமைந்த,
**பந்தருடன்**-பந்தலைப் பார்த்த தோடு.
**அமுதம் ஆம்**-அமுதம் என நின்று வாழ்வளிக்கிற,
**தண்ணீரும்**-குளிர் நீரையும்,
**பார்த்தருளி**-பார்த்து,
**சிந்தை**-மனம்,
**வியப்பு உற வருவார்**-வியப்பைப் பொருந்த வருபவராகி,
**திருநாவுக்கரசு எனும் பேர்**-'திரு நாவுக்கரசு' எனறு வழங்கப் பெறும் தம்முடைய பேரா னது,
**சந்தம் உற**-வடிவத்தால் அழகும், ஓசையூட்டிப் படிக்கும்போது இனிய ஓசையும் பொருந்த,
**வரைந்த அதனை**-எழுதப் பெற்றி ருக்கிற அப்பெருமையை,
**எம்மருங்கும்**-எல்லாப் பக்கங் களிலும்,
**தாம் கண்டார்**-தாமே தம் கண் களால் பார்த்தார்.

### தெளிவுரை

*திங்களூர்த் தண்ணீர்ப் பந்தரை வந்தடைந்த திருநாவுக்கரசர் மெல்லிய இளங் குளிர் காற்றுடன் அமைந்த பந்தலில் உயிர்காக்கும் மருந்து போன்ற இனிய தண்ணீரையும் பார்த்து, மனத்தில் வியப்பு மிக வருபவர் ஆகித் தம்முடைய பெயரை அழகுற எழுதப்பெற்றிருந்த காட்சியினைக் கண்டார்.*

### விளக்கவுரை

மந்தம் என்பது மெல்ல வருதலைக் குறித்தது. செய்திகளைச் சிறுகச்சிறுக ஏற்றுக் கொள்ளும் புத்தியை 'மந்தபுத்தி' என்பது போல. மாருதம்—காற்று; சீதம்—குளிர்ச்சி. பந்தல், குளிர்ந்த இளந் தென்றல் வருமாறு அமைக்கப்பெற்றிருந்தது; தண்ணீர் அமுதமாக இருந்தது. அமுதம்—சாவாதிருப்பதற்கு அளிக்கப் பெறும் மருந்து. தண்ணீர்ப் பந்தலின் அமைப்பும் தண்ணீரின் தன்மையும் அவர் மனத்திற்கு வியப்பை அளித்தன; அதற்கும் மேலாக அங்கே எழுதப் பெற்றிருந்த பெயர். இப்பெயர் வேறு யாருக்கும் இருக்காதோ? வாகீசர், தம் பெயர் என்று கருதுவானேன்? இப்பெயர் சிவனால் இவருக்கு அமைக்கப் பெற்றது. இதனை யாரும் உபயோகித்தவழக்கு இல்லை. அது மட்டுமல்லாமல் 'திருநாவுக்கரசு' என்ற பெயரைமட்டும் எழுதவில்லை, 'கடலில் தெப்பமாக் கல்லைக் கொண்ட திருநாவுக்கரசு' என்பது போல இவர் வரலாற்றோடு கூடிய நிகழ்ச்சிகள் எதுகை, மோனை நயம் அமையுமாறு, பந்தரின் எல்லாப் பக்கங்களினும் எழுதப் பெற்றிருந்தன. இதனையே '**சந்தம் உற வரைந்த**' என்றார். எழுத்துருவத்தில் அழகும் படிக்கும்போது இசையழகும் பொருந்த இருப்பவையாயின. சென்ற பாட்டின் இறுதியில் '**வந்தணைந்தார்**' என முடிந்து இச் செய்யுளில் '**வந்தணைந்த**' என்று தொடங்குவதால் இது அந்தாதித் தொடை.

### இலக்கணம்

**தண்ணீரும்**-இறந்தது தழுவியது.
**வருவார்**-முற்றெச்சம்.
வரைந்த+அதனை=வரைந்ததனை; அகரம் தொகுத்தல் விகாரம்.

## 7. பெயரமைத்ததின் காரணத்தைக் கேட்டறிதல்

### உரை

**இ பந்தர்**-இத் தண்ணீர்ப்பந்தலுக்கு,
**இ பெயர் இட்டு**-இப் பெயரை வைத்து,
**இங்கு அமைத்தார் யார்**-இங்கே நிலைபெறச் செய்தவர் யார்?
**என்றார்க்கு**-என்று கேட்ட வாகீசருக்கு,
**அபந்தர்**-அத் தண்ணீர்ப் பந்தலைப் பற்றிய வரலாறுகளை,
**அறிந்தார்கள்**-நன்கு அறிந்தவர்களாக அங்கே இருந்தவர்கள்,
**தப்பு இன்றி**-குறைபாடு எதுவும் இல்லாமல்,
**எங்கு உள**-இவ்வூரின் பல பகுதிகளிலும இருக்கிற,
**சாலை**-அறச்சாலைகள்,
**குளம்**-திருக்குளங்கள்,
**கா**-சோலைகள் ஆகிய எல்லாவற்றையும்,

**செப்பு அரும் சீர் அப்பூதி அடிகளார்** - சொல்லினாற் சொல்லி முடிப்பதற்கு இயலாத புகழை யுடைய அப்பூதி அடிகளார் என்பவர்,
**ஆண்ட அரசு எனும் பெயரால்**- சிவபெருமானால் ஆட்கொள்ளப் பெற்ற 'திருநாவுக்கரசு' என்ற பெயரினால்,
**செய்து**-உண்டாக்கி,
**அமைத்தார்**-நடைபெற்று வருமாறு செய்தார்,
**என்றார்**-என்று கூறினார்கள்.

## தெளிவுரை

இப்பந்தருக்கு இப்பெயரிட்டு இங்கே அமைத்தவர் யார்? என்று வாகீசர் கேட்க, அப்பந்தரின் வரலாறுகளை அறிந்தவர்களாய் அங்கிருந்தவர்கள், இதுமட்டுமன்று, இவ்வூரின் எல்லாப் பக்கங்களி லும் உள்ளனவாய் குறைபாடு இல்லாமல் நடைபெறுகின்ற அறச் சாலை, திருக்குளம், சோலை ஆகியவைகளையும், சொல்லில் அடங்காத புகழையுடைய அப்பூதி அடிகளார் 'திருநாவுக்கரசு' என்னும் பெய ரால் உண்டாக்கி, நடைபெற்று வருமாறு செய்தார் என்று கூறி னார்கள்.

## விளக்கவுரை

அப்பூதி அடிகளார் ஒரே தண்ணீர்ப் பந்தரை வைத்து அதற்குத் திருநாவுக்கரசர் என்று பெயர் வைத்து நடத்தி வருகிறார் என்பது இல்லை. திங்களூர்ப் பக்கத்தில் எல்லா இடங்களிலும் அறச்சாலை, குளம், சோலை முதலியவைகளை அமைத்துள்ளார்: அறங்களைத் தொடங்கி அப்படியே விட்டுவிட்டார் எனபது இல்லாமல் அவைகள் குறைபாடு இல்லாமல் நடந்து வருமாறு கண்காணித்தும் வந்தார்: இதனைத் தப்பின்றி **எங்கும் உள சாலை, குளம், கா** என்பதனாற் குறித் தார். அப்பூதி அடிகளாரின் புகழ் மனித நாவினாற் சொல்லமுற்பட் டால் முடியாத பெருமையுடையது ஆதலின் **செப்பருஞ் சீர் அப்பூதி** என்றார். அருமை—முடியாதது என்னும் பொருளையுடையது.

## இலக்கணம்

**என்றார்க்கு**-வினையாலணையும் பெயர் குவ்வுருவு ஏற்றது:
**செப்பு**-தொழிற் பெயர்:
இப்பந்தர், இப்பெயர் —சுட்டு அண்மைச் சுட்டு.
**அப்பந்தர்**-திருநாவுக்கரசரால், இப்பந்தர் என்று சுட்டிக் காட்டப் பெற்ற அப்பந்தல், இங்கே பொதுச்சுட்டு.

# 8. அப்பூதி அடிகளாரைப் பற்றி வினவுதல்

## உரை

**என்று உரைக்க**-என்று அறிந்தவர்கள் சொல்ல,
**அரசு கேட்டு**-திருநாவுக்கரசர் அதனைக் கேட்டு,
**இதற்கு கருத்து என்னோ**-தான் உண்டாக்கிய அறச்சாலைகட்கு என் பெயர் வைப்பதற்கு உரிய கருத்து யாதோ?
**என்று**-என மனத்தில் நினைத்து,
**நின்றவரை நோக்கி**-அங்கே நின்றுகொண்டிருந்தவர்களைப் பார்த்து,

**அவர் எவ்விடத்தார் என**-நீங்கள் கூறிய அப்பூதியடிகளார் எங்கிருக்கின்றார்? என்று கேட்க,
**நிறைந்து துன்றிய நூல் மார்பரும்**-நிறைந்து விளங்குகின்ற பூணூலை அணிந்திருக்கின்ற மார்பினை உடையவராகிய அப்பூதி அடிகளாரும்,
**தொல் இ பதியார்**-பழைமையான இத் திங்களூரையே சேர்ந்தவர்,
**மனையின்கண் இப்பொழுது சென்றனர்**-வீட்டிற்கு இப்பொழுது தான் சென்றார்,
**அதுவும்**-அவர் வீடும்,
**சேய்த்து அன்று**-தூரமானது அன்று,
**நணித்து**-பக்கத்திலேயே உள்ளது,
**என்றார்**-என்று கூறினார்கள்.

## தெளிவுரை

என்று அவர்கள் கூறியதைக் கேட்ட திருநாவுக்கரசர், இவ்வாறு பெயர் வைப்பதற்குரிய கருத்து யாதாக இருக்கும் என மனத்தில் நினைத்து, அங்கே நின்று கொண்டிருந்தவர்களைப் பார்த்து நீங்கள் கூறிய அப்பூதி அடிகளார் எங்கிருக்கின்றார் என்று கேட்க, அவர்களும், நிறைந்து விளங்குகின்ற பூணூலை அணிந்திருக்கிற மார்பை உடைய அப்பூதி அடிகளாரும் இப்பழமையான திங்களூரைச் சார்ந்தவரே; இப்பொழுதுதான் வீட்டுக்குச் சென்றார்; அவர் வீடும் மிகத் தூரமுடையது அன்று; அண்மையில் உள்ளதே என்றார்கள்.

## விளக்கவுரை

அப்பூதி அடிகளார் அந்தணர் என்பதை நிறைந்து துன்றிய நூல் மார்பர்'' என்றார். நூல்-பூணூல். பூண்+நூல்-அணியாக விளங்கும் நூல். ஞானம், வைராக்கியம், நல்லொழுக்கம் ஆகிய மூன்றையும் கண்ணெனக் காத்து வாழ்பவர்களாய், அந்தண்மை உடையவர்களாய் வாழ்கிறவர்கள் என்பதை உணர்த்தும் அணி, பூணூல். அப்பூதியடிகளார் இவ்வொழுக்கங்களில் தலைசிறந்து விளங்குகிறார் என்பதை உணர்த்த **நிறைந்து துன்றிய நூல் மார்பர்** எனக் குறித்தார். தொன்மை+பதி=தொல் பதி என்றாயது. திங்களூரும் பழைமை வாய்ந்தது; அப்பூதியடிகளாரும் தொன்மையாககவே இவ்வூரில் விளங்கி வரும் பெருங்குடி மரபைச் சார்ந்தவர் என்பதை உணர்த்தவே **தொல் பதியார்** எனக் கூறினார். கேட்பவருடைய உள்ளம் என்னென்ன செய்திகளை அறிய விரும்புமோ அவ்வளவு செய்திகளையும் எடுத்து உணர்த்தும் கவிநயமுடையது இச்செய்யுள்.

**சென்றனர் ·இப்பொழுது** என்பதால் தான் ஏற்படுத்திய அறச்சாலைகள் குறைவின்றி நடைபெறுகின்றனவா? என்பதை நாள் தோறும் சென்று கவனித்து வரும் வழக்கம் உடையவர் அப்பூதி அடிகளார் என்பதும் தெரிகிறது.

## இலக்கணம்

**என்னோ**-'ஓ' வினாப்பொருளில் வந்த இடைச்சொல்.
**நின்றவரை**-வினையாலணையும் பெயர் இரண்டன் உரு பேற்றது.
**சேய்த்து, நணித்து**-குறிப்பு வினைமுற்றுக்கள்.

## 9. அரசு அப்பூதியடிகள் இல்லம் சார்தல்

### உரை

**முனிவரும்**-திருநாவுக்கரசரும்,
**அங்கு அகன்று**-தண்ணீர்ப்பந்தரை விட்டு நீங்கி,
**அப்பூதி அடிகளார் தங்கு மனை**-அப்பூதி அடிகளார் தங்கியிருக்கின்ற வீட்டின்,
**தலை கடை முன்**-வெளிப்புற முதல் வாயிற்படி முன்,
**போய் சார்வு ஆக**-போய்ச் சார்ந்தனராக, அவ்வளவில்,
**நங்கள் பிரான் தமர்** - நம்போன்றவர்களுக்கெல்லாம் தலைவரான சிவபெருமானுக்கு உரிமையுடையவராகிய,
**ஒருவர்**-ஒப்பற்ற அடியவர் ஒருவர்,
**செழுங்நடையில்**-செல்வங்கள் பலவும் செழித்து வளர்வதற்குக் காரணமான நம் வீட்டு வாயிலில்,
**வந்து அடைந்தார்**-வந்து சேர்ந்தார்,
**என கேட்டு**-என்று வாயிலோர் சொல்லக் கேட்டு,
**உள் இருந்த**-வீட்டின் உள்ளே இருந்த,
**திங்களூர் மறைத் தலைவர்**-திங்களூரில வாழ்கின்ற வேதம் வல்லார்களுக்குத் தலைவராகிய அப்பூதி அடிகளார்,
**நண்ணினார்**-அடியவர் இருக்கும் இடத்தை வந்து பொருந்தினர்.

### தெளிவுரை

திருநாவுக்கரசர் தண்ணீர்ப் பந்தரை விட்டு நீங்கி, அப்பூதி அடிகளார் தங்கியிருக்கின்ற வீட்டின் வெளி வாயிலை அடைந்து நின்றாராக, சிவனடியார் ஒருவர் நம் வீட்டு வாயிலில் வந்துள்ளார் என்று வாயிலோர் சொல்லக்கேட்டு, உள்ளே இருந்த வேதம் வல்ல அந்தணர் தலைவராகிய அப்பூதி அடிகளார் விரைந்து வெளியே வந்து அடியவர் இருக்கும் இடம் சார்ந்தார்.

### விளக்கவுரை

முனிவர்—திருநாவுக்கரசர். வேதங்கள் வல்லவர்களின் தலைவராக விளங்கிய அப்பூதி அடிகளாரைவிட வாகீசர் எல்லாப் பற்றுக்களையும் விட்ட காரணத்தால் உயர்ந்தவர் என்பதை உணர்த்தவே '**முனிவர்**' என்றார். எல்லாப்பற்றுக்களையும் விட்டவரே யாயினும் அவருடை துறந்த உள்ளம் கூட, பெயர் இவ்வாறு எழுத என்ன காரணம்? என்று அறியவேண்டும் என ஆசைப்பட்டு விட்டது என்று நயம்படக் கூறினார். அப்பூதி அடிகளார் அவ்வீட்டில் **வாழ்கின்றார்** என்று கூறாமல் **தங்கியிருக்கின்றார்** என்று கூறுகின்றார். ஏன்? சொத்துக்கள் எல்லாம் திருநாவுக்கரசருக்கே உரிமையாக்கி விட்டார். எனவே அங்கே எல்லாப் பொருள்களையும் அனுபவித்து வாழும் நிலைமை அப்பூதி அடிகளாருக்கு இல்லை, உரிமையுடையவர் வரும்போது ஒப்புக் கொடுப்பதற்காகத் தங்கியிருக்கிறார் என்பது கருத்து. **கடைத்தலைமுன்** என்பதை முன் கடைத்தலை எனப் பிரித்துக் கூட்டுக. அப்பூதி அடிகளாரின் இல்லம் பல வாயில்களை உடையது. முதல் வாயிலில் சார்ந்து நின்றார் வாகீசர். **கடைத்தலை-வாயலில். வீட்டைப் பற்றியும், வீட்டில் உள்ளவர்களைப் பற்றியும் அமைந்த செய்திகளை** எடுத்துக் காட்டும் இடமே வாயில். இவ்வுலக மறுவுலக வாழ்வுகளையெல்லாம் அளிக்கவல்லது என்பதைக் காட்டும் வாயில்

ஆகையால் 'செழுங்கடை' என்ருர். அப்பூதி அடிகளார் கல்விச் செருக்கு இல்லாதவர் என்பதை **மறைத் தலைவர்** கேட்டு நண்ணினர் என்பதனுல் உணரலாம். **தங்கு மனை** என்பதால் செல்வச் செருக்கு இல்லாதவர் என்பதும் தெரிகிறது. தமர்-தம்மைச் சார்ந்தவர்.

**இலக்கணம்**

**தங்கு மனை**-வினைத் தொகை.
கடைத்**தலை**-ஏழாம் வேற்றுமை உருபு.
**மறை**-ஆகுபெயரால் மறைவல்லார்களையும் உணர்த்தியது.
**செழுங்கடை**-பண்புத் தொகை.

## 10. அப்பூதி அடிகளாரின் வரவேற்பும் வினவும்

**உரை**

**கடிது அணைந்து**-அப்பூதியடிகளார் விரைந்து வந்து,
**வாகீசர்**-திருநாவுக்கரசருடைய,
**கழல் பணிய**-திருவடிகளில் விழுந்து வணங்க,
**மற்று அவர் தம் அடி பணியா முன்**-மாருக, அப்பூதியடிகளார் தம்முடைய (வாகீசருடைய) அடிகளில் விழுந்து வணங்குவதற்கு முன்பே,
**பணியும் அரசின் எதிர்**-அப்பூதி அடிகளார் திருவடிகளில் விழுந்து வணங்கும் திருநாவுக்கரசரின் முன்னுல்,
**அந்தணனுர்**-அந்தணராகிய அப்பூதி அடிகளார்,
**முடிவு இல்தவம் செய்தேன் கொல்**-சிவனடியாராகிய தாங்கள் இங்கே எழுந்தருளுவதற்கு நான் எல்லை இல்லாத தவத்தைச் செய்தேன் போலும்!,
**முன் பொழியும்**-தாமாகவே முந்திக் கொண்டு வந்து பொழிகின்ற,
**கருணை புரி வடிவு உடையீர்!**-அருளினுல் கட்டப் பெற்ற வடிவத்தை உடைய அடியவரே,
**என் மனையில்**-எளியவனுகிய யான் தங்கிருக்கும் இவ்வீட்டில்,
**வந்தருளிற்று என் ?**-எழுந்தருளியது என்ன காரணமோ ?
**என்ருர்**-என்று கேட்டார்.

**தெளிவுரை**

உள்ளிருந்த அப்பூதி அடிகள் விரைந்து வந்து வாகீசரின் திருவடிகளை வணங்க, அப்பூதியடிகளார் வந்து தம்மடிகளை வணங்குவதற்கு முன்னமேயே அவ்வப்பூதியடிகளாரின் திருவடிகளை வணங்கும், யான் எல்லையில்லாத தவம் செய்தேன் போலும்!, முந்தி வந்து பொழிகின்ற அருளால் கட்டப்பெற்ற வடிவத்தை உடைய அடியவரே! என் மனை நோக்கி எழுந்தருளுவதற்குக் காரணம் என்ன? என்று கேட்டார் அப்பூதியடிகளர்.

**விளக்கவுரை**

வாகீசர் முன்னே வணங்கினரா? அப்பூதியடிகள் முன்னே வணங்கினரா? என அறிய முடியாமல் இருவரும் கீழ்விழுந்து வணங்கினர் என்பதாம். தாங்கள் இங்கே எழுந்தருளுவதற்கு என்ன மாதவம் செய்தேனே என்று கூறி, தாங்கள் என் மனையில் எழுந்தருளுவதற்கு என்ன காரணம்? எனக் கேட்டார். சிவனடியார்கள் தன் வீடு தேடி வந்துதான் பெறவேண்டும் என்ற நிலையை உண்டாக்

ஞல் அது ஆணவம் என்று கருதி, திங்களூரின் எப்பகுதிக்கு அடிய வர் வந்தாலும் அங்கங்கே அவர்களை உபசரித்து அனைத்துத் தொண்டுகளும் செய்வதற்கு வேண்டிய மடங்கள் முதலியவற்றை அமைத்திருந்தும், இவ்வடியவர் தம் வீடு நோக்கி வந்ததால், அவ ருக்கு ஏதோ குறைநேர்ந்து விட்டது, இவ்வளவு அறச்சாலைகள் இருந் தும் இவரை உபசரிக்க வில்லையே என்று எழுந்த வருத்தத்தாலேயே **என் மனையில் வந்தருளிற்று என்?** என்றார். திருநாவுக்கரசரின் வடிவம் அருள் வடிவம். தம முன்னால் நிற்பவர்களுக்குக் கருணை யைத் தானே முந்திக் கொண்டுவந்து கொடுக்கும் தன்மை வாய்ந் தது என்றார். புரிதல்-கட்டுதல்.

### இலக்கணம்

**கழல்**-இடப்பொருளாகு பெயர் (தானியாகு பெயர்).
**மற்று**-வினைமாற்று.
**தம்+அடி**-தம்மடி.
**செய்தேம்**-தன்மை ஒருமை வினைமுற்று.
**கொல்**-ஐயப் பொருளில் வந்த இடைச் சொல்.

## 11. வாகீசரின் மறு மொழி

### உரை

**ஒரு குன்றம் வில்லாரை**-ஒப்பற்ற மேருமலையை வில்லாக ஆக்கிப் பிடித்திருப்பவராகிய சிவபெரு மானை,
**திருப்பழனத்துள்** - திருப்பழனம் என்ற தலத்தினுள்,
**இறைஞ்சி** - கண்டு வழிபாடு செய்து,
**வருகின்றோம்**-வந்து கொண்டிருக் கிறோம்,
**வழிக் கரையில்**-சாலையோரத்தில்,
**நீர் வைத்த**-தாங்கள் உண்டாக் கிய,
**வாய்ந்த வளம் தருகின்ற**-பொருந் திய வளப்பங்களை உண்டாக் கித் தருகின்ற,
**நிழல் தண்ணீர்ப் பந்தரும்** - நிழ லோடு கூடிய தண்ணீர்ப் பந் தரையும்,
**கண்டு**-பார்த்து,
**அத்தகைமைபுரிகின்ற**-அம்முறை யிலேயே தாங்கள் செய்து வரு கின்ற,
**பிற அறமும்**-மற்றை அறங்களை யும்,
**கேட்டு**-கேள்விப்பட்டு,
**அணைந்தோம்**-வந்தோம்,
**எனப் புகல்வர்**-என்று தான் வந்த காரணத்தைச் சொல்வாராயி னர்.

### தெளிவுரை

'திருப்பழனம்' என்ற தலத்தினுள், மேருவை வில்லாகக் கொண்ட சிவபெருமானைக் கண்டு, வணங்கி வந்து கொண்டிருக்கும் போது, சாலையோரத்தில் தங்களால் அமைக்கப்பெற்ற, பொருந்திய வளமையைத் தருகின்ற, நிழலோடு கூடிய தண்ணீர்ப் பந்தலையும் கண்டு, அவ்வாறே தாங்கள் செய்து வருகின்ற பிற அறங்களையும் கேள்விப்பட்டு இங்கே வந்தோம் என்று கூறினார் வாகீசர்.

### விளக்கவுரை

சிவன் திரிபுரத்தை எரிக்கச் சென்றபோது மேரு மலையை வில் லாக ஆக்கிக் கையிற் பிடித்தான்; இதை ஒருகுன்ற வில்லார் என்ப

தாற் குறிப்பிட்டார். அறம் பிறவும் என்பதைப் 'பிற அறமும்' என மாற்றிக் கூட்டுக. அத்தகையை புரிகின்ற-நான் பார்த்த ஒரு தண்ணீர்ப் பந்தரைப் போலவே முறை தவருமல் செய்கின்ற என்பதாம். வருகின்ருேம், அணைந்தோம் என்பன அருளாளர்கள் கூறும் மரபு மொழிகள். ஒருமை பன்மை மயக்கமெனக் கொள்ளற்க.

### இலக்கணம்

**இறைஞ்சி**-செய்து என்ற வாய்பாட்டு வினையெச்சம்.

**பந்தரும்**-உம்மை இறந்தது தழுவியது; இறைவனைக் காண்பதே குறிக்கோளாதலின் இறைவனைக் கண்டதோடு என்ற பொருளைத் தந்தது.

## 12. வேருெரு பேர் எழுதுவானேன்? என வினவுதல்

### உரை

**கோது இல் மொழி கொற்றவனுர்**-குற்றம இல்லாத சொற்களுக்கு அரசராகிய திருநாவுக்கரசர்,

**ஆறு அணியும் சடை முடியார்**-கங்கையை அணிந்திருக்கின்ற சடையை முடித்துக் கட்டியிருக்கின்ற சிவபெருமானுடைய,

**அடியார்க்கு**-அடியவர்களுக்காக,

**நீர் வைத்த** - தாங்கள் ஏற்படுத்திய.

**ஈறுஇல் பெரும் தண்ணீர்ப் பந்தரில்**-முடிவில்லாத பெரிய தண்ணீர்ப் பந்தலில்,

**நும் பேர் எழுதாதே**-தங்களுடைய பெயரை எழுதாமல்,

**வேருெரு பேர்**-வேறு ஏதோ ஒரு பெயரை,

**முன் எழுத வேண்டிய காரணம் என் கொல்**-முன்னுல் எழுத வேண்டியதற்குக் காரணம் யாது?

**கூறும் என**-கூறுங்கள் என்று,

**எதிர் மொழிந்தார்**-கேட்டார்.

### தெளிவுரை

கங்கையை அணிந்த சடையையுடைய சிவபெருமானின் அடியவர்களுக்காகத் தாங்கள் உண்டாக்கிய முடிவு இல்லாத பெரிய தண்ணீர்ப் பந்தலில் உம்முடைய பெயரை எழுதாமல் வேருெரு பெயரை முன்னே எழுதவேண்டிய காரணம் என்ன? கூறுவீராக என்று கேட்டார் குற்றமற்ற மொழிகளுக்கு அரசராகிய திருநாவுக்கரசர்.

### விளக்கவுரை

பகீரதன் தவம் செய்து கங்கையை இவ்வுலகத்திற்குக் கொண்டு வந்தான். இவ்வுலகத்தையே அழிக்க வேண்டும் என்று வந்த கங்கையைச் சிவபெருமான் ஒரு துளியாக விழுமாறு செய்து, தன் சடையில் தாங்கி கொண்டான். அவ்வாறு கங்கையானவள் (ஆறு) அழகு பெறத் தங்கியிருக்கும் சடையாதலின் **ஆறணியும் சடைமுடியார்** என்ருர். எந்த வகையாலும் அப்பூதி அடிகளாருக்குச் சம்பந்தம் இல்லாத ஒரு பேர் என்று கருதியதால் திருநாவுக்கரசர் அப்பேரை **வேருெரு பேர்** என்ருர். மொழிக்குக் குற்றமாவது, சொன்னுல் அதை யாரும் கேட்டு நடத்தாமை. கல்லும் அவர் சொன்னவுடன் தெப்பமாக மிதந்தது ஆகையாலும், அவர் பதிகம் பாடியவுடன்

எவ்வளவோ அற்புதங்கள் நடந்தன ஆகையாலும் **கோதுஇல் மொழிக் கொற்றவனார்** என்றார். கொத்றவன்-அரசன்.

**இலக்கணம்**

**அணியுஞ்சடை**-பெயரெச்சம்.
**என்கொல்**-'கொல்' அசைநிலை.
**கூறும்**-'உம்' ஈற்று முன்னிலைப் பன்மை வினைமுற்று.
**எழுதாது**-எதிர்மறை வினையெச்சம்.

## 13. அப்பூதி அடிகளாரின் சீற்றம்

**உரை**

**நின்ற**-எதிரில் நின்று கொண்டிருந்த,
**மறையவர்**-அந்தணராகிய அப்பூதி அடிகளார்,
**கேளா**-கேட்டு,
**நிலையழிந்த**-நிலையழிந்து போன,
**சிந்தையராய்**-உள்ளத்தை உடையவராய்,
**நன்று அருளிச் செய்திலீர்**-அறம் நிறைந்த சொற்களைத் தாங்கள் அருளிச் செய்தீர் அல்லீர்,
**நாண் இல்**-நாணம் இல்லாத,
**அமண் பதகருடன்**-சமண சமயப் பாவிகளுடன்,
**ஒன்றிய**-கலந்த,
**மன்னவன்**-பல்லவ மன்னனாகிய மகேந்திரன்,
**சூழ்ச்சி**-செய்த வஞ்சகச் செயல்களை,
**திருத்தொண்டின் உறைப்பாலே**-இறைவனுக்குச் செய்து வரும் திருததொண்டின் முதிர்ச்சியினாலேயே,
**வென்றவர் தம்** -முறியடித்தவராகிய அவ்வடியாருடைய,
**திருப்பேரோ**-செல்வத்தை அளிக்கும் சக்தி வாய்ந்த பெயரோ,
**வேறொரு பேர்**-ஒரு சம்பந்தமும் இல்லாத பேர்?
**என வெகுள்வார்**-எனக் கேட்டுக் கோபம கொள்வார் ஆயினர்.

**தெளிவுரை**

நின்று கொண்டிருந்த அப்பூதி அடிகளார் வாகீசர் சொன்னதைக் கேட்டு, நிலை கெட்டுப்போன மனம் உடையவராகி, அறம் பொருந்திய சொற்களைத் தாங்கள் சொல்லாதவர் ஆனீர்; நாணம் இல்லாத சமண் சமயப் பாவிகளுடன் சேர்ந்தவனாகிய பல்லவ மன்னன் கலந்து செய்த வஞ்சனைச் செயல்களை, திருத்தொண்டின் முதிர்ச்சியால் வென்று வெளியேறிய அடியவருடைய உயர்ந்த பெயரா வேறொரு பேர்? என்று சொல்லிக் கோபம் கொள்வாராயினர்.

**விளக்கவுரை**

அறிவில்லாதவர் சொல்லுகின்ற குற்றமுடைய சொற்களைப் பொறுத்துக் கொள்வதே மனத்தின் சிறந்த நிலை. இங்கே திருநாவுக்கரசர் "வேறொருபேர்" என்று சொன்னபோது, அது அறிவிலார் கூறும் வெற்றுரை என்று பொறுத்துக்கொள்ள முடியவில்லை அப்பூதி அடிகளாரால். எனவே, அவர் மனம் தன்னுடைய பொறுமை என்னும் கட்டுப்பாட்டினின்னும் மீறி வந்து விட்டது; ஆதலால் **நிலையழிந்த சிந்தையராய்** என்றார். **நன்று**-அறம். இங்கே அறம் பொருந்திய சொற்களைக் குறித்தது. **நாண்**-தீயவைகளைக் கேட்க, செய்ய,

சொல்ல முற்படும்போது உண்டாகும் ஒருவகை மனச் சுருக்கம். சமணம் என்ற சொல் அமணம், அவண் என்ருயிற்று. திகம்பர சமணர் ஆடையில்லாது திரிபவராதலின் அமண் என்ருர். அம்மணம் ஆடையில்லாமையைக் குறிக்கும் உலக வழக்குச் சொல். பாதகர் என்ற சொல் பதகர் என்ருயிற்று. ஒன்றுதல்-கலந்து சூழ்ச்சி செய்தல். மன்னவன்-கி. பி. 7ஆம் நூற்ருண்டில் காஞ்சியைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி செய்த பல்லவ மன்னன்; மகேந்திர வர்மன். உறைப்பு-முதிர்ச்சி; வன்மை. திருத்தொண்டு-இறைவனுடைய கோயில், குளம் முதலியவற்றில் புல், சேறு முதலியன நீக்குதல். அப்பூதி அடிகளாருக்குத் திருநாவுக்கரசு என்ற ஒரு பெயர்தான் முத்தியைக் கொடுத்தது. ஆகையால் அப்பெயரைத் 'திரு' என்ற அடைமொழி கொடுத்துக் கூறினுர்.

### இலக்கணம்

**கேளா**-செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம்.
**செய்திலீர்**-முன்னிலைப் பன்மை எதிர்மறை வினைமுற்று.

## 14. அப்பூதி அடிகளாரின் வெகுளியில் எழுந்த வீறு மொழி

### உரை

**நம்மை** - தங்களையும் என்னையும் போல்வார் அனைவரையும்,
**உடையவர்** - அடிமையாகக் கொண்டவராகிய சிவபெருமானுடைய,
**கழற்கீழ்**-திருவடிகளுக்கு,
**நயந்த**-விரும்பிய நிலையில்,
**திருத்தொண்டாலே** - செய்யும் பணிவிடைச் செயல்களாலே,
**என்போல்வாரும்**-வாழ்வின் குறிக்கோள் அது என்று அறியவோ, சொன்னுலும் உணரவோ முடியாத எளியேனைப் போன்றவரும்,
**இம்மையிலும் பிழைப்பது**-துன்பம் நிறைந்த இப்பிறவியிலும் நம்மை ஈடேற்றுவது இத்தொண்டு ஒன்றே,
**என தெளிய** - என்று தெளிவாக உணர்ந்து கொள்ளுமாறு,
**செம்மை புரி**-அறம் நிறைந்த தொண்டுகளையே செய்து காட்டிய,
**திருநாவுக்கரசரின் திருப்பெயர்**-திருநாவுக்கரசரின் திருப்பெயரை,
**எழுத**-யான் எழுதினேனுக,
**வெம்மை மொழி**-அதன் பண்பை உணராது கொடுஞ் சொற்களை,
**யான் கேட்க விளம்பினீர்**-யான் கேட்குமாறு சொன்னீர்கள்,
**என விளம்பி** - என்று கோபத்தோடு எடுத்துச் சொல்லி.

### தெளிவுரை

''நம் போல் பவர்களையெல்லாம் அடிமையாகக் கொண்ட சிவ பெருமானுடைய திருவடிகளில் விருப்பம் கொண்டவராய்ச் செய்த பணிவிடைச் செயல்கள் மூலம் வாழ்வின் குறிக்கோள் இது என அறியாது மயங்கும் எளியேனைப் போன்றவர்களும் தொண்டு ஒன்றே நம்மை இப்பிறவியிலும் ஈடேற்றவல்லது'' என்று தெளிவாக உணர்ந்து கொள்ளுமாறு அறம் நிறைந்த தொண்டுகளைச் செய்து காட்டிய திருநாவுக்கரசரின் திருப்பெயரை யான் எழுத, அப்

பண்பினை உணராது, கொடிய சொற்களை யான் கேட்குமாறு சொன்னீர்கள் என்று கோபத்தோடு எடுத்துச் சொல்லி.

**விளக்கவுரை**

இச்செய்யுள் **குளகம்;** கருத்து இச்செய்யுளில் முடியாமல் அடுத்த செய்யுளுக்கும் செல்வதால். எல்லாவுயிர்களும் இறைவனுக்கு அடிமைகளே. சிவபெருமானைத் தலைவனாகக் கொண்டு வழிபடும் அடியவர்கள் எல்லாம் சிவனுக்கு அடிமைகளே. **நம்மை** என்றது சைவ சமய வழிபாட்டைக் கொண்டவர்களைக் குறித்தது. **கழற்கீழ் நயந்த திருத்தொண்டு**-திருவடிகளுக்கு விரும்பிச் செய்யும் பணிவிடை. உலக இன்பங்களை விரும்பிச் செய்யாமல், சிவபெருமான் திருவடியின்கீழ் அமைந்த முத்தியை விரும்பிச் செய்யும் திருத்தொண்டு என்றும் கொள்ளலாம். **செம்மை**-தீமை கலவாத நன்மை; இங்கே தொண்டினைக் குறித்தது. உலக மக்கள் இவ்வுலகமாகிய புயலில் சிக்கி, நம்மைக் கரை சேர்ப்பது எது? என்று தெரியாமல் மயங்கி நிற்க, இந்நிலையிலும் நம்மைக் காப்பது தொண்டு ஒன்றே என்பதைத் தேவாரங்களால் சொல்லியதோடன்றிச் செய்தும் காட்டினார் திருநாவுக்கரசர். இதனை, "இம்மையிலும்.........செம்மைபுரி திருநாவுக்கரசர்" என்ற வரியிற் குறித்தார். **வெம்மை மொழி**-திருநாவுக்கரசர் கூறிய "**வேறொரு பேர்**" என்ற வார்த்தை. எந்த ஒரு பெயரை மந்திரமாக நான் கொண்டிருக்கிறேனோ, அப்பெயரை என் முன்னிலையிலேயே யான் கேட்க இழித்துக் கூறினீர் என்பதை 'யான் கேட்க' என்பதாற் குறிப்பிட்டார்.

**இலக்கணம்**

கழற்**கீழ்**-உருபு மயக்கம். நான்காம் வேற்றுமையாகக் கொள்க.
என்போல்வா**ரும்**-உம்மை இழிவு சிறப்பு.
**செம்மை**-பண்பாகு பெயர்.
**புரி திருநாவுக்கரசர்**-வினைத்தொகை.
**திருப்பெயர்**-இரண்டன் உருபும் பயனும் உடன்தொக்க தொகை.

## 15. நீயார்? என வாகீசரை வினவுதல்

**உரை**

**பொங்கு கடல்**-சீறி எழுகின்ற கடலில்.
**கல் மிதப்பில்**-கல்லாகிய தெப்பத்தில்,
**போந்து ஏறும்** - வந்து கரையேறும்,
**அவர் பெருமை**-அந்த ஒப்பற்ற அடியவர் பெருமையை,
**அங்கணர் தம்**-அழகிய கண்ணை உடையவராகிய சிவபெருமானுடைய,
**புவனத்தில்**-உலகத்தில்,
**அறியாதார் யார் உளர் ஏ**-அறிந்து கொள்ளாதவர் ஒருவரும் இல்லை. அப்படியிருக்கவும்,
**மங்கலம் ஆம் திருவேடத்துடன் நின்று** - சிவ வடிவத்துடன் நின்று,
**இவ்வகை மொழிந்தீர்**-இவ்வாறு கொடுஞ்சொல் சொன்னீர். (வேடமும் செயலும் பொருந்தாமையால்)
**எங்கு உறைவீர்**-எங்கே தங்கியிருப்பவர் நீர்,
**நீர் தாம் யார்**-நீவிர் யார்?
**இயம்பும்**-சொல்லும்,
**என இயம்பினார்** - என்று கேட்டார்.

### தெளிவுரை

"கல்லிற் கட்டிக் கடலில் தள்ளியபோது சீறுகின்ற அக்கடலை, கல்லையே தெப்பமாகக் கொண்டு கடந்து, கரையேறிய அத் திருநாவுக்கரசரின் பெருமையைச் சிவபெருமானுக்கு உரிமையுடைய இவ்வுலகத்தில் அறியாதவர் ஒருவரும் இல்லை. அவ்வாறிருக்கவும் சிவ வேடத்தையும் அணிந்து, திருநாவுக்கரசு என்னும் பெயரை 'வேறொரு பேர்' என்ற கொடுஞ் சொல்லாற் கூறிய நீர் எங்கே தங்கியிருக்கிறீர் ? நீவிர் யார் ? சொல்லும்" எனக் கேட்டார்.

### விளக்கவுரை

மகேந்திர வர்மன் சமணர்கள் கூறியதைக் கேட்டு, திருநாவுக்கரசரைக் கல்லிற் கட்டிக் கடலில் தள்ளுமாறு செய்தான். திருநாவுக்கரசர் 'நமசிவாய' என்னும் மந்திரத்தையே சொல்லிக் கல்லையே தெப்பமாக அமைத்துக் கடலைக் கடந்து கரையேறினர் என்பது வரலாறு. மிதப்பு-மிதத்தலையுடையது; தெப்பம். போதந்து-போந்து என மருவியது. போதருதல்-வருதல். அவர்-அத்துணைப் பெருமையுடையவர் என அகரம் பெருமையைச் சுட்டியது. அம்கணர்-அங்கணர்; அழகிய கண்களையுடைய சிவபெருமான். நம்முடைய கண்கள் நமக்குத் துணையாக, நாம் பொருள்களைப் பார்த்துத் தெரிந்து கொள்வதற்காக அமைந்துள்ளன உலகில் சூரியன், சந்திரன், அக்கினி ஆகிய மூன்றும் நிலையாக நின்று மக்களுக்கு உதவி செய்யும் வண்ணம் அவைகளை வாழ வைப்பதற்காக அமைந்த கண்கள் சிவனுடைய கண்கள் ஆகையால் அழகிய கண்கள் ஆயின. 'சிவம்' என்ற சொல் 'மங்கலம்' என்ற பொருள்தரும். சிவவேடம் என்னும் சொல்லுக்கு உரை கூறுவது போல் மங்கலமாம் திருவேடம் என்றூர் சேக்கிழார்.

### இலக்கணம்

**பொங்குகடல்**-வினைத்தொகை.
**கல் மிதப்பு**-உருவகம்.
**போந்து**-செய்து என்னும் வாய்பாட்டு வினையெச்சம்.
**உளரே**-ஏகாரம், எதிர்மறைப் பொருளில் வந்தது.
**யார் ?**-யாவர் என்ற சொல்லின் திரிபு.

## 16. வாகீசரின் வாக்கின் எளிமை

### உரை

**திருமறையோர்**-உயர்ந்த வேதம் வல்லாராம் அப்பூதி அடிகளார்,
**அது மொழிய** - திருநாவுக்கரசர் பெருமையையும் 'வேறொரு

அப்பூதி அடிகளாரின் பெருமையை,
**அறிந்து உரை செய்வார்**-நன்றாக உணர்ந்து விடை சொல்வார் ஆயினர்,

ருந்த நான், அவ்வழியிலிருந்து வெளியேறி வருவதற்காக,
**அருளு**-இறைவனல் கருணையுள்

யாவர் என்ற வினவை மொழிய,
**திருநாவுக்கரசர் அவர் பெருமை-**

ளத்தோடு கொடுக்கப்பெற்ற, **பெருஞ் சூலையினால்** - பெரிய வயிற்று நோயினால், **ஆட்கொள்ள**-இறைவன் என்னை ஆளாகக் கொள்ள, **அடைந்து உய்ந்த** - அவனுக்கு அடிமையாக ஆகும் பேற்றினை அடைந்து, வாழ்ந்த, **தெருளும் உணர்வு இல்லாத**-தாங்கள் திருநாவுக்கரசு என்னும் பெயரை வைத்ததன் கருத்தைத் தெளிவாக உணர்ந்து கொள்ளும் அறிவு இல்லாத, **சிறுமையேன் யான்**-அறிவின்மை உடையவன் யான், **என்றார்**-என்று கூறினார்.

## தெளிவுரை

அந்தணராகிய அப்பூதி அடிகளார் அவ்வாறு வினவ, திருநாவுக்கரசர் அவருடைய பெருமையை அறிந்து விடை சொல்ல முற்பட்டு, "சைவமல்லாத பிற துறையாகிய சமணத்திலிருந்து கரையேறுவதற்காக, கருணையோடு கொடுக்கப்பெற்ற பெரிய சூலை நோயினால் ஆட்கொள்ளப்பெற்று, இறைவனின் 'அடிமை' என்ற பெரும் பதவியை அடைந்து வாழ்ந்தவனும், தண்ணீர்ப்பந்தல் முதலானவற்றில் திருநாவுக்கரசு என்னும் பெயரை எழுதியதின் உட்கருத்தைத் தெளிவாக உணர்ந்து கொள்ளும் அறிவு இல்லாதவனும் ஆகிய சிறுமையுடையவனும் யானே" என்று கூறினார்.

## விளக்கவுரை

எல்லாச் சமயங்களும் இறைவனை அடையும் வழிகளே ஆதலின் 'துறை' என்ற சொல்லாற் சமயத்தைக் குறித்தார். சிவனை அடைவதற்குச் சிவன் துறையாகிய சைவ சமயத்தில் நிற்க வேண்டிய நான் சிவனை அடைதற்கு வேறு துறையில் நின்றேன் என்பார், 'பிற துறையில் நின்று' என்றார். திருநாவுக்கரசர் இரண்டு அறிவில்லாச் செயல்களைச் செய்ததாகக் கூறுகிறார். (1) சிவனை அடைவதற்குரிய வழியில் நின்று சிவனை அடைய முயற்சி செய்யாமல், அருகன் நிலையை அடைதற்குரிய நெறியில் நின்று சிவனை அடைய எண்ணியது, ஒரு அறிவின்மைச் செயல். (2) அப்பூதியடிகளார் மந்திரமாகக் கொண்டு வழிபடும் 'திருநாவுக்கரசு' என்ற பெயரை என்னுடைய பெயர் என ஆணவத்தால் நினைத்து அதற்கும் அப்பூதியடிகளாருக்கும் என்ன சம்பந்தம் என்று கருதியது மற்றொரு அறிவின்மைச் செயல். முதலிற் செய்த அறிவின்மைச் செயலுக்கு இறைவன் சூலை நோயால் வருத்தி ஆட்கொண்டார். திருநாவுக்கரசர் தண்டனை பெற்றுத் திருந்தினார். இரண்டாவது செயலுக்கு அப்பூதி அடிகளோ இறைவனிலும் மேலாக நின்று தண்டனை கொடுக்காமல் இனிய வார்த்தைகளாலேயே விளங்க வைத்தார். இதை உணர்ந்தே அவர் பெருமை அறிந்து உரை செய்வார் என்று பாடினார் சேக்கிழார். திருநாவுக்கரசரைச் சமண சமயத்திலிருந்து கரையேற்ற இறைவன் கொடிய வயிற்று வலியைக் கொடுத்தார் திருநாவுக்கரசருக்கு. சூல்-கருப்பம். கருக்குழியில் சென்று பற்றித் தாக்கும் நோய்-சூலை நோய்: வயிற்று வலி. சூலை நோய் தந்த இறைவன் செயலை வாகீசர் 'அருட் செயல்' என்றே எண்ணினார்.

## இலக்கணம்

**பிற துறையில் நின்று**-ஐந்தாம் வேற்றுமை 'இல்' உருபும், 'நின்று' சொல்லுருபும் இணைந்து நீக்கப் பொருளைக் குறித்தன.

**ஏற**-செயவென் வாய்பாட்டு வினையெச்சம் காரியப் பொருளில் வந்தது.
**தெருளும்** உணர்வு-பெயரெச்சம்.
**சிறுமையேன்**-பண்படியாகப் பிறந்த தன்மைப் பெயர். 'யான்' என்பதை எழுவாயாகக் கொண்டு "தன்மை ஒருமைக் குறிப்பு வினைமுற்று எனவும் கொள்ளலாம்.

## 17. கேட்ட அப்பூதி அடிகளின் விம்மிதச் சொல்

### உரை

**அரசு**-திருநாவுக்கரசர்,
**அரிய உரை செய்ய** - இச்சொல்லின் பெருமை இவ்வளவு என்று மதிப்பிட இயலாத சொற்களைச் சொல்ல,
**அப்பூதி அடிகள் தாம்** - அப்பூதி அடிகள்,
**கரகமலம்**-கைகளாகிய தாமரை,
**மிசை குவிய** - தலையின் மேல் சென்று குவிந்து நிற்க,
**கண் அருவி பொழிந்து இழிய**-கண்கள் பொழிகின்ற நீராகிய அருவி பெருக்கெடுத்துக் கீழ் நோக்கி இழிந்தோட,
**உரைகுழறி**-நாக்கானது சொல்லை வெளிப்படுத்த முடியாமல் தடுமாற,
**உடம்பு எல்லாம்**-உடம்பின் எல்லாப் பாகத்திலும்,
**உரோமம் புளகம் பொலிய** - மயிர்கள் குத்திட்டு நிற்க அங்கே புளகம் எனப்பெறும் குளிர்ச்சித் தன்மை விளங்கி நிற்க,
**தரையின்மிசை வீழ்ந்து**-தரையில் விழுந்து,
**அவர் தம்** - அத்திருநாவுக்கரசருடைய,
**சரணகமலம்**-திருவடியாகிய தாமரைகளை,
**பூண்டார்**-தம்முடைய தலைக்கு அணியாக ஆக்கிக் கொண்டார்.

### தெளிவுரை

திருநாவுக்கரசர் அருமை வாய்ந்த சொற்களைச் சொன்னவுடனேயே, அப்பூதி அடிகளின் கைகள் தலைமேல் குவிந்து நிற்க, கண்கள் ஆனந்த அருவியை வெள்ளமெனப் பொழியவே அது பெருக்கெடுத்து ஓட, நாக்குத் தடுமாற, உடம்பின் எல்லாப் பாகங்களிலும் மயிர்கள் கால் குத்திட்டு நிற்க, புளகாங்கிதம் எனப் பெறும் குளிர்ச்சி உடலிற் பரவ, நிலத்தின் மேல் விழுந்து, நாவுக்கரசரின் திருவடிகளைத் தம் தலைக்கு அணியாக ஆக்கிக் கொண்டார்.

### விளக்கவுரை

சொல்லானது சொன்னவரின் பண்பை உணர்த்தும் அளவுகோல். வாகீசரின் வார்த்தைகளை வைத்துக்கொண்டு அவர் பண்பையோ சொல்லின் பண்பையோ அளக்க முற்பட்டால் நம்மால் முடியாது ஆதலின் 'அரிய' என்று குறிப்பிட்டார் சேக்கிழார். அச்சமும் வழிபாட்டுணர்ச்சியும் இணைந்தபோது உண்டாகும் மெய்ப்பாடுகளை இச் செய்யுள் விளக்குகிறது. அப்பூதி அடிகளாரின் கருத்து இல்லாமலேயே கைகள் தலைமேல் சென்று குவிந்தன. நீரை அருவியெனப் பொழிதல் கண்ணின் செயல்! இழிதல் அருவி நீரின் செயல். கண்ணும் அருவியும் ஆகிய பெயர்களை இணைத்து அவற்றின் செயல்களாகிய பொழிதலையும் இழிதலையும் ஒன்றாக்கினர். 'பொழிந்து' என்பதைப் பொழிய என மாற்றிக் கொள்க. நாக்குத் தடுமாறுதல்

அச்சம் காரணமாக. எல்லாம் என்பது உடம்பின் பல பாகங்களைக் குறித்தது. **புளகம்** என்பது அச்சம் தோன்றிய காலத்து உடலில் பரவி நிற்கும் ஒரு குளிர்ச்சித் தன்மை. சரணம் - திருவடிகள். பூணுதல்-அணியாகக் கொள்ளுதல் **அருவி** என்ற சொல் நீரையும் அதன் வீழ்தலாகிய செயலையும் குறிக்கும் ஒரு சொல்.

### இலக்கணம்

**அரிய**-குறிப்பு வினையாலணையும் பெயர்.

கரகமலம், சரணகமலம் } உருவகங்கள்.

பொழிந்து, குழறி-செய என்னும் வாய்பாட்டு வினையெச்சங்கள் 'செய்து' என்ற வாய்பாடாக நின்றன.

**தரையின் மிசை**-ஏழாம் வேற்றுமையைக் குறிக்க வந்த இரு சொற்கள்.

## 18. அப்பூதி அடிகளாரின் மகிழ்ச்சிச் செயல்

### உரை

**வாகீசர்**-திருநாவுக்கரசர், **அவரை எதிர் வணங்கி** - அப்பூதி அடிகளாரை எதிர்வணக்கம் செய்து, **எடுத்தருள**-தம் கைகளால் தூக்கி நிறுத்தியருள, **அருமறையோர்** - சிறந்த அந்தணராகிய அப்பூதி அடிகள் **அற்றவர்கள் அருநிதியம் பெற்ருர் போல்** - செல்வம் இல்லாதவர்களாக இருந்து துன்புற்று, பின் உயர்ந்த செல்வத்தைப் பெற்றவர்களைப் போல, **உளம்முற்ற களிகூர**-உள்ளம் முழுவதும் மிக்க மகிழ்ச்சியானது சிறிது சிறிதாக அதிகப்பட்டுக் கொண்டேயிருக்க, **முன் நின்று கூத்தாடி** - வாகீசரின் முன்னால் மகிழ்ந்தாடி, **உற்ற விருப்புடன்** - மிகுதியாகப் பொருந்திய மகிழ்ச்சியுடன், **சூழ ஓடினர்** - வாகீசரைச் சுற்றி வளைய ஓடினர், **பாடினர்**-பாடவும் செய்தார்.

### தெளிவுரை

தரையில் வீழ்ந்த அப்பூதி அடிகளாரை, வாகீசர் எதிர்வணக்கம் செய்து, இரு கைகளாலும் எடுத்து நிறுத்தியருள, அந்தணராகிய அப்பூதியடிகள் செல்வம் இல்லாதவர்களாக இருந்து துன்புற்றுப் பின் செல்வத்தைப் பெற்றவர்களைப்போல உள்ளம் முழுவதும் மகிழ்ச்சியானது அதிகரித்துக் கொண்டேயிருக்க, வாகீசரின் முன்னால் மகிழ்ந்தாடி, மேலும் மிகுகின்ற மகிழ்ச்சியினால் வாகீசரைச் சுற்றி வளைந்து ஓடினர்; பாடினர்.

### விளக்கவுரை

ஒருவர் நம்மை வணங்கும்போது பதிலுக்கு நாமும் வணங்குவது 'எதிர் வணக்கம்' எனப்பெறும். வணங்கும் முறையும் ஒரே வகையாக இருக்கும். அப்பூதி அடிகளார் தரையில் விழுந்து வணங்கிய போது, வாகீசரும் தரையில் விழுந்தே வணங்கினர். வணங்கிய வாகீசர் அப்படியே கிடக்கும் அப்பூதியடிகளாரை இரு கைகளாலும் தூக்கி நிறுத்துகிறார். அப்பூதி அடிகளாரின் மகிழ்ச்சிக்கு ஒரு உவமை: செல்வம் இல்லாது துன்புற்றவர்களாக இருந்து சிறந்த செல்வத்

ளைதைப் பெற்றவர்களைப் போல என்பதாம். களி-கள்ளுண்டு களித்தாற் போன்ற மிகு மகிழ்ச்சி கூர்தல்-சிறிது சிறிதாக வளர்ந்து கொண்டேயிருத்தல்; மகிழ்ச்சியின் ஒருவகை நிலையில் கூத்தாடினார்; மேலும் கொஞ்சம் வளர்ந்தபோது சுற்றிச்சுற்றி ஓடினார்; இன்னும் சற்று அதிகப்பட்டபோது பாடினார் என வளர்ச்சியையும் செயலையும் அமைத்துக் காட்டினார். சூழ்தல்-வளைந்து ஓடுதல். ஓடினார் என்பது தனி வினைமுற்று ஓடினபோது உள்ள மகிழ்ச்சி வேறு; பாடினபோது உள்ள மகிழ்ச்சி வேறு.

### இலக்கணம்

**மற்றவரை**-வினைமாற்றின்கண் வந்த இடைச்சொல்.

**கூர**-செய என் வாய்பாட்டு வினையெச்சம் காரணப் பொருளில் வந்தது.

**கூத்தாடி**-செய்து என் வாய்பாட்டு வினையெச்சம்.

## 19. அப்பூதி அடிகளாரின் பெருமகிழ்ச்சிச் செயல்

### உரை

**மூண்ட பெரு மகிழ்ச்சியினால்**-மேன்மேற் பெருகிய பெரு மகிழ்ச்சியால்,

**முன் செய்வது அறியாதே**-இனிச் செய்ய வேண்டுவது என்ன என்பதை அறியாதவராகி,

**ஈண்டமனை அகத்து எய்தி**-நெருங்கிய வீட்டின் உள்ளே சென்று,

**இல்லவர்க்கும் மக்களுக்கும்**-மனைவியார்க்கும் மக்களுக்கும்,

**ஆண்ட அரசு**-இறைவனால் ஆட்கொள்ளப் பெற்ற திருநாவுக்கரசர்,

**எழுந்தருளும் ஓகை உரைத்து**-தம் இல்லத்துக்கு எழுந்தருளி வந்த மகிழ்ச்சிச் செயலைச் சொல்லி,

**ஆர்வம் உற**-அன்பு ஆர்வமாகப் பெருகிப் பொருந்திய காரணத்தால்,

**பூண்ட**-சுற்றம் என்ற உறவை மேற்கொண்ட,

**பெருஞ் சுற்றம் எலாம்**-வளர்ந்து பெருகிய சுற்றத்தார் எல்லாரையும்.

**கொடுமீள**-அழைத்து வருவதற்காகப் **புறப்பட்டார்.**

### தெளிவுரை

மேலும் பெருகிய பெரு மகிழ்ச்சியால் இனிச் செய்ய வேண்டுவது என்ன என்பதை அறியாதவராகி.நெருங்கிய வீட்டின் உள்ளிடத்தை அடைந்து, மனைவியர்க்கும் மக்களுக்கும் இறைவனால் ஆட்கொள்ளப் பெற்ற திருநாவுக்கரசர் தம் இல்லத்திற்கு எழுந்தருளி வந்த மகிழ்ச் சிச் செயலைச் சொல்லி, அன்பானது ஆர்வமாகப் பெருகிய காரணத் தால் சுற்றமாகும் தன்மையைப் பெற்ற, வளர்ந்த எண்ணிக்கையைக் கொண்ட சுற்றத்தவர்கள் எல்லாரையும் அழைத்து வருவதற்காகப் புறப்பட்டார்.

### விளக்கவுரை

மூண்ட-பெருகிய, மூள்-பகுதி. மகிழ்ச்சியின் மிகுதியால் என்ன செய்வது என்பது தெரியாத நிலை தோன்றும். ஈண்டியிருக்கும் மனையை **ஈண்ட மனை** என்றார்; நெருங்கியிருக்கும் வீடு. திங்களூரில் அவருடைய வீடுகள் பலவற்றுள்ளும் இதுவே இப்போது அவரை நெருங்கியிருப்பது ஆதலின் அவ்வாறு கூறினார். இல்லவர்-மனைவி

யார்; உயர்வுப்பன்மை. உவகை என்ற சொல் 'ஓகை' என நின்றது. அன்பின் வளர்ச்சியே ஆர்வம். "அன்பு ஈனும் ஆர்வம் உடைமை" என்பது குறள். அன்பினால் விளைந்த சுற்றம் மனைவியும் மக்களும்; ஆர்வத்தால் விளைந்த சுற்றம் திங்களூரில் இருக்கும் ஏனையோர். சேக்கிழார் சுற்றத்தை இரு வகையாகப் பிரித்தார். அன்பினாலும் ஆர்வத்தானும் சுற்றப்பட்டிருப்பவர்களைச் **சுற்றம்** என்றார். கொடு மீள-அழைத்துக் கொண்டுவர.

### இலக்கணம்

**பெரு மகிழ்ச்சி**-பண்புத்தொகை.
**அறியாது**-எதிர்மறை வினையெச்சம்.
**மனையகம்**-ஏழாம் வேற்றுமை உருபின் பொருள்பட வந்த சொல்.
**ஓகை**-உவகை என்பதன் திரிபு.
**கொடு**-கொண்டு என்ற சொல்லின் இடைக் குறை.

## 20. அப்பூதி அடிகளாரின் ஆராத காதற் செயல்

### உரை

**மனைவியாருடன் மக்கள் மற்றும் உள்ள சுற்றத்தோர்**-மனைவியாருடன் மக்கள் மற்றும் உள்ள சுற்றத்தோர்கள்,
**அனைவரையும்**-எல்லோரையும்,
**கொண்டு** - அழைத்துக்கொண்டு வந்து,
**இறைஞ்சி**-அவர்களோடு தாமும் சேர்ந்து வணங்கி,
**ஆராத காதலுடன்** - அமையாமல் வளரும் காதலுடன்,
**முனிவரை**-திருநாவுக்கரசரை,
**உள் எழுந்தருளவித்து** - வீட்டின் உள்ளே எழுந்தருளுமாறு செய்வித்து,
**அவர்தாள்**-அவருடைய திருவடிகளை,
**முன் விளக்கும்** - முன் வைத்து நன்னீரால் கழுவியும்,
**புனை மலர் நீர்** - வாகீசர் திருவடிகளிற் புனையப்பட்ட மலர்களையும், தீர்த்தத்தையும்,
**தங்கள் மேல் தெளித்து** - தங்கள் மேல் தெளித்துக்கொண்டு,
**உள்ளும்**-உள்ளமும்,
**பூரித்தார்**-பெருமையால் மகிழ்ந்தார்.

### தெளிவுரை

மனைவியாருடன் மக்களோடு மற்றும் இருக்கின்ற சுற்றத்தவர்கள் எல்லாரையும் அழைத்துக் கொண்டு வந்து, அனைவரோடும் தானும் வாகீசர் திருவடிகளில் விழுந்து வணங்கி, தணியாத காதல் மிகுதிப்படுவதால், திருநாவுக்கரசரை வீட்டின் உள்ளாக எழுந்தருளுமாறு செய்து, அவருடைய திருவடிகளை முன் வைத்துப் பாத பூசை செய்து விளக்கியும், விளக்கிய பிறகு அவர் திருவடிகளில் அலங்கரிக்கப்பெற்ற மலர்களையும் தீர்த்தத்தையும் தங்கள் மேல் தெளித்துக்கொண்டு, உடலும் உள்ளமும் மகிழ்ச்சியால் பூரிப்படைந்தார்.

### விளக்கவுரை

சேக்கிழார் அப்பூதி அடிகளாரின் மகிழ்ச்சியை நான்கு படிநிலைகளில் வைத்து விளக்கிக் காட்டுகின்றார். **விம்மிதம், மகிழ்ச்சி, பெரு மகிழ்ச்சி, ஆராக் காதல்** எனப் படிகளை அமைத்துக்கொண்டு அவை

களுக்கேற்ற மெய்ப்பாடுகளையும் செயல்களையும் முறைபடுத்திக் கூறு கிறார். ஆராத-தணியாத. முனைவர்-வலம் உடையவர். சிவனடியார் களின் திருவடிகளைப் பாத்திரத்தில் வைக்கச் செய்து, நன்னீராற் கழுவி, மலர் தூவி வழிபாடு செய்து, அந்நீரைப் பிரசாத நீராக அருந் தியும் உடல் மேல் தெளித்தும், மலர்களைத் தம் தலையிற் சூடியும் மகிழ்வது மரபு. **விளக்கும்** என்ற சொல் கழுவுவதற்குப் பயன்படுத் தப் பெற்ற நன்னீரையும், அழகாக விளங்க வைப்பதற்குப் பயன் படுத்தப்பெற்ற மலர்களையும் குறித்தது. **தெளித்து** என்பது, நீரைத் தெளித்துக் கொண்டும், மலர்களைப் பிறர் அறியுமாறு (தெளியுமாறு) வைத்துக்கொண்டும் என்ற பொருளைத் தந்தது.

### இலக்கணம்

**அனைவரையும்**-உம்மை முற்றும்மை.
**இறைஞ்சி**-செய்து என் வாய்பாட்டு வினையெச்சம்.
**புனை மலர்**-வினைத்தொகை.
**மலர்நீர்**-உம்மைத் தொகை.

## 21. அப்பூதி அடிகளார் திருநீறு பெறுதல்

### உரை

**ஆசனத்தில்**-உயர்ந்த பீடத்தில் (அமரச் செய்து),
**பூசனைகள்**-பூசைகளை,
**அமர்வித்து**-தான் செய்தும் மற்ற வர்களைச் செய்யுமாறு செய் தும்,
**விருப்பினுடன்** - மன மகிழ்ச்சி யினால்,
**வாசம்நிறை**-சிவமணம் நிறைந்து விளங்கும,
**திருநீற்றுக் காப்பு ஏந்தி**-திருநீறு எனப்பெறும் கவசத்தை வாகீச முனிவர் தர அதை அச்சத் தோடும் காதலோடும் அமைய வாங்கி,
**மனம் தழைப்ப** - அதுவே பெருஞ் செல்வம் என எண்ணிப் பூசு வதால் மனம் செல்வம் பெற்ற காலத்துத் தழைப்பது போல் தழைத்து நிற்க,
**தேசம் உய்ய வந்தவரை** - உலகம் நற்கதியை அடைவதற்காக அவதாரம் செய்தருளிய வாகீ சரை,
**திருவமுது செய்விக்கும் நேசம் உற**-உணவு உண்ணுமாறு செய் விக்க வேண்டும் என்ற விருப் பம் மிகுதியும் தோன்ற,
**விண்ணப்பம் செய** - அவ்விருப் பத்தை அப்பூதி அடிகள் வாகீச முனிவரிடம் விண்ணப்பித்துக் கொள்ள,
**அவரும்**-நாவுக்கரசரும்,
**அது நேர்ந்தார்**-அதை உடன்பட் டார்.

### தெளிவுரை

திருநாவுக்கரசரைப் பீடத்தில் அமரச் செய்து, பூசைகளைத் தாம் செய்தும், பிறராற் செய்வித்தும், மனமகிழ்ச்சியினால் சிவமணம் நிறைந்து விளங்கும் திருநீறு எனப்பெறும் கவசத்தை வாகீச முனிவர் தர, அதை அச்சத்தோடும் காதலோடும் அமைய வாங்கி, அதையே செல்வம் எனப் பூசுவதால் மனம் மகிழ்ச்சியால் தழைப்ப, உலகம் நற்கதியை அடைவதற்காக வந்து அவதாரம் செய்தருளிய வாகீ சரை உணவு உண்ணுமாறு செய்விக்க வேண்டும் என்ற விருப்பம் மிகுதியும் தோன்ற, அதை அப்பூதி அடிகள் வாகீச முனிவரிடம் விண்ணப்பிக்க நாவரசரும் உடன்பட்டார்.

## 22. வாகீசர் அமுது செய்ய உடன் பட்டமையை வியத்தல்

### உரை

**செய் தவர்**-செய்த தவங்கள் பல வற்றையும் உடைய திருநாவுக் கரசர்,
**இசைந்தபோது**-திருவமுது செய்ய உடன்பட்ட போது,
**திருமனையாரை நோக்கி**-மனைவியைப் பார்த்து,
**நம்பால் எய்திய பேறு இருந்த ஆறு என்னே**-நம்மிடம் வந்து அடைந்த பெறற்கரும் செல்வம் நமக்காகத் துணைசெய்து இருந்த முறைதான் என்னே!
**என்று**-என்று கூறி வியப்புற்று,
**மை திகழ்**-கருமை விளங்குகின்ற,
**மிடற்றினன் கின் அருளினால்**-கழுத்தினை உடைய சிவனுடைய திருவருளினால்,
**வந்தது என்றே**-வாகீசர் அமுது செய்ய உடன்பட்டதாகிய இப் புண்ணியம் வாழ்ந்தது என்றே கருதி.
**உய்தும் என்று** - நாம் வாழ்ந்தோம் என்று கூறி,
**உவந்து**-மகிழ்ந்து,
**கொண்டு** - சிறப்பாகச் செய்ய வேண்டும் என்ற உறுதியை இருவரும் மனத்துட்கொண்டு,
**திருவமுது ஆக்கல் உற்றார்**-திருவமுது சமைத்தல் என்ற செயலிற் பொருந்தினார்கள்.

### தெளிவுரை

செய்த தவங்கள் பலவற்றையும் உடைய திருநாவுக்கரசர் அமுது செய்ய உடன்பட்டவுடன், அப்பூதி அடிகளார் தம் மனைவியாரை நோக்கி, நம்மைநோக்கி வந்து அடைந்த இத்தகைய பெரும்பேறு நமக்காகத் துணைசெய்து இருந்த முறைதான் என்னே! என்று வியப்புற்று, கருமை நிறைந்த கழுத்தினனாகிய சிவபெருமான் அருளினாலேயே இது வாய்த்தது என்று கருதி 'நாம் பிழைத்தோம்' என்று கூறி மகிழ்ந்து அமுது செய்யும் முறையை மனத்துட் கொண்டு, சமைத்தலைப் பொருந்தினார்.

### விளக்கவுரை

**செய்தவர்**-திருநாவுக்கரசர். தனக்கு வந்த துன்பத்தைப் பொறுத்துக் கொள்ளுதல், தான் பிறருக்குத் துன்பம் செய்யாதிருத்தல் என்பதே தவம், இதைத் 'தவம்' என்று அறிந்த எல்லாரும் செய்வது இல்லை; நாவுக்கரசர் இத்தவத்தைச் செய்து காட்டி வாழ்ந்தவர் ஆதலின் '**செய்தவர்**' என்றார். அப்பூதி அடிகளாரின் மனைவியாரைச் சேக்கிழார் '**திருமனையார்**' என்று பாராட்டுகின்றார். அவர்களின் மாண்பினாலேயே அப்பூதி அடிகளாருக்கு இப்பெருமை வாய்த்தது என்பதாம். பேறு-பெறற்கரும் செல்வம்; வாகீசர் உணவு கொள்ளச் சம்மதித்ததே அச்செல்வம். இச்செல்வம் இன்று நம்மை அடைவதற்காக நீண்டநாள் காத்துக்கொண்டு இருந்த முறைதான் என்னே! என்று வியக்கிறார். திருப்பாற்கடல் கடைந்தபோது எழுந்த நஞ்சினை எடுத்து விழுங்கினான் சிவபெருமான்; அது கழுத்தில் தங்கி விட்டது. நஞ்சு தங்கிய இடம் கருமையாக இருந்தமையால் '**மை திகழ் மிடற்றினன்**' என்றார்; மை-கருமை.

### இலக்கணம்

**செய்தவர்**-வினைத்தொகை.
**எய்திய பேறு**-இறந்தகாலப் பெயரெச்சம்.
நம் **பால்**-ஏழாம் வேற்றுமை உருபு.

**என்னே!**-வியப்பிடைச் சொல்.
**திகழ் மிடறு**-வினைத்தொகை.
**உய்தும்**-தன்மைப் பன்மை வினைமுற்று.
**ஆக்கல்**-தொழிற்பெயர்.

## 23. வாழைக் குருத்து அரிந்துவர ஆணையிடல்

### உரை

**தூய**-தூய்மையை உடைய,
**நல்**-தீமை கலவாது நன்மை தருவனவாய,
**கறிகளான**-கறிகளை,
**அறுவகைச் சுவையால்** ஆறு வகைப்பட்ட சுவையால்,
**ஆக்கி** - சுவையுடையவைகளாக ஆகுமாறு செய்து,
**ஆய**-பொருந்திய,
**இன்னமுதும் ஆக்கி**-இனியசோற்றையும் செய்து,
**அமுது செய்தருள** - உண்பதற்காக,
**வாழை மேய பொன் குருத்து**-வாழை மரத்தில் பொருந்திய அழகிய விரியாத இலையொன்றை,
**கொண்டு வா என** - அரிந்து கொண்டு வா என்று,
**தங்கள் சேயர் தம்மில்**-தங்கள் பிள்ளைகளுக்குள்,
**மூத்த திருநாவுக்கரசை**-மூத்தவராதலால் 'மூத்த திருநாவுக்கரசு' என்ற பெயரமைந்த பிள்ளையை,
**விரைந்து விட்டார்**-வேகமாகச் செல்லுமாறு ஆணையிட்டனுப்பினர்.

### தெளிவுரை

தூய்மையும் நன்மையும் அமைந்த கறிகளை அறுவகைச் சுவையால் சுவையுடையவைகளாக ஆக்கி, அவற்றோடு பொருந்திய இனிய சோற்றையும் செய்து முடித்து, திருவமுது செய்தருளுவதற்காக, 'வாழை மரத்தில் பொருந்திய அழகிய விரியாத இலையொன்றை அரிந்து கொண்டு வா'' என்று தங்கள் பிள்ளைகளுள் மூத்தவராகிய மூத்த திருநாவுக்கரசு என்ற பிள்ளையை வேகமாகச் செல்லுமாறு அனுப்பினர்.

### விளக்கவுரை

தூய்மையும் நன்மையும் அமைந்த கறிகளை அறுவகைச் சுவையால் சுவையுடையவைகளாக ஆக்கினர்கள். கடித்துத் தின்பதற்கு உரியவைகளைக் கறி என்பது மரபு. **தூய்மை**-அணில், புழு, பூச்சி முதலியவைகள் கடித்தல் என்ற அசுத்தம் இல்லாமல், உரம் முதலியவை இட்டுச் சத்துடையவையாக இருத்தல். **நன்மை**-தீய வழிகளிற் சம்பாதித்த பொருள்களால் வாங்கப்படுதல்; பிறர் உழைப்பில் வந்தவை முதலிய தீமை கலவாமல், உண்பவர்களுக்கு உயர்ந்த எண்ணங்களை உண்டாக்குவது. அறுவகைச் சுவை-புளிப்பு, இனிப்பு, கார்ப்பு, உவர்ப்பு, துவர்ப்பு, கைப்பு என்பன. சேயவர்-பிள்ளைகள். பொன் குருத்து-அழகிய குருத்து; மஞ்சளாக இருப்பதால் பொன் குருத்து என்றும் கொள்ளலாம். குருத்து விரியாத இலை. பறவைகளின் எச்சம் முதலியன பட்டுத் தூய்மை கெட்டுவிடும் ஆதலால் விரியாத இலையாகப் பயன்படுத்த வேண்டும்.

### இலக்கணம்

**கறிகளான**-வினையாலணையும் பெயர்.
**ஆக்கி**-செய்து என் வாய்பாட்டு வினையெச்சம்.
**அமுதும்**-உயர்வு சிறப்பும்மை.

## 24. பாம்பு தீண்டுதல்

### உரை

**நல்ல தாய் தந்தை ஏவ**-நன்மை அமைந்த தாயும் தந்தையும் ஆணையிட,
**நான் இது செய்யப் பெற்றேன்**-நானும் இவ்வடியவர் உணவுத் தொண்டில் ஒரு வேலையில் ஈடுபடும் பேறு பெற்றேன்,
**என்று**-என்று நினைத்து,
**ஒல்லையில் விரைந்து**-மிகவிரைந்து
**தோட்டத்து உள் புக்கு**-தோட்டத்தின் உள்ளே புகுந்து,
**பெரிய வாழை**-பெரிய வாழை மரத்தின்,
**மல்லல் அம் குருத்தை**-வளமையும் அழகும் கொண்ட குருத்து ஒன்றை.
**ஈரும் பொழுதினில்**-அரியும் சமயத்தில்,
**வாள் அரா ஒன்று**-ஒளியுடைய பாம்பு ஒன்று,
**அல்லல் உற்று**-துன்பமடைந்து,
**அழுங்கி**-தளர்வடைந்து,
**சோர**-சோர்வடையுமாறு,
**அம் கையில்**-மூத்த திருநாவுக்கரசினுடைய அழகிய கையில்,
**தீண்டிற்று**-கடித்தது.

### தெளிவுரை

நல்ல தாயும் தந்தையும் ஆணையிட, நானும் இவ்வடியவர் தொண்டில் ஈடுபடும் பேறு பெற்றேன் என்று நினைத்து, மிகவும் விரைந்து தோட்டத்தினுட் புகுந்து, பெரிய வாழை மரத்தில் வளமையும் அழகும் கொண்ட குருத்து ஒன்றை அரியும் சமயத்தில் ஒளியுடைய பாம்பு ஒன்று, துன்பமடைந்து தளர்வடைந்து சோருமாறு மூத்த திருநாவுக்கரசினுடைய அழகிய கையில் தீண்டியது.

### விளக்கவுரை

தீய காரியங்களைச் செய்யுமாறு ஏவலிடும் தாய் தந்தையர்களைப் போலன்றி இத்தகைய செயல்களில் ஈடுபடுத்தியதனால் **நல்ல தாய் தந்தை** என்றார். இதுவரையிலும் தனக்கு ஒரு வேலைகூடக் கொடுக்காமல் தாங்களே தொண்டுக் காரியங்களைச் செய்தமையால், தனக்கு வாய்ப்பே இல்லாது போய்விடும் என்ற நிலையில் மனம் தளர்ந்த மூத்த திருநாவுக்கரசு, தன் தாய்தந்தைமேல் வருத்தம் கொண்டார். குருத்து அரியும் பணி கிடைத்தவுடன் அவர் மனம் 'நல்ல தாய் தந்தை' என எண்ணியது எனவும் கொள்ளலாம். மூத்த திருநாவுக்கரசே இந்நிலையெனில் மற்றைக் குழந்தைகளுக்கோ வேலைக்காரர்களுக்கோ என்ன வேலை கிடைத்திருக்கும். அப்பூதி அடிகளாரும் மனைவியாருமே திருவமுது சமைத்தலை மேற்கொண்டமை தெரியலாம். ஒல்லையில் விரைந்து என்பனவற்றில் இரண்டும் விரைவுப் பொருளென ஆகையால் 'மிக விரைந்து' எனக் கொள்க. மல்லல்-வளமை. ஈர்தல்-அரிதல். கண்களிலும் உடலிலும் ஒளி வீசுவதால் வாள் அரா என்றார். வாள்-ஒளி. அகம் கை-அழகிய கை, அங்கை என்றாயிற்று. திருநாவுக்கரசர் உணவு கொள்வதற்கு உரிய இலையை

அமைத்துக் கொடுத்த பெருமை உடைய கையாதலின் 'அங்கை' என்றார். பாம்பு கடித்தலைத் 'தீண்டுதல்' என்பது மரபு.

### இலக்கணம்

**நல்ல**-குறிப்புப் பெயரெச்சம்.

**தாய்தந்தை**-உம்மைத் தொகை.

**புக்கு**-செய்து என் வாய்பாட்டு வினையெச்சம். 'புகு' என்ற பகுதி ஒற்று இரட்டித்து இறந்த காலம் காட்டியது.

**தீண்டிற்று**-படர்க்கை ஒருமை இறந்தகாலத் தெரிநிலை வினைமுற்று.

**அன்று, ஏ**-அசைநிலைகள்.

## 25. பிள்ளை குருத்துடன் ஓடி வருதல்

### உரை

**கையினில்**-குருத்தை அரிந்த கையினில்,
**சுவர்ந்து சுற்றி**-பற்றி வளைத்து,
**கண்**-கண்ணினால்,
**எரி காந்துகின்ற**-நெருப்பைக் கக்குகின்ற,
**பைஅரவு**-நச்சுப்பையினை உடைய பாம்பினை,
**உதறி வீழ்த்து**-உதறுவதால் விழச் செய்து,
**பதைப்புடன்** - நெஞ்சத்தில் கொண்ட பதைபதைப்போடு,
**பாந்தள்**-பாம்பு,
**பற்றும்**-கடித்ததால் உண்டாகிய.
**வெய்ய**-கொடிய நஞ்சு,
**வேகத்தால்**-விரைந்தேறும் சக்தியால்,
**வீழா முன்னம்**-கீழே விழுவதற்கு முன்னர்,
**வேகத்தால் எய்தி** - விரைவை மேற்கொண்டு,
**சென்று**-போய்,
**கொய்த இக் குருத்தை**-அரிந்த இந்த வாழைக் குருத்தை,
**கொடுப்பன்**-கொடுப்பேன்,
**என்று ஓடி வந்தான்** - என்று நினைத்து வீட்டிற்கு ஓடி வந்தான்.

### தெளிவுரை

குருத்தை அரிந்த கைகளைப் பற்றி வளைத்துக் கொண்டு, கண்ணினால் நெருப்பைக் கக்குகின்ற நச்சுப்பை உடைய பாம்பை உதறிக் கீழே விழச் செய்து, நெஞ்சத்தில் கொண்ட பதைபதைப்போடு, பாம்பு கடித்ததால் உண்டாகிய கொடிய நஞ்சு விரைந்தேறும் சக்தியால் கீழே விழுவதற்கு முன்னர், விரைவை மேற்கொண்டு சென்று அரிந்த இந்த வாழைக்குருத்தைக் கொடுப்பேன் என்று நினைத்து வீட்டிற்கு ஓடி வந்தான்.

### விளக்கவுரை

பாம்பானது அரிந்த கையைப் பற்றிச் சுற்றிக்கொண்டு படமெடுத்து மூத்த திருநாவுக்கரசைப் பார்க்கிறது. கண்கள் நெருப்பென ஒளிவிடுகின்றன. **காந்துதல்**-சென்று பற்றி வெம்மையால் தாக்குதல். பாம்பின் கண்கள் நெருப்பைக் கக்குவனபோல் இருக்கின்றன. **பை அரவு**-நச்சுப்பையை உடைய பாம்பு. பை-படம் எனக் கொண்டு, படத்தையுடைய பாம்பு என்றும் கூறலாம். நஞ்சு இரத்தத்திற் கலந்து விரைந்து தலைக்கு ஏறும் தன்மையை **வெய்ய வேகத்தால்** என்றார். **வேகத்தால் வீழா முன்னம் வேகத்தால் எய்தி** என்பது ஓசை நயம்.

### இலக்கணம்

**கவர்ந்து, சுற்றி, உதறி, எய்தி, சென்று, ஓடி** } செய்து என் வாய்பாட்டு வினையெச்சம்.

**பை அரவு**-இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்க தொகை

**வீழ்த்து**-பிறவினை.

**வேகத்தால்**-மூன்றன் உருபு, கருவிப் பொருள்.

## 26. திருந்திய கருத்தினொரு இல்லம் அடைதல்

### உரை

**பொருந்திய**-வந்து பொருந்திய, **விட வேகத்தின்**-நஞ்சினுடைய வேகத்தைக் காட்டிலும், **போதுவான்**-விரைந்து வருகின்ற மூத்த திருநாவுக்கரசினுடைய, **வேகம் முந்த**-வேகமானது முற்படவே, **வருந்தியே அணையும் போழ்து**-வருத்தம் மிகக் கொண்டு வீட்டை அடையும் சமயத்தில், **அருந்தவர்**-அரிய தவம் பல செய்த திருநாவுக்கரசர், **அமுது செய்ய**-உணவு கொள்வதற்கு, **தாழ்க்க**-தாமதம் ஆகுமாதலால், **மாசுணம்**-பாம்பு, **கவர்ந்தது**-தீண்டுவதன் மூலம் என் உயிரைக் கவர்ந்ததை, **யார்க்கும் அறையேன்**-யாரிடமும் சொல்ல மாட்டேன், **என்று**-என்றிப்படிப்பட்ட, **திருந்திய** - இளமைக் காலந் தொட்டு சிவனடியார் பக்தியிலும் தொண்டிலும் ஈடுபட்டு வரும் அனுபவ மிகுதியால் தானாகவே ஒழுங்குபட்டு வருகின்ற, **கருத்தினோடும்**-சிந்தனையின் முடிவுகளோடும், **செழுமனை சென்று புக்கான்**-செழுமைகள் பலவும் நிறைந்த வீட்டினுள் சென்று புகுந்தான்.

### தெளிவுரை

புதியதாக வந்து பொருந்திய நஞ்சின் வேகத்தைக் காட்டிலும், விரைந்து வருகின்ற மூத்த திருநாவுக்கரசினுடைய இயற்கை நடைவேகம் முற்படவே, வருத்தம் மிகக் கொண்டு வீட்டை அடையும் சமயத்தில், ''அரிய தவம் பல செய்த திருநாவுக்கரசர் உணவு கொள்வதற்கு இதைச் சொன்னால் காலதாமதம் ஆகுமாதலால், பாம்பு என் உயிர் கவர்ந்த நிகழ்ச்சியை யாரிடமும் சொல்லமாட்டேன்'' என்று இப்படிப்பட்ட இயல்பாகவே ஒழுங்குபட்டு வருகின்ற கருத்தினோடும் செழுமைகள் பலவும் நிறைந்த வீட்டினுள் சென்று புகுந்தான்.

### விளக்கவுரை

நஞ்சின் வேகம்; மனத்தின் வேகம். நஞ்சின் வேகம் உடல் வேகத்தைக் குறைத்துச் சோர்வை அதிகப்படுத்துகிறது. மனத்தின் வேகம் புத்துணர்ச்சியைக் கொடுத்து உடலின் செயலைத் துரிதப்படுத்துகிறது. இப் போட்டியில் முந்தியது அவன் நடைவேகமே என்பதாம். மூத்த திருநாவுக்கரசு பாம்பு கடித்ததைச் சொன்னால் அடியவர் உணவு உண்ணக் காலதாமதம் ஆகும் எனக் கருதி யாரிடமும் கூறலாகாது என உறுதி பூணுகிறான். இதனைத் **திருந்திய கருத்து** என்றார் சேக்கிழார். இத்தகைய கருத்து இளமைக் காலந்தொட்டு

அடியவர் பெருமையில் ஈடுபட்டு, அடியவர் தொண்டில் பழகி வந்த ஒருவருக்குத்தான் இயல்பாக அமையும் அல்லாமல் காரண காரிய ஆராய்ச்சின் மூலமாக நாமாகத் திருத்தம் பெற அமைத்துக்கொள்ள முடியாது என்பதாம். அப்பூதி அடிகளார் குடும்பம் அடியவர் தொண்டில் எவ்வளவு பண்பட்டிருககிறது என்பதை அறியலாம். ''அமுது செய்யத் தாழ்க்க—அமுது செய்வதற்கு உரிய காலம் தாம தப்படுவதற்கு இது காரணம் ஆகும் ஆதலால்'' என்று இணைத்து முடிக்க. **செழுமனை**-செல்வங்கள் பலவும் இருத்தலே யன்றிப் பண் பட்ட உள்ளங்களை உருவாக்கிய வளமையுடைய மனை என்பது கருத்து.

### இலக்கணம்

விட வேகத்**தின்**-'இன்' ஐந்தனுருபு உறழ்ச்சிப் பொருள்.
கவர்ந்தது+யார்க்கும்-கவர்ந்ததியார்க்கும்,குற்றியலிகரம்.
**தாழ்க்க**-செய என் வாய்பாட்டு வினையெச்சம் காரியப் பொருளில் வந்தது.
கருத்தி**னோடும்**-'ஒடு' மூன்றன் உருபு உடனிகழ்ச்சிப் பொருள்.
**அறையேன்**-தன்மை ஒருமை எதிர்மறை வினைமுற்று.

## 27. மூத்த திருநாவுக்கரசு மயங்கி வீழ்தல்

### உரை

**எரிவிடம்**-இரத்தத்தை வெம் மையாக்கிக் கொண்டு செய் வதால் நெருப்பை ஒத்த நஞ்சு,
**முறையே ஏறி**-முறைப்படி மேலே றிச் சென்று,
**தலைக் கொண்ட**-இறுதியாகச் சென்று பற்றிக்கொண்ட,
**ஏழாம் வேகம்**-ஏழாவது நிலை,
**தெரிவுற**-வெளிப்பட்டுத் தெரிய,
**எயிறும்**-பல்லும்,
**கண்ணும் மேனியும் கருகி**-கண்களும் உடலும் கருகி,
**தீந்து**-தீய்ந்த நிலை அடைய,
**விரி உரை குழறி**-கருத்தை விரித் துச் சொல்வதற்கான பேச்சுத் தடுமாற,
**ஆவி விட**-உயிரானது உடலை விட,
**கொண்டு மயங்கி வீழ்வான்**-இவைகளை அடிப்படையாகக் கொண்டு மயங்கி விழுபவன்,
**பரிகலக் குருத்தை**-உணவு உண்ணுவதற்குரிய பாத்திரமாக அமைந்த குருத்தை,
**தாயார் பால் வைத்து**-தாயின் பக் கத்தே வைத்து,
**படிமேல் வீழ்ந்தான்**-பூமியின் மேல் வீழ்ந்தான்.

### தெளிவுரை

நெருப்பை ஒத்த நஞ்சு முறையாக மேலேறிச் சென்று, இறுதி யாகப் பற்றிக்கொண்ட ஏழாம் நிலையானது, வெளியில் அனைவருக் கும் தெரியும் வண்ணம், பல்லும் கண்ணும் உடம்பும் கருகித் தீய்ந்த நிலையை அடைய, பேச்சுத்தடுமாற, உயிர் உடலை விட, இவைகளால் மயங்கி விழுபவன், உண்கலமாக அமைந்த வாழைக் குருத்தை, தாயின் பக்கத்தே வைத்துப் பூமியின்மேல் விழுந்தான்.

### விளக்கவுரை

நஞ்சு ஏறிச் செல்லும் முறையைச் சேக்கிழார் விளக்குகின்றார். உடம்பு, தோல், இரத்தம், இறைச்சி, மேதை, எலும்பு, மச்சை, சுவேதநீர் எனப்பெறும் ஏழுவகையான தாதுக்களால் கட்டப் பெற்றது. இவ் ஏழுவகையான தாதுக்களையும் ஒவ்வொன்றாகத் தாக்கிச் செல்லும் தன்மையுடையது நஞ்சு. ஏழாவது தாதுவைத் தாக்கும் வேகத்தை **ஏழாம் வேகம்** என்றார்; இதுவே முடிந்தநிலை. நஞ்சு ஏழு வகைத் தாதுக்களையும் தாக்கிவிட்டது என்பதை வெளிப்படையாகத் தெரிந்து கொள்வதற்கு உரிய அறிகுறியே பல், கண், உடம்பு முதலியன கருகிக் காணப்பெறுதல். **விரி உரை**-கருத்தை விரிப்பதற்குக் காரணமான சொல். **கொண்டு மயங்கி வீழ்வான்** என்ற வாக்கில் 'கொண்டு' என்பதன் பொருள், உடல் தன்மையையும் உயிர்த் தன்மையையும் அடிப்படையாகக் கொண்டு மயங்கிவிட வேண்டியவன், உள்ளத்தின் உறுதி துணை செய்வதால் அதைத் துணையாகக் கொண்டு மேலும் சிறிது தூரம் சென்று, தாயைக் காண்கிறான். தாயின் பக்கத்தில் அடியவர் உண்ணுவதற்கு உபயோகப்படும் குருத்தைக் கிழியாமல், தூய்மை இழவாமல் பயபக்தியோடு தாயின் பக்கத்தில் **வைத்துக்** கடமையை முடித்தேன் என்ற மன நிறைவு உண்டாக, சற்றுபபின் தள்ளிப் பூமியின்மேல் விழுந்தான்,

### இலக்கணம்

எரிவிடம்-உவமைத்தொகை,
எயிறும், கண்ணும், மேனியும்-எண்ணும்மை.
**தீந்து, குழறி**-செய்து என்னும் வாய்பாட்டு வினையெச்சங்களைச 'செய்' என் எச்சமாகத்திரிக்க.
**வீழ்வான்**-வினையாலணையும் பெயர்.
தாயார்**பால்**-ஏழாம் வேற்றுமை உருபின் பொருள்பட வந்த சொல்.

## 28. அப்பூதி அடிகளாரின் அரிய மனநிலை

### உரை

**தளர்ந்து வீழ் மகனை**-சோர்ந்து விழுகின்ற பிள்ளையை,
**தயாரும் தந்தையாரும் கண்டு**-தாயும் தந்தையும் பார்த்து,
**உளம் பதைத்து**-மனம் பதறி,
**உற்று நோக்கி**-யாது காரணத்தால் இது நிகழ்ந்தது என அறிதற்காக உற்றுப் பார்த்து,
**உதிரம் சோர் வடிவும்**-இரத்தம் வழிந்து வரும் உடம்பும்,
**மேனி விளங்கிய குறியும் கண்டு**-உடம்பில் விளக்கமாகத் தெரியும் அடையாளங்களையும் பார்த்து,
**விடத்தினால் வீந்தான் என்று**-நஞ்சு காரணமாக இறந்தான் என்று அறிந்து,
**துளங்குதல் இன்றி**-மனத்தில் அசைதல் இல்லாமல்,
**தொண்டர் அமுது செய்வதற்கு**-அடியவராம் வாகீசர் அமுது செய்வதற்கு,
**சூழ்வார்**-இடையூறு நேராமல் இருக்க என் செய்யலாம் என ஆராய்வாராயினர்.

தாயும் தந்தையும் சோர்ந்து விழுகின்ற மகனைக் கண்டு, மனம் பதறி, இவனுக்கு யாது நிகழ்ந்தது என அறிவதற்காக அவனை உற்றுப் பார்த்து, உதிரம் சிந்தும் உடம்பையும், உடம்பில் விளங்கும் வேறு அடையாளங்களையும் பார்த்து, நஞ்சு காரணமாக இறந்தான் என்று அறிந்து, அதனால் ஏதும் மன வருத்தம் இல்லாமல், வாகீசர் அமுது செய்வதற்கு இடையூறு நேராமலிருக்க என் செய்யலாம் என்று சிந்திப்பாராயினர்.

**விளக்கவுரை**

தளர்ந்து விழும் மகனைப் பார்த்தவுடன் உளம் பதைத்த தாயும் தந்தையும் இறந்தான் என்று முடிவு செய்த பிறகும் அடியவருக்கு உணவூட்டுவதே நோக்கமாக இருந்ததால், மகன் இறந்தமைக்காக மனம் துளங்குதல் அவர்களிடம் இல்லை, என்று சேக்கிழார் கூறுகிறார் அடியவரை உணவூட்டுவது இடையூறு இல்லாமலும், காலம் தாழ்க்காமலும் நடைபெற வேண்டும் என்பதே மகன், தாய், தந்தை ஆகிய மூவருக்கும் பொதுக்கொள்கையாக இருந்தமையை உணரலாம். துளங்குதல்-அசைவு, மன வருத்தம். **வீந்தான்** 'பகுதி;' 'வீ', வீதல்-அழிதல், 'வீய்தல்' என யகரவொற்று இணைத்தும் கூறுப.

**இலக்கணம்**

**வீழ் மகன்**, சோர் வடிவு } வினைத்தொகை.

**வீந்தான்**-உயர்திணை ஆண்பாற் படர்க்கை இறந்த காலத்தெரிநிலை வினை முற்று.

**இன்றி**-இகர ஈற்று வினையெச்சம்.

## 29. மறைந்த மகனைப் பாயினுள் மறைத்தல்

**உரை**

**பெறல் அரும்**-மீளவும் பெறுதற்கு இயலாத,
**புதல்வன் தன்னை**-மகனை,
**பாயினுள் பெய்து மூடி**-பாயினுள் வைத்து மூடி,
**மனை புற முன்றில் பாங்கு ஓர் புடையினில்**-வீட்டிற்கு வெளியே யுள்ள முன்னிடத்தில் அமைந்த இடத்தின் ஒரு பக்கத்தில்,
**மறைத்து வைத்து**-மறைத்து வைததுவிட்டு,
**இது அற தெரியாவண்ணம்**-இச் செயல் சிறிதளவேனும் வெளியில் தெரியாதவாறு,
**அமுது செய்விப்போம்**-வாகீசரை அமுது செய்து வைப்போம்,
**என்று**-என முடிவு செய்து கொண்டு.
**விறலுடைத் தொண்டனார் பால்**-வீரம் உடைய தொண்டராகிய வாகீசரிடத்து,
**விருப்பொடு விரைந்து வந்தார்**-மகிழ்ச்சியோடு வேகமாக வந்தார்கள்.

**தெளிவுரை**

மீளவும் பெறுதற்கு இயலாத மூத்த திருநாவுக்கரசைப் பாயினுள் வைத்து மூடி, அதை வீட்டின் தோட்டப்புறத்து முன்னிடத்தில் அமைந்த இடத்தின் ஒருபக்கத்தே மறைத்து வைத்து, இச்செயல் சிறிதளவேனும் வெளியில் தெரியாவாறு வாகீசரை அமுது

செய்விப்போம் என முடிவு செய்து கொண்டு, வீரம் உடைய தொண்டராகிய வாகீசரிடத்து மகிழ்வுடன் வேகமாக வந்தார்கள்.

### விளக்கவுரை

**பெறல் அரும் புதல்வன்**-யாவருக்கும் கிடைத்தற்கரிய மகன். இனி, அப்பூதி அடிகளாருக்கே இன்னொரு மகன் பிறந்தாலும் இவனைப் போன்ற மன நிலை அமைந்த மகனைக் கிடைப்பது இயலாது எனக் கருதியும் பெறல் அரும் புதல்வன் என்றார். அப்பூதி அடிகளாரின் மனைவியார் வயிற்றில் கருவிலிருந்த இவனுக்கு இதுவே கடைசிப் பிறப்பு. இவன், பிறப்பை அறுத்து முத்திக்குச் சென்றுவிடுவான் ஆதலின் இனி ஒரு வயிற்றில் சென்று தங்கிப் பிறக்க மாட்டான். எனவே இனி யாராலும் பெறுதற்கு அரிய புதல்வன். மூத்த புதல்வனைப் பிறந்த ஞான்று பஞ்சு மெத்தையில் அழகுறப் படுக்கச் செய்து, பக்கத்திலிருந்து வீசி, இனிய பாட்டுக்கள் பாடிக் கண் வளரச் செய்த அதே கைகளால் இன்று பாயினுள் அலங்கோலமாக அள்ளிப் போட்டு மூடிவைத்தார் என்ற வருத்தம் தோன்றச் சேக்கிழார் **''பெய்து மூடி''** என்றார். **விறல்**-வீரம். செய்த தொண்டுக்குக் கூலி என்ன? என்ற கேள்வி எழும்போது மோட்சமே கொடுத்தாலும் வேண்டாம் எனக் கூறும் வீரம்.

### இலக்கணம்

பாயினுள்-ஏழாம் வேற்றுமை உருபின் பொருள்பட வந்த சொல்.

**புறமனை, முன்றில்**-இலக்கணப் போலிகள்.

**செய்விப்போம்**-தன்மைப் பன்மை எதிர்கால வினைமுற்று, பிறவினைப் பொருளில் வந்தது.

## 30. வாகீசரை அமுது செய்ய அழைத்தல்

### உரை

**கடிது வந்து**-அப்பூதி அடிகளாரும் மனைவியாரும் வேகமாக வந்து,

**அமுது செய்ய** - அடியவர் திருவமுது கொள்வதற்கு,

**காலம் தாழ்க்கின்றது என்றே**-காலதாமதம் ஆகிறது என்ற ஒரே கருத்துடனேயே,

**அடிசிலும் கறியும் எல்லாம்**-சோறும் கறியும் ஆய உணவுப் பொருள்கள் எல்லாவற்றையும்,

**அழகு உற அணைய வைத்து**-அழகு படவும் ஒன்றோடு ஒன்று அணைந்திருக்குமாறும் பொருந்த வைத்து,

**வடி இல் சீர் தொண்டனார் முன்**-உவமை சொல்ல முடியாத சிறப்பினை உடைய தொண்டராகிய திருநாவுக்கரசருக்கு முன் வந்து நின்று,

**பணிந்து எழுந்து**-திருவடிகளில் வீழ்ந்து வணங்கி, எழுந்து,

**அமுது செய்து**-தாங்கள் எழுந்தருளிவந்து திருவமுது செய்து,

**எம் குடி முழுதும்**-எங்களுடைய குடிமரபு முழுவதையும்,

**உய்யக் கொள்வீர்**-நற்கதி அடையுமாறு அருள் வழங்கி எங்களை ஆளாகக் கொள்வீராக,

**என்று அவர் கூற**-என்று அப்பூதி அடிகள் கூற,

**கேட்டு**-வாகீசர் கேட்டு,

### தெளிவுரை

இறந்தவனை மறைத்தபின் அப்பூதி அடிகளாரும் மனைவியாரும் விரைந்து வந்து, அடியவர் அமுது செய்வதற்குக் காலதாமதம் ஆகிறது என்ற கருத்துடனேயே, சோறும் கறியும் ஆகிய உணவுப் பொருள்கள் எல்லாவற்றையும் அழகு பெறவும் இணைந்திருக்கவும் ஆக எடுத்து வைத்து, உவமை சொல்ல முடியாத சிறப்பினை உடைய தொண்டராகிய திருநாவுக்கரசருக்கு முன் வந்து நின்று, திருவடிகளில் விழுந்து வணங்கி எழுந்து, தாங்கள் வந்து திருவமுது செய்து எங்கள் குடிமுழுவதையும் நற்கதி அடையுமாறு செய்து, எங்களை ஆளாகக் கொள்வீராக என்று அப்பூதி அடிகளார் கூற, நாவரசரும் அது கேட்டு,

### விளக்கவுரை

செய்தி அடுத்தபாட்டில் சென்று முடிவதால் இது குளகம். அடியவர் அமுது செய்யக் காலந் தாழ்க்கிறதே என்ற ஒரு நினைவைத் தவிர மகன் இறந்தமை முதலான எந்த நினைவும் அவர்களிருவரிடத்திலும் காணவில்லை என்பதைக் ''காலந் தாழ்க்கின்றது என்றே'' என்பதனுள் ஏகாரத்தாற் பெறவைத்தார்.'அடிசில்' என்பது உண்ணப்பெறும் உணவு எல்லாவற்றுக்கும் பொதுப் பெயராயினும் இங்கே சோற்றை மட்டும் குறித்தது. அழகுற வைத்தல்-உணவுப் பொருளைக் கலைநலம் தோன்ற வைத்தல்; அணைய வைத்தல்-இதன் பக்கத்தில் இது இருக்க வேண்டும் என்ற முறைப்படி வைத்தல். படி-ஒப்புமை. படி என்பதற்கு உலகம் எனக் கொண்டு உலகில் இவரைத் தவிர வேறுயாரும் இவர் போல் இல்லை என்று கூறும் சிறப்புடைய தொண்டர் வாகீசர் என்றும் கூறலாம் **எம் குடி**-அப்பூதி அடிகளார் குடியும், அவர் மனைவியார் குடியும். இரு குடியிலும் இதுவரை பிறந்தோர் இனிப் பிறப்போர் ஆகியோரை.

### இலக்கணம்

என்றே-ஏகாரம், பிரிநிலை.
**உய்யக் கொள்வீர்**-முன்னிலைப் பன்மை வினைமுற்று, பன்மை உயர்வு கருத.

## 31. வாகீசர் திருநீறு வழங்குதல்

### உரை

**அருந்தவர்**-அருமையான தவம் உடையவராகிய திருநாவுக்கரசர்,
**எழுந்து செல்ல**-எழுந்து திருவமுது கொள்ளச் செல்ல,
**அடியிணை விளக்கி**-அவருடைய இணைந்த இரு திருவடிகளை நன்னீராற் கழுவி,
**வேறு ஓர் திருந்தும் ஆசனத்தில் ஏற்றி**-வேறாக இருந்த ஒரு அழகியதாகப் பொருந்திய பீடத்தில் ஏறி அமரச் செய்து,
**பரிகலம் திருத்தும் முன்னர்**-உண்கலமாகிய இலையைத் திருத்தமுற அமைப்பதற்கு முன்னால்,
**இருந்து வெண்ணீறு சாத்தி**-நாவுக்கரசர் மன ஒருமைப்பாட்டோடு இருந்துதிருவெண்ணீற்றை அழகுபெற உடலிற் பூசி,
**இயல்பு உடை இருவருக்கும்**-இல்லறத்தார் என நின்று தம்மை உபசரிக்கும் இயல்பு அமைந்த

அப்பூதி அடிகளாருக்கும் மனைவியாருக்கும்,
**பொருந்திய நீறு**-பொருந்துவதாகிய - திருவருள் அமைந்த விபூதியை,
**நல்கி**-வழங்கி,
**புதல்வருக்கும் அளிக்கும் போழ்தில்**-முறைமைப்படிப் பிள்ளைகளுக்கும் கொடுக்க முற்படும் போது,

## தெளிவுரை

அருமைத் தவம் உடையவராகிய வாகீசர் எழுந்து திருவமுது கொள்ளச் செல்லவே அவருடைய அடியிணைகளைத் தூய நன்னீரால் கழுவிப் பூசித்து, வேருக இருந்த ஒரு அழகிய பீடத்தில் அவரை ஏறி அமரச் செய்து, உண்கலமாகிய இலையைத திருத்தம் உற அமைப்பதற்கு முன்னல், வாகீசர் அமைதியுடன் இருந்து, திருவெண்ணீறணிந்து, உபசரிக்கும் இயல்பு அமைந்த அப்பூதி அடிகளாருக்கும் மனைவியாருக்கும் பொருந்துவதாகிய விபூதியை வழங்கி, முறைப்படி பிள்ளைகளுக்கும் கொடுக்க முற்படும் போது.

## விளக்கவுரை

இச்செய்யுள் **குளகம்.** அடியவர் திருவமுது கொள்ளச் செல்லும் முன் அவருடைய திருவடிகளை நன்னீரால் கழுவிப் பூசை செய்தல் உபசரிப்பவர்கள் கடமை; அவ்வாறே வாகீசருக்கும் செய்யப் பெற்றது. பின்னர் வேறோராசனத்து அமர்ந்து வாகீசர் திருவெண்ணீறு அணிந்தார். இயல்புடை இருவர்-இல்லற நெறியில் முறைமைபெற நின்றவர்; அப்பூதி அடிகளாரும் அவர் மனைவியாரும். **பொருந்திய நீறு**-வாகீசர் தாம் அணியும் போது சிவனடியே சிந்தித்து மந்திரம் கூறிப் பூசுதல் அமைந்தது, ஆனல் அவர் இவர்களுக்குக் கொடுக்கும்போது இறையடி வணங்கி, அருள்பெருக வேண்டும் என ஆசிகூறி அளிப்பதாக அமைந்தது ஆதலின் பொருந்திய நீறு-

## இலக்கணம்

**அருந்தவர்**-பண்புத் தொகை.
அடியிணை-முன் பின்னகத் தொக்க பண்புத்தொகை.

உரை

...பும் காட்டு-மூத்த...ளையையும் இங்கே...லுக, ...களுக் கெல்லாம்
சாத்த என்றலும்-...பொருந்திய விபூதி ...ளிப்பதாக'' என்று ...தலும்,
...ம யாதும் ஒன்று ...வனுக்கு நிகழ்ந்த
**ஆதி நால் மறை நூல்**-முதல் நூல் எனப்பெறும் நான்காகிய வேத நூலில்,
**வாய்மை**-வாய்ந்த ஒழுக்கத் தன்மைகளைக் கடைபிடித்து ஒழுகுகின்ற,
**அப்பூதியாரை நோக்கி**-அப்பூதி அடிகளாரைப் பார்த்து,
**காதலர் இவர்க்கு**-புதல்வர்களாக இங்கே நின்று கொண்டிருப்பவர்களுக்கு,
**மூத்த சேயை**... வராகிய பின்... வரச் சொல்...
**முன்னே**-இவர்... முதலாக,
**மே தகு பூதி** "மேன்மை ... அவருக்கு அ... வாகீசர் கூறு...
**விளைந்த தன்ன...** உரையார்-அ...

நிகழ்ச்சிகளுள் எந்த ஒன்றையும் சொல்லாதவராகி,
**இப்போது இங்கு அவன் உதவான் என்றார்**-இச்சமயம் இவ்விடத்தில் அவன் தங்கள் கருத்தை முடிக்க உதவான்' என்று கூறினார்.

### தெளிவுரை

முதல்நூல் எனப்பெறும் நான்கு வேதங்களில் வாய்ந்த நடைமுறைத் தன்மைகளில் சிறிதும் வழுவாது நடக்கின்ற அப்பூதி அடிகளாரைப் பார்த்து, வாகீசர் இங்கே நிற்கின்ற இப்பிள்ளைகளுக்கெல்லாம் மூத்தவனாகிய ஒரு பிள்ளையை இங்கே வரச் சொல்லுக, மேன்மை பொருந்திய விபூதியை அவனுக்கே முதலாவதாக அளிப்பதற்காக என்று சொல்ல, அவனுக்கு நிகழ்ந்த நிகழ்ச்சிகளுள் எந்த ஒன்றையும் சொல்லாதவராகி, இச்சமயத்தில் இவ்விடத்தில் அவன் வந்து தங்கள் கருத்துக்கு உதவான், என்ற அளவில் மட்டுமே கூறினார் அப்பூதி அடிகள்.

### விளக்கவுரை

இறைவனால் செய்யப் பெற்ற முதல் நூல் வேதம். அது இருக்கு, யசுர், சாமம், அதர்வணம் என நான்கு வகைப்படும். இதனை **ஆதி நான்மறை நூல்** என்றார். வாய்மை-வாய்த்த தன்மை. வேதங்களுள் விதிக்கப் பெற்ற ஒழுக்கத்தன்மைகளில் தவறாது நிற்கின்றவர் அப்பூதி அடிகள் என்பது **வாய்மை** என்னும் சொல்லின் பொருள். காதலர்-புதல்வர்கள் மூத்தசேயை வரச்சொல் என்று கூறாமல் 'காட்டு' என்றார்; அப்பூதி அடிகளார் ஒருவேளை அவருரைப்படி நடக்க முற்பட்டாலும் பிணமாக அவனைக் கொண்டு வந்து இதோ என்று காட்ட முடியுமே அல்லாமல் வரச் செய்ய முடியாது ஆகையினால். பூதி-விபூதி. உதவுதல்-அடியவர் நினைத்த கருத்தை முடித்து வைக்கும் ஏவலனாக நிற்றல். யாதும் ஒன்று என்பதை யாது ஒன்றும் என உம்மையைப் பிரித்துக் காட்டுக.

### இலக்கணம்

**நான்மறை**-பண்புத்தொகை.
**காட்டு**-முன்னிலை ஏவல்.
**ஒன்றும்**-முற்றும்மை.

## 33. வாகீசர் மெய் விரித்துஉரை', எனல்

### உரை

**அவ்வுரை கேட்ட போதே**-அப்பூதி அடிகளார் கூறிய வார்த்தையைக் கேட்டவுடனேயே,
**அன்பர்**-அப்பூதி அடிகளாருடைய,
**செவ்விய திருவுள்ளத்தில்**-அறம் நிறைந்த நன்மை பொழியும் மனத்தில்,
**ஓர் தடுமாற்றம்**-ஒரு கலக்கமும் இருக்கிறது என்பதை,
**அங்கணர் அருளால்**-சிவபெருமான் திருவருளினால்,
**சேர நோக்கி**-இணைத்துக் கண்டு,
**என் உள்ளம் இ உரை பொறாது**-என் மனம் தாங்கள் கூறும் இந்தச் சொற்களை ஏற்றுக் கொள்ளாது,
**என் செய்தான்**-அவன் இங்கே உதவாமற் போவதற்கு ஏற்ப என்ன காரியம் செய்து விட்

டான்?,
**இதற்கு ஒன்று உண்டு**-அவன் உதவாமைக்கு ஒரு காரணம் இருக்கவே வேண்டும்,
**மெய் விரித்து உரையும்**-மெய்யாக நடைபெற்றதை விளக்கிச் சொல்லும்,
**என்ன**-என்று வாகீசர் கூற,
**விதிர்ப்பு உற்று**-உடல் நடுக்குதலுற்று,
**அஞ்சி**-பயந்து,
**விளம்புவார்** - சொல்லுவர் ஆயினர்.

### தெளிவுரை

அப்பூதி அடிகளார் கூறிய வார்த்தையைக் கேட்டவுடன், அப்பூதி அடிகளாருடைய அருள் நிறைந்த நெஞ்சத்தில் ஒரு கலக்கமும் இருக்கிறது என்பதைச் சிவபெருமான் திருவருளால் இணைத்துப் பார்த்து, ''என்மனம் தாங்கள் கூறும் இச் சொற்களை ஏற்றுக்கொள்ளாது; அவன் இங்கே உதவாமற் போவதற்கு ஏற்ப என் காரியம் செய்து விட்டான்? அவன் இப்போது இங்கு உதவாமைக்கு ஒரு காரணம் இருக்கவே வேண்டும். மெய்யாக நடைபெற்றதை விளக்கிச் சொல்லும்'' என்று வாகீசர் கூற, உடல் நடுக்குதல் உற்று, பயந்து சொல்லுவார் ஆயினர்.

### விளக்கவுரை

அப்பூதி அடிகளார் உள்ளத்தில் ஒரு கலக்கம் இருக்கிறது என்பதைப் பெருமான் திருவருளால் உணர்ந்தார் வாகீசர். சேர நோக்குதல்-இணைத்துப் பார்த்தல். சிவனடியவர்களுக்கு, அவர்கள் சொல்லுக்கு எதிர் உரையாது தொண்டு செய்யும் தன்மையையும், அதே சமயத்தில் மூத்த திருநாவுக்கரசைக் கூப்பிடு என்ற போது 'அவன் இப்போது உதவான்' என்று அடியவர் கருத்துக்கு மாருகப் பேசும் தன்மையையும் இணைத்துக் காண்கிறார் வாகீசர். **விதிர்ப்புறுதல்**-உடல் நடுங்குதல். 'அங்கணர்' என்பதன் விளக்கவுரை 15-ஆம் செய்யுளிற் காண்க

### இலக்கணம்

**விதிர்ப்புற்று**-செய்து என் வாய்பாட்டு வினையெச்சம். விதிர்ப்புறுபகுதி.
**மெய்**-பண்பாகுபெயர்.
**உரையும்**-முன்னிலைப் பன்மை வினைமுற்று
**உண்டால்**-ஆல், அசைநிலை.

## 34. அறத்தின் கொடுமை

### உரை

**பெரியவர்**-திருநாவுக்கரசர்,
**அமுது செய்யும் பேறு இது**-திருவமுது செய்தல் என்று சொல்லப்பெறும் பெறற்கரிய செல்வமாகிய இது,
**பிழைக்க**-தவறுவதற்காக,
**என்னே வருவது**-என்ன இப்படி ஒன்று வருவதாயிற்று,
**என்று**-என்று மனத்துள் எண்ணி,
**உரையாரேனும்** -நடந்தவைகளைச் சொல்லாமல் இருந்தார் ஆயினும்,
**மாதவர் வினவ**-பெருந்தவம் உடையவராகிய வாகீசர்
**வாய்மை**-நடந்த உண்மையை,
**தெரிவு உற**-விளக்கமாக,
**உரைக்க வேண்டும்**-சொல்ல வேண்டும் என்ற,

**சீலத்தால்**-அறவொழுக்கத்தால்,
**சிந்தை நொந்து**-மனம் வருந்தி,
**பரிவொடு வணங்கி**-மிகுந்த அன்புடன் வாகீசப் பெருந்தகையை வணங்கி,
**மைந்தர்க்கு**-மூத்த திருநாவுக்கரசுக்கு,
**உற்றது**-பொருந்தியதை,
**பகர்ந்தார்**-கூறினர்.

### தெளிவுரை

திருநாவுக்கரசர் திருவமுது செய்தல் என்ற பேறுனது தவறுவதற்காக என்னே இவ்வாறு ஒன்று வருவதாயிற்று? என்று மனத்தில் எண்ணி நடந்தவைகளைச் சொல்லாது இருந்தாராயினும் பெருந்தவமுடைய வாகீசராம் அடியவர் கேட்கவும் நடந்த உண்மையை விளக்கமாகச் சொல்லவேண்டும் என்ற அற ஒழுக்கத்தால், மனம் வருந்திட மிகுந்த அன்புடன் வாகீசரைப் பணிந்து, மூத்த திருநாவுக்கரசுக்குப் பொருந்தியதைக் கூறினர்.

### விளக்கவுரை

''செயற்கரிய செய்வார் பெரியர்'' என்பது திருக்குறள். கல்லைத் தெப்பமாகக் கொண்டு கரையேறுதல் முதலிய செயற்கருஞ் செயல்களைச் செய்த காரணத்தால் திருநாவுக்கரசரைப் '**பெரியவர்**' என்றார். வாழ்க்கையில் சிலசமயம் இரண்டு அறங்கள் ஒரே சமயம் வந்து மோதும். இரண்டு அறங்களுள் எதைக் கடைப்பிடிப்பது என்ற சிக்கல் உண்டாகும். அப்பூதி அடிகளாருக்கு அதே நிலைமை. மூத்த திருநாவுக்கரசுக்கு நடந்ததைக் கூறினல் சிவனடியாருக்கு அமுது செய்வித்தல் என்ற அறம் தடைப்படும். சிவனடியவர் கேட்கும்போது நடந்ததைச் சொல்லாதிருப்பது அறம் அன்று இந்த நிலைமையைக் கம்பர் **இரண்டு கன்றினுக்கு இரங்கும் ஒரு பசுவின் நிலை** என்பார். தனித்த முறையில் அறங்கள் நல்லவைவ்ய. ஆனல் இரண்டு அறங்களை மாறுபட நிற்கும்போது அதனல் உண்டாகும் கொடுமை மிகப் பெரியது அப்பூதி அடிகளார் அடியவர் கேட்டு விட்ட பிறகு மறைக்கக் கூடாது என்று நடந்தவைகளைச் சொல்லி விட்டார். வாய்மை—வாய்ந்த உண்மை; நடந்த நிகழ்ச்சி என்னும் பொருளை இங்கே கொள்க. சீலம்-ஒழுக்கம்.

### இலக்கணம்

**என்னே !**-வியப்பிடைச் சொல்.
**உற்றது**-வினையாலணையும் பெயர்.
**அன்று, ஏ**-அசைநிலைகள்.

## 35. பதிகம் பாடிப் பாந்தள் நஞ்சு அகற்றுதல்

### உரை

**நாவினுக்கு அரசர்** - திருநாவுக்கரசர்,
**கேளா**-கேட்டு,
**நீர் புரிந்த வண்ணம் நன்று**-நீவிர் செய்த முறை மிக்க அழகாயிருக்கிறது!
**இத்தன்மை செய்தார் யாவர்**-அடியவர் தொண்டினை இம்முறைமையிற் செய்தவர் வேறு யாருளர்?
**என்று**-என்று சொல்லி,
**எழுந்து முன் சென்று**-விரைவாக

எழுந்து அனைவருக்கும் முன் னாகச் சென்று,
**ஆவி தீர் சவத்தை நோக்கி**-உயிர் நீங்கிய பிணத்தைப் பார்த்து,
**அண்ணலார் அருளும் வண்ணம்**-இறைவன் அருள் புரியுமாறு,
**இசை பா பதிகம் பாடி**-இசை யுடன் கூடிய பத்துப் பாட்டுக் கள் பாடி,
**பணிவிடம்**-பாம்பினது நஞ்சினை,
**பாற்றுவித்தார்**-நீங்கும்படிச் செய் தார்.

## தெளிவுரை

*திருநாவுக்கரசர் நிகழ்ந்தவைகளைக் கேட்டு நீவிர் செய்த முறை மிக்க அழகாயிருக்கிறது! அடியவர்தம் தொண்டின் திறமையை இம் முறைமையிற் செய்தார் வேறு யாருளர்? என்று சொல்லி, விரை வாக எழுந்து அனைவருக்கும் முன்சென்று, உயிர் நீங்கிய பிணத்தைப் பார்த்து, இறைவன் அருள்புரியுமாறு பத்து இசைப்பாட்டுக்களைப் பாடி, பாம்பினது நஞ்சினை நீங்கும்படிச் செய்தார்.*

## விளக்கவுரை

வாகீசர் அப்பூதி யடிகளாரை அன்புடன் கடிந்து கொள்ளு கின்றார். நீவிர் செய்த செயல் மிகமிக நன்று என்பது, நல்லது அல்லாத செயல் என்பதையும், 'யாவர் இத்தன்மை செய்தார்' என்பது, இவ்வாறு தொண்டு செய்த ஒருவர் உம்மைத் தவிர உலகில் வேறு யாவர்? எனச் சிறிதே கடிந்து கொள்ளும் முறை என்பதையும் உணர்த்தின. சவம்-பிணம். சவம் என்ற சொல் உயிர் இல்லாதது என்பதை உணர்த்தும் ஆதலால், ஆவி என்பது, உயிர்த்தலாகிய காற்று என்ற குறிப்பைக் கொண்டது. உயிர்போன பிறகுங்கூட காற்று உடலில் இருக்கும் அதுவும் போய்விட்டது என்பதை உணர்த்தினர். தேவாரங்கள் பண்ணோடு கூடிய பாட்டுக்கள். பத்துப் பாட்டுக்கள் சேர்ந்த தொகுப்பைப் பதிகம் என்பது இலக்கணம். பண்ணோடு கூடிய பத்துத் தேவாரங்களைப் பாடினர். நஞ்சை நீக்குவ தற்காக. பணி-பாம்பின் படம். அது பாம்பைக் குறித்தது. பாறுதல்-அழிதல்; பாற்றுவித்தார்-அழியுமாறு செய்தார்.

"ஒன்றுகொ லாம்அவர் சிந்தை உயர்வரை
ஒன்றுகொ லாம்உய ரும்மதி சூடுவர்
ஒன்றுகொ லாம்இடு வெண்தலை கையது
ஒன்றுகொ லாம்அவர் ஊர்வது தானே"

இப்பாட்டு முதலாகப் பத்துப் பாட்டுக்கள் பாடினார்.

## இலக்கணம்

**கேளா**-செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம். உடன் பாட்டுப் பொருள்.
**நன்று**-ஒன்றன்பாற் குறிப்பு வினைமுற்று, கடிந்துரைப் பொருள்.
**யாவர்?**-வினாச்சொல். இன்று என்னும் பொருள்பட நின்றது.
**தீர்சவம்**-வினைத்தொகை. (இறந்த காலம்)
**பாவிசை**-முன் பின்னாகத் தொக்க மூன்றாம் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்க தொகை.
**பணி**-சினையாகு பெயர்.
**பணிவிடம்**-ஆறாம் வேற்றுமைத் தொகை.

## 36. மூத்த திருநாவுக்கரசு உயிர் பெற்றெழுதல்

### உரை

**தீ விடம்**-நெருப்பைப் போன்ற நஞ்சு.
**நீங்க உய்ந்த**-நீங்கியதாற் பிழைத்த,
**திருமறையவர் தம் சேயும்**-நன்மை அமைந்த அந்தணராகிய அப்பூதி அடிகளாருடைய பிள்ளையும்,
**மேவிய**-பொருந்திய,
**உறக்கம் நீங்கி**-தூக்கத்திலிருந்து நீங்கி.
**விரைந்து எழுவானைப் போன்று**-வேகமாக எழுந்திருப்பவனைப் போல எழுந்து,
**சே**-காளையை,
**உகைத்தார்**-ஊர்தியாகச் செலுத்தியவராகிய சிவபெருமானால்,
**ஆட் கொண்ட**-ஆட் கொள்ளப் பெற்ற,
**திருநாவுக்கரசர்** - திருநாவுக்கரசருடைய,
**செய்ய**-நன்மை அமைந்த,
**பூ அடி**-பொலிவு பொருந்திய திருவடிகளை,
**வணங்க**-வணங்கினாகை,
**கண்டு**-உயிர் பிழைத்தெழுந்த பிள்ளையைத் திருநாவுக்கரசர் அன்பு ததும்பக் கண்டு,
**புனித நீறு**-தூய திருவெண்ணீறு,
**அளித்தார்**-கொடுத்தார்.

### தெளிவுரை

நெருப்பைப் போன்ற நஞ்சு நீங்கியதால் பிழைத்த மூத்த திருநாவுக்கரசும் பொருந்திய தூக்கத்திலிருந்து நீங்கி விரைவாக எழுந்திருப்பவனைப் போல எழுந்து, காளையை ஊர்தியாகச் செலுத்திய சிவபெருமானால் ஆட்கொள்ளப் பெற்ற திருநாவுக்கரசருடைய நன்மை அமைந்த பொலிவு பொருந்திய திருவடிகளை வணங்கினாகை, உயிர் பிழைத்தெழுந்த அப்பிள்ளையைத் திருநாவுக்கரசர் அன்பு ததும்பக் கண்டு, தூய திருவெண்ணீறு அளித்தார்.

### விளக்கவுரை

நஞ்சுக்கு நெருப்பை உவமையாக்கினார். முன் 27ஆம் செய்யுளில் 'எரிவிடம்' எனக் கூறியதும் காண்க. 'சேய்' என்பது மக்கள் குலத்துக் குழந்தைகளைக் குறிக்கும் பிற்காலத்து எழுந்த சொல். மூத்த திருநாவுக்கரசு உயிர் பெற்றெழுந்தமைக்கு உவமை, பொருந்திய உறக்கம் தெளிந்து விரைவாக எழுவானைப் போல என்பது உறங்கி எழுபவனிடம் உள்ள விரைவு என்பது சுறுசுறுப்பு. மூத்த திருநாவுக்கரசு இறக்கும்போது எந்த எண்ணமும் விரைவும் மனத்தில் இருந்தனவோ அதே எண்ணத்தோடும் வேகத்தோடும் எழுந்து வாகீசரை வணங்கினான் என்பது குறிப்பு. விரைந்து எழுவானைப் போன்று எழுந்து எனப் பாடவில்லை சேக்கிழார். மூத்த திருநாவுக்கரசு எழுந்ததை யாரும் பார்க்கவில்லை; நாவரசரின் திருவடிகளை வணங்கிக் கொண்டிருப்பதைத்தான் எல்லாரும் கண்டார்கள். வாகீசர் கண்டதுகூட அவன் வணங்கும்போதுதான். சிவபெருமானுக்கு ஊர்தி காளையாகையால் சே உகைத்தார் என்றார், அறவழி யன்றிப் பிற வழியில் நடவாத செம்மையையும் மலரினும் சிறந்த புதுமைப் பொலிவும் கொண்ட திருநாவுக்கரசரின் திருவடிகளைச் **செய்ய பூவடி** என்றார். தான் தூய்மையாக இருப்பதன்றித் தான் யாரைச் சார்கிறதோ அவர்க்கும் தூய்மையை அளிப்பது ஆதலின் **புனிதநீறு** என்றார்.

### இலக்கணம்

**தீவிடம்**-உவமைத் தொகை.
**நீங்க உய்ந்த**-'செய' என் வாய்பாட்டு வினையெச்சம் காரணப் பொருளில் வந்தது.
**மேவிய** உறக்கம்-இறந்தகாலப் பெயரெச்சம்.
**விரைந்தெழுவானை**-வினையாலணையும் பெயர் இரண்டாம் வேற்றுமை உருபு ஏற்றது.
**உகைத்தவர்**-வினையாலணையுப் பெயர்.
**பூவடி**-பண்புத் தொகை. உவமைத் தொகையாகவும் கொள்ளுவது.
**புனிதநீறு**-தூய்மையைத் தரும் நீறு; இரண்டன் உருபும் பயனும் உடன் தொக்க தொகை.
**அன்று, ஏ**-அசைநிலைகள்.

## 37. அப்பூதி அடிகளாரின் வருத்தம்

### உரை

**நின்ற அ பயந்தார்**-வாகீசர் பதிகம் பாடிய போதும், பிள்ளை வாகீசரை வணங்கும்போதும் அங்கேயே செயலின்றி நின்று கொண்டிருந்த அப் பெற்றோர் களாகிய அப்பூதி அடிகளாரும் அவர் மனைவியாரும்,
**பிரிவு உறும் ஆவி பெற்ற பிள்ளையைக் காண்பார்** - பிரிந்து சென்று மீளவும் வந்து பொருந்திய உயிரைப் பெற்ற மூதத திருநாவுக்கரசைக் கண்ணுற் காண்பார்களாகியும்,
**தொண்டின் நெறியினை**-அடியார் களுக்குச் செய்யும் தொண்டின் கடப்பாட்டு நெறிகளை,
**போற்றி வாழ்ந்தார்**-தம் வாழ் நாளில் பெருமதிப்புக்கும் வணக்கத்துக்கும் உரியனவாகக் கொண்டு அவைகளைக் கடைப் பிடித்து வாழ்ந்தவர் களாகையால்,
**தாங்கள்**-தங்களால்,
**அறிவு தரும்**-எவ்வாறு முயன் றும் அறிய முடியாத,
**பெருமை அன்பர்**-பெருமை வாய்ந்த அன்பராகிய திருநாவுக்கரசர்,
**அமுது செய்தருளுதற்கு**-திருவமுது செய்தருளுவதற்கு,
**இவன்**-இந்தப் பிள்ளை,
**சிறிது இடையூறு செய்தான்**-சிறிது தடை செய்தானே,
**என்று சிந்தை நொந்தார்**-என்று நினைத்து மனம் வருந்தினர் கள்.

### தெளிவுரை

எல்லாவற்றையும் கண்டு நின்று கொண்டிருந்த அப்பெற்றோர் களாகிய அப்பூதி அடிகளாரும் அவர் மனைவியாரும் உயிர் பிரிந்து பின் கூடி எழுந்த பிள்ளையைக் கண்ணுற் காண்பார் ஆயினும், சிவனடியவர்களின் தொண்டு நெறியின் கருத்துக்களையெல்லாம் உணர்ந்து தம் வாழ்நாளில் தவறாது மேற்கொண்டு வாழ்ந்தவர்கள் ஆகையால், தங்களால் அறிய முடியாத பெருமை அமைந்த அன்பராம் வாகீசர் திருவமுது செய்வதற்கு இப்பிள்ளை சிறிது தடை செய் தானே என்று நினைத்து மனம் வருந்தினர்கள்.

### விளக்கவுரை

பிள்ளைப்பேறு இறையருள் காரணமாகவும் சூழ்நிலையாலும் இயற்கையில் அமைவது. கொள்கை என்பது ஒருவன் தான் ஆராய்ந்து நல்லது எனக் கண்டு, அதை மேற்கொண்டு தவறாது கடைப்பிடிப்பது. பிள்ளைப் பேற்றைவிடக் கொள்கைப் பேறே சிறந்தது. அடியவர்களுக்குத் தொண்டு செய்தலும் அமுது செய்வித்தலும் அப்பூதி யடிகளாரின் கொள்கை. அத்தொண்டினைச் சிறப்புற நடத்துவதே அவர் வாழ்வின் குறிக்கோள். அக்குறிக்கோளுக்குத் தடை யுண்டாக்கியவன் யாவனேயாயினும் அவனை வெறுத்தார் அவர். பெற்றோர் என்ற முறையில் மூத்த திருநாவுக்கரசு உயிர் பெற்றெழுந்தது மகிழ்தற்குரியதே யென்றாலும், அச்செயல் கொள்கைக்கு இடையூறாக இருப்பதால் மனவருத்தம் உண்டாயிற்று. பிரிவு உறும் ஆவி பெற்ற பிள்ளை-பிரிவைப் பொருந்திய உயிரை மீளவும் பெற்ற பிள்ளை என்பது பொருள். பிரிவு என்பது எதுகை நோக்கிப் 'பிறிவு' எனத் திரிந்தது. **தாங்கள் அறிவு அரும் பெருமை அன்பர்.** தாங்கள் எவ்வளவோ முயன்றும் அறிவினால் ஆராய்ந்து துணியப்படாத பெருமையை உடைய அன்பர் திருநாவுக்கரசர். ''அப்பயந்தார், பிரிவுறும் ஆவி பெற்ற பிள்ளையைக் காண்பார் (ஆயினும்) தொண்டின் நெறியினைப் போற்றி வாழ்ந்தார் ஆதலின் சிந்தை நொந்தார்'' எனக் கொண்டு கூட்டுக. சிறிது இடையூறு-காலந் தாழ்த்தல்.

### இலக்கணம்

**பிரிவு உறும் ஆவி, அறிவு அரும் பெருமை** - தொழிற் பெயர்கள்;
நின்ற அ பயந்தார்-அண்மைச் சுட்டு.
**பயந்தார், காண்பார், வாழ்ந்தார்** - வினையாலணையும் பெயர்கள்.

## 38. வாட்ட மறிந்த வாகீசர் செயல்

### உரை

**ஆங்கு**-அங்கே,
**அவர் வாட்டம் தன்னை**-அப்பூதி அடிகளார் அவர் மனைவியார் ஆகிய இருவருடைய முகங்களிற் காணப் பெறும் மன வருத்தக் குறிப்பினை,
**சொல்லரசர்**-வாகீசர்,
**அறிந்து**-தெரிந்து,
**கூட ஓங்கிய மனையில் எய்தி**-கூடுவதற்காக ஓங்கி வளர்ந்துள்ள வீட்டினின் உள்ளே சென்று,
**அமுது செய்தருள உற்ற பாங்கினில் இருப்ப**-திருவமுது செய்தருளுவதற்காகப் பொருந்திய மனநிலையில் அமர்ந்திருக்க,
**முந்நூல் பயில்**-மூன்று புரிகளாக விளங்கும் பூணூல் விளங்குகின்ற,
**மணி மார்பர் தாமும்**-அழகிய மார்பினை உடைய அப்பூதி அடிகளாரும்,
**தாங்கிய மகிழ்ச்சியோடும்** - முன்னே வளர்ந்து தங்கிய அதே மகிழ்ச்சியோடும்,
**தருவன**-திருவமுது செய்தருளுவதற்கு வேண்டுவனவற்றை,
**சமைத்து சார்வார்** - உண்ணுவதற்கு ஏற்ற முறையில் அமைத்து வைத்துவிட்டு வாகீசரிடம் வருவார் ஆயினர்.

### தெளிவுரை

பிள்ளை உயிர் பெற்றெழுந்ததைக் கண்டும் மகிழாது அப்பூதியடிகளாரும் மனைவியாரும் கொண்டிருந்த வாட்டத்திற்குக் காரணம் இன்னது என்பதை அறிந்த வாகீசர் தோட்டப் பகுதியிலிருந்து, கூடுவதற்காக ஓங்கி வளர்ந்துள்ள வீட்டினுள் வந்து, திருவமுது செய்தருளுவதற்கு ஏற்ற மனநிலையோடு அமர்ந்திருக்க, மூன்றுகப் பொருந்திய பூணூல் விளங்குகின்ற அழகிய மார்பையுடைய அப்பூதியார் முன் தங்கிய பெருமகிழ்வோடும் உணவுக்கு வேண்டுவனவற்றை உண்ணுவதற்கு ஏற்ற முறையில் அமைத்து வைத்துவிட்டு, வாகீசரிடம் வருவார் ஆயினர்.

### விளக்கவுரை

"அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சம்
கடுத்தது காட்டும் முகம்"

என்ற வாக்கின் வண்ணம் சிந்தையில் உள்ள வருத்தத்தை முகத்தில் அமைந்த வாட்டம் உணர்த்தியது. **வீடு** என்பது பூமியில் அமைந்த மனைக்கும், முத்திக்கும் அமைந்த பொதுச்சொல். அப்பூதி அடிகளாரின் மனைக்கு ஒரு குறை இருந்தது. நாம் வெற்று மனைதானேயொழிய வீடு ஆகமாட்டோம் என்பதே அக்குறை. புனிதனை (சிவனை) கொண்டிருக்கின்ற காரணத்தால் முத்திக்கு அவ்வளவு சிறப்பு; மனிதனைக் கொண்டிருக்கின்ற காரணத்தால் நமக்கு இழிவு என்பது அப்பூதி அடிகளாரின் மனையின் கருத்து. பதிகம் பாடியவுடன் இறைவனே வந்து ஏவல் செய்து பிள்ளையை உயிர்ப்பித்துக் கொடுத்தான் ஆதலின், அவனை வேலை வாங்கும் சிவனடியாராகிய 'திருநாவுக்கரசரை' நாம் கொண்டிருப்பதால் முத்தியைக் காட்டிலும் பெருமை மிக்கதாக விளங்கிய தென்பதாம். இனி வாகீசரின் திருப்பாதம் பெற்றமையால் அப்பூதி அடிகளார் மனையும்முத்தியைப் பெற்றது ஆகையால் வீட்டுலகத்தைக் கூடுவதற்காக உயர்ந்த மனை என்றும் கொள்ளலாம். இப்பொருளே சிறப்புடைத்து. **பாங்கு** என்பது மனநிலையைக் குறித்தது. மூன்று+நூல் = முந்நூல். மணிமார்பு அழகிய மார்பு. தங்கிய மகிழ்ச்சி என்பது எதுகை நோக்குத் தாங்கிய மகிழ்ச்சி என்பதாயிற்று. வாகீசர் 'மைந்தனுக்கு உற்றது விளம்பு' என்று கேட்பதற்கு முன்வரை தங்கியிருந்த மகிழ்ச்சி என்பதாம். சமைத்தல் என்பது, இங்கே புதியதாகச் சமைக்கவில்லை; சில உணவுப் பொருள்களைச் சிறிது சூடேற்றியும் மாற்றியும் அமைத்தனர் என்பதாம்.

### இலக்கணம்

**கூட**-செயவென் வாய்பாட்டு வினையெச்சம் காரணப் பொருள்.
**ஓங்கிய மனை**-இறந்தகாலப் பெயரெச்சம்.
**முந்நூல்**-பண்புத் தொகை.
**தாங்கிய**-'தங்கிய' என்ற சொல்லின் நீட்டல் விகாரம்.
**தருவன**-அஃறிணைப் பன்மை வினையாலணையும் பெயர்.

## 39. பரிகலக் குருத்தைப் பாங்குற அமைத்தல்

### உரை

**புகழ்ந்த**-நூல்களாற் புகழ் பெற்ற,
**கோமயத்தின் நீரால்**-பசுவின் சாணத்தோடு கலந்த நீரால்,
**பூமியை பொலிய நீவி**-உண்ணுதற் கேற்ற இடத்தைத் தூய்மைப் பொலிவு அமையுமாறு துடைத்து,
**திகழ்ந்த**-விளங்குகின்ற,
**வான் சுதையும் போக்கி**-உயர்ந்த வெண் சுண்ணச் சாந்து இட்டு (கோலமிட்டு);
**சிறப்பு உடை தீபம் ஏற்றி**-மங்கலப் பொருள்களுள் சிறந்தது என்னும் சிறப்பை உடைய விளக்கினை எரியப் பண்ணி,
**நிகழ்ந்த கதலி நீண்ட அ குருத்தினை**-இத்துணை நிகழ்ச்சிகளும் நிகழ்வதற்குக் காரணமாக இருந்த வாழை மரத்தின் நீண்ட அதே குருத்திலையை;
**விரித்து**-சுருக்கம் நீக்கி,
**நீரால் உடன் மகிழ்ந்து விளக்கி**-தண்ணீரால் உடனேயே மகிழ்ச்சியோடு சுத்தம் செய்து,
**ஈர்வாய் வலம் பெற**-இலையின் அரிநத பகுதி அமுது செய்வோரின் வலப்பக்கத்தே அமையுமாறு,
**மன்னுவித்தார்**-நிலைபெற வைத்தார்கள்.

### தெளிவுரை

நூல்களாற் புகழ்பெற்ற பசுவின் சாணத்தோடு கலந்த நீரால் உண்ணுதற்கேற்ற இடத்தைத் தூய்மைப் பொலிவு அமையுமாறு துடைத்து, விளங்குகின்ற உயர்ந்த வெண்சுண்ணச் சாந்து இட்டு, சிறப்புடைய விளக்கினை எரியப் பண்ணி, இத்துணை நிகழ்ச்சிகளுக்கும் காரணமாக அமைந்த வாழையின் நீண்ட மரத்திலிருந்து அரிந்த அதே குருத்தைச் சுருக்கம் நீககி, தண்ணீரால் உடனேயே மகிழ்வுடன் கழுவி, இலையின் அரிந்த பகுதி அமுது செய்வோரின் வலப்பக்கத்தே அமையுமாறு நிலைபெற வைத்தார்.

### விளக்கவுரை

கோமயம்-பசுவின் சாணம். பசுக்கள் தரும் பால், தயிர், நெய், கோமயம், கோமூத்திரம் ஐந்தும் 'பஞ்சகவ்வியம்' எனப் பெற்று இறைவனுக்கே அபிஷேகமாகும் பெருமை உடையன. ''ஆனிடத்து ஐந்தும் ஆடி'' என்பார் சிவப்பிரகாசர். 'பஞ்சகவ்ய லேகியம்' என்ற ஒருவகை மருந்து இவ்வைந்தாலும் செய்யப பெறுவது. இது தெய்வக் குற்றத்தால் வரும் நோயைப் போக்கும் ஆற்றலுடையது. நீவுதல்-துடைத்தல். வான் சுதை-உயர்ந்த சுண்ணம் இங்கே கோலமிடு தலுக்குரிய சுண்ணத்தைக் குறித்தது. மூத்த திருநாவுக்கரசு அரிந்து வந்த அமுத வாழைக்குருத்துத்தான் பரிகலமாக அமைக்கப் பெற்றது என்பார் 'நிகழ்ந்த அக் கதலி நீண்ட குருத்து' என்றார். இலையைக் கழுவும்போது ஒரு மகிழ்ச்சி உண்டாயது. திருநாவுக்கரசருக்கு உண்கலமாக அமையும் இது வாழ்க்கைத் தத்துவக் கருத்தையே விளக்கிக் காட்டிவிட்டதே என்று தோன்றிய எண்ணத்தால் கழுவுவோருக்கு மகிழ்ச்சி வந்தது என்பதாம். அரிந்த பக்கம் அமுது செய்தவரின் வலப்பக்கம் இருக்க வேண்டும் என்பது விதி. **ஈர்வாய்**-அரிந்த இடம்.

### இலக்கணம்

**பொலிய**-செய்யிய என்னும் வாய்பாட்டு வினையெச்சம்.
**நீவி, போக்கி, ஏற்று, விளக்கி**-செய்து என்னும் வாய்பாட்டு வினையெச்சம்.
**ஈர்வாய்**-வினைத்தொகை.

## 40. வாகீசர் அனைவரையும் உடனுண்ணச் செய்தல்

### உரை

**திருந்திய**-வடிகட்டுதல் முதலிய இன்றி இயல்பாகவே திருந்தியிருக்கிற,
**வாச**-விலாமிச்சை முதலியவற்றின் சேர்க்கையால் மணம் பெற்றிருக்கிற,
**நன்மைநீர்**-வெம்மையை அகற்றி ஒழுக்கத்தை வளர்க்கும் நன்மை அமைந்த தண்ணீரை,
**அளித்திட**-அப்பூதி அடிகளார் எடுத்துக் கொடுக்க,
**நீவும் பெருந்தவர்**-கைகால் முதலியவைகளைத் தூய்மை செய்யும் பெருந்தவம் புரிந்தவரான வாகீசர்,
**மறையோர் தம்மைப் பிள்ளைகளுடனே நோக்கி**-அந்தணராகிய அப்பூதி அடிகளாரை அவருடைய பிள்ளைகளுடன் பார்த்து,
**அரும் புதல்வர்களும் நீரும்**-பெறுதற்கரிய பிள்ளைகளும் தாங்களும்,
**அமுது செய்வீர் இங்கு என்ன**-உடனமர்ந்து அமுது செய்தருள்வீராக என்று கூற,
**விரும்பிய உள்ளத்தோடு** - அவர் ஆணையையே தம் விருப்பமாக ஏற்றுக்கொண்டு அதையே விரும்பியிருந்த உள்ளத்தோடு,
**மேலவர்**-தவத்தில் மேலவராக நின்ற வாகீசரின் கட்டளையைச் செய்து முடிப்பாராயினர்.

### தெளிவுரை

திருந்திய, வாசமுடைய, நன்மையமைந்த தண்ணீரை அப்பூதி அடிகளார் எடுத்துக்கொடுக்க, தம் கைகால்களைத் தூய்மை செய்யும் பெரிய தவமுடையவராகிய வாகீசர்; அந்தணராகிய அப்பூதியடிகளாரை அவர்தம் பிள்ளைகளுடன் பார்த்தருளி: "பெறுதற்கரிய பிள்ளைகளும் தாங்களும் உடனமர்ந்து அமுது செய்தருள்வீராக" என்று கூற; அவர் ஆணையையே தம் விருப்பமாக ஏற்றுக்கொண்டு அதையே விரும்பிய உள்ளத்தோடு, தவத்தின் மேலவராக நின்ற வாகீசரின் கட்டளையைச் செய்து முடிப்பாராயினர்.

### விளக்கவுரை

தண்ணீருக்கு மூன்று பண்புகள்; வடிகட்டுதல் முதலியன இல்லாமல் இயற்கையாகவே தூய்மையாக இருத்தல்; இயற்கை மணத்தோடன்றிப் பிறபொருள்களோடு இணைந்து நல்ல செயற்கை மணத்தோடிருத்தல்; ஒழுக்கத்தை வளர்க்கும் நன்மை என்ற மூன்றும் இணைந்த நன்னீர். வாகீசர் அனைவரும் உடனிருந்து உண்ணுவோம் என ஆணையிட்டனர். வேதநூல் முறைப்படி வழுவாது ஒழுகும் மறையவர் தலைவராகிய அப்பூதி அடிகளாரும் சாதிப்பேதைமை மதியாது; உபசரிப்போர் உபசரிக்கப் பெறுவோர் என்ற வேறுபாடும் இன்றி உடனிருந்து உண்ணுவோம் என்றனர். **விரும்பிய உள்ளம்**-

அடியவர் எதை விரும்புகிருரோ அதையே தன் விருப்பமாகக் கொண்டு விரும்புகின்ற உள்ளம் என்ருர். சாதியால் மேலவராக அப்பூதி அடிகளை உலகம் கருதினுனும், தவத்தாலும் பிறவற்ருலும் உயர்ந்தவர் வாகீசர் என்பதால் அவரை **மேலவர்** என்றும், அப்பூதி அடிகளாரை 'ஏவல் செய்வார்' என்றுங் கூறினுர்.

### இலக்கணம்

**திருந்திய**, **வாறு**-என்பவை பெயரெச்சங்கள்.
**நன்னீர்**-பண்புத் தொகை.
**அமுது செய்வீர்**-முன்னிலைப் பன்மை வினைமுற்று.
**விரும்பிய உள்ளம்**-பெயரெச்சம்.
**மேவலர் ஏவல்**-ஆரும் வேற்றுமைத் தொகை.
**ஏவல்**-தொழிற் பெயர்.

## 41. அந் தமிழாளியார் அமுது செய்தருளுதல்

### உரை

**மைந்தரும்**-பிள்ளைகளும், **மறையோர்தாமும்**-அந்தணராகிய அப்பூதி அடிகளாரும், **மருங்கு இருந்து அமுது செய்ய**-பக்கத்தில் இருந்து உணவு உண்ண, **இல்ல மாதர்**-அப்பூதி அடிகளாரின் மனைவியார், **சிந்தை மிக்கு**-மன நிறைவுடன், **திருவமுது எடுத்து நல்க**-திருவமுதினை எடுத்து உண்கலத்தில் இட, **கொந்து அவிழ்**-கொத்தாக விரிந்திருக்கின்ற, **கொன்றை**-கொன்றைப் பூவை அணிந்த, **வேணி**-சடையையுடைய, **கூத்தனுர்**- சிவபெருமானுடைய, **அடியாரோடும்** - அடியவர்களோடும், **அம்**-அழகிய, **தமிழாளியார்**-தமிழ்ச் சிங்கமாகிய திருநாவுக்கரசர், **அங்கு**-அங்கே, **அமுது செய்தருளினுர்**-திருவமுது செய்தருளினுர்.

### தெளிவுரை

பிள்ளைகளும் அந்தணராகிய அப்பூதி அடிகளாரும் பக்கத்தே அமர்ந்து அமுது உண்ணவும்; அப்பூதி அடிகளார் மனைவியார் மன நிறைவுடன் திருவமுதினை எடுத்துப் பரிமாறவும்; கொத்துக் கொத்தாக விரிந்திருக்கின்ற கொன்றைப் பூமாலையை அணிந்த சடையையுடைய சிவபெருமானுடைய அடியவர்களோடும் அழகிய **தமிழ்ச் சிங்கம்** ஆகிய திருநாவுக்கரசர் அங்கே திருவமுது செய்தருளினுர்.

### விளக்கவுரை

இல்ல மாதர்-வீட்டின் தலைவியாம் பெண்; அப்பூதி அடிகளின் மனைவியார். சிந்தைமிக்கு-மனமிகுதி; மனநிறைவு.பெண்களின் மனம் ''இன்னும் ஏதாவது ஒன்று செய்திருக்கலாம் நேரம் இல்லை'' என்பது போல நினைந்து நினைந்து குறைப்படும் இயல்பினது. இங்கே அத்தகைய குறை ஏதும் இன்மையால் மனநிறைவுடன் பறிமாறினர் என்பதாம். கூத்தனுர்-கூத்தாடுவதில் வல்லன்; சிவபெருமான். அவன் தன் சடையில் கொத்தாக மலர்ந்த கொன்றையை அணிந்துள்ளான். வேணி-சடை. திருநாவுக்கரசருக்குச் சேக்கிழார்

**'தமிழாளியார்'** என்ற பெயரை நல்குகிறார். **'தமிழ்ச் சிங்கம்'** என்பது பொருள்.

### இலக்கணம்

**அவிழ் கொன்றை**-வினைத்தொகை.
**கொன்றை வேணி**-இரண்டன் உருபும் பயனும் உடன் தொக்க தொகை.
**ஏ**-அசைநிலை.

## 42. வாகீசர் பன்னாள் தங்கிப் பின் திருப்பழனம் சார்தல்

### உரை

**மே தகு**-மேன்மை பொருந்திய,
**நாவின் மன்னர்**-திருநாவுக்கரசர்,
**மா தவ மறையோர்**-சிறந்த தவம் செய்த அந்தணராகிய அப்பூதி அடிகளாருடைய,
**செல்வ மனையிடை**-இம்மை மறுமைச் செல்வங்கள் எல்லாம் பொருந்திய வீட்டின்கண்,
**பன்னாள்**-பல நாட்கள்,
**அமுது செய்து**-திருவமுது செய்தும்,
**காதல் நண்பு அளித்து**-மாறாத அன்பு நாடாத சிறப்பு ஆகியவற்றை வழங்கியும்,
**கலந்து**-உள்ளம் கலந்து,
**உடன் இருந்த பின்றை**-அவர்களுடன் தங்கியிருந்த பிறகு,
**விளங்கிய**-வெளிப்பட்டுத் தோன்றிய பெருமையை உடைய,
**பழன மூதூர்**-திருப்பழனம் என்ற பழைமையான தலத்தில் உறையும்,
**நாதர் தம் பாதம் சேர்ந்து**-சிவபெருமானுடைய திருவடிகளுக்கு முன்னாக நின்று,
**நல் தமிழ்ப் பதிகம் செய்தார்**-நன்மை அளிக்கும் தமிழ்த் தேவாரப் பதிகங்களைப் பாடினார்.

### தெளிவுரை

மேன்மை பொருந்திய நாக்கின் அரசராகிய திருநாவுக்கரசர் சிறந்த தவம் செய்த அந்தணராகிய அப்பூதி யடிகளாருடைய இம்மை மறுமைச் செல்வங்கள் எல்லாம் பொருந்திய மனையின்கண் பல நாட்கள் திருவமுது செய்தும் மாறாத அன்பு நாடாத சிறப்பு ஆகியவற்றை வழங்கியும், உள்ளம் கலந்து அவர்களோடு உடனுறைந்து தங்கிய பிறகு வெளிப்பட்டுத் தோன்றிய பெருமையையுடைய திருப்பழனம் என்ற பழமையான தலத்தில் உறையும் சிவபெருமானுடைய திருவடிகளுக்கு முன் சென்று நின்று நன்மை அளிக்கும் தமிழ்த் தேவாரப் பதிகங்களைப் பாடினார்.

### விளக்கவுரை

நாக்கு அனைவருக்கும் உண்டேனும் சிலருக்கு வாயுணர்வை மட்டுமே வழங்குகின்றது; சிலருக்கு வேண்டாதன சொல்லித் தீமையைத் தந்துவிடுகிறது. ஆனால் திருநாவுக்கரசர் 'நாக்கு' இறைவனையும் ஏவல் கேட்க வைக்கும் பெருமையுடைத்து ஆதலின் **மேன்மை அமைந்த நாக்கு** என்றார். அப்பூதி அடிகளாரின் மனை **செல்வமனை** எனப்பட்டது. தேவாரப்பதிகங்கள் பிறந்த இடம் கோயில்களாகவே இருக்க, தானும் இடமாக நின்று தன்னிடத்திலும் தேவாரம் பாட வைத்த பெருமையையுடையது அவ்வீடு. கோயில்களுள்ளும் தேவாரம் பாடப்பெறாத கோயில்களை நோக்க அவ்வீடு, உயர்வுடைய

தாதலின் செல்வமனை எனப் பெற்றது. இவ்வுலகச் செல்வமே யன்றி முத்திச் செல்வத்தையும் வழங்கும் தன்மை உடையதாதலின் செல்வமனை என்றார். பலநாள்-பன்னாள் என்றாயது. காதல்-அமையாத அன்பு; தணியாத அன்பு; நண்பு-நட்பு; வேறு எதையும் நாடாது தன்னையே நாடி வருமாறு செய்யும் ஆற்றலுள்ள அன்பு. திருவள்ளுவர் '**நண்பென்னும் நாடாச் சிறப்பு**'' என்றார் **பின்றை**-பிறகு என்னு பொருள்படும் செய்யுட்சொல். பழனம்-திருப்பழனம். முதுமை+ஊர்-பழமையான ஊர். தமிழ்ப்பதிகம் அற்புதங்களை நிகழ்த்தும் ஆற்றல் உடையது ஆதலின் 'நல்' என்ற அடைமொழி கொடுத்தார்.

### இலக்கணம்

**செல்வமனை**-இரண்டன் உருபும் பயனும் உடன் தொக்க தொகை.
மனை **இடை-**ஏழன் உருபின் பொருள்பட வந்த சொல்.
**காதல் நண்பு**-உம்மைத் தொகை.
**மூதூர்**-பண்புத் தொகை.
**நற்றமிழ்**-பண்புத் தொகை.

## 43. அப்பூதி அடிகள் வாகீசர் திருவடிகளையே ஊதியமாகக் கொள்ளல்

### உரை

**மெய்**-உடம்பின்கண்,
**ஆன்ற**-நின்றந்த.
**பூதி அணிந்தார் தம்மை**-விபூதியை அணிந்திருக்கின்ற சிவபெருமானை,
**விரும்பு சொல்மாலை**-விரும்பித் துதிசெய்து பாடுகின்ற தேவாரப் பதிகம் என்னும் சொல் மாலையில்,
**அப்பூதி அடிகளார் தம் அடிமையை**-அப்பூதியடிகள் நாயனாருடைய அடிமைத் தொண்டினை,
**சிறப்பித்து**-பெருமை பெற அமைத்து,
**வேய்ந்த**-பாடி இறைவனுக்குச் சாத்திய,
**இப் பூதி**-இத்தகைய பெருஞ் செல்வத்தை
**பெற்ற நல்லோர்** - இவ்வுலகில் பெற்ற நல்லவராகிய அப்பூதி அடிகள்,
**எல்லை இல் அன்பால்** - அளவுபடாத பேரன்பினால்,
**திருநாவுக்கரசர் பாதம்** - திருநாவுக்கரசு நாயனாரின் திருவடிகளையே,
**என்றும் செப்பு**-எப்பொழுதும் துதிசெய்து வணங்கத்தகும்,
**ஊதியம் கைக் கொண்டார்**-பயன் எனக் கைக் கொண்டவரானார்.

### தெளிவுரை

'உடம்பின்கண் நிறைந்த விபூதியை அணிந்திருக்கின்ற சிவபெருமானை விரும்பித் துதிசெய்து பாடுகின்ற தேவாரம் என்னும் சொல் மாலையில் அப்பூதி அடிகளாருடைய தொண்டினைப் பெருமை பெற அமைத்துப் பாடி இறைவனுக்குச் சாத்திய இத்தகைய பெருஞ் செல்வத்தை இவ்வுலகிலேயே பெற்ற நல்லவராகிய அப்பூதி அடிகள், அளவுபடாத பேரன்பினால் திருநாவுக்கரசு நாயனாரின் திருவடிகளையே எப்பொழுதும் துதிசெய்து வணங்கத் தகும் பயன் எனக் கைக்கொண்டார்.

**விளக்கவுரை**

ஆன்ற மெய் பூதி அணிந்தார்-சிவபெருமான். மெய் ஆன்ற பூதி என மாற்றுக. சிவபெருமானுடைய திருவுடம்பில் விபூதி அழகுபெற அணியப் பெற்றிருக்கும் ஆதலின் 'ஆன்ற பூதி' என்றார். **விரும்பு சொன்மாலை**-தேவாரப் பதிகங்கள். வேறு யாரையும் பாடாமல் சிவன் ஒருவனையே விரும்பிப் பாடும் பாட்டுக்கள். சொற்கள் பூக்களாக, பாட்டு மாலையாக உருவகம் செய்தார். "தொடை சாத்து சொல்வேந்த" என்று புகழப்படுபவர் நாவுக்கரசர். சிவபெருமானைத் தவிரவேறு யாருக்கும்இடங்கொடாததேவாரப்பதிகத்தில் வாகீசர், அப்பூதி அடிகளாரின் தொண்டின் பெருமைக்கு இடம் கொடுத்து, அவரைச் சிறப்பித்துப் பாடி இறைவனுக்குச் சாத்துவாராயினர். இறைவனைப் பெருமைப் படுத்திப் பாடப் பெறும் தேவாரத்தில் தன்னையும் பெருமைப்படுத்திப் பாடிய செயலைப் பெருஞ் செல்வம் என்று கருதினார் அப்பூதி அடிகள். வேறு யாருக்கும் கிட்டாத இச் செல்வத்தை இவ்வுலகிலேயே பெற்ற நல்லவர் அப்பூதி அடிகள். அவர் திருநாவுக்கரசரின் திருவடிகளையே ஊதியம் எனக் கொண்டு முத்தி பெற்றார். செப்பூதியங் கைக்கொண்டார் என்பதைச் செப்பு+ ஊதியம்+கைக்கொண்டார் என்று பிரித்துக் கொள்ளுக. **இப்பூதி**-இத்துணைப் பெரிய செல்வம்; திருநாவுக்கரசர் தேவாரத்தில் தன்னையும் தன் தொண்டையும் இணைத்துப் பாடியதே பெருஞ்செல்வம்.

**இலக்கணம்**

**மெய்ப்பூதி**-ஏழாம் வேற்றுமைத் தொகை.
**அணிந்தார்**-வினையாலணையும் பெயர்.
**சொன்மாலை**-மூன்றும் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்க தொகை.
**இப்பூதி**-அண்மைச் சுட்டு, பெருமையையும் உணர்த்திற்று.

## 44. அபூதியடிகள் தில்லை மன்றுளான் திருவடி அடைதல்

**உரை**

**இவ்வகை**-இவ்வாறு,
**அரசின் நாமம்**-திருநாவுக்கரசர் திருப்பெயரையே,
**நாளும்**-எந்நாளும்,
**ஏத்தி**-வணங்கி,
**எப்பொருளும்**-உலகில் சிறப்பித்துச் சொல்லப் பெறும் எத்தகைப் பொருளாயினும் அது,
**அ அருந்தவர் பொன் தாளே**-அந்தப் பெருந்தவம் செய்த நாவுக்கரசருடைய அழகிய திருவடிகளே (நாவரசர் திருவடியைவிட உலகில் உயர்ந்த பொருள் இல்லை என்பது கருத்து)
**என உணர்ந்து**-என்ற உண்மையைத் தெள்ளத் தெளிய அனுபவத்தாலுணர்ந்து,
**அடைவார்**-அவ் வழியையே விடாதுபற்றிச் செல்பவராகிய அப்பூதியடிகள்,
**செல்லும் செவ்விய நெறியது ஆக**-திருநாவுக்கரசு என்னும் பேரைச் சொல்லுதலும் அவர் தாளைத் துதித்தலுமே முத்திக்குச் செல்லும் செம்மை சான்ற வழியாக அமைத்துக்கொள்ள,
**திரு தில்லை மன்றுள் ஆடும்**-செல்வம் நிறைந்த தில்லை (சிதம்பரம்) என்னும் தலத்துள் அமைந்த பொற்சபையில் ஆடும்,

**நவ்வி அம் கண்ணாள் பங்கர்**-மான் கண் போலும் அழகிய கண்களை உடைய உமையம்மையை இடப்பாகத்தே உடையவருடைய,
**நற்கழல்**-நன்மை அமைந்த திருவடிகளை,
**நண்ணினார்**-சென்றடைந்தார்.

### தெளிவுரை

இவ்வாறு திருநாவுக்கரசு நாயனாரின் திருப்பெயரையே எந்நாளும் வணங்கி, உலகில் சிறப்பித்துக் கூறும் எப்பொருளாயினும் அது திருநாவுக்கரசரின் திருவடிகளே என்று உணர்ந்து அவைகளையே கடைப்பிடித்து ஒழுகுகின்றவர், அவ்விரண்டுமே முத்திக்குச் செல்லும் செம்மை சான்ற வழியாக அமைத்துக்கொள்ள, செல்வம் நிறைந்த தில்லை என்னும் தவத்துள் அமைந்த பொற்சபையில் ஆடும், மான்கண் போலும் அழகிய கண்களை உடைய உமையம்மையை இடப்பாகத்தே உடையவருடைய நன்மையமைந்த திருவடிகளைச் சென்றடைந்தார்.

### விளக்கவுரை

சிவபெருமான் நாமத்தைச் சொல்லாமல், அவன் திருவடியைத் தொழாமல் 'திருநாவுக்கரசு' என்னும் சொல்லையே மந்திரமாகக் கொண்டு, அவர் திருவடிகளே பொருள்கள் எல்லாவற்றுள்ளும் உயர்ந்ததாய் அடையக்கூடிய பொருள் என்று கருதி வணங்கி முத்தி பெற்றவர் அப்பூதி அடிகள். முத்தி அடைவதற்குச் சொலலப் பெறும் எந்த வழிகளிலும் செல்லாமல் 'திருநாவுக்கரசு' என்ற சொல்லை மட்டுமே சொல்லி முத்தி பெற்றவர் அவர். சிவப்பிரகாசர் பாடல் ஒன்று இதை உணர்த்தும்.

> உற்றான் அலன் தவம்; தீயில் நின்றான் அலன்; ஊண் புனலா
> அற்றான் அலன்; நுகர்வும்; திருநாவுக்கரசு எனும் ஓர்
> சொல்தான் எழுதியும் கூறியுமே துன்பு இல் பதம்
> பெற்றான் ஒருநம்பி அப்பூதி என்னும் பெருந்தகையே.

**செல்லும் செவ்விய நெறியது ஆக**-எளிமையாகச் செல்லக்கூடிய நன்மை யமைந்த வழியாக ஆக. ஆனது 'திருநாவுக்கரசு' என்னும் நாமம் ஒன்றே. தில்லை மரங்கள் நிறைந்திருந்தமையால் சிதம்பரத்துக்குத் 'தில்லை' என்ற பெயர் உண்டு. முத்திச் செல்வம் வழங்கும் தலமாதலின் திருத்தில்லை எனப் பெற்றது. சிதம்பரத்தில் இருக்கும் மன்று-சபை-பொற்சபை. பொற்சபையில் ஆடுபவரும், உமையம்மையை இடப்பாகத்தில் கொண்டவரும் ஆகிய சிவபெருமானுடைய திருவடிகளிற் கலந்தார் அப்பூதி அடிகள். நவ்வி-மான். உமையின் கண்கள் மான் கண்கள் போல இருந்தன என்பது உவமை. **நற்கழல்**-இயமனை உதைத்து மார்க்கண்டனுக்கு முத்தியை வழங்கியது என்ற நன்மை.

### இலக்கணம்

**பொற்றாள்**-பண்புத் தொகை.
அடைவார்-வினையாலணையும் பெயர்.
**செவ்விய** நெறி-செய்த என் வாய்பாட்டுப் பெயரெச்சம்.
மன்றுள்-உள், ஏழாம் வேற்றுமை உருபின் பொருள்பட வந்த சொல்.
**நற்கழல்**-பண்புத் தொகை.
**ஏ**-அசை.

## 45. கவிக் கூற்று

### உரை

**மறி மான் கையர்**-இளம் மானைத் தாங்கிய கையை உடைய சிவ பெருமானின்,
**பொன் தாள்**-அழகிய திருவடி களை,
**வாகீசர் அடைவால்**-திருநாவுக் கரசரின் சார்பினால்,
**பெற்ற**-அடைந்த,
**மேன்மை**-பெருமையை உடைய,
**அப்பூதி யாராம் வேதியர் பாதம் போற்றி**-அப்பூதி அடிகள் என்று சொல்லப் பெறும் அந்தணர் தம் திருவடிகளைத் துதித்து,
**கான்**-மணம் பொருந்திய,
**கமல மலர்**-தாமரை மலர் நிறைந்த,
**வாவி கழனி சூழ்**-குளங்களும் வயல்களும் சூழ்ந்த,
**சாத்த மங்கை**-சாத்த மங்கை என்னும் ஊரில் வாழ்ந்த,
**நான் மறை**-நான்கு வேதங்களி லும் வல்ல,
**நீலநக்கர்**-திருநீலநக்க நாயனாரு டைய,
**திருத் தொழில்**-திருத்தொண்டின் பெருமையை
**நவிலல் உற்றேன்** - சொல்லத் தொடங்கினேன்.

### தெளிவுரை

இளைய மானைத் தாங்கிய கையை உடைய சிவபெருமானின் அழகிய திருவடிகளை திருநாவுக்கரசரின் சார்பு ஒன்றினாலேயே பெற்ற மேன்மை வாய்ந்த அப்பூதி அடிகளார் என்னும் அந்தணர் தம் திருவடிகளை வணங்கி, மணம் பொருந்திய தாமரை மலர் நிறைந்த குளங்களும் கழனியும் சூழ்ந்த சாத்தமங்கை எனப் பெறும் பதியில் வாழ்ந்த திருநீலநக்க நாயனாருடைய திருத்தொண்டின் பெருமையைக் கூறத்தொடங்கினேன்.

### விளக்கவுரை

மறி-மானின் இளமையைக் குறிக்கும் மரபுச்சொல். மறிமான்-குட்டிமான். சிவபெருமான் மானைக் கையில் கொண்டிருப்பவர். வாகீசரைச் சார்ந்த ஒன்றாலேயே சிவன் திருவடிகளை அடைந்த பெருமை உடையவர் அப்பூதி அடிகளார். கான்-மணம். மலர்கமலம் என்பதைக் கமலமலர் என மாற்றிக்கொள்க. சாத்தமங்கை என்ற ஊர் தாமரை நிறைந்த குளங்களையும் கழனிகளையும் கொண்டது. அவ்வூரில் வாழ்ந்தவர் திருநீல நக்க நாயனார். திருத்தொழில்-திருத் தொண்டு.

இச்செய்யுள் கவிக்கூற்று. சேக்கிழார் அப்பூதி அடிகளாரின் திரு வடிகளை வணங்கி, திருநீலநக்க நாயனார் திருத்தொண்டைக் கூறப் புகுந்தேன் என்று இதுவரை சொன்ன வரலாற்றுக்கு முடிவுரையும் அடுத்த வரலாற்றுக்கு முகவுரையும் அமைத்தார்.

### இலக்கணம்

**மான் கையர்**-இரண்டன் உருபும் பயனும் உடன் தொக்க தொகை.
**கான் மலர்**- ,, ,,
**வாவிக் கழனி**-உம்மைத் தொகை.
**சூழ் சாத்தமங்கை**-வினைத்தொகை.
**நான் மறை**-பண்புத் தொகை.

நவிலல்-தொழிற் பெயர்.
உற்றேன்-தேற்றம் பற்றி வந்த கால வழுவமைதி.

## 5

# கம்பராமாயணம்

*1.* **நூலாசியர்-இயற்பெயர்:** கம்பர்.

**காரணம்:** 1. பெற்றோர் இவருக்கு இட்டு வழங்கியதே காரணம் என்பர்.

2. இறைவனுக்கு 'ஏகாம்பரன்' என்ற பெயருண்டு. அத னுடைய மரூஉப் பெயர் என்பர் சிலர்.

3. இவருடைய முன்னோர்கள் 'கம்பநாடு' என்ற இடத்தி லிருந்து வந்தவர்கள் ஆதலின் அதுபற்றிக் 'கம்பநாடர்' எனவழங்கி, பின் 'கம்பர்' என்றாயது என்பர். இவருக்குக் **கம்பநாடர், கம்ப நாட்டாழ்வார், கம்ப நாடுடைய வள்ளல்** என்ற பெயர்களும் உண்டு.

4. காளி கோயிற் கொடிக் கம்பத்தடியில் நின்று காளியினருள் பெற்றார் ஆதலின் 'கம்பர்' என்ற பெயர் வந்தது.

5. புலவர் உள்ளங்களையெல்லாம் கம்பமடையச் செய்தவர் (நடுக்கமடையச் செய்தல்) ஆகையால் கம்பர்.

6. இவர் தம் ஆசிரியருடைய கம்பங்கொல்லையைக் காத் திருந்து அரசன் அழைத்தபோது கையில் கம்புடன் சபைக்குச் சென்றார் ஆதலின் 'கம்பர்' என வழங்கப் பெற்றார்.

**சிறப்புப் பெயர்:** '**கவிச் சக்கரவர்த்தி**' என்பது இவர் கவித் திறமைக்காக. '**கம்பநாட்டாழ்வார்**' திருமால் பக்தியில் ஆழங்கால் பட்டு நின்ற காரணத்தால் ஏனைய ஆழ்வார்களைப் போலவே இவருக் கும் 'ஆழ்வார்' என்ற பெயருண்டு. கம்பராமாயணத்தில் இவர் பாடிய நாகபந்த விமோசனப் பகுதியைப் படித்துத் தில்லையில் இறந்த தீட்சிதர் குலப் பிள்ளையை எழுப்பிய காரணத்தால் இவருக்கு '**கம்பநாடுடைய வள்ளல்**' என்ற பெயரும் உண்டு.

**தந்தை:** ஆதித்தன், தாய் பெயர் தெரியவில்லை.

**பிறப்பிடம்:** சோழநாட்டுத் 'திருவழுந்தூர்'. இவர் பிறந்த இடம் 'கம்பமேடு' என வழங்கப் பெறுகிறது.

**குலம்:** உவச்சர் (காளிகோயிற் பூசாரி) குலம்.

**சமயம்:** வைணவம்; திருமாலை வழிபடும் துறையினர்.

**ஆதரித்த வள்ளல்:** திருவெண்ணெய் நல்லூர்ச் சடையப்ப வள்ளல்.

**சம காலத்தவர்:** புகழேந்திப் புலவர், ஒட்டக்கூத்தர், ஔவை யார் நேமிநாதர் என்ற புலவர்களும் அரசர்களில் குலோத்துங்க சோழன் II, பிரதாபருத்திரன் முதலியோரும்.

**இயற்றிய நூல்கள்:** இராமாயணத்தில் ஆறு காண்டங்கள் மட்டும். சடகோபர் அந்தாதி, சரசுவதி அந்தாதி, ஏர் எழுபது, திருக்கை வழக்கம், சோழன் மீது பாடிய மும்மணிக் கோவை.

**காலம்:** கி. பி. 9ஆம் நூற்றாண்டின் பிற்பகுதி என்றும், கி. பி. 12ஆம் நூற்றாண்டின் பிற்பகுதி என்றும் கூறுவர்.

**மகன்:** அம்பிகாபதி.

**பிற சிறப்புக்கள்:** இவர் பெருமையை நிலைநாட்டும் பழமொழி இருப்பதே மற்றைப் புலவர்களுக்குக் கிட்டாத பெருஞ்சிறப்பு. **"கம்பன் வீட்டுக் கட்டுத் தறியும் கவிபாடும்"** என்பது தமிழகத்துப் பழமொழி.

இலக்கண நூல்களில் வரும் எடுத்துக் காட்டுக்களில் ஒன்று, **'கல்வியிற் பெரியன் கம்பன்'** என்பது.

தமிழுக்குக் 'கதி' இருவர்: **கம்பர்; திருவள்ளுவர்** என்று கூறும் தமிழ்ப் புலவர் மரபு ஒன்று உண்டு.

**2. நூல் வந்தவழி:** இராமபிரான் வரலாற்றை இராமபிரான் காலத்திலேயே உடனிருந்து பாடியவர் 'வான்மீகி'; இவர் வடமொழியிற் பாடினார். கம்பர் அவ்வரலாற்றைத் தமிழிற் பாடினார். எனவே இது **வழிநூல்.**

**3. எல் :** தமிழ் வழங்கும் எல்லையெல்லாம் இந்நூலுக்கும் எல்லை.

I இதிகாசம் (காப்பியம்) என்ற எல்லையை உடையது.

இதிகாசம் எனப் பெறுவது தத்துவங்களை நாடக பாத்திரங்களாக அமைத்து அறநூற் கருத்துக்களை அப்பாத்திரங்களின் வாயிலாக விளக்கம் பெறச் செய்யும் நூல். 'இராமாயணம் வான்மீகி முனிவரால் பாடப் பெற்றதாயினும் கம்பர் நாடக பாத்திரங்களையும் தத்துவங்களையும் நாம் இணைத்துப் பார்த்து உண்மையை உணர்ந்து கொள்ளுமாறு இயற்றினார் இராமாயணத்தை.

II **மந்திர நூல்** என்ற எல்லையை உடையது. நாகபந்த விமோசனப் படலம் போன்றவற்றில் மந்திரங்களாக அமையும் பாட்டுக்கள் உண்டு. படித்தால் நஞ்சு நீங்கும்.

III **சமய இலக்கியம்** என்ற எல்லையும் உண்டு. சுந்தர காண்டத்தைப் படித்தாலும், வீட்டில் படிக்கச் செய்தாலும் மங்கல காரியங்கள் நடைபெறும்.

**4. நூற்பெயர்:** **'கம்பராமாயணம்'** கம்பரது இராமாயணம் என விரிந்து ஆறாம் வேற்றுமைத் தொகையாயிற்று. கம்பனே இராமாயணமாக நிற்கிறான். ஆதலின் தச்சனாற் செய்த நாற்காலி போல, கம்பரால் இயற்றப் பெற்ற இராமாயணம் எனப் பொருள் செய்து மூன்றாம் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்க தொகை எனக் கூறல் பொருந்தாது. இது ஆறாம் வேற்றுமைப் பண்புத் தற்கிழமை.

இராம+அயநம்='இராமாயணம்': இராமனுடைய செய்தியை அறிவிப்பது; இராமனுடைய நெறி; இராமனை ஏற்றுக் கொண்டிருக்கிற இடம் என்ற பொருள்களைத் தரும்.

இராம+அயநம்='இராமாயணம்' வடமொழிப் புணர்ச்சி-தீர்க்க சந்தி.

'இராமாவதாரம்'-கம்பர் இதற்கு வைத்த பெயர் இதுவே.

**5. நூலின் அமைப்பு: 'சான்றோர் கவியெனக் கிடந்த கோதா வரியினை''** என்று பாடிக் கவிக்கு அனுபவ இலக்கணம் வகுத்தவர் கம்பர். இவர் கவிகளே அவ்விலக்கணத்திற்குச் சான்று. இந்நூலை இவர் பால காண்டம், அயோத்தியா காண்டம், ஆரணிய காண்டம், கிஷ்கிந்தா காண்டம், சுந்தர காண்டம், யுத்த காண்டம் என்ற ஆறு காண்டங்களாகப் பிரித்து விருத்தப் பாவினால் பாடியுள்ளார். இவர் வாயிற் புகுந்ததால் 'விருத்தம்' (வயதுமுதிர்ந்தது) என்ற பாவானது கற்றோர் இதயத்தைக் களிவிக்கும் மங்கைப் பருவத்தை எய்தியது.

இங்கே பாடமாக அமைந்த 'பரசுராமப் படலம்' பால காண்டத்தைச் சார்ந்தது.

**6. நூல் கூறும் பொருள்:** இராமபிரானுடைய வரலாறு.

**7. காலம்:** இரண்டாங் குலோத்துங்க சோழனுடைய காலம்.

**8. இடம்:** பாடிய இடம் திருவெண்ணெய் நல்லூர்ச் சடையப்ப வள்ளலின் இல்லம்.

அரங்கேற்றம் செய்த இடம், திருச்சிராப்பள்ளியைச் சார்ந்த **திருவரங்கம் பெரிய கோயில்.**

**9 காரணம்:** குலோத்துங்கன் வேண்டுகோள். கம்பர் கூறும் காரணம் ''வான்மீகியால் புகழ்ந்து பாடப் பெற்ற இராமபிரானுடைய வரலாற்றைத் தமிழில் **ஆசையால்** பாடினேன்'' என்பதே.

**10. பிற பெருமை:** காளியின் அருளாற் பாடப்பெற்ற பெருமை உடையது என்பர். பகல் முழுவதும் வடமொழியாளர்கள், பிற துறைச் சான்றோர்களை யெல்லாம் கூட்டி, பொருளாராய்ச்சி செய்து, இரவில் நாளொன்று 700 கவிகள் வீதம் எழுதப் பெற்ற பெருமை உடையது. இரவில் தீவர்த்திப் பிடிக்கும் காளியானவள், ''பொழுது விடிந்தது கம்பா'' என்பாளாம், ''எழுதி முடிந்தது அம்மா'' என்பாராம் கம்பர்.

'கம்ப சித்திரம்' என்றும் 'கம்ப நாடகம்' என்றும் சிறப்புப் பெயர் பெற்ற பெருமை உடையது.

## பரசுராமப் படலம்

கம்ப ராமாயணத்தில் முதற் காண்டமாகிய பால காண்டத்தில் 22ஆவது படலமாகவும் இறுதிப் படலமாகவும் அமைந்தது இது. இராமபிரானுடைய வரலாற்றில் பரசுராமன் வந்து செல்லும் நிகழ்ச்சியை விரித்துக் கூறும் பகுதி ஆனமையால் இது பரசுராமப் படலம் என்ற பெயரை உடையது ஆயிற்று.

பரசுராமனுக்கும் இராமனுக்கும் நடைபெற்ற வாதம் முதிர்ந்து இறுதியில் பரசுராமன் தந்த வில்லை இராமன் கைக்கொண்டான் ஆதலின் இப்படலத்திற்குச் ''**சிலைக்கோட் படலம்**'' என்ற பெயரும் உண்டு. (சிலை, வில்; கோள் ஏற்றுக்கொள்ளல்)

### பரசுராமன்

இராமன் என்ற பெயரோடு நாம் கேள்விப் படுபவர்கள் மூவர். தசரதராமன், பலராமன், பரசுராமன் என்போர். தசரதராமன்

வில்லைக் கொண்டவன்; பலராமன் (பாரதத்தில் பாடப் பகுதியிலேயே வருகிறான்) கலப்பையை ஆயுதமாக உடையவன்: இவன் "கோடரி"யை ஆயுதமாகக் கொண்டவன். (பரசு-கோடரி.) முன் சொன்ன இருவரிலும் வேறுபடுத்திக் காட்டவே இவன் பரசுராமன் எனப் பெற்றான்.

உலகில் **ஏழு பேர் சிரஞ்சீவிகள்.** (அழியாதவர்கள்) அவர்களுள் பரசுராமனும் ஒருவன். அசுவத்தாமன், மகாபலி, வியாசன், அனுமான், விபீஷணன், கிருபன், பரசுராமன் என்ற ஏழு பேர்,

இக்ஷ்வாகு என்பவனது மரபில் வந்த பேரரசன் 'ரேணு'. அவன் மகள் '**ரேணுகை**': இந்த **ரேணுகை** என்பாளுக்கும், 'குசன்' வமிசத்தவனான விசுவாமித்திரனின் தங்கையாகிய '**கௌசிகை**' என்பவளுடைய மகனான **ஜமதக்னி** என்பவனுக்கும் பிறந்தவன் இப்பரசுராமன். பிற வரலாறுகள் அங்கங்கே எழுதப் பெறும். இராமலக்குமணர்களை விசுவாமித்திர முனிவன் (பரசுராமனுடைய தந்தை வழிப் பாட்டியின் அண்ணன்.) அழைத்துச் சென்று மிதிலையில் திருமணம் செய்து வைத்துவிட்டு அப்படியே இமயமலை சென்று விடுகிறான். இராமன் திருமணம் செய்து கொண்டு அயோத்தி மீளும் போது பரசுராமன் வருகிறான். எனவே பரசுராமன் இராமனைக் காணும்போது விசுவாமித்திர முனிவன் அங்கே இல்லை.

பரசுராமன் இராமனைப் போலவே மகாவிஷ்ணுவின் அவதாரமே. திருமாலின் பத்து அவதாரங்களுள் ஆறாவது அவதாரம் பரசுராம அவதாரம். அவதாரங்களை இரண்டு வகையாகப் பிரிப்பார்கள். **அம்ஸ அவதாரம்; ஆவேச அவதாரம்** இராமன் அம்ஸ அவதாரம்; பரசுராமன் ஆவேச அவதாரம். ஆவேசம் முழுவதும் அம்ஸத்தில் ஒடுங்கும் என்ற தத்துவத்தை அடிப்படையாகக் கொண்டது இப்பகுதி.

## பாடப் பகுதியின் தொகுப்புரை

**தசரதன் அயோத்தியை நோக்கிப் புறப்படுதல்**

இராமபிரான் தான் எடுத்த அவதாரத்திற்குப் பொருத்தமான வகையில் சனகன் தந்த பெண்ணாகிய சீதையுடன் பலவகையாக வந்து பொருந்துகிற இன்பங்களையும் அனுபவித்து வருகின்ற அச்சமயத்தில் முனிவனாகிய விசுவாமித்திரன் வேதங்களிற் கூறும் நெறிமுறைகளையும் ஆசியுரைகளையும் அவர்களுக்குக் கூறிய பிறகு வடக்கேயுள்ள இமயமலையை அடையப்போனான்.

கோசிகன் சென்றபின் தசரதன் தம் சேனைகளை நோக்கி, "நம் அயோத்திக்கு இப்போது புறப்படுக" என்று கூறவே அனைவரும் புறப்படலாயினர். அரசர் கூட்டம் தன் திருவடிகளை வணங்கி வர, தசரதன் தேர் ஏறினன்.

தன் பிள்ளைகளும் மருமகப் பெண்களும் தன் திருவடிகளை வணங்கி உடன் வரவும் ஏனைய அரசகுமாரர்களும் முனிவர்களும் மொய்த்துவரவும் மிதிலை நகரத்துள்ளார் "உடலை விட்டு உயிர் பிரிவது போன்ற" வருத்தம் எய்தவும் தசரதன் அயோத்திநகர்ச் சாலையில் திரும்பிச் சென்றனன்.

தசரதன் முறைப்படி முன்னே செல்ல, மிதிலை நகரத்துள்ளவர்கள் மனம் பின்னே செல்ல, இடையில் எல்லாவகையாலும் தன்னையே பொருந்துமாறு ஒத்துள்ள தம்பியர்கள் தன்னைத் தழுவிவர இராமனைவன் மின்னலை ஒத்த இடுப்பை உடையவளாகிய சீதையோடும் சென்றான்.

**சகுனத் தடையும் நிமித்திகன் கூற்றும்**

தசரதன் முதலியோர் சென்று கொண்டிருக்கும்போது மயில் முதலிய பறவைகள் நல்ல அறிகுறியாக வலப்புறமாகவும் காகம் முதலிய பறவைகள் தீய அறிகுறியாக இடப்புறமாகவும் பின் விளைவுகளை முன் அறிவிப்பனவாய் வந்தன; வந்த இரண்டனுள்ளும் காகம் முதலியன முன்னிறுத்தித் தடை செய்வன ஆயின என்பதைத் தசரதன் பார்த்தான். பார்த்ததும் தடை ஒன்று உள்ளது எனக் கருதி மேற் செல்லாதவனானான்.

பின்னர் நிமித்தங்களை அடிப்படையாகக்கொண்டு நன்மை தீமைகளை அறிபவனாகிய ஒரு ஆய்வாளனை அழைத்து இந்நிமித்தங்களால் உண்டாகும் விளைவு நல்லதோ அல்லது தீயதோ எனத் தசரதன் கேட்க, அந்நிமித்திகன் ஆராய்ந்துணர்ந்து "இப்பொழுதே தீங்கு வரும்; அது முடிவில் நல்லதாக அமைந்து விடும்" என்று கூறினான்.

**பரசுராமன் வருகை**

நிமித்திகன் சொல்லிக்கொண்டிருக்கையில் ஆகாயத்தே பொருந்திய இருள் சிதையும் வண்ணம் ஒளி செய்து விளங்கிப் பக்கத்தில்பரந்து வீசும் சடை முடியை உடையவனும்;

கோடாலிப் படையை உடையவனும்; மகாமேருமலை நடந்து வந்தால் எப்படியோ அப்படிவரும் நடையை உடையவனும்; சுவாசத்தால் நெருப்பையே கக்குபவனும்; நெருப்பை உமிழும் கண்களை உடையவனும்; இடியைப்போல முழங்கும் உவமை சொல்ல முடியாத கடுஞ்சொல்லை உடையவனும்;

கடலில் சிக்கித் தவிக்கும் மரக்கலங்களைப் போன்று இவ்வுலகில் உள்ள அசையும் பொருள் அசையாப் பொருள் ஆகிய எல்லாம் நடுநடுங்கித்தடுமாறவும், உலகை எட்டுத் திசைகளிலும் நின்று தாங்கும் பெருமையையுடைய திக்கு யானைகள் அச்சத்தால் அசைவற்று நின்று பின் தளர்ச்சி அடையவும், கடலானது நிலைகலங்கிக் கொந்தளித்துக் கொதித்துக் கரை புரளவும், தேவர்கள் அஞ்சியோடவும், தன்னுடைய ஒப்பற்ற பொன்மயமான வில்லை வளைத்து நாண் ஏற்றி, கூரிய நுனியை உடைய அம்புகளைத் தேர்ந்தெடுப்பவனும்;

புண்ணைக் கிழித்துக்கொண்டு இரத்தம், நிணநீர் முதலியன பெருகிவருகின்றன போலக் கண்ணைக் கிழித்துக் கொண்டு பெருகி வருகின்ற கோபமாகிய நெருப்பை உடையவனாகிய பரசுராமனுடைய கோபத்துக்குக் காரணம் சுவர்க்லோகம் பூமியில் வந்து விழுந்து விடவேண்டும் என்றுதானோ? இப்பூமி தலைகீழாக மாற வேண்டும் என்றுதானோ? எண்ணிக்கையை அழித்த உயிர்கள் எல்லாவற்றையும் இயமனது வாயில் போட வேண்டும் என்றுதானோ? இவையல்லாமல் வேறு எதுவோ? என்று இவ்வாறாக, பக்கத்தில் உள்ளவர்கள் எல்லாம் எண்ணமிட வருபவனும்;

போர்க்களத்தில் எப்படைகள் வந்தாலும் அழித்து மேலெழும் வீரம் வாய்ந்த மழுவாயுதத்தின் ஒப்பற்ற உச்சியானது புகையைக் கக்கவும், தேரின் மேலேறி மேருமலையைச் சுற்றிவரும் சூரியனும் பரசுராமனிடத்திலிருந்து வருகின்ற நெருப்பின் வெம்மையால் முறையாகச் செல்லும் வழியிலிருந்து மாறுபட்டுச் செல்லவும், கடலில் குதிரை முகவடிவில் அமைந்த ஊழித்தீயானது பரந்த ஆகாயத்தைத் தொடும்படி விரைந்து சென்று பூமியின்மேல் வருகின்ற ஒப்பற்ற முறைமைபோல வெம்மை வாய்ந்த ஒளி அவன் உடம்பிலிருந்து வெளிப்படவும்;

வலிமை உடைய தோள்கள் உயர்ந்த திசைகளின் எல்லையிலே சென்று அடைய, பக்கங்களிற் பரவும் உச்சிக்கொண்டை எனப் பெறும் சடை முடியானது ஆகாயத்தைச் சென்று தொட, பக்கத்தில் வெண்ணிறமுள்ள சந்திரன் தோற்றத்தைக் கொடுக்க; கடலென அமைந்த நீரும் நெருப்பும் காற்றும் நிலமும் ஆகாயமும் என்றிவைகள் அழியவரும் யுகத்தின் இறுதியில் திரிகின்ற பார்வதியின் கணவனாகிய சிவனை ஒப்ப வருபவனும்;

கருமணல் சூழ்ந்துள்ள கடல் சூழ்ந்த பெரிய நிலம் முழுவதும் பொருந்துமாறு தனித்துச் செல்லும் வலிமை மிகுந்த படைகளை உடையவனும், கொல்லும் தன்மை வாய்ந்த வீரம் பொருந்திய அரசர்களின் திலகம் போன்றவனான கார்த்த வீரியார்ச்சுனன் உயிருடன் கூடிய ஒரு மரம் நின்றது போல் நிற்க அவனுடைய ஓராயிரம் உயர்ந்த தோள்களாகிய வயிரம் வாய்ந்த கிளைகளை வெட்டும்படித் தொட்டு வீசப்பெற்ற கூர்மையான நுனியை உடைய கோடாலி என்னும் ஆயுதத்தை உடையவனும்;

அரசகுலம் முழுவதுக்குமே ஒப்பற்ற பழிச்சொல் ஒன்று பொருந்தவே, அதனால் நிலவுலகத்தை ஆளுகின்ற அரசகுலம் முழுவதையும் வேரற்று ஒழியுமாறு மழுவாயுதத்தால் களை வெட்டுவதுபோல் வெட்டி, உயிர்களைக் கவர்ந்து. இருபத்தொரு படிகளோடு அமைந்த குளத்தில், கடல்போல் அலைவீசுகின்ற இரத்தமாகிய தண்ணீரில் அமிழக் குளித்துத் தனிநின்று நீராடியவனும்;

மூங்கிலை ஒத்த ஒப்பற்ற தவமும், எரிகின்ற நெருப்பை ஒத்த கோபமும் பெரிதும் பொருந்துமாறு கொண்டவன்; தன் எதிரில் தளர்வடைந்து தான் மேற்கொண்ட செயலை முருகன் விட்டுவிடுஞ் சமயத்தில் கோபங்கொண்டு உயர்ந்த பறவையாகிய அன்னங்களுக்கு இனிமையுடைய வழியாக அமையும்படி உயர்ந்த சிகரத்தையுடைய கிரௌஞ்சம் என்னும் பெயருடைய மலையை ஊடுருவிச் செல்லுமாறு ஒப்பற்ற கூர்மையான அம்புகளை ஆராய்பவனும்;

மலைகள் நிலத்தினுள் புகுமாறு கடலானது மேலெழுந்து பொங்க, உலகின் இயற்கையே தன்னைத் தழுவும்படி முயல்பவனும்; பெயருக்கு ஏற்ற தன்மையினால் உயர்ந்து வளர்கின்ற மலையாகிய கிரௌஞ்சத்தை அழித்த கோடாலிப் படையையுடைய பரசுராமன் வந்தான்.

**பரசுராமன் இராமனை அடைதல்**

இராமபிரானை வேள்வி செய்து அரிதில் முயன்று மகனாகப் பெற்ற தசரதன் பரசுராமனைப் பார்த்து, கொடியவனாகிய பரசுராமன் வருவதற்குக் காரணம் என்ன? என்று எண்ணும் சமயத்தில்,

மகிழ்ந்து சென்று கொண்டிருக்கும் தசரதன் படைகள் பயந் தோட, கிளர்ந்தெழும் புருவங்கள் வளைய, கண்கள் நெருப்புப் பொறியைச் சிந்த, ஆண் இடி போல முழக்கம் செய்து கொண்டு வந்து, சிங்கம் போலத் தேரில் வருகின்ற இராமன் முன்போய் நின்முன் பரசுராமன்;

அருள் பொழியும் கண்களை உடையவனை இராமபிரானும் இவன் யாரோ என்று எண்ணும் அளவில்,

## தசரதன் வணங்கவும் மதியாது இராமனிடம் பேசுதல்

தசரதன் பரசுராமனிடத்தில் வந்து இனிமையுடன் அவனுக்குப் பூசைகளைச் செய்பவனாகி, மணம் வீசும் தன்னுடைய முடியானது பூமியிலும் அவன் திருவடிகளிலும் படியுமாறு நிலத்தில் விழுந்து வணங்கவும் கோபம் தணியாதவனாகி ஊழிக்கால நெருப்பைக் கக்கு பவன் போல முரசத்தினது முழக்கத்துக்கு ஒப்பாக ஒலியை உண் டாக்கிக் கொண்டு இராமபிரானுக்கு எதிரில் நின்று,

''நான் உன்னால் ஒடிக்கப்பட்டு விழுந்த வில்லின் தன்மையை— அது முன்னேயே ஒடிக்கப்பட்டது என்ற இரகசியத்தை—அறிவேன்; இனிமேல் உன்னுடைய அழகிய தோளின் தன்மையைச் சோதனை புரியும் விருப்பம் உடையேன்; அரசர்களை அழித்து மேம்படுதலால் திரண்ட என் தோள்களிற் சிறிது தினவும் உண்டு; வேறு எக்காரி யமும் இங்கே எனக்கு இல்லை; இதுவே என்னுடைய வருகைக்குக் காரணம் என்று கூறினான்.

## தசரதன் பரசுராமனை வேண்டுதல்

இராமனிடம் சென்று போர் வீரம் பேசும் சமயத்தில் தசரதன் சோர்வு கொண்டவனாகி, பரசுராமனை நோக்கி, இப்பூவுலகம் முழுவ தையும் வெற்றி கொண்டு, ஒரு முனிவனாகிய காசிபனுக்கு வழங்கிய அருளோனே! இவனும் திருமாலும் நான்முகனும் உனக்கு ஒரு பொருளாக ஆகமாட்டார்களென்றால், கேவலம் சிறிய மனித இனத் தில் தோன்றியவர்கள் ஒரு பொருளாகுவார்களோ! ஆகார்; இவ னும் எனதுயிரும் உனதபயம்.

நெருப்பைக் கக்குகின்ற ஒளியையுடைய கோடரிப்படையைத் தாங்கியவனே! சினங்கொள்ளுபவர் சினங்கொள்ளுவதென்பது தீவினை செய்தவர்களிடம் அல்லவா? இந்த இளையவனை இராமன் கல்வி முதலியவற்றால் உண்டானசெருக்கினால் தங்களிடத்தில் அறிவு சோர்ந்து செய்த குற்றப்பாடான காரியங்கள் எவையேனும் உளவோ? சண்டை செய்வதற்கு உரிய வலிமையை உரியவர் களிடத்தேயன்றி எளியவர்களாகிய எங்களிடத்தில் வலிமை மிக்க வராகிய தங்கள் போன்றாரது வலிமை என்ன பயனுடையது ஆகும்?

மிகுதியும் சிறந்த தவத்தை உடையவனே! நான் கொடுக் கிறேன் இதனை ஏற்றுக்கொள் என்று காசிப முனிவனுக்கு நீ கொடுக் கும் ஏழு பகுதிப்பட்ட இவ்வுலகம் முழுமைக்கும் ஒப்பற்ற தலைமைத் தன்மை உடையவனே! ஒருபொருளுக்கும் உதவாத எங்கள் மேற் சினப்பதை விட்டு விடுவீராக. குளிர்ந்த நீண்ட கடல் சூழ்ந்த இந்நிலவுலகில் வாழ்கிற நரர்களாகிய மனிதர்களைக் காப்பவரான அரசர்களை அழிப்பது என்ற கோபத்தை இப்பொழுதுதானே தணித் துக் கொண்டாய். மீளவும் கோபிப்பது முறைமையாகுமா? வெனி

யில் நின்றவர் இகழ்ந்து கூறுமாறு நடுவுநிலைமையிற் பொருந்தாத வகையில் நின்று உயர்வு பெற்ற வலிமை என்பது என்ன பயனுடையது ஆகும்? அச்செயல் சிறந்த அறத்தினால் வரப்பெற்ற செயலாகுமா? உலகில் நிலைபேறு பெற்ற அறம் எவ்வழி நிற்கின்றதோ, அவ்வழியில் நிலைபெற்று நின்று உயர்ந்த புகழைப் பொருந்துவது அல்லவா வீரம் என்று சிறப்பித்துச் சொல்லப் பெறுவது! ஆகையால் வீரனே! காலில் விழுந்து அபயம் என்று சரணடைகிற எங்களையே கொல்ல முற்படும் இது வலிமை என்று சிறப்பித்துச் சொல்லப் பெறும் வலிமை உடையது ஆகுமோ!

கல்தூணோடு மாறுபட்ட தோளை உடையவனே! என்மகனாகிய இராமன் உன்னிடத்திற் பகைமையோடு பொருந்தியவன் அல்லன். அப்படிப்பட்டவனுடைய உயிர் உடம்பை விட்டு நீங்குமானால் என்னுடைய சுற்றத்தவர்களோடும், யான் ஆளும் நாட்டைச் சார்ந்தவர்களோடும் உயர் வாழ்வு எனப்பெறும் விண்ணுலகத்தைப் பொருந்துமாறு இறப்பேன்; புகழ் வீரம் முதலியவற்றால் உயர்ந்தவனே! தங்களின் அடிமையாகிய யான் குலமுழுவதும் வேரோடு அழிந்து போகும்படி என்னை அழிக்காதே! இவ்வேண்டுகோளைத் தங்களிடம் விண்ணப்பித்துக் கொண்டேன்.

என்று இவ்வாறாகக் குறையிரந்து அவன் காலில் விழுந்து வணங்குபவனாகிய தசரதனையும் இகழ்ந்து நெருப்பு எழுமாறு கோபித்து பொன்னுடையை அணிந்து கொண்டிருக்கிற இராமனுக்கு நேராகச் சென்ற பரசுராமனுடைய நிலையை உணர்ந்து, தன்னால் இனிச் செய்யக் கூடிய செயல் ஒன்றும் இல்லை என்பதை நினைத்து, உயிர் தளாந்து இடியோடு கலந்து வருகிற மின்னலினால் தளர்ச்சியுறும் ஒளி பொருந்திய பாம்பு போல மனம் வெம்பினான் தசரதன்.

### பரசுராமன் இராமனிடம் சென்று கூறுதல்

மானத்தையே உடைமையாகக் கொண்ட முடிமன்னவனாகிய தசரதன் அறிவு சோர்வதைத் தன்னுள்ளத்தே சிறிதும் கருதாதவனாய், தானே அவ்வாறு அறிவு சோர்வதை அடைவதற்குரிய ஊழ்வினை உண்டாகியிருப்பதனை விலக்கும் வகையற்றவனாய், இராமனை நோக்கி, உடுக்கையைக் கையிற் கொண்டவனும் உமையை மணந்தவனும் ஆகிய சிவபெருமானை அக்காலத்திற் பொருந்திய வில்லானது குறையுடையது; அவ்வில்லின் பழைய வரலாற்றை நீ கேட்பாயாக.

ஒற்றைச் சக்கரத்தையுடைய தேரின்மேல் வருகின்ற சூரியனாகும் என்று சொல்லும்படியாக ஒளியை வீசுவன; தண்ணீராகிய கருப்பத்தினை மிகுதியும் கொண்டதால் வருந்தி வந்த மேகங்கள் தவழ்கின்ற வடக்கின் கண் உள்ள மகாமேரு மலையினுடைய வலிமையை ஒத்தன; நிலவுலகத்தில் உள்ளவர்களால் அணுகிப் பார்ப்பதற்கும் இயலாத தெய்வத்தன்மை வாய்ந்த சிற்பத் தொழிலைச் செய்யும் விசுவகருமனாற் செய்யப் பெற்றன; எவற்றையும் தமக்கு உவமையாகப் பொருந்தாதன ஆகிய இரண்டு விற்கள் முன்னாளில் இருந்தன.

அவற்றுள் ஒன்றை உமையின் கணவனான சிவபெருமான் விரும்பி ஏற்றுக்கொண்டான்; திருவிக்கிரமன் என்ற வடிவம் எடுத்து நின்று இவ்வுலகம் முழுவதையும் ஈரடியால் வென்றவனும் சக்ராயு

தத்தை உடையவனும் ஆகிய நெடியவன் எனப்பெறும் திருமால் மற்றைய ஒரு வில்லைத் தன் அங்கையில் ஏற்றுக்கொண்டான். இருவரும் இரு விற்களையும் ஏற்றுக்கொண்டார்கள் என்ற செய்தியை அறிந்த தேவர்கள், இரண்டனுள் வலிமையைப் பொருந்துவது எது? என்ற வினவைப் பிரமனிடம் அக்காலத்தே வினவ,

தேன் ஒழுகுகின்ற அழகிய தாமரை மலரில் வீற்றிருப்பவனுகிய பிரமனும் தேவர்களுடைய எண்ணம் சிறந்தது என்பதை எண்ணி, பொருந்துவதாகிய ஒரு தந்திரத்தினுல் எல்லாரினும் மேம்பட்டவர்களாய், காரண நிலையில் ஒருவராய், காரிய நிலையில் இருவராய் அமைந்த சிவன், திருமால் ஆகிய இருவரையும் வலிமை பொருந்திய கொடிய வில்லைக் காரணமாக வைத்து ஒரு பெரும்போரில் ஈடுபடும் படிச் செய்து விட்டான்.

பிரமனுடைய ஏற்பாட்டின்படி, திருமாலும் சிவனும் இரண்டு விற்களையும் வளைத்துத் தனித்தனியே நாண் ஏற்றினர். எழுவகைப் பட்ட உலகங்களும் பயப்பட, திசைகள் நிலை குலைய, வெம்மையான கோபத்தீயானது பொங்கியெழ, கடுமை சிறிது சிறிதாக அதிகப்படும் படிப் போரைச் செய்கின்ற சமயத்தில், முப்புரங்களையும் எரியூட்டிய சிவபெருமான் கைக்கொண்ட கட்டமைந்த வில் சிறிதே ஒடிந்தது ஆக, பின்னர் அப்பரமசிவன் வெகுண்டு,

மீண்டும் போரைத் தொடங்கும் சமயத்தில் தேவர்கள் தடுக்கவே நெற்றியில் அமைந்த கண்ணை உடையவனுன சிவபெருமான் தேவர்களுக்கு அரசனுகிய இந்திரன் கையில் அவ்வில்லைக் கொடுத்தனன்; வெற்றியை வெளிப்படுத்திக் காட்டிய திருமாலும் அந்த வில்லைத் தவத்திற் சிறந்த 'இரிசிகன்' என்னும் முனிவனிடம் கொடுத்தான்.

இரிசிக முனிவன் தன்மகனும் என் தந்தையும் ஆகிய ஜமதக்னி முனிவனிடம் கொடுக்க என் தந்தை எனக்குக் கொடுக்க, வந்த வரலாற்றையுடைய கட்டமைந்த வில்லாகும் இது. நீ இவ் வில்லை எளிமையாக வளைப்பாயானுல், வலிமை வாய்ந்தவனே! உன்னேடு ஒப்பாகும் பெருமை அமைந்த மன்னர்கள் இல்லை; யான் நினைத்து வந்த போரையும் உன்னேடு செய்யமாட்டேன்; இன்னும் யான் சொல்ல விரும்புவது ஒன்று உண்டு, அதையும் கேட்பாய்.

பெருமையுடையவனே! முன்னமேயே ஒடிந்து பழுதுபட்ட வில்லை ஒடித்த உன் வலிமையை ஆராய்ந்து பார்ப்பது மனவூக்கத்தைக் கொடுக்கும் செயல் அன்று. வேறும் உண்டு, கேள்; அரசர் வழி வந்த உம்மிடம் தொடர்ந்து வரும் வழிப்பகையும் உடையேன். முற்காலந்தொட்டு வரும் ஞானிகளும் நூல்களும் குற்றம் இல்லாதவன் என்றும், சினத்தை அறவே ஒழித்தவன் என்றும் என்தந்தையைப் பற்றிப் புகழாநிற்கவும் அவற்றை நோக்காமல் கொடிய அசுரனைப் போன்ற மன்னன் ஒருவன் என் தந்தையைக் கொல்ல, யான் மனம் கலங்கி,

இருபத்தொரு தலைமுறை நிலவுலகத்திலுள்ள முடியுடை அரசர்களையெல்லாம் விரும்பி எழுகின்ற கோடாலி என்னும் படையின் கூரிய நுனியினுல் வேர் அற்றுப் போகும்படிப் பயிர்களுக்குக் களை பறித்தல் போல அழித்து, அவ்வரசர்களுடைய தசையிலிருந்து எழுகின்ற இரத்த வெள்ளம் ஆகிய நீர்த்துறையிலே வேத விதிப்

படி என்தந்தைக்குச் செய்யவேண்டுவன வான நீர்க் கடன்களைச் செய்து முடித்தேன்; அது முதலாகத் தடுப்பதற்கரிய என் கோபத்தை அடக்கி வந்துள்ளேன்.

என்னல் வெற்றி கொள்ளப் பெற்ற இவ்வுலகம் முழுவதையும் காசிப முனிவனுக்குத் தானமாகக் கொடுத்தேன்; மிக்கெழுந்த பகைவர்களையெல்லாம். ஒடுங்கச் செய்து வந்தேன்; அளவற்ற பெருந்தவங்களைச் செய்து ஒப்பற்ற அருமையான மகேந்திரமலையில் தங்கி இருந்தேன் : நீ மிதிலையில் வில்லை ஒடித்ததனுல் உண்டாகிய சப்தம் அவ்விடத்தே என் செவியில் வந்து படுதலால் கோபங் கொண்டு வந்தேன்; வலிமை உடையையானுல் உன்னுடன் போர் செய்வேன்; வில்லை வளைத்திடு, என்று பரசுராமன் வில்லின் வரலாற்றையும் தான் மன்னர்களோடு வழிப்பகை கொண்ட வரலாற்றையும் இப்போது இராமனிடம் வந்த வரலாற்றையும் கூறி முடித்தான்.

## இராமன் நாரணன் தனுவை வாங்கிக் கூறுதல்

பரசுராமன் வில்லின் வரலாற்றையும், தன் வழிப்பகையை முடித்துச் சினந் தணிந்த வரலாற்றையும், மீண்டும் சினங் கொண்ட வரலாற்றையும் கூறியபின், இவ்வளவும் யாருக்காகக் கூறப்பெற்றனவோ, அந்த இராமபிரான் புன்முறுவற் செய்து அறம் ஒளி வீசுகின்ற முகத்தையுடையவனுகி, திருமால் தன் வலிமை தோன்ற எடுத்துப் பயின்றதும், வெற்றியைத் தந்ததும் ஆகிய அந்த வில்லைத் தருக என்று இராமன் சொல்ல; அவ்வில்லைப் பரசுராமன் கொடுத்தான். வீரனுகிய இராமபிரான் அவ்வில்லை எளிமையாக வாங்கிக் கையிற் கொண்டவனுகி, நெருங்கிய பெரிய சடையை உடைய பரசுராமன் அஞ்சும் வண்ணம் அவ்வில்லைத் தன் தோள் வலிமை பொருந்த வளைத்து,

பரசுராமனைப் பார்த்து, நிலவுலகில் உள்ள அரசர்கள் எல்லாரையும் கொன்ருய்; நான் அதையே காரணமாக வைத்து உன்னைப் பழிவாங்கவேண்டும் என்று கருதிக் கொல்லலாம். ஆயினும் நீயோ வேதங்களை உணர்ந்து தெளிந்த மேன்மை மிக்க ஜமதக்னி முனிவனின் மகன்; அன்றியும் தவவேடம் மேற்கொண்டுள்ளாய்; ஆகையால் உன்னைக் கொல்லுவது முறையன்று; எனினும் யான் இவ்வில்லில் வைத்த இந்த அம்பானது குறிதவறிப் பிழைப்பது அன்று; எனவே இந்த அம்புக்குக் குறிப் பொருளாவது யாது? விரைவாகச் சொல்லுக என்ருன் இராமன்.

## பரசுராமன் இராமனைத் துதித்தல்

தான் கொடுத்தவில்லை எளிமையாக வாங்கி வலிமையாக வளைத்த செயலைக் கண்டு அஞ்சிய பரசுராமன், இராமனைப்பார்த்து, அறநெறியை மேற் கொண்டவனே! என்மேல் கோபங் கொள்ளற்க; நீயே இவ்வுலகில் உள்ளார் அனைவர்க்கும் ஆதி என்பதை இப்பொழுதே யான் அனுபவத்தால் தெரிந்துகொண்டேன்; துளசி மாலையையும் சக்ராயுதப் படையையும் கொண்டவனே! வெண்மையான பிறைச் சந்திரனை உடைய சிவபெருமான் முன்னே கையிற் பிடித்த வில்லானது வெவ்வேருகப் பிளந்து அழியுமே

யல்லாமல் பேராற்றலுடைய உம் கையாற் பிடித்தற்கும் அமையக் கூடியதோ !

பொன்னாற் செய்து கட்டப்பெற்ற வீரக்கழலையும் அழகைக் கொண்ட தோளையும் உடையவனே! நீ ஒளிவிடுகின்ற சக்கராயுதப் படையை உடைய திருமாலாகவே இருத்தல் உண்மையே. ஆகை யால் இவ்வுலகத்துக்குத் துன்பம் என்பது யாது உள்ளது? என்னால் இப்போது கொடுக்கப் பெற்ற உன்னுடைய வில்லும் உன் வலி மைக்கு ஏற்றது ஆகாது.

உன்னால் விடப்பெற இருக்கிற இந்த அம்பானது இப்பொழுது குற்றம் அடையாதவாறு என்னால் செய்யப் பெற்ற தவங்கள் எல்லா வற்றையும் அந்த அம்பு தனக்குரிய இலக்காகக் கொண்டு அழிக்கக் கடவது என்று பரசுராமன் கூற, அப்பொழுது இராமன் தன்னு டைய கையைச் சிறிதே தளர்த்தலும், அவ்வம்பும் விரைந்து சென்று அப்பரசுராமனின் குற்றமற்ற தவத்தையெல்வால் வாரிக் கவர்ந்து கொண்டு மீண்டது.

நன்றாகக் கழுவித் தூய்மை செய்யப்பெற்ற நீலமணியின் நிறத்தை ஒத்த மேனியனே! வளப்பம் அமைந்த துளசிமாலையை அணிந்தவனே! எவ்வுயிர்க்கும் ஆதரவாளன் என நின்ற புண்ணி யனே! நீ கருதிய பொருள்கள் எல்லாம் கருதியவாறே இனிது முடி வனவாகுக. யான் விடை பெறுகிறேன் என்று கூறி வணங்கிச் சென்றான்.

### இராமன் தசரதன் துயரைத் தீர்த்தல்

பரசுராமன் செருக்கும் தவமும் அழிந்து சென்ற பிறகு குற்ற மற்றவனாகிய இராமன் ஐந்துவகையான அறிவும் அழியப்பெற்று, உயிரும் வருந்தி, தனக்காக மனம் கசிந்து கொண்டிருக்கும் தந்தை யாகிய தசரதனை எல்லையின்றிக் கரை புரண்டெழுகின்ற பேரன் புடன் வணங்கி அவனுக்கு முன்னால் சென்று நின்று அவன் இறங்கி யிருந்த பெரிய துயரமாகிய கடலிலிருந்து கரையேறும்படிச் செய் தான்.

### தசரதன் துன்பக் கடலிலிருந்து கரையேறி இன்பக் கடலில் விழுதல்

பரசுராமன் வருகையால் ஐந்து வகைப்பட்ட அறிவையும் இழந் திருந்து மீண்டும் வெளிப்படும் உணர்வை உடையவனும், துன்பம் நீங்கிக் களிப்பை மிகுவிக்கின்ற மதம் பொருந்திய யானைப் படை களை உடையவனும் ஆகிய தசரதன் நடுவிலே மூழ்குவதற்கு அருமை யான துன்பமாகிற பெருங்கடலின் எல்லையைக் கண்டறிந்தவன் இப் போது களிப்பு என்னும் கரையில்லாத கடலிடையே மீண்டும் மூழ்கினான்.

### தசரதன் மகிழ்ச்சி

அன்பு சிறிதும் இல்லாத உள்ளத்தையுடைய அப்பரசுராமன் கையிலிருந்த கட்டமைந்த வில்லைத் தான்வாங்கிக்கொண்டு அவனுக்கு ஒரு பழியைக் கொடுத்த ஒப்பற்றவனாகிய இராமனை அணைத்துநின்று உச்சி மோந்து அருவிப்பால நீர் பெருகுகின்ற தன்னுடைய கண்கள் என்று சொல்லப் பெறும் கும்பங்களால் நீராட்டினான்.

வஞ்சனை கலவாமல், இச்சிறுவயதில் செய்து முடித்த இவ்வாண்மைக்குக் காரணமான செயலை மூன்றாகப் பேசப்பெறும் உலகின் மக்கள் எல்லாரும் ஒன்றாகக் கூடிச் செய்து முடிக்க எண்ணினாலும் செய்து முடிக்கக் கூடியதோ! முடியாது. இவ்வினைஞனாகிய இராமனே நல்வினை தீவினைகளைச் செய்தவர்களுக்கு இவ்வுலகப் பயனையும் மறுவுலகப் பயனையும் வகுத்துத் தருபவனாகிய மெய்மைப் பொருளாம் பரம் பொருள் என்று கூறினான்.

**இராம அயோத்தி சேர்தல்**

அப்பொழுது தேவர்கள் பூமழையைப் பொழிந்தார்கள். பூமழையைப் பொழிந்தவர்களாய் அங்கே வந்த தேவர்களுள் அழகிய வேலாயுதத்தைக் கையில் கொண்டிருக்கிற வருணனை அழைத்து, பெருமை பொருந்திய கொடிய இவ்வில்லைப் பாதுகாப்பாயாக என்று அவனிடம் கொடுத்து; தன்னுடைய சேனைகள் ஆரவாரித்துப் பின் தொடர, அச்சம் தரும் கடல் சூழ்ந்த அயோத்தி என்னும் பெரிய நகரத்தை அடைந்தான்.

**தசரதன் பரதனை நோக்கி ஒன்று கூறத் தொடங்குதல்**

அயோத்தி மாநகரத்தை வந்து பொருந்திய இராமபிரான் முதலானோர் அவர்அவர்க்குப் பொருந்திய இன்பங்களை அனுபவித்து வரும் நாளில் மார்ச்சனை பொருந்திய முரசுக் கூட்டங்கள் விளங்குகின்ற சேனையை உடையவனும், ஆடவர்களில் உயர்ந்தவனும், ஆண்மைத் தன்மையிற் பெருமை பெற்றவனும், ஆகிய தசரதன் அப்பரதனைப் பார்த்து, நினைப்பதற்கு அரிய பெருமை வாய்ந்த ஒரு பொருள் பொதிந்த செய்தியை இயம்புவான் ஆயினன்.

**தசரதன் கூறுதல்**

ஐயனே நின்னுடைய பாட்டனாரின் கட்டளை ஒன்று உண்டு. நும்மைக் காண்பதற்கு விரும்பிய ஒரு கருத்துடையவர் ஆகையால் அணிகலன்கள் ஒலி செய்யும் மார்பையுடைய பரதனே! குளத்தில் சங்கு ஒலிக்கின்ற நீர்வளஞ் சூழ்ந்த கேகய நாட்டினை அடைக என்று கூறினான் தசரதன்.

**பரதன் புறப்பட்டுச் செல்லுதல்**

தசரதன் கட்டளையிட்ட அளவில் பரதன் தசரதனை வணங்கிச் சென்று இராமபிரானுடைய திருவடிகளாகிய பூக்களைத் தலையிலே அழகுபெற அணிந்து கொண்டு சென்றான். அந்த இராமபிரானை அங்கே அல்லாமல் தனக்கு வேறு உயிர் இல்லையாகையால் நீங்குதல் இல்லாத உயிரை விட்டுப் பிரிந்து உடம்பு மட்டும் தனியே சென்றாற் போலப்பரதன் இராமனை விட்டு விட்டுப் போய்விட்டான்.

பிடரி மயிர்கள் விரிந்த குதிரைகள் பூட்டிய தேரினையுடைய 'யுதாசித்து' என்று சிறப்பாகக் கொண்டாடப் பெறுகிற சேனைகளையுடைய அரசன் பக்கத்தில் வரச் சென்று; இளையவனாகிய சத்துருக்கனோடும் ஏழுநாட்களிற் சென்று குளிர்ந்த நீர் வளத்தையுடைய கேகய நாட்டை அடைந்தான்.

**கவிக் கூற்று**

அப்பரதன் சென்றபின் அரசர்க்கரசனாகிய தசரதன் குற்றமற்ற பேரரசை ஆட்சி செய்து வரும் சமயத்தில் தேவர்கள் செய்த பெரிய

தவம் ஒன்று உண்டு ஆகையால் அது பற்றிப் பின்பு அங்கே மிகுதியாக நடந்த செயல்களைச் சொல்லுவோம் என்று கம்பர் அடுத்த காண்டத்து நிகழ்ச்சிகளைச் சொல்லப் புகுகிறார்.

## 1. இராமனும் சீதையும் இன்பம் நுகர கோசிகமுனி தவம் செய்யப் போதல்

### உரை

**தான்**-இராமபிரான்,
**ஆவது ஓர் வகையே**-தான் எடுத்த இராமாவதாரத்துக்கு ஏற்றதாகியஒருமுறைஅமைய,
**சனகன் தரு தையலும்**-சனக முனிவன் தந்த பெண்ணாகிய சீதையுடன்,
**நானுவிதம் உறு போகமும்**-பல விதமாக வந்து பொருந்துகின்ற இன்பங்களையும்,
**நுகர்கின்ற**-மிகுதிப்படத் துய்க்கின்ற,
**அ நாள் வாய்**-அச்சமயத்தில்,
**முனி கோசிகன்** - முனிவனாகிய விசுவாமித்திரன்,
**ஆனா மறை நெறி**-அழிதல் இல்லாத வேதங்களிற் கூறிய வழி முறைகளையும்,
**ஆசிகள்**-ஆசியுரைகளையும்,
**அருளி**-அவ்விருவருக்கும் அருள் செய்து,
**போனான்**-சென்றான்,
**வடதிசை வாய்**-வடதிசைக் கண் சென்ற அவன்,
**உயர் பொன் மால் வரை புக்கான்**-உயர்ந்து விளங்குகிற அழகிய பெரிய இமயமலையைச் சார்ந்தான்.

### தெளிவுரை

இராமபிரான் தான் எடுத்த அவதாரத்துக்குப் பொருத்தமான ஒரு வகையில் சனகன் தந்த பெண்ணாகிய சீதையுடன் பலவகையாக வந்து பொருந்துகின்ற இன்பங்களையும் மிகுதியாய்த் துய்க்கின்ற அச்சமயத்தில் முனிவனாகிய விசுவாமித்திரன் அவர்களுக்கு அழியாத வேதங்களிற் கூறிய நெறி முறைகளையும் ஆசியுரைகளையும் அருளிய பிறகு வடதிசைக்கண் புறப்பட்டுப் போனான். போன அவன் உயர்ந்து விளங்குகிற அழகிய பெரிய இமயமலையைச் சார்ந்தான்.

### விளக்கவுரை

இராமனும் சீதையும் பல வகையான இன்பங்களையும் துய்க்கின்றார்கள். **நானுவித போகம்**-பல வகையான இன்பம். உலகத்தையே காக்கும் பேரறம் பூண்ட கடவுளர்களாகிய திருமாலும் திருமகளுமே இவர்கள் என்றாலும் இந்த அவதாரம் எடுத்த வரையில் எவ்வாறு இன்பம் துய்க்க வேண்டுமோ அவ்வகையில் தம்மிருவருக்கும் பொருந்தியவாறு துய்த்தார்கள் என்பதை 'ஆவது ஓர் வகையே' நுகர்ந்தார்கள் என்றார்.

**அந்நாள் வாய்**-அந்நாளில். கோசிகன்-விசுவாமித்திரன். மறைகள்-வேதங்கள். வேதங்களுக்குத் தோற்றமும் அழிவும் இல்லையாகையால் ஆனமறை என்றார். கோசிகன் இராமனுக்கும் சீதைக்கும் பொருந்துவதான அறநெறிகளையும் ஆசியுரைகளையும் கூறினான்.

விசுவாமித்திரன் வடக்கே சென்றவன் இமயமலையை அடைந்தான்.

### இலக்கணம்

**உறு போகம்**-வினைத்தொகை.
**உறுபோகமும்**-உம்மை முற்றும்மை.
**நுகர்கின்ற** நாள்-பெயரெச்சத் தொடர்.
**அந்நாள் வாய்**-சுட்டு, காலத்தைக் குறித்தது.
வடதிசை **வாய்**-'வாய்' இரு சொற்களிலும் ஏழாம் வேற்றுமை உருபின் பொருள்பட வந்த சொல்.
**ஆறு மறை**-ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.
**மறை நெறி**-ஏழாம் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்க தொகை.
**நெறியாசிகள்**-உம்மைத் தொகை.
**அருளி**-செய்து என் வாய்பாட்டு வினையெச்சம்.
**போனான்**-முற்றெச்சம்.

## 2. தசரதன் அயோத்தி செல்லத் தேரேறுதல்

### உரை

**அப்போதினில்**-கோசிகன் போன பிறகு சிலநாள் சென்றபின், **முடிமன்னவன்**-முடிமன்னவனும், **உரவோன்** - வலிமையுடையவனுமாகிய தசரதன், **அனிகம் தனை**-தம் சேனைகளை நோக்கி, **'நம் அணி நகர் செல இப்போது எழுக'** - நம்முடைய அழகிய அயோத்தி நகர் செல்வதற்கு இப்போது புறப்படுக, **என்று இனிது இசையா**-என்று இனிமையுடன் கூறி, **கைப் போதகம் நிகர் காவலர் குழு**-யானைகள் ஒத்த அரசர்களின் கூட்டம், **வந்து அடி கதுவ**-வந்து தன்னுடைய திருவடிகளைப் பணிந்து சுற்ற, **ஒப்பு ஓது அரு தேர் மீதினில்**-ஒப்புமை சொல்ல முடியாத தேரின்மேல், **இனிது ஏறினன்** - இனிமையுண்டாக என்று ஏறினன்.

### தெளிவுரை

கோசிகன் சென்று சில நாள் கடந்த பின் முடிமன்னவனும் வலிமையுடையவனுமாகிய தசரதன் தம் சேனைகளை நோக்கி, "நம்முடைய அழகிய அயோத்தி நகர் செல்வதற்கு இப்போது புறப்படுக" என்று இனிமையுடன் கூறி, யானைகளை ஒத்த அரசர்களின் கூட்டம் வந்து தன்னுடைய திருவடிகளைப் பணிந்து சுற்ற; ஒப்புமை சொல்ல முடியாத தேரின்மேல், 'இனிமை யுண்டாக' என்று ஏறினன்.

### விளக்கவுரை

தசரதன் அயோத்தி நகர் புறப்படுவதற்காகத் தன் தேரில் ஏறினன்.

தசரதனை முடிமன்னவன் என்றும் உரவோன் என்றும் கம்பர் அடைமொழி கூறி அமைத்தார். இராமனுக்கு இன்னும் ஆட்சி முடி சூட்டப் பெறவில்லை ஆகையால் தசரதனை முடிமன்னவன் என்றார். பரசுராமனை எதிர்ப்படப் போகிற தசரதன் அங்கே தாழ்ந்து நிற்கப் போகும் நிலையை மனங்கொண்டு முடிமன்னவன் என்றும், உரவோன் என்றும் அமைத்துக் காட்டினார்.

**அனிகம்**-சேனை-"நம் அணிநகர் செல இப்போது எழுக" என்பது தசரதன் படைகளை நோக்கிக் கூறிய வார்த்தை.

**கைப் போதகம்**-துதிக்கையை உடைய யானை. சிற்றரசர்கள் பலரும் வந்து திருவடிகளைச் சுற்றி வணங்கத் தேர் ஏறினான். **காவலர் குழு**-அரசர்களின் கூட்டம்.

தசரதனுடைய தேர் ஒப்புமை சொல்ல முடியாது உயர்ந்த தேர். பத்துத் திசைகளிலும் செல்லுமாறு ஓட்டியவன் தசரதன் (தசம்-பத்து; ரதன்-தேர் செலுத்தியவன்.) ஆதலின் அவனால் பத்துத் திசைகளிலும் சென்று வந்த பெருமை உடையதாதலின் **ஒப்பு ஓது அரு தேர்** என்றார்.

இனிது ஏறுதல்-வெற்றி உண்டாவதாக என நினைத்து வழிபடு தெய்வம் வாழ்த்தி, வலக்காலை முன்வைத்து ஏறுதல்.

### இலக்கணம்

**முடிமன்னவன்**, **கைப் போதகம்** } இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்க தொகைகள்.
**மாநகர்**-உரிச்சொல் தொடர்.
**எழுக**-வியங்கோள் வினைமுற்று.
**இசையா**-'செய்யா' என் வாய்பாட்டு வினையெச்சம் உடன் பாட்டுப் பொருள்.
**நிகர்**-உவமை உருபு.
**காவலர் குழு**-ஆறும் வேற்றுமைத் தொகை.
**கதுவ**-'செய' என் வாய்பாட்டு வினையெச்சம்.

## 3. தசரதன் அயோத்தி நகர்ப் பாதையில் திரும்புதல்

### உரை

**மறவோன்**-வீரம் வாய்ந்தவனாகிய தசரதன்,
**தன் மக்களும்**-தன் பிள்ளைகளும்,
**மரு மக்களும்** - மருமகள் நால்வரும்,
**தன் கழல் நனி தழுவ**-தன்னுடைய திருவடிகளை நன்றாக வணங்கி உடன்வர,
**மறு மக்களும்**-அரச குமாரர்களும்,
**அயல் மக்களும்**-ஏனை முனிவர் முதலானோரும்,
**வயின் மொய்த்திட** - எங்கெங்கே இடம் இருக்கின்றதோ அங்கங்கெல்லாம் மொய்த்துக் கொண்டுவர,
**மிதிலைத் தொல் மக்களும்**-மிதிலை நகரத்துள்ள பழமையான மக்களும்,
**மனம் உக்கு**-மனம் உடைந்து,
**உயிர் பிரிவு என்பது**-உடலைவிட்டு உயிர் பிரிதல் என்று சொல்லப்படுவதாகிய,
**ஓர் துயரின் வன்மைக் கடல் புக**-ஒப்பற்ற துன்பம் என்னும் வன்மைக் கடலிற் சென்று முழுக,
**உய்ப்பது ஓர் வழி புக்கனன்**-மிதிலையிலிருந்து அயோத்திக்குக் கொண்டு செலுத்துவதாகிய ஒரு வழியில் தசரதன் திரும்பினான்.

### தெளிவுரை

வீரம் வாய்ந்த தசரதன் தன் பிள்ளைகள் நால்வரும் தன் மருமகள் நால்வரும் தன்னுடைய திருவடிகளை நன்றாக வணங்கி உடன்

வர, அரச குமாரர்களும் ஏனை முனிவர் முதலானோரும் எங்கெங்கே இடம் இருக்கின்றதோ அங்கங்கெல்லாம் மொய்த்துக் கொண்டுவர மிதிலை நகரத்திலுள்ள பழமையான மக்களும் மனம் உடைந்து, உடலைவிட்டு உயிர் பிரிதல் என்று சொல்லப் பெறுவதாகிய ஒப்பற்ற துன்பம் என்னும் வன்மையாகிய கடலிற் சென்று முழுக; மிதிலையி லிருந்து அயோத்திக்குக் கொண்டு செலுத்துவதாகிய ஒரு வழியில் தசரதன் சென்று புகுந்தான்.

## விளக்கவுரை

இராமன் முதலிய பிள்ளைகளும் சீதை முதலிய மருமகப் பெண் களும் தன் திருவடிகளை வணங்கி உடன்வர, அரச குமாரர்களும் முனிவர் முதலானோரும் அங்கங்கே மொய்த்துக் கொண்டுவர, மிதிலை யின் நெடுங்காலமாக வாழ்கிற மக்கள் துன்பக்கடலில் ஆழ, தசரதன் அயோத்தி வழியை அடைந்தான்.

மிதிலை நகரம் தன்னிடத்துக்கே உரிமையுடையதாக வைத்தி திருந்த திருமகளைத் தானே மனமுவந்து வெளியில் அனுப்புகிறது என்பதை மிதிலை வாழ் பழங்குடி மக்களே அறிவார்கள் ஆனமையால் மிதிலைத் தொன் மக்கள் துயர்க்கடல் புக என்றார்.

பொதுவாக, துன்பத்துக்குக் கடல் உவமை. துன்பங்கள் எல்லா வற்றிலும் கொடிய துன்பத்தை வன்மைக் கடல் என்று கூறினர். அதற்கும் ஒரு எடுத்துக்காட்டுத் தேவையான பொழுது 'உயிர் பிரிதல்' என்று உதாரணம் காட்டினர். **உடலைவிட்டு உயிர் பிரிதல்** துன்பங்கள் எல்லாவற்றிலும் பெரிது. வலி அதிகமான பொழுது 'உயிர் போவதுபோல் வலிக்கிறது' என்று கூறுவர்.

யான் ஏதும் பிறப்பு அஞ்சேன் **இறப்பதனுக்கு என் கடவேன்** என்று இறப்பதற்கு வருந்துகிறார் மாணிக்கவாசகர்.

கடல் தன்னுடைய ஆழம் இவ்வளவு என்று அறிவிக்காமல் தன் னிடம் வந்தவர்களை இங்குமங்குமாக அலைக்கழித்து இறுதியில் அவர் களை அழிப்பதுபோல, துன்பமும் தன்னுடைய அளவு இவ்வளவு என்று அறிவிக்காமல் தன்னை வந்து அடைந்தவர்களை இங்குமங்கு மாக அலைக்சழித்து இறுதியில் சாவை மேற்கொள்ளச் செய்யும் ஆதலால் துன்பம் கடலோடு ஒப்புமை உடையதாயிற்று.

## இலக்கணம்

**நனி**-உரிச்சொல்.
**கழல்**-தானியாகு பெயர்.
**தழுவ, மொய்த்திட, புக**-செயவென் வாய்பாட்டு **வினை** யெச்சம்.
**மன்**-முதனிலைத் தொழிற் பெயர். ஆகுபெயராக வந்தது.
**தொன் மக்கள்**-பண்புத் தொகை.
**உயிர்ப் பிரிவு**-ஆறும் வேற்றுமைத் தொகை.
**பிரிவு**-தொழிற் பெயர்.
**துயர்க்கடல்**-உருவகம்.
**வன்மைக் கடல்**-பண்புத் தொகை.
**உய்ப்பது**-வினையாலணையும் பெயர்.

## 4. தசரதன் முதலியோர் வரிசையிற் செல்லுதல்

### உரை

**நெடு முடி மன்னவன்**-பெருமை மிகுந்த முடியையுடைய அரசனாகிய தசரதன்,
**முன்னே முறையின் செல**-முதலாவதாக முறைப்படிச் செல்லவும்,
**மிதிலை நன் மாநகர் உறைவார்**-மிதிலை என்று சொல்லப்பெறும் நன்மையும் பெருமையும் உடைய நகரத்தில் உறையும் மக்களின் மனம் பின்னுற் செல்லவும்,
**நடுவே** - தசரதனுக்கும் மிதிலை மக்கள் மனத்திற்கும் நடுவே,
**தன்நேர் புரைதரு தம்பியர்**-தன்னை எல்லா வகையாலும் பொருந்துமாறு ஒத்த தம்பியர்கள்,
**தழுவிச் செல**-தன்னைத் தழுவி வரவும்,
**மின்னலை மழை வாழ்**-மேகத்தில் வாழ்கிற,
**மின் நேர் புரை**-மின்னலை எல்லா வகையாலும் பொருந்துமாறு ஒத்த,
**இடையாளொடும்** - இடுப்பினை உடையவளாகிய சீதையொடும்,
**வீரன் இனிது ஏகினன்**-வீரனாகிய இராகவன் இனிமையாகச் சென்றான்.

### தெளிவுரை

பெருமை மிகுந்த முடியையுடைய அரசனாகிய தசரதன் முறைப் படி முன்னே செல்லவும், மிதிலை என்று சொல்லப் பெறும் நன்மையும் பெருமையும் உடைய நகரத்தில் உறையும் மக்களின் மனம் பின்னே செல்லவும், நடுவே, தன்னை எல்லா வகையாலும் பொருந்து மாறு ஒத்த தம்பியர்கள் தன்னைத் தழுவி வரவும் மேகத்தில் வாழ்கிற மின்னலை எல்லா வகையாலும் பொருந்துமாறு ஒத்த இடுப்பினை யுடையவளாகிய சீதையோடும் வீரனாகிய இராமன் இனிமையாகச் சென்றான்.

### விளக்கவுரை

தசரதன் முடியானது பெருமையுடையது. சூரிய குலத்தரசர்கள் அனைவராலும் தாங்கும் பெருமையும் உலகைத்தையே காத்து நிலை நிறுத்தவல்ல திருமால் தனக்காகவே இராமனாக அவதாரம் செய்து தாங்கக் காத்திருக்கும் பெருமையும், கம்பர் பெருமானை ஆதரித்த வெண்ணெய் நல்லூர்ச் சடையப்ப வள்ளலின் முன்னோனாகிய தமிழ்ச் சான்றோனால் தொடவும் பாதுகாக்கப் பெறவும் ஆக அமைந்த பெருமை.

**முறையிற் செல்லுதல்**-பேரரசன் என்ற தகுதியிற் செல்லுதல். மிதிலையை நன் மா நகர் என்றார். உலகத் தாயாக விளங்கும் திரு மகள் அவதாரமாகிய சீதையைத் தானே பெற்ற நன்மை, திருமாலே இராமனாக வந்திருக்கிறான் என்று தெரிந்தும், இவள் அவனுக்கே ஆட்படுவாள் என்று தெரிந்தும் கால்கடுக்க அத்திருமாலே தன்னை நோக்கி நடந்து வந்து கேட்டபோது வில்லை வளைத்தால்தான் தருவேன் என்று நின்ற பெருமை ஆகிய இரண்டையும் கொண்டது மிதிலை.

**நேர்புரை தருதல்**-நேராக ஒத்தல், இராமனும் தம்பியரும் தன் மையால் நோக்கும்போது ஒரே தன்மையினர் என்பதாம். நான்கு வேதங்களும் போல நான்கு பேரும் ஒத்த தன்மையர் என்பதாம்.

**மழை வாழ்மின்**-மேகத்தில் வாழ்கின்ற மின்னல். மின்னலை ஒத்த இடுப்பினையுடையாள் சீதை.

இராமனை 'வீரன்' என்ற தனிச் சொல்லால் இங்கே குறிப்பிடுகிறார் கம்பர், பரசுராமனை வெல்லப் போகிறான் ஆதலின்.

### இலக்கணம்

**நெடுமுடி**
**நன்மாநகர்** } பண்புத் தொகைகள்.

**மாநகர்**-உரிச்சொல் தொடர்.

**முடி மன்னவன்**-இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்க தொகைகள்.

**புரைதரு தம்பிய**
**வாழ் மின்** } வினைத் தொகைகள்.

**மழை வாழ்**-ஏழாம் வேற்றுமைத் தொகை.

**மழை**-காரியவாகு பெயர்.

## 5. தசரதன் தீ நிமித்தம் கண்டு நிற்றல்

### உரை

**ஏகும் அளவையின்** - இவ்வாறு சென்று கொண்டிருக்கும் பொழுது,
**மயில் வலமும்**-மயில் முதலிய பறவைகள் நல்ல அறிகுறியாக வலப்புறமாகவும்,
**காகம் முதலிய இடமும்**-காகம் முதலிய பறவைகள் தீய அறிகுறியாக இடப்புறமாகவும்,
**வந்தன**-பின் விளைபவைகளைத் தெரிவிக்கும் நோக்கத்தோடும் வந்தன,
**முந்திய தடை செய்வன**-வந்த இரண்டனுள்ளும் காகம் முதலியன முனைனிறுத்தித் தடை செய்வனவாயின என்பதை,
**கண்டான்**-தசரதன் பார்த்தான்;
**நாகம் அனன்**-யானையை ஒத்த தசரதன,
**இடை இடையூறு இங்கு உளது**-வழியில் தடை ஒனறு இப்பொழுது உள்ளது,
**என நடவான்**-என்று மேற்செல்லாதவனுனன்,
**நெறி வந்தான்**-வழிநடை மேற்கொண்டு வந்தவனுகிய தசரதன்,
**மாகம் அணி**-ஆகாயத்தை அணி செய்ய வளர்ந்துள்ள,
**அணி தேரொடு** - அழகிய தேரோடு,
**நின்ருன்**-நின்றுவிட்டான்.

### தெளிவுரை

இவ்வாறு சென்று கொண்டிருக்கும பொழுது மயில் முதலிய பறவைகள் நல்ல அறிகுறியாக வலப்புறமாகவும், காகம் முதலிய பறவைகள் தீய அறிகுறியாக இடப்புறமாகவும் பின் விளைவுகளை முன்னறிவிப்பனவாய் வந்தன. வந்த இரண்டனுள்ளும் காகம் முதலியன முன்னிறுத்தித் தடை செயவனவாயின என்பதைத் தசரதன பார்த்தான். யானையை ஒத்த தசரதன் வழியில் தடை ஒன்று இப்பொழுது உள்ளது என்று மேற் செல்லாதவனுனன். வழி நடை மேற்கொண்டு வந்தவனுகிய தசரதன் ஆகாயத்தை அணி செய்ய வளர்ந்துள்ள அழகிய தேரொடு நின்றுவிட்டான்.

### விளக்கவுரை

வலியன், கருடன், காடை, கழுகு, ஆந்தை, உடும்பு, கீரி, குரங்கு என்பவை இடமாதல் உத்தமம். நாரை, விச்சுளி, காக்கை, செம்போத்து, கிளி, கொக்கு, மயில், கோழி, ஓணன், புள்ளிமான், புனுகுபூனை, புலி, நரி என்பவை வலமாதல் உத்தமம். இவை மாறினால் சகுனத் தடை எனப் பெறும். இங்கே வலமாகப் போக வேண்டிய மயில் வலமாகப் போன காரணத்தினால் நல்ல சகுனம்; ஆனால் வலமாகப் போக வேண்டிய காக்கை மாறாக இடமாகப் போனது. வலமாகப் போக வேண்டிய காக்கை இடமாகப் போனது முந்திக் கொண்டு தடை செய்ததால் அதை முன்னிட்டுப் பார்த்தான். முந்திய தடை என்பதற்கு மிகுந்த தடை எனப் பொருள் செய்தலும் உண்டு.

நாகம்-மலை. தசரதன் மலையை ஒத்தவன். நாகம் மன்னன் எனக் கொண்டு மலைபோலச் சலியாத—கலங்காத மனம் உடையவன் என்றும் பொருள் கொள்ளலாம்.

**மாகம் அணி அணி தேர்**-ஆகாயத்தை அணைந்து நின்ற, அழகிய தேர். முதல் உள்ள அணி என்ற சொல்லுக்கு அணைந்து என்று பொருள். தேர் ஆகாயம் வரை உயர்ந்தது என்பது பொருள். தசரதன் தேர் ஆகாயத்தை அண்மியது என்பதாம்.

### இலக்கணம்

**வந்தன**-அஃறிணைப் பன்மைப் படர்க்கை **வினைமுற்றுக்கள்.**
**முந்திய**-செய்திய என்னும் வாய்பாட்டு வினையெச்சம்.
நாகம் **அனன்**-உவமையடியாகப் பிறந்த பெயர்ச்சொல்.
**நடவான்**-உயர்திணைப் படர்க்கை ஆண்பால் எதிர்மறை வினைமுற்று.
**நெறிவந்தான்**-ஏழாம் வேற்றுமைத் தொகை.
**வந்தான்**-வினையாலணையும் பெயர்.

## 6. தசரதன் வினவும் நிமித்தகன் விடையும்

### உரை

**இன்றே நெறி உணர்வான்** - தனித்தும் இணைந்தும் நின்றே நிமித்தங்களின் நன்மை தீமைகளை அறிபவனாகிய,
**ஒரு நினைவாளனை**-ஒரு ஆய்வாளனை,
**அழையா**-அழைத்து,
**நன்றோ பழுது உளதோ**-(இந்நிமித்தங்களால் உண்டாகும் விளைவு) நல்லதோ அல்லது தீயதோ,
**நயம் நீ நடு உரை**-விளையும் பயனை நீ நடுவு நிலைமையில் நின்று சொல்,
**என்ன**-என்று தசரதன் கேட்க,
**குன்றே புரை தோளான்** - மலையையே ஒத்த தோளை உடையவனாகிய தசரதனுக்கு,
**எதிர்**-முன் நின்று,
**புள்ளின் குறி கொள்வான்**-பறவைகளின் நிமித்தங்களை ஆராய்ந்து உரைக்க வல்லவனாகிய நிமித்திகன்,
**இன்றே வரும் இடையூறு**-இப்பொழுதே தீங்கு நிகழும்,
**அது நன்று ஆய்விடும்**-அது முடிவில் நல்லதாக அமைந்துவிடும்,
**என்றான்**-என்று கூறினான்.

## தெளிவுரை

*தனித்தும் இணைந்தும் நின்று நிமித்தங்களின் நன்மை தீமைகளை அறிபவனாகிய ஒரு ஆய்வாளனை அழைத்து இந்நிமித்தங்களால் உண்டாகும் விளைவு நல்லதோ அல்லது தீயதோ? விளையும் பயனை நீ நடுவு நிலைமையில் நின்று சொல் என்று தசரதன் கேட்க, மலையையே ஒத்த தோளை உடையவனாகிய தசரதனுக்கு முன்பாக நின்று, பறவைகளின் நிமித்தங்களை ஆராய்ந்து உரைக்க வல்லவனாகிய நிமித்திகன் "இப்பொழுதே தீங்கு வரும் அது முடிவில் நல்லதாக அமைந்து விடும்" என்று கூறினான்.*

## விளக்கவுரை

**நின்றே நெறி உணர்வான்**-நிமித்திகன். இவன் உலகியற் சூழ்நிலையில் நிற்காமல் உலகோடு நிற்பினும், மனத்தால் தனித்து நின்றும், பின் தன்னைப் பறக்கும் பறவை எதுவோ அப்பறவையின் இயல்போடு தன் மனத்தை இணைத்தும், ஒரே சகுனம் அந்தணர்க்காயின் இன்ன பலன், அரசர்க்காயின் இன்ன பலன் என்று கூறும் நூல் நெறியோடும் அனுபவ நெறியோடும் உணர்பவன். இவ்வகையாக ஆராய்ந்தவன் பின்னர் இதனால் நன்மை அல்லது தீமை எனச் சொல்வான். இவனை **நினைவாளன்** என்று கம்பர் கூறியதன் கருத்து, பாவனையினால் பறக்கும் பறவையின் நினைவைத் தன் நினைவினால் நினைந்து கூறுபவன் என்ற காரணத்தால்.

**நடு**-நடுவு நிலைமை. தசரதன் நிமித்திகனைப் பார்த்து, பேரரசன் என்ற காரணத்தால் தன்னிடம் எவ்வாறு சொல்வது என்று தீமையைக் குறைத்தோ நன்மையை மிகுவித்தோ கூறாமல் நடுவு நிலைமையில்நின்று கூறுக என்று உணர்த்தினான்.

**நயம்**-நீதி; பயன் என்றும் கொள்ளலாம்.

**குன்றே புரை தோளான்**-மலையையே உவமையாகக் கூறக்கூடிய தோளான். வேறு உவமைகள் சொல்லலாமாயினும் இவன் தோள்களுக்கு மலையே உவமை என்பது தோன்றக் குன்றே புரைதோளான் என்றார்.

இன்றே வரும் இடையூறு என்பது பரசுராமன் போர் மேற்கொண்டு வருவதையும்; நன்றாய்விடும் என்பது இராமபிரானுடைய வெற்றியால் அது நன்மையாக முடியும் என்பதையும் முன்கூட்டியே உரைக்கப் பெற்றன.

## இலக்கணம்

**நின்றே**- 'ஏ' காரம்-பிரிநிலை. உணர்தற்குரிய நிலைகள் பல வற்றுள்ளும் நிற்றலைப் பிரித்தது.

உணர்வான், நினைவாளன், கொள்வான் } வினையாலணையும் பெயர்கள்.

நெறி உணர்வான், குறி கொள்வான் } இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்க தொகைகள்.

**அழையா**-'செய்யா' என்னும் வாய்பாட்டு வினையெச்சம் உடன்பாட்டுப் பொருள்.

நன்றே பழுதுளதோ-ஐயப்பொருள் வந்த 'ஓ' இடைச் சொல்.
குன்றே புரை-தேற்றேகாரம்.
புரை-உவம வுருபு.
புள்ளின் குறி-மூன்றும் வேற்றுமை கருவிப் பொருள்.

**7. மழுவுடையான் பொன்மலை வருவது போல்வான்**

**உரை**

**என்னும் அளவையினில்**-என்று நிமித்திகன் சொல்லிக் கொண்டிருக்கிற அந்த நேரத்தில், **வானகம்**-ஆகாயத்தைப் பொருந்திய, **இருள் கீறிட** - இருட்டானது சிதைந்து ஒழியும்படி, **ஒளியாய் மின்னும்படி**-ஒளி செய்து விளங்குமாறு, **புடை வீசிய**-பக்கங்களிற் பரந்து வீசுகிற, **சடையான்**-சடை முடியை உடையவன், **மழு உடையான்** - கோடாலிப் படையை உடையவன்; **பொன்னின் மலை**-பொன் மயமான மகா மேருமலை, **வருகின்றது போல்வான்**-நடந்து வந்தால எப்படியோ அது போன்றவன், **அனல் கால்வான்**-சுவாசம் என்ற பெயரால் நெருப்பையே கக்குபவன், **உன்னும் தழல் விழியான்**-கருதத்தகக நெருப்பை உமிழும் கண்களை உடையவன், **உரும் அதிர்கின்றது ஓர் உரையான்**-இடியைப் போல முழங்கும் உவமை சொல்ல முடியாத கடுஞ் சொல்லையுடையவன்.

**தெளிவுரை**

நிமித்திகன் சொல்லிக் கொண்டிருக்கும் சமயத்தில் ஆகாயத்தே பொருந்திய இருள் சிதையும் வண்ணம் ஒளிசெய்து விளங்கிப் பக்கத்தில் பரந்து வீசும் சடைமுடியை உடையவன்; கோடாலிப் படையை உடையவன்; மகாமேருமலை நடந்து வந்தால் எப்படியோ அப்படி வரும் நடையை உடையவ்ன்; சுவாசத்தால் நெருப்பையே கக்குபவன்; நெருப்பை உமிழும் கண்களை உடையவன்; இடியைப்போல முழங்கும் உவமை சொல்ல முடியாத கடுஞ்சொல்லை யுடையவன்.

**விளக்கவுரை**

இச்செய்யுளில் வரும் சடைமுடியான் என்பது தொடங்கி மேல் 15ஆம் செய்யுளில் வரும் 'மழுவானவன்' என்பது வரையில் பரசுராமனைப் பற்றிய செய்திகளாகச் சென்று முடிகின்றுன். எனவே இப்பாட்டு முதல் மேல் வருகின்ற பாட்டுக்கள் குளகம்.

பரசுராமனுடைய கடுஞ்சினத்தைத் தெரிவிப்பதற்குச் சடை வீசுதல்; நெருப்பைக் கக்குதல்; நெருப்பென விழித்தல்; இடியெனப் பேசுதல் என்பவை கூறப்பெற்றன.

பரசுராமனுடைய நெடிய தோற்றம் ஆகாயத்தை முட்டுமாறு இருந்தது. அவன் சினங்கொண்டு வருவதால் சடையானது அங்குமிங்கும் வீசுவதாயிற்று. தவத்திற் சிறந்த அவன் முடியானது செம்மையுடையதாய்த் திகழும் ஆகையால் ஆகாயத்தே உள்ள இருட்டைக் கிழித்து அங்கேயெல்லாம் ஒளியைச் செய்ய வேண்டும்

என்று நாற்றிசைகளிலும் சுழன்று வீசும் சடையை உடையவன் என்றார்.

அவனுடைய நடை மகாமேருமலை நடந்து வருவதுபோல இருந்தது எடைதாம். மூச்சு விடும்போது நெருப்பைக் கக்குகிறான்; பார்த்தவர்கள் எல்லாரும இது என்ன என்று திகைக்குமாறு நெருப்பைக் கக்கும் கண்களை உடையவன்.

### இலக்கணம்

இருள் சீறிட-இரண்டாம் வேற்றுமைத் தொகை.
சீறிட-செயவென் வாய்பாட்டு வினையெச்சம்.
வீசிய சடையான்-பெயரெச்சத் தொடர்.
மழு வுடையான், அனல் கால்வான், தழல் விழியான் — இரண்டாம் வேற்றுமைத் தொகைகள்.
பொன்னின் மலை-இன் சாரியை.
சடையான், விழியான் — சினையடியாகப் பிறந்த பெயர்ச் சொற்கள்.
உடையான்-குறிப்புப் பெயர்.
உரையான்-தொழில் அடியாகப் பிறந்த பெயர்.
கால்வான்-வினையாலணையும் பெயர்.

## 8, செம்பொன் சிலை தெறித்த சீற்றத்தான்

### உரை

**அலை எறி நீர் உறு**-அலைகள் சீறியெழுகின்ற நீரையுடைய கடலில் சிக்கிய,
**கலம் ஒத்து** - மரக் கலத்தைப் போல,
**உலகு**-இவ்வுலகமானது,
**கம்பித்து**-நடுநடுங்கி,
**உலைய** தடுமாறவும்,
**உயர் திசை யானைகள்**-உலகை எட்டுத் திசைகளிலும் நின்று தாங்கும் பெருமையையுடைய திக்கு யானைகள்,
**தம்பித்து**-அச்சத்தால் அசைவறுநின்று,
**தளர**-பின் தளர்ச்சி அடையவும்,
**கடல் சலியா**-கடலானது நிலை கலங்கிக் கொந்தளித்து,
**வெம்பி**-கொதித்து,
**திரிதர**-கரை புரளவும்,
**வானவர்**-தேவர்கள்,
**வெருவுற்று இரிதர**-பயந்து ஓடவும்,
**ஓர்**-ஒப்பற்ற,
**செம் பொன்சிலை தெறியா**-செம்பொன மயமானதாகிய வில்லை நாண் ஏற்றித் தெறித்து,
**வயின்முக வாளிகள்**-கூர்மையான நுனியையுடைய,
**வாளிகள்**-அம்புகளை,
**தெரிவான்** - ஆராய்ந்து எடுப்பவன்.

### தெளிவுரை

அலைகள் சீறியெழுகின்ற நீரையுடைய கடலில் சிக்கித் தவிக்கும் மரக்கலம் போன்று இவ்வுலகில் உள்ள அசையும் பொருள் அசையாப் பொருள் ஆகிய எல்லாம் தடுநடுங்கித் தடுமாறவும், உலகை எட்டுத் திசைகளிலும் நின்று தாங்கும் பெருமையையுடைய திக்கு யானைகள் அச்சத்தால் அசைவற்று நின்று பின் தளர்ச்சி அடையவும் கட

லானது நிலைகலங்கிக் கொந்தளித்துக் கொதித்துக் கரை புரளவும் தேவர்கள் அஞ்சியோடவும் தன்னுடைய ஒப்பற்ற பொன்மயமான வில்லை வளைத்து நாண் ஏற்றி, கூரிய நுனியை உடைய அம்புகளைத் தேர்ந்தெடுப்பவன்.

**விளக்கவுரை**

பரசுராமன் வில்லின் நாணைத் தெறித்த அளவில் மண்ணுலகம் விண்ணுலகம் எத்தகைய நிலைகளை அடைந்தன என்பதை எடுத்துக் காட்டினார்.

கொந்தளித்து மாறிமாறி அலைத்து வீசும் கடலில் சிக்கிய மரக் கலத்தைப் போல உலகம் நிலையின்றித் தவித்தது. உலகம் என்றது அதில் உள்ள அசையும் பொருள் அசையாப் பொருள் ஆகிய எல்லாம் இணைந்த இணைப்பைக் குறித்தது. உலகம் பரசுராமன் செய்த சத்தத்தைக் கேட்டவுடன் நிலைகுலைந்தது என்பதாம்.

**உலகு இவ்வாறாக, ஒலி கேட்டவுடன் திக்கு யானைகள் செய** லற்று நின்று பின் தளர்ச்சி அடைந்தன.

**கடல்** கொந்தளித்துக் கொதித்துக் கரை புரண்டது. தேவர்கள் அஞ்சியோடினர்.

**இலக்கணம்**

**எறி நீர்**, **உறு கலம்**, **உயர் திசை யானைகள்** — வினைத் தொகைகள்.

**உலைய, தளர, திரிதர**-செயவென் வாய்பாட்டு வினையெச்சங்கள்.

**சலியா**, **தெறியா** — செய்யாவென் வாய்பாட்டு வினையெச்சம்; உடன்பாட்டுப் பொருள்.

**உலகு**-இடவாகு பெயர்.

**வானவர்**-இடத்தின் அடியாகப் பிறந்த பெயர்.

கம்பித்து, தம்பித்து, வெருவுற்று — செய்து என் வாய்பாட்டு வினையெச்சங்கள்.

**முகவாளிகள்**-இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்க தொகை.

**தெரிவான்**-வினையாலணையும் பெயர்.

## 9. கண் கீறிய கனலான்

**உரை**

**புண் கீறிய**-புண்ணைக் கிழித்துக் கொண்டு,
**குருதி புனல்**-இரத்தம், நிணநீர் முதலியன,
**பொழிகின்றன** - பெருகி வருநின்றன போல,
**கண் கீறிய கனலான்** - கண்ணைக் கிழித்துக்கொண்டு பெருகி வருகுன்ற கோபமாகிய நெருப்பை உடையவனாகிய பரசுராமனுடைய,
**முனிவு**-கோபத்துக்குக் காரணம்,
**விண் கீழ் உற என்றோ ?**- சுவர்க்க லோகம் பூமியில் வந்து விழுந்து

விட வேண்டும் என்றுதானே?
**படி மேல் கீழ் உற என்றோ** - இப் பூமி தலைகீழாக மாறவேண்டும் என்றுதானே?
**எண் கீறிய உயிர் யாவையும்** - எண்ணிக்கையை அழித்த உயிர்கள் எல்லாவற்றையும்,
**யமன் வாய் இட என்றோ** - இயமனது வாயில் போட வேண்டும் என்றுதானே?
**யாது** - இவையல்லாமல் **வேறு** எதுவோ?
**என்று**-என்றிவ்வாறாக,
**அயல்** - பக்கத்தில் உள்ளவர்கள் எல்லாம்,
**கருத**-எண்ணமிட.

## தெளிவுரை

புண்ணைக் கிழித்துக்கொண்டு இரத்தம் நிணநீர் முதலியன பெருகி வருகின்றன போல, கண்ணைக் கிழித்துக் கொண்டு பெருகி வருகின்ற கோபமாகிய நெருப்பை உடையவனாகிய பரசுராமனுடைய கோபத்துக்குக் காரணம் சுவர்க்கலோகம் பூமியில் வந்து விழுந்து விடவேண்டும் என்றுதானே? இப்பூமி தலைகீழாக மாறவேண்டும் என்றுதானே? எண்ணிக்கையை அழித்த உயிர்கள் எல்லாவற்றையும் இயமனது வாயில் போட வேண்டும் என்றுதானே? இவையல்லாமல் வேறு எதுவோ? என்று இவ்வாறாக, பக்கத்தில் உள்ளவர்கள் எல்லாம் எண்ணமிட.

## விளக்கவுரை

உடம்பிற் காயம் முதலியன பட்டு அது நீண்ட நாட்கள் ஆறாமல் இருக்கும் போது அக்காயங்களே 'புண்' என்று பேசப்பெறுகின்றன. இப் புண்களிலிருந்து இரத்தமேயன்றி நிணநீர் முதலியனவும் வரும். இதனாலேயே '**பொழிகின்றன**' எனப் பன்மையாற் கூறினார்.

**கீறிய** என்ற சொல் 'வெளிப்பட்ட' என்ற பொருளை மட்டுமே இங்கே குறித்து நின்றது.

**புண்**ணிலிருந்து பெருக்கெடுத்து வரும் இரத்தம் நிணநீர்போலக் **கண்**ணிலிருந்து கோபம் பெருக்கெடுத்து வரலாயிற்று விழிகள் கோபத்தால் சிவப்பேறியிருத்தலின் கண்ணிலிருந்து கோபம் வெளிப்படுவதை நெருப்பு வெளிப்படுவது என்றார்.

"கண்களிலிருந்து வெளிப்படும் நெருப்பை உடையவன்" என்று சுருக்கமாக '**கண் கீறிய கனலான்**" என்று குறிப்பிடுவாராயினர்.

பரசுராமனின் கோபத்தைக் கண்ட பக்கத்தில் உள்ளவர்கள் இவன் கோபத்திற்கு உரிய காரணம் யாது? என்று கருதலானார்கள். அவர்கள் மனத்தில் தோன்றிய காரணங்கள்:

(1) சுவர்க்கலோகம் பூமியில் வந்து விழுந்துவிட வேண்டும் என்றுதானே? (2) பூமி தலைகீழாக மாறவேண்டும் என்றுதானே? (3) எண்ணிக்கைக்கு அடங்காத உயிர்கள் எல்லாவற்றையும் இயமன் வாய்க்கு உணவாக அனுப்ப வேண்டும் என்றுதானே? அல்லது வேறு யாதோ? விண்ணையும் மண்ணையும் நிலைமாற்றி, உயிர்கள் எல்லாவற்றையும் அழிக்க வேண்டும் என்று கருதினானோ அன்றி வேறு எதைக் கருதினானோ என்றனர்.

**எண் கீறிய உயிர்**-எண்ணிக்கையை அழித்த உயிர்; எண்ணிக்கைக்கு அடங்காத உயிர். இனி, சித்திரகுப்தனால் எண்ணிக்கையிட்டு எழுதப்பெற்ற உயிர் என்றும் கொள்ளலாம். இவ்வுரைக்குக் கீறுதல்-எழுதுதல் என்பது பொருள்.

இச்செய்யுள் பரசுராமனுடைய பெருங் கோபத்தையும் பேராற்றலையும் விளக்கியது.

### இலக்கணம்

புண் கீறிய, கண் கீறிய — ஐந்தாம் வேற்றுமைத் தொகைகள், நீக்கப் பொருளன.

கீறிய குருதி, கீறிய கனல், கீறிய உயிர் — பெயரெச்சத் தொடர்.

**குருதிப் புனல்**-உம்மைத் தொகை.
**புரைய**-உவம இடைச்சொல்.
**கனலான்**-பொருளடியாகப் பிறந்த பெயர்ச்சொல்.
முனிவியாது-குற்றியலிகரம்.

**அயல்**, **விண்படி** — இடவாகு பெயர்கள்.

**என்றோ**-எண்ணிடைச்சொல்; 'ஓ' ஐயப் பொருளது.
**யாவையும்**-முற்றும்மை.

## 10. பரசுராமனது மெய்யின் வெய்ய ஒளி

### உரை

**போரின் மிசை**-போர்க்களத்தில், **எழுகின்றது ஓர்** - எப்படைகள் வரினும் அப்படைகளெல்லாவற்றையும் அழித்து மேலெழுவதாகிய ஒப்பற்ற, **மழுவின் சிகை புகைய**-மழுவாயுதத்தின் ஒப்பற்ற உச்சியானது புகையைக் கக்கவும், **தேரின் மிசை** - தேறின் மேலேறி, **மலை சூழ்வரு கதிரும்**-மேரு மலையைச் சுற்றிவரும் சூரியனும், **திசை திரிய** - பரசுராமனிடத்திலிருந்து வருகின்ற நெருப்பின் வெம்மையால் முறையாகச் செல்லும் வழியிலிருந்து மாறுபட்டுச் செல்ல, **நீரின் மிசை வடவைக் கனல்**-கடலில் உள்ள குதிரை முகமாக உள்ள நெருப்பானது, **நெடுவான் உற முடுகி** - பரந்த ஆகாயத்தைத் தொடும்படி விரைந்து சென்று, **பாரின் மிசை**-பூமியின்மேல், **வருகின்றது ஓர்படி** - வருகின்ற ஒப்பற்ற முறைபோல, **வெம் சுடர் படர** - வெம்மை வாய்ந்த ஒளி பரவ.

### தெளிவுரை

போர்க்களத்தில் எப்படைகள் வந்தாலும் அழித்து மேலெழும் வீரம் வாய்ந்த மழுவாயுதத்தின் ஒப்பற்ற உச்சியானது புகையைக் கக்கவும்; தேரின் மேலேறி மேரு மலையைச் சுற்றிவரும் சூரியனும் பரசுராமனிடத்திலிருந்து வருகின்ற நெருப்பின் வெம்மையால் முறையாகச் செல்லும் வழியிலிருந்து மாறுபட்டுச் செல்லவும்; கடலில் உள்ள குதிரையின் முகவடிவில் அமைந்த ஊழித் தீயானது பரந்த ஆகாயத்தைத் தொடும்படி விரைந்து சென்று பூமியின்மேல் வருகின்ற ஒப்பற்ற முறைமைபோல வெம்மை வாய்ந்த ஒளி அவன் உடம்பிலிருந்து வெளிப்பட.

### விளக்கவுரை

பரசுராமனுடைய உடம்பிலிருந்து ஓர் ஒளி பரவுகின்றது. (1) அவன் கையில் கொண்டிருக்கும் கோடாலிப் படையின் உச்சியே அந்த ஒளிக்குப் புகையாக அமைந்துள்ளது. (2) சூரியனும் அந்த ஒளியின் வெம்மைக்கு ஆற்றமாட்டாமல் தன்னுடைய வழியை மாற்றிக் கொண்டு போகிறான். (3) யுகத்தை அழிப்பதற்காக ஒரு நெருப்பு உண்டு. அது கடலின் மத்தியில் குதிரை முக வடிவில் இருக்கும். அந்த அக்கினி தன் முழு வடிவத்தையும் வெளிப்படுத்திக் கொண்டு ஆகாயத்தைத் தொட வேண்டும் என்று பூமியிலிருந்து ஆகாயம் வரை வளர்ந்து வந்தால் எப்படியோ அப்படி வருகிற அவன் மெய்யின் ஒளி.

மழுவின் சிகை - மழுவாயுதத்தின் உச்சி; மழு - பரசுராமன் கையில் உள்ள கோடாலி; பரசுராமன் கோடாலியைப் போரின்கண் உயர்த்தினால் எல்லாப் படைகளும் தாழ்ந்துவிடும்; எப்படைகளுக்கும் கோடாலியை எதிர்த்து நிற்கும் ஆற்றல் இல்லை என்பதாம்.

சூரியன் ஒற்றைச் சக்கரத் தேர்மேலேறி உலகை வலம் வருகிறான் என்பது புராணக் கருத்து. வெம்மையைச் செய்கின்ற அவனுக்கே பரசுராமனின் உடம்பிலிருந்து எழும் வெம்மையைத் தாங்க முடியாமல் வேறு பக்கமாகத் திசைமாறிச் சென்றான் என்பதாம்.

**வடவைக் கனல்**-குதிரை முகமாக அமைந்த நெருப்பு. இது கடலின் மத்தியில் இருக்கிறது. இது வெளிப்பட்டு வருவது யுகத்தின் கடைசியில். வந்தால் உலகம் அழியும். அந்த நெருப்பே ஆகாயம் வரையிற் சென்று பொருந்த எண்ணிப் பூமியில் வெளிப்பட்டு வருவதைப் போல இருந்தது பரசுராமனுடைய உடம்பிலிருந்து வெளிப்படும் ஒளி.

### இலக்கணம்

**மிசை**-நான்கிடத்து ஏழாம் வேற்றுமை உருபின் பொருள் பட வந்த சொற்கள்.
**மழுவின் சிகை**-ஆறும் வேற்றுமைத் தொகை.
**மலைசூழ்**-இரண்டாம் வேற்றுமைத் தொகை.
**சூழ்வரு கதிரும்**-வினைத்தொகை.
கதிரும்-உயர்வு சிறப்பும்மை.
**வடவைக் கனல்**-உவமைத் தொகை.
**நெடுவான்**, **வெம்சுடர்** } பண்புத்தொகைகள்.
**ஓர் படி**-உவமை உருபென நின்ற சொல்.

## 11. ஊழிக்கடைமுடிவில் திரி உமைகேள்வன்

### உரை

**பாழி புயம்** - வலிமையையுடைய தோள்கள்,
**உயர் திக்கு இடை அடைய**- உயர்ந்த திசைகளின் எல்லையிலே சென்று அடைய,
**புடை படரும்** - பக்கங்களிற் பரவும்,
**சூழிச் சடைமுடி** - உச்சிக் கொண்டை எனப்பெறும் சடை முடியானது,

**விண் தொட** - ஆகாயத்தைச் சென்று தொட,
**அயல் வெண்மதி தோற்ற**-பக்கத்தில் வெண்ணிறமுள்ள சந்திரன் தோற்றத்தைக் கொடுக்க,
**ஆழிப்புனல் எரி கால் நிலம் ஆகாயம்**-கடலென அமைந்த நீரும், நெருப்பும், காற்றும், நிலமும், ஆகாயமும் என்றிவைகள்,
**அழியும் ஊழிக் கடை முடிவில்**-அழியவரும் யுகத்தின் இறுதியில்,
**திரி உமை கேள்பவனை ஒப்ப** - திரிகின்ற பார்வதியின் கணவனாகிய சிவனை ஒப்ப.

## தெளிவுரை

வலிமையுடைய தோள்கள் உயர்ந்த திசைகளின் எல்லையிலே சென்று அடைய, பக்கங்களிற் பரவும் உச்சிக் கொண்டை எனப் பெறும் சடை முடியானது ஆகாயத்தைச் சென்று தொட, பக்கத்தில் வெண்ணிறமுள்ள சந்திரன் தோற்றத்தைக் கொடுக்க; கடலென அமைந்த நீரும் நெருப்பும் காற்றும் நிலமும் ஆகாயமும் என்றிவைகள் அழியவரும் யுகத்தின் இறுதியில் திரிகின்ற பார்வதியின் கணவனாகிய சிவனை ஒப்ப.

## விளக்கவுரை

எல்லா உலகங்களையும் அழிக்கும் காலம் யுகமுடிவு எனப்பெறும். அப்போது சிவபெருமான் அளவற்ற சீற்றத்தோடு 'கால சங்கார மூர்த்தி'யாக நடனம் செய்வார். அவரை ஒப்ப இருந்தான் பரசுராமன்.

வலிமையான தோள்கள் பரந்து திசைகளின் எல்லையை அடைந்தன; சடைமுடி ஆகாயத்தைச் சென்று தொட்டன; சிவனுக்கு முடியில் மூன்றாம் பிறை விளங்குவது போல்-பரசுராமன் பக்கத்தில் சந்திரனே விளங்குகிறது. இவை மூன்றாலும் ஊழிக் காலத்தில்வரும் சிவனுக்கு ஒப்பானவன் பரசுராமன்.

பாழி-வலிமை; சூழி-உச்சிக்கொண்டை; ஐம்பெரும் பூதங்கள்-தண்ணீர், நெருப்பு, காற்று, நிலம், ஆகாயம் என்பன. யுக முடிவில் இவை எல்லாம் அழியும்.

## இலக்கணம்

**பாழிப்புயம்**-இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன்தொக்க தொகை.
**உயர்திக்கிடை**-உயர்திக்கு-வினைத்தொகை; இடை-ஏழாம் வேற்றுமை உருபின் பொருள்பட வந்த சொல்.
**வெண்மதி**-பண்புத் தொகை.
**ஆகாயமும்**-இறந்தது தழுவிய எச்சவும்மை.
**ஊழிக்கடை**-'கடை' ஏழாம் வேற்றுமை உருபின் பொருள்பட வந்த சொல்.
**திரியுமை கேள்வன்**-வினைத்தொகை.
**உமைகேள்வன்**-ஆறும் வேற்றுமை உயர்திணைத் தொகையாதலின் 'கு' உருபு விரிக்க.

## 12. கார்த்த வீரியனைக் கொன்ற காலன்

### உரை

**அயிர் சுற்றிய**-கருமணல் சூழ்ந்துள்ள
**கடல் மாநிலம்** - கடல் சூழ்ந்த பெரிய நிலம்,
**அடைய தனி படரும்**-முழுவதும் பொருந்துமாறு தனித்துச் செல்லும்,
**செயிர் சுற்றிய படையான்**- வலிமை மிகுந்த படையையுடையவன்,
**அடல் மறம் மன்னவர் திலதன்**- கொலலும் தன்மை வாய்ந்த வீரம் பொருந்திய அரசர்களில் திலகம் அனையனான கார்த்த வீரியார்ச்சுனன்,
**உயிர் உற்றது ஓர் மரம் ஆம் என**- உயிரோடு கூடிய ஒரு மரம் நின்றாற்போல நிற்க,
**ஓர் ஆயிரம் உயர்தோள்**-ஓர் ஆயிரம உயர்ந்த தோள்களாகிய,
**வயிரப்பணை** - வயிரம் வாய்ந்த கிளைகளை,
**துணிய**-வெட்டும்படி,
**தொடு வடிவாய் மழு உடையான்**- தொட்டு வீசப்பெற்ற கூர்மையான நுனியையுடைய கோடாலி என்னும் ஆயுதத்தை உடையவன்.

### தெளிவுரை

கருமணல் சூழ்ந்துள்ள கடல் சூழ்ந்த பெரிய நிலம் முழுவதும் பொருந்துமாறு தனித்துச் செல்லும் வலிமை மிகுந்த படையை உடையவன், கொல்லும் தன்மை வாய்ந்த வீரம் பொருந்திய அரசர்களின் திலகம் போன்றவனான கார்த்த வீரியார்ச்சுனன் உயிருடன் கூடிய ஒரு மரம் நின்றதுபோல் நிற்க, அவனுடைய ஓராயிரம் உயர்ந்த தோள்களாகிய வயிரம் வாய்ந்த கிளைகளை வெட்டும்படித் தொட்டு வீசப்பெற்ற கூர்மையான நுனியையுடைய கோடாலி என்னும் ஆயுதத்தை உடையவன்.

### விளக்கவுரை

பரசுராமன் படை வலிமை மிகுந்தவன்; அவன் கார்த்த வீரியார்ச்சுனனைக் கொன்றவன் என்ற இரண்டு செய்திகள் இதிற் கூறப்பெற்றன.

உலகம் முழுவதும் பரந்து நிற்கும் சேனையையுடைவன். மிகுதியான படைகளை உடையவன் என்பது பொருள்.

அயிர்-கருமணல். ஆற்றோரங்களிலும் கடலோரங்களிலும் நிறைந்து காணப்படும் இம்மணல். மணல் சூழ்ந்த கடல்; கடல் சூழ்ந்த பூமி; பூமியை நிறைந்து பரந்த பரசுராமன் படைகள். தனிப்படரும் செயிர்-யாவரும் எதிர்த்தல் இல்லாமல் ஒப்பற்ற முறையில் சென்று பொருந்தும் கோபமும் அமைந்த படைகள்.

கார்த்தவீரியார்ச்சுனனை மழுவாயுதத்தால் வெட்டி வீழ்த்தியவன் பரசுராமன்.

'யது' குலத்தரசன் யயாதி. அவன் பெயரனும் கிருதவீரியன் மகனுமான கார்த்த வீரியார்ச்சுனன் தத்தாத்ரேய மகா முனிவனை வணங்கி அவன் அருளால் ஆயிரம் தோள்களையுடைமையும், போரின் பெரு வெற்றியையும், பூமியை முறைப்படிக் காத்தலையும், பகைவர்களால் அவமானப் படாமையையும், அனைத்துலசங்களாலும் கொண்டாடப்படக்கூடிய உத்தமன் ஒருவனால் சாக வேண்டும்

என்ற வரத்தையும் பெற்றவன். ஒருநாள் நருமதையாற்றில் குளித்துக் கொண்டிருக்கையில் திக்குவிஜயம் செய்து வரும் இராவணனை எளிமையாகக் கட்டிப்போட்டு '**இராவணஜித்**' என்ற பெயரைப் பெற்றவன் **பரசுராமன்** தந்தையாகிய ஜமதக்னி முனிவன் வேண்ட அவனுக்கு விருந்தினனுகித் தங்கி விருந்துண்டு மகிழ்ந்து மீளும் போது, ஜமதக்னி முனிவர் அளித்த பெருவிருந்துக்கு அவரிடம் உள்ள '**காமதேனு**'வே காரணம் என்பதை அறிந்து, அக் காமதேனு தனக்கு வேண்டும் எனக் கேட்க, ஜமதக்னி மறுத்து விட்டார் அவருக்குத் தெரியாமல் அக் காமதேனுவைக் கவர்ந்து சென்று விட்டான். ஜமதக்னி முனிவர் பரசுராமனை அனுப்ப அவன் சென்று 'கார்த்த வீரியார்ச்சுனனை' எதிர்த்து அவனுடைய ஆயிரம் தோள்களையும் தலையையும் அறுத்தான் என்பது வரலாறு.

கார்த்த வீரியார்ச்சுனன் உயிருடைய மரம்போல நின்றான் என்றார். பல கிளைகளையுடைய மரம் பல தோள்களை(1000)யுடைய கார்த்தவீரியார்ச்சுனனுக்கு உவமை கிளைகளை வெட்டுவதுபோலவே கார்த்த வீரியார்ச்சுனனின் ஆயிரம் தோள்களையும் வெட்டினான் என்பதாம் வயிரம்-முற்றியதன்மை. கார்த்த வீரியார்ச்சுனனின் உயர் தோள்களுக்கு முற்றிய கிளைகள் உவமை.

**இலக்கணம்**

**சுற்றிய கடல்**, **சுற்றிய படை** } பெயரெச்சத்தொடர்கள்.
**மாநிலம்**-உரிச்சொல் தொடர்.
**மறமன்னவர்**, **வாய்மழு** } இரண்டாம் வேற்றுமைஉருபும் பயனும் உடன்தொக்க தொகைகள்.
**மன்னவர் திலதன்**-ஆறும் வேற்றுமைத் தொகை,உயர்திணையாகலின் நான்கன் உருபு இணைக்க.
**உயர்தோள்**-வினைத்தொகை.
**வயிரப்பணை**-பண்புத்தொகை.
**துணிய**-செயவென் வாய்பாட்டு வினையெச்சம்.

**13. மன்னவர்குலங்களைக் கருவற்றிடக் களையெடுத்தவன்**

**உரை**

**நிருபர்க்கு**-அரசர்களுக்கு,
**ஒரு பழிபறறிட** - ஒப்பற்ற பழிச் செயல ஒன்று பொருந்தியதால்,
**நிலமன்னவர் குலமும்** - நிலவுலகத்தை ஆளுகின்ற அரசர்களின் குலம் முழுவதையும்,
**கரு அற்றிட**-வேர் அறுந்து ஒழியும்படி,
**மழுவாள் கொடு** - மழுவாயுதத்தைக் கொண்டு,
**களை கட்டு** - களைவெட்டுவது போல வெட்டி,
**உயிர் கவரா** - உயிர்களைக் கவர்ந்து,
**இருபத்தொரு படிகால்** - இருபத்தொரு படிகளோடு அமைந்த குளத்தில்,
**எழு கடல் ஒத்து அலை எறியும்**- எழுகின்ற கடலைப்போல அலை வீசுகின்ற,
**குருதிப் புனல் அதனில்**-குருதியாகிய தண்ணீரில,
**புக முழுகி**-அமிழக் குளித்து,
**தனி குடையான்** - தனிநின்று நீராடியவன்.

## தெளிவுரை

அரசர் குலம் முழுவதுக்குமே ஒப்பற்ற பழிச்சொல் ஒன்று பொருந்தியதால் நிலவுலகை ஆளுகின்ற அரசகுலம் முழுவதையும் வேரற்று ஒழியுமாறு மழுவாயுதத்தால் களைவெட்டுவது போல் வெட்டி உயிர்களைக் கவர்ந்து, இருபத்தொரு படிகளோடு அமைந்த குளத்தில், கடல்போல் அலைவீசுகின்ற இரத்தமாகிய தண்ணீரில் அமிழக் குளித்துத் தனிநின்று நீராடியவன்.

## விளக்கவுரை

பரசுராமன் கார்த்தவீரியார்ச்சுனனைக் கொன்ற வரலாறு முன்னே கூறப்பெற்றது. பின்னர்க் கார்த்தவீரியார்ச்சுனன் பிள்ளைகள் பழிக்குப் பழிவாங்க எண்ணி, **எங்கள் தந்தையை எவன் கொன்றானோ அவன்தந்தையைக் கொல்வோம்'** என்று, பரசுராமன் இல்லாத சமயம் பார்த்து, ஜமதக்னி முனிவரைக் கொன்று விட்டார்கள். ஜமதக்னி முனிவர் மனைவியும் பரசுராமன் தாயும் ஆன ரேணுகை, இருபத்தொரு முறை மார்பில் அடித்துக் கதறி அழுதாள். இவைகளை அறிந்த பரசுராமன் கோபங்கொண்டு கார்த்தவீரியார்ச்சுனன் பிள்ளைகள் அனைவரையும் கொன்றதோடன்றி, அரசர் குலங்கள் முழுவதையும் இருபத்தொரு தலைமுறை தொடர்ந்து கொன்று, அதனாற் பெருகும் இரத்தத்தைப் பொய்கையாக்கி, அதில் தனியாகக் குளித்து நீராடி, தன் தந்தைக்கு அவ்விரத்தத்தாலேயே தர்ப்பணம் செய்தான்.

'அரசன் முனிவனைக் கொன்றான்' என்பதே **நிருபர் அடைந்த பழி.** அப்பழியை முன்னிட்டு இருபத்தொரு தலைமுறை அரச பரம்பரையை வேரறக் களைந்தான் பரசுராமன். **கறுவறுத்தல்**-அரச பரம்பரையே இல்லாமற்போதல். **களைகட்டு**-களைவெட்டுதல். நிலத்தில் பயிர்கள் வளர்வதற்குத் தடையாயிருக்கிற களைகளை வெட்டி எறிவதுபோல, மனிதர் குலத்தில் தடையாயிருக்கிற இவ்வரசர் கூட்டங்களை வெட்டி எறிந்தான்.

இருபத்தொரு தலைமுறையாக அரசர்களைக் கொல்ல அவர்கள் இரத்தம் ஒரு பொய்கையாயிற்று; அதனை **இருபத்தொரு படிகால்** என்று குறித்தார்.

உடல் முழுவதும் முழுகி நிற்க, தனியாக நின்று குளித்தவன் என்பதை **முழுகித் தனிக்குடையான்** என்றார். **குடைதல்**-நீராடல்.

## இலக்கணம்

**நில மன்னவர்**-இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்கதொகை.

**குலமும்**-முற்றும்மை.

**வாளகொடு**-மூன்றன் உருபின் பொருள்பட வந்த சொல் உருபு.

**கட்டு**-செய்து என் வாய்பாட்டு வினையெச்சம்.

**கவரா**-செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம். உடன்பாட்டுப் பொருள்.

**எழுகடல்**-வினைத்தொகை.

**எறியும் குருதி**-பெயரெச்சத் தொடர்.

**குருதிப் புனல்**-இருபெயரொட்டுப் பண்புத்தொகை.
**அறநிட, புக**-'செய' என் வாய்பாட்டு வினையெச்சங்கள்.
**முழுகி**- செய்து' என் வாய்பாட்டு வினையெச்சம்.
**குடையான்**-உயர்திணை ஆண்பால் ஒருமை வினைமுற்று உடன்பாட்டுப் பொருள்.

## 14. வேலனிலுஞ் சிறந்த வீரன்

### உரை

**கமை ஒப்பது ஓர் தவமும்** - மூங்கிலை ஒத்த ஒப்பற்ற தவமும்,
**சுடுகனல் ஒப்பது ஓர் சினமும்**-எரிகின்ற நெருப்பை ஒத்ததாகிய ஒரு கோபமும்,
**பெரிது சமைய உடையான்**-பெரிதும் பொருந்துமாறு கொண்டவன்,
**எதிர்**-தன் (பரசுராமன்) எதிரில்,
**தளர்வு உற்று**-தளர்வடைந்து,
**இடை தவிரும் அமையத்து**-மேற்கொண்ட செயலை இடையிலேயே விட்டுவிடும் சமையத்தில்,
**சீறு**-கோபங்கொண்டு,
**உயர் பறவைக்கு இனிது ஆறும் வகை**-உயர்ந்த பறவையாகிய அன்னங்களுக்கு இனிமையுடைய வழியாக அமையும் பொருட்டு,
**சிமையக் கிரி உருவ**-உயர்ந்த சிகரத்தையுடைய கிரௌஞ்ச கிரியை ஊடுருவிச் செல்லுமாறு,
**தனி வடி வாளிகள்** - ஒப்பற்ற கூர்மையான அம்புகளை,
**தெரிவான்**-ஆராய்வான்.

### தெளிவுரை

மூங்கிலை ஒத்த ஒப்பற்ற தவமும் எரிகின்ற நெருப்பை ஒத்த கோபமும் பெரிதும் பொருந்துமாறு கொண்டவன்; தன் எதிரில் தளர்வடைந்து மேற்கொண்ட செயலை விட்டுவிடும் சமயத்தில் கோபங்கொண்டு உயர்ந்த பறவையாகிய அன்னங்களுக்கு இனிமையுடைய வழியாக அமையும்படி உயர்ந்த சிகரத்தையுடைய கிரௌஞ்சம் என்னும் பெயருடைய மலையை ஊடுருவிச் செல்லுமாறு ஒப்பற்ற கூர்மையான அம்புகளை ஆராய்பவன்.

### விளக்கவுரை

பரசுராமன் தவம் மூங்கிலை ஒத்தது.

வலிமை வாய்ந்தது; முத்தினைக் கொடுப்பது; இயல்பாகவே வளைந்திருப்பது முதிர்ந்த நிலையில் கூத்தாடிக்கு ஆட்படுவது முதலியன. வலிய தவத்தைச் செய்தவன்; கார்த்தவீரியார்ச்சுனனைக் கொல்லக்கூடிய உகதமனாகத் தான் ஆனதன்மை; பெருந் தவத்தைச் செய்தவனேயாயினும் தந்தையின் சொல்லுக்கு அடிபணிந்த அடக்கம்; இராமனை இறைவன் என்று தெரிந்த பிறகு அவனைத் தலைவனாக ஏற்று மகிழ்ந்தது முதலியன மூங்கிலை ஒத்த தவம்.

**கமை**-பொறுமை எனக் கொள்வதும் உண்டு. **சமைதல்**-பக்குவமாக ஆதல்.

**பின் இரண்டு வரிகளில் அமைந்த வரலாறு:** முருகனும் பரசுராமனும் சிவனிடம் வில்வித்தை பயின்றவர்கள். இவர்களுடைய

வில்லாற்றலைச் சோதிக்க விரும்பிய சிவன் உமையின் முன்னால் கிரௌஞ்ச மலையைக் காட்டி இதனைத் துளைத்திடுக என்றார். முருகன் அம்பு எய்து துளைக்க முற்பட்டு முடியாது சோர்ந்தபோது, பரசுராமன் கோபங்கொண்டு அம்பு எய்து துளையிட்டான் என்பது வரலாறு. கிரௌஞ்சம்-குருகு. குருகுமலை எனப் பெயர் பெறும். இம்மலையின் தெற்கே உள்ள அன்னப் பறவைகள் பனிக்காலங்களில் தாமரைகள் வாடியபோது வேறெங்கும் செல்ல இயலாமல் தடுத்தது அம்மலை. பரசுராமன் துளையை உண்டாக்கியதும் அவ்வழியாக அவ்வன்னங்கள் சென்று இமயமலையிலுள்ள மானஸ தீர்த்தத்தை அடைந்து மகிழ்வனவாயின என்பதாம்.

**தளர்வுற்று இடைதவிரும் அமையம்:** கிரௌஞ்ச மலையைத் துளைக்க முடியாமல சோர்வுற்று இடையில் விட்டுவிடும் சமயம். இது முருகன் செயலைக் குறித்தது.

**உயர் பறவை**-அன்னம். **இனிது ஆறு ஆம் வகை**-இனிய வழியாக அமையும்படி; **சிமயம்கிரி**-உச்சியை உடைய மலை. கிரௌஞ்சமலை என்ற பெயரை உடைய மலை.

### இலக்கணம்

சுடுகனல் }
உயர்பறவை } வினைத்தொகைகள்.

**சீறு**-செய்யா என் வாய்பாட்டு வினையெச்சம்.

**சிமயக்கிரி** } இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும்
**வடிவாளி** } உடன் தொக்க தொகைகள்.

**தெரிவான்**-வினையாலணையும் பெயர்.

## 15. மழுவாளவன் வந்தான்; தசரதன் கண்டான்

### உரை

**வசயம் புக**-மலைகள் நிலத்தினுள் புகுமாறு,
**கடல் கிமிர**-கடலானது மேலெழுந்து பொங்க,
**தழுவும்படி**-உலகின் இயற்கையே தன்னைத் தழுவி வரும்படி,
**சமைவான்**-முயல்பவன்,
**ஐமயின் உயர் மலை**-பெயருக்கு ஏற்ற தன்மையினால் உயர்ந்து வளர்கின்ற மலையாகிய கிரௌஞ்சத்தை,
**நூறிய மழுவாளன்**-அழித்த கோடாலிப் படையையுடையவன் வந்தான்,
**ஐயன் தனை**-இராமபிரானை,
**அரிதில் தரும்**-வேள்வி செய்து முயன்று பெற்ற,
**அரசன் அது கண்டான்**-தசரதன் அதனைப்பார்த்து,
**வெய்யன் வர நிமித்தம் என்னை கொல்?**-கொடியவனான பரசுராமன் வருவதற்குக் காரணம் என்ன?
**என எய்துறும் எல்லை**-என எண்ணும் சமயத்து,

### தெளிவுரை

மலைகள் நிலத்தினுள் புகுமாறு கடலானது மேலெழுந்து பொங்க உலகின் இயற்கையே தன்னைத் தழுவும்படி முயல்பவன்; பெயருக்கு ஏற்ற தன்மையினால் உயர்ந்து வளர்கின்ற மலையாகிய கிரௌஞ்

சத்தை அழித்த கோடாலிப்படையையுடையவன் (பரசுராமன்) வரதான்; இராமபிரானை வேள்வி செயது முயன்று பெற்ற தசரதன் அவனைப் பார்த்து, கொடியவனுகிய பரசுராமன் வருவதற்குக் காரணம் என்ன என்று எண்ணும் சமயத்து.

### விளக்கவுரை

பாசுராமன் கோபத்தோடு அடிவைக்கும் போது மலைகள் பூமியில் அழுந்தின. மலைகள் பூமியில் அழுந்தவே கடல்கள் மேலே பொங்கின அவன் அடிவைக்கும்போது இயற்கைப் பொருள்கள் நிலைமாறின என்பதாம்; தன்னிலையில் மாருதிருப்பதே இயற்கையின் நியதி. ஆனுல் தனக்கென ஒரு நியதி இல்லாமல் பரசுராமன் நினைவின்படியே இயற்கைகள் நடந்தன என்பதைத் தழுவும்படிச் சமைவான் என்ருர்.

**மையின் உயர் மலை**-தன்மையினுல் உயர்ந்த மலை. தன்மை—பெயருக் கேற்ற தன்மை. கிரௌஞ்சம் என்பது பெயர். மேலெழுந்து பறப்பது என்னும் பொருளமைந்த கிரௌஞ்சம் என்ற பெயருக்கு ஏற்ப மலை மிகவும் உயர்ந்தது என்பதாம். **நூறுதல்**—பொடியாகச் செய்தல்.

ஐயன்—இராமபிரான்; அரித்தல்தரும் அரசன்—பெறற்கரும் பேறு ஆக அமையும் வண்ணம் வேள்வி முதலியன செய்து பெறுதல். **நிமித்தம்**-காரணம். **எல்லை**-சமயம்.

### இலக்கணம்

**மை யின்**-'மை' விகுதியளவில் நின்று தன்மையை உணர்த்தியது. **இன்**-மூன்ரும் வேற்றுமை கருவிப்பொருள்.
**உயர்மலை**-வினைத் தொகை.
**நூறியமழு**-பெயரெச்சத் தொடர்.
**கொல்**-அசைநிலை.

## 16. பரசுராமனை நோக்கி இவன் யார் என இராமன் வினவுதல்

### உரை

**பொங்கும் படை இரிய**-மகிழ்ந்து சென்று கொண்டிருக்கும் தசரதனின் படைகள் பயந்தோட,
**கிளர் புருவம் கடை நெரிய**-கிளர்ந்தெழும் புருவங்களின் கடைசியானவை வளைய,
**வெம் கண் பொறி சிதற**-பயங்கரமாகிய கண்கள் நெருப்புப் பொறிகளைச் சிந்த,
**கடிது உரும் ஏறு என**-விரைந்து இடியேறு போல,
**விடையா**-பெருஞ்சினங் கொண்டு,
**சிங்கம் என உயர் தேர் வரு குமரன்**-சிங்கம் என்று சொல்லும்படியாக உயர்ந்த தேரில் வருகின்ற,
**குமரன் எதிர்சென்ருன்**-இராமபிரானுக்கு எதிரில் சென்ருன் (பரசுராமன்),
**அங் கண் அரசனும்**-அருள்பொழியும் அழகிய கண்களோடு அரசனுகவும் விளங்கும் இராமன்,
**இவன் ஆரோ எனும் அளவில்**-இவன் யார் என்று சொல்லும் அச்சமயத்தில்.

## தெளிவுரை

மகிழ்ந்து சென்று கொண்டிருக்கும் தசரதனின் படைகள் பயந்தோட, கிளர்ந்தெழும் புருவங்களின் கடைசியானவை வளைய; கொடிய கண்கள் நெருப்புப் பொறிகளைச் சிந்த; விரைந்து இடியேறு போலச் சினந்து சிங்கம் என்று சொல்லும் படியாக உயர்ந்த தேரில் வருகின்ற இராமபிரானுக்கு எதிரில் சென்று நின்றான் பரசுராமன்; அருள்பொழியும் அழகிய கண்களை உடையவனாகிய இராமபிரானும் இவன் யாரோ என்று எண்ணும் அளவில்,

## விளக்கவுரை

பரசுராமனின் வருகையைக் கண்டவுடன் தசரதனுடைய படைகள் ஓட ஆரம்பித்தன. பரசுராமன் புருவங்கள் வளைய, கண்கள் நெருப்புப் பொறியைச் சிந்த ஆண் இடி போல முழங்கிக் கொண்டு வந்து, சிங்கம் போலத் தேரில் வருகின்ற இராமன் முன் போய் நின்றான். கோபங் கொண்டு வேகமாக வருகின்ற பரசுராமனையும் தடுத்து நிறுத்தும் ஆற்றல் வாய்ந்த அழகிய கருணை பொழியும் கண்கள் இராமனுடைய கண்கள் என்பதை அம் கண் அழகன் என்றார்.

'கண்ணிற்கு அணிகலம் கண்ணோட்டம்' என்ற திருக்குறளை நினைவிற் கொண்டு அருள் பொழியும் இராமன் கண்களை அழகுடைய கண்கள் என்றார்.

ஒன்பது பாட்டுக்களில் பரசுராமனுடைய பெரும் வீரத்தையும் கோபத்தையும் ஆரவாரத்தையும் சொல்லி வந்த கம்பர் இவ்வளவு வீரமும் கோபமும் இவன் அழகில், சாந்தத்தில், அருளில் மூழ்கி விடப் போகின்றன என்று ஈடுபட்டு **அம் கண்** அரசன் என்றார்,

புருவம் கடை நெரிதல்—புருவம் கோபத்தால் வில்லென வளைதல்; **உரும் ஏறு**-ஆண் இடி; பேரிடிபோல முழக்கமிட்டு; **விடைத்தல்**-கோபங் கொள்ளுதல். சிங்கம் இராமபிரானுக்கு உவமை.

## இலக்கணம்

கிளவர் புருவம், உயர் தேர், வருகுமரன் — வினைத் தொகைகள்.

வெங்கண், அங்கண் — பண்புத் தொகைகள்.

**இரிய**, **நெரிய**, **சிதற** — செய என் வாய்பாட்டு வினையெச்சங்கள்.

**விடையா**-செய்யா என்னும் வாய்ப்பாட்டு **வினையெச்சம்;** உடன்பாட்டுப் பொருள்.

சிங்கம் **என**-உவமைப் பொருள் இடைச்சொல்.

**ஆர்**-யார்? என்ற வினாப் பெயரின் திரிபு.

**'ஓ'**-அசைநிலை.

## 17. தசரதன் பணியவும் கவனியாது பரசுராமன் இராமனிடம் பேசத் தொடங்குதல்

### உரை

**அரசன்**-தசரதன்,
**அவன் இடை வந்து**-பரசுராமனிடத்தில வந்து,
**ஆராதனை புரிவான்**-இனிமையுடன் அவனுக்குப் பூசைகள் செய்பவனாகி,
**விரைசெய் முடி படிமேல் உற**-மாலைகள முதலியவற்றால் மணம் வீசுகின்ற முடியானது பூமியின் மேற் படவும்,
**அடிமேல் உறவிழலும்**-பரசுராமனுடைய திருவடிகளின் மேல விழவும் ஆமாறு கீழேவிழுந்து வணங்கவும்,
**கரை சென்றிலன்**-கோபம் என்ற கடலுக்கு உரிய கரையை அடையாதவன் ஆன பரசுராமன்,
**நெடு முடிவின் கனல் கால்வான்**-பெரிய யுகத்தின் முடிவில் நெருப்பைக் கக்குபவன் ஆக,
**முரசின் குரல் பட**-முரசத்தினது முழக்கத்துக்கு ஒப்பாக ஒலியை உண்டாக்கிக் கொண்டு,
**வீரனது எதிர் நின்று**-இராமபிரானுககு எதிரில் நின்று,
**இவை மொழிவான்**-கீழ்க்கண்டவைகளைச் சொல்லத் தொடங்கினான்.

### தெளிவுரை

தசரதன் பரசுராமனிடத்தல வந்து இனிமையுடன் அவனுக்குப் பூசைகள் செய்பவனாகி மாலைகள் முதலியவற்றால் மணம் வீசுகின்ற முடியானது பூமியிலும் அவன் திருவடிகளிலும் படியுமாறு நிலத்தில் விழுந்து வணங்கவும் கோபம் தணியாதவனாகி, ஊழிக்கால நெருப்பைக் கக்குபவன் போல முரசத்தினது முழக்கத்துக்கு ஒப்பாக ஒலியை உண்டாக்கிக் கொண்டு இராமபிரானுக்கு எதிரில் நின்று கீழ்க்கண்டவைகளைச் சொல்லத் தொடங்கினான்.

### விளக்கவுரை

பரசுராமனைக் கண்ட தசரதன பயந்து வந்து அவனுக்குப் பூசைகள் செய்தான். முடியானது பூமியிலும் பரசுராமன் திருவடிகளிலும் படுமாறு நிலத்தில் விழுந்து வணங்கினான்.

**கரை சென்றிலன்**-கோபம் என்ற கடலுக்கு உரிய கரையை அடையவில்லை; கோபம் தணியாதவனானான். ஊழிக்கால நெருப்பைக் கக்குபவன் போலவும் முரசத்தினது முழக்கத்துக்கு ஒப்ப ஒலியை எழுப்பிக் கொண்டு இராமன் எதிர் சென்று பேசத் தொடங்கினான்.

### இலக்கணம்

**அவனிடை**-ஏழாம் வேற்றுமை உருபின் பொருள்பட வந்த சொல்.

**புரிவான்**, **கால்வான்** } முற்றெச்சங்கள்.

**விரை செய்**-இரண்டாம் வேற்றுமைத் தொகை.
**செய முடி**-வினைத்தொகை.

**படிமேல் உற**, **அடிமேல் உற** } 'மேல்' இரண்டும் ஏழாம் வேற்றுமை உருபின் பொருள்பட வந்த சொற்கள்.
'உற' இரண்டும் செய வென் வாய்பாட்டு வினையெச்சங்கள்.

**விழலும்**-தொழிற்பெயர்.
**கரை சென்றிலன்**-வினையாலணையும் பெயர்.

## 18. பரசுராமன் இராமனிடம் கூறியது

### உரை

**உரவோன்**-வலிமைமிக்கவனான பரசுராமன்,
**யான் இற்று ஒடிய சிலையின் திறம் அறிவென**-உன்னால் ஒடிக்கப்பட்டு விழுந்த வில்லின் தன்மையை (அது முன்பே உடைந்திருந்த செய்தியை) நான் அறிவேன்,
**இனி உன் பொன் தோள் வலி நிலை**-இனிமேல் உன்னுடைய அழகிய தோளின் வலிமைத் தன்மையை,
**சோதனை புரிவான் நசை உடையேன்**-சோதனை புரிவதற்கான விருப்பம் பெரிது உடையவனானேன்,
**செற்று ஒடிய திரள் தோள் உறு தினவும் சிறிது உடையேன்**-அரசர்களை அழித்ததால் மேம்பட்டுத் திரண்ட தோள்களிற் பொருந்திய தினவும் கொஞ்சம் உடையேன்,
**மற்று ஓர் பொருள் இலது இங்கு**-வேறு எக்காரியமும் எனக்கு இங்கே இல்லை,
**இது என்வரவு என்றனன்**-இதுவே என்னுடைய வருகைக்குக் காரணம் என்று கூறினான்.

### தெளிவுரை

வலிமை மிக்கவனான பரசுராமன் யான் உன்னால் ஒடிக்கப்பெற்ற வில் முன்னேயே உடைந்திருந்த வில் என்பதை நான் அறிவேன்; இனிமேல் உன்னுடைய அழகிய தோளின் வலிமைத் தன்மையைச் சோதனைபுரியும் விருப்பம் உடையேன்; மேலும் அரசர்களை அழித்து மேம்பட்டுத்திரண்ட தோள்களிற் பொருந்திய தினவும் சிறிது உடையேன்; வேறு எக்காரியமும் எனக்கு இங்கே இல்லை; இதுவே என்னுடைய வருகைக்குக் காரணம் என்று கூறினன்.

### விளக்கவுரை

இராமபிரான் சீதையை மணப்பதற்காக வளைக்க எடுத்தவில் ஒடிந்து போயிற்று. அவ்வீரத்தை அடிப்படையாகக் கொண்டு சீதையை மணம் புரிந்தான். பரசுராமன் இராமனிடம் கூறும்போது நீ ஒடித்த வில் முன்னமேயே ஒடிந்திருந்தது என்பதை நான் அறிவேன், என்று இழிவாகப் பேசினான்.

இராமனுடைய தோள்களை அழகான தோள் என்றும் தன்னுடைய தோள்கள் அரசர்களை அழித்ததால் வெற்றி பெற்று அதனால் திரட்சி பெற்ற தோள் என்றும் இணைத்துக் காட்டி உன்னுடைய தோள் வெறறழகுடையது; என்னுடைய தோள் வெற்றியழகுடையது என்றும் குறிப்பிட்டான்.

தினவும் சிறிது உடையேன் என்பது அவனுக்குப் போரில் விருப்பம் உண்டு என்பதைக் காட்டியது. **இறுதல்**-அழிதல். **செறுதல்**-அழித்தல்.

### இலக்கணம்

**இற்று ஒடிய**, **செற்று ஒடிய** } செய்து என் வாய்பாட்டு வினையெச்சங்கள்.

ஓடிய சிலை } பெயரெச்சத் தொடர்கள்
ஓடிய தோள்

சிலையின் திறம் } ஆறும் வேற்றுமைத் தொகைகள்.
தோள் வலி
வலி நிலை

அறிவென் } தன்மை ஒருமை வினைமுற்றுக்கள்.
உடையேன்

பொற்றோள்-பண்புத் தொகை.
புரிவான்-வான் ஈற்று வினையெச்சம்.
உறு தினவு-வினைத்தொகை.
இலது-குறிப்பு வினைமுற்று

## 19. இவனும் என் உயிரும் உனதபயம் எனத் தசரதன் வேண்டுதல்.

### உரை

**அவன் அன்னது பகரும் அளவையில்**-பரசுராமன் அப்படிப்பட்ட சொற்களைப் பேசும் சமயத்தில்,
**மன்னவன் அயர்வான்**-தசரதன் சோர்வு கொண்டவனாகி,
**புவனம் முழுவதும் வென்று ஒரு முனிவற்கு அருள் புரிவாய்**-இப் பூவுலகம் முழுவதையும் வெற்றிகொண்டு ஒரு முனிவனாகிய காசிபனுக்குத் தானமாகக் கொடுத்து அருள் செய்தவனே!,
**சிவனும் அரி அயனும் அலர்**-சிவனும், திருமாலும், நான்முகனும் உனக்கு ஒரு பொருளாக ஆகமாட்டார் என்றால்
**சிறு மானிடர் பொருளோ**-சிறிய மனித இனத்தில தோன்றிய மனிதர்கள் ஒரு பொருளாகுவரோ; ஆகார்,
**இவனும் எனது உயிரும்**-இந்த இராமனும் என்னுடைய உயிரும்,
**உனது அபயம் இனி**-இனித் தங்களால் அடைக்கலம் தந்து காப்பாற்றப் பெற வேண்டிய பொருளாயின,
**என்றான்**-என்று கூறினான்.

### தெளிவுரை

இராமனிடம் சென்று போர் வீரம் பேசும் சமயத்தில் தசரதன் சோர்வு கொண்டவனாகி, பரசுராமனை நோக்கி, இப்பூவுலகம் முழுவதையும் வெற்றி கொண்டு ஒரு முனிவனாகிய காசிபனுக்கு வழங்கிய அருளோனே! சிவனும் திருமாலும் நான்முகனும் உனக்கு ஒரு பொருளாக ஆகமாட்டார் என்றால் கேவலம், சிறிய மனித இனத்தில் தோன்றியவர்கள் ஒரு பொருளாகுவர்களோ? ஆகார்; இவனும் எனதுயிரும் உனதபயம் என்று கூறினான்.

### விளக்கவுரை

தான் விழுந்து வணங்குவதையும் பொருட்படுத்தாது இராமனிடம் சென்று போர் முரசு அறையும் பரசுராமன் தன்மையை நோக்கியதும் தசரதன் சோர்வுற்றுப் போனான்.

பரசுராமன் உலகத்து அரசர்களையெல்லாம் அழித்து வென்று, இவ்வுலக ஆட்சி முழுவதையும் காசிபனுக்குத் தானம் செய்தான் என்பது வரலாறு. அருள் உள்ளம் மேற்கொண்டவன் ஆதலின் எங்களையும் அருள் உள்ளங் கொண்டு காப்பாற்றுக என்று கூறினான்.

பரசுராமனும் இராமனும் திருமாலின் அம்சங்களே. திருமாலின் ஒரு அம்சமாகிய பரசுராமனுக்குத் திருமாலே இணையாக மாட்டார் என்று கூறியது தசரதனுக்கு இவ்வுண்மை தெரியாது என்றும் கொள்ளலாம் அல்லது தோத்திரமாகக் கூறினான் என்றும் கொள்ளலாம். முப்பெருந் தெய்வங்களே நினக்கு நிகராக மாட்டார் எனில் சிறு மானிடர்களாகிய நாங்கள் எம்மாத்திரம்? என்று தங்களை இழித்துப் பேசினான்.

பரசுராமனை மிகவுயர்த்தியும் தன்னையும் இராமனையும் மிகத் தாழ்த்தியும் பேசினன் தசரதன்.

இவனும் என இராமனை முன்னே கூறியது இவன் உயிர்போனால் யானும் அழிந்துவிடுவேன் என்ற நயம் கருதி.

அபயம் என்ற சொல் 'அடைக்கலம்' என்று பொருள்படும்.

### இலக்கணம்

**அயர்வான்**-முற்றெச்சம்
**புரிவாய்**-வினையாலணையும் பெயர்.
**அவர்**-குறிப்பு வினைமுற்று.
பொருளோ-'ஓ' எதிர் மறை இடைச்சொல்.

## 20. எளியவர்களாகிய எங்களிடம் தாங்கள் வலிமையைக் காட்டுவது அறம் ஆகாது என்றல்.

### உரை

**கனல் உமிழும்**-நெருப்பைக் கக்குகின்ற,
**ஒளிவாய் மழு உடையாய்**-ஒளி வாய்ந்த மழுவாயுதத்தை உடையவனே!,
**விளிவார் விளிவது**-சினங் சொள்ளுபவர் என்பது,
**தீவினை விழைவார் உழை அன்றோ**-தீவினையைச் செய்பவர்களிடம் அல்லவா?
**களியால் இவன் அயர்கின்றன உளவோ?**-செல்வம், கல்வி, வீரம் முதலியவற்றால் உண்டான செருக்கினால் இச்சிறியயவன் தங்களிடத்தில் அறிவு சோர்ந்து செய்த குற்றப்பாடான காரியங்கள் எவையேனும் உளவோ?,
**பொர**-சண்டை செய்வதற்கு,
**உரியார் இடை அல்லால்**-உரிய வலிமை யுடையவர்களிடத்தில்லாமல்,
**எளியார் இடை**-எளியவர்களாகிய எங்களிடத்தில்,
**வலியார் வலு**-வலிமை மிக்கவராகிய தங்கள் போன்றாரது வலிமை,
**என்னுகுவது**-என்ன பயன் உடையதாக ஆகுவது?
**என்றான்**-என்று கூறினான் தசரதன்.

### தெளிவுரை

நெருப்பைக் கக்குகின்ற ஒளியுடைய கோடரிப்படையைத் தாங்கியவனே! சினங்கொள்ளுபவர் சினங்கொள்ளுவதென்பது தீவினை

யைச் செய்பவர்களிடம் அல்லவா ? இந்த இளையவனை இராமன் கல்வி முதலியவற்றால் உண்டான செருக்கினால் தங்களிடத்தில் அறிவு சோர்ந்து செய்த குற்றப்பாடான காரியங்கள் எவையேனும் உளவோ ? சண்டை செய்வதற்கு உரிய வலிமையை உடையவர் களிடத்தேயன்றி எளியவர்களாகிய தங்கள் போன்றாரது வலிமை என்ன பயனுடைத்து ? என்று கூறினான்.

### விளக்கவுரை

தசரதன் இரண்டு செய்திகளை எடுத்துக் காட்டுகிறான்
1. கோபங்கொள்ளுவது என்ற செயல் நீதிக்கு மாறான தீமை பொருந்திய காரியங்களை ஒருவன் செய்யும்போது நீதியாற் கோபிக்க லாம். நாங்கள் உங்களுக்கு மாறாகத் தீய காரியங்கள் ஒன்றையும் செய்யவில்லை. நானேயல்லாமல் சிறியவனாகிய இவனும் கல்வி, வீரம் முதலிய செருக்கினால் அறிவு அழிந்து செய்த குற்றங்கள் உண்டோ ? இல்லை.

2. தோள்வலிமை காட்டுவது எனில் வலியவராகிய தாங்கள் வலியவரை நாடித் தோள் வலிமை காட்டுவது அறமேயன்றி எளியவர்களாகிய எங்களிடம் வலியவர்களாகிய தங்கள் வலிமை என்ன பயனுடையது ஆகும்; புகழுக்குப் பதில் வசையே வந்தெய் தும் என்பதாம்.

விளிவார்-சினம் கொள்ளுபவர். **களி**-இங்கே கல்வி, வீரம் முதலியவற்றால் விளையும் செருக்கு.

### இலக்கணம்

வாய்மழு-வினைத்தொகை.
விளிவார், விழைவார், அயர்கின்றன - வினையாலணையும் பெயர்கள்.
**விளிவது**-தொழிற் பெயர்.
இடை, உழை-ஏழாம் வேற்றுமை உருபின் பொருள்பட வந்த சொல்.
அன்றோ உளவோ-ஓகாரங்கள் வினாப்பொருள்.
**பொர**- செயவென் வாய்பாட்டு வினையெச்சம்.
**வலியார் வலி**-ஆறாம் வேற்றுமைத் தொகை.

## 21. முனிகின்றது முறையோ எனத் தசரதன் வேண்டுதல்

### உரை

**கனி மா தவம் உடையாய் !**-மிகுதியும் சிறந்த தவத்தை உடையவனே !
**இது பிடி என நீ நல்கும்**-நான் கொடுக்கிறேன், இதனை ஏற்றுக் கொள் என்று காசிப முனிவனுக்கு நீ கொடுக்கும்,
**உலகு ஏழையும்**-ஏழு பகுதிப் பட்டதாகிய இவ்வுலக முழுமைக்கும்,
**தனி நாயகம் உடையாய் !**-ஒப்பற்ற தலைமைத் தன்மையை உடையவனே!

**இது தவிராய்**-ஒற்றற்கும் உதவாத எங்கள் மேற் சினப்பதை விட்டு விடுவீராக;
**பனி வார் கடல் புடை சூழ் படி**-குளிர்ந்த நீண்ட கடல சூழ்ந்த இந்நிலவுலகத்தில் வாழ்கிற,
**நர பாலரை**-நரர்களாகிய மனிதர்களைக் காப்பவரான அரசர்களை,
**அருளா அருள் செய்யாமல்** அழிப்பது என்ற,
**முனிவு**-கோபத்தை,
**ஆறினை**-தணித்துக் கொண்டாய்;
**முனிகின்றது முறையோ**-மீளவும் கோபிப்பது முறைமையாகுமோ?,
**என மொழிவான்**-என்று கூறுவானாயினன் (தசரதன்.)

## தெளிவுரை

மிகுதியும் சிறந்த தவத்தை உடையவனே! நான் கொடுக்கிறேன் இதனை ஏற்றுக்கொள் என்று காசிப முனிவனுக்கு நீ கொடுக்கும் ஏழுபகுதிப்பட்ட இவ்வுலகம் முழுமைக்கும் ஒப்பற்ற தலைமைத் தன்மை உடையவனே! ஒரு பொருளுக்கும் உதவாத எங்கள் மேற் சினப்பதை விட்டு விடுவீராக! குளிர்ந்த நீண்ட கடல் சூழ்ந்த இந்நிலவுலகில் வாழ்கிற நரர்களாகிய மனிதர்களைக் காப்பவரான அரசர்களை அழிப்பது என்ற கோபத்தை இப்பொழுதுதானே தணித்துக் கொண்டாய். மீளவும் கோபிப்பது முறைமையாகுமா? என்று கூறுவானாயினன்.

## விளக்கவுரை

'**தனிநாயகம்**' உடையவன் பரசுராமன் என்று தசரதன் கூறினான். உலகம் முழுவதையும் காசிபனுக்குக் கொடுத்தான் பரசுராமன். அவனிடமிருந்து பகுதி பகுதியாகப் பிரித்துக்கொண்டு பலபேர் ஆட்சி புரிகிறார்கள். அவர்களில் நரர்களை மட்டும் காப்பவர் பலர். அப் பலரிலே நான் ஒருவன். **சிறுநாயகம்**—உலகைப் பல பகுதிகளாகப் பிரித்து, நரர்களை—மனிதர்களை மட்டும் ஆளும் ஆட்சியைச் செய்பவர்கள். காசிபன்—**பொது நாயகன்**. எல்லாச்சிறு நாயகர்களும் அப்பொது நாயகனுக்கு அடிமை. பொது நாயகனாகிய காசிபனுக்கு மேலாகத் **தனி நாயகன்**-பரசுராமன் இருக்கிறான். இவ்வகையில் தசரதன் பரசுராமனுடைய வேலையைப் பகிர்ந்து செய்யும் தொழிலுடையவனே. அதுநிற்க, மனிதகுலத்தைக் காப்பவர்கள் மட்டும் தவறு செய்தபோது தனிநாயகனான இவன் கோபங்கொண்டு அவர்களை இருபத்தொரு தலைமுறை அழித்து இப்போதுதான் தணிவு கொண்டான். இவ்வாறு எடுத்துக்காட்டி நாங்கள் உங்கள் ஏவலர்களே ஆதலின் சினம் தவிர்க்க என்றான்.

இத்தகைய தனிநாயகத் தன்மையை இவன் தவத்தாற் பெற்றான் ஆதலின் **நனி மா தவம் உடையாய்** என்றார்.

'**இது பிடி நீ**' என்பது பரசுராமன் காசிபனை நோக்கி உலகைத் தானம் செய்யும் போது வீரத்தோடு ஏழு தீவுகளாகப் பிரிக்கப் பெற்றுள்ளது என்ற கருத்தை நோக்கி.

**நரபாலர்**-நரர்களைக் காப்பவர், நரர்—மனிதர். அரசர்களை அழிப்பதற்குக் கொண்ட கோபத்தை இப்பொழுதுதானே தணித்தாய், மீளவும் கொள்ளுதல் முறையோ! என வேண்டினான்.

### இலக்கணம்

**கனி, மா** தவம்-உரிச்சொல் தொடர்; ஒரு பொருட்பன்மொழி.
**உடையாய்**-இரண்டும் விளி வேற்றுமை.
**தனி நாயகம்**-பண்புத்தொகை.
**ஏழையும்**-முற்றும்மை.
**தவிராய், ஆறினை**-முன்னிலை ஒருமை வினைமுற்றுக்கள்.
**வார்கடல்**, **சூழ்படி** } வினைத் தொகைகள்.
**அருளா முனிவு**-ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.
**முறையோ**-ஓ காரம் இரத்தற் பொருள்.

## 22. அறத்தின் வழிப் புகழ் பெறுவதே ஆண்மை எனக் கூறித் தசரதன் வேண்டுதல்.

### உரை

**புறன் நின்றவர்**-வெளியில் நின்றவர்.
**இகழும்படி**-இகழ்ந்து கூறுமாறு,
**நடுவின் தலைபுணராத் திறன் நின்று**-நடுவு நிலைமையிற் பொருந்தாத வகையில் நின்று,
**உயர் வலி என்?**-உயர்வு பெற்ற வலிமை என்பது என்ன பயனுடையது?
**அது ஓர் அறனின் தரு செயலோ?**-அச்செயல ஒப்பற்ற அறத்தினால் வரப் பெற்ற செயலாகுமோ? ஆகாது.
**அறன் நின்றதன் நிலை நின்று**-உலகில் நிலைபேறு பெற்ற அறம் எவ்வழி நிற்கின்றதோ அவ்வழியில் நிலைபெற்று நின்று.
**உயர் புகழ் ஒன்றுவது அன்றோ**-உயர்ந்த புகழைப் பொருந்துவது அல்லவோ?
**மறன் என்பது**-வீரம் என்று சிறப்பித்துச் சொல்லப்படுவது; ஆகையால்,
**மறவோய்**-வீரம் என்பதற்கே இலக்கணமாக நின்றவனே!
**இது வலி என்பது வலியோ?**-காலில் விழுந்து அபயம் என்று சரணடைகிறவர்களையே கொல்ல முற்படும் இது வலிமை என்று சிறப்பித்துச் சொல்லப் பெறும் வலிமை ஆகுமோ? ஆகாது.

### தெளிவுரை

வெளியில் நின்றவர் இகழ்நது கூறுமாறு நடுவு நிலைமையிற் பொருந்தாத வகையில் நின்று உயர்வுபெற்ற வலிமை என்பது என்ன பயனுடையது? அச்செயல் சிறந்த அறத்தினால் வரப்பெற்ற செயலாகுமா? உலகில் நிலை பேறு பெற்ற அறம் எவ்வழி நின்றதோ அவ்வழியில் நிலை பெற்று நின்று உயர்ந்த புகழைப் பொருந்துவது அல்லவா, வீரம் என்று சிறப்பித்துச் சொல்லப் பெறுவது! ஆகையால் வீரனே! காலில் விழுந்து அபயம் என்று சரணடைகிற எங்களையே கொல்ல முற்படும் இது வலிமை என்று சிறப்பித்துச் சொல்லப் பெறும் வலிமை ஆகுமோ! ஆகாது.

### விளக்கவுரை

தசரதன், வீரம் எது? வலிமை எது? என்பனவற்றிற்கு இலக்கணம் கூறி நீதி கேட்கிறான் பரசுராமனிடம்.

*1.* நடுவுநிலைமைக்குப் பொருந்தாத காரியங்களைச் செய்து உயர்ந்த வலிமையை அடைவது என்பது அறம் அல்ல; பழியைத் தருவது

*2.* வீரம் என்று சிறப்பித்துச் சொல்லப் பெறுவது என்பது, என்றும் அழியாத அறம் எதில் இருக்கிறதோ அதையே செய்து மாறுனவைகளைச் செய்யா திருப்பதே ஆகும். அவ்வாறு அறம் சார்ந்த செயலையே செய்து உயர்ந்த புகழைப் பெறுவதே வீரம்.

இவ்விரண்டையும் எடுத்துக் காட்டி அபயம் என்று காலில் விழுந்து வணங்கும் எங்களைக் கொல்வது அறம் அல்ல; புகழ்வராமையோடன்றிப் பழியும் வரும்; புறத்தே உள்ளவர் நகைப்பர்.

தலைபுணர்தல்—பொருந்துதல்.

### இலக்கணம்

மறம்-மறன்; புறம்-புறன்; அறம்-அறன்-மகரவிறுதினகரப் போலிகள்.
தலைபுணரா-ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.
உயர்வலி உயர்புகழ், தருசெயல் } வினைத் தொகைகள்.
நின்றதன் நிலை-ஆறும் வேற்றுமைத் தொகை.
நிலை நின்று-ஏழாம் வேற்றுமைத் தொகை.
செயலோ, வலியோ-ஓகாரங்கள் எதிர்மறை.

## 23. 'குலத்தோடு அற முடியேல்' எனத் தசரதன் வேண்டுதல்

### உரை

**உலத்தோடு எதிர் தோளாய்**-கல் தூணோடு மாறுபட்ட தோளை யுடையவனே!
**என்மகன்**-என்மகனாகிய இராமன்,
**சலத்தோடு இயைவு இலன்**-உன்னிடத்திற பகைமையோடு பொருந்தியவன் அல்லன்,
**அனையான் உயிா தபுமேல்**-அப்படிப்பட்டவனுடைய உயிர் உடம்பைவிட்டு நீங்குமானால்,
**எனது உறவோடு**-என்னுடைய சுற்றத்தவர்களோடும்,
**நிலத்தோடு**-யானுளும் நாட்டைச் சார்ந்தவருடனும்,
**உயர்கதி வான் உற**-உயர் வாழ்வு எனப்பெறும் விண்ணுலகத்தைப் பொருந்துமாறு,
**உயிர் உகுவேன்**-இறப்பேன்,
**நெடியாய**-புகழ், வீரம் முதலிய வற்றால் உயர்ந்தவனே!
**அடியேன்**-தங்களின் அடிமையாகிய யான்,
**குலத்தோடு அற முடியேல்**-குல முழுவதும வேரோடு அழிந்து போகும்படி எம்மை அழிக்காதே!,
**இது குறை கொண்டனென்**-இவ் வேண்டுகோளைத் தங்களிடம் விண்ணப்பித்துக் கொண்டேன்,
**என்றான்**-என்று தசரதன் பரசுராமனை நோக்கிக் கூறினான்.

### தெளிவுரை

கல்தூணோடு மாறுபட்ட தோளையுடையவனே! என்மகனாகிய இராமன் உன்னிடத்திற் பகைமையோடு பொருந்தியவன் அல்லன்; அப்படிப்பட்டவனுடைய உயிர் உடம்பை விட்டு நீங்குமானால் என்

னுடைய சுற்றத்தவர்களோடும் யானும் நாட்டைச் சார்ந்தவர் களோடும் உயர் வாழ்வு எனப் பெறும் விண்ணுலகத்தைப் பொருந்து மாறு இறப்பேன்; புகழ், வீரம் முதலியவற்றால் உயர்ந்தவனே! தங்களின் அடிமையாகிய யான் குலமழுவதும் வேரோடு அழிந்து போகும்படி எம்மை அழிக்காதே!; இவ் வேண்டுகோளைத் தங்களிடம் விண்ணப்பித்துக் கொண்டேன் என்று பரசுராமனை நோக்கித் தசரதன் கூறினான்.

**விளக்கவுரை**

உன்னோடு எவ்வாற்றாலும் பகை என்று கருதப்பெற முடியாதவன் இராமன். இவன் உயிர் அழியுமேல் யானும், என் உறவும், எனது நாட்டு மக்களும் உயிர் துறந்து விண்ணுலகம் அடைவோம்; என் குலத்தை அடியோடு அழிக்காதே என்று இறுதி வேண்டுகோளாக விடுத்தான் தசரதன் பரசுராமனிடம்.

இராமன் ஒருவனே உயிர்; மற்றையோர் உடல்கள் என்பதைத் தசரதன் எடுத்துக் காட்டினான். உயிர் போய்விடுமானால் உடல்களாகிய நாங்கள் அழிந்தே போவோம் என்றான்.

உலம்-கற்றூண். பரசுராமனுடைய தோள் கற்றூணை விட வலிமையிற் சிறந்தது என்பதாம் **சலம்**-வஞ்சனை-இங்கே பகைமையைக் குறித்தது. **தபுதல்**-இறத்தல்; உகுதல்-சிந்துதல். **குறை கொண்டனென்**-விண்ணப்பித்துக் கொண்டேன்

**இலக்கணம்**

**தோளாய், நெடியாய்**-முன்னிலை ஒருமைப் பெயர்கள், விளி, **இயைவு**-தொழிற் பெயர்.

உகுவேன் } கொண்டனென் } தன்மை ஒருமை வினைமுற்றுக்கள்,

## 24. தசரதன் தனம் வெம்புதல்

**உரை**

**என்று**-என்று இவ்வாறு குறையிரந்து.
**அடி விழுவரனையும்** - காலில் விழுந்து வணங்குபவனாகிய தசரதனையும்,
**இகழா எரிவிழியா**-இகழ்ந்து, நெருப்பு எழச் சினந்து,
**பொன்னார் கலி அணிவான்**-பொன்னுடையை அணிந்து கொண்டிருக்கிற இராமனுக்கு,
**எதிர் புகுவான்**-நேராகச் சென்ற பரசுராமனுடைய,
**நிலை உணரா**-நிலையை உணர்ந்து,
**தன்னால் ஒரு செயல் இன்மையை நினையா**-தன்னால் இனிச் செய்யக் கூடிய செயல் ஒன்றும் இல்லை என்பதை நினைத்து,
**உயிர் தளரா**-உயிர் தளர்ந்து,
**மினலால் அயர்வு உறும் வான் அரவு என**-இடியோடு கலந்து வருகிற மின்னலினால் தளர்ச்சியுறும் ஒளிபொருந்திய பாம்பு போல
**வெய்து உறல் உற்றான்**-மனம் வெம்புதலைப் பொருந்தினான்.

**தெளிவுரை**

என்று இவ்வாறாகக் குறையிரந்து அவன் காலில் விழுந்து வணங்குபவனாகிய தசரதனையும் இகழ்ந்து, நெருப்பு எழுமாறு கோபித்து, பொன்னுடையை அணிந்து கொண்டிருக்கிற இராமனுக்கு நேராகச் சென்ற பரசுராமனுடைய நிலையை உணர்ந்து,

தன்னால் இனிச் செய்யக் கூடிய செயல் ஒன்றும் இல்லை என்பதை நினைத்து, உயிர் தளர்ந்து இடியோடு கலந்து வருகிற மின்னலினால் தளர்ச்சியுறும் ஒளிபொருந்திய பாம்பு போல மனம் வெம்புதலைப் பொருந்தினான் தசரதன்.

### விளக்கவுரை

அடைக்கலம் என்று விழுந்தவனையும் இகழ்ந்து பேசிச் சென்றான் பரசுராமன். விழுவானையும் என்பதில் உள்ள உம்மை அறத்தைக் காப்பாற்ற வேண்டிய பரசுராமன் அடியில் விழுபவனைப் புறக்கணித்தல் கூடாது என்ற அறத்தையும் கடந்து சென்றான் என்பதை உணர்த்தியது.

**பொன்னார் கலி**-பொன்னுடை. இடியுடன் கூடிய மின்னலைக் கண்டபோது பாம்பு அஞ்சி நடுங்கும். அப்பாம்பைப் போலக் கொடுந்துன்பத்தை அடைந்து மூர்ச்சித்தான்.

### இலக்கணம்

**என்னா, இகழா, விழியா உணரா நினையா தளரா** } செய்யா' என் வாய்பாட்டு வினையெச்சங்கள் உடன்பாட்டுப் பொருள்.

**அடி விழுவானையும்**-ஏழாம் வேற்றுமைத் தொகை.

**அணிவான எதிர் புகுவான்** } வினையாலணையும் பெயர்கள்.

**அயர்வு, உறல்**-தொழிற் பெயர்கள்.

**என**-உவமையுருபு.

## 25. பரசுராமன் வில்லின் வரலாறு கூறத் தொடங்குதல்

### உரை

**மானம் உடை முடிமன்னவன்**-மானத்தையே உடைமையாகக் கொண்ட முடிமன்னவனாகிய தசரதன்,

**மதி சோர்வுறல் மதியான்**-அறிவு சோர்வதைத் தன உள்ளத்தே சிறிதும் கருதாதவனாய்,

**தான் அ நிலை உறுவான் உறுவினை உண்டு அது தவிரான்**-தானே அவ்வாறு அறிவு சோர்வதை அடைவதற்குரிய ஊழ்வினை உண்டாயிருப்பதனை விலக்கும் வகையற்றவனாய், இராமனை நோக்கி,

**ஆனம் உடை உமை அண்ணலை**-உடுக்கையைக் கையிற் கொண்டவனும், உமையை மணந்தவனும் ஆகிய சிவபெருமானை,

**அ நாள் உறு சிலைதான் - அக்**காலத்திலே பொருந்திய வில்லானது,

**ஊனம் உளது**-குறையுடையது,

**அதன் மேல் நிலை கேள் நீ**-அவ்வில்லின் பழைய வரலாற்றை நீ கேட்பாயாக,

**என உரைப்பான்**-என்று சொல்வானாயினன்.

### தெளிவுரை

மானத்தையே உடைமையாகக் கொண்ட முடிமன்னவனாகிய தசரதன் அறிவு சோர்வதைத் தன்னுள்ளத்தே சிறிதும் கருதாதவ

ஞய், தானே அவ்வாறு அறிவு சோர்வதை அடைவதற்குரிய ஊழ் வினை உண்டாகியிருப்பதனை விலக்கும் வகையற்றவனாய், இராமனை நோக்கி, உடுக்கையைக் கையிற் கொண்டவனும், உமையை மணந்தவனும் ஆகிய சிவபெருமானை அக்காலத்திற் பொருந்திய வில்லானது குறையுடையது; அவ்வில்லின் பழைய வரலாற்றை நீ கேட்பாயாக, என்று சொல்வானாயினன்.

### விளக்கவுரை

பரசுராமன் மனமும் அறிவும் சோர்ந்து மூர்ச்சையுற்றுக் கிடக்கும் தசரதனை மதிக்காமற் சென்றான். இன்னும் சிறிது நேரத்தில் இதே பரசுராமன் அத் தசரதன் நிலையையே அனுபவிக்கப் போகிறான்; அதற்குரிய விதி அவனைச் சுற்றிக் கொண்டிருக்கிறது என்பதை அவன் அறியமாட்டாதவன் என்று இரங்குகிறார் கம்பர்

ஆனம்-உடுக்கை. **மானம்**-தன்னிலையில் தாழாமையும், தெய்வம் முதலியவற்றால் தாழ்வு நேருமாயின் உயிர் வாழாமையும்.

### இலக்கணம்

**மதியான், தவிரான்**-முற்றெச்சங்கள்.
**உறுவான்**-வான் ஈற்று வினையெச்சம்.
**சோர்வுறல்**-தொழிற் பெயர்.

## 26. ஒரே மாதிரியான இரண்டு விற்கள் விசுவகருமனாற் செய்யப்பட்டன

### உரை

**ஒரு கால் வரு கதிர் ஆம் என**-ஒற்றைச் சக்கரத்தையுடைய தேரின்மேல் வருகின்ற சூரியன் ஆகும் என்று சொல்லும்படியாக,
**ஒளி கால்வன**-ஒளியை வீசுவன,
**உலையா வரு கார் தவழ்**-தண்ணீராகிய கருப்பத்தினை மிகுதியும் கொண்டதால் வருந்தி வருகின்ற மேகங்கள் தவழ்கின்ற,
**வட மேருவின்** - வடக்கின்கண் உள்ள மகாமேரு மலையினுடைய,
**வலி செல்வன**-வலிமையை ஒத்தன,
**வையம் அருகா வினை புரிவான் உளன்**-நிலவுலகத்தில் உள்ளவர்களால் அணுகிப் பார்ப்பதற்கும் இயலாத (தெய்வத் தன்மை வாய்ந்த) சிறப்புத் தொழிலைச்செய்பவனாகிய 'விசுவகருமன்' என்பான் ஒருவன் உளன்,
**அவனால் அமைவன** - அவனாற் செய்யப் பெற்றன,
**யாவையும் ஏலாதன**-உவமை காட்டிச் சொல்லலாம் என்று எப்பொருளைக் கொண்டு நோக்கினாலும் எவற்றையும் தமக்கு உவமையாகப் பொருந்தாதன ஆகிய.
**இரு கார் முகம் மேல் நாள் உள**-இரண்டு விற்கள் முன்னாளில் இருந்தன.

### தெளிவுரை

ஒற்றைச் சக்கரத்தையுடைய தேரின்மேல் வருகின்ற சூரியனாகும் என்று சொல்லும்படியாக ஒளியை வீசுவனவும், தண்ணீராகிய கருப்பத்தினை மிகுதியும் கொண்டதால் வருந்தி வருகின்ற மேகங்கள் தவழ்கின்ற வடக்கின்கண் உள்ள மகாமேரு மலையினுடைய வலி

மையை ஒத்தனவும், நிலவுலகத்தில் உள்ளவர்களால் அணுகிப் பார்ப்பதற்கும் இயலாத தெய்வத்தன்மை வாய்ந்த சிற்பத் தொழிலைச் செய்யும் விசுவகருமனால் செய்யப் பெற்றனவும், எவற்றையும் தமக்கு உவமையாகப் பொருந்தாதன ஆகிய இரண்டு விற்கள் முன்னாளில் இருந்தன.

### விளக்கவுரை

வில்லைப் பற்றிய செய்திகள் நான்கு: (1) சூரியனைப் போல ஒளியைக் கக்குவன; (2) மேரு மலையைப் போன்ற வலியை உடையன; (3) விசுவகருமன் என்ற தெய்வ தச்சனால் செய்யப் பெற்றன; (4) உவமை இல்லாதன.

சூரியனுடைய தேருக்கு ஒரே சக்கரம் ஆகையால் '**ஒருகால் வரு கதிர்**' எனக் கூறினார். மேரு மலையை இமயமலை யென்றும் கூறுவர். அது வடக்கே யுள்ளது. தண்ணீரை மிகுதியும் கொண்ட மேகங்கள் வருந்திச் சென்று அந்த மலையை அடைந்து தவழ்கின்றன என்பதை '**உலையா வரு கார் தவழ் வடமேரு**' என்று குறிப்பிட்டார்.

தெய்வ தச்சன் பெயர் விசுவகருமன். நினைவாலேயே எல்லாவற்றையும் செய்துமுடிப்பவன்; அவனுடைய தொழில்நுட்பம் தெய்வத் தன்மை வாய்ந்தது ஆகையால் மனிதரால் பார்த்தறியவும் இயலாத ஒன்று என்றார். **கார் முகம்**-வில்.

### இலக்கணம்

**கால்வன, சால்வன, அமைவன, ஏலாதன**-முற்றெச்சங்கள்.
**வருகதிர் வருகார்**-வினைத்தொகைகள்.
**உலையா வரு**-'செய்யா' என்னும் வாய்பாட்டு வினையெச்சம்.
**அருகா வினை**-ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.
**இரு கார்முகம்**-பண்புத் தொகை.
**உள**-அஃறிணைப் பன்மைக் குறிப்பு வினைமுற்று.
**யாவையும்**-முற்றும்மை.

## 27. வலியது எது? என அறியத் தேவர் விரும்புதல்

### உரை

**ஒன்றினை**-மேற்சொன்ன இரண்டு விற்களுள் ஒன்றை,
**உமையாள் கேள்வன்**-உமாதேவியின் கணவனான சிவபெருமான்,
**உவந்தனன்** - விரும்பி ஏற்றுக் கொண்டான்,
**மற்றை ஒன்றை**-அடுத்ததாகிய இன்னொரு வில்லை,
**நின்று உலகு அளந்த**-திருவிக்கிரமன என்ற உருவத்தில் நின்று, உலகம் முழுமையையும் ஈரடியால் அளந்தவனும்,
**நேமி**-திருவாழிப்படை என்னும் சக்கராயுதத்தை உடையவனும் ஆகிய,
**நெடியவன்**-நெடியவன் என்றே குறிக்கப் பெறும் திருமால்,
**அங்கை கொண்டான்**-தம் அழகிய கையில் ஏற்றுக் கொண்டான்,
**என்ற இது உணர்ந்த விண்ணோர்**-இரணடையும் இருவரும் ஏற்றுக் கொண்டனர் என்ற செய்தியை அறிந்த தேவர்கள்,
**இரண்டினும்**-இரண்டு விற்களிலும்,
**வன்மை எய்துவது யாவது**-வலிமையைப் பொருந்துவது எது?
**என்று**-என்று.
**அந்நாள் விரிஞ்சனை வினவ**-அக்காலத்தே பிரமனைக் கேட்க.

### தெளிவுரை

மேற்சொன்ன விற்கள் இரண்டனுள் ஒன்றை உமையின் கணவனை சிவபெருமான் விரும்பி யேற்றுக்கொண்டான். திருவிக்கிரமன் என்ற வடிவம் எடுத்து நின்று இவ்வுலகம் முழுவதையும் ஈரடியால் வென்றவனும் சக்கராயுதத்தை உடையவனும் ஆகிய நெடியவன் எனப் பெறும் திருமால் மற்றைய ஒரு வில்லைத் தன் அங்கையில் ஏற்றுக் கொண்டான். இருவரும் இரு விற்களையும் எடுத்துக்கொண்டார்கள் என்ற செய்தியை அறிந்த தேவர்கள், இரண்டனுள் வலிமையைப் பொருந்துவது எது என்ற வினவைப் பிரமனிடம் அக்காலத்தே வினவ.

### விளக்கவுரை

மகாபலிச் சக்ரவர்த்தியிடம் வாமனனாய்ச் சென்று மூன்றடி மண் கேட்டு வாங்கி, பின் திருவிக்கிரமன் என்ற பேருருவைக் கொண்டு இரண்டே அடிகளால் இம்மூவுலகங்களையும் அளந்தவன் திருமால் என்பது வரலாறு. நேமி-சக்கராயுதம்.

மும்மூர்த்திகளில் இருவர் கொண்ட விற்களில் வலிமையுடையது எது? என்ற கேள்வியைத் தேவர்கள் மூன்றாமவனான பிரமனிடம் கேட்டார்கள்.

இச்செய்யுள் குளகம்; அடுத்த செய்யுளோடு சென்று சேர்ந்து முடிவதால்.

### இலக்கணம்

**உமையாள் கேள்வன்**-ஆறும் வேற்றுமைத் தொகை. நான்கனுருபு விரிக்க.
**அங்கை**-பண்புத் தொகை.
**வென்றி**-வெற்றி என்பதன் மெலித்தல் விகாரம்.
**வென்றியது**-குறிப்பு வினைமுற்று.
வெற்றியதியாவது-குற்றியலிகரம்.

## 28. பிரமதேவன் போர் மூட்டி விடுதல்

### உரை

**வேரி அம் கமலத்தோனும்**-தேன் ஒழுகுகின்ற அழகிய தாமரை மலரில் வீற்றிருப்பவனாகிய பிரமனும்,

**தேவர் தங்கள் சிந்தனை சீரிது என்பது உன்னி**-தேவர்களுடைய எண்ணம் சிறந்தது என்பதை எண்ணி,

**விளைவது ஓர் வினயம் தன்னால்**-பொருந்துவதாகிய ஒரு தந்திரத்தினால்,

**யாரினும் உயர்ந்த**-எல்லாரினும் மேம்பட்டவர்களாய்,

**மூலத்து ஒருவராம் இருவர் தம்மை**-காரண நிலையில் ஒருவராய்க் காரிய நிலையில் இருவராய் அமைந்த சிவன் திருமால் ஆகியோரை.

**மூரி வெம் சிலை மேல் இட்டு**-வலிமை பொருந்திய கொடிய வில்லை ஒரு காரணமாக வைத்து

**மொய் அமர் மூட்டி விட்டான்**-வலிமை வாய்ந்த போரில் ஈடுபடும்படிச் செய்துவிட்டான்.

### தெளிவுரை

தேன் ஒழுகுகின்ற அழகிய தாமரை மலரில் வீற்றிருப்பவனுகிய பிரமனும் தேவர்களுடைய எண்ணம் சிறந்தது என்பதை எண்ணி, பொருந்துவதாகிய ஒரு தந்திரத்தினுல் எல்லாரினும் மேம்பட்டவர் களாய் காரண நிலையில் ஒருவராய், காரிய நிலையில் இருவராய் அமைந்த சிவன் திருமால் ஆகிய இருவரையும் வலிமை பொருந்திய கொடிய வில்லை ஒரு காரணமாக வைத்து வலிமை வாய்ந்த போரில் ஈடுபடும்படிச் செய்துவிட்டான்.

### விளக்கவுரை

கமலம்-தாமரை; பிரமன் வீற்றிருப்பது தாமரையில்; வினயம்-உபாயம். தேவர்களின் எண்ணம் நேர்மையானது என்று எண்ணிய பிரமன் வில்லின் வலிமை எங்களுக்குத் தெரியவேண்டுமே யல்லாமல் வில்லைப் பிடித்தவர்களின் வலிமையை நாங்கள் ஆராயவில்லை என்று வினயமாக—நயம் பெற அமைத்துக் காட்டினுன்.

**மூலத்து ஒருவர் ஆம் இருவர்**-மூல காரணர் என்ற வகையில் ஒருவராக; செயலால் இருவராக அமைகிருர்கள். திருமாலும் சிவனும். உலகத்தை நடைபெறுத்துவது என்பது காப்பதையும் அழிப்பதை யும் கொண்டதே. உலகத்தை ஒழுங்காக நடைபெறச் செய்யும் மூலப் பணியை நோக்கும்போது இருவரையும் கொண்டு அமைந் ததே. ஆனுல் அழிப்பது, காப்பது என்று தொழில் வேறுபடும்போது தொழில்களை மேற்கொள்ளுகிறவர்களும் இரண்டாக நிற்கின்றனர்.

### இலக்கணம்

**சீரிது**-குறிப்பு வினை முற்று.
**உன்னி**-செய்து என் வாய்பாட்டு வினையெச்சம்.
**வேரி அம் கமலத்தோன்**-உம்மைத் தொகை.
**விளைவது**-வினைமுற்று, வினையாலணையும் பெயராகி, பின் பெயரெச்சமாயிற்று.
**யாரினும்**-முற்றும்மை.
**மூரிவெம் சிலை** உம்மைத் தொகை.
**மொய் யமர்**-இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்க தொகை.

## 29. போரிற் சிவனது வில் ஒடிந்தது

### உரை

**இருவரும்**-திருமாலும் சிவனும், **இரண்டு விவ்லும்**-இரண்டு விற்களையும், **ஏற்றினர்**-வளைத்து நாண் ஏற்றினர், **உலகம் ஏழும் வெருவர** - ஏழு வகைப்பட்ட உலகங்களும் பயப்பட, **திசைகள் பேர**-திசைகள் நிலை தடுமாற, **வெங்கனல் பொங்க**-வெம்மையாகிய கோபத்தீயானது பொங்கியெழ,

**மேன்மேல்**-கடுமை சிறிது சிறிதாக அதிகப்படும்படி, **செரு மலைகின்றபோதில்** - போரைச் செய்கின்ற சமயத்தில், **திரிபுரம் எரித்த தேவன்**-முப்புரங்களையும் எரியூட்டிய சிவபெருமான் கைக்கொண்ட, **வரிசிலை இற்றது ஆக** - கட்டமைந்த வில் சிறிது ஒடிந்தது ஆக, **மற்று அவன் முனிந்து**-பின்பு அப்பரமசிவன் கோபித்து.

### தெளிவுரை

திருமாலும் சிவபெருமானும் இரண்டு விற்களையும் வளைத்துத் தனித்தனியே நாண் ஏற்றினா; எழுவகைப்பட்ட உலகங்களும் பயப் பட, திசைகள் நிலைகுலைய, வெம்மையான கோபத் தீயானது பொங்கியெழ, கடுமை சிறிது சிறிதாக அதிகப்படும்படிப் போரைச் செய்கின்ற சமயத்தில், முப்புரங்களையும் எரியூட்டிய சிவபெருமான் கைக்கொண்ட கட்டமைந்த வில் சிறிது ஒடிந்தது ஆக, பின்னர் அப் பரமசிவன் வெகுண்டு;

### விளக்கவுரை

மீண்டும் போர் தொடங்கும்போது என அடுத்து செய்யுளில் சென்று முடிவதால் இச் செய்யுள் குளகம்.

சிவபெருமான் முப்புரங்களையும் புன்னகை செய்தே அழித்தான் என்பது வரலாறு. பெரிய புராண உரையிற் காட்டப்பட்டுள்ளது.

உலகம் ஏழும் என்பதற்கு பூவுலகம் ஏழு, பாதாள உலகம் ஏழு, மேலுலகம் ஏழு எனக் கொண்டு இருபத்தொரு உலகங்கள் என்று முடிக்க. இப்பூவுலகம் ஒன்றே எழுவகைப்பட்ட தீவுகளாகப் பகுப் பட்டுள்ளமையும் கொள்ளலாப்.

### இலக்கணம்

வில்லும், ஏழும்-முற்றும்மைகள்.

**வெருவர, பேர, பொங்க**-செயவென் வாய்பாட்டு வினை யெச்சங்கள்.

**மேன் மேல்**-அடுக்குத் தொடர், வளர்ச்சிப் பொருள்.

**வரி சிலை**-இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்க தொகை.

**இற்றது**-அஃறிணை ஒருமைத் தெரிநிலை வினைமுற்று.

## 30. இற்ற வில்லைச் சிவன் இந்திரற்கு ஈந்தான்

### உரை

**மீட்டும் போர் தொடங்கும் வேலை**-மீளவும் போரைச் சிவபெருமான் தொடங்குகின்ற சமயத்தில்,
**விண்ணவர் விலக்க**-தேவர்கள் தடுக்க,
**நெற்றியிற் கண்ணன்**-நெற்றியில் அமைந்த கண்ணையுடையவனான சிவபெருமான்
**தேவர்கோன் கை வல்வில் நீட்டினன்** - தேவர்களுக்கு அரசனாகிய இந்திரன் கையை நோக்கி வலிய வில்லை நீட்டினன்,
**வெற்றி காட்டிய**-வெற்றியை எல்லாருக்கும் தெரிவித்த,
**கரிய மாலும்**-கரிய நிறமுடைய திருமாலும்,
**கார்முகம் அதனை**-அந்த வில்லை,
**பாரில் ஈட்டிய தவத்தின் மிக்க இரிசிகற்கு**-பூமியில் செய்து சேர்த்த தவத்திற் சிறந்த 'இரிசிகன்' என்னும் முனிவனுக்கு,
**ஈந்து போனான்** - கொடுத்துச் சென்றான்.

### தெளிவுரை

மீளவும் போரைச் சிவபெருமான் தொடங்குகின்ற சமயத்தில் தேவர்கள் தடுக்கவே நெற்றியில் அமைந்த கண்ணை உடையவனான சிவபெருமான் தேவர்களுக்கு அரசனாகிய இந்திரன்

கையில் அவ்வில்லைக் கொடுத்தனன். வெற்றியை வெளிப்படுத்திக் காட்டிய திருமாலும் அந்த வில்லைப் பூவுலகிற் செய்து சேர்த்த தவத்திற் சிறந்த 'இரிசிகன்' என்னும் முனிவனுக்குக் கொடுத்துச் சென்றான்.

### விளக்கவுரை

நெற்றியிற் கண்ணன்-நெற்றியில் மூன்றாவதாகிய கண்ணையுடையவன் சிவபெருமான். ஓர் உறுப்பில் இன்னோர் உறுப்பமைந்த சிறப்புடையன் என்பதாம். **தேவர்கோன்**-தேவர்களுக்கு அரசனாகிய இந்திரன். சிவன் தந்த ஒடிந்த வில்லை வல்வில் என்றார் வலிமையாக இருந்த வில் என்பதை உணர்த்த. இராமபிரான் ஒருவனையன்றிப் பிறரால் தொடவும் முடியாத வலிமையுடைமை நோக்கி.

**வெற்றி காட்டிய கரியமால்** - வெற்றியை வெளிப்படுத்திக் காட்டிய திருமால். சிவனுக்கும் திருமாலுக்கும் நடைபெற்ற போரில் திருமால் வெற்றியைக் காட்டியவர் என்பதாம்.

**'இரிசிகன்'** முனிவன். நிலவுலகில் மிகுந்த தவத்தைச் செய்தவன்.

### இலக்கணம்

**தேவர்கோன்**-ஆறும் வேற்றுமைத் தொகை; உயர்திணையாகலின் நான்கனுருபு விரிகக;
**கோன்**-னகர வீறு செய்யுளில் வந்தது.
**கோன்கை**-ஆறும் வேற்றுமைத் தொகை.
**காட்டிய**-தெரிநிலை வினைப் பெயரெச்சம்.
**கரிய**-குறிப்புப் பெயரெச்சம்.

## 31. 'இரிசிகன் தந்த வில் இது' வாங்குதிஎனப் பரசுராமன் கூறல்

### உரை

**இரிசிகன் எந்தைக்கு ஈய**--இரிசிகன்' என் தந்தையாகிய ஜமதக்னி முனிவருக்குக்கொடுகக,
**எந்தையும் எனக்குத் தந்த வரிசிலை இது**-என் தந்தையும் எனக்குக கொடுத்த கட்டமைந்த வில் இதுவாகும்,
**நீ நொய்தின் வாங்குதியாயின்**-நீ இவ்வில்லை எளிமையாக வளைப்பையானால்
**மைந்த**-வலிமை வாய்தவனே!
**நின்னோடு ஒப்பார் குரிசில்கள் இல்லை**-நின்னோடு ஒப்பாகும் பெருமை அமைந்த மன்னர்கள் இல்லை,
**யான் குறித்த போரும் நின்னொடு புரிகிலென்** - யான் நினைத்து வந்த போரையும் உன்னொடு செய்ய மாட்டேன்.
**இன்னும் புகல்வது கேட்டி**-இன்னும் யான் சொல்ல விரும்புவது ஒன்று உண்டு, அதையும் கேட்பாய்,
**என்றான்**-என்று பரசுராமன் கூறினன.

### தெளிவுரை

திருமால் இரிசிக முனிவனிடம் கொடுத்த வில்லை. இரிசிக முனிவன் என் தந்தையாகிய ஜமதக்னி முனிவனுக்குக் கொடுக்க, என் தந்தை எனக்குக் கொடுக்க, வந்த கட்டமைந்த வில்லாகும்

**இது.** நீ இவ்வில்லை எளிமையாக வளைப்பாயானால், வலிமை வாய்ந்தவனே! உன்னோடு ஒப்பாகும் பெருமை அமைந்த மன்னர்கள் இல்லை; யான் நினைத்து வந்த போரையும் உன்னோடு செய்யமாட்டேன்: இன்னும் யான் சொல்ல விரும்புவது, ஒன்று உண்டு; அதையும் கேட்பாய் என்று பரசுராமன் கூறினான்.

### விளக்கவுரை

இரிசிக முனிவன் பரசுராமனின் பாட்டன்; ஜமதக்னி முனிவனின் தந்தை. என் கையிலிருக்கும் இந்த வில்லை நீ வளைத்தாலே போதும்; யான் போரையே நிறுத்தி விடுகிறேன் என்றான். நோய்து-நொய்யின் தன்மையுடையது; எளியது-இங்கே எளிமையாக வளைப்பாயானால் என்பது கருத்து.

### இலக்கணம்

**ஈய**-செயவென் வாய்பாட்டு வினையெச்சம்.

**தாங்குதியாயின்**-முன்னிலை இகரவீற்று வினைமுற்று 'வாங்குத்'. அதனுடன் செயின் என் வாய்பாட்டு ஈறு ஆகிய அயின் சேர்ந்தது. செயின் வாய்பாட்டு வினையெச்சம்.

**புரிகிலென்**-தன்மை ஒருமை வினைமுற்று.

**கேட்டி**-முன்னிலை ஒருமை வினைமுற்று.

## 32. இராமனிடம் தனக்கு வழிப்பகை உண்டு எனப் பரசுராமன் கூறுதல்

### உரை

**மானவ**-பெருமை உடையவனே!
**ஊனவில்இறுத்தமொய்ம்பை**-முன்னமேயே ஒடிந்து பழுதுபட்ட வில்லை ஒடித்த உன் வலிமையை,
**நோக்குவது ஊக்கம் அன்று**-ஆராய்ந்து பார்ப்பது மன வெழுச்சியைத் தரும் செயல் அன்று
**மற்றும் கேளாய்**-வேறும் உண்டு கேட்பாயாக,
**உம்பால் வழிப்பகை உடையன்**-அரசர் வழி வந்த உம்மிடம் தொடர்ந்து வரும் பகைமையை உடையேன்,
**முன்னோர்**-முற்காலந்தொட்டு வரும் ஞானிகளும் நூல்களும்,
**ஈனம் இல் எந்தை**-எவ்வகையால் ஆராய்ந்து நோக்கினும் குற்றம் இல்லாதவன் ஜமதக்னி முனிவன் (எந்தை) என்றும்,
**சீற்றம் நீக்கினான்**-முனிவர்களிற் பெரும்பாலோர் வெகுளிக்கு இலக்கானோராக, வெகுளியை அற நீக்கிய முனிவன் இவனே என்றும்,
**என்ன**-முழங்கிக் கொண்டிருக்க; (அவற்றை நோக்காமல்).
**தானவன் அனைய மன்னன்**-கொடுந்தன்மையுடைய அசுரனைப் போன்ற மன்னன் (கார்த்தவீரியார்ச்சுனன்),
**கொல்ல**-என் தந்தையைக் கொல்ல,
**யான் சலித்து**-யான் மனங் கலங்கி,

### தெளிவுரை

பெருமையுடையவனே! முன்னமேயே ஒடிந்து பழுதுபட்ட வில்லை ஒடித்த உன் வலிமையை ஆராய்ந்து பார்ப்பது மன எழுச்சியைத் தரும் செயலன்று. வேறும் உண்டு கேட்பாயாக. அரசர் வழி

வந்த உம்மிடம் தொடர்ந்து வரும் பகைமை உடையேன்; முற்காலந் தொட்டு வரும் ஞானிகளும் நூல்களும் குற்றம் இல்லாதவன் என்றும் சினத்தை அற ஒழித்தவன் என்றும் என் தந்தையைப்பற்றிப் புகழா நிற்கவும் அவற்றை நோக்காது கொடிய அசுரனைப் போன்ற மன்னன் என் தந்தையைக் கொல்ல; யான் மனங் கலங்கி.

### விளக்கவுரை

பரசுராமன் இராமனை நோக்கி, மானவ! என்று அழைப்பது இழிவுக் குறிப்பு. **மானவன்**-பெருமையுடையவன். முன்னமேயே ஒடிந்துபோன வில்லை ஒடித்து, வீரனென விளம்பிச் சீதையையும் மணந்தாயே இது பெருமையுடைய செயலன்று என்று இழிவுபடுத்தவே கூறினன்

**வழிப்பகை**-தொடர்ந்து வரும் பகைமையுணர்ச்சி. வழிப் பகைக்கு உரிய காரணத்தைப் பின்னே சொல்லுகின்றான்.

தன் தந்தையைப் பற்றித் தன்னுடைய கருத்து என்று கூறாமல், முன்னோர்களும் ஞானிகளும் தன்னுடைய தந்தையைப் பற்றிக் கூறிய இரண்டு கருத்துக்களை வெளியிடுகிறான் பரசுராமன். (1) குற்றம் இல்லாதவன். (2) கோபத்தை அறவே நீக்கியவன். இதை கூறும் பரசுராமன் கருத்து இயல்பாகவே என் தந்தை குற்றமில்லாதவன். எனவே நிரபராதியைக் கொன்றான். குற்றம் இல்லாதவனானாலும் ஒருவன் வந்து தாக்கினால் ஏதாவது கோபம் கொண்டு செய்திருப்பானே என்றால் அவனுக்குக் கோபமே இல்லை என்றான்.

**மொய்ம்பு**-வலிமை; **சலித்து**-தந்தையை இழந்த சோகத்தால் மனம் சோர்ந்து. ஆல், மன், ஓ-அசை நிலைகள்.

### இலக்கணம்

**ஊனவில்**-இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்க தொகை.
**நோக்குவது**-தொழிற்பெயர்.
**கேளாய்**-முன்னிலை ஒருமை வினைமுற்று.
**உடையன்**-தன்மை ஒருமைக் குறிப்பு வினைமுற்று.
**அனைய**-உவமை உருபு.
**சலித்து**-செய்து என் வாய்பாட்டு வினையெச்சம்.

## 33. பரசுராமன் இருபத்தொரு தலைமுறை அரசை அழித்தமை கூறல்

### உரை

**மூஎழு முறைமை** - இருபத்தொரு தலைமுறை,
**பாரில் முடிஉடை வேந்தை எல்லாம்**-நிலவுலகத்திலுள்ள முடியுடை அரசர்களையெல்லாம்.
**மேவு எழு மழுவின் வாயால்**-விரும்பி எழுகிற கோடாலி என்னும் படையினது கூரிய நுனியினால்,
**வேர் அற**-வேர் அற்றுப் போகும் படி,
**களைகட்டு** - பயிர்களுக்குக் களை பறித்தல் போல அழித்து,
**அன்னார்**-அவ்வரசர்களுடைய.
**தூஎழு குருதி வெள்ளம்**-தசையிலிருந்து எழுகின்ற இரத்த வெள்ளம் ஆகிய,
**துறையிடை**-நீர்த்துறையிலே,

**முறையின்**-வேத விதிப்படி,
**எந்தைக்கு ஆவன கடன்கள் நேர்ந்தேன்** - என் தந்தைக்குச் செய்ய வேண்டுவனவான நீர்க் கடன்களைச் செய்து முடித்தேன்,
**அரும் சினம் அடக்கிப் போந்தேன்**-அது முதலாகத் தடுப்பதற்கரிய என் கோபத்தை அடக்கி வந்துள்ளேன்.

### தெளிவுரை

இருபத்தொரு தலைமுறை நிலவுலகத்திலுள்ள முடியுடை அரசர்களை யெல்லாம் விரும்பி எழுகின்ற கோடாலி என்னும் படையினது கூறிய நுனியினால் வேர் அற்றுப் போகும்படிப் பயிர்களுக்குக் களை பறித்தல் போல அழித்து அவ்வரசர்களுடைய தசையிலிருந்து எழுகின்ற இரத்த வெள்ளம் ஆகிய நீர்த் துறையிலே வேத விதிப்படி என் தந்தைக்குச் செய்ய வேண்டுவனவான நீர்க்கடன்களைச் செய்து முடித்தேன்; அது முதலாகத் தடுப்பதற்கரிய என் கோபத்தை அடக்கி வந்துள்ளேன்.

### விளக்கவுரை

இருபத்தொரு தலைமுறைகள் முடியுடை வேந்தர்களையெல்லாம் வேரறக் களைந்த பிறகு, குருதி வெள்ளத்தில் படிந்து, தந்தைக்குரிய நீர்க்கடன்களை ஆற்றிய பிறகு சினம் அடங்கியதாகக் கூறினன். தூ-தசை.

### இலக்கணம்

**தூ எழு**-ஏழாம் வேற்றுமைத் தொகை.
**எழு குருதி**-வினைத்தொகை.
**குருதி வெள்ளம்**-ஆறும் வேற்றுமைத் தொகை.
**துறையிடை**-ஏழாம் வேற்றுமை உருபின் பொருள்பட வந்த சொல்.
**நேர்ந்தேன்**-தன்மை ஒருமை வினைமுற்று.
**அருஞ்சினம்**-பண்புத் தொகை.

## 34. 'இராமன் ஒடித்த வில்லின் ஓசை கேட்டு வந்ததாக'ப் பரசுராமன் கூறுதல்

### உரை

**உலகு எலாம் முனிவற்கு ஈந்தேன்**-எனனால் வெற்றிகொள்ளப்பட்ட இவ்வுலகம் முழுவதையும் காசிப முனிவனுக்குத் தானமாகக் கொடுத்தேன்,
**உறுபகை ஒடுக்கிப் போந்தேன்**-மிக்க பகைவர்களை யெல்லாம் ஒடுங்கச் செய்து வந்தேன்,
**அலகு இல் மாதவங்கள் செய்து**-அளவு இல்லாத பெரிய தவங்களைச் செய்து,
**ஓர் அரு வரை இருந்தேன்** - ஒப்பற்ற அருமையான மகேந்திர மலையில் தங்கியிருந்தேன்,
**நீ சிலையை இறுத்த ஓசை**-நீ மிதிலையில் வில்லை ஒடித்ததனால் உண்டாகிய சத்தத்தை
**ஆண்டை செவியுற சீறிவந்தேன்**-அவ்விடத்தே என் செவியில் வந்து படுதலால் கோபங்கொண்டு வந்தேன்,
**வல்லை ஆயின்**-வலிமை உடையையானால்,
**மலைகுவென்** - உன்னுடன் போர் செய்வேன்,
**தனுவை வாங்குதி**-வில்லை வளைத்திடு என்று பரசுராமன் கூறினான்.

### தெளிவுரை

என்னால் வெற்றி கொள்ளப் பெற்ற இவ்வுலகம் முழுவதையும் காசிப முனிவனுக்குத் தானமாகக் கொடுத்தேன்; மிக்கெழுந்த பகைவர்களையெல்லாம் ஒடுங்கச் செய்து வந்தேன்; அளவற்ற பெருந் தவங்களைச் செய்து ஒப்பற்ற அருமையான மகேந்திர மலையில் தங்கியிருந்தேன்; நீ மிதிலையில் வில்லை ஒடித்ததனால் உண்டாகிய சத்தத்தை அவ்விடத்தே என் செவியில் வந்து படுதலால் கோபங் கொண்டு வந்தேன்; வலிமை உடையையானால் உன்னுடன் போர் செய்வேன்; வில்லை வளைத்திடு'' என்று பரசுராமன்கூறினான்.

### விளக்கவுரை

சினம் ஆறித் தவம் செய்து கொண்டிருந்த பரசுராமனை மீண்டும் சினத்துக்குள்ளாக்கியது இராமபிரான் மிதிலையில் ஒடித்த வில்லிலிருந்து உண்டாகிய ஒலி. பழைமை நினைவுகளெல்லாம் மிக்கெழுந்த காரணத்தால் மீளவும் புறப்பட்டு வரலானான்.

**ஓர் அருவரை இருந்தேன்**-ஒப்பற்ற அருமையான மகேந்திர மலையில் தங்கியிருந்தேன் என்றான்.

### இலக்கணம்

ஈந்தேன், போந்தேன், இருந்தேன், வந்தேன், } தன்மை ஒருமை இறந்தகால வினைமுற்றுக்கள்.

**மலைகுவென்**-தன்மை ஒருமை எதிர்கால வினைமுற்று.

**வல்லையாயின்**- 'செயின்' என் வாய்பாட்டு வினையெச்சம்.

**வாங்குதி**-முன்னிலை ஒருமை வினைமுற்று.

**உறுபகை**, **மாதவங்கள்** } உரிச் சொற்றொடர்கள்.

**ஆண்டை**-'ஆண்டு' என்னும் சொல் 'ஐ' சாரியை பெற்றது.

## 35. நாரணன் வலியின் ஆண்ட வில்லை இராமன் வாங்குதல்

### உரை

**என்றனன்**-என்று இவ்வாறு பரசுராமன் கூறினான்,

**என்ன நின்ற**-என்று இவ்வாறெல்லாம் சொல்லுவதற்குக் காரணமாக நின்ற,

**இராமனும்**-இராமபிரானும்,

**முறுவல் எய்தி** - புன்முறுவற் செய்து.

**நன்று ஒளிர் முகத்தனாகி** - அறம் ஒளி செய்கின்ற முகத்தையுடையவனாகி.

**நாரணன் வலியின் ஆண்ட** - திருமால் தம் வலிமை தோன்ற எடுத்துப் பயின்ற,

**வென்ற வில் தருக**-வெற்றியைத் தந்த அந்த வில்லைத் தருக,

**என்ன**-என்று இராமன் சொல்ல,

**கொடுத்தனன்**-அவ்வில்லைப் பரசுராமன் கொடுத்தான்

**வீரன் கொண்டான்** - வீரனாகிய இராமபிரான் அவ்வில்லை எளிமையாக வாக்கிக் கையிற் கொண்டவனாகி,

**துன்று இரும் சடையோன் அஞ்ச**-நெருங்கிய பெரிய சடையை உடைய பரசுராமன் அஞ்சும் வண்ணம்.

**தோள் உற வாங்கி** - அவ்வில்லைத் தன் தோள் வலிமை பொருந்த வளைத்து,

**சொல்லும்**-சில சொற்கள் சொன்னான்.

## தெளிவுரை

என்று இவ்வாறு பரசுராமன் கூறினன். இவ்வாறெல்லாம் சொல்லுவதற்குக் காரணமாக நின்ற இராமபிரானும் புன்முறுவல் செய்து அறம் ஒளி செய்கின்ற முகத்தையுடையவனாகி, திருமால் தம் வலிமை தோன்ற எடுத்துப் பயின்றதும் வெற்றியைத் தந்ததும் ஆகிய அந்த வில்லைத் தருக என்று இராமன் சொல்ல; அவ்வில்லைப் பரசுராமன் கொடுத்தான்; வீரனாகிய இராமபிரான் அவ்வில்லை எளிமையாக வாங்கிக் கையிற் கொண்டவனாகி, நெருங்கிய பெரிய சடையை உடைய பரசுராமன் அஞ்சும் வண்ணம் அவ் வில்லைத் தன் தோள் வலிமை பொருந்த வளைத்து, சில சொற்களைக் கூறினன்.

## விளக்கவுரை

பரசுராமன் இவ்வாறெல்லாம் சொல்வதற்குக் காரணம் இராமபிரானே யாகையால் **என்ன நின்ற இராமனும்** என்றார். இராமனும் முறுவல் எய்தி என்பது இவ்வளவு கூறிய பிறகும் சுத்த வீரனாதலின் புன்முறுவல் பூத்தான் என்பதாம்.

இராமபிரானுடைய முகத்தில் அறமே ஒளிவிட்டுப் பிரகாசித்தது. **நன்று**-அறம். சிவனுக்கும் திருமாலுக்கும் போர் மூண்டபோது நாரணன் (திருமால்) வலிமையினால் ஆட்கொண்டதும் திருமாலுக்கு வெற்றியைக் கொடுத்ததும் ஆகிய வில்லைத் தருக என்று கேட்டான்.

**கொண்டான்**-பரசுராமன் தந்த வில்லை எளிமையாக வாங்கிக் கொண்டான். முன்னே எடுத்துப் பழகிய அவனே இப்பிறவியில் இராமனாக வந்து மேற்கொள்ளுகின்றான் ஆதலின் அவனுக்கு அது எளிமையாயிற்று.

நாரணன்-திருமால். நாராயணன் என்பதன் மரூஉ. பரசுராமன் அஞ்சுமாறு இராமபிரான் தன் தோள் வலிமை பொருந்துமாறு இழுத்து வளைத்தான் என்பதாம்.

## இலக்கணம்

**ஒளிர் முகத்தன்**-வினைத்தொகை.
**எய்தி ஆகி**-செய்து என் வாய்பாட்டு வினையெச்சங்கள்.
வலியின்-மூன்றும் வேற்றுமை கருவிப் பொருள்.
**வென்ற வில்**-பெயரெச்சத்தொடர்.
**இருஞ்சடையோன்**-பண்புத் தொகை.
தோள் **உற**-செயஎன் வாய்பாட்டு வினையெச்சம்.

## 36. வளைத்த வில்லுக்கு இலக்கு யாது? என இராமன் வினதல்

### உரை

**பூதலத்து அரசை எல்லாம்**-பூவுலகின்கண் உள்ள அரசர் யாவரையும்.

**பொன்றுவித்தனை என்றாலும்**-அழியுமாறு செய்தனை என்றாலும்,

**நீ வேதவித்து ஆய மேலோன் மைந்தன்**-நீ வேதங்களை அறிந்தவனான மேன்மையையுடைய ஜமதக்னி மகா முனிவனுடைய மகன்,

**விரதம் பூண்டாய்**-அதுவுமன்றித்

தவவொழுக்கம் மேற்கொண் டிருக்கின்றாய்,
**ஆதலின்**-ஆகையினால்,
**கொல்லல் ஆகாது** - உன்னைக் கொல்லுதல் கூடாது,
**அம்பு இது பிழைப்பது அன்று**-என் கை வில்லில் வைக்கப்பெற்ற இவ்வம்பு குறி தவறிப் பிழைத் துப் போவதும் அன்று,
**இதற்கு இலக்கம் ஆவது யாது**-எனவே இவ்வம்புககுக் குறிப் பொருளாவது யாது?
**விரைவின் இயம்புதி என்றான்**-விரைவாகச் சொல்லுவீராக என்று இராமன் கூறினான்.

## தெளிவுரை

நிலவுலகில் உள்ள அரசர்கள் எல்லாரையும் கொன்றனை. நான் அது காரணமாக நின்னைக் கொல்லலாம். ஆயினும், நீ வேதங்களை உணர்ந்து தெளிந்த மேன்மை மிக்க முனிவன் மகன்; அன்றியும் தவ வேடம் மேற்கொண்டுள்ளாய்; ஆகையால் உன்னைக் கொல்லுவது முறையன்று; எனினும் நான் விலலில் வைத்த இவ்வம்பானது குறி தவறிப் பிழைப்பது அன்று; எனவே இவ்வம்புக்குக் குறிப் பொருளாவது யாது? விரைவாகச் சொல்லுக என்று இராமன் கூறினான்.

## விளக்கவுரை

அரசர்களை யெல்லாம் கொன்றாய் என்ற ஒன்றை வைத்துக் கொண்டே உன்னை நான் பழிக்குப்பழி வாங்கலாம். ஆயினும் நீ வேத வித்தாய ஜமதக்னி முனிவன் பிள்ளை; தவக்கோலம் பூண்டுள்ளாய் ஆகையாற் கொல்லலாகாது என்றான்.

வேதவித்-வடசொல். வேதங்களைச் சந்தேகமற உணர்ந்தவன். பரசுராமனை வேதவித்து என்று கூறாமல் அவன் தந்தையை வேதவித்து என்றதன் காரணம் பரசுராமன் அந்தணனாகப் பிறந்தாலும் செய்த காரியங்கள் எல்லாம் அரசு தருமத்தைக் கொண்டவை.

விரதம்-துறவு வேடம். இராமன் தன் வில்லில் அம்பை வைத்து விட்டானானால் அவ்வம்புக்கு இலக்கு ஒன்றைக் கொடுக்க வேண்டும். அம்பைக் குறி பிழைப்பிப்பது என்பது இல்லை. எனவே, இவ்வம்புக்கு இலக்கு எது? என்று கேட்டான்.

## இலக்கணம்

**பொற்றுவித்தனை**-முன்னிலை ஒருமை வினைமுற்று பிறவினைப் பொருள்.
**ஆயமேலோன்**-பெயரெச்சத்தொடர்.
**மேலோன் மைந்தன்**-ஆறும் வேற்றுமைத் தொகை நான்கனுருபு விரிக்க.
**பூண்டாய்**-முன்னிலை ஒருமை வினைமுற்று.
**இயம்புதி**-முன்னிலை ஒருமை வினைமுற்று.

## 37. பரசுராமன் இராமனைத் துதித்தல்

### உரை

**நீதியாய்**-அறநெறியை மேற்கொண்டவனே,
**முனிந்திடல்** - சினங்கொள்ளற்க,
**நீ இங்கு யாவர்க்கும் ஆதி** - நீயே இவ்வுலகில உள்ளார் அனைவர்க்கும் முதல்வன்,
**யான் அறிந்தனென்** - அவ்வுண்மையை இப்பொழுதே யான் அனுபவித்துத் தெரிந்து கொண்டேன்,
**அலங்கல் நேமியாய்**-துளசி மாலையையும் சக்கராயுதப் படையையும் கொண்டவனே!
**வெண்மதி பாதியான்**-வெண்மையான பிறைச் சந்திரனை உடையவன்,
**பிடித்த வில்** - முன்னே கையிற் பிடித்த வில்லானது,
**வேதியா இறுவதே அன்றி** - வெவ்வேறுபடப் பிளந்து அழிந்து போவதே யல்லாமல்,
**பற்றப் போதுமோ** - பேராற்றலுடைய உம கையாற் பிடித்தற்கும் அமையக் கூடியதோ!

### தெளிவுரை

அறநெறியை மேற்கொண்டவனே! என்மேல் கோபங் கொள்ளற்க; நீயே இவ்வுலகில் உள்ளார் அனைவர்க்கும் ஆதி என்பதை இப்பொழுதே யான் அனுபவத்தால் தெரிந்து கொண்டேன். துளசி மாலையையும் சக்ராயுதப் படையையும் கொண்டவனே! வெண்மையான பிறைச் சந்திரனை உடைய சிவபெருமான் முன்னே கையிற் பிடித்த வில்லானது வெவ்வேறாகப் பிளந்து அழிவதேயல்லாமல் பேராற்றலுடைய உம் கையாற் பிடித்தற்கும் அமையக் கூடியதோ?

### விளக்கவுரை

வில்லை வளைத்து, அம்பைப் பூட்டி இலக்கு யாது எனக் கேட்டவுடனேயே பரசுராமனுக்கு இவன் திருமாலே என்பதை அறிந்து கொண்டான்.

'கோபம் கொள்ளாதே' என்று வேண்டுகிறான், நீயே இங்குள்ளார் எல்லோருக்கும் முதல்வன் என்றும், துளசி மாலையையும் சக்கராயுதப் படையையும் உடையவன் என்றும் கூறியது, இவனே திருமால் என்று உணர்ந்தமையாலேயே.

**வெண்மதி பாதியான்**-வெண்பாதி மதியான், பிறைச் சந்திரனை உடைய சிவபெருமான். திருமாலாகிய நீயே வந்தபோது மிதிலையில் உள்ள சிவ வில் அக்கு அக்காக அழியுமே அல்லாமல் பிடிக்கத் தாங்கும் தன்மையுடையது ஆகுமோ? ஆகாது என்பதாம்.

### இலக்கணம்

**முனிந்திடல்**-வியங்கோள் முற்று; எதிர்மறை.
**ஆதி**-பண்ணுகு பெயர்.
**அறிந்தனென்**-தன்மை ஒருமை வினைமுற்று.
**அலங்கல் நேமி**-உம்மைத் தொகை.
**வெண்மதி**-பண்புத் தொகை.
**மதிப்பாதி**-ஆறும் வேற்றுமைத் தொகை.
**வேதியா**-செய்யா என் வாய்பாட்டு வினையெச்சம்.
**போதுமோ**-'ஓ' எதிர்மறை.

## 38. பரசுராமன் இராமனைத் திருமாலே எனல்

### உரை

**பொன் உடை வனை கழல்**-பொன்னால் செய்யப்பெற்றுக் கட்டப் பெறும் வீரக் கழலையும்,
**பொலம் கொள் தோளினாய்**-அழகைக் கொண்ட தோளையும் உடையவனே,
**மின் உடை நேமியான் ஆதல் மெய்மை**-நீ ஒளியை உடைய சக்கராயுதப் படையை யுடைய திருமாலாகவே இருத்தல் உண்மையே,
**ஆல்**-ஆகையால்,
**உலகினுக்கு இடுக்கண் என் உளது**-இவ்வுலகத்துக்குத் துன்பம் என்பது யாது உள்ளது?
**யான் தந்த உன்னுடைய வில்லும்**-என்னால் இப்போது கொடுக்கப் பெற்ற உன்னுடைய வில்லும்,
**உன் உரத்துக்கு ஈடு அன்று** உன் வலிமைக்கு ஏற்றது ஆகாது.

### தெளிவுரை

பொன்னால் செய்து கட்டப்பெற்ற வீரக்கழலையும் அழகைக் கொண்ட தோளையும் உடையவனே! நீ ஒளி விடுகின்ற சக்கராயுதப் படையை உடைய திருமாலாகவே இருத்தல் உண்மையே; ஆகையால் இவ்வுலகத்துக்குத் துன்பம் என்பது யாது உள்ளது? என்னால் இப்போது கொடுக்கப்பெற்ற உன்னுடைய வில்லும் உன் வலிமைக்கு ஏற்றது ஆகாது.

### விளக்கவுரை

வீரக்கழல் அமைந்த திருவடியையும் அழகு மிகுந்த தோளையும் கூறியதால் யானே (பரசுராமன்) யன்றி, இவ்வுலகத்தில் வாழ்கின்ற உயிர்கள் எல்லாம் உன்னுடைய திருவடிகளையே அடைக்கலமாக அடையக்கூடியவை என்பதும் திருவடிகளை அடைந்த எங்களுக்கு உம்முடைய தோளழகால் ஆனந்தம் கொடுப்பவன் என்பதை உணர்த்தினான்.

ஒளி செய்து கொண்டிருக்கும் சக்ராயுதத்தை இவ்வுலகில் அறம் விளங்குவதற்காகத் தாங்கிய பெரிய பெருமாளாகவே நீ இருக்கின்ற காட்சியை நான் கண்ணாரக் காண்கின்றேன். ஆகையால் நீ திருமாலே. காத்தற் கடவுளாகிய நீயே மானுடச் சட்டை தாங்கி வந்துவிட்டாயாதலால், இவ்வுலகிற்குத் துன்பம் என்பது யாது இருக்கப் போகிறது? சிவன் வில்லையன்றி நீ தந்த உன் வில்லே உன் வலிமைக்கு ஏற்றது ஆகாது என்றான்.

### இலக்கணம்

பொன் **உடை**-மூன்றும் வேற்றுமைச் சொல்லுருபு.

**வனை கழல்**-வினைத்தொகை.

**கழல்**-இடப்பொருளாகு பெயர்.

**என்**-எவன்-என்ற வினாப் பெயரின் இடைக்குறை.

## 39. பரசுராமன் தன் தவத்தை இலக்கு ஆக்குதல்

### உரை

**எய்த அம்பு**-உன்னால் எய்யப்பெற இருக்கிற இந்த அம்பானது,
**இடை பழுது எய்திடாமல்** - இப்பொழுது குற்றம் அடையாத வாறு,
**என் செய்தவம் யாவையும் சிதைக்க**-என்னால் செய்யப் பெறற தவங்கள் எல்லாவற் றையும் அழிக்கக்கடவது,
**என**-என்று பரசுராமன் கூற,
**அவன் கை நெகிழ்தலும்** - அப்பொழுது இராமன் தன்னு டைய கையைச் சிறிது தளர்த்துதலும்,
**கணையும் சென்று** - அம்பும் விரைந்து சென்று,
**அவன் மை அறு தவம் எலாம்**- அப்பரசுராமனின் குற்றமற்ற தவத்தையெல்லாம்,
**வாரி மீண்டது**-வாரிக் கவர்ந்து கொண்டு மீண்டது.

### தெளிவுரை

உன்னால் விடப்பெற இருக்கிற இந்த அம்பானது இப்பொழுது குற்றம் அடையாதவாறு என்னால் செய்யப்பெற்ற தவங்கள் எல்லா வற்றையும் அவ்வம்பு தனக்குரிய இலக்காகக் கொண்டு அழிக்கக் கடவது என்று பரசுராமன் கூற, அப்பொழுது இராமன் தன்னுடைய கையைச் சிறிது தளர்த்துதலும், அம்பும் விரைந்து சென்று, அப் பரசுராமனின் குற்றமற்ற தவத்தையெல்லாம் வாரிக் கவர்ந்து கொண்டு மீண்டது.

### விளக்கவுரை

இராமன் அம்பை இனித்தான் விடப் போகிறான். எனினும் எய்த அம்பு என இறந்த காலத்தாற் கூறியது விட்டுவிடுவது நிச் சயம் என்பதால் வந்த கால வழுமைதி. இலக்கு எது என்று அமைக் காமல் அம்பினை விட்டால் அது அம்புக்கும், தொடுத்தவருக்கும் பிழை ஆகையால் பழுதுபடாமல் இருப்பதற்காகப் பரசுராமன் தன்னுடைய தவங்கள் எல்லாவற்றையும் அவ்வம்புக்கு இலக்காக் கினான்.

உலகியலில் அம்பு என்றால் அது எதை நோக்கி விடப்பெறு கிறதோ அதைக் குத்தி அழிக்கும் என்பதே காணப்படுவது; கேட்கப் படுவது. இராமனுடைய அம்பானது குத்தி அழிப்பதன்றிக் கொத்தி எடுத்துக் கொண்டு வந்து தன்னை எய்தவனுக்கே உரிமையாக்கும். இதுவே சிறப்பு. இதற்கும் மேலாக, கண்ணுக்குத் தெரிந்த பொருளை எடுத்து வருதல் இன்றிக் கண்ணாற் காண முடியாத தவம் முதலிய அருவப் பொருளையும் எடுத்து வருவது என்பது இராமபிரான் கணை ஒன்றிற்கே உரியது.

### இலக்கணம்

**எய்த அம்பு**-பெயரெச்சத் தொடர்; காலவழுவமைதி.
**செய்தவம்**-வினைத்தொகை.
**யவையும்**-முற்றும்மை.
**அறுதவம்**-வினைத்தொகை.
**வாரி**-செய்து என் வாய்பாட்டு வினையெச்சம்.
**மீண்டது**-அஃறிணை ஒருமை வினைமுற்று

## 40. பரசுராமன் இராமனை வாழ்த்தி விடை பெறுதல்

### உரை

**மண்ணிய**-நன்றாகக் கழுவித் தூய்மை செய்யப்பெற்ற,
**மணிநிற வண்ண**-நீல மணியின் நிறத்தை ஒத்த மேனியனே!
**வண் துழாய்க் கண்ணிய** - வளப்பம் அமைந்த துளசிமாலையை அணிந்தவனே,
**யாவர்க்கும் களைகண் ஆகிய புண்ணிய**-எல்லாருக்கும் ஆதாரவாளன் என நின்ற புண்ணியனே!
**எண்ணிய பொருள் எலாம் இனிது முற்றுக**-நீ கருதிய பொருள்கள் எல்லாம் கருதியவாறே இனிது முடிவாகுக,
**விடை** - யான் விடை பெறுகிறேன்.
**என**-என்று கூறி,
**தொழுது போயினான்** - வணங்கிச் சென்றான்.

### தெளிவுரை

நன்றாகக் கழுவித் தூய்மை செய்யப் பெற்ற நீலமணியின் நிறத்தை ஒத்த மேனியனே! வளப்பம் அமைந்த துளசி மாலையை அணிந்தவனே! எவ்வுயிர்க்கும் ஆதரவாளன் என நின்ற புண்ணியனே! நீ கருதிய பொருள்கள் எல்லாம் கருதியவாறே இனிது முடிவனவாகுக. யான் விடை பெறுகிறேன் என்று கூறி வணங்கிச் சென்றான்.

### விளக்கவுரை

இராமபிரானுடைய மூன்று அருஞ்செயல்களைப் போற்றுகிறான் பரசுராமன். இராமபிரானுடைய **ஒழுக்கம்**. நன்றாகக் கழுவிக் கழுவித் தூய்மை செய்யப்பெற்ற நீலமணியின் நிறத்தை ஒத்தவன் என்று கூறியது தன்னுடைய ஒழுக்கத்தால் தன்னை மேலும் மேலும் தூய்மையாக ஆக்கிக் கொண்டவன் என்பதைக் கூறினான். இரண்டாவது **அன்பு**. உள்ளம் கொடிய எண்ணங்களின் கொள்கலமாக இருக்குமேயானால் சூடிய பூ வாடிவிடும். என்றும் வளப்பம் பொருந்திய துளசி மாலையை அணிந்தவன் ஆகையால் உலகத் துயிர்களிடத்தில் கருணை அன்பு கொண்டவன் என்பதை உணர்த்தினான். மூன்றாவது **பிறர்க்கென உழைத்தல்**. இராமன் தனக்குப் புண்ணியமாக ஒன்றையுஞ் செய்து கொள்ளாமல் உலகத்துயிர்கள் புண்ணியத்தை அடைவதற்குத் தான் ஆதரவாளனாக இருக்கிறான் எனக் கூறினான், எனவே இராமனைப் பரசுராமன் ஒழுக்கம், அன்பு, தியாகம் என்ற மூன்றும்இணைந்த ஒன்று எனக் கருதினான் என்பது புலனாகும். **களைகண்**-நீக்கும் இடம். ஆதரவாக இருக்கும் இடம்.

### இலக்கணம்

**மண்ணியமணி**-பெயரெச்சத் தொடர்.
**மணி நிறம்**-ஆறும் வேற்றுமைத் தொகை.
**நிற வண்ண**-உவமைத் தொகை.
**வண் துழாய்**-பண்புத்தொகை.
**எலாம்**-எல்லாம் என்பதன் இடைக்குறை.
**முற்றுக**-வியங்கோள் வினைமுற்று.
**தொழுது போயினான்**-செய்து என் வாய்பாட்டு வினையெச்சம்.

## 41. இராமன் தசரதன் துயரைத் தீர்த்தல்

### உரை

**அவன் அழிந்து போனபின்**-அப் பரசுராமன் செருக்கும் தவமும் அழிந்து சென்ற பிறகு,
**அமலன்**-குற்றமற்றவனுகிய இராமன்,
**ஐ உணர்வு ஒழிந்து**-ஐந்து வகையான அறிவுகளும் அழியப் பெற்று,
**தன் உயிர் உலேந்து**-தன் உயிரும் வருந்தி,
**உருகு தாதையை** - (இராமனை எண்ணியே) மனம் கசிந்து கொண்டிருக்கும் தந்தையாகிய தசரதனை,
**பொழிந்த பேர் அன்பினுல்**-எல்லையினறிக் கரை புரண்டெழுகிற பேரன்புடன்,
**தொழுது**-வணங்கி,
**முன்பு புக்கு**-அவனுக்கு முன்னுல் சென்று நின்று,
**இழிந்த வான் துயர் கடல் நின்று**-அவன் இறங்கியிருந்த பெரிய துயரமாகிய கடலிலிருந்து,
**கரை ஏற்றினுன்** - கரையேறும் படிச் செய்தான்.

### தெளிவுரை

பரசுராமன் செருக்கும் தவமும் அழிந்து சென்ற பிறகு குற்றமற்றவனுகிய இராமன் ஐந்து வகையான அறிவும் அழியப் பெற்று, உயிரும் வருந்தி, தனக்காக மனம் கசிந்து கொண்டிருக்கும் தந்தையாகிய தசரதனை எல்லேயின்றிக் கரை புரண்டெழுகிற பேரன்புடன் வணங்கி அவனுக்கு முன்னுல் சென்று நின்று அவன் இறங்கியிருந்த பெரிய துயரமாகிய கடலிலிருந்து கரையேறும்படிச் செய்தான்.

### விளக்கவுரை

மலம்-அழுக்கு; அமலன்-குற்றமற்றவன். முன்னே இராமனைத் தூய்மையானவன் என்ருர். இங்கே அழுக்கு அற்றவன் என்று அதையே எதிர்மறையாற் கூறினுர்.

தசரதன் பரசுராமனைப் பலவாறு வேண்டியும் அவன் மதிக்காமற் சென்றபோது மூர்ச்சையுற்றுக் கிடந்த தசரதன் நிலையை இங்கே கூறுகிருர் கம்பர். மெய், வாய், கண், மூக்கு, செவி என்ற ஐந்தாலும் வரும் அறிவு சோர்ந்துவிட்டது அவனுக்கு என்பதாம்; உயிர் வருந்தியது என்ருர்: உடலைவிட்டு உயிர் பிரியுமாறு போராடிக் கொண்டிருந்தது என்பதாம். இவ்வாறு கிடக்கும் தசரதனை இராமன் பேரன்புடன் வணங்கி, அவனைத் துயர்க்கடலிலிருந்து கரை யேற்றினுன் என்பதாம்.

### இலக்கணம்

ஐ உணர்வு-பண்புத் தொகை.

அழிந்து, ஒழிந்து, உலேந்து, தொழுது-செய்து என் வாய்பாட்டு வினையெச்சங்கள்.

உருகு தாதை-வினைத் தொகை.

பேரன்பு, வான்துயர்-பண்புத் தொகை.

துயர்க்கடல்-உருவகம்.

கடல் நின்று-ஐந்தாம் வேற்றுமை சொல்லுருபு. நீக்கப் பொருள்.

## 42. தசரதன் பெரு மகிழ்ச்சி

### உரை

**வெளிப்படும் உணர்வினன்**-அழிந்திருந்த ஐயுணர்வுகளும் மீளும வெளிப்படும் உணர்வை உடையவனும்,
**விழுமம் நீங்கி**-துன்பம் நீங்கி,
**தவிர்ப்பு உறு மதகரி தானையான்**-களிப்பை மிகுவிக்கின்ற மதம் பொருந்திய யானைப் படைகளை உடையவனும் ஆகிய தசரதன்,
**இடை**-நடுவிலே,
**குளிப்பு அரு துயர் கடல் கோடு கண்டவன்**-மூழ்குவதற்கு அருமையான துன்பமாகிற பெருங் கடலின் எல்லையைக் கண்டறிந்தவன் இப்போது,
**களிப்பு எனும் கரையிலாக் கடலுள் ஆழ்ந்தனன்** - மகிழ்ச்சி என்று சொல்லப் பெறுகிற கரையில்லாத கடலிடையே மீண்டும் மூழ்கினான்.

### தெளிவுரை

பரசுராமன் வருகையால் ஐந்து வகையான அறிவையும் இழந்திருந்து மீண்டும் வெளிப்படும் உணர்வை உடையவனும் துன்பம் நீங்கிக் களிப்பை மிகுவிக்கின்ற மதம் பொருந்திய யானைப் படைகளை உடையவனும் ஆகிய தசரதன் நடுவிலே மூழ்குவதற்கு அருமையான துன்பமாகிற பெருங்கடலின் எல்லையைக் கண்டறிந்தவன் இப்போது களிப்பு என்னும் கரையில்லாத கடலிடையே மீண்டும் மூழ்கினான்.

### விளக்கவுரை

இராமன் அன்போடு முன்னின்று தொழுது ஆறுதல் கூறவே தசரதனுடைய ஐவகைப்பட்ட அறிவுகளும் மீண்டும் புத்துயிர் பெற்று எழலாயின. விழுமம்-பெருந்துன்பம்.

ஒரு கடலில் வீழ்ந்தவனைக் கரையேற்றிய போது அவன் அடுத்திருந்த பெருங்கடலில் மூழ்கிவிட்டான் என நயம்படக் கூறினர். தசரதன் துன்பக்கடலில் ஆழ்ந்து கரையேற முடியாமல் தவித்தான். அவனைக் கரையேற்றியவுடன் அவன் அதற்கு மாறான இன்பம் என்னும் கரையில்லாத கடலில் விழுந்துவிட்டான் என்பதாம். தசரதனுடைய துயரக் கடலுக்குக் கரை இருந்தது; மகிழ்ச்சிக் கடலுக்குக் கரையே இல்லை என்பதாம். துயர்க்கடல் கோடு (கரை) கண்டவன், களிப்பு எனும் கரையிலாக் கடலுள் ஆழ்ந்தான்.

### இலக்கணம்

உறு மதகரி-உரிச்சொல் தொடர்.
மதகரி-இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்க தொகை.
கரித்தானை-இரு பெயரொட்டுப் பண்புத் தொகை.
அருந்துயர்-பண்புத் தொகை.
துயர்க்கடல்-உருவகம்.
கடல் கோடு-ஆறும் வேற்றுமைத் தொகை.
கண்டவன்-வினையாலணையும் பெயர்.
களிப்பு எனும் கடல்-உருவகம்.
கரையிலாக் கடல்-ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.
கடலுள்-ஏழாம் வேற்றுமை உருபு.

## 43. தசரதன் ஆனந்தக் கண்ணீர் சொரிதல்

### உரை

**பரிவு அறு சிந்தை**-அன்பு சிறிதுமில்லாத உள்ளத்தையுடைய,
**அ பரசுராமன் கை**-அந்தப் பரசுராமன் கையிலிருந்த,
**வரிசிலை வாங்கி** - கட்டமைந்த வில்லைத் தான் வாங்கிக் கொண்டு,
**ஓர் வசையை நல்கிய**-அவனுக்கு ஒரு பழியைக் கொடுத்த,
**ஒருவனை** -ஒப்பற்றவனாகிய இராமபிரானை,
**தழுவி நின்று**-அணைத்து நின்று,
**உச்சி மோந்து** அவனுடைய உச்சியை மோந்து,
**அருவி**-அருவிபோல நீர் பெருகுகின்ற,
**தன் அம் கண் எனும் கலசம்**-தன்னுடைய அழகிய கண்கள் என்று சொல்லப் பெறும் கும்பங்களால்,
**ஆட்டினான்**-நீராட்டினான்.

### தெளிவுரை

அன்பு சிறிதும் இல்லாத உள்ளத்தையுடைய அப்பரசுராமன் கையிலிருந்த கட்டமைந்த வில்லைத் தான் வாங்கிக்கொண்டு அவனுக்கு ஒரு பழியைக் கொடுத்த, ஒப்பற்றவனாகிய இராமனை அணைத்து நின்று உச்சி மோந்து, அருவிபோல நீர் பெருகுகின்ற தன்னுடைய அழகிய கண்கள் என்று சொல்லப் பெறும் கும்பங்களால் நீராட்டினான்.

### விளக்கவுரை

உலகியலிற் காணப்பெறும் பண்டமாற்றைப் போல இராமனும் பரசுராமனிடமிருந்து வில்லை வாங்கிக்கொண்டு அவனுக்குப் பெரிய பழியை நல்கினான் என நயம்பெற அமைத்தார்.

தந்தை மகனைத் தழுவும்போது தந்தையின் ஆனந்தக் கண்ணீர் மகனின் முடிமேல் விழுதல் இயற்கையாதலின் அதை அமைத்துக் காட்டினார். **கலசம்**-சிறுபாத்திரம். மந்திரங்களால் உருவேற்றப் பெற்ற கலச நீரை அபிஷேகயாட்டுவதே இக்காலத்துக் கும்பாபிஷேகம் எனப் பெறும். தசரதன் கண்கள்-சிறு கலசங்கள். அருவி போலப் பெருகுகின்ற ஆனந்தக் கண்ணீரைக் கண்கள் என்ற கலசங்களால் நீராட்டினான் என்பதாம்.

### இலக்கணம்

**அறு சிந்தை**-வினைத் தொகை.
**அப்**பரசுராமன்-சுட்டுப் பெயர்.
**அங்கண்**-பண்புத் தொகை.
**கண் எனும் கலசம்-உருவகம்.**

## 44. தசரதனின் மகிழ்ச்சிக் கூற்று

### உரை

**பொய்மை இல்**-வஞ்சனை இல்லாத,
**சிறுமையில்**-சிறிய வயதில்,
**புரிந்த ஆண் தொழில்**-செய்து முடித்த இவ் வாண்மைக்குக் காரணமான செயலை,
**மும்மை இன் உலகினல்**-மூன்றாகப் பகுதிபட்ட இனிய உலக மக்களால்,

**முடிக்கல் ஆவதோ**-ஒன்றுகூடிச் செய்து முடிக்க எண்ணினாலும் செய்து முடிக்கக் கூடியதோ?
**இ சிறுவனே**-இவ் விளைஞனாகிய இராமனே,
**வினை செய்தோர்களுக்கு**-நல்வினை தீவினைகளைச் செய்தவர்களுக்கு
**இம்மையும் மறுமையும் ஈயும்**-இவ்வுலகப் பயன் மறுவுலகப் பயன் ஆகியவைகளையெல்லாம் தருபவனாகிய,
**மெய்ம்மை**-உண்மைப் பொருள்-பரம் பொருள்,
**என்றனன்**-என்று மகிழ்ந்து கூறினன்.

### தெளிவுரை

வஞ்சனை இல்லாத, இச்சிறு வயதில் செய்து முடித்த இவ்வாண்மைக்குக் காரணமான செயலை மூன்றாகப் பேசப்பெறும் உலகத்து மக்கள் எல்லாரும் ஒன்றாகக் கூடிச் செய்துமுடிக்க எண்ணினாலும் செய்துமுடிக்கக் கூடியதோ? முடியாது. இவ்விளைஞனாகிய இராமனே நல்வினை தீவினைகளைச் செய்தவர்களுக்கு இவ்வுலகப் பயனையும் மறுவுலகப் பயனையும் வகுத்துத் தருபவனாகிய மெய்ம்மைப் பொருளாம் பரம் பொருள் என்று கூறினான்.

### விளக்கவுரை

இராமன் பரசுராமனை வென்ற செயல் வஞ்சனை கலவாதது. ஆண்மையை அடிப்படையாகக் கொண்டு செய்யப்பெற்றது. மேலும் இளமைக் காலத்தில் அவனால் செய்யப் பெற்றது.

மூன்று உலகங்களும் சேர்ந்து முடிக்க எண்ணினாலும் முடிக்க முடியாத அருஞ்செயலைத் தான் ஒருவனாக நின்று வஞ்சனை இல்லாத முறையில் இளம்வயதில் செய்தான் ஆதலின் இவன் கடவுளே என்று காரண காரிய அமைப்புடன் தசரதன் கூறி மகிழ்ந்தான்.

நல்வினை செய்தவர்களுக்குச் சுவர்க்க வுலகமும் தீவினை செய்தவர்களுக்கு நரக வுலகமும் முறையறிந்து வழங்கும் பரம் பொருள் இவனே என்றார்.

### இலக்கணம்

**ஆண் தொழில்**-பண்புத் தொகை.
மும்மையின் உலகு-சாரியை; பண்புத் தொகை.
**முடிக்கல்**-தொழிற் பெயர்.
'ஓ'-இடைச்சொல்; எதிர்மறைப் பொருள்.
**வினை செய்தோர்கள்**-வினையாலணையும் பெயர்.
**ஈயும்**-செய்யுமென் வாய்பாட்டு வினைமுற்று.
**மெய்ம்மை**-பண்பாகு பெயர்.

## 45. இராமன் அயோத்தி சேர்தல்

### உரை

**பூமழை பொழிந்தனர்**-அப்பொழுது தேவர்கள் பூமழையைப் பொழிந்தார்கள்,
**புகுந்த தேவருள்**-அங்கே வந்த தேவர்களுள்,
**வாம வேல் வருணனை**-அழகிய வேலைக் கொண்டிருக்கிற வருணனை அழைத்து,
**மானம் வெம் சிலை சேமி என்று உதவி**-பெருமை பொருந்திய

**கொடிய இவ்வில்லைப் பாது** காப்பாயாக என்று அவனிடம் கொடுத்து,

**தன் சேனை ஆர்த்து எழ**-தன்னுடைய சேனைகள் ஆரவாரித்துப் பின் தொடர,

**நாம நீர்**-அச்சம் தரும் **அகழி** சூழ்ந்த

**அயோத்திமா நகரம் நண்ணி ஞன்**-அயோத்தி யென்னும் பெரிய நகரத்தை அடைந்தான்.

### தெளிவுரை

அப்பொழுது தேவர்கள் பூமழையைப் பொழிந்தார்கள்; பூமழையைப் பொழிந்தவர்களாய் அங்கே வந்த தேவர்களுள் அழகிய வேலாயுதத்தைக் கையில் கொண்டிருக்கிற வருணனை அழைத்து, பெருமை பொருந்திய கொடிய இவ்வில்லைப் பாதுகாப்பாயாக என்று அவனிடம் கொடுத்து, தன்னுடைய சேனைகள் ஆரவாரித்துப் பின் தொடர, அச்சம் தரும் கடல் சூழ்ந்த அயோத்தி என்னும் பெரிய நகரத்தை அடைந்தான்.

### விளக்கவுரை

வருணன் கடல் தெய்வம்; தேவர்களுள் ஒருவன். பூமழை பொழிவதற்காகத் தேவருலகிலிருந்து வந்த தேவர்களுள் இவனும் வந்தான். அழகிய வேலைக் கையில் கொண்ட இவ்வருணனிடம், பரசுராமனிடத்திலிருந்து வாங்கிய வெஞ்சிலையைக் கொடுத்துப் பாதுகாத்து வைக்கச் சொன்னான் இராமபிரான். நாமம்-அச்சம். அச்சம் தரும் நீர் சூழ்ந்த அகழி.

### இலக்கணம்

**பூமழை**-உருவகம்.
**மானவெம்**-உம்மைத் தொகை.
**சேமி**-முன்னிலை ஏவல்.
**நாமநீர்**-இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்க தொகை.
**மாநகரம்**-உரிச்சொல் தொடர்.

## 46. தசரதன் பரதனை நோக்கி ஒன்று கூறத் தொடங்குதல்

### உரை

**நண்ணினர்**-அயோத்திமா நகரத்தை வந்து பொருந்திய இராமபிரான் முதலானோர்,

**இன்பத்து வைகும் நாள் இடை**-அவரவர்க்குப் பொருந்திய இன்பங்களை அனுபவித்துவரும் நாளில்,

**மண் உறு முரசு இனம் வயங்கு தானையான்**-மார்ச்சனைபொருந்திய முரசக் கூட்டங்கள் விளங்குகின்ற சேனையையுடையவனும்,

**அண்ணல்**-ஆடவர்களில் உயர்ந்தவனும்,

**ஆண் தகை**-ஆண்மைத் தன்மையிற் பெருமை பெற்றவனும் ஆகிய தசரதன்,

**அப் பரதனை நோக்கி**-அப் பரதனைப் பார்த்து,

**எண் அரு தகையது ஓர் பொருள் இயம்புவான்** - நினைப்பதற்கு அரிய பெருமை வாய்ந்த ஒரு பொருள் பொதிந்த செய்தியை இயம்புவான் ஆயினன்.

### தெளிவுரை

அயோத்தி மாநகரத்தை வந்து பொருந்திய இராமபிரான் முதலானோர் அவரவர்க்குப் பொருந்திய இன்பங்களை அனுபவித்து வரும் நாளில், மார்ச்சனை பொருந்திய முரசக் கூட்டங்கள் விளங்குகின்ற சேனையை உடையவனும், ஆடவர்களில் உயர்ந்தவனும், ஆண்மைத் தன்மையிற் பெருமை பெற்றவனும், ஆகிய தசரதன் அப்பரதனைப் பார்த்து நினைப்பதற்கு அரிய பெருமை வாய்ந்த ஒரு பொருள் பொதிந்த செய்தியை இயம்புவான் ஆயினன்.

### விளக்கவுரை

மேற்பாட்டின் இறுதியில் நண்ணினன் என முடிந்து இப்பாட்டில் நண்ணினர் எனத் தொடங்கியது அந்தாதித்தொடை.

மண்-மார்ச்சனை. முரசு முதலிய தோற்கருவிகளின் நடுவில் கருமையாக வைக்கப் பெறும் ஒரு வகை மண். தானையான், அண்ணல், ஆண்தகை என்பன தசரதனைக் குறித்தன.

**எண் அரும் தகையது**-நினைத்துப் பார்க்க முடியாத பெருமையை உடையது எனபதாம்.

### இலக்கணம்

**நண்ணினர்**-வினையாலணையும் பெயர்.
**இன்பத்து வைகும்**-ஏழாம் வேற்றுமைத் தொகை.
**வைகும் நாள்**-பெயரெச்சத் தொடர்.
**நாளிடை**-ஏழாம் வேற்றுமை உருபின் பொருள்பட வந்த சொல்.
**உறுமுரசினம், வயங்கு தானையான்**-வினைத் தொகைகள்.
**ஆண்டகை**-உம்மைத தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை.
**எண்**-முதனிலைத் தொழிற் பெயர்.

## 47. தசரதன் பரதனைப் பார்த்து உன் முதுதாதை உன்னைக் காண விழைவதால் கேகய நாடு செல் எனக் கூறுதல்

### உரை

**ஐய!**-ஐயனே!
**நின் தன் முது தாதை ஆணை**-நின்னுடைய (முதாதை) பாட்டனரின் ஆணையாகும்,
**நின் காணிய விழைவது ஓர் கருத்தன் ஆதலால்**-நுமைக் காண்பதற்கு விரும்பிய ஒரு கருத்துடையவர் ஆகையால்,
**பூண் ஒளிர் மார்ப!**-அணிகலன்கள் ஒளி செய்யும் மார்பை உடைய பரதனே!
**கேணியில்**-குளத்தில்,
**வளை முரல்**-சங்குகள் ஒலிக்கின்ற,
**கேகயம்**-நீர்வளம் சூழ்ந்த கேகய நாட்டினை,
**புக போதி**-அடையுமாறு செல்க,
**என்றனன்**-என்று கூறினன் தசரதன்.

### தெளிவுரை

ஐயனே! நின்னுடைய பாட்டனரின் கட்டளை ஒன்றுண்டு; நும்மைக காண்பதற்கு விரும்பிய ஒரு கருத்துடையவர் ஆகையால் அணிகலன்கள் ஒளி செய்யும் மார்பை உடைய பரதனே! குளத்தில்

சங்கு ஒலிக்கின்ற நீர்வளஞ் சூழ்ந்த கேகய நாட்டினை அடையுமாறு செல்க என்று கூறினன் தசரதன்.

### விளக்கவுரை

ஐய என்ற சொல் மகனை அன்புடன் அழைக்க உபயோகப் படுத்தப்பெறும் சொற்களுள் ஒன்று. முதுதாதை என்பது இங்கே தாய்வழிப் பாட்டனுரைக் குறித்தது.

கேணி என்பது சிறுகுளத்தைக் குறித்தது. கிணறு என்றுங் கூறுவர். நீர்வளஞ் செறிந்த நாடு என்பதாம். சிறு குளத்தைக் கேணியென்பது அருவா நாட்டு வழக்கு.

### இலக்கணம்

ஐய, மார்ப--விளி வேற்றுமைச் சொற்கள்.
முதுதாதை-பண்புத் தொகை.
காணிய-செய்திய என்னும் வாய்பாட்டு வினையெச்சம்.
ஒளிர் மார்ப-வினைத்தொகை.
போதி-முன்னிலை ஒருமை வினைமுற்று.

## 48. பரதன் இராமனை வணங்கிப் புறப்படுதல்

### உரை

**ஏவலும்**-தசரதன் கட்டளையிட்ட அவ்வளவில்,
**இறைஞ்சி**-தசரதனை வணங்கி,
**போய்**-சென்று,
**இராமன் சேவடிப் பூவினை**-இராம பிரானுடைய திருவடிகளாகிய பூக்களை,
**சென்னியில்**-தலையிலே,
**புனைந்து**-அழகுபெற அணிந்து கொண்டு,
**போயினான்**-சென்றான்,
**அவன் அலது ஆவி அங்கு இல்லை ஆதலால்**-அந்த இராமபிரானை அல்லாமல் தனக்கு வேறு உயிர் அங்கே இல்லை ஆகையால்,
**ஓவல் இல்**-நீங்குதல் இல்லாத,
**உயிர் பிரிந்து**-உயிரை விட்டுப் பிரிந்து,
**உடல் சென்று என்ன**-உடம்பு மட்டும் தனியே சென்றாற் போலப் பரதன் இராமனை விட்டுப் போனான்.

### தெளிவுரை

தசரதன் கட்டளையிட்ட அளவில் பரதன் தசரதனை வணங்கிச் சென்று, இராமபிரானுடைய திருவடிகளாகிய பூக்களைத் தலையிலே அழகுபெற அணிந்து கொண்டு சென்றான். அந்த இராமபிரானை அல்லாமல் தனக்கு வேறு உயிர் அங்கே இல்லை ஆகையால் நீங்குதல் இல்லாத உயிரைவிட்டுப் பிரிந்து உடம்புமட்டும் தனியே சென்றாற் போலப் பரதன் இராமனை விட்டுவிட்டுப் போய்விட்டான்.

### விளக்கவுரை

கட்டளையிட்டவுடன் முறைப்படித் தந்தையை வணங்கினவன் அன்பினால் அண்ணலை வணங்கி, அந்த இராமபிரானுடைய திருவடிகளாகிய பூக்களைத் தம் சென்னியில் அழகுபெற அணிந்து கொண்டான். பரதனுக்கு உயிர் இராமனே. ஆகையால் பரதன் இராமனைப் பிரிந்துபோவது உயிரைப் பிரிந்து உடல் மட்டும் செல்வதைப் போல இருந்தது.

உயிரை விட்டுவிட்டு உடம்பு மட்டும் சென்றது என்பது இல் பொருள் உவமை.

### இலக்கணம்

ஓவல், ஏவல்-தொழிற் பெயர்கள்.
இறைஞ்சி, போய், பிரிந்து-செய்து என் வாய்பாட்டு வினையெச்சங்கள்.
என்ன-உவமை யுருபு.
சேவடி-பண்புத் தொகை,
சேவடிப் பூ-உருவகம்.

## 49. யுதாசித்தும் தம்பியும் உடன்வர பரதன் கேகய நாடு அடைதல்

### உரை

உளை விரி-பிடரி மயிர்கள் விரிந்த,
புரவி தேர்-குதிரைகள் பூட்டிய தேரினையுடைய,
யுதாசித்து என்று-யுதாசித்து என்று,
எனும்-சிறப்பாகக் கருதப் பெறுகிற,
வளை முரல்-சங்குகள் ஊதப் பெறுகிற,
தானையான்-சேனையை யுடைய அரசன்,
மருங்கு போதப் போய்-பக்கத்தில் வர சென்று,
இளையவன் தன்னொடும்-இளையவனாகிய சத்துருககனொடும்,
ஏழு நாள் இடை-ஏழு நாட்களிற் சென்று,
நளிர் புனல்-குளிர்ந்த நீர்வளத்தையுடைய,
கேகய நாடு நண்ணினன்-கேகய நாட்டைச் சென்று அடைந்தான்.

### தெளிவுரை

பிடரி மயிர்கள் விரிந்த குதிரைகள் பூட்டிய 'தேரினை உடைய யுதாசித்து' என்று சிறப்பாகக் கருதப்பெறுகிற சேனையையுடைய அரசன் பக்கத்தில் வரச் சென்று இளையவனாகிய சத்துருக்கனோடும் கேகய நாட்டை அடைந்தான்.

### விளக்கவுரை

'யுதாசித்' என்னும் அரசன் கேகய நாட்டரசனால் பரதனை அழைத்து வருமாறு அனுப்பப் பெற்றவன். அவன் வந்தபோது அனைவரும் கலியாணத்துக்காக மிதிலைக்குப் போய்விட்டார்கள் என்பதை அறிந்து மிதிலை சென்ற யுதாசித்து, எல்லாருடனும் சேர்ந்து பின் அயோத்தி வந்து, பரதனை அழைத்துச் செல்வதற்காக இவ்வளவு நாள் காத்திருந்தவன்.

உளை-பிடரி மயிர். பிடரி மயிர் நிறைந்திருத்தல் உத்தம சாதிக் குதிரையின் அழகு. யுதாசித்தும் சத்துருக்கனும் தன்னைத் தொடர்ந்து வர, பரதனும் ஏழு நாட்கள் பிரயாணம் செய்து கேகய நாட்டை அடைந்தான்.

### இலக்கணம்

விரி புரவி-வினைத்தொகை.
புரவித்தேர்-இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்க தொகை.

முரல் தானையான்-வினைத் தொகை.
போத, போய்-செயவென் வாய்பாட்டு வினையெச்சம்.
போய்-செய்து என் வாய்பாட்டு வினையெச்சம்.
ஏழு நாள்-பண்புத் தொகை.
ஏழு நாள் இடை-ஏழாம் வேற்றுமை உருபின் பொருள்பட வந்த சொல்.
நனிர் புனல்-வினைத் தொகை.

## 50. கவிக் கூற்று

### உரை

ஆனவன் போன பின்-அப் பரதன் சென்ற பிறகு,
அரசர் கோமகன் - அரசர்களுக்கெல்லாம் அரசனாகிய தசரதன்,
ஊனம் இல்-குற்றம் இல்லாத,
பேரரசு உய்க்கும் நாளிடை-பெரிய அரசாட்சியைச் செய்துகொண்டிருக்குங் காலத்தில்,
வானவர் செய்த மாதவம் உண்டு-தேவர்கள் செய்த பெரிய தவம் ஒன்று உள்ளது,
ஆதலால் மேல் நனி நிகழ்ந்தன-பின்பு மிகுதியாக நடந்த செய்திகளை,
விளம்புவாம்-சொல்லுவோம்.

### தெளிவுரை

அப்பரதன் சென்றபின் அரசர்க்கரசனாகிய தசரதன் குற்றமற்ற பேரரசை ஆட்சி செய்து வருஞ் சமயத்தில் தேவர்கள் செய்த பெரிய தவம் ஒன்று உண்டு. ஆகையால் பின்பு அங்கே மிகுதியாக நடந்த செய்திகளைச் சொல்லுவோம்.

### விளக்கவுரை

அரசர் கோமகன்-தசரதன். ஊனம் இல் பேரரசு-யாராலும் குறை சொல்ல முடியாத அல்லது குறையே இல்லாத பேரரசு என்பதாம்.

மேலே நடந்தவைகள் தசரதன் இராமனுக்குப் பட்டாபிஷேகம் செய்ய எண்ணுதல்; கூனி கலைத்தல் முதலியன.

### இலக்கணம்

பேரரசு-பண்புத் தொகை.
மாதவம், நனி நிகழ்ந்தன-உரிச்சொல் தொடர்கள்.
நிகழ்ந்தன-வினையாலணையும் பெயர்.

# 6

# கலிங்கத்துப் பரணி

**1. நூலாசிரியர் :**

**பெயர்:** *சயங்கொண்டார்.*

**பிறப்பிடம்:** *சோழநாட்டுத் தீபங்குடி.*

**சமயம்:** *இவர் சமயம் இன்னது என்று நிச்சயமாகத் தெரியவில்லையாயினும் சைவராக இருக்கலாம் எனக் கருதப் பெறுகிறது.*

**பெருமை:** ''பரணிக்கோர் சயங்கொண்டான்'' என்ற பாட்டைப் பெற்றவர். புலவர்களோடு வாதம் செய்து 'சயங்கொண்டார்' என்ற பெயரைப் பெற்றவர். இவரை ஆதரித்தவன் குலோத்துங்கன்.

**2. நூல் வந்தவழி:** இதுவே முதல் நூல்.

**3. எல்லை:** தமிழ் வழங்கும் எல்லையே இதற்கும் எல்லை. போர் நிகழ்ச்சிகளைப் பற்றிய பரணி நூல்களில் உயர்ந்த நிலையுடையது இது.

**4. நூற்பெயர்:** 'கலிங்கத்துப் பரணி'.

(a) **பெயர்க் காரணம்:** கலிங்க நாட்டில் நிகழ்ந்த போரையும் பெற்ற வெற்றியையும் கூறும் பரணி வகையைச் சார்ந்த நூல்.

கலிங்கம்+அத்து+பரணி—அத்து-சாரியை. ஏழாம் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்க தொகை.

(b) **கலிங்கம்:** நாட்டின் பெயர். தமிழ்நாட்டைச் சார்ந்த நிலங்கள் பதினேழு என வரையறுக்கப் பெற்றுள்ளது. அவற்றுள் ஒன்று கலிங்கம்.

இப்போதைய கஞ்சம் மாவட்டத்தையும் ஒரிசாவையும் கொண்டு விளங்கிய பகுதி அக்காலத்துக் 'கலிங்கம்' எனப் பெற்றது என்பர்.

(c) **பரணி:** தமிழில் உள்ள 96 வகைப் பிரபந்தங்களில் ஒன்று பரணி.

ஆயிரம் ஆண் யானைகளை எவன் ஒருவன் போரில் வீழ்த்துகிறானோ அவன்மேற் பரணி பாடவேண்டும் என்பது இலக்கணம்.

**பரணி என்பதன் பெயர்க் காரணம்:**

(1) போரில் வெற்றி பெறுவது துர்க்கையால்; அவள் நட்சத்திரம் பரணி. போர் வெற்றியைப் பற்றிய நூலாதலின் அப் பெயர் அமைக்கப் பெற்றது.

(2) பரணி என்ற சொல்லுக்கே 'யானைப் போர் வெற்றி' என்பது பொருள். அதுபற்றிப் பாடும் நூலுக்குப் 'பரணி' என்பது பெயர்.

(3) வேல், வில் முதலியவைகளைப் பரணாக அடுக்கி அப்பரண் மீது அமர்ந்து இந்நூல் பாடவேண்டும் ஆதலின் 'பரணி' எனப் பெற்றது.

(4) அரசனோடு போர்க்களத்தை நேரில் பார்க்கச் சென்ற புலவன், பரண் அமைத்து அங்கே நடைபெறும் நிகழ்ச்சிகளை நேரிற் கண்டு பாடுகின்றான். ஆதலின் 'பரணி' என்ற பெயர் வந்தது.

**5. நூலின் அமைப்பு:** இது 'தாழிசை'யாற் பாடப்பெறுவது. கடவுள் வாழ்த்து, கடை திறப்பு, காடு பாடியது, கோயில் பாடியது, தேவியைப் பாடியது, பேய் பாடியது, இந்திரஜாலம், இராசபாரம் பரியம், பேய் முறைப்பாடு, அவதாரம், காளிக்குக் கூளி கூறியது, போர் பாடியது, களம் பாடியது என்னும் பதின்மூன்று பகுதிகளைக் கொண்டு அமைக்கப் பெற்றது.

**6. நூலின் பொருள்:** முதற் குலோத்துங்கனின் படைத்தலைவனாகிய கருணாகரத் தொண்டைமான் சோழன் படைகளை நடத்திச் சென்று கலிங்க நாட்டினை அழித்து, அங்கே வெற்றித் தூண்களை நிறுத்தி, யானைகள் குதிரைகள் செல்வங்கள் ஆகியவற்றைப் பெருந் திரளாக எடுத்து வந்து குலோத்துங்கன் காலடியில் வைத்து வணங்கிய செய்தியைக் கூறியது.

**7. காலம்:** முதற் குலோத்துங்க சோழன் காலம்: கி.பி. 1070—1118.

**8. இடம்:** முதற் குலோத்துங்க சோழன் அவைக் களத்தில் அரங்கேறப் பெற்றது.

**9. காரணம்:** இந்நூலின் ஆசிரியர் புலவர்களையெல்லாம் வென்று அவ்வெற்றியின் காரணமாகச் 'சயங்கொண்டார்' என்ற பெயரைப் பெற்றவர். கலிங்க வெற்றியெய்திய குலோத்துங்கன் சயங்கொண்டாரிடம், "யானும் சயங்கொண்டான் ஆயினேன்" என்று கூறினான். உடனே புலவர் சயங்கொண்டார் நன்று, 'புலவன் சயங்கொண்டான் புரவலன் சயங்கொண்டான் மீது புலமைச் சயங் கொள் பரணி பாடுவான்" என்று கூறிப் பரணியாகிய இந்நூலைப் பாடினார் என்பதாம்.

**10. பிற செய்திகள்:** தக்கயாகப் பரணி, பாசவதைப் பரணி போன்ற பல பரணி நூல்கள் இருப்பினும் அனைவரும் போற்றிப் படிக்கக்கூடிய சுவை பொருந்திய நூல் இக் கலிங்கத்துப் பரணியே. நவரசங்களும் அமையப் பாடப் பெற்ற இந்நூல் வரலாற்றாராய்ச்சிக்குப் பெருந்துணை பயப்பதாகும்.

### பாடப் பகுதி

இங்கே பாடமாக அமைந்த பகுதி '**போர் பாடியது**' என்ற தலைப்பில், அமைந்த சில தாழிசைகள். இப்பகுதியானது, சோழர் படைத் தலைவனான கருணாகரத் தொண்டைமான் படைக்கும் கலிங்கப் படைக்கும் பொருத போர் பற்றிய வருணனைப் பகுதியாகும்.

## போர் பாடியது

கலிங்கப் படைக்கும் சோழப் படைக்கும் கலிங்க நாட்டில் நிகழ்ந்த போரைப் பற்றிப் பாடிய பகுதி. கலிங்கப் பேய் ஒன்று

கலிங்கப் போரின் காரணத்தைக் காளிதேவிக்குக் கூறியது; காரணம் கூறிய கலிங்கப் பேய், காட்சியையும் விவரிக்கிறது.

### பாடப் பகுதியின் பிரிப்பு முறை

| | | | |
|---|---|---|---|
| I | தாழிசைகள் | 1—5 | இரு திறத்துப் படைகளும் எதிர்த்தல். |
| II | | 6—7 | போர்க்களம் மழைக்களமாதல். |
| III | | 8—10 | போர்க்களம் தீக்களமாதல். |
| IV | | 11—14 | வீரர்கள் விளைத்த தீரச் செயல்கள். |
| V | | 15—16 | கருணாகரன் யானை முந்துதலும் கலிங்கர் நடுங்குதலும். |
| VI | | 16—21 | கலிங்கப் போரில் உயிர் பிழைத்தவர் பட்டியல். |
| VII | | 22 | கருணாகரன் மீண்டு வந்து சோழன் அடிபணிதல். |

## பாடப் பகுதித் தொகுப்புரை

### I. இருதிறப் படைகளும் எதிர்த்தல்

கலிங்கப் படைகளும் சோழப் படைகளும் தொடங்குக போரை, தொடங்குக போரை என்று முழக்கமிட்ட மாறுபாட்டை உண்டாக்கும் பேரொலி கடலொலியை வென்றது; குதிரைக் கூட்டத்தை விடுங்கள், யானைக் கூட்டத்தை விடுங்கள் என்று எழும்பும் பேரொலி முன் சொன்ன ஒலியினும் சிறந்து விளங்கியது.

அச்சம் உண்டாக்கும்படி வீரர்கள் கோடுகளை உடைய வில்லிற் பூட்டிய கயிற்றை இழுத்து ஒலி செய்தார்கள். அவ்வொலியினால் திசையிடங்கள் பிளவுபட்டன; இளைஞர்களாகிய வீரர்கள் போர்க்களத்தில் உண்டாக்கிய பெரு முழக்கம், உலகினர் காதுகளைச் செவிடு படச் செய்தது.

கடலோடு கடல் மோதுவதுபோல இருதிறத்துக் காலாட் படைகளும் தம்முள் எதிர்த்தன. மறித்து வீசும் அலைகளோடு அலைகள் சண்டை செய்வன போன்று குதிரைகளோடு குதிரைகள் சண்டையிட்டன.

பெரிய மலைகளோடு மலைகள் போர்முனைபிடத்து எதிர்ப்பது போல மதம் பொருந்திய யானைகளும் யானைகளும் முனைந்தன. கூட்டமாகிய மேகங்கள் மேகங்களோடு எதிர்த்தன போல தேர்களும் தேர்களும் எதிர்த்து நின்றன.

தம்முள் இனம் ஒத்த புலிகளோடு தம்முள் ஓசையிட்டுச் சண்டை செய்வன போல ஒத்த வீரர்களோடு வீரர்கள் விற்றொழிற் சண்டையை மேற்கொண்டார்கள். சிங்கங்களோடு சிங்கங்கள் அடர்த்தெழுந்து போர் புரிவன போல அரசரும் அரசரும் எதிர்த்தனர்.

### II. போர்க்களம் மழைக்களமாதல்

போர்க்களத்தில் வீரர்களின் கண்களிலிருந்து முதிர்ச்சி பெற்ற சினமாகிய தீயானது தோன்றியது. அத்தீயிலிருந்து மின்னலாகிய

ஒளி பிறந்தது. அம்புகளை விளைவிக்கும் வில்லிலிருந்து உண்டாகும் நாண் ஒலி இடியோசையென இடித்தது. கூர்மை செய்யப் பெற்ற அம்புகள் எனப்பெறும் பெரிய மழை பொழிந்தது.

இரத்தமாகிய நதி, போர்க்களத்தில் பரந்தது. இரத்த வெள்ளத்தில் குடர் வரிசைகள் நுரை போல மிதந்தன. யானையினுடைய துணிக்கப்பட்ட உடல் துண்டங்கள் குருதியாற்றுக்காக அடுக்கி வைக்கப் பெற்ற கரைகளைப் போல இருபக்கங்களிலும் கிடக்கின்றன.

## III. போர்க்களம் தீக்களமாதல்

### 1. யானைப் போரால் உண்டாகும் நெருப்பு

மலைகளே இவைகள் என்று கண்டோர் கூறும் வண்ணம் உள்ள யானைகள், தந்தங்களோடு தந்தங்கள் எதிர்நிற்கப் பொருதன. அவ்வாறு போர் செய்யும் மதம் பொருந்திய யானைகளின் தந்தங்களினிடையே உண்டாகும் நெருப்போடு நெருப்பும் எதிர்மோதும் போது ஒளியையுடைய நெருப்புப் பொறிகள் தெறித்து விழுகின்றன. அப்பொறிகளால் யானை மேல் இருந்து நிழலைச் செய்யும் கொடிகள் நெருப்புப் பற்றி எரிந்தன.

### 2. குதிரைகள் முகத்தில் தோன்றும் நெருப்பு

விரைவாக வீசுகின்ற காற்றின் தன்மையை அடிப்படையாகக் கொண்டு யுகத்தின் கடைசிக் காலத்தில் உலகம் முழுவதையும் உண்ணுவதற்காக ஒளிவிட்டு எழுகின்ற, விரைந்து செல்லுகின்ற வடவைத்தீயை, போர்க்களத்தில் சண்டை செய்தற்குப் பொருந்திய குதிரைக் கூட்டத்தின் முகத்தில் வைத்திருந்ததுபோல் இருந்தது.

### 3. தீக்களம் அல்லது தீப்படு மூங்கில் வளம் ஆதல்

கடல் அலைகளைப் போன்ற படை வரிசைகள் அணியாக அமைத்து வைக்கப்பெற்ற போர்க்களம் தீக்களம் எனலே அமையும். மேலும், ஒப்பு இல்லாத விற்படைகளிலிருந்து வரும் அம்புகளின் முனைகள் மோதும்போது அவைகள் எரிகின்றன. எரிகிற நெருப்பினில் அப்போர்க்களம் தீப்பற்றிய மூங்கிற் காட்டை ஒத்திருப்பினும் இருக்கும்.

## IV. வீரர்கள் விளைத்த தீரச் செயல்கள்

### 1. வில் வீரர் காட்டிய வீரம்

தீப்பட்டு எரிகின்ற மூங்கிற்காட்டில் எப்படியோ அப்படியே சட சட என்று ஒலி எழவும், அம்புப்படையானது நெருப்பைத்தோற்றும் புகையைப் பொழியவும் சில வீரர்கள் கொல்லுவதற்குரிய வில்லில் அம்பினைத் தொடுத்து இழுத்து விடுவாராயினர்.

### 2. குதிரை வீரர் காட்டிய வீரம்

குதிரை வீரர்களின் கால்களையும் தலைகளையும் பகைவர்கள் துணித்தலால் அவை கீழே விழத் தொடங்கின. கீழே அவைகள் விழத் தொடங்குமுன் தம் கால்களையும் தலைகளையும் அரிந்த அம்புகளை அவ்வாறு கைக் கொண்டவர்கள் நிறைந்த அம்புகளை உயர்த்து

செல்லுமாறு விடுதலால் எதிரே நின்ற அப்பகைவர் உடம்புகள் துணிக்கப் பெற்றன.

### 3. வாள் வீரர் காட்டிய தீரச் செயல்

குதிரை வீரர்கள் கால்களும் தலைகளும் துணிக்கப் பெற்று விழும்போது அணைத்துப் பிடித்த அம்புகளை மேலே வீசியெறிந்த மையால் துணிக்கப் பெற்ற வாள் வீரர்கள் காட்டுப் புதர்களை அழிப்பவர் போல எதிரேயிருக்கிற கட்டப்பெற்ற வீரக்கழலை உடைய வீரர்களின் செருக்கு அழியுமாறு வெட்டின காரணத்தால் அவர்களுடைய உடம்பு முழுவதும் இரண்டு பிளவுகள் ஆயின.

### 4. யானை வீரர்களின் அறந்தழுவிய வீரச் செயல்

போர் செய்து கொண்டிருக்கிற வீரர்களின் மார்புக்கு நேராகக் குனிகின்ற யானையின் நெற்றியில் வீரர்கள் தம் ஆயுதங்களால் அடிப்பவர்கள் இக்களிறு எம்முடையது என்று சொல்லி இரு கண்களையும் விழித்து நோக்க, யானைமேல் இருந்த வீரர்கள் இவர்கள் கண் விழிப்பதைப் பார்த்து அச்சத்தால் இவ்வாறு விழிக்கிறார்கள் என நினைத்து, அப்படையையுடையவர்களோடு போரிடுவதற்கு வெட்கங் கொண்டு, யானையை அவர்கள் மேல் விடாமல் வேறு பக்கந் திருப்பி ஓட்டிப் போயினர்.

## V. கருணாகரன் யானை முந்துதலும் கலிங்க வீரர் நடுங்குதலும்

அளவு கூறப்பெறாத நிலையில் போரின் நிலைமை முற்றியபோது வண்டை நகரத்தவர்களுக்கு அரசனும்; அரசர்களுக்கெல்லாம் தலை வணங்கிய குலோத்துங்க சோழனின் அமைச்சனும்; உலகத்தவரால் புகழ்பெறும் **கருணாகரன்** என்ற பெயருடையவன் தனது ஒரு துதிக்கையையும் இரண்டு கொம்புகளையும் உடைய யானையை முன்னேறிச் செல்லுமாறு செலுத்த;

யானை முன்னேறி வருவதைக் கண்ட கலிங்கவீரர் ஒருவர் ஒரு வரைவிட வேகமாக ஓடுவதற்கு முந்திக்கொண்டார்கள். அவ்வாறு ஓடுகிறவர்கள் தம் உடலின் நிழலையே, தம்மைத் துரத்திவரும் பகைவர்களாகிய தமிழர் என்று நினைத்து, மேலும் ஓடுவதற்குப் பயந்தவர்களாய் தமிழர்காள் அபயம்! தமிழர்காள் அபயம் என உடல் நடுங்கக் கத்திக்கொண்டு விழுந்து வணங்குபவர் ஆனார்.

## VI. கலிங்கப் போரில் பிழைத்தவர்

### 1. சமணர் எனச் சொல்லிப் பிழைத்தவர்

மலைகளையுடைய கலிங்க நாட்டையும் பெரும்பழியையும் ஒன்றாக இணைந்திருக்கச் செய்து, புதர்கள் வழியாக விழுந்தடித்து ஓடுவதால் வலிய புதர்கள் இழுத்துப் பறித்த காரணத்தால் சென்றனபோக எஞ்சியுள்ள குறை மயிர்களையும் எடுத்துவிட்டு, அப்புதர்களாலேயே இடுப்பிலுள்ள ஆடை உரிக்கப் பெற்றவர்களாய் உள்ள கலிங்கர்கள் எல்லாம், தம்மைச் சமணசமயத்தார் என்று சொல்லிப் பிழைத்தவர்களும் ஆங்கே அநேகர்.

### 2. வேதியர் எனக் கூறி உயிர் பிழைத்தவர்

வடிவத்தில் எவ்விதமாகக் குறைபாடும் இல்லாமல் இருப்பதற்காகக் கொடிய வில்லின் நாணை மடித்து முப்புரிநூலாக (பூணூல்)

ஆக்கிப் போட்டுக் கொண்டு வேகம் வகுத்த முறைப்படி கங்கையில் நீராட வந்தேம்; வழியில் இங்கே அகப்பட்டுக் கொண்டேம்; எங்களைக் காப்பாற்றுவதோடு இரக்கமுங் காட்டுங்கள் என்று கைகுவித்து இறைஞ்சி உயிர் பிழைத்தவர்களும் அங்கே அநேகர்.

### 3. சாக்கியுரை அறியீரோ எனக் கூறித் தப்பித்தனர்

இரத்த நீரிற் படிந்து கிடந்த கொடிச் சீலையை எடுத்து இதுவே அடையாளமாக அமையும் என்று புதிய காவியாடையாக அமைத்துக் கொண்டு, தம்முடைய தலைமுடியை எடுத்து முண்டிதம் செய்து கொண்டு, சாக்கியர்களாகிய எங்களை இவ்வுடையைப் பார்த்தவுடனேயே நீங்கள் அறிய மாட்டீர்களோ என்று கூறுவதோடு நில்லாமல் பொய்யான எடுத்துக் காட்டுக்களையும் காட்டுபவர்கள் அநேகர்.

### 4. பாணர் எனப் பிழைத்தனர் பலர்

சேனைகள் மடிந்து கிடக்கும் போர்க்களத்தைப் பார்த்துத் திகைத்து நின்றேமாகிய நாங்கள் தெலுங்கர்கள் என்று சொல்லி, வில்லுடைய கலிங்கர்களுடைய யானையின் மணியைத் தாளமாகப் பிடித்துப் பாடி ஆடி நாங்கள் பாணர் வகுப்பினர் என்று சொல்லிப் பிழைத்தார் பலர்.

### 5. சுவர் ஓவியங்கள் பிழைத்தன

மேற் சொன்னவர்களைத் தவிர வேறு எவருமே பிழைத்தாரிலர். ஏழுபகுதியைச் சார்ந்த கலிங்கம் முழுவதிலும் சுவர்களில் ஓவியர்கள் எழுதிவைத்த உயிரற்ற உடல்களைத் தவிர மற்றை எல்லா உடம்புகளையும் தொட்டு இழுத்துப் பிடித்து அழித்தார்கள் வீரர்களான தமிழர்கள்.

## VII. கருணாகரத் தொண்டைமான் வெற்றியொடு மீளுதல்

வண்டையர் கோனாகிய கருணாகரத் தொண்டைமான் கடல் சூழ்ந்த கலிங்க நாட்டை வீழ்த்தி, சோழர்களின் வெற்றித்தூணை நிறுத்தி, மதயானைகளையும் வெற்றிக் குதிரைகளையும், செல்வங்களையும் வாரிக்கொண்டு சோழநாடு புகுந்து, வாட்படையினையுடைய 'அபயன்' என்ற சிறப்புப் பெயர் பெற்ற குலோத்துங்க சோழனின் திருவடிகளிற் சேர்த்து, அவனடிகளை அவன் கருணையோடும் தமக்கு அணியாகச் சூடிக் கொண்டான்.

# 1. போரின் பொதுப் பேரொலி

உரை

**எடும் எடும் எடும் என**-படைகளைத் தூக்குங்கள், தூக்குங்கள், தூக்குங்கள் என்று,
**எடுத்து ஓர் இகல் ஒலி**-இருதிறத்துப் படைகளாலும் உரத்த குரலில் எடுத்துச் சொல்லப் பெற்றதும் ஒப்பற்ற மாறுபாட்டுணர்ச்சியை உண்டாக்கக் கூடியதும் ஆகிய ஒலியானது,
**கடல் ஒலி இகக்க**-கடலின் ஒலியை வெல்ல,
**பரிக் (குழாம்) விடு விடு விடு**-குதிரைக் கூட்டங்களை விடு விடு என்பதோடு,
**கரிக் குழாம் விடும் விடும் விடும்**

எனும் ஒலி மிகைக்கவே- யானைக் கூட்டங்களை விடும் விடும் விடும் என்னும் ஒலியும் சேர்ந்து எடு எடு எடு என்று கூறிய வீரர் ஒலியினும் மிகுதி யாக அமைந்து விளங்கியது,

### தெளிவுரை

படைகளைத் தூக்குங்கள் தூக்குங்கள் தூக்குங்கள் என்று படை வீரர்கள் உரத்துக் கூறிய பேரொலி கடலொலியை வென்றது. கடலொலியை வென்ற இவ்வொலியிலும் மேம்பட இருந்து குதிரைகளை விடு விடு விடு என்பதும், யானைக் கூட்டங்களை விடும் விடும் விடும் என்பதும் இணைந்து எழுந்து ஒலிக்கும் ஒலி.

### விளக்கவுரை

கடல்ஒலி; அதைவென்ற ஒலி, வீரர்கள் படைகளைத் தூக்குங்கள் என்று எழுப்பும் ஒலி; இவ்வொலியினும் மிக்கெழுந்த ஒலி, குதிரை வீரர்களும் யானை வீரர்களும் செய்த ஒலி என முறைப்படுத்தினர். கடல் ஒலியை வென்றது காலாட் படைகளின் ஒலி; காலாட் படைகளின் ஒலியை விஞ்சியது குதிரை, யானைப் படை வீரர்கள் எழுப்பிய ஒலி. இகல்-மாறுபாடு. வீரர் எழுப்பும் ஒலி, உடலின் உள்ளுறுப்பாகிய நாளத்தைச் சுண்டியெடுத்து மாறுபாட்டுணர்ச்சியை அதிகப்படுத்தும். இகத்தல்-வெல்லுதல்.

கடல் ஒலியை வீரர்களின் ஒலி வென்றது; ஒலியின் அளவால் அதிகம் என்பது மட்டுமன்று; கடல் ஒலி அச்சத்தையும் உண்டாக்கும். வீரர்கள் எழுப்பும் ஒலி மாறுபாட்டுணர்ச்சியை-பகையுணர்ச்சியை எழுப்பும்.

### இலக்கணம்

எடும் எடும் எடும்
விடு விடு விடு
விடும் விடும் விடும் } அடுக்குத்தொடர். விரைவுப் பொருள்.

**எடுத்தது**-வினையாலணையும் பெயர்.
**இகல்ஒலி**-இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்க தொகை.
**கடல்ஒலி**-ஆறும் வேற்றுமைத் தொகை.
**பரிகரி**-உம்மைத் தொகை.
**கரிக்குழாம்**-ஆறும் வேற்றுமைத் தொகை.
**இகக்க, மிகைக்க**- செயவென் வாய்பாட்டு வினையெச்சங்கள் மேல் 15ஆம் தாழிசையில் **முதிர் போதில்** என்பதைக் கொண்டன.

## 2. நாணொலியும் தெழியொலியும்

### உரை

**வெருவர** - (எல்லாரும்) அஞ்சுமாறு,
**வரிசிலை** - கோடுகளோடு கூடிய வில்லில் உள்ள,
**தெறித்த நாண்** - இழுத்து விடப்பட்ட கயிற்றிலிருந்து எழும் ஒலியானது,
**விசை**-வேகமாகச் சென்று,

**படு**-மோதுவதால்,
**திசை முகம்** - திக்குக்களின் முடிநத இடங்கள்,
**வெடிக்க**-பிளக்க,
**செரு இடை**-போர்க்களத்தில்,
**இளையவர்**-வீரர்கள்,
**தெழித்தது ஓர் தெழி** - கூட்டாகச் சேர்ந்து உண்டாக்கிய ஒரு கூட்டொலி,
**உலகுகள்**-உலகத்தில் உள்ளவர் களுக்கு,
**செவிடு எடுக்க** - பிற ஒலியைக் கேளாத தன்மையை உண் டாக்க.

## தெளிவுரை

எல்லாரும் அஞ்சும்வண்ணம் கோடுகளோடு கூடிய வில்லில் உள்ள இழுத்து விடப்பட்ட கயிற்றிலிருந்து எழும் ஒலியானது வேக மாகச் சென்று மோதுவதால் திக்குக்களின் முடிந்த இடங்கள் பிளக்க, போர்க்களத்தின் இடையிடையே வீரர்கள் கூட்டாகச் சேர்ந்து உண்டாக்கிய ஒரு கூட்டொலி உலகத்தில் உள்ளவர்களுக் குப் பிற ஒலியைக் கேளாத தன்மை(செவிடு)யை உண்டாக்க.

## விளக்கவுரை

**வெருவருதல்**-அஞ்சுதல். **வரிசிலை**-கோடுகள் எழுதப்பெற்ற வில். **தெறித்தல்** வில்லில் கட்டப்பெற்ற கயிற்றை இழுத்துவிட்டு ஒலி செய்தல். **திசைமுகம்**-திசையின் முதலிடம். **இளையவர்**-வீரர். **தெழித்தல்**-கூட்டாக ஒலியெழுப்புதல். **தெழி**-கூட்டொலி.

நாணோசையால் திசைகள் பிளந்தன; வீரர்கள் கூட்டொலியால் உலகினர் காதுகள் செவிடுபட்டன. ''வெடிக்கின்றன திசையானை யும் விழுகின்றன இடிவந்து அடிக்கின்றன சிறு நாணொலி'' என்பர் கம்பர்.

## இலக்கணம்

**வெருவர**-செய என் வாய்பாட்டு **வினையெச்சம்**; காரணப் பொருள்.
**வரிசிலை**-இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்க தொகை.
**தெறித்த நாண்**-பெயரெச்சம்.
**நாண்**, உலகு-இடவாகு பெயர்கள்.
**திசைமுகம்**-ஆறும் வேற்றுமைத்தொகை.
வெடிகக, எடுக்க-செய என் வாய்பாட்டு **வினையெச்சங்கள்**.

# 3. காலாட் படைகளும் குதிரைப் படைகளும்

## உரை

**எறி கடலொடு**-கரைகளை மோதி உடைக்கின்ற கடலோடு,
**கடல் கிடைத்த போல்** - வேறு ஒரு கடல் வந்து இரண்டும் இணைந்து மோதுவனபோல,
**இரு படைகளும்**-சோழர் படை கள் கலிங்கப் படைகள் ஆகிய இரு திறத்துக் காலாட் படை களும்,
**எதிர் கிடைக்க**-ஒன்றையொன்று நேரில் இணைந்து மோத,
**மறி திரையொடு** - மாறுபட்டு வீசும் அலைகளோடு,
**திரை மலைத்தபோல்**-வேறு பக்கத் திருந்து வரும் அலை சண்டை யிடுவன போல,
**வரு பரியொடு பரி மலைக்க**- பொங்கி வருகின்ற குதிரைப் படைகளோடு குதிரைப் படை கள் சண்டையிட.

### தெளிவுரை

கடலும் கடலும் இணைந்து மோதுவனபோல் இருதிறத்துக் காலாட் படைகளும் இணைந்து மோதின; அலைகளும் அலைகளும் சண்டையிடுவன போல இருதிறத்துக் குதிரைப்படைகளும் இணைந்து போரிட்டன.

### விளக்கவுரை

இது உவமையணி. கடலும் கடலும் மோதுதல் காலாட் படைகள், மோதலுக்கும், அலையும் அலையும் மோதுதல் குதிரைப் படைகளின் சண்டைக்கும் உவமை. இருபடை-இரண்டு பக்கத்துப் படைகள்; கலிங்கர் படையும் சோழர் படையும் கிடைத்தல்-கிடந்து போரிடுதல். "இருதிரைப் பெருங்கடல் இரண்டு திககினும் பொருதொழில் வேட்டு வந்தார்க்கும் பொங்கின" என்பார் கம்பர்.

### இலக்கணம்

கிடைத்த, மலைத்த-அஃறிணைப் பன்மைப் படர்க்கை வினைமுற்றுக்கள்,

கிடைக்க, மலைக்க-செயவென் வாய்பாட்டு வினையெச்சங்கள்.

எறிகடல், மறிதிரை, வருபரி-வினைத்தொகைகள்.

## 4. யானைப்படையும் தேர்ப் படையும்

### உரை

கனம் வரையொடு-பருத்த மலையொடு,
வரை முனைத்தபோல்-மேலும் ஒரு மலை முனைத்து இரண்டும் போரிட்டன போல,
கடம் கரியொடு கரி முனைக்க-மதம் ஒழுகுகிற யானையோடு யானை முனைத்துப் போரிட,
இன முகிலொடு - கூட்டமாகிய மேகத்தோடு,
முகில் எதிர்த்த போல் - மேகம் சேர்ந்து இரண்டும் எதிர்த்துச் சண்டையிட்டன போல,
இரதமும் இரதமும் எதிர்க்க-தேர்ப் படையும் தேர்ப்படையும் எதிர்க்க.

### தெளிவுரை

பெரிய மலைகளோடு மலைகள் போரிடுவனபோல் யானைகளோடு யானைகள் போரிட்டன; கூட்டமாகிய மேகங்களோடு மேகங்கள் சண்டையிட்டன போல் தேர்ப் படைகளும் தேர்ப் படைகளும் சண்டையிட்டன.

### விளக்கவுரை

யானைப் படைகளோடு யானைப்படைகளும் தேர்ப்படைகளோடு தேர்ப்படைகளும் சண்டையிட்டன. யானைகளுக்கு மலையும் தேர்களுக்கு மேகமும் உவமையாயின.

### இலக்கணம்

முனைத்த, எதிர்த்த-அஃறிணைப்பன்மை வினைமுற்றுக்கள்.

முனைக்க, எதிர்க்க-செயவென் வாய்பாட்டு வினையெச்சங்கள்.

கனவரை-பண்புத்தொகை.

வரை-தானியாகு பெயர்.

கடகரி-இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன்

தொக்க தொகை.
**கரி**-பண்பாகு பெயர்.

## 5. வீரரொடு வீரரும் அரசரொடு அரசரும்

### உரை

**பொரு**-தம்மில் ஒத்த,
**புலி புலியொடு சிலைத்த போல்**-புலியானது புலியோடு ஒலி செய்து போரிடுதல் போல,
**பொரு படரொடு**-தம்மில் ஒத்த படை வீரர்களோடு,
**பொருபடர் சிலைக்க**-இனமொத்த படை வீரர்கள் போரிட,
**அரியினோடு**-சிங்கத்தோடு,
**அரியினம்**-சிங்கக் கூட்டம்,
**அடர்ப்ப போல்**-எதிர்த்துச் சண்டையிடுதல் போல,
**அரசரும் அரசரும்**-அரசரும் அரசரும்,
**அடர்க்க**-எதிர்த்துச் சண்டையிட.

### தெளிவுரை

இனம் ஒத்த புலியோடு புலி ஒலி செய்து சண்டையிடுதல் போல இனமொத்த படை வீரர்களோடு படை வீரர்கள் சண்டையிட, சிங்கத்தோடு சிங்கம் எதிர்த்துச் சண்டையிடுதல் போல அரசரும் அரசரும் எதிர்த்துச் சண்டையிட.

### விளக்கவுரை

**பொரு**-ஒப்புமை என்னும் பொருள் தரும் சொல். கிழட்டுப் புலியும் இளமைப் புலியும் என்பன போன்று இல்லாமல் தம்மில் இனம் ஒத்த புலிகள் என்பதை உணர்த்தியது. **சிலைத்தல்**-ஆரவாரத்தை எழுப்பிக்கொண்டு போர் செய்தல்.

வீரர்களுக்குப் புலிகளையும், அரசர்களுக்குச் சிங்கத்தையும் உவமையாக்கினர்.

### இலக்கணம்

**சிலைத்த**-அஃறிணைப்பன்மைப் படர்க்கை இறந்தகாலத் தெரிநிலை வினைமுற்று.
**அடர்ப்ப**-அஃறிணைப்பன்மைப் படர்க்கை எதிர்காலத் தெரிநிலை வினைமுற்று.
**சிலைக்க, அடர்ப்ப** - செயவென் வாய்பாட்டு வினையெச்சங்கள்.
**பொருபுலி, பொருபடர்**-வினைத்தொகைகள்.
**அரியினம்**-ஆறும் வேற்றுமைத் தொகை.

## 6. போர்க்களம் மழைக்களமாதல்

### உரை

**விழிகளில்**-வீரர்களின் கண்களிலிருந்து,
**விளைகனல்** - நிகழ்ச்சிகள் பலவற்றை உண்டாக்கக்கூடிய நெருப்பு,
**முளைக்க**-தோன்ற,
**கனலிடை**-அந்நெருப்பில்,
**மினல் ஒளி பிறக்க**-மின்னல்எனப் பெறும் ஒளி உண்டாக,
**வளைசிலை** - வீரர்களின் கையிலே உள்ள வளைந்த வில்,
**'உரும்' என இடிக்க**-இடியோசையைப் போல ஒலிக்க,
**வடிகணை** - கூர்மையாக வடிக்கப் பெற்ற அம்புகள் என்ற,
**நெடுமழை**-பெரிய மழை,
**சிறக்க**-போர்க்களம் முழுவதும் பரவ.

### தெளிவுரை

வீரர்களின் கண்களிலிருந்து கனல் தோன்ற, அந்நெருப்பிலிருந்து மின்னல் எனப்பெறும் ஒளி உண்டாக, வீரர்களின் கையிலே உள்ள வளைந்த வில் இடியோசையைப் போல ஒலி செய்ய, கூர்மையாக வடிக்கப்பெற்ற அம்புகள் என்ற பெரிய மழை போர்க்களம் முழுவதும் பரவ.

### விளக்கவுரை

கனல்-நெருப்பு. வீரர்களின் கண்களில் தோன்றும் நெருப்பை விளைகனல் என்றார். ஏனைய நெருப்புக்கள் அழிவையே செய்யும். வீரர்களின் கண்களில் விளையும் நெருப்பானது போரில் வெற்றி பெறுவதற்கு வேண்டிய எல்லா வகையான நிகழ்ச்சிகளையும் தோற்றுவிக்கும். "வேள்வித்தீயினும் நாட்டு அபிமானம் உள்மூட்டிய சினத்தீ அன்றோ வானோர்க்கு என்றுமே உவப்பு" என்பார் மனோன்மணீய நூலாசிரியர்.

உரும்-இடி. மழை உண்டாவதற்கு வெம்மையே மூலகாரணம் ஆதலின் மழையைத் தோற்றுவிக்கும் வெம்மைத் தன்மை வீரர்களின் கண்களிலிருந்து தோன்றியது. அவ் வெம்மையிலிருந்து மின்னல் தோன்றிற்று என்றார். வில்லில் நாண் ஏற்றும்போது எழும் ஓசை, இடியோசையாக இருந்தது. அம்புகள் பெரு மழையாகப் பரவின.

வெம்மை, கண்களில் தோன்றும் மின்னல் போன்ற ஒளி; இடியைப் போன்ற ஓசை; மழைபோல விழும் அம்புகள் ஆகியவைகளை வைத்துக்கொண்டு போர்க்களத்தை மழைக்களமாக ஆக்கிக் காட்டுகின்றார்.

உருவக இலக்கணம் முற்றும் பொருந்தவில்லையாயினும் உருவக அமைப்பைக் கொண்டது.

### இலக்கணம்

விளைகனல், வளைசிலை, வடிகணை } வினைத்தொகைகள்.

மினல் ஒளி-மின்னல் என்பதன் இடைக்குறை.

மினல்ஒளி-இருபெயரொட்டுப் பண்புத்தொகை.

கனலிடை-ஏழாம் வேற்றுமை உருபின் பொருள்பட வந்த சொல்.

முனைக்க, பிறக்க, இடிக்க, சிறக்க-'செய' என் வாய்பாட்டு வினையெச்சங்கள்.

## 7. மழையாற் பெருகும் நதி

### உரை

குருதியின் நதி-இரத்த ஆறு,
வெளி பரக்க - வெளியிடங்களிலெல்லாம் சென்று பரவ,
குடர் நிரை-குடர்களின் வரிசைகள்,
நுரை என மிதக்க-ஆற்று நுரை போல மிதகக,
கரி-யானையின்,
துணிபடும் உடல் - வெட்டப் பெற்ற உடல்,
கரை என - ஆற்றின் கரைகள் என்று சொல்லும்படி,
அடுக்கி-அடுக்கப்பெற்று,
இருபுடை - இரண்டு பக்கங்களிலும்,
கிடக்க-கிடக்கின்றன ஆக.

**தெளிவுரை**

இரத்த ஆறு வெளியிடங்களிலெல்லாம் சென்று பரவ, குடர்களின் வரிசைகள் ஆற்று நுரை போல மிதக்க, யானைகளின் வெட்டப் பெற்ற உடல் ஆற்றின் கரைகள் என்று சொல்லும்படி இரண்டு பக்கங்களிலும் அடுக்கப் பெற்றுக் கிடக்க.

**விளக்கவுரை**

குருதி நதி-இரத்த ஆறு. இன் சாரியைக் கொள்க. இரத்தமே ஆறுகப் பெருகிப் பரவுகிறது. குடர்கள் நுரை என மிதக்கின்றன. யானையின் உடல்கள் இருபக்கக் கரைகளென அடுக்கப்பெற்றிருக்கின்றன.

**இலக்கணம்**

குருதி நதி-உருவகம் 'இன்' வேண்டாவழிச் சாரியை.
குடர்-குடல் என்ற சொல்லின் போலி.
நுரை என, கரை என-உருவக உருபுகள்.
அடுக்கி-செய்து என் வாய்பாட்டு வினையெச்சம்.
பரக்க, மிதக்க, கிடக்க-'செய' என் வாய்பாட்டு வினையெச்சங்கள்.

## 8. யானைப் போரிலிருந்து எழுந்த நெருப்பு கொடிச் சீலைகளை எரித்தல்

**உரை**

**பொருப்பு இவை என** - மலைகள் இவை என்னும்படியுள்ள,
**மருப்பொடு மருப்பு எதிர் பொரு மத கரி**-தந்தங்களோடு தந்தங்கள் நேர்நிற்கப் போரைச் செய்யும் மதம் பொருந்திய யானைகளின்,
**மருப்பின் இடையே**-தந்தங்களின் நடுவே தோன்றும்,
**நெருப்பொடு நெருப்பு**-ஒரு யானையின் தந்தத்திலிருந்து வெளிப்படும் நெருப்பும் இன்னொரு யானையின் தந்தத்திலிருந்து தோன்றும் நெருப்பும்,
**எதிர்**-ஒன்றோடு ஒன்று தாக்கும் போது,
**சுடர் பொறி தெறித்து** - ஒளி பொருந்திய நெருப்புத் துண்டுகள் சிதறித்து விழ,
**எழு நிழற்கொடி** - மேலெழுந்து நிழலைச் செய்கின்ற கொடிச் சீலைகளில்,
**தழல் கதுவ** - நெருப்பானது சென்று பற்ற,

**தெளிவுரை**

மலைகள் இவை என்று சொல்லும்படியான தந்தங்களோடு தந்தங்கள் நேர் நிற்கப் போரைச் செய்யும் மதம் பொருந்திய யானைகளின் தந்தங்களின் நடுவில், நெருப்போடு நெருப்பு நேர்நின்று ஒன்றோடு ஒன்று தாக்கும்போது ஒளி பொருந்திய நெருப்புத் துண்டுகள் சிதறி விழ, அதனால் மேலெழுந்து நிழலைச் செய்கின்ற கொடிச் சீலைகளில் நெருப்பானது சென்று பற்றிக்கொள்ள.

**விளக்கவுரை**

போர்க்களத்தை மழைக்களமாக ஆக்கி இரத்த ஆறு ஓடுவதை எடுத்துக் காட்டிய ஆசிரியர் இனிவரும் மூன்று தாழிசைகளில் போர்க்களத்தை நெருப்புக் களமாக ஆக்கிக் காட்டுகின்றார். இத்தாழிசையில் யானைகளின் மேல் வைக்கப்பெறும் கொடிச் சீலைகள்

தேர்ச் சீலைகள் முதலியன தீப்பிடித்து எரிகின்றன என்று எடுத்துக் கூறுகின்றார்:

இரு திறத்துப் படைகளின் யானைகள் எதிர்எதிர் நின்று மோதும் போது அவைகளின் தந்தங்கள் ஒன்றோடு ஒன்று மோதுகின்றன. தந்தங்களைப் போன்றே தந்தங்களிலிருந்து தோன்றிய நெருப்புக் களும் மோதுகின்றன. நெருப்புக்கள் ஒன்றோடொன்று மோதும் போது சிறுசிறு துண்டு நெருப்புக்கள் சிதறி விழுகின்றன. அவை எங்செங்கே சென்று விழுகின்றனவோ அங்கங்கே உள்ள திரைச் சீலை கள், கொடிகள் தீப்பற்றிக் கொள்ளுகின்றன என்று கூறுகிறார்.

பொருப்பு-மலை. மலைகளைப் போன்ற யானைகள். மருப்பு-தந்தம். யானையோடு யானை மோதும்போது மருப்போடு மருப்பு மோதிக் கொளளுகின்றன. மருப்போடு மருப்பு மோதும்போது அங்கே தோன்றும் நெருப்போடு நெருப்பு மோதிக் கொள்ளுகின்றன. அம் மோதலில் சிதறி விழுவன சிறுசிறு துண்டு நெருப்புக்கள்.

மதம் ஒழுகுகின்ற யானையை மதக்கரி என்றார். **எழுநிழல் கொடி**- யானை, தேர் முதலியவற்றின்மீது கட்டப்பெற்று, மேலே எழுந்து நிழலைச் செய்யும் கொடிகள் என்பது பொருள்.

### இலக்கணம்

**மதக்கரி, சுடர்ப்பொறி, நிழற்கொடி**-இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்க தொகைகள்.
**பொருப்பிவை எனப் பொருகரி**-உவமையணி.
**மருப்பின் இடை**-இன் சாரியை; இடை-ஏழாம் வேற்றுமை உருபின் பொருள்பட வந்த சொல்.
**எழு கொடி**-வினைத்தொகை.
**கதுவ**-'செய' என் வாய்பாட்டு வினையெச்சம்.

## 9. குதிரைகள் முகத்தில் வைத்த நெருப்பு

### உரை

**உகம் கடை முடிவினில்**-யுகத்தின் கடைசியில,
**உலகம் உண**-உலகத்தை யெல்லாம் உட்கொண்டு அழிப்பதற்காக,
**முடுகிய பவனபதத்தின்**-விரைந்து செலுகின்ற காற்றின் துணையினால்,
**சுடர் விட்டு எழு**-ஒளிவிட்டு வளர்வதாய்,
**கடுகிய**-விரைந்து செல்லும் தன்மையுடைய,
**வட அனலத்தினை**-வடவைத்தீயே
**களம் உறு** - போர்க்களத்தில் இருக்கிற,
**துரக கணத்தில் முகத்தில்**-குதிரைக் கூட்டங்களின் முகமாக,
**வைத்தது**-வைத்துள்ளது.

### தெளிவுரை

யுகத்தின் இறுதியில் உலகத்தை யெல்லாம் அழிப்பதற்காக, விரைந்து செல்லும காற்றின் உதவியால் சுடர்விட்டு வளருகின்ற விரைந்து செல்லும் தன்மையுடைய வடவைத் தீயை, போர்க்களத் தில் வந்து சண்டையிடுகிற குதிரைக் கூட்டங்களின் முகமாக அமைந் துள்ளது.

### விளக்கவுரை

யுகங்கள் நான்கு. இப்போது நடப்பது கலியுகம். கலியுகத்தின் காலம் முடியும்போது உலகமெல்லாம் அழிந்துபோகும். அடுத்த யுகம் தோன்றும். யுகத்தின் முடிவை யுகாந்தம் என்பர். அப்பொழுது பெரிய நெருப்பு ஒன்று தோன்றும். அந்த நெருப்பு குதிரை முகம் போல இருக்கும் ஆகையால் 'வடவா முகாக்கினி' என்று சொல்லப் பெறும். வடவைத் தீ என்றும் 'ஊழித் தீ' என்றும் சொல்லப் பெறும். இது உலகத்தையெல்லாம் உட்கொள்ளுவதற்கு ஏற்ற வகையில் பெரியதாக ஆவதற்கு யுக முடிவில் தோன்றும் காற்று துணை செய்யும். பவனம்-காற்று.

குதிரையின் முகம்போல் இருக்கும் ஊழித்தீ என்ற கருத்தை உட்கொள்ள வளருகின்ற வடவைத் தீ இக் கலிங்கப் போரில் ஈடுபடுகின்ற குதிரைகளின் முகமாக வைக்கப்பட்டுள்ளது.

பவனம்-காற்று. பவன பதம்-காற்றின் வலிமை. யுகக் கடை முடிவினில்-யுகத்தின் கடைசியில். வடவனலம்-வடவைத்தீ. துரக கணம்-குதிரைக் கூட்டம்.

### இலக்கணம்

முடுகிய, கடுகிய-பெயரெச்சங்கள்.

பவனபதம், துரககணம் } ஆறும் வேற்றுமைத் தொகைகள்.
கணத்தின் முகம். }

உண-'செய' என் வாய்பாட்டு வினையெச்சம் காரணப் பொருளில் வந்தது.

பவனபதம், வடவனலம்-வடமொழித் தொடர்.

களம் உறு-ஏழாம் வேற்றுமைத் தொகை.

உறு துரகம்-வினைத் தொகை.

## 10. போர்க்களத்தைத் தீக்களம் என்பதைவிடத் தீப்படு கழைவனம் எனலாம்

### உரை

**அலை படை நிரைகள்**-கடல் அலைகளைப் போன்ற படை வரிசைகள்,
**நிரைத்த**-வரிசையாக அமைத்து வைக்கப் பெற்றுள்ள,
**செருக்களம்**-போர்க்களம்,
**அழல் புரி களம் என**-நெருப்பை உண்டாக்கும் களம் என்று சொல்ல,
**(ஒக்கும்)**-ஒப்புமை யுடையதாகும்,
**மற்று**-அதற்கு மாறாக,
**ஒப்பு இல்**-ஒப்புமை சொல்ல முடியாத,
**விற்படை**-விற்படைகளானவை,
**தலைபொர**-ஒன்றுடன் ஒன்றாகத் தலைப்பகுதி இணைந்து போர் செய்ய,
**நெருப்பினில்**-(மூங்கிலால் செய்யப் பெற்ற வில்லாதலின் ஒன்றோடு ஒன்று மோத உண்டாகும்) நெருப்பினில்,
**எரிய**-அவைகளின் தலைப்புப்பகுதி எரிந்து கொண்டிருக்கிற காரணத்தினால்,
**தழல்படு**-நெருப்புப் பற்றி எரிகின்ற,
**கழை வனம்**-மூங்கிற்காட்டை,
**ஒக்கினும் ஒக்கும்** - ஒப்புமை யுடையதாக ஆகினும் ஆகும்.

## தெளிவுரை

கடல் அலைகள் போன்ற படை வரிசைகள் வரிசையாக அமைத்து வைக்கப் பெற்றுள்ள போர்க்களம் மேலே குறிப்பிட்டவாறு நெருப்பை உண்டாக்கும் களம் என்று சொல்லுவது ஒப்புமையுடையதே. ஆனாலும் அதற்கு மாறாக, ஒப்புமை சொல்ல முடியாத விற்படைகளானவை ஒன்றோடு ஒன்றாகத் தலைப்பகுதி இணைந்து போர் செய்ய, மூங்கிலால் செய்யப் பெற்ற வில்லாதலின் மோதுதலால் உண்டாகும் நெருப்பினில் அவ்விற்படைகளின் தலைப்பகுதி எரிந்து கொண்டிருக்கிற காரணத்தினால் அப் போர்க்களம் நெருப்புப் பற்றி எரிகின்ற மூங்கிற் காட்டை ஒப்புடையதாக ஆகினும் ஆகும்.

## விளக்கவுரை

மேலே இரண்டு தாழிசைகளில் யானைகளின் கொம்புகளில் உண்டாகும் நெருப்பு, குதிரைகளின் முகம் ஊழித்தீ என்று எடுத்துக் காட்டிப் போர்க்களத்தைத் தீக்களம் என்றே கூறினர். இத்தாழிசையில் போர்க்களத்தைத் தீக்களம் என்று சொல்வது பொருந்துவதே யாயினும் அதனினும் வேறாக, தீப்படு கழைவனம் என்று சொல்லி ஒப்புமை உடையதாகவும் ஆக்கலாம் என்று கூறுகிறார்.

**அலை**- அலைகள். இங்கே கடலலைகளைக் குறித்தன. படைகள் கடலலைகளைப் போல வரிசையாக ஒன்றன் பின் ஒன்றாக வரிசைப் படுத்தி நிறுத்தி வைக்கப் பெற்றுள்ளன. **அழல் புரி களம்**- நெருப்பை உண்டாக்கும் களம். இதற்கு நெருப்பை உண்டாக்கும் வேள்விக்களம் என்றும் உரை கூறுவர்.

**வில்படை தலை பொர**-விற்படைகளின் உச்சி அலங்காரம் ஏதும் செய்யப்பெறாத வெற்று மூங்கிலாக இருக்கும் ஆகையால் வில்லின் தலைப்பகுதிகள் மோதும்போது நெருப்பு உண்டாகிறது. **கழை**-மூங்கில்; **தழல்**-நெருப்பு. மூங்கிலால் செய்யப்பெற்ற வில்லின் தலைப் புப்பகுதி எரிந்து கொண்டிருப்பதால் நெருப்பில் பட்டு எரிகின்ற மூங்கிற்காட்டைப் போன்று இருக்கிறது, போர்க்களம் என்றும் கூறலாம் என்பது கருத்து.

அழல் புரிகளம் என ஒக்கும் என்று இணைத்து உரை செய்வதற்கு ஒக்கும் என்ற சொல் வருவிக்கப் பெற்றது. செருக்களம் அழல்புரி களம் என ஒக்கும்; மற்று அது தழல்படு கழைவனம் ஒக்கினும் ஒக்கும் என்று கூறி முடிக்க.

## இலக்கணம்

**அலைபடை**-உவமைத் தொகை.
**நிரைத்த** செருக்களம்-பெயரெச்சம்.
**பொர**, எரிய-செயவென் வாய்பாட்டு வினையெச்சங்கள் காரணப் பொருளன.
**மற்று**-வினை மாற்றுப் பொருள்.
**தழல்படு**-மூன்றாம் வேற்றுமைத் தொகை; கருவிப்பொருள்.
**படு கழைவனம்**-வினைத்தொகை.
**கழை வனம்**-ஆறாம் வேற்றுமைத் தொகை.
ஒக்கினும்-உம்மை இறந்தது தழுவியது.
**ஒக்கும**-செய்யும் என் வாய்பாட்டு வினைமுற்று.

## 11. வில் வீரர் காட்டிய வீரம்

### உரை

**அழல் படு**-நெருப்பில் எரிந்து அழிகிற,
**கழை வனம்**-மூங்கிற் காட்டில்,
**எப்படி**-ஒலி எப்படி உண்டாகும்?
**அப்படி**-அதே போல,
**சடசட தமரம் எழ**-சடசட என்ற ஒலி உண்டாகுமாறும்,
**பகழிப் படை**-அம்புகளோடு கூடிய விற்படைகள்,
**அழல் படு புகை பொழிய பொழிய**-நெருப்புப் பட்டுப் புகையைப் பொழியவும் பொழியவும்,
**சிலர்**-சில வீரர்கள்,
**அடு சிலை**-கொல்லும் தன்மையுடைய வில்லிடத்து,
**பகழி தொடுத்து** - அம்புகளைப் பூட்டி,
**வலிப்பர்**-குதையை வலிப்பார் ஆயினர்.

### தெளிவுரை

நெருப்பில் எரிந்து அழிகிற மூங்கிற்காட்டில் எப்படி ஒலி உண்டாகும்? அப்படியே சடசட என்ற ஒலி உண்டாகுமாறும், அம்புகளோடு கூடிய விற்படைகள் நெருப்புப் பட்டுப் புகையைப் பொழியவும் சில வீரர்கள் சொல்லும் தன்மையுடைய வில்லில் அம்புகளைப் பூட்டிக் குதையை இழுப்பார் ஆயினர்.

### விளக்கவுரை

இத்தாழிசையில் வில் வீரர்கள் காட்டிய தீரச்செயல் பேசப் பெறுகிறது. இங்கே வீரர்களின் தீரச் செயல் எது? சில வீரர்கள் விற்படைகளின் சடசட என்ற ஒலி உண்டாகுமாறும், வில்லின் தலைகள் பற்றி எரிந்து புகையைப் பொழியுமாறும் தம் அம்புகளை விடுவதன்மூலம் செய்தே காட்டுகிறார்கள். இயற்கையாக விற்கள் மோதுவதால் எரியுண்டானது முன்னே, ஆனால் சில வீரர்கள் தம்முடைய அம்புகளை எரியூட்டுவதற்காகவே விடுகிறார்கள் என்பதாம். அம்பினுடைய அடிப்பாகம் வில்லின் கயிற்றோடு பொருந்துவதற்காக வில்லின் நாணில் அமைக்கப் பெறும் உறுப்புக்குக் 'குதை' என்று பெயர். குதையில் அம்பைப் பொருத்தி, குதையை எவ்வளவு வலிமையாகப் பின்னுக்கு இழுத்து விடுகிறோமோ அவ்வளவுக்கு வேகமாகவும் நீண்ட தூரமுடையதாகவும் அம்புகள் செல்லும். வலித்தல்-குதையைப் பின்னோக்கி இழுத்தல். எப்படி அப்படி-எவ்வாறோ அவ்வாறு என்றும் பொருள் தந்தன. தமரம்-ஒலி.

### இலக்கணம்:

**சடசட**-இரட்டைக் கிளவி, ஒலிக் குறிப்பு.
**எழ, பொழிய**-'செய'வென் வாய்பாட்டு வினையெச்சங்கள். காரணப் பொருளன.
**பகழிப்படை**-இரு பெயரொட்டுப் பண்புத் தொகை.
**அழல்படு**-ஏழாம் வேற்றுமைத் தொகை.
**படுபுகை, அடுசிலை**-வினைத் தொகைகள்.
**பொழியப் பொழிய**-அடுக்குத் தொடர், இடைவிடாமைப் பொருள்.
**சிலைப் பகழி**-ஏழாம் வேற்றுமைத் தொகை.
**தொடுத்து**-செய்து என் வாய்பாட்டு வினையெச்சம்.

வலிப்பர்-பலர்பாற் படர்க்கை, எதிர்காலத் தெரிநிலை வினை முற்று.
ஏ-அசைநிலை.

## 12. குதிரை வீரர் காட்டிய வீரம்

### உரை

அடியொடு முடிகள்-கால்களோடு தலைகள்,
துணித்து-பகைவர்கள் பெரிய அம்புகளால் துண்டாக ஆக்க,
விழப்படும் அளவு-கீழே விழப் போகும் சமயத்தில்,
அரிதொடை - அரியும் தன்மையுடைய அம்புகளை,
அகலத்தோடு அணைத்தனர்-மார்போடு அணைததுக்கொண்டார்கள் சில குதிரை வீரர்கள்,
நெடியன - நீளமுடையனவாய்ப் பெரியனவாயிருக்கிற,
சில சரம்-சில அம்புகளை,
அப்படி பெற்றவர் - மார்போடு அணைத்ததால் அம்புகளைப் பெற்ற அவர்கள்,
நிறைசரம்-அளவாலும் பெருமையாலும் நிறைந்திருக்கின்ற அவ்வம்புகளை,
நிமிரவிட-மேல் நோக்கிச் செல்லுமாறு விடவே,
துணியுற்ற-அவைகள் சென்று பகைவர்களைத் துணித்தன.

### தெளிவுரை

கால்களோடு தலைகள் பகைவர்களின் பெரிய அம்புகளால் அளக்கப்பெற, கீழே விழப் போகும் சமயத்தில் அரியும் தன்மையுடைய அம்புகளை மார்போடு அணைத்துக்கொண்டார்கள். சில குதிரை வீரர்கள். நீண்டு பெரியதாக இருக்கிற சில அம்புகளை, மார்போடு அணைப்பது மூலமாகப் பெற்ற சிலர், அளவாலும் பெருமையாலும் நிறைந்திருக்கிற அவ்வம்புகளை மேல் நோக்கிச் செல்லும்மாறு விட, அவைகள் விரைந்து சென்று பகைவர்களைத் துணித்தன.

### விளக்கவுரை

அம்புகளிற் சில நீண்டு பெரியனவாக இருக்கும். அவைகள் உடல்களைத் துண்டாக ஆக்கும் தன்மையுடையவை. சில குதிரை வீரர்களின் தலையையும் கால்களையும் இத்தகைய அம்புகள் துணித்தன. துணிக்கப் பெற்ற நிலையில் கீழே விழத் தொடங்கும் குதிரை வீரர்கள் அவ்வம்புகளை மார்புகளோடு அணைத்தனர். அவ்வாறு அணைத்தால் அப்பெரிய அம்புகள் சிலருக்குக் கிடைத்து விடுகின்றன. விழும் நிலையிலும் அக்குதிரை வீரர்கள் அவ்வம்புகளைப் பகைவர் மேல் விடுகிறார்கள். அவைகள் விரைந்து சென்று பகைவர்களைத் துணித்தன

துணித்தல்-துண்டமாக ஆக்குதல். அரிதொடை-அரியும் தன்மையை உடைய அம்புகள். வில்லில் தொடுத்துவிடப் பெறுவதால் அம்புகளுக்குத் தொடை என்பது பெயர். நிமிர விடுதல்-மேல் நோக்கிச் செல்லுமாறு விடுதல். கீழ்நோக்கி விடுகிறார்கள் ஆகையால் மேல் நோக்கி விட்டனர் என்றார்.

### இலக்கணம்

அடியொடு முடிகள்- ஒடு மூன்றாம் வேற்றுமை உடனிகழ்ச்சி.
துணித்து-செயவென் எச்சத் திரிபு; துணிக்க என்பது பொருள்.

புகும் அளவு, அரிதொடை, நிறைசரம்-வினைத்தொகைகள்.
நெடியன, பெற்றவர்-வினையாலணையும் பெயர்கள்.
நிமிர, விட-செயவென் எச்சம் காரணப் பொருளன.
துணியுற்ற-அகரவீற்றுப் பலவின்பால் படர்க்கை வினை முற்று.

## 13. வாள் வீரர் காட்டிய வீரம்

### உரை

**நிறைசரம்**-அளவாலும் பெருமையாலும் நிறைந்த அம்புகளை,
**நிமிரவிட**-கீழே விழும் குதிரை வீரர்கள் மேல் நோக்கி விட்டதால்,
**துணியுற்றவர்**-துண்டாக ஆக்கப் பெறறவர்களாகிய வாள் வீரர்கள்,
**நெறியினை ஓடி எறிகிற்பவர் ஒத்து**-புதர்களை வெட்டி ஒடித்து எறிகிறவர்களைப் போல,
**எதிர்**-எதிரே யிருக்கிற,
**அறை கழல்**-ஒலிக்கின்ற வீரக் கழலையுடைய,
**விரிதர்**-வீரர்களை,
**செருக்கு அற வெட்டலின்**-அவர்களின் மாறுபாடு அழியுமாறு வெட்டுகின்ற காரணத்தினால்,
**அவர் உடல்**-அவ்விருதர்களின் உடல்,
**முட்ட**-முழுவதும்,
**இரு வகிர் பட்டன**-இரு பிளப்புக்களாகப் பிளவுபட்டன.

### தெளிவுரை

காலும் தலையும் துணிக்கப் பெற்றுக் கீழே விழும் குதிரை வீரர்கள் தமக்குக் கிடைத்த நிறை சரங்களை மேல் நோக்கிச் செல்லுமாறு விட்டதால் அவைகள் பட்டுத் துண்டாக ஆக்கப் பெற்ற சில வாள் வீரர்கள் தமக்கு எதிரே நின்று எதிர்க்கிற ஒலிக்கும் வீரக்கழலை அணிந்த வீரர்களை அவர்கள் மாறுபாடு அழியுமாறு, புதர்களை வெட்டி ஒடித்து எறிகிறவர்களைப் போல வெட்டுகின்ற காரணத்தால், அவ் விருதர்களின் உடல் முழுவதும் இரண்டாகப் பிளந்தன.

### விளக்கவுரை

குதிரையிலிருந்து கீழே விழுகிறவர்கள் நிறைசரம் விட்ட செய்தி சென்ற தாழிசையிற் கூறப்பட்டது. விட்ட வரலாற்றை அறிந்த நாம் பட்ட வரலாற்றை இங்கே பார்க்கிறோம். அந்நிறை சரங்கள் வாள் வீரர்களின் உடலைத் துணித்தன. அவ்வாள் வீரர்கள் தம் எதிரில் நின்று எதிர்க்கிறவர்களாய், கட்டப்பெற்ற வீரக் கழலையுடைய வாட்போர் வீரர்கள் (விருதர்) புதர்களை வெட்டி எறிபவர் போல அவர்களின் செருக்கு அழியுமாறு வெட்டுகிறார்கள். அதனால் அவ்விருதர்களின் உடல் இரண்டு பிளவுகளாகப் பிளந்தனர்.

செருக்கு-போர்க்களத்தில் உண்டாகிய வெற்றிப் பெருமிதம். புதர்களை வெட்டி எறிபவர்களைப் போல என்பது உவமை. இதனால் விளக்கப்பெறும் செய்தி; நிறைசரத்தால் துணிக்கப் பெற்ற வீரர்கள் தம் வாளால் தமக்கு முன் செருக்கோடு நின்று கொண்டிருக்கிற வீரக் கழலணிந்த வாள் வீரர்களை வெட்டுகிறார்கள் என்பதே.

நெறி-நெறித்துக் கொண்டிருக்கும் புதர். ஓடி எறிகிற்பவர்-ஒடித்து வீசுகிறவர். வகிர்தல்-பிளத்தல். முட்ட-முழுவதும்.

### இலக்கணம்

**துணியுற்றவர், எறிகிற்பவர்**-வினையாலணையும் பெயர்கள்.
எறிகிற்பவர்-'கில்' ஆற்றல் பொருள் உணர்த்தும் இடைச் சொல்.
**ஒத்து**-உவமைப் பொருளை உணர்த்தும், செய்து என் எச்சம்.
**எதிர் விருதர், அறை கழல்**-வினைத்தொகைகள்.
**வெட்டலின்**-'செயின்' என வாய்பாட்டு வினையெச்சம்.
**விருதர் செருக்கு**-ஆறும் வேற்றுமைத் தொகை.

## 14. யானை வீரர்களின் அறந்தழுவிய ஆண்மை

### உரை

**அமர் புரி**-போர் செய்து கொண்டிருக்கிற,
**தமது அகலத்து இடை**-தம்முடைய மார்பை நோக்கி,
**கவிழ்**-தாழ்கிற,
**அடு கரி**-கொலை செய்யும் தன்மை வாய்ந்த யானையின்,
**நுதலில்**-நெற்றியில்,
**அடிப்பர்**-தண்டினால் அடிப்பவர்கள்,
**இ களிறு எமது என**-இந்த யானை எமமுடையது என்று சொல்லி,
**இரு கண் விழிக்க**-இரண்டு கண்களாலும் விழித்து, யானை வீரர்களைப் பார்க்க, யானை வீரர்கள்,
**உட்கினர் என**-இவர்கள் பயந்தார்கள் ஆகையால் இவ்வாறு விழித்துப் பார்க்கிறார்கள் என்று எண்ணி,
**பகைஞர்க்கு வெட்கி**-தண்டத்தை ஏந்தியுள்ள வீரர்களுக்காக வெட்கப்பட்டு,
**விடுகிலர்**-யானையை அவர்கள் மேல் செலுத்தாமல் வேறிடத்துக்குச் செலுத்தினர்.

### தெளிவுரை

போர் செய்து கொண்டிருக்கிற தம்முடைய மார்பை நோக்கித் தாழ்கின்ற கொலை யானையின் நெற்றியில் தம் கதையால் அடித்து, இந்த யானை எம்முடையது என்று சொல்லி இரண்டு கண்களாலும் விழித்துப் பார்க்க: இவர்கள் விழிப்பதைப் பார்த்து, இவர்கள் அச்சங் கொண்டவர்கள் என நினைத்த யானை வீரர்கள் இத்தகைய கதாயுத வீரர்களுக்கு நாணி, அவர்கள் மேல் யானையைச் செலுத்தாது வேறிடத்துக்குச் செலுத்தினர்.

### விளக்கவுரை

கையில் 'கதை' என்ற ஆயுதத்தைத் தாங்கிச் சிலர் போர் செய்கிறார்கள். வீரர்களை ஏற்றிக்கொண்டு போர்க்களத்தில் வீரர்களைக் கொல்லுகின்ற யானைகள் கதாயுத வீரர்களைத் தாக்குவதற்காக அவர்களின் மார்புக்கு நேராகக் கவிழ்ந்தன. தாழ்ந்த யானையின் நெற்றியில் கதாயுதத்தால் அடித்து, மேலே உள்ள யானை வீரர்களைப் பார்த்து, இந்த யானை எம்முடையது என்று கூறி, கண்களால் விழித்து நோக்கினர்; இவர்களின் கண்களைப் பார்த்த யானை வீரர்கள் இவர்கள் பயந்து விட்டார்கள் என்று கருதி, இவர்களோடு போர் செய்ய வந்தமைக்காக வெட்கப்பட்டு, யானையை அவர்கள் மேற் செலுத்தாமல் வேறிடத்துக்குச் செலுத்திக் கொண்டு போனார்கள்,

விழித்த விழி விழித்தவாறே இருப்பது அச்சத்துக்கு அடையாளம் ஆகையால், அஞ்சியவர்கள் மேல் போரிடுவது அறம் அன்று ஆகையால் யானை வீரர்கள் அறந்தழுவியவர் ஆனார்கள். அவர்கள் வெட்கங் கொண்டதற்குக் காரணம், கையில் வைத்துக்கொண்டிருக்கும் படைக்கு ஏற்ற வீரம் இவர்களிடம் இல்லையே. பேடிகை ஒள்வாள்போல கதாயுதத்தை ஏற்றுக்கொண்டிருந்தும் பயனில்லையே; கதாயுதம் வைத்திருப்பதால் இவர்கள் பெருவீரர்கள் என்று கருதியல்லவா வந்தோம் என்று எண்ணி வெட்கமுற்றனர்.

'உட்கு அச்சம்' என்பது தொல்காப்பிய நூற்பா. உட்கினர்-அஞ்சினர். அகலம்-மார்பு.

### இலக்கணம்

அமர்-முதனிலைத் தொழிற் பெயர்.
புரி தமது, கவிழ் கரி, அடு கரி-வினைத்தொகைகள்.
தமதகலம்-தாம்+அது+அகலம். தாம் என்ற பொதுப் பெயர் உருபேற்பதற்காகத் தம் எனக் குறுகியது.
அது-ஆறும் வேற்றுமை உருபு.
எமது-குறிப்பு வினைமுற்று.
விழிக்க-'செய' என் வாய்பாட்டு வினையெச்சம்.
வெட்கி-செய்து என் வாய்பாட்டு வினையெச்சம்.

## 15. கருணாகரன் யானை முந்துதல்

### உரை

**அலகு இல்**-எல்லையிட்டுக் காட்டுதல் இல்லாத,
**செரு**-கலிங்கப் போர்,
**முதிர் போதில்**-முற்றிய சமயத்தில்,
**வண்டையர் அரசன்**-'வண்டை' என்னும் நகரத்தில் உள்ளவர்களுக்கு அரசனும்,
**அரசர்கள் நாதன் மந்திரி**-அரசர்களுக்கரசனாகிய குலோத்துங்க சோழனின் அமைச்சனும் ஆகிய,
**உலகு புகழ்**-உலகினரால் புகழப் பெறும் புகழமைந்த,
**கருணாகரன் தனது**-கருணாகரத் தொண்டைமானுடைய,
**ஒரு கை**-ஒரு கை எனப் பெறும் துதிக்கையையும்,
**இரு பணை**-இரட்டைக் கொம்புகளையும் உடைய,
**வேழம்**-யானையானது,
**முந்த**-கருணாகரன் செய்த குறிப்பினால் முன்னேறிச் செல்ல.

### தெளிவுரை

அளவிட்டுச் சொல்ல முடியாத பெருமையையுடைய கலிங்கப் போர் முதிர்ந்த நிலையை அடைந்த சமயம், வண்டை நகரத்தார்க்கு அரசன், அரசர்க்கரசனாகிய குலோத்துங்க சோழனின் அமைச்சன், உலகத்தவரெல்லாரும் புகழப் பெறும் கருணாகரனுடைய ஒருகை எனப் பெறும் துதிக்கையையும் இரட்டைக் கொம்புகளையும் உடைய யானையானது கருணாகரன் குறிப்பை உட்கொண்டு முந்திச் சென்றது.

### விளக்கவுரை

அலகு-அளவு. அளவுபடுத்திச் சொல்ல முடியாத பெருமையுடையது கலிங்கப் போர். முதிர்ந்த நிலை அடைதலாவது, உச்சகட்டத்தை அடைதல்.

கருணாகரன், வண்டை நகரத்தை ஆட்சி செய்யும் குறுநில மன்னன். அரசர்க்கரசன்; அரசர்கள் நாதன்-விசயதரன் என்ற குலோத்துங்க சோழன். இவன் மந்திரியே கருணாகரத் தொண்டைமான். உலகத்தாரால் புகழப் பெறுபவன். ஒருகை-ஒற்றைக்கை, துதிக்கை; கருணாகரன்-அருட்கடல்.

### இலக்கணம்

முதிர் போதில், புகழ் கருணாகரன்-வினைத் தொகைகள்.
வண்டையர் அரசன், அரசர்கள் நாதன், நாதன் மந்திரி-ஆறும் வேற்றுமை உயர்திணைத் தொகையாதலின் இவ்வுருபு விரிக்க.
உலகு-இடவாகு பெயர்.
ஒருகை, இருபணை-பண்புத் தொகைகள்.
ஒருகை வேழம், இருபணை வேழம்-இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்க தொகை.

## 16. கருணாகரன் யானை கண்ட கலிங்கரின் நடுக்கம்

### உரை

**ஒருவர் ஒருவரின்**-ஒருவர் மற்றவரைவிட,
**ஓட முந்தினர்**-உயிர் தப்பி ஓட முந்திக் கொண்டார்கள்,
**உடலின் நிழலினை**-ஓடுகிறவர்கள் தங்கள் உடலினுடைய நிழலைத் தாங்களே கண்டு,
**ஓட அஞ்சினர்**-தமிழர் தம்மை நெருங்கி விட்டதாக எண்ணி ஓடவும் பயந்தனராய்,
**அருவர் அருவர்**-தமிழர்கள், தமிழர்கள்,
**எனா**-என்று,
**அபயம் அபயம் எனா நடுங்கி**-அடைக்கலம் அடைக்கலம் என்று நடுங்கி,
**இறைஞ்சினர்**-கை கூப்பி வணங்கினர்.

### தெளிவுரை

கருணாகரனின் யானை முன்னேறி வருவதைக் கண்ட கலிங்கர்கள் ஒருவர் ஒருவரைவிட முண்டியடித்துக் கொண்டு ஓடினர்; ஓடும் போது அவர்கள் தங்கள் உடம்பின் நிழலையே கண்டு தமிழர்கள் எனப் பயந்து, அவர்கள் தம்மை நெருங்கி விட்டார்கள் என நினைத்து, திரும்பிப் பார்க்காமலேயே தமிழர்களே தமிழர்களே என்றும் காப்பாற்றுங்கள் காப்பாற்றுங்கள் என்றும் நடுங்கி, கைகூப்பி வணங்கினார்கள்.

### விளக்கவுரை

உயிர் தப்புவதற்காக ஒருவர் மற்றவரைவிட முந்திக் கொண்டு தத்தம் உடம்பின் நிழலைக் கண்டு தாங்களே தமிழர் என நினைத்துப் பயந்தனர். தமிழர் அங்கே இல்லாதிருப்பது திரும்பிப் பார்த்தால் தானே தெரியும். திரும்பிப்பார்க்காமலேயே "தமிழர்களே, தமிழர்களே உங்கள் அடைக்கலம் அடைக்கலம்" என்று கதறிக் கை கூப்பித் தொழுதார்கள்.

தெலுங்கர் போன்ற பிறர் தமிழரை 'அருவர்' என வழங்குவர். 'அபயம்'-எங்களைப் பயம் அற்றவராக ஆக்குக என்றும் பொருள்தரும் சொல்.

### இலக்கணம்

ஒருவரின்-'இன்' ஐந்தன் உருபு-உறழ் பொருள்.
அருவர் அருவர்
அபயம் அபயம் } அடுக்குத்தொடர், அச்சம் பற்றியன.
எனு-இரண்டிடத்தும் எண்ணிடைச் சொல்.
முந்தினர், அஞ்சினர்-முற்றெச்சங்கள்.
கடுங்கி-செய்து என் வாய்பாட்டு வினையெச்சம்.

## 17. சமணர் எனக் கூறித் தப்பியவர் சிலர்

### உரை

**வரை**-மலைகளையுடைய,
**கலிங்கம் தமை**-கலிங்க நாட்டையும் கலிங்கர்களையும்,
**மாசை**-பெரும் பழியையும்,
**சேர ஏற்றி** ஒன்றாக இணைந்திருக்கச் செய்து,
**வன் தூறு பறித்த**-வலிய புதர்கள் பறித்தன போக,
**குறை மயிரும் வாங்கி**-எஞ்சியிருக்கிற மயிர்களையும் நீக்கி விட்டு,
**அரைக் கலிங்கம்**-இடுப்புத் துணிகள்.
**உரிப்பு உண்ட**-உரித்து எடுக்கப் பெற்றவர்களான,
**கலிங்கர் எல்லாம்**-கலிங்கர்கள் எல்லாரும்,
**அமணர் என**-நாங்கள் சமணர்கள் என்று பொய் கூறி,
**பிழைத்தாரும் ஆங்கே அநேகர்**-உயிர் பிழைத்தவர்களும் அக்கலிங்க நாட்டில் அநேகர் ஆவர்.

### தெளிவுரை

மலைகளையுடைய கலிங்க நாட்டையும் பெரும் பழியையும் ஒன்றாக இணைந்து வாழுமாறு செய்து விட்டு, புதர்களின் வழியாகப் புகுந்தோடும் போது, புதர்களால் பறிக்கப்பட்டவைபோக எஞ்சியுள்ள மயிர்களையும் தாங்களாகவே நீக்கிவிட்டு, இடுப்பில் உள்ள துணியைப் புதர்களால் உரித்து எடுக்கப் பெற்றவர்களான கலிங்கர்கள் எல்லாம் "நாங்கள் சமணர்கள்" என்று பொய் கூறி உயிர் பிழைத்தவர்களும் அங்கே அநேகர்.

### விளக்கவுரை

கலிங்க நாட்டு மக்கள் தம்முடைய நற்செயலால் நாட்டையும் புகழையும் இணைய அமர்த்தி அரசு கட்டில் ஏற்றுவதாக இருக்க, அவ்வாறு செய்யாத இக்கலிங்கர் தம் நாட்டையும் பெரும் பழியையும் ஒன்றாக இணைத்து அரசு கட்டிலில் அமர்த்தினார்கள். உயிர் தப்பியோடும் போது புதர்களில் பட்டுத் தலைமயிர் பிய்ந்து போயின. போனவைபோக எஞ்சியுள்ளவைகளைத் தாங்களே நீக்கி விட்டார்கள். மேலும் புதர்களால் இவர்கள் ஆடை உரிக்கப் பெற்றது. மயிரையும் ஆடையையும் இழந்த கலிங்கர், தம்மைச் 'சமணர்' என்று சொல்லி உயிர் பிழைத்தார்கள்.

சமணர்களில் ஒருவகையினரான திகம்பர சமணர்கள் தலைமயிரைப் பறித்து, ஆடையில்லாது சஞ்சரிப்பவர்கள். அவர்களை மனத்தில் வைத்துக் கூறுகிறார், இவ்வாசிரியர்.

சமயத்துறையைச் சார்ந்தவர்களைத் தமிழர் மதிக்கும் பெருமையை இதனால் விளக்கினார். 'கலிங்கம்' என்ற சொல்லுக்குத் 'துணி' என்ற பொருளும் உண்டு. துணியில்லாத கலிங்கரை "அரைக்கலிங்கம் உரிப்புண்ட கலிங்கர்" என நயம்படக் கூறினார். சமணர்க்கு அமணர் என்ற பெயரும் உண்டு.

கலிங்கர் தமை, மாசை சேர ஏற்றி என முடிக்க. கலிங்கர் எல்லாம் என்றது எல்லாக் கலிங்கரையும் குறிக்கவில்லை. ஆடையையும் மயிரையும் இழந்து நிற்கின்ற எல்லாக் கலிங்கரையும் குறித்தது.

### இலக்கணம்

**வரைக்கலிங்கம்**-இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்க தொகை.
**சேர**-செய வென் வாய்பாட்டு வினையெச்சம்.
**வன் தூறு**-பண்புத் தொகை.
**மயிர்க் குறையும்**-குறைமயிரும்-முன்பின்னாகத் தொக்கது. குறைமயிர்-வினைத்தொகை. 'உம்' இறந்தது தழுவிய எச்சவும்மை.
**அரைக் கலிங்கம்**-ஏழாம் வேற்றுமைத் தொகை.
**பிழைத்தாரும்**-உம்மை-எதிரது தழுவிய எச்சவும்மை.

## 18. வேதியர் என விளம்பிப் பிழைத்தார் சிலர்

### உரை

**வேடத்தால்**-வேடம் போடுதல் என்ற ஒன்றால்,
**குறையாது**-குறைபாடு நேராதவாறு,
**வெம் சிலை நாண்**-கொடிய வில்லின் நாணை,
**மடித்து முந்நூலாக இட்டு**-மடித்துப் பூணூலாகப் போட்டுக் கொண்டு.
**விதியால்**-வேதம் கூறிய விதிப் படி,
**கங்கையாடப் போந்து அகப்பட்டோம்**-கங்கையாற்றில் நீராடுவதற்காகப் புறப்பட்டு வந்து இங்கே அகப்பட்டுக் கொண்டோம்;
**காத்து ஓம்பு**-எங்களைக் காப்பாற்றி வாழுமாறு செய்யுங்கள்,
**என்று**-என்று கூறி,
**அபிதா விட்டு**-கைவிரித்துக் கெஞ்சிக் கேட்டு,
**ஆங்கே**-ஆங்கே,
**அநேகர் உயிர் பிழைத்தார்**-அநேகர் உயிர் தப்பினார்கள்.

### தெளிவுரை

வேடம் போட்டுக் கொள்ளுதல் என்ற ஒன்றாற் குறைபாடு நேராதவாறு கொடிய வில்லின் நாணை மடித்துப் பூணூலாகப் போட்டுக்கொண்டு, "வேதம்கூறியவழிப்படிக்கங்கையாற்றில் நீராடுவதற்காகப் புறப்பட்டு வந்து இங்கே அகப்பட்டுக் கொண்டோம். எங்களைக் காப்பாற்றி வாழுமாறு செய்யுங்கள்" என்று கூறி கைவிரித்துக் கெஞ்சிக் கேட்டு அங்கே அநேகர் உயிர் பிழைத்தார்கள்.

### விளக்கவுரை

வேடம் பொருத்தமாக இல்லாவிடில் சந்தேகம் தோன்றும் என்று கருதி வில்லில் உள்ள நாணை மடித்துப் பூணூலாகப் போட்டுக்

கொண்டார்கள். மூன்று+நூல்=முந்நூல். மூன்று புரிகளை உடையது. அயிதா விடுதல-கைவிரித்துக் கெஞ்சுதல். வேதம் இன்னது செய் என்று கட்டளையிட்டதை-விதித்ததை விதி என்றார்.

### இலக்கணம்

குறையாது-எதிர்மறை வினையெச்சம்,
முந்நூல், வெஞ்சிலை-பண்புத் தொகைகள்
சிலை நாண்-ஆறும் வேற்றுமைத் தொகை.
ஆடப்போந்து-'செய்' என வாய்பாட்டு வினையெச்சம்.
அகப்பட்டோம்-தன்மைப் பன்மை வினை முற்று.
காத்தோம்பு-முன்னிலை ஏவல்.

## 19. சாக்கியர் எனக் கூறிப் பிழைத்தவர் சிலர்

### உரை

**குருதிநீர்**-இரத்த நீரில் தோய்க்கப்பெற்ற,
**கோடி ஆடை**-கொடி முதலியவைகளாலான புதிய ஆடையை,
**குறியாக**-சாக்கியர்கள் என்று தெரிவிக்கும் அடையாள ஆடையாக,
**கொண்டு உடுத்து**-அமைத்து இடுப்பில் உடுத்தியும்,
**போர்த்து**-அதையே மேலாடையாகப் போர்த்தியும்,
**தம் குஞ்சி முண்டித்து**-தம்முடைய தலைமுடியை மழித்துவிட்டுக் கொண்டு,
**உடை கண்டால்**-உடையின் அடையாளத்தைப் பார்த்த ஒன்றினாலேயே,
**சாக்கியரை**-சாக்கியராகிய எங்களை,
**அறியீரோ? என**-அறியமாட்டீர்களோ என்று கூறி,
**அநேகர் அங்கே**-அநேகம் பேர் அவ்விடத்தே,
**அப்பிரமண்ணியம் இடுவார்**-பொய்யான மேற்கோள்கள் காட்டி உறுதிப்படுத்துவார் ஆயினர்.

### தெளிவுரை

இரத்தத்தில் தோய்க்கப் பெற்ற கொடி முதலியவைகளாகிய புதுமை முறையில் அமைந்த ஆடையைச் சாக்கியர்கள் என்பதைத் தெரிவித்தற்குரிய அடையாள ஆடையாகக் கொண்டு இடுப்பில் உடுத்தியும் அதையே மேலாடையாகக் கொண்டு போர்த்தியும் தம்முடைய தலைமயிரை மொட்டையடித்துக் கொண்டும், இவ்வுடை முதலிய அடையாளங்களைக் கண்டதால் சாக்கியராகிய எங்களை அறியமாட்டீர்களோ என்று பொய்யான மேற்கோளைக் காட்டி உறுதிப் படுத்துவார் ஆயினர்.

### விளக்கவுரை

கொடிகளே இவர்களுக்கு ஆடையாயின. கொடியைப் புதிய வகை ஆடையாகக் கொண்டு உடுத்துக் கொண்டார்கள் ஆகையால் கோடியாடை என்ற பொருளையும் தந்தது. கோடி-கொடி என நீட்டல் விகாரம்-இப்பொருளின்படி, போர்க்களத்தில் கிடைத்த இரத்தம் தோய்ந்த கொடிகளே ஆடையாயின என்பது பொருள்; கோடி-புதுமை. கொடியாகப் பயன்பட்டதை ஆடையாகப் பயன் படுத்தியதால் இவ்வாடை புதிய ஆடையாயிற்று.

குறி-அடையாளம். அடையாளத்தினால் எங்களைச் சாக்கியர் என்று அறியமாட்டீரோ எனக் கேட்டார்கள். ஒரே ஆடையை இடையில் கட்டியும் மேலே போர்த்தும் அமைத்துக்கொண்டார்கள். முண்டித்தல்-மொட்டையடித்துக் கொள்ளுதல். குஞ்சி-ஆடவர்களின் தலைமயிர்.

பிரமாண்யம்-வடசொல். அறிவுக்குப் பொருத்தமான எடுத்துக் காட்டுக்களைக் கூறி நிர்ணயிக்கப் பெற்றது. 'அ' அதனுடைய எதிர்ப் பொருள். அறிவுக்குப் பொருத்தமில்லாத பொய்யான எடுத்துக் காட்டுக்களைக் கூறி உறுதிப்படுத்துதல் 'அப்பிரமாண்யம்'. குருதியாடை, தலைமொட்டை அடித்துக் கொள்ளுதல் போன்றவைகளை வைத்துத் தங்களைச் 'சாக்கியர்' என்று நிலைநாட்ட முயலுதல். புத்தரில் ஒரு பிரிவினரைச் சாக்கியர் என்பர்.

### இலக்கணம்

குருதி நீர்-இருபெயரொட்டுப் பண்புத்தொகை.
கோடியாடை-பண்புத்தொகை.
உடுத்துப் போர்த்து-உம்மைத்தொகை.
குஞ்சி முண்டித்து-இரண்டாம் வேற்றுமைத் தொகை.
அறயீரோ-ஓ' வனு இடைச்சொல்.

## 20. தெலுங்கப் பாணர் என்று கூறிப் பிழைத்தனர்

### உரை

**சிலைக் கலிங்கர்**-வில்லைக் கையிலே உடைய கலிங்கர், **தங்கள் ஆனை மணியினை**-தங்களுடைய யானையின் மேற் கிடந்த மணியை எடுத்து, **தாளம் பிடித்து**-தாளமாகப் பிடித்து, **சேனை மடி களங் கண்டு**-படைகள் இறந்து கிடக்கின்ற இப்போர்க்களத்தைப் பார்த்து, **திகைத்து நின்றேம்**-செய்வது அறியாது சோர்வுற்று நின்றேம், **தெலுங்கரேம் என்று**-தெலுங்கர்கள் ஆவேம் என்று கூறி, **பாடி ஆடி**-பாட்டுப் பாடியும் கூத்து ஆடியும், **பாணர் என**-பாணர் என்று தொழிலாற் குறித்துக் காட்டி, **பிழைத்தார் ஆங்கே அநேகர்**-அங்கே அநேகர் பிழைத்துச் சென்றார்கள்.

### தெளிவுரை

வில்லைக் கையிலேயுடைய கலிங்கர் (வில்லின் அமைப்பை மாற்றி அதையே ஒரு கோலாகப் பிடித்துக்கொண்டு) தங்களுடைய யானையின் மேற் கிடந்த மணிகளை எடுத்துத் தாளமாக அமைத்துப் பிடித்து, சேனைகள் மிகுதியும் இறந்து கிடக்கின்ற இப் போர்க்களத்தைக் கண்டு திகைத்து நின்று விட்டோம்; நாங்கள் தெலுங்கு நாட்டைச் சேர்ந்தவராவோம் என்று கூறி, பாடிக் காட்டியும் ஆடிக் காட்டியும் பாணர்கள் என்பதைத் தொழிலாற் புலப்படுத்தி அநேகர் அங்கே உயிர் பிழைத்தனர்.

### விளக்கவுரை

வில்லைக் கோலாகவும் யானை மணியைத் தாளமாகவும் வைத்துக் கொண்டு பாட்டுப் பாடியும் கூத்து ஆடியும் தெலுங்கப் பாணர் என்று கூறி உயிர் பிழைத்தார் பலர்.

போர்க்களஞ் சென்று பாடிப் பிழைப்பது எங்கள் வழக்கமே யாயினும் இவ்வளவு படைகள் இறந்து கிடக்கும் காட்சியை இதுவரை கண்டதேயில்லை யாதலின் திகைத்து நின்று விட்டோம் என்றனர். தெலுங்கர் என்பதைப் பேச்சாலும், பாணர் என்பதை ஆடுதல் பாடுதல்களாலும் உறுதிப்படுத்தித் தப்பிச் சென்றனர்.

### இலக்கணம்

சிலைக் கலிங்கர்-இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்க தொகை.
தெலுங்கரேம்-தன்மைப் பன்மைப் பெயர்.
நின்றேம்-தன்மைப் பன்மை வினைமுற்று.
பாடியாடி-உம்மைத் தொகை.

## 21. ஓவியத்தில் காணப்பட்ட உடல்களே பிழைத்தன.

### உரை

இவர்கள் மேல்-மேலே குறிப்பிட்டவர்களைத் தவிர,
இனி ஒருவர்-வேறு ஒருவரும்,
பிழைத்தார் இல்லை-பிழைத்தார்கள் இல்லை,
எழு கலிங்கத்து-ஏழுவகைப்பட்ட கலிங்கர் நாட்டில்,
சுவர்கள் மேல்-சுவர்களின் மேல்,
ஓவியர்கள் எழுதி வைத்த உடலன்றி-ஓவியர்கள் எழுதி வைத்த உடல்களைத் தவிர,
உடல்கள் எல்லாம்-மற்றை உடல்கள் எல்லாவற்றையும்,
சூரர்-வீரர்களாகிய தமிழர்கள்,
தொட்டு ஈர்த்து பிடித்து-தொட்டு இழுத்துப் பிடித்து,
ஆங்கே அறுத்தார்-அங்கேயே அறுத்து வீழ்த்தினர்.

### தெளிவுரை

மேலே கூறியவாறு வேற்றுருக் கொண்டு பிழைத்தவர்களைத் தவிர வேறு யாரும் உயிர் பிழைக்கவில்லை. ஏழுவகையான கலிங்க நாட்டு மதிற் சுவர்களில் ஓவியர்கள் எழுதிவைத்த உடல்களைத் தவிர வேறு உடல்களாகத் தோற்றங் கொடுத்த எல்லாவற்றையும் அசைத்து, இழுத்து, பிடித்து, சூரர்களாகிய தமிழர்கள் அங்கேயே அறுத்துப் போட்டார்கள்.

### விளக்கவுரை

கலிங்க நாடு ஏழு பிரிவினை உடையது ஆகையால் எழு கலிங்கம் என்றார். பகை நாட்டிலும் தமிழக வீரர்கள் கலையுள்ளங் கொண்டு ஓவியங்களை அழிக்கவில்லை என்று பெருமைப் படுத்தினார். ஆனால் அதே சமயத்தில் கலிங்க நாட்டு ஓவியத்தில் உயிர்ப்புத் தன்மை இல்லை என்பதையும் சுட்டிக் காட்டினார். பிணமெனவே கிடக்கிறார்கள் ஆகையால் தொட்டு அசைத்து, பின் இழுத்து, பிடித்துப் பார்த்து, உயிர் இருப்பதை உணர்ந்த பின்னர் அறுத்து வீழ்த்தினர் என்பதாம்.

ஓவியர்கள் எழுதி வைத்த உடல்-இகழ்ச்சிக் குறிப்பு.

### இலக்கணம்

ஒருவரும்-முற்றும்மை தொக்கது.
எழு கலிங்கம்-ஏழு என்பது எழு எனக் குறுகியது. பண்புத் தொகை.

அன்றி-வினையெச்சம்.
தொட்டு, ஈர்த்து, பிடித்து-செய்து என் வாய்பாட்டு வினையெச்சங்கள்.
அறுத்தார்-இறந்த காலத் தெரிநிலை வினைமுற்று.

## 22. கருணாகரத் தொண்டைமான் வெற்றியுடன் மீண்டு சோழன் அடி பணிதல்.

### உரை

**வண்டையர் கோன் தொண்டைமான்**-வண்டை நகரத்தவர்களுக்கு அரசனான கருணாகரத் தொண்டைமான்,
**கடல் கலிங்கம் எறிந்து**-கடல் சூழ்ந்த கலிங்க நாட்டை அழித்து,
**சயத் தம்பம் நாட்டி**-வெற்றித் தூண்களை நிறுத்தி,
**கடகரியும்**-மதம் ஒழுகுகின்ற யானைகளையும்,
**வய மாவும்**-வெற்றிக் குதிரைகளையும்,
**தனமும்**-செல்வத்தையும்,
**கொண்டு**-எடுத்துக் கொண்டு வந்து,
**சுடர் கதிர் வாள் அபயன்**-ஒளியை வீசும் வாளையுடைய 'அபயன்' என்ற சிறப்புப் பெயரை உடைய குலோத்துங்க சோழனுடைய,
**அடியை**-திருவடிகளை,
**அருளினொடும் சூடினான்**-அவன் கருணையுடன் இணைத்துத் தம் முடிகளிற் சூடிக் கொண்டான்.

### தெளிவுரை

வண்டை நகரத்தவர்களுக்கு அரசனாகிய கருணாகரத் தொண்டைமான் கடல் சூழ்நத கலிங்க நாட்டை அழித்து, அங்கே தமிழர்களுடைய வெற்றித் தூண்களை நிறுத்தி, மதம் பொருந்திய யானைகளையும் வெற்றியையுடைய குதிரைகளையும் செல்வங்களையும் எடுத்துக் கொண்டு வந்து 'அபயன்' என்ற சிறப்புப் பெயரையுடைய குலோத்துங்க சோழனின் திருவடிக்காணிக்கைப் பொருள்களாக வைத்து, அவன் திருவடிகளை அவன் கருணையோடு இணைத்து முடியிற் சூடிக் கொண்டான்.

### விளக்கவுரை

**சயத் தம்பம்**-வெற்றித்தூண்; தோற்ற நாட்டில் வென்ற அரசர் தம வீரம் எவ்வாறு விளைந்தது என்பதைக் கற்றூணில் செதுக்கி, தம் வெற்றிக்கு அறிகுறியாக நாட்டி வைத்தல் மரபு. கருணாகரத் தொண்டைமான் தமிழர் தம் வெற்றியை எழுதிய வெறறித் தூண்களைக் கலிங்க நாட்டில் நிறுத்தினான்.

கலிங்க நாட்டிலிருந்து சோழனுக்குக் கொண்டு வந்த காணிக்கைகள் மதம் ஒழுகும் போர் யானைகள்; வெற்றியமைந்த குதிரைகள்; செல்வங்கள்; தனம் என்பதை முலை எனக் கொண்டு கலிங்கப் பெண்களை அடிமையாக்கிக் கொண்டு வந்தான் என்றும் கூறுவர்.

காணிக்கைப் பொருள்களை வைத்து சோழன் திருவடிகளை வணங்கி அவன் அருள் பெற்றான் என்பதாம். கதிர்த்தல்-வீசுதல்.

### இலக்கணம்

கடற்கலிங்கம், கடகரி-இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்க தொகைகள்.

**கதிர்வாள்**-வினைத்தொகை.
**கடகரியும் வயமாவும் தனமும்**-உம்மை எண்ணும்மைகள்.
**நாட்டி**-செய்து என்னும் வாய்பாட்டு வினையெச்சம்.
**வண்டையர் கோன்**-ஆறும் வேற்றுமைத்தொகை உயர் திணை யாதலின் 'கு'வ்வுருபு கொள்க.

# 7

# வில்லி பாரதம்

(1) **நூலாசிரியர்**—
**பெயர்**-வில்லிபுத்தூர் ஆழ்வார்.
**தந்தையார் பெயர்**-வீரராகவாச்சாரியார்,
**சமயம்**-வைணவம்; திருமாலை வழிபடுங் கடவுளாகக் கொண்ட சமயம்.
**பிறந்த ஊர்**-நடுநாட்டில் உள்ள சனியூர்.
**குலம்** வைணவ அந்தணர் குலம்.
**ஆதரித்தவர்**-வக்கபாகை அரசன் வரபதி ஆட்கொண்டான்.
**புதல்வர்**-வரந் தருவார்.
**காலம்**-கி பி. 15 ஆம் நூற்றாண்டு.

(2) **நூல் வந்த வழி**-வடமொழியில் 'வியாச பகவான்' பாடிய பாரதக்கதைத் தமிழில் பாடிய காரணத்தால் இது வழி நூல். **'அகத்தியபட்டர்'** வடமொழியிற் பாடிய பாலபாரதத்தைப் பெரிதும் துணை கொண்டு இந்நூல் செய்யப்பெற்றது.

(3) **நூலின் எல்லை**-தமிழ் வழங்கும் இடமெல்லாவற்றையும் தனக்குரிய எல்லையாகக் கொண்டது **இதிகாசம்** (காப்பியம்) என்ற நிலையில் பாராட்டப்பெறும் எல்லையை உடையது. நீதிகளைக் கதை வாயிலாக உணர்த்துவதில் தலைசிறந்த தன்மையது இது.

(4) **நூற்பெயர்-வில்லிபுத்தூரார் பாரதம்.** வில்லிபுத்தூராரது பாரதம் என விரியும்; ஆறும் வேற்றுமைத் தொகை. பரதனின் வழி வந்தவர்களுடைய வரலாற்றைக் கூறும் நூலாதலின் 'பாரதம்' எனப் பெயர் பெற்றது. துஷ்யந்தனுக்கும் சகுந்தலைக்கும் பிறந்த பரதனே இவன்; இவன் வழியில் தோன்றிய பாண்டவர், துரியோதனாதியர் வரலாறுகளைக் கூறுவதால் பாரதம்.

(5) **நூலின் அமைப்பு**-இந்நூல் ஆதிபருவம், சபாபருவம், ஆரணியபருவம், விராடபருவம், உத்தியோகபருவம், பீஷ்மபருவம், துரோண பருவம், கன்னபருவம், சல்லியபருவம், சௌத்திகபருவம், என்னும் பத்துப் பருவங்களையுடையதாய் 4410 பாட்டுக்களால் ஆக்கப்பெற்றது. சந்த இன்பம் நிறைந்த பாட்டுக்களைப் பாடுவதில் வல்லராதலால் ஒருவகை மிடுக்கோடுகூடிய கவிகளால் பாரதம் சிறப்புப்பெற்றது. கம்பர் வடமொழிச் சொற்களுக்கேற்ற தமிழாக்கத்தை அளிப்பவர்! ஆனால் வில்லிபாரதத்தில் வடமொழிச் சொல்லும்

தமிழ்மொழிச் சொல்லும் ஒத்துச் சந்த இன்பம் பெருக்கி வருவதைக் காணலாம்.

(6) நூல்நுவலும் பொருள்-பாண்டவர் துரியோதனாதியர்களின் வரலாற்றை எடுத்துக்கூறி நீதி விளக்கம் காட்டுவதே இதன் நோக்கம்.

(7) காலம்-கி. பி. 15 ஆம் நூற்றாண்டு; இற்றைக்கு 500 ஆண்டுகளுக்கு முற்பட்டது.

(8) காரணம்-நடுநாட்டை ஆண்டு வந்த "வக்கபாகை வரபதி ஆட்கொண்டான்" என்ற அரசன், வில்லிபுத்தூராரைத் தன் அவைக்கழைத்துப் பாரதத்தைத் தமிழிற் பாடுமாறு கேட்டுக் கொண்டான். இதுவே வில்லிபுத்தூரார் பாரதம் பாடக் காரணம் ஆகும்.

(9) இடம்-வக்கபாகை. வரபதி ஆட்கொண்டான் அவைக் களத்தில் அரங்கேற்றப்பெற்றது.

(10) பிற பெருமை-இந்தியாவில் நடைபெற்ற சீன ஆக்கிரமிப்பின்போது மக்களுக்கு வீரவுணர்ச்சி உண்டாவதற்காக இவருடைய போர்ச்சந்தப் பாடல்கள் வானொலி மூலம் ஒலிபரப்பப்பெற்றன.

குற்றமுடைய கவிகளைப் பாடினால், பாடியவர்களின் காதுகளை அறுத்து விடுவார் இந்நூலாசிரியர் என்ற வரலாறொன்று காணப் படுகிறது.

வியாசர் இயற்றிய மகாபாரதம், ஐந்தாம் வேதம் என்று சிறப்பித்துக் கூறப்படுவதால், வில்லிபுத்தூரார் பாரதமும் அப் பெருமைக்கு உரியதே ஆகும்.

பாடப் பகுதியாக அமைந்துள்ள பாட்டுக்கள் பாரதத்தில் ஐந்தாம் பருவமாகிய **உத்தியோக பருவத்தில்**, முதல் சருக்கமாகிய **உலூகன் தூதுச் சருக்கத்தில்** அமைந்துள்ளன.

## உத்தியோக பருவம்

பாண்டவர்கள், துரியோதனன் ஆணையின் வண்ணம் பன்னிரண்டு ஆண்டுகள் காட்டு வாழ்க்கையும் ஓராண்டுக் காலம் கரந்துறை வாழ்க்கையும் முடித்து வந்த பிறகு, கண்ணனை அழைத்து, துரியோதனனிடம் தம்முடைய உரிமையைப் பெறுவதற்குச் செய்ய வேண்டுவது யாது என்று கலந்தாலோசித்து, தூது அனுப்பி, முடிவாகப் போர் ஒன்றே வழி என்று துணிந்தனர்; பின் பாண்டவர்களும் துரியோதனாதியர்களும் தங்கள் தங்கள் பக்கத்தில் இருப்பவர்களுக்குப் போர் காரணமாக யார் யாருக்கு என்னென்ன உத்தியோகங்கள் அமைத்தல் வேண்டும் என்பதை அமைத்துக் கொடுக்கும் வரலாற்றைக் கூறும் பகுதி உத்தியோக பருவம் என்ற பெயர் பெற்றது.

## உலூகன் தூதுச் சருக்கம்

உத்தியோக பருவத்தில் முதல் சருக்கம் உலூகனைப் பாண்டவர்கள் கண்ணன் ஆணைப்படித் துரியோதனாதியர்களிடம் தூது அனுப்புவதைக் கூறுவது. சருக்கம் என்ற சொல் ஒரு பெரிய பாகுபாட்டின் சிறு பகுதிக்கு வைக்கும் பெயர்; படலம், கதை என்பவை போல; சருக்கம் என்பதன் பொருள் முடிப்பு அல்லது படைப்பு என்பதாகும்.

## பாடப்பகுதியின் தொகுப்புரை

**முன்னுரை**

பாண்டவர்கள் பன்னிரண்டு ஆண்டுகள் காட்டு வாழ்க்கையையும் ஓராண்டுக் காலம் கரந்துறை வாழ்க்கையையும் முடித்துவிட்டு வந்தபின் கண்ணன், பலராமன் ஆகியோர்களையும் மற்றுமுள்ள அரசர்களையும் அழைத்து, பாண்டவர்களுள் மூத்தவரான தருமர், தம்பியர்களும் உடனிருக்க, நாடு பெறுவது எவ்வாறு? என்பது பற்றிக் கலந்து பேசினர்.

**கண்ணன் கூறியது**

மலையைத் தூக்கி மழையிலிருந்து காத்தவனான கண்ணன் சூதாட்டத்தினால துரியோதனன் கவர்ந்து கொண்ட நாட்டினை மறுபடியும் அச்சூதாட்டத்தினாலேயே வென்று அடைவது தகுதியேயன்றி, வில்லினால் போர் செய்து பெறுவது என்பது அரச நீதியாகாது; ஆகையால் துரியோதனனுடைய கருத்து எவ்வாறு என்பதை ஒரு தூது அனுப்பித் தெரிந்து கொள்ளலாம் என்று கூறினான்.

**பலராமன் கூறியது**

கண்ணன் கூறியதைக் கேட்ட அவன் அண்ணன் பலராமன் "துரியோதனன் அன்று அரசவையிற் கூடியிருந்த பலரும் காணும்படி பெரியதும் வன்மை வாய்ந்ததும் ஆகிய சூதாட்டத்தினால் தருமனை வென்று, தனக்கு உரிமையாககிககொண்ட நாட்டைப பல ஆண்டுகள் தனக்கு உரிமையுடைய நாடாக ஆண்டு வந்தான். அவனுக்குரிய நாட்டை அவனிடமிருந்து வலிநது பற்றிக் கொள்ள எண்ணும் இந்தக் கெட்ட புத்தி மிகவும் கொடுமையானது" என்று கூறினான்.

**சாத்தகி கூற்றும் கண்ணன் சமாதானமும்**

பலராமன் வார்த்தையைக் கேட்ட தம்பி சாத்தகி அண்ணனாகிய பலராமனை நோக்கி, உங்களுடைய இதயம் மிகவும் கருமையுடையது என்றாலும் உங்கள் நாக்கிலிருந்து வெளிப்படும் வார்த்தை உங்கள் உடம்பைவிட மிக வெள்ளையாக இருக்கின்றதே என்று அவன் வருந்துவதற்குக் காரணமான வார்த்தைகளைக் கூறினான். (பலராமனுடைய உடல் வெள்ளையாக இருக்கும். வார்த்தையில் வெண்மை என்பது அறிவில்லாத சொற்கள என்பது கருத்து.)

இதைக் கேட்ட கண்ணன் நீங்கள் இருவரும் உங்கள் கட்டுரைகளை விட்டு விடுங்கள் எனறு கூறி அவர்களைச் சமாதானப்படுத்தி விட்டு, 'உலூகன்' என்ற அந்தணனை அழைதது, "இப்பாண்டவர்களின் கருததைத் திருதராட்டினனிடம் எடுத்துச் சொல்லி அவர்கள் கருத்தினை அறிநது மீள்க" என்று சொல்லித் துவாரகை சென்றான்.

**அரசர்கள் விடை பெறுதலும் உலூகனை அனுப்புதலும்**

கண்ணன் சென்ற பிறகு ஏனைய அரசர்கள், முரசக் கொடியுடையோனாகிய தருமனை நோக்கி, இவ்வந்தணன் சென்று தூது சொல்லிய பின் அவன் உமது நாட்டைத் தருவதற்கு உடன்படான் ஆனால் எங்களுக்குத் திருமுகம் அனுப்புங்கள என்று சொல்லிவிட்டு அவரவர் ஊர் போய்ச் சேர்ந்தனர்.

அரசர்கள் போன பிறகு திருமாலான கண்ணன் கூறிச் சென்ற கட்டளை தவறாத வகையில், உலூக முனிவனை நோக்கி, தருமர், 'தாங்கள் அத்தினபுரம் சென்று வீடுமன், திருதராட்டிரன், விதுரன், துரோணா ஆகியோர்களின் திருவடிகளை வணங்கினேம் என்று கூறி, பின்னர் இச்செய்தியைச் சொல்லி அருள்வீராக' என்று அனுப்பி வைத்தான்.

### உலூகன் தூதுரை

நான்மறை வல்லவனும் ஞான முனிவனும் ஆன உலூகன் அத்தினபுரி அரசவையை அடைந்ததும், பாம்புக் கொடியோனை துரியோதனன் உலூகனை எதிர்கொண்டழைத்து வணங்கி ஓர் இருக்கையில் அமரச் செய்தான். வீடுமன் முதலியோர் வணங்கினர். வந்தவாறு என்? உரைத்தருள் என்றனர், உலூகன் தருமருடைய வணக்கங்களை அவர் சொன்னவாறே முதலிற் கூறிவிட்டு, திருதராட்டிரன், அவனுடைய பிள்ளைகளாகிய துரியோதனன் முதலானோர், கன்னன், சகுனி ஆகியோர் மனம் கொதிக்குமாறு செய்திகளைச் சொல்லலானான்.

(1) பன்னிரண்டாண்டுகள் காட்டில் வாழ்ந்து, யாரும் அறியா வகை ஓராண்டு கரந்துறைந்து, பாண்டவர் ஐவரும் வெளிப்பட்டார். முன்னே எல்லா அரசர்களுக்கும் முன்பாகச் சூதாடி அவர்கள் தோற்றதால் நீங்கள் பெற்று ஆண்டுவரும் நாட்டை உங்கள் மொழிப்படி அவர்கட்குக் கொடுப்பீர்களா? மாட்டீர்களா?

(2) வளம் பொருந்திய நாட்டை உடையவர்களே! முன்னே நீங்கள் பொருது வென்றது சூதுபோர். இப்பொழுதும் மோது போர் கருதாமல், சூதுபோர் கருதியே முடிவு செய்ய வேண்டும் எனில் சூது பொருதலை மேற்கொள்ளலாம். வேறுபாடு தோன்றாது; முன்னைப்போலவே செல்வமும் பெருகும்.

(3) அவ்வாறன்றி, பாண்டவர்களோடு போர் கருதிச் சண்டை செய்வோம் என்றால் உங்களால் அவர்களை வெல்லுதல் முடியாது. வீமனும் அர்ச்சுனனும் களத்திற் புகுந்தால் அனைவரும் அழிந்து போவீர்; முனிவர் சொல் பொய்யாகுமா? ஆகாது. இவையே உலூகன் கூறியன

### துரியோதனன் சினப் பேச்சு

உலூகன் கூறிய வார்த்தையைக் கேட்டதும், துரியோதனன் "இருந்த இடத்தில் இருந்து கொண்டு பூனையைப் போலப் பேசுதல் யார்க்கும் ஆண்மையாகாது. இருவருடைய ஆண்மையையும் தோள் வலிமையையும் போரிற் காணலாம்" என்று கூறினான்.

### விதுரன் கூறிய அறிவுரை

விதுரன் துரியோதனனைப் பார்த்து, இவ்வேதியனுடைய சொற்படி நீ பாண்டவர்க்குரிய நாட்டினைக் கொடாமல், அறிவில்லாதவர்கள் சொல்லும் சொல்லினைக் கேட்டு நடப்பாயாயின், திருமகள் உன்னை விட்டு நீங்குவாள்; உன்னுடைய சுற்றமும் சேனையும் கெட்டொழியும் என்று கூறினான்.

**துரோணனும் கிருபனும் கூறியவை**

துரியோதனா! நீ வாய்மை தவறி, மற்றவர்களோடு சேனை வலிமை ஆகியவைகளைக் கொண்டு போர் செய்ய எண்ணுவது பெரும் பிழை. அவ்வாறு போர் செய்வையேல் அர்ச்சுனனுடைய வில்லிலிருந்து வரும் அம்புகள் தைக்கும் வழிகளிலிருந்து இரத்தம் தான் பெருகும் என்று துரோணன் கூற, கிருபனும் அவை போன்ற வற்றையே கூறினான்.

**வீடுமன் திருதராட்டிரனைப் பார்த்துக் கூறுதல்**

வீடுமன் கோபங்கொண்டு திருதராட்டிரனை நோக்கி, காட்டில் வாழ்ந்து வந்த உன் புதல்வர்களாகிய பாண்டவர்களுக்கு வரையறை செய்யப்பெற்ற காலமோ கழிந்து விட்டது. அவ்வாறிருந்தும் நாட்டைக் கொடுக்காமல் வெம்மையான போரினைச் செய்ய நீ விரும்பினை யெனில் நாளை நடைபெறப் போகும் போர்க்களத்தில் அருச்சுன னுக்கு எதிராக எவர் வில்லை வளைக்க வல்லவர்? என்று கூறினான்.

**கன்னன் வீடுமனைப் பழித்துக் கூறியவை**

கங்கையின் மகனாகிய வீடுமன் சொன்னவைகளைக் கேட்ட கன்னன் வெகுண்டு, நகம் இழந்த புலியைப் போல முன்னமேயே இராமபிரானால் வலிமை இழந்த பரசுராமனைப் பின்னர் அவனிடம் கற்றுக் கொண்ட வில் வித்தையாலேயே வென்றாயல்லாமல் வேறு என்ன வலிமை உனக்குள்ளது? என்ன வலிமையைக் கொண்டு நீ மற்றவர்களை இகழ்ந்துரைப்பது? என்று கண் சிவந்து உரை செய்தான்.

**கங்கை மகனாகிய வீடுமன் கன்னனை இகழ்ந்து கூறியவை**

கன்னன் கூறிய வார்த்தைகளைக் கேட்ட வீடுமன் சீற்றங் கொண்டு நீ விளைத்த வெற்றிகள்தாம் எவ்வளவு! எவ்வளவு!! திரௌபதி அருச்சுனனுக்கு மாலை சூட்டிய நாளில் நீ தானே அருச்சுனனோடு போர் செய்து அவனை வென்றவன்! அது மட்டுமா! துரியோதனனைச் சித்திரசேனன் முதலிய கந்தருவர்கள் கட்டித் தூக்கிக் கொண்டு ஆகாய வழியாகச் செல்லும்போது அவர்களைத் தடுத்து, துரியோதனனைப் பீமன் சிறை மீட்டானே; அன்று நீதானே சித்திரசேனனோடு போர் தொடுத்து அவனை வென்றவன்!

அறியாப் பருவத்தினை உடைய உத்தரகுமாரன் நேற்று, தேரைச் செலுத்த அருச்சுனன் பசுக்கூட்டங்களை மீட்டுச் சென்ற போது, அப்போரில் நீ நெடுநேரம் நின்றிருந்தவனல்லவா? நாளை கண்ணனே தேர் விட, போர் மூண்டு நடைபெறும்போது, அவ் விசயனை இப்படிப்பட்ட உன்னையல்லாமல் வெல்வதற்கு இனி யார் இருக்கிறார்கள்? என்று எள்ளி நகையாடினான்.

**துரியோதனன் மறுத்துக் கூறுதல்**

கங்கை மகனாகிய வீடுமன் இவ்வாறு கூற, அவற்றை மதிக்காமல் இரு கைகொட்டி நகைத்து கன்னன் கூறிய வார்த்தைகளை விரும்பிக் கொண்டாடி, தூதாக வந்து அருகில் அமர்ந்திருந்த அந்தணனையும் அவமதித்து "இப்பூமி எனதே; இதுகாறும் தங்கியிருந்த கானகமே அவர்களுடையது" என்று கூறினன்.

முடிவு

இவைகளையெல்லாம் கண்டும் கேட்டும் இருந்த உலூக முனிவன் திரும்பிச் சென்று பாண்டவர்களுக்கு இங்கே நடைபெற்றவைகளைக் கூறினன்.

## 1. கண்ணன் துரியோதனனிடம் தூது அனுப்ப வேண்டும் எனல்

### உரை

**கல்லினால்**-கோவர்த்தனம் என்ற மலையினால்,
**வருகல் முகில்**-இந்திரன் ஏவலால் மேன்மேல் பெருகி வருகின்ற கல் மழையை,
**விலக்கிய**-விலகச் செய்து, அதிலிருந்து ஆய்ப்பாடியைக் காத்த,
**கரிய மாமுகில்** - கருமையையும் பெருமையையும் உடைய மேகம் போன்றவனாகிய கண்ணன்,
**வல்லினால் அவன் கொண்ட மண்**-சூதாட்டத்தினால் துர்யோதனன் கைப்பற்றிய நாட்டினை,
**மீளவும்**-மறுபடியும்,
**வல்லினாற் கொளல் அன்றி**-சூதாட்டத்தின் மூலமாகவே அல்லாமல்,
**வில்லினால் அமர் மலைந்து** - வில்லினாற் போர் செய்து,
**கொள்ளுதும் எனல்** - கொள்ளுவோம் என எண்ணுதல்,
**வேத்து நீதியது அன்று**-அரச நீதியாக அமையாது,
**ஒரு தூதினில்**-ஒரு தூதுவன் மூலமாக,
**சொல்லினில்**-சொன்னால்,
**சுயோதனன்** - துரியோதனனுடைய,
**நினைவு அறியலாம்** - கருத்தை அறியலாம்,
**என்று சொன்னான்**-என்று பாண்டவர் கூட்டிய அவையில் எடுத்துக் கூறினன்.

### தெளிவுரை

இந்திரன் கோபங்கொண்டு ஆணையிட்ட காரணத்தால் மேன்மேற் பெருகி வருகின்ற கல் மழையை கோவர்த்தனம் என்னும் மலையைத் தூக்கிப் பிடித்து அதனால் விலகச் செய்து, அதிலிருந்து ஆய்ப்பாடியைக் காத்தவனும் கருமையையும் பெருமையையும் உடைய மேகம் போன்றவனும் ஆகிய கண்ணன், சூதாட்டத்தினால் துரியோதனன் கைப்பற்றிய நாட்டை மீண்டும் சூதாட்டத்தின் மூலமாகவே பெறுவது அல்லாமல் வில்லினாற் போர் செய்து கொள்ளுவோம் என்று எண்ணுதல் அரச நீதியன்று; ஆகையால் ஒரு தூதுவன் மூலமாக நம் கருத்தை எடுத்துக் கூறினால் துரியோதனனுடைய கருத்தை அறியலாம் என்று பாண்டவர் அவையிற் கூறினன்.

### விளக்கவுரை

கல்-மலை, கோவர்த்தனம் என்பது பெயர். ஆய்ப்பாடி மக்கள் கோவர்த்தனம் என்னும் மலையருகிற் சென்று பூசை செய்து இந்திரனுக்கு விழா எடுத்து, அவனை மகிழ்வித்து மழை வளம் பெறுதல் வழக்கம். கண்ணன் ஒருமுறை அத்தகைய விழாவில் இந்திரனுடைய மகிழ்ச்சிக்காகச் செய்யப்பெற்ற உணவு வகைகளைத் தானே அருந்தி விட்டான். கோபங்கொண்ட இந்திரன் நீர்மழையைக் கல்மழை

யாகப் பெய்து ஆய்ப்பாடி முழுவதையும் அழிக்குமாறு ஏவிவிட்டான். அப்போது கண்ணன் 'கோவர்த்தனம்' என்ற மலையையே தூக்கிக் குடையாகப் பிடித்து, அக் கல்மழையை விலக்கி ஆய்ப்பாடியைக் காத்தான் என்பது கல்லினால் வரு கன்முகில் விலக்கிய கரிய மாமுகில் என்ற வரியில் அமைந்த வரலாறு. முகில்-மேகம்;மேகம் போன்றவன் கண்ணன்.

வல்-சூதாடு கருவி; வில்-போராடு கருவி. வற்போரினால் கைக்கொண்ட நாட்டை வற்போரினாலேயே பெறவேண்டும்; விற்போரினாற் பெறல் அரச நீதியன்று; ஆகையால் ஒரு தூதுவன் மூலம் நம் கருத்தை அவர்களுக்குச் சொன்னால், அவன் கருத்தை அறியலாம் என்று கண்ணன் கூறினான்.

முள்ளை முள்ளால் எடுத்தல் போன்று, கோவர்த்தனகிரியால் வந்த மழையைக் கோவர்த்தனகிரியாலேயே விலக்கியவனாகிய கண்ணன் சூதாட்டத்தினால் கைக்கொண்ட நாட்டைச் சூதாட்டத்தினாலேயே பெறுதல்முறை என்று சொன்னான் என்பது இசசெய்யுள் தரும் நயம்.

### இலக்கணம்

**முகில்**-மேகம், மேகம் பொழியும் **மழையைக் குறித்தது**. கருத்தாவாகுபெயர்.
**கன்முகில்**-கல்லைப்போன்ற மழை—உவமைத் தொகை.
**மாமுகில்**-அடையடுத்த உவமவாகுபெயர்; கண்ணன்.
**வல்**-கருவியாகுபெயர்.
**கொளல்**-தொழிற்பெயர்.
**கொள்ளுதும்**-தன்மைப்பன்மை வினைமுற்று.
**எனல்**-தொழிற்பெயர்.
**வேத்து**-(வேந்து) வலித்தல் விகாரம்.
**தூதினில்**-'இல்' ஐந்தாம் வேற்றுமை ஏதுப்பொருள்.
**நினைவு**-தொழிற்பெயர்.

## 2. 'துரியோதனனிடம் நாட்டைக் கேட்பது தகுதியன்று' எனப் பலராமன் கூறுதல்

### உரை

**கரியவன் புகல் கட்டுரை**-கருமை நிறத்தவனான கண்ணன் கூறிய சொற்களை,
**கேட்டபின்**-கேட்ட பிறகு,
**பரியவன்**-பெருமை உடையவனாகிய துரியோதனன்,
**உதிட்டிரன் தனை**-தருமனை,
**அவண் உற்றவர் பலர் காண**-அன்று அரசசபையிற் பொருந்திய பலரும் காணுமாறு,
**பெருஞ் சூதினால் வென்று**-பெரிய சூதாட்டத்தில் வென்று.
**உரிய அம் புவி**-தருமனுக்கு உரிய அழகிய பூமியை,
**அடிப்பட**-தனக்கு அடிமை உடையதாக இருக்குமாறு,
**பல்லாண்டு ஆண்டான்**-பல ஆண்டுகள் ஆட்சி செய்து வந்துள்ளான்,
**திரிய**-அத்தகைய நாட்டினை இப்போது மாறுபடும்படி,
**வன்புடன்**-வலிமையோடு,
**வாங்குதற்கு எண்ணும்**-கவர்ந்து கொள்வதற்கு நினைக்கின்ற,
**இத்தீமதி கொடிது என்று**-இந்தத் தீய எண்ணம் கொடுமையுடையது என்று,
**காமபாலனும்**-பலராமனும்,
**சொன்னன**-சொன்னான்.

### தெளிவுரை

கண்ணன் கூறிய வார்த்தைகளைக் கேட்டபிறகு, "பெருமை உடையவனான துரியோதனன் தருமனை அன்று அரச சபையிற் பலரும் காணுமாறு பெரிய சூதாட்டத்தால் வென்று தருமனுக்கு உரிய அழகிய பூமியைத் தனக்கு அடிமை உடையதாக இருக்குமாறு பல ஆண்டுகள் ஆட்சி செய்து வந்துள்ளான்; அத்தகைய நாட்டினை இப்போது மாறுபடும்படி வலிமையோடு கவர்ந்து கொள்ளுதற்கு நினைக்கின்ற இந்தத் தீய எண்ணம் கொடுமையுடையது" என்று பலராமன் கூறினான்.

### விளக்கவுரை

**பரியவன்**-பெருமையுடையவன். துரியோதனன் மூன்று வகைப் பெருமை உடையவன். (1) எச்சில் உணவு கொள்ளாதவன்; (2) தன்னை நம்பி இருப்பவர்களைத் தன் அளவுக்குப் பெருமையுடையவனாக ஆக்குபவன்? (3) நட்பின் இலக்கணத்துக்கு எல்லையாக நின்றவன். மனைவியின் மேகலை, கர்ணனால் அறுந்து விழுந்தபோது எடுக்கவோ, சேர்க்கவோ என்றவனல்லவா!

பெருஞ் சூது என்றான் பலராமன். சூது எல்லாரையும் ஏமாற்றும் ஆற்றல் உடையதாயினும், சூதாட்டமும் திகைக்குமாறு சகுனியால் ஆடப்பெற்றது ஆதலின் சகுனியால் ஆடப்பெற்ற அந்த ஆட்டத்தைப் பெருஞ்சூது என்றார். சூதாட்டம் இயல்பாகவே முதலில் கொஞ்சம் தருவது போலக் காட்டிப் பின் எல்லாவற்றையும் இழப்பதற்குக் காரணம் ஆக இருக்கும். ஆனால் தருமனுக்கு அது கொஞ்சங் கூடக் கொடுக்கவில்லை. தொடக்கத்திலிருந்து இறுதிவரை தோல்வியே தந்தது. ஆதலின் பெருஞ்சூது என்றார். தீமையானது அறத்தை வெல்வது எக்காலத்தும் இல்லை எனபதை மாற்றி, தருமனையே நேர் நின்று வென்ற பெருமையுடையது ஆதலின் பெருஞ்சூது என்றார். மேலும் பலராமனுக்குச் சூதாட்டத்தில் விருப்பம் அதிகம். அதனாலும் அவ்வாறு கூறினான் எனலாம். பலராமன் துரியோதனனுக்குக் கதாயுதப் பயிற்சியை அளித்தவன்; அவனிடம் மிகுந்த அன்புடையவன். தன் விருப்பத்தை இரண்டு காரணங்களால் வலியுறுத்துகிறான். (1) எல்லாரும் காணுமாறு சூதாட்டத்தில் தோற்றது. (2) பல ஆண்டுகள் துரியோதனனுக்கு உரிமையுடையதாயிருந்தவொன்றை வலிமையாற் கவர எண்ணுதல் தகாது என்பது.

**காமபாலன்**-அடியவர்கள் எதை விரும்புகிறார்களோ அதைப் பாதுகாப்பவன்; இவன் கண்ணனின் தமையன் என்பர்; திருமாலின் எட்டாவது அவதாரம். 'கிருஷ்ண பலராமர்' என்றே அழைக்கப் பெறுவர்.

### இலக்கணம்

**உற்றவர்**-வினையாலணையும் பெயர்.
**கரியவன், பரியவன்**-பண்படியாகப் பிறந்த பெயர்ச் சொற்கள்.
**காண**-செயவென் வாய்பாட்டு வினையெச்சம்.
**பெருஞ்சூது**-பண்புத்தொகை.
**தீமதி**-பண்புத்தொகை.
**கொடிது**-குறிப்பு வினைமுற்று.

## 3. சாத்தகி பலராமனை மறுத்தல்

### உரை

**இளைய சாத்தகி**-பலராமனுக்கும் கண்ணனுக்கும் இளையவனாகிய சாத்தகி எனபவன,
**தமையனை**-அண்ணனாகிய பலராமனை நோக்கி,
**மிகக் கரிது இதயம் ஆயினும்**-உன்னுடைய இதயம மிகக கருமை உடையதே ஆனாலும்,
**நாவில் விளையும் மாற்றம்** - உனது நாக்கிலிருந்து தோன்றி வெளிப்பட்ட வார்த்தை,
**நின் திருவடிவினும் மிக வெள்ளையாகியது** - உன்னுடைய உடம்பைக காட்டிலும மிக வெள்ளையாக இருக்கிறது,
**என்ன**-என்று இவ்வாறான,
**உளைய வார்த்தைகள்** - மனம் துன்புறும்படியான வார்த்தைகளை,
**உரைத்தனன்**-கூறினான்;
**உரைத்தலும்**-கூறியவுடன்,
**உற்றவர் இடுக்கண்கள் களையும்**-பொருந்தியவர்களுடைய துன்பங்களை நீக்கும்,
**மா புயல்**-பெரிய மேகம் போன்ற வனாகிய கண்ணன்,
**இனி**-இப்பொழுது,
**இருவரும்**-நீங்கள இருவரும்,
**நும் கட்டுரை ஒழிமின்** - உங்களுடைய பேச்சுககளை நிறுத்துங்கள்,
**என்றான்**-என்று கூறினான்.

### தெளிவுரை

பலராமன் கூறியவைகளைக் கேட்ட, இளையவனான சாத்தகி, தமையனை நோக்கி, "உன்னுடைய மனம் மிகக் கடுமையுடையது என்றாலும் நாக்கிலிருந்து தோன்றி வெளிப்பட்ட வார்த்தை உன் உடம்பைவிட வெள்ளையாக இருககிறது" என்று மனம் துன்புறும் படியான வார்த்தைகளைக் கூறினான். உடனே தன்னை அடைந்தவர்களின் துன்பங்களை நீக்கி அருளுகின்ற பெரிய மேகம் போன்றவனாகிய கண்ணன், இப்பொழுது நீங்கள் இருவரும் உங்களுடைய பேச்சுக்களை நிறுத்துங்கள் என்று கூறினான்.

### விளக்கவுரை

யது குலத்தைச் சார்ந்த சாத்தகி பலராமனுக்கும் கண்ணனுக்கும் இளையவனும் தன்மையுடையவன் ஆகையால் **இளைய சாத்தகி** என்றார். சாத்தகி பலராமனை நயம்பட இழித்துக் கூறுகிறான். பலராமனுடைய உடல் வெள்ளையாக இருக்கும். கருமையான உள்ளத்தோடு கூடிய உடம்பு வெள்ளையாக இருக்கிறது; அவ்வாறே உன்னுடைய கரிய இதயத்திலிருந்து வெளிப்பட்ட வார்த்தைகள் உன் வடிவத்தைவிட வெள்ளையாக இருந்தன என்பதாம்.

உடலால் அழகாகவும் உள்ளத்தால் கொடியவராகவும் இருப்பவரைத் திருக்குறள் "**புறங்குன்றி கண்டனையரேனும் அகங் குன்றி, மூக்கிற் கரியார் உடைத்து**" என்று கூறும். அதை உள்ளத்தில் கொண்டு '**மிகக் கரிது இதயமாயினும்**' என்று குறிப்பிட்டார். **மாற்றம் நின் திருவடிவினும் மிக வெள்ளையாகியது**—என்பது இகழ்ச்சிக் குறிப்பு. வெள்ளை என்ற சொல்லுக்கு அறிவற்ற வெற்றுச் சொல் என்பது பொருள். **மாபுயல்**-கரியமேகம். இங்கே கண்ணனைக் குறித்தது. மழையானது தன்னைச் சார்ந்த உயிர்களினுடைய வெம்மையைத் தணித்து அவைகளின் உணவுக்கும் ஒழுக்கத்துக்கும்

காரணமாக அமைவது போன்று உயிர்களுக்குக் கருணையாகிய மழையை வழங்கிக் காக்கும் திருமாலாகிய கண்ணனைப் புயலுக்கு உவமையாக்கினார். மா-பெருமை. கண்ணன் மக்களுருவத்தில் வந்து வாழ்ந்து காட்டித் திருத்துவதோடு, மழையைப் போலப் பொதுவாகப் பெய்யாமல் வரிசையறிந்து வழங்குகின்றான். ஆதலின் **பெருமை** என்ற அடை கொடுத்தார்.

### இலக்கணம்

**கரிது**-குறிப்பு வினைமுற்று.
**எனை, உளைய**-பெயரெச்சங்கள்.
**மாப்புயல்**-அடையடுத்த உவம வாகுபெயர்.
**ஒழிமின்**-முன்னிலை ஏவற்பன்மை வினைமுற்று.

## 4. உலூக முனிவனைத் தூது போகுமாறு பணித்துக் கண்ணன் துவாரகை அடைதல்

### உரை

**ஓர் உலூகலம் உடன் தவழ்ந்தவன்**-ஒரு உரலுடன் தவழ்ந்து சென்றவனாகிய கண்ணன்,
**சீர் உலூகனை**-தூது செலலுவதற் கேற்ற சிறப்புக்கள் பலவற்றையும் உடைய உலூக முனிவனை,
**பேர் உலூகமும்**-பெயர் பெற்ற உயர்ந்த சாதி ஆண் குதிரையும்,
**பிணையும்**-அவ்வாறே அமைந்த பெண் குதிரையும்,
**கல்கிய**-இணைந்து பெற்ற.
**பெரும் பிறப்பு உடை பரி**-உயர் சாதிப் பிறப்பை உடைய குதிரைகள்,
**திண்தேர்**-வலிமை வாய்ந்த தேர்கள்,
**கார் உலூகலம் நிகர் அடி களிறு**-கருமையான உரல் போன்ற கால்களையுடைய யானை;
**உடை**-ஆகியவைகளை உடைய,
**கண் இலா அரசன் பால்**-பிறவிக் குருடனாகிய திருதராட்டிரனிடத்தே,
**தூது சென்று**-நீ தூதாகச் சென்று,
**இவர் மனம் செப்பி**-இப் பாண்டவர்களுடைய கருத்தினை எடுத்துச் சொல்லி,
**மீள்க**-துரியோதனன் கருத்தை அறிந்து வருக,
**என**-என்று சொல்லி,
**போக்கி**-அவ்வுலூகனை அத்தினபுரிக்கு அனுப்புமாறு செய்துவிட்டு,
**தனது ஊர் புகுந்தனன்**-தன்னுடைய ஊராகிய துவாரகையை அடைந்தான்,
(**அன்று, ஏ**-அசை நிலைகள்.)

### தெளிவுரை

ஒரு உரலுடனே தவழ்ந்தவனாகிய கண்ணன் தூது செல்லுவதற் கேற்ற சிறப்புக்கள் பலவற்றையும் உடைய உலூக முனிவனை நோக்கி, உயர்ந்த சாதியைச் சேர்ந்த ஆண் பெண் குதிரைகள் இணைந்து பெற்றமையால் உயர்சாதி எனப் பெறும் குதிரைகளையும் வலிமையான தேர்களையும், கருமையான உரல்போன்ற கால்களை யுடைய யானையையும் உடைய பிறவிக் குருடனாகிய திருதராட்டிரனிடத்தே நீ தூதாகச் சென்று இப்பாண்டவர்களுடைய கருத்தினை எடுத்துக் கூறி, துரியோதனன் கருத்தை அறிந்து வருக என்று

சொல்லி, அவ்வுலூகனை அத்தினபுரிக்குத் தூதாக அனுப்புமாறு செய்து, தன்னுடைய ஊராகிய துவாரகையை அடைந்தான்.

### விளக்கவுரை

கண்ணன் ஆய்ப்பாடியிற் குழந்தையாய் வளருங்காலத்தில் பல குறும்புத்தனங்களைச் செய்வான். தாயாகிய யசோதை அவனை ஒரு நாள் உரலிலே கட்டிப் போட்டாள். கண்ணன் உரலையும் இழுத்துக் கொண்டே தவழ்ந்து சென்று தோட்டத்தில் இருந்த இரண்டு மருத மரங்களுக்கு நடுவே போனான். உரல் இரண்டு மரங்களுக்கு நடுவே சிக்கிக் கொண்டது. கண்ணன் விரைந்து இழுக்கவே, இரண்டு மரங்களும் கீழே விழுந்தன. நாரதர் சாபத்தால் மரங்களாய் இருந்த நளகூபரன், மணிக்கிரீவன் ஆகிய இருவரும் சாபம் நீங்கிச் சென்றனர் என்ற வரலாற்றை அடிப்படையாகக் கொண்டது **ஓர் உலூகலம் உடன் தவழ்ந்தவன்'** என்ற தொடர்.

திருதராட்டிரன் குதிரைப்படை, தேர்ப்படை, யானைப்படை, களை உடையவன் என்று கூறினர். **பரி உலூகம்** என்ற சொற்கள் குதிரையை உணர்த்தின. உயர்ந்த சாதி ஆன பெண் குதிரைகளுக் குப் பிறந்த குதிரை என்பதை **''பேர் உலூகமும் பிணையும் நல்கிய பெரும் பிறப்புடைப் பரி''** என்பதால் உணர்த்தினர்.

**பேர் உலூகம்**-பெருமை; சாதிப் பெருமை. **பிணை**-பெட்டை. உயர் சாதிப் பெண் குதிரை.

**உலூகலம்**-உரல். யானையின் கால்கள் உரல்களைப் போல இருக்கும்.

**கண் இலா அரசன்**-திருதராட்டிரன். துரியோதனன் தந்தை.

### இலக்கணம்

**பேர் உலூகம்**-பண்புத்தொகை.
**திண்தேர்**-பண்புத்தொகை.
உலூகலம் **நிகர்**-உவமையுருபு.
கண் இலா அரசன்-ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.
அரசனபால்-ஏழாம் வேற்றுமை உருபின் பொருள்பட வந்த சொல்.
**செப்பி**-செய்து என் வாய்பாட்டு வினையெச்சம்.
**மீள்க**-வியங்கோள் வினைமுற்று.
**மீள்க+என**-மீள்கென, 'அ'கரம் தொக்கது.
**தவழ்ந்தவன்**-வினையாலணையும் பெயர்.
**புகுந்தனன்**-உயர்திணை யாண்பாற் படர்க்கை ஒருமைத் தெரிநிலை வினைமுற்று.
**அன்று, ஏ**-அசை நிலைகள்.

## 5. திருதராட்டிரன் நாடு தந்திலனுயின் தெரிவிக்க எனக்கூறி அரசர்கள் புறப்படுதல்

### உரை

| | |
|---|---|
| **அம் தண் மா முரச கேதன** - அழ சிய குளிர்ச்சியமைந்த பெரிய | முரசக் கொடியை உடைய தருமனே! |

**இந்த அந்தணன்** - இந்த அந்தணனாகிய உலூக முனிவன்,
**நீ இசைத்த எலாம்** - நீ சொல்லிய செய்திகள் எல்லாவற்றையும்,
**இனிது ஆக** - உவப்பு ஏற்படும் வண்ணம்,
**அந்த அந்தனோடு** - அந்தக் கண்ணிலாக் குருடனாகிய திருதராட்டிரனோடு,
**உரைத்தபின்** - சொல்லிய பிறகு,
**அவன்**-அத்திருதராட்டிரன்,
**நினது அவனி** - உனக்கு உரிமையாகிய நாட்டை,
**தந்திலன் ஆகில்** - கொடுத்திலன் ஆனால்,
**திருமுகம் முந்த வரவிடுக** - அச்செய்தி எழுதப் பெற்ற ஓலையைத் துரியோதனன் எங்களுக்கு அனுப்புவதற்கு முன்னதாக அனுப்புக,
**என்று**-என்று சொல்லிவிட்டு,
**வந்த அந்த மன்னர்களும்**-அங்கே வந்திருந்த அந்த அரசர்களும்,
**தத்தம் மா நகர்**-தங்கள் தங்களுடைய பெரிய நகரத்தை,
**அடைந்தனன்** - சென்று சேர்ந்தார்கள்.

## தெளிவுரை

பாண்டவர்களுடைய அழைப்பினுக்கிணங்க வந்து மந்திராலோசனையிற் கலந்து கொண்ட ஏனைய மன்னர்களும், கண்ணன் கூறிச் சென்றதை அடிப்படையாக வைத்து, தருமபுத்திரரை நோக்கி, "முரசக் கொடியோனே! இவ்வந்தணனாகிய **உலூகன் நீ** சொன்ன செய்திகள் எல்லாவற்றையும திருதராட்டிரனுக்கு உவப்பு ஏற்படும் வண்ணம், அத்திருதராட்டிரனோடு சொல்லிய பிறகு அவன் உனது உரிமை நாட்டைத் தந்திலன் என்றால் எங்களுக்கு ஓலையை முந்த அனுப்புக" என்று கூறித் தத்தம் நகரங்களுக்குப் புறப்பட்டுச் சென்று சேர்ந்தனர்.

## விளக்கவுரை

கண்ணன் உலூகனைத் தூது அனுப்புக என்று உள்ள ஏற்பாடுகளை யெல்லாம் செய்தமைத்துச் சென்றபின் வந்த மன்னர்களும் புறப்படுகிறார்கள். போவதற்கு முன் "தூது சென்று வந்த பிறகு நாடு உமக்கு அவன் தரவில்லையானால் எமக்கு ஓலையெழுதி முந்தித் தெரிவிக்க" என்று சொல்லிச் சென்றார்கள்.

தருமனின் கொடி முரசக்கொடி. கொடியானது அரசினது கொள்கையை விளக்கும் அடையாளம். உலகத்து உயிர்களையெல்லாம் அழகுடையனவாகவும், குளிர்ந்த வாழ்க்கையுடையனவாகவும் பெருமையுடையனவாகவும் ஆக்குவதே தம் கொள்கை என்று கூறி ஆட்சியை ஏற்றுக் கொண்டவன் தருமன். ஆகையால் **அம், தண், மா முரசக் கொடியோன்** எனப்பட்டான். **அழகு** என்பது வந்தவர்க்கெல்லாம் கொடுத்துக் கொடுத்துக் கொடையால் அழகுபெறுதல். "**ஈத்துவக்கும் இன்பம்**" என்பார் திருவள்ளுவர். ஏனைய இன்பங்களால் உடலுக்கு மட்டுமே இன்பம் இது ஒன்றேஉயிரின்பம்; அதனால் உயிரானது வளர்ச்சி பெற்று அதன் அழகு உடம்பில் வெளியாகும். **தண்மை**-குளிர்ந்த வாழ்க்கை. வறுமை, கள்வர், வேற்றுப்பகை இன்றி நாடா வளத்ததாய் நாடவளந் தருவதாய் வாழும் வாழ்க்கை. இவ்வாழ்க்கையே மணம் வீசும் வாழ்க்கை. ஒரு வேளை தெய்வம், இயற்கை மாறுபாடு முதலியவற்றால் தாழ்வு வருமாயின் அரசன் குடிமக்களின் மானமே பெரிதெனப் பேணி வீரத்தால் மானம் நிறுத்திக் காக்கும் தன்மையை 'மா' என்ற சொல்லாற் குறிப்பிட்டார்.

இம்மூன்றையும் பொதுவாகத் தியாக முரசு (அம்); மணமுரசு (தண்); வீர முரசு (மா) என்று கூறுவதை ஆசிரியர் இன்புறுத்திக் காட்டினார். கேதனம்-கொடி.

இந்த அந்தணன்-அண்மைச் சுட்டு; உலூகனெனும் மறையோனைக் குறித்தது. இசைத்தவைகளை இயல்புடன், இனிது ஆகச் சொல்ல வேண்டுவது தூதின் இலக்கணம். தொகச் சொல்லித் தூவாத நீக்கி நகச் சொல்லி நன்றி பயப்பதாம் தூது'' என்பது குறள்.

அந்தகன் என்ற சொல் அந்தன் என நின்று குருடன் என்ற பொருள் தந்து துரியோதனன் தந்தையாகிய திருதராட்டிரனைக் குறித்தது.

தருமபுத்திரனுக்குத் துணை செய்ய வேண்டும் என்ற கருத்துடைய மன்னர்கள், நாடு தருமனுக்குக் கிடைக்கவில்லையானால் ஓலையை முன்கூட்டியே அனுப்புமாறு கூறுகிறார்கள். ஏனெனில் துரியோதனனும் துணை வேண்டும் என்று முன்கூட்டியே ஓலை அனுப்பி விட்டால் முதலிற் கேட்டவர்களுக்கே துணை செய்தல் வேண்டும் என்ற நிலைமை ஏற்பட்டுவிடும். ஆகையால் திருமுகத்தை ''முந்த வரவிடுக'' எனக் கூறிச் சென்றார்கள்.

திருமுகம்-அரசமுத்திரை பதித்த ஓலை. அரசர்கள் எல்லாம் திருமாலெனக் கருதப்படுவார்களாதலின், 'ஸ்ரீமுகம்' எனச் சொல்லும் வழக்குப் பற்றித் 'திருமுகம்' எனத் தமிழில வழங்குவதாயிற்று. முடங்கலானது எழுதியோரின் 'முகத்தை'ப் படிப்பவர் முன் நிறுத்துவதால் 'திருமுகம்' எனப் பெற்றதும் ஆகலாம். தம்தம் என்பன தத்தம் என இணைந்தன. மன், ஓ-அசைநிலைகள்.

### இலக்கணம்

இசைத்தன-வினையாலணையும் பெயர்.
எலாம்-'எல்லாம்' என்பதன் இடைக்குறை.
நினது அவனி-'நீ' என்பது நின் எனத் திரிந்து ஆறும் வேற்றுமை ஏற்றது.
தந்திலன்-உயர்திணை ஆண்பாற் படர்க்கை எதிர்மறை வினைமுற்று.
முரசகேதன !-அண்மைவிளி.
விடுக-வியங்கோள் வினைமுற்று.
மாநகர்-உரிச்சொற்றொடர்.

## 6. தருமன் உலூக முனியைத் தூது அனுப்புதல்

### உரை

அரசர் போனபின் - வந்த மன்னவர்கள் சென்ற பிறகு,
மால்பணி தவறு உறாது - திருமாலாகிய கண்ணன் கூறிய காரியம் தவறு படாதவாறு,
அ முனிதனை நோக்கி-அந்த முனிவனாகிய உலூகனைப் பார்த்து,
முரச கேதனன்-தருமன்,
முனிவனைத் தொழுது ஏத்தி-முனிவனைத் தொழுது வணங்கி,
நீ எழுந்தருள்க என - தாங்கள் அத்தினபுரம் புறப்படுவீர்களாகுக எனச் சொல்லி,
விரை செய்-மணம் பரப்பும்,
தார் புனை-மாலை புனைந்த,
வீடுமன்-பீஷ்மன்,

**எந்தை**-எம் பெரிய தந்தையாகிய திருதராட்டிரன்,

**மெய் விதுரன்** - மூன்று கால உண்மைகளையும் அறியும் ஞானியாகிய விதுரன்,

**வேதியர் கோவை** - வேதம் வல்லார்களுக்குத் தலைவனான துரோணாசாரியார் ஆகியோர்களை.

**அடிபரசினேம்**-திருவடி வணங்கினேம்,

**என்று**-என்று தாங்கள் முதலாவதாகச் சொல்ல வேண்டும் என்று குறிப்பிட்டு,

**பின் உரிய சொல்**-பிறகு நம் உரிமையை விளக்கும் சொற்களை,

**பணித்தருள்** - பணிவுடன் கூறியருளவீராக,

**என**-என்று தருமன் கூறியபின்,

**போந்தான்**-உலூக முனிவன் புறப்பட்டுச் சென்றான்.

## தெளிவுரை

அரசர்கள் விடைபெற்றுச் சென்ற பிறகு, கண்ணன் கூறிச் சென்ற காரியம் தவறுபடாத வகையில் முரசக் கொடியோனாகிய தருமன் உலூக முனிவனை நோக்கி, தொழுது வணங்கி, எழுந்தருள்வீராக எனபதை முன்மொழியாகக் கூறி, மணம் வீசும் மலர் மாலையை அணிந்துள்ள பீஷ்மன், எம் பெரிய தந்தையாகிய திருதராட்டிரன். சிறிய தந்தையாகிய முக்கால நிகழ்ச்சிகளையும் உணரும் ஞானியாகிய விதுரன். வேதம் வல்லார்களுக்குத் தலைவனாகிய துரோணாசாரிரர் முதலியோர்களைத் திருவடி வணங்கினேம் என்று சொல்லி, பின்னர் உரிமையை உணர்த்தும் சொற்களைப் பணிவுடன் கூறியருளுக எனச் சொல்ல, அம் முனிவனும் புறப்பட்டுச் சென்றான்.

## விளக்கவுரை

கண்ணன் கூறியவாறு தூது அனுப்பினான் என்று கூறாமல் **மால் பணி தவறு உறாத** வகையில் தூது அனுப்பினான் என்று கூறினார். கூறியவன் கண்ணனேயாயினும், திருமாலே தான் கொண்ட கருத்தை முடிக்க எண்ணி, பாரதப் போரை நடத்தி, நல்லவர்களைக் காத்துத் தீயோரை அழிக்கத் திட்டமிட்டு விட்டானாதலின் அப்பணி தவறாத வகையில் தூது அனுப்பினான் என்றார்.

தருமன் ஏவலைச் செய்து முடிப்பவனே தூதன் ஆயினும் இங்கே அந்தணனும் முனிவனும் ஆகிய முறைபற்றித் தொழுது வணங்கிச் சொன்னான் என்றார்.

**வீடுமன்**—பீஷ்மன். கங்கையின் மகனாகத் தோன்றி, பிரமசரியங் காத்து, தியாகத்துக்கே தன்னுடைய வாழ்க்கையை ஈடாக்கி, அம்புபட்டு வீழ்ந்த பிறகுங்கூட, தான் எண்ணிய நாளில் உயிர் துறக்க வேண்டும் என்று, அதுவரை உயிரை நிறுத்தி வைத்த வீரமுடையவனும், இன்றும் அந்தணர்கள் எல்லாரையும் தமக்குத் திதி கொடுக்கும் கடப்பாட்டுக்கு உரிமையானவனும் ஆகையால் அவன் மார்பில் அணிந்த மாலை என்றும் வாடாமல் மணம் செய்து கொண்டே இருக்கும் ஆதலின் **விரை செய் தார் புனை வீடுமன்** என்றார்.

**மெய் விதுரன்**-விதுர முனிவர் மெய்ஞ்ஞானி. கண்ணன் தூது சென்றபோது தங்கியது இம்முனிவன் இல்லத்தில்தான்.

'பரவினேம்' என்ற சொல் பரசினேம் என வந்தது. **உரியசொல்**-உரிமையை வெளிப்படுத்தும் சொற்கள். உரிமையானது பொருளில் தொனிக்க வேண்டுமேயல்லாமல், சொல்லிலேயே தொனிக்கச்

கூடாது என்பது கருத்து. உரிமையை நயமான சொற்களாற் புலப் படுத்துக என்பது தருமர் வேண்டுகோள்.

### இலக்கணம்

உறுது-எதிர்மறை வினையெச்சம்.
ஏத்தி-செய்து என் வாய்பாட்டு வினையெச்சம்.
எழுந்தருள்க-வியங்கோள் வினைமுற்று.
பணித்தருள்-பணித்தருள்க என்ற வியங்கோள் வினைமுற்று, விகுதி கெட்டு நின்றது.
விரை செய்தார்-வினைத்தொகை.
புனை வீடுமன்-வினைத்தொகை.
பரசினேம்-இடைப்போலி; தன்மைப்பன்மை வினைமுற்று.
வேதியர்கோ-ஆறும் வேற்றுமையாயினும் உயர்திணைத் தொகையானமையால் நான்கனுருபு விரிக்க.

## 7. அரசவை அடைந்தனை உலூகத் துரியோதனன் வரவேற்றல்

### உரை

**போன**-தூதுவனாகப் புறப்பட்டுச் சென்ற,
**நான்மறைப் புரோகிதன்**-நான்கு வேதங்களிலும் வல்லவனும் முன்னே வைக்கப்படும் தகுதி வாய்ந்தவனும் ஆகிய உலூக முனிவன்,
**அத்தினபுரி புகுந்து**-அத்தின புரத்தை அடைந்து,
**எரி பைம் பொன் மானம்வார் கழல்**-ஒளி வீசுகின்ற பசும் பொன்னால் பெருமையின் அடையாளமாகக் கட்டப் பெற்ற நீண்ட வீரக்கழலை யுடைய,
**திருதராட்டிரன் எனும் மன் அவை தனில்**-திருதராட்டிரன் என்று சொல்லப் பெறும் அரச னுடைய சபையில்,
**எய்த**-சென்று சேர,
**ஞானமா முனி**-ஞானம் பொருந்திய பெருமை சான்ற முனிவனாகிய உலூக முனிவனின்,
**வரவு கண்டு**-வருகையைக் கண்டு,
**அரவ வெங் கொடியோன்**-கொடிய பாம்புக் கொடியை உடையவனான துரியோதனன்,
**எதிர் கொளா நயந்து**-எதிர் சென்று வணங்கி, விரும்பி,
**இரு பதம் போற்றி**-இரு திருவடி களையும் வணங்கி,
**மா மணி ஆன ஆசனத்து**-உயர்ந்த இரத்தினங்களால் ஆக்கப்பெற்ற பீடத்தில்,
**இருத்தினன்**-அம் முனிவனை அமரச் செய்தான்.

### தெளிவுரை

முரசக் கொடியோன் அனுப்ப, புறப்பட்டுச் சென்ற வேதங் களில் வல்லவனும் முன்னிருக்கும் தகுதி பெற்றவனும் ஆகிய உலூக முனிவன் அத்தினபுரத்தை அடைந்து, ஒளிவீசும் பொன்னால் பெரு மையின் அடையாளமாகக் கட்டப்பெற்ற நீண்ட வீரக்கழலையுடைய திருதராட்டிரன் என்னும் அரசனுடைய சபையைச் சேர்ந்த அளவில் ஞானமா முனிவனின் வருகையைக் கண்டு பாம்புக் கொடி யோனான துரியோதனன் எழுந்து எதிர்கொண்டு வணங்கி, அவன்

திருவடிகளைத் தொழுது, அம்முனிவனை ஒரு உயர்ந்த ஆசனத்தில் அமரச் செய்தான்.

### விளக்கவுரை

**நான்மறைப் புரோகிதன்**-உலூகன் நான்குமறை-இருக்கு, யசுர், சாமம், அதர்வணம நான்கிலும் வல்லனாய்; அவ்வாறே வல்லவர்கள் எல்லாரினும் முன் நிறகும் தகுதியும் பெற்றவன். **புரோகிதன்**-முன் நிற்கும் தகுதி உடையவன்.

**அத்திநபுரி**-திருதராட்டிரனது அரசின் தலைநகரம்; 'அத்தி' என்ற சந்திர குலத் தரசனால் உண்டாக்கப் பெற்றது. யானைப்படை மிகுதியின் காரணமாக அத்திநபுரி எனப் பெயர் பெற்றது என்றும் கூறுவர்.

**கழல்**-வீரம் காரணமாகக் காலில் கட்டப் பெறும் அணி. திருதராட்டிரன் பிறவிக் குருடன்; அவன் காலில் கட்டப் பெற்றிருக்கிறது வீரக்கழல் வீரத்திற்காக அல்ல; பெருமைக்காக. **வில்லிபுத்தூராரின் இகழ்ச்சிக் குறிப்பு**.

**அரவ வெம் கொடியோன்**-துரியோதனன். இவன் கொடி பாம்புக் கொடி. எறும்பின் புற்றினைப் பாம்பு தன்னுடைய இடமாக ஆக்கிக் கொள்ளுதல் போல் பிறருடைய வீரத்தை அடிப்படையாகக் கொண்டே வாழ்ந்தவன் என்பது தோன்ற 'அரவக் கொடி' அமைக்கப் பெற்றது. பாம்பு தன்னளவில் மிகப் பயம் உடையதாய் வெளியில் வருவதற்கே அஞ்சினாலும், அதைப் பார்த்தவர்கள், கேட்டவர்களுக்குப் பெரிதும் அச்சத்தை உண்டாக்கும் தன்மையைக் கொண்டிருப்பது போல, தன்னளவில் வீரம் குன்றிய நிலையுடையவனாய், அச்சம் உடையவனாய் இருந்த போதும் பிறரால் வீரம் உடையவனாகக் கருதப்பெறும் நிலையில் வாழ்ந்தவன். பாம்பின் மாணிக்கத்தால் பாம்புக்குப் பயன் இல்லாமல் மக்களுக்குப் பயன் அமைவது போல, துரியோதனன் தன் செல்வத்தால் எப்பயனும் பெற்றானில்லை. கன்னன் கொடைக் குரியவனாய் ஆனது, துரியோதனன் செல்வத்தால்; துரியோதனன் எத்தகைய பயனையும் பெற்றானில்லை.

உலூகன் ஞான முனிவன் ஆதலின் துரியோதனன் எழுந்து வணங்கினான்.

### இலக்கணம்

**பசும் பொன், நான் மறை**-பண்புத்தொகைகள்.
**மாமுனி, மாமணி**, உரிச்சொல் தொடர்.
வரவு-தொழிற் பெயர்.
**எதிர் கொளா**-செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம் செய்து என்னும் பொருளில் வந்தது.

## 8. வந்தவாறு என்? என வினவின அவையோர்க்கு உலூகன் சொல்லத் தொடங்குதல்

### உரை

**விந்தம் அன்ன தோள்**-விந்திய மலையை ஒத்த தோள்களை உடைய,

**வீடுமன் முதலியோர்**-வீடுமனை முதலாக உள்ள பெரியோர்களும்,

**விழைவுடன் தொழுது ஏத்தி**-விருப்பத்தோடு தொழுது புகழ்ந்து,
**வந்த ஆறு உணர்த்தருள்க என**-தாங்கள் இவ்விடம் வந்த வரலாற்றைச் சொல்லியருளுக என்று கேட்க,
**அறன் மகன் வந்தனை**-தரும புத்திரன் கூறிய வணக்கங்களை,
**முதற் கூறி**-முதலாவதாக எடுத்துச் சொல்லி,
**அந்தன் ஆகிய**-பிறவிக் குருடனாகிய,
**கந்து அடர் கட களிற்று அரசனும்**-கட்டுத்தறியை முறிக்கின்ற மதம் ஒழுகுகின்ற போர் யானைகளை மிகுதியும் கொண்ட அரசனாகிய திருதராட்டிரனும்,
**அவன் தந்த மைந்தர் யாவரும்**-அவன் கொடுத்த பிள்ளைகள் துரியோதனன் முதலாக உள்ள நூறுபேரும் மற்றும் அவரைச் சார்ந்தவர்களும்,
**கன்னனும் சகுனியும்**-கன்னனும் சகுனியும் ஆகியோரும்,
**மனம் கனன்றிட சொல்வான்**-மனம் கொதிக்கும்படிச் சொல்வான் ஆயினன்.

## தெளிவுரை

ஆசனத்தில் அமர்ந்த உலூகனை, விந்தமலை போன்ற தோள்களை உடைய வீடுமன் முதலாக உள்ள பெரியோர்களும் விருப்பத்தோடு தொழுது வணங்கி, தாங்கள் இவ்விடம் எழுந்தருளி வந்த வரலாற்றைக் கூறியருளுக என்று கேட்கவே, உலூகமுனிவனின் தருமபுத்திரன் வீடுமன் முதலியோர்க்குக் கூறிய வணக்கவுரைகளை முற்கூறி, குருடனாகிய அரசன் திருதராட்டிரனும், அவன் பெற்ற துரியோதனன் முதலான பிள்ளைகளும் அவர்களைச் சார்ந்தவர்களும், கன்னனும் சகுனியும் மனம் கொதிக்குமாறு தூதுரையைக் கூறத் தொடங்கினான்.

## விளக்கவுரை

வீடுமன் தோள் விந்தியமலையை ஒத்த வலிமையுடையது என்பதாம். விந்தம்-ஒருமலை; மேருமலை என்றும் கூறுப. துரியோதனன் முதலியோரே அன்றி, வீடுமன் போன்றவர்களும் வணங்கினார்கள் என்பதாம்.

அறன்-அறவழிப்படி உயிர்களுக்குத் தண்டனைகளையும் சுவர்க்கம் முதலியவைகளையும் விசாரித்துக் கொடுப்பவன் இமயன். இயமனுக்கும் குந்திக்கும் பிறந்தவனாதலின் அறன்மகன் எனப்பெறுவான். தருமபுத்திரன் என்ற பெயரும் பாண்டவர்களின் மூத்தவனுக்கு உண்டு.

கந்து-கட்டுத்தறி. யானை கட்டியிருக்கின்ற தறியை (முளையை) இழுத்து அசைக்கும் அளவுக்கு ஆற்றல் உடையது அவ்வாற்றல் அதற்கு அதனுடைய மதத்தால் விளைவது. கடம்-மதம்.

உலூகன் கூறப்போவது வீடுமன், விதுரன், துரோணர் முதலியோர்க்கு மகிழ்ச்சியையே தரும் ஆதலால் அவர்களை விடுத்து, திருதராட்டிரன், துரியோதனன், கன்னன், சகுனி ஆகியோர்களுக்கு மட்டுமே மனம் கொதிக்கும் நிலைமையை உண்டாக்கியது என்பதாம்.

## இலக்கணம்

**அன்ன-உவமை உருபு.**
**உரைத்தருள்க-வியங்கோள் வினைமுற்று.**

கந்து அடர்-இரண்டாம் வேற்றுமைத் தொகை.
அடர்களிறு-வினைத்தொகை.
அபசனும்-உம்மைகள் எண்ணும்மைகள்.
கனனறிட-செய என் வாய்பாட்டு வினையெச்சம் காரியப் பொருளில் வந்தது.
அறன் மகன்-உயர்திணைத்தொகையாதலின் ஆறும் வேற்றுமைக'கு' உருபு விரிக்க.
வந்தனே-வினையாலணையும் பெயர்.

## 9. பாண்டவர்க்கு நும்மொழிப்படிப் பார் அளித்திரோ? அல்லிரோ?

### உரை

பன்னிரண்டு ஆண்டு-பல் னிரண்டு அண்டுகள்,
அடவி உற்று-காட்டில் பொருந்தி வாழ்ந்து,
ஒருவரும் அறிவுருவகை - ஒருவரும அறியாதவாறு,
மற்று ஓர் ஆண்டு மன்னிய-வேறும ஒரு ஆண்டு வாழ்ந்து கழித்த,
பாண்டுவின் மதலையர் ஐவரும்-பாண்டுவின் மக்களாகிய ஐவரும்,
வெளிப்பட்டார்-உங்கள்கட்டளைப் படி வெளிப்பட்டு வந்து விட்டார்கள்.
ஆண்டு-சூதுபோர் நடந்த அக் காலத்தில்,
மன்னர் முன்-அவையில் இருந்த மன்னாகளுக்கு முன்னுக,
சூது போர் பொருது-'சூது' என்று சொல்லப்பெறும் போரைச் செய்து,
அழிந்து-தோற்று,
அளித்திடுதலின்-மீண்டும் சூதாடி அடிமைத் தளையை மட்டும் அறுத்துக் கொண்டு, நாட்டையம் நியந்தனையின் பேரில் அளித்திடுதலின்,
நீர் கொண்டு ஆண்டு வந்த பார்-நீங்கள் கைப்பற்றிக்கொண்டு இந்நாள்வரை ஆண்டுவரும் அவர்கள் நாட்டை,
நும்மொழிப்படி-உங்களுடைய சொற்படி,
அவர்க்கு-அப்பாண்டவர்க்கு,
அளித்திரோ-கொடுப்பீர்களா,
அளியீரோ-கொடுக்கமாட்டீர் களா?

### தெளிவுரை

பன்னிரண்டு ஆண்டுகள் காட்டில் வசித்துப் பின் ஓராண்டு யாருக்கும் தெரியாதவகையில் கரந்து வசித்துக் கழித்த நிலையில் பாண்டுவின் புத்திரர்களாகிய ஐந்துபேரும் வெளிப்பட்டார்கள். அக்காலத்தில் அவைக்கண் சூழ்ந்திருந்த அரசர்களுக்கு முன்னிலையில் சூது போர் நடத்தி அதில் தோற்று, பின்னும் உரிமைக்காக ஆடி, அடிமைத்தளையை அறுத்துக் கொண்டு, நாட்டை நும்மிடம் கொடுத்ததினுல் நீங்கள் உரிமை கொண்டு ஆட்சி புரிந்து வந்த அவர்கள் நாட்டை நும்மொழிப்படி இப்போது அவர்க்குக் கொடுப்பீர்களா? கொடுக்க மாட்டீர்களா?

### விளக்கவுரை

அடவி-காடு. முன்னே சூதாட்டம் நடந்தபோது திரௌபதி உட்பட அனைவரும் தோற்றுவிட்டு அடிமையாக ஆய்விட்டான்

தருமன். இந்நிலையில் அவனுக்குப் பாகமேது; நாடேது? மீளவும் கண்ணனுதவியால் சூது நடத்தித் தன்னையும் திரௌபதியையும் தம்பியர்களையும் அடிமைத்தளையிலிருந்து விடுத்துக் கொள்ளுகின்றான். அப்போதுதான் பன்னிரண்டு ஆண்டுகள் காட்டு வாழ்க்கையையும் பின்னும் ஓராண்டுக் காலம் கரந்துறை வாழ்க்கையையும் மேற்கொண்டு முடித்து வந்தால் அவர்களிடம் பெற்ற நாட்டைக் கொடுத்து விடுவதாக நிபந்தனை அளிக்கப் பெற்றது. அதை எடுத்துக் காட்டிக் கேட்கிறான் உலூகன்.

அறிவுருவகை மற்றோர் ஆண்டு-பாண்டவர்கள் என்று யாருக்கும் தெரியாதவாறு வாழ்தல் வேண்டும். பாண்டுவின் மதலையர்-திருதராட்டிரன் தம்பியின் பெயர் பாண்டு. குந்தி அவன் மனைவி. குந்தியானவள் தான் பெற்ற மந்திர வலிமையால் இயமனை நினைத்துக் கூடித் தருமனையும், வாயுவை நினைத்துக் கூடிப் பீமனையும், இந்திரனை நினைத்துக் கூடி அருச்சுனனையும், அசுவினி தேவர்களை நினைத்துக் கூடி நகுல சகதேவர்களையும் பெற்றாள்: அயினும் பாண்டுவின் மனைவி வயிற்றிற் பிறந்தமையின் பாண்டுவின் மைந்தர் எனப் பட்டனர்; பாண்டவர் என்றதும் அதனால்.

**இலக்கணம்**

பன்னிரண்டு-உம்மைத்தொகை,
அறிவு உருவகை-தொழிற்பெயர்.
உருவகை-ஈறு கெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.
மன்னிய-செய்த என் வாய்பாட்டுப் பெயரெச்சம்
ஐவரும்-முற்றும்மை.
அளித்திரோ அளியீரோ-ஓ வினைப்பொருள்.
சூதுபோர் இருபெயரொட்டுப் பண்புத்தொகை.

## 10. இனியும் சூதுபோரையே விரும்பினும் செய்யலாம்

**உரை**

**இலஞ்சியில்**-நீர் நிறைந்த பொய்கையில்,
**பொலம்**-அழகுமிக்க,
**செம் கால் அன்னமும்**-சிவந்த கால்களையுடைய அன்னங்களும்.
**கிரி மயில்களும்**-மலையில் விளையாடும் மயில்களும்,
**உடன் விளையாடும்**-ஒன்றாகச் சேர்ந்து விளையாடும்,
**நல் வள நாட்டீர்**-நல்ல வளம் பொருந்திய நாட்டை உடையவர்களே!
**நீர்**-நீங்கள்,
**மோது போர் கருதாமல்**-ஒருவரோடு ஒருவர் மோதிக் கொண்டுசெய்யும்சண்டையை எண்ணாமல்,
**இன்னமும்**-இனியும் முன்னரும்
**பொருது உளது**-முன்னரும் செய்துளதாகிய,
**சூது போர் பொர வேண்டுமேல்**-சூதாட்டச் சண்டையையே செய்ய வேண்டும் என்று கருதினால்,
**பொருதிடும்**-அதையே மேற்கொள்ளலாம்.
**பின்னமும் இனி பிறவாது**-வேறுபாடுகள் இனியும உங்களுக்குள் உண்டாகாது,
**பெருவாழ்வும் பண்டுபோற் பீடுறும்**-பெரிய அரசாட்சிச் செல்வமும் முன்புபோலவே பெருமை அடையும் என்று உலூகமுனி கூறினன்.

## தெளிவுரை

உலூகன் இரண்டாவதாக எடுத்துக் கூறிய செய்தி, நீர் நிறைந்துள்ள பொய்கையில் அழகிய சிவந்த காலை உடைய அன்ன மும், மலைவாழ் மயிற்பறவைகளும், ஒன்றாக இணைந்து விளையாடு கின்ற நல்ல வளப்பம் பொருந்திய நாட்டை உடையவர்களே! நீங்கள் ஒருவரோடு ஒருவர் மோதிக் கொண்டு செய்யும் போரை நினையாமல் இனியும், முன்னரும் செய்துள்ளதாகிய சூதாட்டத் தையே வெற்றி தோல்விகளை அறிவிக்கும் அளவுகோலாகக் கொள்ள வேண்டும் என்று கருதினால் அதையே மேற்கொள்ளலாம்; உங்களுக் குள் இனியும் எத்தகைய வேறுபாடும் உண்டாகாது; உங்களுடைய பெரிய அரசாட்சிச் செல்வமும் முன்பு போலவே பெருமை அடையும் என்று உலூக முனிவன் கூறினான்.

## விளக்கவுரை

உலூக முனிவன் இரண்டாவதாக எடுத்துக் கூறிய செய்தி யாவது நீங்கள் சண்டையை விரும்பாமல் சூதாட்டத்தையே மறு படியும் செய்ய வேண்டும் என்று விரும்பினால் அதையே செய்யலாம். ஆனால் இம்முறை பாண்டவர்கள் அதற்கும் தயாராக உள்ளனர் என்பதைக் குறிப்பிட்டுக் காட்டினான். **சூதுபோர் இன்னமும் பொர வேண்டுமேல் பொருதிடும்** என்பது இகழச்சிக் குறிப்பு. வீடுமன், துரோணா, விதுரன முதலிய சான்றோர்கள் நிறைந்திருக்க ஆட்சி செய்யும் நீ—வேறுபாடு தோன்றியபோது வீரம் விளக்கும் சண்டையை அடிப்படையாகக் கொண்டு வெற்றி தோல்வியை நிலை நாட்ட வேண்டிய அரசகுலத்திற் பிறந்துள்ள நீ சூதுபோரை முன்னே விரும்பினாய்; இனியும் அதையே விரும்பினாலும் சரியே! என்றான். சூதினைப் போர் என்றது இகழ்ச்சிக் குறிப்பு.

நாட்டுக்கு அடைமொழியாக ஒரு **திணைமயக்கத்தை** எடுத்துக் காட்டியுள்ளார். திணைமயக்கம் என்பது ஒரு நிலத்தில வாழும் பொருள் வேறொரு நிலத்தில் இருப்பதாக அமைப்பது. இவ்வாறு அமைப்பது வெறும் வளமையை மட்டும் குறிப்பதற்காக அல்லாமல் உயர்ந்த பொதுக்கருத்தை எடுத்து உணர்த்துவதற்காக அமைப்ப தாக இருத்தல் வேண்டும். இச்செய்யுளில் ஒரு பொய்கையில் அன்னம் இருக்கிறது; ஆனால் மலையில் இருக்க வேண்டிய மயில்களும் வந்து அன்னத்தோடு சேர்ந்து விளையாடுகின்றன. மருதநிலப் பறவையாகிய அன்னமும் மலைநிலப் பறவையாகிய மயிலும் சேர்ந்து விளையாடுகின்றன. அன்னம் பாலையும் நீரையும் தந்தால் பாலை மட்டும் பிரித்துண்ணும் நிலையுடையது. இங்கே உணவாகிய பால் இல்லாத தண்ணீரில் உணவு இல்லாமல் விளையாடிக் கொண்டிருக் கிறது. துரியோதனன் முதலியோர் அன்னம் போன்ற உயர்குடிப் பிறப்பை உடையவர்கள், நன்மை தீமைகள் கலந்த இந்நாட்டில் நன்மையைப் பிரித்தெடுக்கும் ஆற்றல் வாய்ந்த நிலையில் உயர்ந்த ஆசிரியர்களிடத்தில் படித்தவர்கள். பிறந்த நிலையாலும் பயின்ற நிலையாலும் பெற்ற உயர்வை மறந்து இவ்வுலக வாழ்வைப் பெரி தென எண்ணி விளையாடுகிறார்கள். மானத்தை நிலைநாட்டும் கருவி யாகப் போரை எண்ணாமல் சூதினையும் போரென எண்ணிவிட்டார் கள். இவர்கள் நிலை இவ்வாறாக, வீடுமன், விதுரன், துரோணர் போன்றவர்கள் மலைவாழ் மயில்கள். தவத்தால் தன்னை உயர்த்திக்

கொண்ட சான்றோர்கள். அவர்களும் இவ்வன்னங்களோடு சேர்ந்து விளையாடிக் கொண்டிருக்கிறார்கள். காரணம் இடம் வேறுபட்டாலும் 'இனம்' என்ற பாசந்தான். எத்துணைச் சான்றோரையும் 'இனப் பாசம்' பிடித்துவிடும் போலும். மேலும் தம் பெருமையை நிலை நாட்டிக் கொள்ளவே அவர்கள் இங்கே இருக்கிறார்கள் போலும். பாண்டவர்கள் தெய்வத்தன்மை வாய்ந்த பிறப்புடையவர்கள் ஆதலின் தங்கள் பெருமை உயராது என எண்ணினார்கள் போலும். இனி, உயர்ந்த நிலை வகிக்கும் சான்றோர்கள் சிலசமயம் சிற்றினங்களை அவர்களோடு கலந்து பழகித் திருத்திவிடலாம் என நினைத்து, தம் உயரிய நிலையிலிருந்து இறங்கி வந்து, சிற்றினத்தை நாடுகின்றனர். 'என்றும் சிற்றினம் சிற்றினமே'. மயில் அன்னத்தை மயிலாக ஆக்க முடியாது. எத்துணை அறிவுரை கூறித் திருத்தினாலும் துரியோதனன் திருந்தான் என்று சுட்டிக் காட்டவும் இத்திணை மயக்கத்தை அமைத்தார்.

*பின்னம்-மாறுபாடு.* சூதுபோரே நீங்கள் செய்தாலும் இனி மாறுபாடு உண்டாகாது என்றது. அதிற் பகடைக்காய் உருட்டுவதற்குக் கண்ணனே அமைந்து விடுவான், போர் முரசு கொட்டி விட்டான் கண்ணன்; தொடங்குவது எதுவானாலும் அதையே அடிப்படையாகக் கொண்டு, அதையே போராக ஆக்கிப் பூபாரம் தீர்க்கப் புறப்பட்டுவிட்டான். ஆகையால் இனி மாறுபாட்டுக்கு இடமில்லை. மனிதநிலையை அடிப்படையாகக் கொண்டு செயலாற்றும் போது தான் மாறுபாடு உண்டாகும். இனி அதற்கு இடமே இல்லை என்பன வற்றைக் குறித்தன.

**பெருவாழ்வும் பண்டு போல் பீடு உறும்**-இங்கே துரியோதனனுடைய பெருவாழ்வு முன்னைப்போல் பெருமைபெறும் என்று உலூகன் கூறவில்லை. சகுந்தலைக்கும் துஷ்யந்தனுக்கும் பிறந்த பரதனால் தோற்றப் பெற்ற பெருவாழ்வு அறியாமையே இல்லாத நிலையில் (கு-அறியாமை; ரு-நீங்குதல்) வாழ்ந்த குரு நாட்டாட்சி இப்போது குருடன் கீழ் நிலை கலங்கி வாழ்கிறது. இனி இந்த இழிபாடு நீங்கிப் பண்டுபோல் இவ்வாட்சியானது பெருமை பெறும் என வருங்காலத்தைக் குறிப்பிட்டுணர்த்தினான் உலூகன் கூறிய முறை நயம்பெற இருந்தமையால் திருதராட்டிரன் முதலானோர் தன்னாட்சியைக் குறிப்பதாகவே எடுத்துக் கொண்டனர்.

## இலக்கணம்

**செங்கால், நல்வளம்**,-பண்புத்தொகைகள்.

**கால் அன்னம்**-இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்கதொகை.

**கிரிமயில்கள்**-ஏழாம் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்கதொகை.

**நாட்டீர்**-விளி.

**கருதாமல்**-'மல்' ஈற்று எதிர்மறை வினையெச்சம்.

**பொருதுளது**-வினையாலணையும் பெயர்.

**பொருதிடும்**-'உம்' ஈற்று முன்னிலைப்பன்மை வினைமுற்று. 'இடு' பகுதிப் பொருளுணர்த்த வந்தசொல்.

**பிறவாது**-எதிர்மறை வினைமுற்று.

## 11. பொன்றுதல் வேண்டின் போரைத் தேடலாம் எனல்

### உரை

**அன்றியே**-சூதுபோர் கருதாமல், **அவருடன் மலைகுவம்**-பாண்டவர் களோடு இம்முறை போரே செய்வேம், **என**-என்று உள்ளத்தில் நினைத்து, **அழிவினைக் கருதாமல்**-அழிந்து விடுவோம் என்பதை எண்ணாமல், **வெற்றியே நினைந்து**-வேந்தன் மனம் வெற்றியையே நினைக்கும் ஆசையால் வெற்றி ஒன்றையே நினைத்து, **எதிர்த்திரேல்**-அவர்களோடு நேர் நின்று போர் புரிய முற்பட்டால், **உங்களால் வெல்லுதல் அரிது**-உங்களால் வெற்றியை அடைதல் இல்லை. **அடல் வீமனும்**-வலிமை பொருந்திய வீமனும், **விசயனும்**-அருச்சுனனும், **கற்றியே எளம் புகில்**-மனம் வெம்பி, அதனால் சினம் மிகக் கொண்டு போர்க்களத்தின் புகுந்தால், **நீர் அனைவீரும்**-நீங்கள் எல்லாரும் **பொன்றியே விடுகின்றீர்**-வீர மரணத்துக்குக் கூட வாய்ப்பு இல்லாமல் அவலச்சாவு பொருந்த அழிந்தே போகின் றீர்கள், **முனிவர் சொல்**-பற்றற்று முக் காலங்களையும் அறியும் செயலைத் தவத்தால் பெற்றவர் சொல்லும் சொல், **பொய்க்குமோ**-பொய்யாகுமோ! **பொய்யாது**-பொய்யாகாது.

### தெளிவுரை

உலூகன் மூன்றாம் நிலையில் உரைப்பது, பொய்யாய மானம் கருதி, இம்முறை பாண்டவர்களோடு போர் செய்வோம் என நினைத்து அழிவைக் கருதாமல் வெற்றியை மட்டுமே நினைத்து அவர் களோடு நேர்நின்று போர் புரிய முற்பட்டால் வெல்லுதல் உங் களால் முடியாது. வலிமை பொருந்திய வீமனும் அருச்சுனனும் மனம் வெதும்பிச் சினங்கொண்டு போர்க்களம் புகுந்தால் அனைவரும் வீரமரணங்கூட எய்த முடியாமல் அழிந்து போகின்றீர்! முனி வனாகிய என் சொல் பொய்யாகுமோ? ஆகாது.

### விளக்கவுரை

உலூகமுனிவன் முதன் முதல் சாமம், தானம் ஆகிய இரண்டு உபாயங்களைக் கடைப்பிடித்துப் பேசினான்; இரண்டாம் நிலையில் பேத உபாயம் தொனித்தது. மூன்றாம் நிலையில் 'தண்டம்' என்ற உபாயத்தை அடிப்படையாகக் கொண்டு கூறுகிறான்.

ஒரு வினையைச் செய்ய எண்ணும்போது அரசன் அவ்வினையினால் வரும் பயனையும், அவ்வினையினால் தம்மை விட்டு நீங்கும் பயனையும் கணக்கிட்டு ஆராய வேண்டும். துரியோதனன் முதலானோர் வெற்றி யையே நினைத்து அழிவைக் கருதாமல் போர் மேற்கொண்டால் அழிவார் எனக் குறித்தான். **வெல்லுதல் அரிது**-அரிது, இல்லை என்ற பொருள் தந்தது.

பொன்றுதல்-அத்திப்பழத்தில் தோன்றிப் பயனின்றி அழியும் கொசுக்களினும் இழிவாக, வகை பெற்று ஒருசேர அழிதல். கண் ணன் பாரதப் போரில் பாண்டவர் பக்கம் துணைநின்று செய்ததெல்

லாம் பாண்டவர் பொருட்டாக அல்ல; துரியோதனுதியர்களுக்கு வீரமரணம் கிடைக்க வேண்டுமே என்று பாடுபட்டதுதான். உலூகன் ஞானக் கண்ணில் பார்க்கும்போது அனைவரும் செத்துக் கொண்டிருப்பது தெரிகிறது. இப்பொழுதே இறந்து கொண்டிருக்கும் நீங்கள் எங்கே போரில் வெல்லப் போகிறீர்கள் என்று எடுத்துக் காட்டத்தான் வீமனும் விசயனும் களம் புகுங்கால் 'அழிவீர்' என எதிர்காலத்தாற் கூறுமல் 'பொற்றியே விடுகின்றீர்' என நிகழ் காலத்தாலேயே குறிப்பிட்டுக் கூறினுன்.

முனிவர் சொல் பொய்க்காது என்று உலூக முனிவன் உண்மையை நிலை நிறுத்தியவாறு.

**இலக்கணம்**

அன்றியே-வினைமாற்றுப் பொருளில் வந்த குறிப்பு வினையெச்சம். ஏ-அசைநிலை.
மலைகுவம்-தன்மைப் பன்மை எதிர்கால வினைமுற்று. கு-சாரியை.
கருதாமல்-'மல்' ஈறு எதிர்மறை வினையெச்சம்.
வென்றியே-'வெற்றி' என்பதன் தொகுத்தல் விகாரம் ஏகாரம் பிரிநிலை.
'எதிர்த்திரேல்'-முன்னிலைப் பன்மை வினைமுற்று எச்சப் பொருள் வந்தது.
அரிது-குறிப்பு வினைமுற்று.
அம்மா-வியப்பு இடைச் சொல்.
பொன்றியே-செய்து என் வாய்பாட்டு வினையெச்சம்; ஏ தேற்றப் பொருள்.
விடுகின்றீர்-கால வழுவமைதி; 'இர்' விகுதி.
பொய்க்குமோ-பொய் என்பது பெயரன்று; வினைப்பகுதி. அஃறிணைப் படர்க்கை எதிர்காலத்தை உணர்த்தும் செய்யும் என்; வாய்பாட்டு வினைமுற்று 'ஓ' எதிர்மறை இடைச்சொல்.
பொய்யாதே-எதிர்மறை வினைமுற்று; ஏ, தேற்றப் பொருள்.

## 12. பூசைபோற் பேசாமல் பூசலிற் பார்க்கலாம் எனத் துரியோதனன் கூறுதல்

**உரை**

என்று பூசுரன் இயம்பலும்-இவ்வாறாக, பூவுலகத் தேவனுகிய உலூகன் சொல்லலும்,
பூசியது குங்குமம் எழில் உறும்-பூசப் பெற்றதாகிய குங்குமம் குழம்பு மேலும் அழகைப் பொருந்துகின்ற,
இணைமேரு குன்று அனைய-இரண்டாக இணைந்த மேரு மலைகளைப் போன்ற,
பொன் தடம் புயம்-அழகிய பெரிய தோள்களை உடைய,
குருகுல வய வேந்தன்-குருகுலத்தில் வந்த வெற்றியை உடைய அரசனுகிய துரியோதனன்,
இன்று-இப்பொழுது,
பூசைபோல்-பூனையைப் போல்,
இருந்த உழி உரைக்கும்-இருந்த இடத்திலேயே இருந்து வீரம் பேசும்,
ஈது இத்தகைய நிலைமை,
இகலது அன்று-வீரமுடையது அன்று,
இருவர்க்கும் - பாண்டவர்களா

கிய அவர்களுக்கும் எங்களுக்கும், **துன்று பூசலில்**-வந்து இணையும் போரில, **ஆண்மையும் தோள் வலுமையும் காணல் ஆம்**-ஆளும் தன்மை எவரிடம் உண்டு என்பதையும், அழிக்கும் தன்மையுடைய தோள் வலிமை எங்கிருக்கிறது என்பதையும், காட்சியளவை யாற் காணுதல் அமையும், **என்றான்**-என்று கூறினான்.

## தெளிவுரை

மேலே குறிப்பிட்டவாறு மூன்று நிலைகளில் உலூகன் தூதுரையைக் கூறி முடித்ததும், பூசப்பெற்ற குங்குமக் குழம்பு மேலும் அழகைச் செய்கின்ற இரண்டாக இணைந்த மேருமலைகளைப் போன்ற அழகிய பெரிய தோள்களையுடையவனும் குருகுலத்தில் வந்த வெற்றியை உடையவனும் ஆகிய துரியோதனன் "இப்பொழுது பூனையைப் போல் இருந்த இடத்திலேயே இருந்து கொண்டு வீரம் பேசும் நிலைமை வீரமுடையது அன்று; எங்கள் இரு திறத்தார்க்கும் வந்து இணையும் போரில் ஆண்மையும் தோள் வலிமையும் எங்கிருக்கின்றன என்பதைக் கண்ணால் கண்டே தெரிந்து கொள்ளலாம்" என்று கூறினான்.

## விளக்கவுரை

சுரர்-தேவர். பூசுரன்-பூவுலகில் தேவனைப்போல விளங்குபவன்.

துரியோதனனின் வீரத்தை ஒன்றே முக்கால் வரிகளில் எடுத்தியம்புகின்றார். அவன் தோள்களில் குங்குமக் குழம்பு பூசப்பெற்றுள்ளது. பூசப்பெற்ற குங்குமக் குழம்பு அழகாக விளங்கித் தோன்றுகிறது என்று குறிப்பிட்டார் ஔவையார் தொண்டைமானின் படைக்கலக் கொட்டிலைப் பார்த்ததும், அங்குள்ள ஆயுதங்கள் நெய் பூசப்பெற்று மாலையணியப் பெற்று அழகாக இருக்கின்றன என்று கூறியதை மனத்தில் வைத்து இவ்வாசிரியர் இவ்வாறு பேசுகிறார். துரியோதனன் தோள் அழகுடையன என்பதிலிருந்து வீரத்தின் காரணமான போர்ப் பயிற்சி இல்லை என்பது தெரிய வருகிறது. மேரு என்பது பெரிய மலை குன்று-சிறுமலை. துரியோதனன் தோள்கள் இரண்டாக இணைந்த மேருக் குன்றுகளைப் போன்றவை என்று முரண் பட இணைத்தார். பருமையால் மேருவையும் திண்மையால் சிறிய குன்றையும் போன்ற தோள்கள் என்பதாம். **பொன் தட புயம்**-அழகிய பெரிய தோள்.

**வய வேந்தன்**-வெற்றியையுடைய துரியோதனன். இவன் எப்போது என்ன வெற்றி பெற்றான்? குருகுலத்தில் வந்து பிறந்தானே அதுதான் அவன் பெற்ற வெற்றி. இக்கருத்தை அமைத்தே "**குருகுல வய வேந்தன்**" என்றார்.

**பூசை**-பூனை. இருந்த இடத்தில் இருந்துகொண்டே உறுமுவது பூனை. இருந்த இடத்தில் இருந்து கொண்டு வீரம் பேசுகிறவர்களைப் பூனை என்றான் துரியோதனன்.

**ஆண்மை**-ஆளும் தன்மை; மற்றவைகளைத் தன்னுள் அடக்கி, அவைகளை மேலிருந்து ஆளுதல்; **தோள் வலிமை** என்பது மற்றவைகளைத் தான் அழித்து, தான் மற்றவைகளால் அழிவுபடாமல் இருத்தல். எனவே, ஆளுந்தன்மையும் அழிக்குந்தன்மையும் எவரிடத்து உள்ளன என்பதைப் போரில் கண்ணாலேயே காணலாம் என்றான்.

### இலக்கணம்

**குங்குமம்**-இருமடியாகு பெயர். மரத்தின் பெயர் பூவுக்கு ஆகிப் பின்னர் அதனாற் செய்யப்பெற்ற சாநதுக்கு ஆகியது.
**இணை மேரு**-வினைத்தொகை.
**பூசியது**-தொழிற்பெயர்.
**அனைய**-உவம வுருபு.
**தடம் புயம்**-உரிச்சொல் தொடர்.
**வய வேந்தன்**-இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன தொக்க தொகை.
**இருந்த உழி**-'உழி' ஏழாம் வேற்றுமை உருபின் பொருள்பட வந்த சொல்; அகரம் தொகுத்தல் விகாரம்.
**இது**-ஈது-சுட்டு நீண்டது.
**இகலது, அன்று**-குறிப்பு வினைமுற்றுக்கள்.
**துன்று பூசல்**-வினைத்தொகை.
**பூசல், காணல்**-தொழிற் பெயர்கள்.

## 13. விதுரனின் அறிவுரை

### உரை

**கல்வி**-கல்வியும்,
**தூயநெஞ்சு**-தூய்மையான நெஞ்சமும்,
**இலாத** - அமைந்து சிறப்புறுத் தாத,
**அசுயோதனன்**-அந்தத் துரியோதனன்,
**கழறிய மொழி கேட்டு**-இடித்துரைத்த சொற்களைக் கேட்டு,
**வில் விதூரன்**-வில் வித்தையில் வல்லவனாகிய விதுரன், துரியோதனை நோக்கி,
**இ வேதியன் மொழிப்படி**-இந்த அந்தணனாகிய உலூகன் கூறிய வார்த்தையின் வண்ணம்,
**மேதினி வழங்காமல்**-பாண்டவர்களுக்கு அவர்களுடைய நாட்டைக் கொடுக்காமல்,
**புல் விதூடகரினும்**-இழிவுத் தன்மையையுடைய விதூடகர்களைக் காட்டிலும்,
**உணர்விலாதவர் புகலும்**-அறிவு இல்லாதவர் கூறுகின்ற,
**வாசகம் கேட்கின்**-சொற்களைக் கேட்டால்,
**செல்வி தூரியள் ஆய்விடும்**-செல்வத்துககு உரியவளாகிய இலக்குமி உனக்கு மிகத் தூரததில் இருப்பவள் ஆய்விடுவாள்,
**சுற்றமும் சேனையும் கெடும்**-சுற்றத்தார்களும் சேனையும் அழியும்,
**என்றான்**-என்று அறிவுரை கூறினான்.

### தெளிவுரை

கல்வியும் அனுபவத்தால் தூய்மை செய்யப் பெற்ற நெஞ்சமும் அமையப்பெறாத அத் துரியோதனன் இடித்துக் கூறிய வார்த்தைகளைக் கேட்டு, வில் வித்தையில் வல்லவனாகிய விதுரன் துரியோதனனைப் பார்த்து இந்த அந்தணன் கூறிய வார்த்தையின் வண்ணம் பாண்டவர்களுக்கு அவர்களுடைய நாட்டைக் கொடுக்காமல் இழிந்த விதூடகர்களைக் காட்டிலும் அறிவு இலலாதவர் கூறுகின்ற சொற்களைக் கேட்டால் செல்வத்துக்கு உரிய இலக்குமி உனக்கு நெடுந்தூரத்தில் இருப்பவள் ஆவாள்; சுற்றத்தார்களும் சேனையும் கெடும் என்று அறிவுரை கூறினான்.

## விளக்கவுரை

கல்வி யறிவும் அனுபவ அறிவும ஒருவனைப் பண்படுத்தும். கல்வி யில்லாத காலத்து அனுபவ அறிவு ஒருவனைக் காக்கும்; அனுபவம் இல்லாத காலத்தில் கல்வி துணை செய்யும். துரியோதனன் உண்மையை உணர்ந்து நல்வழியில் நடப்பதற்கு இரண்டும் இல்லை என்றார். படித்தவனும் இல்லை; பண்பாளர்களாகிய பக்கத்துச் சான்றோர் சொற்களுக்குச் செவி மடுத்தவனும் இல்லை.

> "மதி நுட்பம் நூலோடு உடையார்க்கு அதிநுட்பம்
> யாவுள முன்னிற் பவை"

என்ற குறள் நூலறிவையும் அனுபவ அறிவையும் உணர்த்தியது. கோவலனைக் கொல்ல வந்த இருவரில் ஒருவன் முதியவன்; அவன் சிந்தித்தான் இவன் கள்வன் ஆவானா? என்று; அடுத்து இருந்தவன் **"கல்லா இளையன்"** வெட்டிவிட்டான். இக்கருத்தை எடுத்து ஆசிரியர் **கல்வி தூய நெஞ்சு இலாத சுயோதனன்** என்றார்.

துரியோதனன் கல்வியும் தூய நெஞ்சும் இல்லாமல் இருத்தலோடு, இருக்கக் கூடாத கெட்ட பண்பையும் கொண்டிருந்தான். அது விதூஷகர்களைக் காட்டிலும் இழிந்தவர் சொற்களைக் கேட்டு நடத்தல். சகுனி, கன்னன் போன்றவர்களை விதுரன் இவ்வகையிற் சேர்த்துச் சுட்டிக் கூறினான். **புல்**-புல்லின் தன்மை, இழிவுத்தன்மை! புறத்தே வயிரமுடையதாகக் காட்டி, உள்ளே வெற்றிடமாக இருத்தல்; மரம், மூங்கில் முதலியன புல் வகையைச் சாரும். வெளிப்புறத்தில்; திண்மை இருக்கும்; உள்ளே தொளையிருந்து வன்மை இருக்காது. அவ்வாறே வெளித்தோற்றத்தில் வன்மையும் அறிவையும் உள்ளவர்களைப் போலக் காட்டி, உள்ளகத்தே ஒன்றும் இல்லாது இருத்தல். அறிவும் வீரமும் உடையவர்களாகக் காட்டி ஒன்றும் இல்லாதிருப்பவர் கன்னனும் சகுனியும். **விதூஷகன்**-நகையூட்டுதல் என்ற ஒன்றையே பொருளாக வைத்துப் பொருளற்ற பேச்சுக்களைப் பேசுபவன். சாகுந்தலம் முதலிய நாடகங்களில் இத்தகைய பாத்திரப் படைப்பைக் காணலாம். விதூஷகனாவது அறிவற்றவனே ஆயினும் மற்றவர் இன்பத்துக்காகப் பாடுபடுகிறான். கன்னனும் சகுனியும் அறிவுள்ளவர்போல நடித்து, தங்கள் நலத்தையே காக்கப் பாடுபடுகின்றனர் ஆகையால் விதூஷகரினும் தாழ்ந்தவர் என்பதாம்.

**தூரியள்**-தூரத்தில் இருப்பவள் ஆவாள். இலக்குமி நீங்குவள் என்பது கருத்து.

## இலக்கணம்

**கல்வி தூய நெஞ்சு**-உம்மைத் தொகை.
**தூய**-குறிப்புப் பெயரெச்சம்.
**இலாத**-'இல்லாத' என்பதன் இடைக்குறை.
**விதூரன்**-'விதுரன்' என்ற சொல்லின் நீட்டல் விகாரம்.
**வழங்காமல்**- மல்' ஈற்று எதிர்மறை வினையெச்சம்.
**புல் விதூடகரினும்**-பண்புத் தொகை. 'இன்' உருபு ஐந்தாம் வேற்றுமை உறழ்ச்சிப் பொருள்.
**புகலும் வாசகம்**-பெயரெச்சம்.
**கேட்கின்**- செயின் என்னும் வாய்பாட்டு வினையெச்சம்.
**தூரியள்**-குறிப்பு வினைமுற்று.

## 14. துரோணனும் கிருபனும் கூறிய அறிவுரை

### உரை

**நீ**-துரியோதனா! நீ,
**திரத்து வாய்மை தவறி**-நிலையான பொருள் என்ற ஒன்றின் வாய்மைக்கு மாருக.
**மற்று அவருடன்** - அவ் வாய்மைக்கு உடன்பட்டு வாழ்ந்த அப் பாண்டவர்களுடன்,
**சேனையும் திறலும் கொண்டு**-சேனைகள் வலிமை ஆகியவற்றையே துணையாகக் கொண்டு,
**உரத்து**-வலிமை வாய்ந்த போர்க் களத்தில்,
**வாள் அமர் உடற்றலோ**-வாட் போர் செய்யத் தொடங்குதலோ,
**பெரும் பிழை**-பெருந்தவருகும்,
**உடற்றனை ஆம் ஆகில்**-மாறுபட்டு அப்போரைச் செய்வாயாம் ஆனல்,
**தனஞ்சயன் தனு** - அர்ச்சுனனுடைய வில்,
**சரத்து வாய் தொறும்** - அம்பு தைத்த வழியெல்லாம்,
**சோரி கக்கிட**-இரத்தம் பீறிட்டெழ,
**விடும்**-அம்புகளை விடும்,
**என்று**-,
**பரத்துவாசனும்** - பரத்துவாசன் மகனுகிய துரோணனும்,
**பகர்ந்தனன்** - பாகுபடுத்திச் சொன்னுன்,
**கிருபனும்**-அவன் மைத்துனனுகிய கிருபனும்,
**பகர்ந்ததே பகர்ந்திட்டான்**-அவன் கூறியதைப் போன்றவைகளையே கூறினுன்.

### தெளிவுரை

துரியோதனா! நீ நிலைத்த பொருளின் வாய்மைக்கு மாருக நடந்து, அவ்வாய்மைக்கு உடன்பட்டு நடந்த பாண்டவர்களுடன் சேனைகள், வலிமை ஆகியவற்றையே துணையாகக் கொண்டு வலிமை அமைந்த போர்க்களத்தில் வாட்போர் செய்யத் தொடங்குதலோ பெருந்தவருகும். மாறுபட்டு அப்போரைச் செய்வாயாம் ஆனல் அர்ச்சுனனுடைய வில், அம்பு தைத்த வழியெல்லாம் இரத்தம் பீறிட்டெழ அம்புகளை விடும் என்று பரத்துவாசன் மகனுகிய துரோணன் பகர்ந்தான்; கிருபனும் துரோணன் கூறியதைப் போன்ற வார்த்தைகளையே கூறினுன்.

### விளக்கவுரை

உலகில் நிலையான பொருள், நிலையற்ற பொருள் என இரண்டு உண்டு. நிலையான பொருள் ஒன்றே. அது 'சத்யம்' எனப்படும். 'சத்'—உள் பொருள். அப்பொருளின் தன்மையை உணர்ந்து அத் தன்மைக்கு மாறுபடாமல் நடக்க வேண்டும். இதுவே வாழ்வியல். 'ஸ்திரம்' என்ற வடமொழிச் சொல் 'திரம்' என நின்றது. உள் பொருளின் தன்மைக்கு மாருக நடப்பவன் எவனுயினும் அவன் எவ்வளவு சேனைகளையும் வலிமைகளையும் கொண்டிருந்தாலும் வெற்றி அடையான். துரோணன் கூறுவது: 'துரியோதனா! நீ சத்யத்துக்கு மாறுபட்டு நடந்து போரிட முயலுகிருய். ஆனல் பாண்டவர்கள் சத்யத்துக்கு உடன்பட்டு நடப்பவர்கள். இருவரும் சத்யத்தையே கடைப்பிடிப்பவர்களாக இருந்து சண்டை நேர்ந்தால் வில் வாள் சேனை முதலியவைகளின் துணையால் வெற்றியை எதிர்பார்க்கலாம். சத்தயம் தவறியவர்களிடத்து உள்ள, ஆற்றல் வாய்ந்த வில்

முதலியவைகள் சத்திய வழியில் நடந்தவர்களை ஒன்றும் செய்யா. சத்யம் தவறாமையோடன்றி விசயனிடம் வில்லாற்றலும் இருக்கிறது என்பதைச் சுட்டிக் காட்டினான்.

உரம்-வலிமை. வலிமையை மதிப்பிடும் இடமாகிய போர்க் களத்தைக் குறித்தது.

தனஞ்சயன்-அருச்சுனன். தனு-வில். தனஞ்சயன் வீரத்தைக் குறிக்கவில்லை. அவனுடைய தனுவே தைத்த இடமெல்லாம் இரத்தம் பீறிட்டெழுமாறு அம்புகளை விடும் என்று வில்லின் செயலாக அமைத்துக் கூறினார். சரத்துவாய்-அம்பு தைத்த இடம். சோரி கக்கிட-இரத்தம் பீறிட்டெழுமாறு.

துரோணன்-பரத்துவாசரின் மகன்; கிருபன்-துரோணரின் மைத்துனன. இவர்கள் வில்வித்தை கற்பித்தவர்கள். துரோணன் சொன்னவைகளையே கிருபன் சொல்லவில்லை, அவை போன்ற வார்த்தைகளைச் சொன்னான்.

### இலக்கணம்

திரம்-பண்பாகு பெயர்.

திரத்து வாய்மை-ஆறும் வேற்றுமைத் தொகை.

வாளமர்-மூன்றும் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்க தொகை.

உடற்றல்-தொழிற் பெயர்.

உடறறனை: முன்னிலை ஒருமை வினைமுற்று.

ஆகின்- செயின்' என்னும் வாய்பாட்டு வினையெச்சம்.

சரத்துவாய்-ஏழாம் வேற்றுமை உருபின் பொருள்பட வந்த சொல்.

கக்கிட-செய என் வாய்பாட்டு வினையெச்சம் காரியப் பொருளில் வந்தது.

பகர்ந்தது-வினையாலணையும் பெயர். இங்கே உவமையாக நின்றது.

## 15. வீடுமன் திருதராட்டிரனிடம் கூறுதல்

### உரை

**வீடுமன்**-கங்கையின் மகனாகிய பீஷ்மன்,

**மன்னவ** - (திருதராட்டிரனைப் பார்த்து) அரசனே!

**காடு மன்னும்**-காட்டிலே தங்கி வாழ்ந்த,

**நின் புதல்வருக்கு**-உன்னுடைய மக்களாகிய பாண்டவர்களுக்கு,

**அறுதி செய் காலமோ கழிந்தன்று**-வரையறை செய்த கால அளவு கடந்துவிட்டது,

**நாடு கொடாமல்**-இனியும் அவர்களுக்குரிய நாட்டைக் கொடுக்காமல்,

**வெம்சமர் பொர**-வெம்மையாகிய போரைச் செய்வதற்கு,

**நாடினை எனில்**-விரும்பினை என்று சொன்னால்,

**நாளை**-நாளைக்கு வர இருக்கும் போரில்,

**அருச்சுனற்கு எதிர்** - அருச்சுனனுக்கு எதிராக நின்று,

**கோடு மன்னு வில்**-வளைவைப் பொருந்திய வில்லை,

**குனிக்க வல்லவர் எவர்**-வளைக்க வல்லவர் யார் இருக்கிறார்கள்?

**என்று**-என்று,

**திருத்தனயனோடு**-அரச செல்வத்தோடு அமைந்த மகனோடு,

வெகுண்டு-சினங்கொண்டு, உறுதிகள்-உறுதியைத் தரும் அறிவுரைகளை, உரைத்தனன்-சொன்னான்.

## தெளிவுரை

வீடுமன் திருதராட்டிரனைப் பார்த்து, 'அரச! காட்டிலே தங்கி வாழ்ந்த உன் புதல்வர்களுக்கு வரையறை செய்த கால அளவு கடந்து விட்ட பிறகும் அவர்களுக்குரிய நாட்டைக் கொடுக்காமல் வெம்மையாகிய போரைச் செய்வதற்கு விரும்பினையென்றால், நாளை நடைபெறவிருக்கும் போரில் அருச்சுனற்கு எதிராக நின்று, வளைவைப் பொருந்திய வில்லை எடுத்து வளைப்பதற்கு யார் உன் பக்கத்தில் இருக்கிறார்கள்?' என்று செல்வ மகனாக அமைந்த திருதராட்டிரனோடு வெகுண்டு உறுதியுரைகளை உரைத்தனன்.

## விளக்கவுரை

வீடுமன் திருதராட்டிரனைப் பார்த்து வெகுண்டு கூறினான். சந்தனு மன்னனுக்கும் கங்கைக்கும் பிறந்த ஏழு குழந்தைகளைக் கங்கையிலே போட்டுக் கொன்றாள் கங்கை; எட்டாவதாகப் பிறந்தவன் வீடுமன். இவனையும் கொல்லப் போனபோது தடுத்தான் சந்தனு. இவனை விட்டுவிட்டு மறைந்துவிட்டாள். சந்தனு மன்னனின் பெயரர்களே திருதராட்டினன், பாண்டு முதலியோர். இச் சந்ததி சிறக்க வேண்டும் என்று அரும் பாடுபட்டவன் வீடுமன். வீடுமனைக் காட்டிலும் சிறந்த தியாகியைப் பாரதத்திற் காண முடியாது. குலம் விளங்கப் பாடுபட்ட அவன், குலம் அழியப் பாடுபடும் குருடனை நோக்கி வெகுண்டு கூறுவானாயினன். துரியோதனாதியர், பாண்டவர் இன்று வந்தவர்கள். குருடனாகிய திருதராட்டிரனையும், சோகை நோய் பிடித்த பாண்டுவையும் வைத்துத் தன்னாண்மையால் அரசை நடத்தியவன் வீடுமன். எனவே, அவன் திருதராட்டிரனிடம் கூற முற்பட்டான்.

பாண்டுவும் திருதராட்டிரனும் இருந்த காலத்தில் இருவரும் மேற்கொள்ள வேண்டிய ஒற்றுமையை அன்று உபதேசித்த அதே வீடுமன் இன்று பாண்டவர்களை உன் புதல்வர்கள் என்று சுட்டிக்காட்டினான். பிள்ளைச் சண்டையைப் பெரிய சண்டையாக்கிக் காட்டுக்கு அனுப்பினாய்; பாண்டவர்கள் சூதாட வந்தது தவறு என்பதை அவர்கள் உணரட்டும் என அன்று இருந்தேன். இன்று அவர்களை ஆதரிக்க வேண்டிய நீ போரினை நாடுகிறாய் எனில் நீ வஞ்சகம் உடையனாகிறாய் என்ற கருத்தில் வெகுண்டுரைத்தான் வீடுமன்.

போரில் அருச்சுனன் வந்து நின்றால் அவனுக்கு எதிராக நின்று வில்லை எடுத்து வளைக்கும் ஆற்றலுடையவர் உன்னிடம் யார் இருக்கிறார்கள்? என்று கேட்டு, குடி முழுதும் அழிக்கின்றாயே எனக் கனன்றான்.

இனி, காடு மன்னும் நின் என்பதற்குக் காட்டுக்குப் போய்த் தவம் செய்து செய்த தீமைகளுக்குப் பரிகாரம் தேட வேண்டியவனாகிய உன்னுடைய (திருதராட்டிரனுடைய) என்று திருதராட்டிரனுக்கு அடைமொழியாக ஆக்கியும் கூறுவர்.

## இலக்கணம்

மன்னும் புதல்வர்-பெயரெச்சம்.

கழிந்தன்று-'கழிந்தது' என்பது பொருள். அஃறிணை ஒருமைப் படர்க்கை இறந்தகாலத் தெரிநிலை வினைமுற்று.

மன்னவ-அண்மை விளி.
கொடாமல்- மல்' ஈற்று எதிர்மறை வினையெச்சம்.
வெஞ்சமர்-பண்புத் தொகை.
பொர-செய என வாய்பாட்டு வினையெச்சம்.
நாடினை-முன்னிலை ஒருமை வினைமுற்று.
கோடு-முதனிலைத் தொழிற் பெயர்.
எவர்?-வினைப்பெயர். எதிர்மறைப் பொருள் உணர்த்தியது.
உறுதிகள்-பண்பின் அடியாகப் பிறந்த பெயர்.
வெகுண்டு-செய்து என் வாய்பாட்டு வினையெச்சம்.
அன்று, ஏ-அசை நிலைகள்.

## 16. கன்னன் வீடுமனைப் பழித்துக் கூறுதல்

### உரை

**கன்னனும்**-வீடுமன் கூறிய வார்த்தைகளைக் கேட்ட கன்னனும்,
**திறல் காங்கேயன் தன்னோடு**-வலிமை பொருந்திய கங்கையின் மகனாகிய வீடுமனோடு,
**கண் சிவந்து**-கோபங்கொண்டு,
**முன்னமே உகிர் இழந்த வெம்புலி என**-முன்னமேயே நகங்களை இழந்து சக்தியற்ற கொடிய புலியைப் போல,
**அரண் அழி**-இராமனால் வலிமை அழிக்கப் பெற்ற,
**முனி மைந்தன் தன்னை**-'ஜமதக்னி' முனிவரின் மகனாகிய பரசுராமனை,
**மற்று**-மீள,
**அவனிடத்து நீ கற்ற**-அதே பரசுராமனிடத்தில் நீ கற்றுக் கொண்ட,
**வெம் சரத்தின்**-கொடிய வில்வித்தையால்,
**வென்றமை அல்லால்**-வெற்றியெய்தியமை உண்டேயன்றி,
**என்ன சேவகம் கொண்டு நீ**-எத்தகைய வீரச் செயலை நீ செய்தாய் என்பதை அடிப்படையாக வைத்துக் கொண்டு,
**யாரையும்**-எல்லாரையும்,
**இகழ்ந்து உரைப்பது**-இகழ்ந்து பேசுவது,
**என்று**-என்று,
**உரை செய்தான்**-கூறினான்.

### தெளிவுரை

வீடுமன் கூறிய வார்த்தைகளைக் கேட்ட கன்னனும் கங்கையின் மகனாகிய வீடுமனோடு கோபம் கொண்டு, முன்னமேயே நகங்களை இழந்துவிட்ட கொடிய புலியைப் போல வலிமைகளையெல்லாம் இராமபிரானால் இழந்து போய்விட்ட நிலையில் உள்ள பரசுராமனை அவனிடம் கற்ற வில் வித்தையை வைத்துக்கொண்டே அவனை வென்றாய் என்ற ஒரு வெற்றியைத் தவிர வேறு எந்த வகையான வெற்றிச் செயலை நீ செய்தாய் என்பதை அடிப்படையாக வைத்துக் இகழ்ந்து பேசுவது" என்று உரை செய்தான்.

### விளக்கவுரை

கங்கையின் மகன், காங்கேயன்-தத்திதாந்த நாமம். அருச்சுனனுக்கு எதிராக வில்லை வளைப்பவர் யார் இருக்கிறார்கள் என்று வீடுமன் கூறியது கன்னனுக்குச் சினத்தை உண்டாக்கியது.

வீடுமன் செய்த வீரச் செயல் ஒன்றே. அது பரசுராமனை வென்றது. கன்னன் இவ்வீரத்தை இகழ்ந்து பேசுகிறான். பரசுராமன்

இராமனோடு எதிர்த்துத் தன் தவம் எல்லாவற்றையும் இராமனின் அம்புக்கு இலக்காக்கிவிட்டு வந்துவிட்டான். தவம் இழந்த பரசுராமனை நகம் இழந்த புலிக்கு உவமையாக்கினான் கன்னன். வீடுமன் வென்றது வலிமை இழந்த பரசுராமனைத்தான். மேலும் பரசுராமனிடம் கற்ற வில் வித்தையைக் கொண்டே பரசுராமனை வென்றான். இது தவிர இக்குருகுலத்து ஆட்சிக்காக என்ன வீரச் செயலை நீ புரிந்துவிட்டாய். அதைப் பெருமைப்படுத்தி மற்றவர்கள் வீரத்தை இகழ்ந்து பேசுகிறாய் என்பதே கன்னன் கூறியது. **சேவகம்-வீரச் செயல்.**

கன்னன் வீடுமனையே யன்றிப் பரசுராமனையும் இகழ்ந்துரைத்தான். கன்னன் அந்தண வடிவங்கொண்டு பரசுராமனிடம் வில் வித்தை பயின்றான். ஒருநாள் கன்னன் மடியில் தலைவைத்துப் படுத்துக்கொண்டிருந்தான் பரசுராமன். கன்னனின் வில்வித்தை பாரதப் போருக்குத் தடையாக இருக்கும் என்பதை உணர்ந்த கண்ணன் (கிருஷ்ணன்) வண்டு உருவம் எடுத்து, கன்னனின் தொடையில் தொளைத்துக் கொண்டே போனான். அசைந்தால் குருவின் நித்திரை கெடும் என அவ்வலியைப் பொறுத்துக் கொண்டே யிருந்தான் கன்னன். வண்டு செய்த தொளையின் வழியே இரத்தம் பெருக்கெடுத்து நிறைந்தது. இரத்தத்தினால் சில்லிப்புப் பெற்று விழித்த பரசுராமன், இரத்தம் நிறைந்திருப்பதைக் கண்டு, அந்தணனாயின் இரத்தத்தைக் கண்டதும் கலங்குவானே; இவன் அரச குலத்தவனே என்று அறிந்து கோபமுற்று வினவ, கன்னன் உண்மையை ஒத்துக் கொண்டான். உடனே பரசுராமன் இன்று என்னிடம் கற்றவித்தை உனக்குத் தக்க சமயத்தில் பயன்படாது போவதாக'' எனச் சாபமிட்டான். அதுவே கன்னன் பரசுராமனை **'முரணழி முனி மைந்தன்'** என இகழக் காரணம்.

**வீடுமன் பரசுராமனை வென்றது**-வீடுமன் பரசுராமனிடம் வில் வித்தை கற்றவன். மூன்று பெண்மக்களை உடைய காசிராஜன் சுயம்வரம் ஏற்படுத்தியபோது, பிரமசரிய விரதமுடைய வீடுமன் தன் தம்பிக்காகத் தானே சென்று போட்டிகளில் வென்று அம் மூவரையும் அழைக்க, நீவிர் பிரமசரிய விரதம் உடையவராயிற்றே என்ற வினா எழுந்தது. என் தம்பிக்காக என்றனன் வீடுமன். போர் மூண்டது. வீடுமன் மூன்று பெண்களையும் வன்மையாகத் தேரில் ஏற்றி அழைத்துவரும்போது, 'அம்பை' என்ற பெயருடைய ஒருத்தி, தான் 'சாலுவன்' என்பானை முன்னமேயே காதலித்ததாகவும் தான் அவனை அடைந்து வாழ்வதற்காக விட்டுவிட வேண்டும் என்றும் வேண்டினாள். வீடுமனும் விட்டுவிட்டான். சாலுவனை அடைந்த அம்பையை அவன் ''பகைவனால் சிறை எடுக்கப் பெற்ற உன்னை யான் ஏற்கமாட்டேன்'' என்று மறுத்துவிட்டான் இரண்டுங்கெட்ட நிலையில் உள்ள 'அம்பை' மீண்டும் வீடுமனிடம் சென்றாள். பயனில்லை திக்கற்றதாக விடப்பெற்ற 'அம்பை' பரசுராமனிடம் சரண் புகுந்தாள். வீடுமனின் பிரமசரிய விரதம் அறியாது அம்பைக்கு வாக்குக் கொடுத்துவிட்ட பரசுராமன், அவளை அழைத்துக் கொண்டுவந்து வீடுமனிடம் மணக்குமாறு கூறினன். வீடுமன் மறுக்கவே போர் மூண்டது; அதில் பரசுராமன் தோற்றான் என்பதாம்.

### இலக்கணம்

வெம்புலி, வெஞ்சரம்-பண்புத் தொகைகள்,
மற்று-வினைமாற்றுப் பொருள்.
சரத்தின்-ஐந்தாம் வேற்றுமை; ஏதுப் பொருள்.
சரம்-வித்தையைக் குறித்தது. சரத்தை இயக்கும் கருவியாகிய ஞானம் காரியவாகு பெயர்.
வென்றமை-'மை' ஈற்றுத் தொழிற் பெயர்.
யாரையும்-முற்றும்மை.
சேவகம கொண்டு-மூன்றும் வேற்றுமைச் சொல்லுருபு.

## 17. வீடுமன் கன்னனைப் பழித்துக் கூறுதல்

### உரை

**அடா**-வீடுமன் கன்னனை நோக்கிக் கூறும் இழிவுரை,
**தூம வெம் கனல்**-புகையுடன் கூடிய வெம்மையான நெருப்பில்,
**தோன்றிய தோகை**-பிறந்த மயில் போன்ற சாயலையுடைய திரௌபதி,
**அம் தொடையல் சூட்டிய நாளில்**-அழகிய மாலையை அருச்சுனனுக்குச் சூட்டிய காலத்தில்,
**நாமம்**-அச்சத்தைத் தருகிற,
**வெம் சிலை**-கொடிய வில்லுடன்,
**நாண் எடுத்தனை**-நாணினை ஏற்றி,
**நரனொடும் போர் செய்தாய்**-நரர்களில ஒருவனுன அருச்சுனனோடு போர் செய்தாய், (இது நரவெற்றி, இனி, சுரவெற்றி ஒன்று சொல்வேன் கேள்).
**தாம வெண் குடை நிருபனை**-மாலைகள் தொங்குகின்றவெண் கொற்றக் குடையினையுடைய அரசனுகிய துரியோதனனை,
**அந்தர சரிதர்**-ஆகாயத்தே சஞ்சரிக்கும் வித்தியாதரர்கள்,
**கொண்டு ஏகாமல்** - எடுத்துக் கொண்டு போகாமல்,
**வீமன் வெம்சிறை மீட்ட நாளினும்**-வீமனுனவன் வந்து அவ் வித்தியாதரர்களின் பிடியிலிருந்து துரியோதனனை மீட்டுக் கொண்டு வந்தபோதும்,
**திறல் வினை**-வலிய செயலாகிய போரை,
**புரி முனை**-செய்கின்ற போர்க் களத்தில்,
**வென்றாய்**-போர் செய்து வெற்றி பெறறாயல்லவா?

### தெளிவுரை

வீடுமன் கன்னனை நோக்கி, "அடா! புகையுடன் கூடிய வெம்மையான நெருப்பில் தோன்றிய மயில் போலும் திரௌபதி அழகிய மாலையை அருச்சுனனுக்குச் சூட்டிய காலத்தில் அச்சத்தைத் தருகிற கொடிய வில்லுடன் நாணினை ஏற்றி நரர்களில் ஒருவனுன அருச்சுனனோடு போர் செய்தாய். (வெற்றி பெற்றாய்; இது நர வெற்றி.) இனி மாலைகள் தொங்குகின்ற வெண்கொற்றக் குடையினை உடைய துரியோதனனை வானத்தில் சஞ்சரிக்கும் சித்திரசேனன் முதலிய கந்தருவர்கள் தூக்கிச் சென்றபோது அவர்களுடைய கொடிய பிடிகளிலிருந்து வீமன் துரியோதனனை விடுவித்தபோதும், நீ வலிமையுடைய பெரிய போர்த் தொழிலைச் செய்யும் இடமான போர்க்களத்தின் கண்ணே வீமனைப் போர் செய்து வென்றாய் அல்லவா! (இது சுர வெற்றி.)

### விளக்கவுரை

வீடுமன் கன்னனை இகழ்ந்து கூறுவதாக இரண்டு செயல்களை எடுத்துக் கூறுகிறான், ஒன்று நர வெற்றி; இன்னொன்று சுர வெற்றி. திரௌபதி வேள்விக் குண்டத்தில் தோன்றியவள். தூமம்-புகை. மிக வெப்பமான நெருப்பில் புகை இராது. வேள்விக் குண்டத்தில் நெய்ப் புகையும் தவமாகிய வெம்மை வாய்ந்த நெருப்பும் இருக்கும். பாஞ்சால அரசனாகிய துருபதன் செய்த காமவேள்வியில் அமைந்த தீயில் தோன்றியவள் திரௌபதி. துருபதன் மகள் திரௌபதி; பாஞ்சாலன் மகள் பாஞ்சாலி. தோகை-மயில் போன்ற சாயலை உடையவள். சுயம்வரத்தில் யாராலும் அறுக்க முடியாத பொறி ஒன்றை அறுத்து வீழ்த்திய அருச்சினனை திரௌபதி மாலையிட்டாள். பொறாமைக் காரணமாகக் கன்னன் பல அரசர்களைச் சேர்த்துக்கொண்டு சென்று அருச்சுனனிடம் போர் தொடுத்து அதில் தோல்வியுற்று ஓடினான். ஓடி வந்ததை வீடுமன் அடா! ஏன் திரும்பினாய் தெரியுமா! அவன் நரன் அல்லவா போர் செய்தல் இழுக்கு என்று திரும்பினாய் போலும் என்றான். இங்கே வீடுமன், காம வெஞ் சிலையின் (அச்சம் தரும் வில்) நாணை எடுக்கவில்லை; வில்லை எடுப்பதற்குப் பதில் நாணத்தை எடுத்தனை (வெட்கத்தை எடுத்தாய்) என்று ஏளனமாகக் கூறினான்.

**இரண்டாவது செயல்:** பாண்டவர் காட்டில் வசித்தபோது ஒரு நாள் தன் பெருமையை அவர்களுக்குக் காட்ட விரும்பிய துரியோதனன் ஆடம்பரத்துடன் அவர்கட்கு அருகில் கன்னன் முதலியோர் புடைசூழச் சென்றான். உடனே இந்திரன் ஏவலால் சித்திரசேனன் முதலான கந்தருவர்கள் துரியோதனனை அப்படியே தூக்கிக்கொண்டு ஆகாய வழியாகச் சென்றார்கள். கன்னன் முதலியோர் சித்திரசேனனோடு போர் தொடுத்து, அவனால் விரட்டியடிக்கப் பெற்று ஓடிவந்து விட்டார்கள். தருமபுத்திரன் வீமனை ஏவ, அவன் அருச்சுனன் துணையோடு சென்று சித்திரசேனனோடு போர் செய்து, அவன் துரியோதனனைத் தூக்கிப் போகாதவாறு தடுத்து, அவன் பிடியினின்றும் துரியோதனனை விடுவித்தான். வீமன் வந்து விடுவித்தபோது கன்னா! நீ என்ன செய்து கொண்டிருந்தாய்? ஓஹோ நீ போர்க்களத்தில் தான் சண்டை செய்வாய்; ஆகாயத்தில் சண்டை செய்யமாட்டாய் போலும். வீமன் துரியோதனனை மீட்கும்போது நீ வெற்றியை விளைவிக்கும் போர்த் தொழிலைப் பூமியில் செய்து கொண்டிருந்தாய் போலும் என இழித்துக் கூறினான்.

### இலக்கணம்

**தூமவெம்**-உம்மைத் தொகை.

**வெங்கனல், வெஞ்சிலை, வெண்குடை, வெஞ்சிறை**-பண்புத் தொகைகள்.

**தோன்றிய தோகை**-பெயரெச்சம்.

**தோகை**-இருமடியாகு பெயர். தோகை மயிலைக் குறித்து, பின் மயில் போன்ற திரௌபதியைக் குறித்தது.

**காம வெஞ்சிலை**-உரிச்சொல் தொடர்.

**வெஞ்சிலை**-பண்புத் தொகை.

**எடுத்தனை**-முன்னிலை ஒருமை வினைமுற்று.

**ஏகாமல்**-எதிர்மறை வினையெச்சம்.

**புரிமுனை**-வினைத்தொகை.

## 18. உன்னைத் தவிர விசயனை வெல்வார் யார்? எனக் கன்னனை வீடுமன் இழித்துக் கூறல்

### உரை

**ஒரு**-ஒப்பற்ற,
**தன் மா நெடும் தேரினை**-தன்னுடைய பெரிய நீண்ட தேரை,
**அறிவு உரு உத்தரன்**-தேரைச் செலுத்தும் அறிவு சிறிதும் இல்லாத உத்தர குமரன்,
**விரைந்து ஊர**-விரைவாகச் செலுத்த,
**நெருநல்**-நேற்று,
**ஆன் நிரை**-பசுக் கூட்டங்களை,
**கவர் தருமுகத்தினும்**-அருச்சுனன் மீட்டுக்கொண்டு போன போர் முனையிலும்,
**நெடும் போது நின்றனை**-நீண்ட நேரம் அவனை எதிர்த்துப் போர் செய்து நின்று கொண்டிருந்தாய், (இப்படிப்பட்டவனை நீ நாளை)
**மரு**-மணத்தையும்,
**மருஉமிழ்**-தேனையும் உமிழ்கின்ற,
**துழாயவன்**-துளசி மாலையை உடைய கண்ணன்,
**தேர்விட**-தேரைச் செலுத்த,
**மலையும் நாள்**-அருச்சுனன் போர் செய்யும் நாளில்,
**வய வாளி**-வெற்றி பொருந்திய அம்பை,
**வெருநர் மேல் விடா**-அஞ்சி ஓடுபவர்கள் மேல் விடாமல் எதிர்த்து நிற்பவர்கள் மேலேயே விடும் போரறம் கொண்டவனாகிய,
**விசயனை**-வெற்றியையே தன் பெயராகக் கொண்ட அவ் அருச்சுனனை,
**வெல்ல வல்லவர்**-வெல்லும் வல்லமை உள்ளவர்,
**நீ அலால் உண்டோ**-உன்னை யல்லால் வேறு யாரேனும் உண்டோ? இல்லை.

### தெளிவுரை

வீடுமன் மேலும் கன்னனை இகழ்ந்து கூற முற்பட்டு; தன் ஒப்பற்ற தேரை அறிந்து செலுத்தும் ஆற்றல் இல்லாத உத்தரகுமரன் விரைந்து செலுத்த அருச்சுனன் பசுக்கூட்டங்களை மீட்டுக்கொண்டு போனானே நேற்று, அப் போர்முனையில் நீ நெடுநேரம் அருச்சுனன் முன் போர் செய்து நின்றாய் அல்லவா? மணத்தையும் தேனையும் சிந்துகின்ற துளசி மாலையுடைய கண்ணனே நாளைப் போரில் தேர் செலுத்த அருச்சுனன் போர் புரியும்போது, போர்க் களத்தில் அஞ்சி ஓடுபவர் மேல் அம்பு விடாத போரறம் மேற்கொண்டு போர் செய்யும் அருச்சுனனை உன்னை யல்லாமல் வெல்ல வல்லவர் இங்கே யாரேனும் உண்டோ? இல்லை.

### விளக்கவுரை

நேற்று நடந்த செயலை நாளை நடக்க இருக்கும் செயலோடு ஒப்புமைப் படுத்திக் காட்டி இகழ்ந்துரைக்கிறான் வீடுமன்.

பாண்டவர்கள் விராட நகரில் கரந்துறையும்போது, துரியோதனன் முதலானோர், பாண்டவர்கள் விராட நகரத்தில்தான் மறைந்திருப்பார்கள் எனச் சந்தேகமுற்று; அந்நாட்டில் முன்னறிவிப்பின்றிப் படையெடுத்து அந்நாட்டுப் பசுக் கூட்டங்களைக் கவர்ந்து கொண்டு வருகிற சமயத்தில், விராட மன்னனின் இளைய மகனாகிய உத்தரன் தேரூர்ந்துவர, அத்தேரை, பேடி வடிவில் இருந்த அருச்சுனன் செலுத்தி வருகிறான். ஆனிரைகளுக்கு முன் வந்தவுடன்

ஒன்றுமறியா இளைஞனைத் தேரைச் செலுத்துமாறு சொல்லி, தானே நின்று போர் புரியலானான். பேடியுருவில் அருச்சுனன் அம்புகளுக்கு இலக்காக மாட்டாது சிறிது நேரம்கூட நிற்றலாற்றாது கன்னன் புற முதுகிட்டு ஓடிவந்தான். பசுக் கூட்டங்களை மீட்டுக்கொண்டு போய் விட்டான் பேடியுருவில் நின்ற அருச்சுனன் என்பது நேற்று நடந்த வரலாறு. ஒன்றும் அறியா உத்தரன் தேரூர நேற்று வெற்றிபெற்றான் அருச்சுனன்; நாளையோ எல்வாம் அறிந்து எல்லாவற்றையும் இயக் கும் காரணனாகிய கண்ணனே தேரூர்ந்து வரும்போது, விசயனின் போர்த்திறம் எப்படி இருக்கும்! நின்னையன்றி அவனை வெல்பவர் யார்? ஆனால் ஒன்று. நீ போரில் சாகமாட்டாய். ஏனெனில் அருச் சுனன் போர்க் களத்திலிருந்து அஞ்சி ஓடுபவர்கள் மேல் அம்பு தொடுப்பதில்லை என்ற அறத்தை மேற்கொண்டவன். ஆகையால் உன்மீது அம்பு தொடுக்க வேண்டிய அவசியம் அவனுக்கு நேராது. ஏனெனில் நீ இவ்வளவு நாளும் ஓடிவந்து தான் வரலாற்றை உண் டாக்கியிருக்கிறாயே யொழிய நின்று போர் செய்தவனில்லையே என இகழ்ந்து கூறினான் வீடுமன்.

நெருநல்-நேற்று. ஆன்+நிரை=ஆனிரை: பசுக் கூட்டம். கவர் தரு முகம்-பசுக் கூட்டங்களைக் கவர்ந்து கொண்டு வரும் சமயம். அறிவுறு உத்தரன்-போர்த் தொழிலோ, தேரோட்டும் தொழிலோ தெரியாத உத்தர குமாரன்.

மரு-மணம்: நறு-தேன். மணத்தையும் தேனையும் உமிழும் துளசியைமாலையாக உடையவன் கண்ணன். நாளை நடைபெற இருக் கும் பாரதப் போரில் கண்ணன் தேரோட்டப் போகிறான் என்பதை வீடுமன் முன்னமேயே ஞானக் கண்ணால் அறிந்து பேசுகிறான்.

அஞ்சி ஓடுபவர்மேல் அம்பு விடாதிருத்தல் போர்க்கள நீதி.

**இலக்கணம்**

மா நெடுந்தேர்-ஒரு பொருட் பன்மொழி.
விடா, உறு-ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சங்கள்.
ஊர-'செய' என் வாய்பாட்டு வினையெச்சம்.
ஆன்நிரை-ஆறும் வேற்றுமைத் தொகை.
கவர் தரு-ப திப்[?]பொருள் விகுதி.
நின்றனை-முன்னிலை ஒருமை வினைமுற்று.
நெடும்போது-பண்புத் தொகை. பொழுது என்பதன் மரூஉ.
மரு நறு-உம்மைத் தொகை.
உமிழ் துழாய்-வினைத்தொகை.
வயவாளி-உரிச்சொல் தொடர்.
வெருநர்-வெருவுனர் என்பதன் மரூஉ.
உண்டோ-'ஓ' எதிர்மறை இடைச்சொல்.

## 19. துரியோதனன் பதிலும் உலூகன் மீட்சியும்

**உரை**

**கங்கை மா மகன்**- கங்கையின் பெருமை மகனாகிய வீடுமன், **இவை இவை கழறவும்**-நீதிகளாகச் சிலவற்றையும், இகழ்வுரைகளாகச் சிலவற்றையும் சொல்லவும், **கன்னனை**-வெற்றியில்லையே யாயினும் வீடுமனையே எதிர்த்துப்

பேசிவிட்ட கன்னனை,
கசிந்து உட்கொண்டு-அன்போடு அமைய நோக்கி,
அம் கை கொட்டி நக்கு-வீடுமனை நோக்கி அழகிய கைகளைத் தட்டி ஆரவாரம் செய்து இழிவுக் குறிப்போடு சிரித்து,
இருந்த அந்தணனையும் அவமதித்து - தூதுவனாக வந்து இருந்த அந்தணனாகிய உலூக மா முனிவனையும் அவமதித்துப் பேசி,
பார் எமதே-நாட்டாட்சி எம்முடையதே.
தாங்கள் கானகம் தமது-அவர்கள் இந்நாள்வரை வசித்த காடு அவர்களுடையது,
என-என்று,
சர்ப்ப கேதனன்-பாம்புக் கொடியோனாகிய துரியோதனன்,
புகன்றனன்-கூறினன்,
அந்தப் பங்கய ஆசன முனிவனும்-தாமரை மலரில் வீற்றிருக்கும் நான்முகனை ஒத்த பெருமையுடைய அவ் வுலூக முனிவனும்,
மீண்டு போய்-திரும்பிச் சென்று,
பாண்டவர்க்கு அவை சொன்னான்-பாண்டவர்களுக்கு அங்கே நடந்தவைகளைக் கூறினான்.

## தெளிவுரை

வீடுமன் இவ்வாறு கூறியவுடன். அவற்றை மதியாமல் வீடுமனை எதிர்த்துப் பேசிய கன்னனை விரும்பிக் கொண்டாடி, வீடுமனை நோக்கி, அழகிய கைகளைத் தட்டி ஆரவாரம் செய்து. இகழ்ச்சிச் சிரிப்பைச் செய்து, தூதுவனாக வந்திருந்த அந்தணனாகிய உலூக முனிவனையும் அவமதித்து, நாடு எம்முடையதே; தாங்கள் ஆண்டு வந்த காடு அவர்களுடையதே என்று பாம்புக் கொடியோனாகிய துரியோதனன் கூறினன். தாமரை மலரை ஆசனமாகக்கொண்டு அமர்ந்திருக்கும் நான்முகனை ஒத்த உலூக முனிவனும் அங்கிருந்து மீண்டு வந்து பாண்டவர்களுக்கு அங்கே நடந்தவைகளைக் கூறினான்.

## விளக்கவுரை

வீடுமன் கூறியவை இருவகை. முதலில் உறுதிகள் கூறினன்; இரண்டாவது கன்னனை இகழ்ந்து கூறினான். ஆகையால் இவை இவை என அடுக்குத் தொடராக அமைத்தார்.

குலப் பெரியவன் என்ற முறையில் தங்களால் எதிர்த்துப் பேச இயலாத வீடுமனை எதிர்த்துப் பேசிய தன்மையை உளங்கொண்டு கன்னன் கூறியவைகளைக் கசிந்து உட்கொண்டான் துரியோதனன்.

கன்னன் கூறியவைகளைப் பாராட்டுவதுபோல் அங்கை கொட்டி நகைத்தது வீடுமனை இழிவுக்குள்ளாக்க. அந்தணரையும் அவமதித்தது என்பதில் உள்ள உம்மை வீடுமனை அவமதித்ததை எடுத்துக் காட்டியது.

''எமதே பார்; தங்கள் கானகம் தமதே'' என்பது துரியோதனன் கூறிய முடிந்த விடை.

அரவக் கொடியோன் என்னாது சர்ப்பக் கொடியோன் என்றார்; ஆராயாமல் விரைந்து முடிவு செய்தான் ஆகையால். சர்ப்பம்-விரைவாகச் செல்வது.

பங்கயம்-தாமரை. பங்கயாசனன்-தாமரையை இடமாகக் கொண்டு அமர்ந்தவன் பிரமன். பிரமனை ஒத்தவன்-உலூகன்.

**இலக்கணம்**

இவை யிவை-அடுக்குத் தொடர்.
அந்தணனையும்-உம்மை இறந்தது தழுவிய எச்சவும்மை.
எமதே பார்-தேற்றங்குறித்த 'ஏ'கார இடைச்சொல்.
ஆசனன் முனிவன்-உவமைத் தொகை.
போய்-செய்து என்னும் வாய்பாட்டு வினையெச்சம்.
அவை-வினையாலணையும் பெயர்.

# 8

# முத்தொள்ளாயிரம்

(1) **நூலாசிரியர்**—ஆசிரியர் வரலாறு தெரியவில்லை. கி. பி. 5 அல்லது 6 ஆம் நூற்றாண்டைச் சார்ந்த சைவர் இயற்றியிருக் கலாம்;

(2) **நூலின் பெயர்**—முத்தொள்ளாயிரம்.

**பெயர்க்காரணம்**

(1) சேரன், சோழன், பாண்டியன் ஆகிய மூவேந்தர்களையும் பற்றிய மூன்று தொள்ளாயிரம் பாடல்கள் கொண்ட நூல் எனப் பொருள்படும்,

(2) சேரன், சோழன், பாண்டியன் ஆகிய மூவேந்தர்களைப் பற்றிய மூன்றாகிய தொள்ளாயிரம் பாடல்களை உடையது என்றும் உரைப்பர்; இவ்வுரைப்படி ஒவ்வொருவரும் மூன்று நூறு பாடல் களைப் பெறுவர்.

எவ்வாறாயினும் இப்போது கிடைப்பன மொத்தம் 150 செய்யுட் களே.

(3) **நூலின் பொருள்**—முடியுடை வேந்தர் மூவரையும் பற்றி அவர்களின் நாடு, நகர், யானை, குதிரை, வென்றி, கொடை, புகழ், இன்பம், முதலிய உறுப்புக்களைப் புகழ்ந்து பாடுவதே இதன் நோக்கம்.

(4) **நூலின் அமைப்பு**—வெண்பாக்களால் பாடப்பெற்ற நூல்.

(5) **பிற**—இப்போது கிடைக்கும் பாடல்கள் 'புறத்திரட்டு' என்னும் தொகை நூலில் கிடைக்கின்றன. உரையாசிரியர்கள் சிலர், சில பாடல்களை மேற்கோளாகக் காட்டியிருக்கின்றனர். முத்தொள் ளாயிரத்தை ஒட்டியே வச்சத்தொள்ளாயிரம், அரும்பைத்தொள்ளா யிரம் என்ற நூல்கள் தோன்றியிருக்கலாம்.

## பாடப் பகுதி அமைப்பு

முதல் மூன்று பாட்டுக்கள் சேரனைப் பற்றியன; இரண்டாவது மூன்று பாட்டுக்கள் சோழனைப் பற்றியன; இறுதி மூன்று பாட்டுக்கள் பாண்டியனைப் பற்றியன.

# சேரன்

## சேரனைப் பற்றிய பாடல்களின் தொகுப்புரை

### பொது

தமிழ் நாட்டு மூவேந்தர்களில் ஒருவன் சேரன். இவன் சேரல், சேரலன், கோதை, பொறையன், வானவன், வில்லவன் என்ற பெயர்களால் வழங்கப் பெறுவான். தன்னை அக்கினி மரபில் வந்தவனுகக் கூறிக் கொள்வான். வீரத்தின் சின்னமாகத் தம் வெற்றிக் கொடியில் வில்லை அமைத்தவன்; பனம்பூ மாலையை உடையவன்.

இவன் நாடு இன்றைய மலையாளமும் கொங்கு நாடுகளைக் கொண்டு விளங்கியது.

### சேரனுடைய நாட்டின் சிறப்பு

சேறு நிறைந்த வயல்களில் செவ்வாம்பல் மலர்கள் இதழ் விரிய, அவற்றைக் கண்ட பறவையினங்கள், வெள்ளத்தில் தீப்பற்றிக் கொண்டது என்று அஞ்சித் தம் கைகளாகிய சிறகுகளால் தம் இளங் குஞ்சுகளை ஒடுக்கிக்கொள்ளும் ஆரவாரத்தையுடையது சேரனுடைய நாடு.

### சேரனுடைய நகர்ச் சிறப்பு

சேரனுடைய நகரம் வஞ்சி. பூஞ்சோலை நிறைந்த வஞ்சி நகரத்தில் கள் விற்பவர் கள்ளைக் குடியர்களுக்குக் கொடுக்கின்றனர். உண்ணப் போகும் குடியர்கள் அக்கள்ளின் நுரையை வழித்தெறிகிறார்கள். வழித்தெறியப்பெற்ற நுரையும் கள்ளும் வெள்ளமாய்ப் பரவி ஓடுகிறது. அதனால் ஈரம் நிறைந்த வீதிகளில் யானைகள் முதலியன மிதித்துச் செல்வதால் அந்நகர வீதிகளெல்லாம் சேருக ஆகிவிடுகின்றன.

### சேரன்சிறப்பு

சேரன் அரசாளும் இப்பூமி வானத்தை வென்றது. சேரனைச் சேர்ந்த வீரர்கள் விண்மீன்களுக்கு ஒப்பாயினர்; வானை அளாவிய கொல்லி மலையில் வாழ்பவர் தலைவன். 'கோதை' என்னும் பேரையுடைய சேரன் விண்மீன்களால் சூழப்பெற்ற திங்களை ஒத்தான்.

## 1. சேர நாட்டின் வளமை

### உரை

**கச்சு இலை வேல்** - நஞ்சு பூசப் பெற்றதாய் இலை வடிவுடையதாய் அமைந்த வேற்படையினை உடைய,
**கோ கோதை நாடு** - அரசனுகிய, 'கோதை' என்ற பொதுப் பெயரையுடைய சேரனுடைய சேர நாடானது,
**அள்ளல் பழனத்து**-சேறு நிறைந்த நீர் வயல்களில்,

**அரக்கு ஆம்பல்**-செவ்வாம்பல்,
**ஏய் அவிழ**-இதழ் விரிய (மலர),
**புள் இனம்**-அதனைக் கண்ட பறவைக் கூட்டங்கள்,
**வெள்ளம் தீப்பட்டது** - வெள்ளம் போன்றிருக்கும் தண்ணீரில் நெருப்புப் பிடித்துக் கொண்டது,
**என வெரீஇ**-எனப் பயந்து,
**தம் கை சிறகால்** - தம்முடைய

| | |
|---|---|
| கைகளாகிய சிறகுகளால், பார்ப்பு ஒடுக்கும் - தம் குஞ்சுகளை ஒடுக்கி மறைத்துக் கொள்ளு | கிற, கவ்வை உடைத்து-ஆரவாரத்தை உடையது. (அரோ-அசை) |

### தெளிவுரை

நஞ்சு பூசப்பெற்று இலை வடிவாகச் செய்யப்பெற்ற வேற் படையை உடைய சேர வேந்தனது சேர நாடானது, சேறு நிறைந்த நீர் வயல்களில் செவ்வாம்பல் மலர்கள் முறுக்கவிழ்ந்து மலர, அவை களைக் கண்ட பறவைக் கூட்டங்கள் தண்ணீர் தீப்பிடித்துக் கொண் டது என்று பயந்து, தம்முடைய கைகளாகிய சிறகுகளால் தம்முடைய குஞ்சுகளை ஒடுக்கி மறைத்துக் கொள்ளுகிற ;ஆரவா ரத்தை உடையது.

### விளக்கவுரை

பகைவரைக் குத்தியதும் அவர்கள் சாக வேண்டும் என்பதற்காக வேலில் நஞ்சினைப் பூசியிருப்பார்கள். **கோதை** சேரர்களுக்குப் பொதுப் பெயர்.

கோக் கோதை நாடு ஆரவாரம் உடையது என்பதாம்.

சேர நாட்டு வயல்களில் சேறும் நீரும் நிறைந்துள்ளன. வயல் களில் முளைத்த செவ்வாம்பல் இதழ்விரித்து மலர்கின்றன. இதழ்கள் தண்ணீரின் மேல் படர்ந்திருக்கின்றன. பறவைகள் மாலை நேரத்தில் குஞ்சுகளைத் தம் சிறகுக்குள் ஒடுக்கிக் கொள்ளுகின்றன. இரண்டும் இயற்கையாக நிகழ்பவை. ஆனால் ஆசிரியர் கற்பனையாக ஒரு காரணத்தைச் சொல்கிறார்.

செவ்வாம்பல் மலரின் இதழ்கள் தண்ணீரின் மேல் விரிந்து படர்ந் திருப்பதால் தண்ணீர் செந்நிறமாக இருப்பதைப் பார்த்த பறவைக் கூட்டங்கள் தண்ணீர் தீப்பிடித்துக் கொண்டது என்று பயந்து, தம் முடைய குஞ்சுகளை இறக்கைக்குள் ஒடுக்கி மறைத்துக் கொள்ளு கின்றன. பறவைகள் பயந்து அலறுவதால் ஆரவாரம் பெருகுகிறது. அத்தகைய ஆரவாரத்தை உடையது சேர நாடு.

அள்ளல்-சேறு; பழனம்-வயல்; அரக்காம்பல்-செவ்வாம்பல்; பார்ப்பு-குஞ்சு; கௌவை-ஆரவாரம்.

### இலக்கணம்

அள்ளற் பழனம், வேற்கோ-இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன்தொக்க தொகைகள்.
அரக்காம்பல்-உவமைத் தொகை.
ஆம்பல்-முதலாகு பெயர்.
அவிழ-செயவென் வாய்பாட்டு வினையெச்சம்.
வெரீஇ-சொல்லிசை யளபெடை.
புள்ளினம்-ஆறும் வேற்றுமைத் தொகை.
கைச்சிறகு-இரு பெயரொட்டுப் பண்புத்தொகை
நச்சு-நஞ்சு என்பதன் வலித்தல் விகாரம்.

## 2. வஞ்சி நகரச் சிறப்பு

### உரை

**பூம்பொழில்**-பொலிவுற்ற சோலைகள் சூழ்ந்த,
**வஞ்சி அகம்** - வஞ்சிமா நகரத்தில்,
**களிகள்**-களிப்பைத் தரும் கள்ளை,
**களிகட்கு** - கள்ளுண்டு களிக்கும் குடியர்களுக்கு,
**நீட்ட**-கள் விற்பான் கொடுக்க,
**களிகள்** - கள்ளுண்டு களிப்பவர்களாகிய குடியர்கள்,
**தம் கையால்** - கள் விற்பவன் கொடுக்க வாங்கிய தங்கள் கைகளால்,
**விதிர்த்திட்ட** - வழித்துப் போட்ட,
**வெங்கள் துளி** - விரும்பப்படும் கள்ளின் நுரையும் துளியும்,
**கலந்து**-ஒன்றாகக் கலந்து வீதிகளில் ஈரமாக,
**ஓங்கு எழில் யானை**-அவ்வீதிகளில் போக்குவரவு புரிகின்ற உயர்ந்த அழகிய யானைகள்,
**மிதப்ப**-மிதித்தலால்,
**சேறு ஆகும்** - அவ்விடங்களெல்லாம் சேறாகிவிடும்.

### தெளிவுரை

பொலிவு பெற்ற சோலைகள் சூழ்ந்த வஞ்சிமா நகரத்தில் களிப்பைத் தரும் கள்ளை, குடியர்களுக்குக் கள்விற்போன் நீட்ட கள்ளுண்டு களிக்கும் குடியர்கள் தம் கையால் அதை வாங்கி, மேலே உள்ள நுரை பூச்சி முதலியவைகளை வழித்து எடுத்துக் கீழே உதறுவதால் நுரையோடு சேர்ந்த கள்துளியும் சேர்ந்து வீதிகளில் பரவி அவ்வீதிகளை ஈரமாக்கியது. அங்கே போக்குவரவு புரிகின்ற உயர்ந்த அழகிய யானைகள் மிதிப்பதால் அவ்விடங்களெல்லாம் சேறாக ஆகின்றன.

### விளக்கவுரை

**பூம்பொழில்**-பொலிவை உடைய சோலைகள். **வஞ்சியகம்**-வஞ்சி என்னும்உள்நாட்டுப்பட்டணம். **களி**-மிகுமகிழ்ச்சி; களிப்பு. **களிகள்**-களிப்பைத்தரும் கள். கள் விற்பவர் நுரை முதலியவற்றோடு கூடிய கள்ளைக் குடிப்பவர்களுக்குக் கொடுக்கிறார்கள். வாங்கிய குடியர்கள் அக்கள்ளின் மேலுள்ள நுரை முதலியவைகளை வழித்துப் போடும் போது கள் துளிகளும் சிந்துகின்றன. நுரையும் துளியும் கலந்து அரச வீதிவரை ஓடிச் சென்று ஈரம் அமைய நிற்கின்றன. அதே வீதியில் அடிக்கடி சென்று வருகின்ற யானைகள் மிதிப்பதால் ஈரமாக இருந்த அரச வீதிகள் சேறாயின.

இதனால் தெரியும் நகர் வளம்-சென்ற செய்யுளில் பகைவர்க்கு அஞ்சி ஓடும் ஆரவாரம் இல்லாமல் பறவைகள் பயந்து எழுப்பும் ஆரவாரமே உடையது என்றார். இச்செய்யுளில் போர் மறவர்களுக்குப் போர்க் களத்தில் வேலை இல்லை. கள் குடித்து மகிழ்ந்தே காலங் கடத்துகின்றனர். போர் யானைகள் போருக்குச் செல்லுதல் இல்லாமையால் காலாறுகைக்காக அடிக்கடி அரச தெருக்களில் போய் வந்து கொண்டிருக்கின்றன என்றார்.

பூஞ்சோலைகள் சூழ்ந்துள்ளன என்பதால் வளமை மிக்கது அவன் நகரம் என்பதாம். நுரையும் கள் துளியும் கலந்து வரும் நிலையில் உண்டாகும் ஈரம் வெய்யிற் கொடுமை இன்மையாற் புலர்தற்கு வழி இல்லை. யானைகள் நடந்து சேறாகத்தான் ஆகின்றன.

### இலக்கணம்

**பூம்பொழில், களிகள், எழில்யானை**-இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடனதொக்கத் தொகைகள்
**களிகட்கு**-தொழிலடியாகப் பிறந்த பெயர். இவ்வுருபு ஏற்றது.
**விதிர்த்திட்ட துளி**-பெயரெச்சத் தொடர். விதிர்த்திடு-பகுதி.
**வெங்கள்**-பண்புத் தொகை.
**கட்டுளி**-கள்+துளி. ஆறும் வேற்றுமைத் தொகை.
**கலந்து**-செயவென் எனச்சத் திரிபு.
**ஓங்கு எழில்**-வினைத்தொகை.
**வஞ்சி அகம்**-ஏழாம் வேற்றுமை உருபின் பொருள்பட வந்த சொல்.

## 3. சேர வேந்தன் சிவப்பு

### உரை

**வானிற்கு**-ஆகாயத்தை,
**வையகம்**-பூமி,
**வென்றது**-வெற்றி கொண்டது,
**மறமன்னர்**-வீரத்தையுடைய அரசர்கள்,
**வானத்து மீனிற்கு அனையார்**-ஆகாயத்திலே உள்ள விண்மீன்களுக்கு ஒப்பாவார்,
**விண் உயர்**-ஆகாயம் வரை உயர்ந்த,
**கொல்லியர் கோன்**-கொல்லி மலையை உடைய மக்களின் அரசன்,
**சேரன்**-சேரன்,
**கோன் கோதை என்பான்**-கோதை என்று சொல்லப் பெறும் சேர வேந்தன்,
**வானத்து**-ஆகாயத்திலுள்ள,
**மீன் சேர்**-நட்சத்திரங்களோடு கூடியிருக்கிற,
**மதி அனையான்**-சந்திரனை ஒத்த வனுக ஆனுன்.

### தெளிவுரை

ஆகாயத்தை மண்ணுலகம் வென்றுவிட்டது; வீரத்தை உடைய அரசர்கள் வானத்தில் உள்ள நட்சத்திரங்களுக்கு ஒப்பாவார்; ஆகாயம் வரை உயர்ந்துள்ள கொல்லி மலையையுடைய மக்களின் அரசன், சேரன், கோதை என்றெல்லாம் சொல்லப்பெறும் சேர மன்னன் ஆகாயத்தின்கண் நட்சத்திரங்களின் மத்தியில் விளங்கும் மதியை ஒத்தவனுனன்.

### விளக்கவுரை

வையகம்-பூமி. வைக்கப்படுவனவற்றை ஏற்றுக் கொள்வது; தாங்கிக் கொள்வது ஆதலின் பூமிக்கு வையகம் என்பது பெயர்.

**வானிற்கு வையகம் வென்றது**-வானத்துக்கு இப்பூமி வெற்றியை உடையது என்பது பொருள். எவ்வாறு? பூமியின் செல்வங்கள் பல; வானத்தின் செல்வங்கள் பல. பூமியின் செல்வங்கள் அன்பு, புகழ் முதலியன. வானத்தின் செல்வங்கள் விண்மீன், தாரகை முதலியன. வையகத்தில் உள்ள பொருள்கள் வானுலகத்திலும் கிடைக்கின்றன என்ருல் வையகம் தோற்று விட்டது; வானுலகத்திலுள்ள பொருள்கள் வையகத்திலேயே கிடைக்கின்றன என்ருல் வானகம் தோற்றது.

வானகத்தின் சிறப்புப் பொருள்களாகிய நட்சத்திரங்கள், சந்திரன் முதலியவைகள் இப்பூமியிலேயே கிடைக்கின்றன. அதனால் பூமியை நோக்க வானம் எத்தகைய சிறப்பையும் பெற்று விடவில்லை. ஆனால் பூமியில் உள்ள எப்பொருளும் வானத்தில் இல்லை. எனவே பூமி வானத்தை வென்றது என்று கூறினார்.

வானத்து மீன்-நட்சத்திரம்; கொல்லியர்கோன், சேரன், கோதை என்ற பெயர்கள் சேரர்களுக்கு உரியன.

இனி ஆகாயம் எவ்வளவு பரப்பளவு உடையதோ அவ்வளவு பரப்புடையது சேரன் ஆண்ட நாடு என்று சேரநாட்டின் ஆட்சிப் பரப்பை உணர்த்துகிறது இச்செய்யுள் என்பர்.

### இலக்கணம்

**வானிற்கு**-உருபு மயக்கம். இரண்டாம் வேற்றுமைப் பொருள்.
**வானத்து மீன்**-ஏழாம் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்க தொகை.
**மறமன்னர்**-இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்க தொகை.
**மீன்சேர்**-இரண்டாம் வேற்றுமைத் தொகை.
**சேர்மதி, உயர்கொல்லியர்**-வினைத்தொகைகள்.
**மதியனையான்**-உவமையணி.
**கொல்லியர்**-இடத்தினடியாகப் பிறந்த பெயர்.
**கொல்லியர் கோன்**-ஆறும் வேற்றுமை, உயர்திணையாகலின் தான் கனுருபு விரிக்க.
**கோன்**-'கோ' என்ற சொல் னகரச் சாரியைப் பெற்றது.
**என்பான்**-வினையாலணையும் பெயர்.

# சோழன்

## சோழனைப் பற்றிய பாடல்களின் தொகுப்புரை

### பொது

தமிழ் நாட்டு முடியுடை மூவேந்தருள் சோழன் ஒருவன். காவிரி நதி பாயும் நீர்வள நாட்டையுடைய வளவன், கிள்ளி, செம்பியன் முதலிய பெயர்களையும் உடையவன். புலிக்கொடியையும் ஆத்தி மாலையையும் உடையவன். 'சோற்றுல் மடையடைக்கும் சோணாடு' என்று புகழப்பெற்ற சோழ நாட்டை ஆண்டவன்.

### சோழ நாட்டு வளம்

யானைப் படைகளையுடைய கிள்ளி என்னும் சோழனது நாட்டில், நெற்களத்தைப் பாதுகாக்கும் உழவர், களத்தின்கண் உள்ள போரின் மேல் ஏறி, ஏனைய உழவர்களை வேலைகளில் ஈடுபவதற்காக 'நாவலோஓ' என்று அழைக்கின்ற நாவோசையானது, போர் வீரர்கள் கொலை யானைகளின் மேல் நின்று கொண்டு, தம் பகுதி வீரர்களை 'நாவலோஓ' என்று இசைத்து அழைத்தாற் போல இருக்கிறது.

**சோழநாட்டு உறையூர் வளம்**

பகைவர்களைப் போரில் வெல்லும் சோழனது அழகு நிறைந்த உறையூரின் வீதிகள், முதல் நாள் மாலைப் பொழுதில் பூ விற்பவர்கள் கிள்ளிக் களைந்த பல நிறப் பூக்கள் இசைவு படப் பொருந்திக் கிடப்பதால், அடுத்தநாட் காலையில் வானவில் பொருந்திய வானத்தைப் போலக் கண்களுக்கு இனியனவாகக் காணப்பெற்றன.

**சோழனின் கொடை**

கிள்ளியின் பிறந்த நாளாகிய இரேவதியில் அந்தணர் பசுவும் பசும் பொன்னும் பெற்றனர்; நாவலர்கள் மந்தரமலை போன்ற யானைகளைப் பெற்றார். ஆயின், இந்நன்னாளில் சிலந்திப்பூச்சி மட்டும் தன்னுடைய கூட்டினை இழந்த விதம் யாதோ?

## 4. சோழ நாட்டு வளப்பம்

### உரை

**நல்யானை** - நல்ல இலக்கணங்களை யுடைய யானைப் படைகளை யுடைய,
**கோ கிள்ளி** - அரசனாகிய சோழனுடைய,
**நாடு**-நாட்டில்,
**காவல் உழவர்** - நெற்களத்தைக் காத்தல் தொழிலை மேற் கொண்ட உழவர்கள்,
**களத்தகத்துப் போர் ஏறி** - நெற் களத்தின் கண் போடப்பெற்ற நெற் போரின் மேல் ஏறி,
**"நாவலோஓ" என்று அழைக்கும் நாள் ஓதை**-'நாவலோஓ'என்று சொல்லி ஏனைய உழவர்களை வேலையில் ஈடுபடுவதற்காக அழைக்கும் நாட்காலையில் எழுப்பும் ஓசையானது,
**காவலன்தன்**-அரசனுடைய,
**கொல்யானை மேல்இருந்து**-கொல் லும் மதயானைகளின் மேல் இருந்து கொண்டு,
**கூற்று**-போர் வீரர்கள் தம்மைச் சார்ந்த ஏனைய வீரர்களை,
**இசைத்தால்போலும்**-'நாவலோஓ' என்று அசைத்து அழைத்தாற் போல இருக்கின்றது.

### தெளிவுரை

நல்ல இலக்கணங்களையுடைய யானைப் படைகளையுடைய அரசனாகிய சோழனுடைய நாட்டில் நெற் களத்தைக் காத்தல் தொழிலை மேற்கொண்ட உழவர்கள் நெற்களத்தின்கண் போடப்பெற்ற நெற் போரின் மேல் ஏறி 'நாவலோஓ' என்று சொல்லி ஏனைய உழவர்களை வேலையில் ஈடுபடுத்துவதற்காக அழைக்கும் நாட்காலை ஓசையானது, அரசனுடைய கொலை யானையின் மேலிருந்து போர் வீரர்கள் தம் பகுதியைச் சார்ந்தவர்களை 'நாவலோஓ' என்று இசைத்து அழைத் தாற்போல் இருக்கின்றது.

### விளக்கவுரை

**காவல் உழவர்**-நெற் களத்தைக் காவல் செய்யும் உழவர்; 'நாவலோஓ'-ஒரு வகை ஒலிக் குறிப்பு; முன்னே வந்தவர் மற்றவர் களை விரைந்து வந்து வேலையில் ஈடுபடுங்கள் என்ற குறிப்பைத் தெரி விக்க 'நாவலோஓ' என ஒலிப்பது வழக்கம் போலும். நாளோதை— நாள் ஓதை. நாட்காலையில் எழுப்பும் ஓசை. கூற்று: கூறு; தன்னைச் சார்ந்த பகுதியினர்.

ஏர்க்களம் காக்கும் உழவர்கள் நெற்களத்தில் அமைத்த நெற் போர் மேல் ஏறி நாட்காலையில் 'நாவலோஓ' எனக் கூவி அழைப்பது, போர்க்களங் காக்கும் வீரர்கள் போர்க்களத்தில் அமைந்த யானை யின் மேல் ஏறிப் போருக்குரிய வேலைகளில் மற்றவர்களை ஈடுபடுவதற் காக நாவலோஓ எனக் கூவி அழைக்கும் ஓசையைப் போன்றது.

இதனால் வந்த பயன்-சோழ நாட்டில் ஏர்த் தொழிலும் போர்த் தொழிலும் ஒன்றே. போர்ப் பயிற்சி என்று தனியே சிலருக்குக் கொடுத்து, போர்க்காலம் வரும்வரை அவர்களைச் சோம்பேறி களாக்கி உணவூட்டி வருவதன்று. பேரேறிய உழவர்களே களிற்றின் மேலேறுகிறார்கள். ஒலிக் குறிப்பும் ஒன்றேதான். போர்க்களமாயி னும் ஏர்க்களமாயினும் உழைப்பை என்றும் தளரவிடாது போற்றி வருபவர்கள் சோழர்கள். காவிரி பாய்வதால் விளைவுப் பெருக்கும் அதிகமாகையால் போர்க்களத்தில் வீரர்களைக் கொன்று குவிப்பது போன்றே, நெற்கதிர்களையும் கொன்று குவித்துப் போராக்க வேண்டியிருக்கிறது.

சோழநாட்டு மக்கள் உணவையும் மானத்தையும் ஒன்றெனக் கருதினர். பகைவரை எதிர்நோக்கிப் படைப் பலத்தை மிகுத்தல் போன்றே பசியை எதிர்பார்த்துப் பக்குவமாக உணவையும் மிகுத் தல் வேண்டும் என்ற கொள்கையினர். சீரைத் தேடின் ஏரைத் தேடு; பகைவர் வரின் போரைத் தேடு என்பது அவர் கண்ணோட்டம். படைகள் தனியாகப் பாதுகாக்கப்பட வேண்டும் என்ற கொள்கை சோழர்களுக்குக் கிடையாது.

### இலக்கணம்

**நல்யானை**-பண்புத் தொகை.
**காவல்**-தொழிற்பெயர்.
**களத்தகம்**-ஏழாம் வேற்றுமை உருபின் பொருள்பட வந்த சொல்.
**போர் ஏறி**-ஏழாம் வேற்றுமைத் தொகை.
**கொல்யானை**-வினைத்தொகை.
**கூறு**-பண்பாகு பெயர்.
**போலும்**-உவமைச் சொல்.

## 5. சோழன் நகர் (உறையூர்) வளம்

### உரை

**வெல் வளவன்**-வெற்றியைக் கொண்ட சோழனின்;
**பொற்பு ஆர்**-அழகு நிறைந்த,
**உறந்தையகம்**-உறையூரின் வீதி,
**மாலை**-முதல்நாள் மாலைப் பொழுதில்,
**விலை பகர்வார்**-(பூக்களை) விலை கூறி விற்பவர்,
**கிள்ளிக் களைந்த பூ**-தொடுப்பதற்காகக் கிள்ளிப்போட்ட பல நிறப் பூக்கள்,
**சால**-மிகுதியும்,
**மருவியது ஓர் தன்மைத்தால்**-பொருத்தமுடையதாக அமைந்த காரணத்தால்,
**காலை**-மறுநாட் காலையில்,
**வில்பயில்**-வானவில் பொருந்திய,
**வானகம்போலும்**-வானிடத்தைப் போலக் காணப்படும்.

### தெளிவுரை

வெற்றியைச் கொண்ட சோழனின் அழகு நிறைந்த உறையூரின் வீதியானது முதல்நாள் மாலையில் பூக்களை விலை கூறி விற்பவாகன் தொடுப்பதற்காகக் கிள்ளிக் களைந்த பலநிறப் பூக்கள் மிகவும் பொருத்தமுடையதாக அமைந்துவிட்ட காரணத்தால், மறுநாட் காலையில் வானவில் பொருந்திய வானிடத்தைப் போலக் காணப் படும்.

### விளக்கவுரை

உறையூர் உறந்தை எனவும் வழங்கப் பெறும்; இது சோழனின் தலைநகரம். உறையூர் வீதியில் முதல்நாள் மாலையில் கிள்ளிப் போட்ட பூக்கள் மிகவும் பொருத்தமுடையதாக அமைந்துவிட்ட காரணத்தால் வானவில் பொருந்திய வானம் போல் தோற்ற மளித்தது; பலநிறப் பூக்கள் பலநிறங்களையுடைய வானவில்லை உணர்த்தின.

**பொற்பு**-அழகு. **விலைபகர்வார்**-பூ விற்பார். **சாலமருவியது ஓர் தன்மை**-மிகப் பொருத்தமாக அமைந்துவிட்ட தன்மையால்.

### இலக்கணம்

**பகர்வார்**-வினையாலணையும் பெயர்.
**சால**-உரிச்சொல்.
**தன்மைத்து**-குறிப்பு வினைமுற்று, காரணம் என நின்றது.
**பயில் வானகம்**-வினைத்தொகை.
**போலும்**-உவமைச்சொல்.

## 6. சோழனின் கொடை

### உரை

**எந்தை**-எம் தந்தையாகிய,
**இலங்கு**-விளங்குகின்ற,
**இலை வேல் கிள்ளி**-இலைபோல் செய்யப் பெற்ற வேற் படையை உடைய கிள்ளியின்,
**இரேவதி நாள்**-பிறந்தநாளாகிய இரேவதி என்னும் நட்சத்திரம் அமைந்த நன்னாளில்,
**அந்தணர் ஆவொடு பொன் பெற்றார்**-அந்தணர்கள்பசுக்களோடு பொன்னையும் தானமாகப் பெற்றார்கள்;
**நாவலர்**-நாவீறு கொண்ட புலவர்கள்,
**மந்தரம் போல் மாண்ட**-மந்தர மலையைப் போன்று எல்லா வகையான மாட்சிமைகளையும் கொண்ட,
**களிறு ஊர்ந்தார்**-யானைகளைப் பரிசிலாகப் பெற்று ஏறிச் சென்றனர்;
**என்னே சிலம்பி தன் கூடு இழந்த வாறு**-முன் ஒரு காலத்தில ஒரு சிலந்திப்பூச்சியானது தான் கட்டிய கூட்டை இழந்ததன் காரணமாக வந்த சோழ வாழ்வின் பெருமைதான் எந்த அளவை உடையதோ.

### தெளிவுரை

எம் தந்தையாகிய விளங்குகின்ற இலைபோல் செய்யப் பெற்ற வேற்படையை உடைய சோழனின் பிறந்தநாளாகிய இரேவதி நாள்மீன் கூடிய நன்னாளில் அந்தணர்கள் பசுக்களோடு பொன்னை

யும் தானமாகப் பெற்றார்கள். நாவீறு கொண்டபுலவர்கள் மந்தர மலையைப் போன்று எல்லாவகையான மாட்சிமைகளையும் உடைய யானைகளைப் பரிசிலாகப் பெற்று ஏறிச் சென்றனர்; முன் ஒரு காலத்தில் ஒரு சிலந்திப் பூச்சியானது தான் கட்டிய கூட்டை இழந்ததன் காரணமாக வந்த சோழர்தம் வாழ்வின் பெருமை தான் எத்துணை அளவினதோ !

**விளக்கவுரை**

இந்நூலாசிரியர் சோழநாட்டவர் என்பதை இச்செய்யுளால் ஓரளவு துணியலாம். இங்கே சோழனைக் குறிக்கும் போது 'எந்தை' என்று குறிக்கின்றார்.

கிள்ளி-சோழன். இவன் பிறந்த நட்சத்திரம் இரேவதி. அந் நாளில் எல்லாருக்கும் தானங்கள் செய்கின்றான்.

நாவலர்களுக்குக் களிறுகளைக் கொடுத்தான். களிறுகளுக்கு உவமை மந்தரமலை. திருப்பாற்கடல் கடைந்து அமுதம் எடுப்பதற்கு மந்தரமலையைத்தான் மத்தாக நட்டார்கள் என்ப. எல்லாவளங் களையும் உடையது மந்தரமலை.

மாண்ட-மாட்சிமைப்பட்ட என்பது பொருள்.

சிலம்பி-சிலந்தி. திரு ஆனைக்கா என்னும் தலத்தில் இறைவனுக்கு ஒரு சிலந்தி மேலே வலை கட்டியது நிழலுக்காக. அங்கே பூசை செய்ய வந்த வெள்ளையானை சிலந்திக் கூட்டைப் பார்த்து இது தகுதியன்று என்று அக்கூட்டை அழித்தது. சிலந்தி துதிக் கையினுள் புகுந்து கடிக்க, யானை துதிக்கையை ஓங்கி அடிக்க இரண்டும் இறந்தன. கூடுகட்டிய அச்சிலந்தியே சோழர் குலத்தில் செங்கணானாகப் பிறந்தது. அவன் சிவனுக்கு எழுபது கோயில் கட்டினான். அவனுக்குப்பின் சோழநாடு வளத்தாற் சிறந்தது. இன்று அம்மன்னன் இச்செய்யுளிற் கண்டவாறு பெருங்கொடையளிப்பதற்குக் காரணம், அன்று சிலந்தி ஒன்று தன் கூட்டை இழந்ததனால். இதைக் கருத்திற் கொண்டு சிலந்தி தன் கூடு இழந்தவாறு என்னோ ? என வியந்து பாராட்டினார்.

மன்னன் பிறந்த நாள் விழாவில் பெருங்கொடை அளித்த மகிழ்ச்சியைப் பாடும்போது சிலம்பி தன் கூடு இழந்தவாறு என்னோ என அவலச் சுவை ததும்பப் பாடினார் எனல் பொருந்தாது.

**இலக்கணம்**

ஆவொடு-மூன்றும் வேற்றுமை உருபு உடனிகழ்ச்சி.
மந்தரம் போல்-உவம உருபு.
மாண்ட-செய்த என் வாய்பாட்டுப் பெயரெச்சம்.
களிறு ஊர்ந்தார்-இரண்டாம் வேற்றுமைத் தொகை.
இலங்கிலை-வினைத்தொகை.
என்னோ-'ஓ' வியப்பு இடைச் சொல்.

## பாண்டியன்

**பாண்டியனைப் பற்றிய தொகுப்புரை**

பொது : தமிழ்நாட்டு மூவேந்தர்களுட் பாண்டியனும் ஒருவன். சிவபெருமான், உமை, குமரன் ஆகிய மூவரும் பாண்டி நாட்டை

ஆட்சி செய்த பெருமை உடையவர்கள். சங்கம் வைத்துத் தமிழா ராய்ந்த பெருமை பாண்டியர்க்கே உண்டு மீனக் கொடியையும் வேப்பமலர் மாலையையும் கொண்டவன். இவன் செழியன், மாறன் வழுதி, தென்னன் முதலிய பெயர்களாலும் குறிக்கப்படுவான்.

**பாண்டிய நாட்டில் விளைபவை**

பாண்டியனது நிலத்தில் உண்டாவன செம்பொன்; ஊரின்கண் தோன்றுவன முத்தமிழ் நூல்கள்; கடலின்கண் உண்டாவன வெண் சங்கும் முத்துக்களும்; மலைச்சாரலில் கிடைப்பன மதம் பொருந்திய யானைகள்; அவனுடைய கூறிய வேலின் நுனியில் படுவன பகை மன்னர்தம் மாலையணிந்த மார்புகள்.

**பாண்டி நாட்டின் வளம்**

முத்துக்களால் அழகுசெய்யப் பெற்ற வெண்கொற்றக் குடை யையுடைய பாண்டியனின் நாடு சங்குகள் ஈன்ற முத்துக்களும் புன்னைமரத்திலிருந்து உதிர்ந்த குவிந்த அரும்புகளும் பந்தலைப்போல அழகு செய்கின்ற இளங்கமுகின் பாளைகளிலிருந்து உதிர்ந்த மணி களும் எங்கும் சிதறப்பெற்று, அவை முத்துக்களைப் போலக் காணப் பெறும் தலைமைப் பாட்டினை உடையது.

**மாறனை ஏத்துதலும் வேலனை ஏத்துதலும் ஒன்றே.**

போரின் தொடக்கத்திலேயே நிலைபெற்று விளங்குகிற வெற்றி யையும், வேற்படையையுமுடைய பாண்டியனை இனிய தமிழினால் யாம்பாடுகின்ற பாட்டு பின்னிடாத மயில் வாகனத்தையுடைய முருகனை நாள்தோறும் கடப்பம் பூவினைக் கொண்டு ஏத்தியதனோடு ஒப்புமையுடையதாகும்.

## 7. பாண்டி நாட்டில் விளைபவை

**உரை**

**வய மாறன்**-வெற்றியையுடைய பாண்டியனின்,
**பார்படுப**-பூமியில் தோன்றுவன,
**செம் பொன்**-செம்மையான உலோகங்கள்,
**பதி படுப**-ஊரின்கண் தோன்று வன,
**முத்தமிழ் நூல்**-இயல் இசை நாட கம் என்ற முத்தமிழ் நூல் களாம்;
**நீர்படுப**-நீரில் தோன்றுவன,
**வெண்சங்கும் நித்திலமும்**-வெண் மையான சங்கும் முத்துக் களும்;
**சாரல் மலை**-மலைச்சாரலின் கண்,
**படுப**-காணப்படுவன,
**யானை**-மதம் பொருந்திய யானை கள்;
**கூர் வேல் தலை படுப**-கூர்மையான வேலின் முனையில் படுவன,
**தார்வேந்தர் மார்பு**-மாலையணிந்த மன்னர்களின் மார்புகளாம்.

**தெளிவுரை**

வெற்றியையுடைய பாண்டியனது பூமியில் தோன்றுவன; செம்மையான உலோகங்களாகும்; ஊரின்கண் தோன்றுவன இயல் இசை நாடகம் என்னும் முத்திறத்தாலமைந்த தமிழ் நூல்களாம்; நீரில் தோன்றுவன வெண்மையான சங்குகளும் முத்துக்களும்; மலைச் சாரலின் கண் காணப்படுவன மதம் பொருந்திய யானைகள்; கூர்மை

யான வேலின் முனையில் படுவன மாலையணிந்த மன்னர்களின் மார்புகள்.

### விளக்கவுரை

பாண்டிய நாட்டின் இயற்கையோடு இயைந்த வளங்களை எடுத்துக் கூறினார். நிலத்தில் தோன்றுவன உலோகங்கள். பொன் என்ற சொல் உலோகங்கள் எல்லாவற்றையும் குறிக்கும் பொதுச் சொல். பொள்-தோண்டப்படுவது; தோண்டியெடுக்கப்படுவது. பொள்-பொல்-பொலம்-பொலன்-பொன் என இச்சொல் வளர்ந்த வரலாறு. இதனாலேயே முற்காலத்தில் கரும்பொன் என இரும்பை யும், வெண்பொன் என வெள்ளியையும், செம்பொன் என இப்போது நாம் வழங்கும் பொன்னையும் குறித்தார்கள். படுப-அஃறிணைப் பலவின்பால் வினையாலணையும் பெயர்கள். ஆகையால் செம்பொன் என்பதற்குப் பொன்னை மட்டும் கொள்ளாமல் செம்மைத் தன்மை யையுடைய எல்லா உலோகங்களும் கொள்ளப்பட்டன. எனவே பாண்டியன் நிலத்தில் செம்பொன், வெண்பொன், கரும்பொன் முதலிய உலோகங்கள் எல்லாமே கிடைக்கப் பெறுகின்றன என்ப தாம்.

ஊரில் கிடைப்பன முத்தமிழ் நூல்கள். தமிழாராய்ச்சி பாண் டியனோடும் அரசியலாரோரும் இணைந்த வேலை. ஆகையால் முத்தமிழ் நூல்கள் எங்கும் மலிவனவாயின. மக்களின் பழக்கவழக்கங்களை நிர்ணயிக்கும் வாக்குகளைச் சட்டம் என வைத்துக்கொள்கிறோம். ஆகையால் எப்பொழுதும் இ. பி. கோ எண்களே எங்கே பார்த் தாலும் காணப்பெறுகின்றன. பாண்டியன் நாட்டில் மக்களின் பழக்க வழக்கங்களை நிர்ணயிப்பது முத்தமிழ் நூல். ஆகையால் திருக்குறளிற் கூறிய இந்த என்னுடைய குறளின்படி இவன் தவறு செய்தவனானான் என்று கூறுவதும்; அதேகுறளின் உரைப்படித்தான் நான் வாழ்நதேன். குறளுக்குத் தங்களின் உரை தவறு என்று எதிர்வாதம் தோன்றுவதும்; குறளாராய்ச்சி செய்வதும் என இவ் வாறே எல்லாக் காரியங்களும் முத்தமிழ் நூல்களைக் கொண்டே இயற்றப்பெற்றன ஆதலின் ஊரில் தோன்றுவன முத்தமிழ் நூல் களே என்றார்.

சாரல்மலை என்பதை மலைச்சாரல் என மாறுக. அல்லது சாரல் என்பதை நீர்த்துளிமழை எனவும் கொள்ளலாம். குற்றாலத்தில் சாரல் தொடங்கி விட்டது என்ற வழக்கை உன்னுக. காடுகளைவிட மலைப்பகுதிகளில் தான் யானை கருக்கொள்ளுவது அதிகம். ஏனெனில் மலைப்பகுதியில் வளரும் ஒருவகை மூலிகை அதன் பாலுணர்ச்சியை அதிகப்படுத்திவிடுகின்றது என்பது யானைநூற் கொள்கை.

கூர்மையான வேலின் முனையில் படுவன வேந்தர் மார்பு என்பது வீரத்தைக் குறித்தது.

### இலக்கணம்

வயமாறன்-உரிச்சொல் தொடர்.
படுப-வினையாலணையும் பெயர்கள்.
பார்படுப, பதிபடுப, நீர்படுப, சாரல்படுப, தலைபடுப, ஏழாம் வேற்றுமைத் தொகைகள்.
செம்பொன், முத்தமிழ், வெண்சங்கு, கூர்வேல், பண்புத் தொகைகள்.

**மலைச்சாரல், வேல்தலை, வேந்தர் மார்பு,** ஆறும் வேற்றுமைத் தொகைகள்.

**தார் மார்பு,** இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்க தொகை.

## 8. பாண்டி நாட்டு வளம்

### உரை

**நகை முத்தம்**-ஒளியுடைய முத்துக்களால் அழகுறச் செய்யப் பெற்ற,
**வெண் குடையான்**-வெண் கொற்றக் குடையினை யுடையவனாகிய,
**தென்னன் நாடு**-பாண்டியனுடைய நாடு,
**நந்து**-சங்குப்பூச்சிகள்,
**சிந்தி**-சிந்திய,
**இளஞ் சினையும்**-அதனுடைய இளமையாகிய குஞ்சுகளும்,
**புன்னை**-புன்னைமரங்கள்,
**(சிந்தி)**-சிந்தியவைகளான அவற்றின்,
**குவிமொட்டும்**-குவிந்தமொட்டுக்களும்,
**பந்தர்**-பந்தலைப்போல அழகு செய்யும்,
**இளம் கமுகு**-இளமையாகிய பாக்கு மரங்கள்,
**பாளையும்**-பாளையிலிருந்து உதிர்ந்தவைகளும்,
**திகழ் முத்தம் போல் தோன்றும்**-விளங்குகின்ற முத்துக்களைப் போல் தோன்றும்,
**செம்மற்று**-தலைமையை உடையது.

### தெளிவுரை

ஒளிசிறந்த வெண்முத்துக்களால் அழகுபெறச் செய்யப்பெற்ற வெண்கொற்றக் குடையினையுடையவனாகிய பாண்டியனின் நாடானது, சங்குப் பூச்சிகள் சிந்திய அவற்றின் இளங் குஞ்சுகளும், புன்னை மரங்கள் சிந்திய அவற்றின் குவிந்த மொட்டுக்களும், பந்தலைப் போல் அழகு செய்யும் இளமை மிகுந்த பாக்குமரங்கள் சிந்தின அவற்றின் பாளையிலிருந்து விழுந்த சிறு குரும்பைகளும் விளங்கிய முத்துக்களைப் போல் தோற்றமளிக்கும் தலைமையையுடையது.

### விளக்கவுரை

பாண்டியன் நாடு தலைமையையுடையது என முடிக்க. **செம்மற்று**-செம்மலாந் தன்மைத்து. **செம்மல்**-ஆடவர்களின் உயர்ந்தானுக்கு அமைக்கப் பெறும் பெயர். எனவே பாண்டிய நாட்டின் தலைமைப் பண்பு இங்கே பேசப் பெறுகிறது.

பாண்டிய நாட்டில் எல்லாப்பொருள்களும் தம்முடைய உயர்ந்த ஒன்றையே நினைவுபடுத்தக் கூடியனவாயுள்ளன. எடுத்துக்காட்டு: பெருஞ் செல்வன் ஒருவன் கையில் பித்தளையைப் போட்டுக் கொண்டிருந்தான் எனில் பார்ப்பவர்கள் அதைப் பித்தளை என்று கூற மாட்டார்; பொன் என்பர். வறியவன் ஒருவன் பொன் மோதிரம் போட்டுக் கொண்டிருந்தால், பித்தளை என்பர். இது சேர்ந்த இடத்தின் காரணமாகப் பொருள்கள் உயர்வு பெறுவதும் தாழ்வு பெறுவதும் ஆகிய இயல்பு. நாட்டின் பெருமையை நோக்கி நாட்டின் பொருள்கள் மதிக்கப் பெறும்.

பாண்டியநாட்டின் பிறரால் மதிக்கப்பெறும் தலைமைத் தன்மையை இச் செய்யுளால் எடுத்துக் கூறுகிறார்.

கீழே கிடப்பவை முத்துக்கள் அல்ல; அவைகள் முத்துக்களென்றே பார்க்கப் பெறுகின்றன. மனித இனத்தில் பிறந்தவனுயுள்ள மன்னனால் ஆட்சி செய்யப் பெறும் நாட்டில் பொருள்கள் சாதாரண நிலையில் அமையும். சிவன், அம்மை, முருகன் ஆகிய தெய்வங்கள் ஆட்சி செய்த சிறப்பை உடையது பாண்டி நாடு. ஆதலின் பொருள்கள் இயல்பாய் தாழ்ந்தவையேனும், தோற்றத்தாலும் பண்பாலும் உயர்ந்து தோன்றுகின்றன என்றார்.

நந்து-சங்குக்கு ஒரு பெயர். சிந்தி என்பதை எல்லாவற்றோடும் இணைக்க. சங்குப் பூச்சிகள் சிந்திய இளங் குஞ்சுகள்; புன்னைமரங்கள் சிந்திய மலராத மொட்டுக்கள்; கமுகம் பாளைகள் சிந்திய குரும்பைகள் ஆகியவைகள் முத்தின் தோற்றத்தை நினைவு படுத்துகின்றன. கீழே கிடக்கும் அவைகளை முத்து என்றே எண்ணுகிறார்கள். அண்மையிற் சென்று பார்த்தாலே உண்மை புலப்படுகிறது.

கமுக மரம் நெருங்கித் தோட்டமாக இருக்கும்போது பந்தலைப் போல் காட்சியளிக்கும். **நகைமுத்தம்**-நகைக்கும் முத்துக்கள்.

### இலக்கணம்

**நகைமுத்தம்**, குவிமொட்டு, திகழ்முத்தம் - வினைத் தொகைகள்.
நந்தின், கமுகின், 'இன்' சாரியைகள்.
பந்தர்-பந்தல் என்பதன் போலி.
செம்மற்று-குறிப்பு வினைமுற்று.
இளஞ்சினை, இளங்கமுகு, வெண்குடை - பண்புத் தொகைகள்.

## 9. மாறனைத் துதித்தல் வேலனைத் துதித்தலே

### உரை

**தொடங்கு அமருள்**-தொடங்கப் பெற்ற அநந்நிலையில் உள்ள போர்க்களத்தில்,
**நின்று இலங்கு வென்றி**-நிலை பெற்று விளங்கும் வெற்றியை விளைவிப்பவனும்,
**நிறை கதிர் வேல்**-நிறைந்து ஒளி தரும் வேற்படையை உடையவனும் ஆகிய,
**மாறனை**-பாண்டியனை,
**இன் தமிழால்**-இனிய தமிழால்,
**யாம் பாடும் பாட்டு**-எளியேமாகிய எம் போன்றவர்கள் பாடும் பாட்டானது,
**மடங்கா**-புறங்கொடாத,
**மயில் ஊர்தி**-மயிலை வாகனமாக உடைய,
**மைந்தனை**-வீரத்தின் விழுப் பொருளாகிய முருகனை,
**நாளும்**-எப்பொழுதும்,
**கடம்பம் பூ கொண்டு**-கடம்பம் பூக்களை மாலையாக அமைத்துக் கொண்டு,
**ஏத்திய அற்று**-வணங்கித் துதித்த தன்மையைப் போன்றது.

### தெளிவுரை

போர் தொடங்கப் பெற்ற அவ்வளவிலேயே அப்போரில் நிலை பெற்று விளங்கும் வெற்றியை விளைவிப்பவனும், நிறைந்து ஒளிசெய்யும் வேற்படையை உடையவனும் ஆகிய பாண்டியனை இனிய தமிழால் யான் பாடிய பாட்டானது, எச்செயலுக்கும் புறங்

கொடாத மயிலை வாகனமாகக் கொண்ட வீரத்தின் விழுப் பொருளாம் முருகனை எந்நாளும் கடம்பப்பூக்களைக் கொண்டு செய்யப் பெற்ற மாலையால் வணங்கித் துதித்த தன்மையைப் போன்றது.

**விளக்கவுரை**

பாண்டியன் போரில் ஈடுபடும்போது, அவனை எதிர்ப்பதற்கு வந்த பரும் படைகள், போர் தொடங்கியவுடனேயே பின்னிட்டு ஓடி விடுகின்றன ஆதலின் போர் தொடங்கிய நிலையிலே பெரு வெற்றியை நிலை நாட்டியவன் என்றார். இவ்வாறு அமைக்கும் கவி மரபு உண்டு. இறங்குகின்ற தண்ணீர்த் துறையில் காலை வைத்தவுடனேயே நீச்சலடிக்க வேண்டிய நிலைமை உண்டானாற் போல காதலில் கால் வைத்தவுடனேயே உயிருக்குப் போராடவேண்டிய நிலைமை ஏற்பட்டுவிடும் என்பார் சிவப்பிரகாச சுவாமிகள்.

பாண்டியன் ஒருமுறை, அல்லது இருமுறை வேற்படையைச் செலுத்தியவுடனேயே எதிர்ப்படைகள் ஓடோடிவிடும், அத்துணை வீரமுடையவன் என்றார். ஒருவேளை கூலிப் படைகள் வந்தனவோ எனில், அவ்வெற்றி என்றும் நிலைத்து விளங்கும் புகழைத் தரும் வெற்றி என்று குறித்ததிலிருந்து பெரும்படைகள் வந்து மோத விளைந்த வெற்றி என்பது பெறப்படும்.

இன் தமிழ்ச் சொற்கள் கடப்பம் பூவாகவும், இன்தமிழ்ப் பாட்டுக்கள் மாலையாகவும் உருவகம் செய்யப் பெற்றன. தமிழுக்கு இனிமையாவது கேட்டவுடனேயே ஐம்புலன்களுக்கும் ஒருமித்த இன்பத்தை நிரப்பிச் செயலிழக்கச் செய்து, உயிரையும் இறைவனையும் இணைத்து, இறைவனிடத்திலுள்ள பேரின்பத்தை உயிர்களிடம் பாய வைக்கும் தன்மை. தமிழ்ச்சொல் மனத்தை ஒருமுகப் படுத்திக் கடவுள் தன்மையை உண்டாக்கும் என்பதே.

**யாம்**- ஆசிரியர் தம்மை இழிவுபடுத்தி, இவ்விழிவுடையேனுடைய பாட்டுக்களை மிகவும் உயர்வுடைய கடப்ப மலர் மாலையாகக் கொள்கிறான் என்றார். யான் ஒருமுறை பாடிய பாட்டை அவன் எந்நாளும் நான் மகிழ்ந்து வணங்கியதாக அமைத்துக் கொள்கிறான். 'அரைநிமிஷம் நினைத்தால் போதுமே' என்றார் அருணகிரியார்.

**மடங்கா மயில்**-வீரத்தில் பின்னிடாத மயில், சூரபதுமனே மயிலாக நிற்கிறான் என்ற குறிப்பை மனத்திற் கொண்டு வீரத்துக்குப் புறங்கொடாத மயில் என்றார்,

**மைந்து**-வீரம். **மைந்தன்**-வீரத்துக்கு அவன் ஒருவனே விழுமியோன் ஆதலின் மைந்தன் எனறு முருகனைக் குறித்தார்.

கடப்பமலர் தேருருளை போன்று இருப்பது. முருகனுக்கு மகிழ்வைத் தருவது. முருகன் கடப்பமலர் மாலை சூடுவதை 'உருள் பூந் தண் தாா புரளும் மார்பினன்' என்று திருமுருகாற்றுப்படை குறிக்கும். உயிர்கள் உலகியல் இன்பத்தில் திளைக்கக் காந்தட் பூவையும், அவைகள் முத்தியின்பத்தில் திளைக்கக் கடப்பம் பூவையும் சூடுவான் முருகன். எனவே, மாறனை யான் பாடிய தமிழ்ப்பாட்டுக்குப் பயன் முத்தி என்பதாம்.

**இலக்கணம்**

**மடங்கா**-ஈறுகெட்ட எதிமறைப் பெயரெச்சம்.
**மயிலூர்தி**-இரு பெயரொட்டுப பண்புத்தொகை.

கடப்பம்பூ-ஆறும் வேற்றுமைத்தொகை.
அற்று-குறிப்பு வினைமுற்று, உவமைப் பொருளில் வந்தது.
தொடங்குஅமர், இலங்கு வெற்றி, நிறைகதிர் - வினைத் தொகைகள்.
இன்தமிழ்-பண்புத்தொகை.

# 9

# சரபேந்திர பூபாலக் குறவஞ்சி

**1. நூலாசிரியர் பெயர் ;** சிவக்கொழுந்துதேசிகர்.

**பிறப்பிடம் :** கொட்டையூர். கும்பகோணத்தை அடுத்த ஒரு சிற்றூர்.

**சமயம் :** சைவம்.

**இயற்றிய நூல்கள் :** சென்னை, கல்விச் சங்க உறுப்பினராக இருந்த இவர் இயற்றியன,

கோடீச்சுரக் கோவை, தஞ்சைப் பெருவுடையார் உலா, சரபேந்திர பூபாலக் குறவஞ்சி நாடகம்.

**காலம் :** தஞ்சையை ஆண்ட சரபோஜி மன்னர் காலம். [கி. பி. 1798—1882.]

**2. நூற்பெயர் :** 'சரபேந்திர பூபாலக் குறவஞ்சி'.

**பெயர்க் காரணம் :** தஞ்சையை ஆண்டு வந்த சரபோஜி மன்னன்மேல் பாடப்பெற்ற 'குறவஞ்சி' என்னும் வகையைச் சேர்ந்த நாடக நூல்.

சரபோஜி-சரபேந்திர,
மன்னன் - பூபாலன்,
குறவஞ்சி-குறவஞ்சி இலக்கணம் அமைந்த நூல்.

**குறவஞ்சி :** பிற்கால நாடக வகையைச் சார்ந்த நூல். குறத்தியை மூல நாடக பாத்திரமாக அமைத்துப் பலவகைச் செய்திகளையும் இசைப் பாட்டாகிய கீர்த்தனை வடிவில் பாடுதல்.

கலம்பகத்தில் வரும் 'குறம்' என்ற உறுப்பையும் 'குறத்திப் பாட்டு' என்று முற்காலத்தில் வழங்கிய ஒரு பாட்டமைப்பையும் இணைத்து நாடக இலக்கணம் அமையக் கீர்த்தனைகளாகச் செய்யப் பெறும் நூல் குறவஞ்சி.

**3. நூலின் அமைப்பு ;** நாடக அமைப்பைக் கொண்டது. இடையிடையே வெண்பா, அகவல், விருத்தம் முதலிய செய்யுட்கள் வர, உரையாடல் இடையிடையே கலக்க, கீர்த்தனை வடிவத்தில் அமைந்துள்ளது.

34 கீர்த்தனைகளையும், 3 வெண்பாக்களையும், 2 அகவல்களையும், 85 விருத்தங்களையும், 2 சொச்சகக் கலிப்பாக்களையுங் கொண்டது.

**4. நூல்கூறும் பொருள் :** காதலால் வருந்தும் தலைவி ஒருத்திக்குக் குறத்தி குறி கூறுவதைப் பொருளாகக் கொண்டது. தலைவி குறத்தியை நோக்கி "நீ யார்? உன்நாடு எது? மலை எது?" என்று கேட்க, விடை கூறுவதாக அமைந்து சரபோஜி மன்னர் பெருமையை விளக்குவது.

**5. காரணம் :** கொட்டையூர் சிவக் கொழுந்து தேசிகரின் புலமை நலத்தை அறிந்த தஞ்சைச் சரபோஜி மன்னன் தன் அவைக் களப் புலவராக இவரை அமைத்தான். மன்னரின் விருப்பத்துக்கு இயையப் பல ஏட்டுச் சுவடிகளைத் தொகுக்கும் பணியில் இவர் ஈடுபட்டிருந்தார். அரசன் மேல் வைத்த நன்மதிப்பே இந்நூல் தோன்றக் காரணம்.

## பாடப்பகுதிக்கு முன்னுரை

சரபேந்திர பூபால மன்னன் தஞ்சைப் பெருந்தெரு வழியாக உலாவருவதைக் கண்ணுற்ற மோகினி என்னும் மதனவல்லி, அவனை அடைதல் இயலுமோ என ஏங்குகிறாள். அப்போது ஒரு குறத்தி அங்கே வருகிறாள். மோகினி கேட்பதற்கு முன்னமேயே சரபேந்திர பூபால மன்னனின் வாசல், வளம் ஆகியவைகளைப் பாடுகிறாள்.

அப்போது மோகினி, அக்குறத்தியைப் பார்த்து "நீ யார்? உன் நாடு எது? மலை எது?" என்று கேட்கவே, குறத்தி தன் குடியின் இயல்புகளையும் மலைவளம் முதலியவற்றையும் பலவகையாகப் புகழ்கிறாள்.

குறத்தி இங்கே தன் சொந்த மலையான நேரி மலையின் இயல்பைக் கூறுகிறாள்.

### பல்லவி

## குறத்தி தன் சொந்தமலை கூறத்தொடங்குதல்

### உரை

**குடிசை வைத்து**-எங்கள் குடிசையை அமைத்து,
**வாழுமலை கூறுவன்**-வாழுகின்றன மலையைச் சொல்லுகிறேன்,
**பூங்கொடியே**-பூங்கொடியைப் போன்றவளே!
**கோகிலமே**-குயில் போன்றவவே!
**அனபபெடையே**-பெட்டை அன்னம் போன்றவளே!
**குலவும் இளம் பிடியே**-விளங்கும் இளம் பெண்யானையைப் போன்றவளே!

### தெளிவுரை

குறத்தி மோகினியைப்பார்த்து, "பூங்கொடி போன்றவளே! குயில் போன்றவளே! பெட்டை அன்னம் போன்றவளே! விளங்கும் இளம் பெண் யானை போன்றவளே! நாங்கள் எங்கள் குடிசையை அமைத்து வாழுகின்ற மலையைச் சொல்லுகிறேன் கேள்!" என்று தொடங்கினாள்.

### விளக்கவுரை

'குடிசை வைத்து வாழும் மலை' என்று தன் சொந்த மலையைக் குறிப்பிட்டாள். பூங்கொடி, கோகிலம், பெண் அன்னம், பெண் யானை என்பவைகள் மோகினியின் பண்புகளை விளக்க எடுத்தாளப் பெற்றவைகள்.

## இலக்கணம்

பூங்கொடி-வேற்றுமைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை.
கோகிலம், அனப்பெடை-உவமையாகு பெயர்கள்.
இளம்பிடி-பண்புத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை.
அனம்-'அன்னம்' என்ற சொல்லின் இடைக்குறை.

## சரணங்கள்

### 1. மேருமலை, கைலைமலை இயல்புகள்

#### உரை

**தங்க மகா மேருவினில்**-பொன் மயமான மகாமேரு மலையில்,
**தண் குடிசை தொடுத்தோம்**-குளிர்ந்த எங்கள் குடிசையை அமைத்தோம்,
**சாபமலை என்றுரைத்தார்**-அதனைச் 'சாபமலை' என்று அறிஞர் கூறினார்கள்,
**தாபமொடு விடுத்தோம்**-சாபம் கொடுக்கும் மலையா இது என்று துன்பத்துடன் அம் மலையை விட்டுப் புறப்பட்டோம்;
**சங்கரனார் கைலைமலை தனிலுறையச் சென்றோம்**-சிவபெருமான தங்கியிருக்கும் கைலாய மலையில் தங்குவதற்காகச் சென்றோம்,
**தவ பூத கணங்கள் கண்டோம்**-மிகுதியாக இருக்கும் பூதகணங்களைப் பார்த்தோம்;
**சிவப்ரீதி என்றோம்** - சிவனுக்கு மிகவும் விருப்பமானது எனத் தெரிந்து வந்துவிட்டோம்.

#### தெளிவுரை

பொன் மயமான மேருமலையில் எங்களின் குளிர்ந்த குடிசையை அமைத்தபோது அங்குள்ள அறிஞர்கள் சாபமலை என்று சொன்னார்கள். சாபம் கொடுக்கும் மலை என்று கருதி துன்பத்துடன் அதனை விட்டுப் புறப்பட்டோம். பின் சிவபெருமானின் திருக்கயிலாய மலையில் தங்கி வாழலாம் எனக் கருதிச் சென்றோம். அங்கே மிகுதியான பூதகணங்களைப் பார்த்தோம். நாங்கள் பயந்து இது சிவபெருமானுக்காக விருப்பம் தருவது என்று தெரிந்து அங்கிருந்து அகன்றோம்

#### விளக்கவுரை

மேரு மலை பொன்மயமானது ஆகையால் தங்க மகாமேரு என்றார். குறத்தியல்லவா! பொன்மயமான மலை என்பதைப் பார்த்ததும் அங்கே சென்று குடிசை அமைத்தாள். அங்குள்ளவர்கள் 'சாப மலை இது' என்றார்கள். சாபம்-வில். சிவபெருமான் திரிபுர சம்மாரம் செய்யப் புறப்பட்டபோது மேருமலையை வில்லாக ஆக்கி எடுத்துப் போனார். இதைக் கருத்திற் கொண்டு அங்குள்ளவர்கள் சாபமலை என்றாகள். குறத்தியோ சாபமலை என்ற சொல்லுக்குச் சாபம் கொடுக்கும் மலை எனப் பொருள் கொண்டு பயந்துபோய் வந்து விட்டாள்.

பொன்மலைக்கு அடுத்தது வெள்ளிமலை; இது கைலாயமலை எனப் பெறும். இங்கே சிவபெருமான் தங்கியிருக்கிறார். வெள்ளிமலை என்ற

ஆசையால் அங்கே குடிசை அமைக்கப் போனாள். அங்கேயோ பூதக் கூட்டங்கள் நிறைந்திருந்தன. பூதங்களைக் கண்டு பயந்த அவள் இது சிவனுக்குத்தான் விருப்பத்தைக் கொடுக்கும், நமக்குப் பயத்தைத்தான் கொடுக்கும் என்று வந்துவிட்டாள். மேலும் குறத்தி முருகனுக்குப் பெண் கொடுத்த முறையினள். முருகனுக்குச் சொந்தமானதாக இருந்தால் உரிமைபற்றித் தங்கலாம். முருகனுக்கு மாறுன வழியில் பெண் கொடுத்த குலமாதலின் மாமனார் என்ற முறையில் தம் குடியை மிகவும் தொல்லைப் படுத்துவார். மருமகனுக்கு உகந்ததாக இல்லாமல் மாமனாருக்குப் பிரிதி (விருப்பம்) தருவதாதலின் வேண்டாம் என மறுத்தாள்.

### இலக்கணம்

தண்குடிசை-பண்புத் தொகை.
தொடுத்தோம், விடுத்தோம், சென்றோம், என்றோம் } தன்மைப் பன்மை வினைமுற்றுக்கள்.
சாப மலை--'வில்லாகிய மலை' என்ற பொருள் படும்போது இருபெயரொட்டுப் பண்புத் தொகை.
உறைய-செய என் வாய்பாட்டு வினையெச்சம்.
தவ பூத கணங்கள்-உரிச்சொல் தொடர்.
பூத கணங்கள்-ஆறும் வேற்றுமைத் தொகை.

## 2. திருக்காளத்திமலை திருக்குற்றாலமலை இயல்புகள்

### உரை

**திங்கள் அணி காளத்தி கண்டு**-சந்திரனை உச்சியில கொண்டுள்ள திருக்காளத்தி மலையைப் பார்த்து.
**அதனை நயந்தோம்**-அதனை விரும்பினோம்,
**முன்**-முற்காலத்தில்,
**திண்ணன்**-திண்ணன் என்ற இளமைப் பெயரைக் கொண்ட கண்ணப்ப நாயனாரின்,
**கண்ணைப் பறித்தது இன்னது என்றார்**-கண்ணைப் பிடுங்கிக்கொண்டது இம்மலைதான் என்று கூறினார்கள்;
**பயந்தோம்**-அதைக் கேட்ட நாங்கள் பயந்து அம் மலையைவிட்டு வந்தவிட்டோம்;
**அம் குலவு**-அழகு கொஞ்சி விளையாடுகிற,
**குற்றால மலையின் உறப் போனோம்.** திருக்குற்றால மலையில் சென்று தங்கலாம் என்று சென்றோம்;
**அருவியின் மூழ்கிடுவீர் என்றார்**-பெருக்கெடுத்து வீழ்கின்ற நீர் வீழ்ச்சியில் மூழ்கி இறந்து போய் விடுவீர் என்று அங்குள்ளோர் கூறினர்,
**நழுவி வரலானோம்**-மெல்ல நழுவி விட்டோம் அவ் விடத்தை விட்டு.

### தெளிவுரை

*சந்திரனை உச்சியில் கொண்டதாய் அமைந்த* திருக்காளத்தி மலையைக் கண்டு அதனை விரும்பினோம். ஆனால், அங்குள்ளோர் முற்காலத்தில் திண்ணனாரின் கண்ணைப் பிடுங்கிக் கொண்டது இம்மலைதான் என்றார்கள்; பயந்து நாங்கள் வந்துவிட்டோம்; அழகு கொஞ்சி விளையாடுகின்ற குற்றால மலையில் தங்க எண்ணிப் போனோம். அங்குப் பெருக்கெடுத்து விழும் நீர்வீழ்ச்சியில் முழுகி இறந்து விடுவீர்கள்

என்று அங்குள்ளோர் கூறவே தப்பித்தோம் பிழைத்தோம் என்று மெல்ல நழுவி வந்துவிட்டோம்.

## விளக்கவுரை

பொன்மலை, வெள்ளிமலையை விட்டபிறகு மிக உயர்ந்த உச்சியை உடைய மலை என்று காளத்தி மலையை விரும்பினாள் குறத்தி. திங்கள் அணி மலை என்று கூறியது மலையின் உயர்வு சந்திரனைத் தொடும் அளவுக்கு இருந்தது என்னும் பொருளைத் தந்தது.

காளத்தி மலை இப்போது ஸ்ரீகாளத்தி என்றே வழங்கப்பெறும். பொன்முகலி யாற்றங்கரையில உள்ளது. முன்னை 'திண்ணன்' என்ற வேடன் தன் நண்பனுடன் வேட்டையாடச் சென்றபோது மலைமேல் குடுமித்தேவர் என்ற பெயருடைய இலிங்கம் இருப்பதைக் கண்டு, அன்பு மிகுதியால் அவ்விலிங்கத்திடமே தங்கிவிட்டான். நாள் தோறும் பன்றி இறைச்சியை வேகவைத்துத் தேனில் கலந்து சுவை பார்த்து ஊட்டுவது போன்ற பக்திச் செயல்களைக் குடுமித்தேவருக்குச் செய்து வந்தான். ஒருநாள் குடுமித்தேவரின் கண்ணில் இரத்தம் வந்தது. ஊனுக்கு ஊன் இட்டால் ஊன் நோய் தீரும் என்பதை அறிந்த திண்ணன், தன் கண்ணை அம்பினால் தோண்டி குடுமித்தேவரின் இரத்தம் வந்த கண்ணில் அப்பினான். இரத்தம் நின்றது. சிறிது நேரத்துக்கெல்லாம் அடுத்த கண்ணிலும் வந்தது. உடனே மருந்து தெரிந்த வேடன், இரண்டாவது கண்ணைப் பிடுங்கிவிட்டால் அதை அப்புதவற்குரிய இடம் தெரியாதே என்று, தன் செருப்பு மாட்டிய காலால் குடுமித்தேவர் எனப் பெறும் இலிங்கத்தின் இரத்தம் ஒழுகின்ற இடத்தைத் தொட்டுக்கொண்டு, இரண்டாவது கண்ணை அம்பினால் குத்தித் தோண்ட முற்படும்போது, சிவபெருமான் 'நில்லு கண்ணப்ப' எனக் கையைத் தடுத்து அருள் புரிந்தார் என்பது வரலாறு இதை அங்கே உள்ளவர்கள் "திண்ணன் கண்ணைப் பறித்தது இம்மலை" என்று குறத்தியிடம் சொன்னார்கள். செய்தியை அறியாத குறத்தி எங்கே நம் கண்ணையும் பறித்துவிடுமோ என்று பயந்து புறப்பட்டுவிட்டாள்.

குற்றாலமலையின் அழகில் ஈடுபட்ட ஆசிரியர் அம் குலவு மலை என்றார். அழகு கொஞ்சி விளையாடும் மலை என்பது பொருள. 'அருவியில் மூழ்கிடுவீர்' என்று மற்றவர்கள் சொன்னதன் கருத்து அருவியில் மூழ்கி ஆனந்தமாக விளையாடலாம் என்று கூறினார்கள். குறத்தியோ அருவியில் முழுகி இறந்து போவீர்கள் என்று கூறியதாக எண்ணி உயிர் பிழைத்தோம் என்று எண்ணி மெல்ல நழுவி விட்டாள்.

## இலக்கணம்

**கயந்தோம், பயந்தோம், போனோம், ஆனோம்**-தன்மைப் பன்மை வினைமுற்றுக்கள்.
**திங்கள் அணி**-இரண்டாம் வேற்றுமைத் தொகை.
**அணி காளத்தி**-வினைத்தொகை.
**திண்ணன் கண்ணை**-ஆறாம வேற்றுமைத் தொகை.
**பறித்தது**-வினையாலணையும் பெயர்.
**குலவு குற்றாலம்**-வினைத்தொகை.
**நழுவி**- செயது' என் வாய்பாட்டு வினையெச்சம்.
**வரல்**-தொழிற்பெயர்.

## 3. வடவேங்கடம்—பழனிமலை இயல்புகள்

### உரை

**வட வேங்கடத்தில் ஏறி**-வடக்கே உள்ள வேங்கட மலையின் மேல் ஏறி,
**இருக்க இடம் பார்த்தோம்**-தண் குடிசை அமைத்துத் தங்குவ தற்கு இடத்தை ஆராய்ந் தோம்,
**இன்னது**-இம்மலை,
**மால கொண்ட மலை என்றுரைத் தார்**-மால் கொண்ட மலையா கும் என்று கூறினார்கள்,
**தீர்ந்தோம்** - அங்குத் தங்கலாம் என்ற எண்ணத்தையே விட்டு விட்டோம்,
**ஈறு இல் உயர்**-முடிவு இல்லாது உயர்ந்த புகழையுடைய,
**பழனிமலை**-பழனி மலையை,
**இனிது எனவே குறித்தோம்**-நாம் தங்குவதற்கு ஏற்ற வசதியை யுடையது என்று எண்ணி னோம்;
**இடும்பன் மலை எனப் புகன்றார்**-இடும்பனுக்கு உரிய மலையாகும் என்று அங்குள்ளோர் கூறினார் கள்;
**திடம் கொள் அதை வெறுத்தோம்**-வலிமை பொருந்திய அம்மலை யினை வெறுத்து ஒதுக்கிவிட் டோம்.

### தெளிவுரை

வடக்கே உள்ள வேங்கடமலையில் ஏறி, குடிசை அமைத்து வாழத் தகுதியுள்ள இடம் எது? என ஆராய்ந்தோம். அப்போது அங்கே உள்ளவர் 'இம்மலை மால் கொண்ட மலை' என்று உரைத் தார்கள். அங்கே தங்கலாம் என்ற எண்ணத்தையே விட்டுவிட் டோம்; பின் முடிவில்லாது உயர்ந்த புகழையுடைய பழனி மலையை நாம் தங்குவதற்கு ஏற்ற வசதியை உடையது என்று எண்ணிப் போனோம். அது இடும்பனுக்கு உரிய மலை என்று சொன்னார்கள். அதனால் வலிமை பொருந்திய அம்மலையினை வெறுத்து ஒதுக்கி விட்டோம்.

### விளக்கவுரை

வேங்கட மலை என்பது திருப்பதி மலை. இது வடக்கே இருப்ப தால் தமிழ் நூல்களில் வட வேங்கடம் என்றே குறிக்கப்படும். இது திருமால் நின்ற கோலத்தில் தங்கியிருக்கும் பேறுபெற்ற மலை. குறத்தி இங்கே சென்று தங்கலாம் என்று எண்ணியபோது அங்கே உள்ளவர்கள் திருமால (மகாவிஷ்ணு) தங்கிய மலை என்னும் பொருள் படும்படி, **'மால் தங்கும் மலை'** என்றார்கள். 'மால்' என்பதற்கு மயக்கம் என்றொரு பொருளும் உண்டு. குறத்தி இப்பொருளை எடுத் துக்கொண்டு, மயக்கம் தங்கியிருக்கும் மலையா இது! அப்படியானால் நமக்குத் துன்பமே தரும் என்று அங்கே தங்கும் எண்ணத்தையே விட்டுவிட்டாள்.

பழனிமலை எல்லையில்லாது உயர்ந்த புகழை உடையது என்பதை **'ஈறில் உயர் பழனி'** என்றார்.

'இடும்பன்' என்பான் முருக பக்தன், அவன் காவடி எடுத்துச் சென்றான். அக்காவடியில் முருகப் பெருமான் நின்றார். காவடி கனத்தது. முயன்று தூக்கிச் சென்ற இடும்பன் இப்போது பழனி மலை உள்ள இடத்தில் காவடியை வைத்துவிட்டான். சிறிது நேரம்

கழித்து எடுக்கும்போது எடுக்க முடியவில்லை. அதுவே பின் பழனி மலையாயிற்று என்பர். இடும்பனுக்கு அருள் புரிந்தார் முருகன். இடும்பனுக்கு உரிய மலையாதலின் இடும்பன் அம்மலைக்குக் காவல் தெய்வம். குறத்தி அம்மலையை இனிமை பலவும் கொண்ட மலை என்று கருதி அங்கே போனபோது 'இடும்பன் மலை இது' என்று உரைத்தார்கள். 'இடும்பு' என்றால் துன்பம். மேலும் முருகனுக்குச் சொந்தமில்லாமல் இடும்பனுக்குச் சொந்தமானது ஆகையால் எப்பொழுதும் துன்பம் தருவான் என்று கருதி அஞ்சி அகன்றான் குறத்தி என்பதாம்.

### இலக்கணம்

**வட வேங்கடம்**-பண்புத் தொகை.
**பார்த்தோம், தீர்த்தோம், குறித்தோம், வெறுத்தோம்**-தன்மைப் பன்மை வினைமுற்றுக்கள்.
**உயர் பழனி**-வினைத்தொகை.
**இடும்பன் மலை**-ஆறும் வேற்றுமைத் தொகை.

## 4. ஆனைமலை கொல்லிமலை இயல்புகள்

### உரை

**தூறு முகில் சூழும்**-மழையைத் துளியாகச் சிந்துகின்ற சூழ்ந்திருக்கும்,
**ஒரு தூய மலை**-ஒப்பற்ற தூய்மை பொருந்திய மலையினை நம் தங்குமிடமாகக் கொள்ளலாம் என்று கருதி,
**தொட்டேம்**-அம்மலையின் அடியாரத்தைச் சென்று பொருந்தினோம்,
**ஈங்கு இது தூங்கல் மலை என்றார்**-இங்கே இருக்கும் இம்மலையானது தூங்கல் மலையாகும் என்று கூறினார்கள்,
**ஆங்கு அதனை விட்டோம்**-சொல்லைக் கேட்ட அந்தச் சமயத்திலேயே அங்கே தங்கலாம் என்ற எண்ணத்தைக் கைவிட்டு விட்டோம்;
**அப்பால்**-அப்புறம்,
**கூறு புகழ் சேரலன் தன்**-சிறப்பித்துப் பேசப் பெறுகிற சேரனுடைய,
**குவடு அணைந்தோம்** - மலையை அடைந்தோம்
**கொல்லி இது என்று உரைத்தார்**-(அங்கே இருந்தவர்கள்) இது 'கொல்லி' மலையாகும் என்று கூறினார்கள்,
**தள்ளி இப்பால் வந்தோம்** - உடனேயே அம்மலையில் தங்கலாம் என்ற கருத்தை உதறித் தள்ளிவிட்டு இப்பக்கம் வந்து சேர்ந்தோம்.

### தெளிவுரை

மழையைத் துளியாகச் சிந்துகின்ற மேகங்கள் சூழ்ந்திருக்கும் ஒப்பற்ற தூய்மை பொருந்திய மலையினை நம் தங்கும் இடமாகக் கொள்ளலாம் என்று கருதி அம்மலையினைச் சென்று அடைந்தோம். அங்கே உள்ளவர்கள்; இம்மலை 'தூங்கல் மலையாகும்' என்று கூறினார்கள்; சொல்லைக் கேட்ட அந்தச் சமயத்திலேயே அங்கே தங்கலாம் என்ற எண்ணத்தைக் கைவிட்டு விட்டோம். அப்புறம், சிறப்பித்துப் பேசப் பெறுகிற சேரனுடைய மலையை அடைந்தோம்; அங்கே உள்ளவர்கள் இது கொல்லி மலை என்று கூறினார்கள், அங்கே தங்கலாம் என்ற கருத்தை உதறித் தள்ளி இப்பக்கம் வந்து சேர்ந்தோம்

### விளக்கவுரை

தூறுதல்-நீரைத் துளியாகச் சிதறுதல். தூயமலை-ஆனைமலை. சிறந்த தவசிகள் தங்குவதற்கு ஏற்ற மலையாதலின் தூயமலை என்றார். சமணர்கள் தமிழகத்தில் சிறப்புற்றிருந்தபோதும் ஆனைமலையில் தான் அதிகம் பேர் தங்கி வாழ்ந்தனர் குறத்தி அம்மலையில் தங்கலாம் என்று போனபோது அங்கே உள்ளவர்கள் இது 'தூங்கல் மலை' என்றனர். தூங்கல்-யானை. குறத்தி அப்பொருளைக் கொள்ளாமல் 'தூங்குதல்' என்ற பொருளைக் கொண்டு இங்கே இருந்தால் நமக்குத் தூக்கம்தான் வரும் என்று கருதிச் சென்றாள் என்பதாம்.

குவடு-மலை. சேரன் மலையாகிய இது கொல்லி மலை என்ற பெயருடையது. குறத்தியானவள் 'கொல்லி' என்பது அம்மலையின் பெயர் எனக் கொள்ளாது கொல்லும் தன்மையுடைய மலை என்று பொருள் கொண்டு பயந்து வந்துவிட்டாள்.

### இலக்கணம்

- தூறுமுகில், கூறுபுகழ்-வினைத் தொகைகள்
- தூய மலை-பெயரெச்சம்.
- ஈங்கு, ஆங்கு-இங்கு, அங்கு என்பவைகளின் நீட்டல் விகாரம்.
- குவடு-சினையாகு பெயர்.
- மலைதொட்டோம், குவடு அணைந்தோம்-இரண்டாம் வேற்றுமைத் தொகைகள்.
- தொட்டோம், விட்டோம் - தன்மைப் பன்மை வினை முற்றுக்கள்.

## 5. விராலிமலை முதலிய மலைகளின் இயல்புகள்

### தெளிவுரை

(மோகினியைப் பார்த்து) அம்மே! விராலிமலை, சோலைமலை, சுவாமிமலை ஆகிய மலைகளை எங்கள் குலத்தில் வந்து தோன்றிய தோடன்றி எங்கள் குலம் விளங்குவதற்காக வாழ்கின்ற வள்ளியம்மைக்குச் சீதனமாக நாங்கள் விரும்பிக் கொடுத்துவிட்ட மலைகள். ஆகையால் அங்கே சென்று தங்க முடியாது. மேலும் பிரான்மலையும், திருச்சிராப்பள்ளி மலையும் இவை போன்ற பிற மலைகளும் மூன்றும் பிறைச் சந்திரனை முடியின்மேல் வைத்திருக்கும் தலைவனாகிய சிவபெருமானுடைய மலைகளாக ஆகிவிட்டன அம்மே!

### விளக்கவுரை

விராலிமலை, சோலைமலை, சுவாமிமலை ஆகிய மூன்றும் முருகன் தலங்கள் முருகன் அங்கே சிறப்பாகத் தங்குவதற்குக் காரணம்-தலங்களாகக் கொண்டு வருவார்க்கெல்லாம் முத்தி முதலிய எல்லாச் செல்வங்களையும் வழங்குவதற்குக் காரணம்:-அவை எங்கள் குல விளக்காய்த் திகழும் வள்ளியம்மைக்கும் நாங்கள் கொடுத்த சீதனச் சொத்து என்பதால் ஆகும். காதலியின் உரிமையுடைய இடத்தில் விருப்போடு தங்கியும், இடத்திற்குக் குறைபாடு வரக் கூடாதே என்று வருவார்க்கு எல்லாவற்றையும் வழங்குகிறான் என்றும் நயம் தோன்றக் கூறினார். நாங்கள் எங்கள் பெண்ணுக்குக் கொடுத்த

சொத்தில் நாங்களே தண் குடிசை அமைத்து வாழ்தல் முறையாகுமா! ஆகையால் அங்கெல்லாம் போகவில்லை என்றாள். **எங்கள் குல வள்ளி**-வாங்கும் குலமாக இருந்த எங்கள் குலத்தை வள்ளற் குலமாக ஆக்கியவள். வள்ளல் எனப்பெறும் முருகனையே தேனூறு கிளவிக்கு வாயூறி நிற்கவைத்து, அவனுக்கு வழங்கும் வள்ளல் தன்மை உடையவள் வள்ளி.

பிரான் மலையும் திருச்சிராப்பள்ளி மலையும் சிவன் மலைகள் ஆயின ஆகையால் அங்கேயும் செல்லமாட்டோம் என்றாள்.

### இலக்கணம்

**அம்மே**-'அம்ம' என்ற சொல்லின் திரிபு.
**குலவள்ளி**-ஏழாம் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்க தொகை.
**உகந்து**-'உவந்து' என்ற சொல்லின் திரிபு; செய்து என் வாய்பாட்டு வினையெச்சம்.
**அளித்தோம்**-தன்மைப் பன்மை வினைமுற்று.
**பிரான் மலைகள்**-ஆறும் வேற்றுமைத்தொகை.

## 6. நேரிமலையின் இயல்பு

### உரை

**தராதலம்**-தரையை இடமாகக் கொண்டு வாழ்பவர்கள் எல்லாம்,
**போற்றிட**-புகழ்ந்து வணங்கித் துதி செய்ய,
**மேவும்**-எல்லா வளங்களும் பொருந்தியிருக்கும்,
**தஞ்சையில்**-தஞ்சாவூரில்,
**எந்நாளும் தங்கு**-எப்பொழுதும் புகழால் நிலைபெற்ற,
**சரபோஜி மன்னர்**-சரபோஜி மன்னர்,
**சிந்தை மகிழ்ந்து**-மன மகிழ்ச்சியுடன்,
**ஆளும்**-ஆட்சி செய்யும் பேறுபெற்ற,
**புராதன மலையாகி**-பழமையான மலையாக அமைந்து,
**புகழ் தவத்தோர்**-புகழ் வாய்ந்த தவசிகளாகிய சான்றோர்கள்,
**முந்த**-முன்னிட்டுக் கொண்டு தங்கும் வண்ணம்.
**பொருந்தி**-எல்லா வளங்களையும் உடையதாய்,
**வளர்**-வளர்ச்சி பெற்றுள்ள,
**நேரி**-நேரிமலையே,
**எங்கள் சிறந்த மலை அம்மே**-,

### தெளிவுரை

இவ்வுலகில் வாழ்பவர்கள் எல்லாரும் வணங்கித் துதிக்குமாறு வளம்பல பொருந்திய தஞ்சையில் எந்நாளும் தங்கியிருக்கும் நிலையைப் புகழால் பெற்ற சரபோஜி மன்னர், மனமகிழ்ந்து ஆட்சி செய்யும் பேறு பெற்ற பழமையான மலையாக அமைந்து புகழ் வாய்ந்த தவச் சான்றோர்கள் முன்னிட்டுப் போட்டியிட்டுக் கொண்டு வந்து தங்குமாறு வளங்கள் எல்லாவற்றையும் உடையதாய் வளர்ச்சி பெற்றுள்ள **நேரிமலையே** எங்கள் சிறந்த மலை அம்மே!

### விளக்கவுரை

நேரிமலையின் சிறப்பாக இங்கே கூறப்படும் கருத்துக்கள் இரண்டு. ஒன்று, சரபோஜி மன்னரால் ஆளும் பேறுபெற்ற பழமை

யான மலை; இரண்டு, புகழ்வாய்ந்த தவச்சான்றோர்களும் முன்னிடப் போட்டியிட்டுக் கொண்டு வந்து தங்குமாறு எல்லா வளங்களையும் உடையதாய் வளர்ச்சி பெற்றுள்ள மலை.

**சரபோஜி மன்னன் சிறப்பு:** 1. எல்லா வளங்களையும் பொருந்தியிருக்கும் தஞ்சையை ஆண்டவர். 2. தரையை இடமாகக் கொண்டு வாழ்பவர்கள் எல்லாராலும் புகழ்ந்து வணங்கித் துதி செய்யுமாறு ஆட்சி செலுத்தியவர். 3. தஞ்சையை நினைக்கும் போதெல்லாம் அவர் எண்ணம் வராமல் இராது ஆகையால் தஞ்சையில் ஒரு குறிப்பிட்ட காலத்தில் வாழ்ந்தவர் இலலை அவர். அன்றும், இன்றும், என்றும் தஞ்சாவூர் உள்ளவரையில் அவர் அங்கே தங்கி வாழ்ந்து வரும் நிலையுடையவர்.

இந்நூல் அவர் புகழ்பாடவே இயற்றப் பெற்றதாதலின் குறத்தியின் வாயிலாக ஆசிரியர் சரபோஜி மன்னனைப் புகழ்ந்தார். **தராதலம்**-தரா-தரை; தலம்-இடம். தரையை இடமாகக் கொண்டு வாழ்பவர்களை உணர்த்தியது. தராதலம் என்பதற்குப் பொதுவாகப் 'பூமி' எனப் பொருள் கொள்ளுவர்.

இனி, தராதலம் போற்றிட மேவும் தஞ்சை என்ற தொடருக்கு 'இப்பூவுலகம் போற்றுமாறு பல வளங்களையும் பொருந்திய தஞ்சை' என்று, தஞ்சாவூருக்கு அடைமொழியாகவும் கொள்ளலாம்.

### இலக்கணம்

தராதலம்-வடசொல் தொடர்.
**மேவுந் தஞ்சை**-பெயரெச்சத்தொடர்.
**மாமலை**-உரிச்சொல் தொடர்.
**தங்கு சரபோஜி, புகழ் தவத்தோர், வளர் நேரி**-வினைத்தொகைகள்.
**சிறந்த மலை**-பெயரெச்சத் தொடர்.

## 7. நேரிமலையே சொந்தமலை

### உரை

**நேரிமலை மேல்**-நேரி என்னும் மலையின் மேல்,
**குடிசை நிலைக்க வைத்தோம்**-எங்கள் குடிசையை நிலைபெறுமாறு அமைத்துள்ளோம்;
**நீடும் அது**-புகழாலும் அளவாலும் பெருமையாலும் நீண்டு கொண்டே இருக்கும் தன்மைத்தாகிய அம்மலை,
**எங்கள் குடி தழைக்க வைத்து**-எங்கள் குடியைத் தழைத்து ஓங்குமாறு செய்தது,
**தாரகைகள் போல**-விண் மீன்களைப் போல,
**முத்தம் அதில் தயங்கும்**-முத்துக்கள் அம்மலையில் ஒளிவிடும்,
**சந்தம் உறு**-சந்தன மரங்கள் செறிந்து வளர்ந்துள்ள,
**நேரி**-நேரிமலை,
**எங்கள் சொந்த மலை அம்மே!**-எங்களுடைய சொந்த மலையாகும் அம்மே!

### தெளிவுரை

நேரிமலையின்மேல் எங்களுடைய குடிசையை நிலைநிறுத்தும்படியாக அமைத்தோம்; புகழாலும் அளவாலும் பெருமையாலும் நீண்டு கொண்டேயிருக்கும் அந்நேரிமலை எங்களுடைய குடியைத்

தழைத்தோங்குமாறு செய்தது அம்மலையின்கண் விண்மீன்களைப் போல முத்துக்கள் ஒளிவிடும். சந்தன மரங்கள் செறிந்து வளர்ந்துள்ள நேரிமலை எங்கள் சொந்த மலையாகும் என்று மோகினியை நோக்கிக் குறத்தி கூறினள்.

**விளக்கவுரை**

நேரிமலையை **நீடும்** மலை என்றார், இக்குறவஞ்சி நூல் மூலம் பாராட்டப்பெறும் புகழாலும், புராதன மலைகளில் ஒன்று என்ற பெருமையாலும் தம்மை நோக்கி வந்தவர்கள் எல்லாருக்கும் அவரவர்களுக்கு வேண்டியவைகளை நேரும் (உடன்பட்டுக் கொடுக்கும்) மலை என்ற அளவாலும் நீண்டு கொண்டேயிருப்பதால் **நேரிமலையை நீடும் மலை என்றார்.**

அம்மலையில் முத்துக்கள் விண்மீன்களைப் போல ஒளிவிடும். **சந்தம்** என்பதற்கு 'அழகு' என்றும் பொருள் கொள்ளலாம்.

**இலக்கணம்**

**நேரி மலை**-இருபெயரொட்டுப் பண்புத்தொகை.
**நீடும் அது**-பெயரெச்சத் தொடர்.
**எங்கள் முடி**-ஆறும் வேற்றுமைத் தொகை.
**போல**-உவமையுருபு.
முத்தம் **வயங்கும்**-செய்யுமென் வாய்பாட்டு **வினைமுற்று**,
'முத்து' அம் சாரியை பெற்றது
**உறுநேரி**-உரிச்சொல் தொடர்.

# 10

# மாரிவாயில்

1. **நூலாசிரியர் இயற்பெயர்:** சந்தியானந்த—சோமசுந்தர பாரதியார்.

**சிறப்புப்பெயர்: பாரதி:** 1896 ஆம் ஆண்டு திருநெல்வேலி இந்துக் கல்லூரியில் கூடிய புலவர் கூட்டமொன்றில் இப்பட்டம் வழங்கப் பெற்றது.

**நாவலர்:** 1944இல் இலங்கைப் புலவர் மாநாட்டில் இப்பட்டம் வழங்கப் பெற்றது.

**டாக்டர்:** அண்ணாமலைப் பல்கலைக்கழக வெள்ளி விழாவில் இப்பட்டம் வழங்கப் பெற்றது.

**கணக்காயர்:** இப்பட்டம் மதுரைத் திருவள்ளுவர் கழகத்தில் அளிக்கப்பட்டது.

**இளசைக்கிழார்:** இப்பெயர் பிறந்த ஊர் காரணமாக வழங்கப் பெற்றது.

**பிறப்பிடம் :** 'இளசை' என்னும் பெயருடைய எட்டையபுரம்.

**தந்தை :** சுப்பிரமணிய நாயகர் என்ற எட்டப்பப்பிள்ளை. எட்டையபுர மன்னரின் உள்படுகருமத் தலைவராகப் பணியாற்றியவர்.

**இயற்றிய நூல்கள் :** தொல்காப்பிய உரை, திருவள்ளுவர், தசரதன் குறையும் கைகேயி நிறையும், சேரர் பேரூர், சேர வேந்தர் தாய வழக்கு, (இவை ஆய்வு நூல்கள்), மாரிவாயில், மங்கலங் குறிச்சிப் பொங்கல் நிகழ்ச்சி (இலக்கியம்), நற்றமிழ், பழந்தமிழ் நாடு—கட்டுரைத் தொகுப்பு.

Thiruvalluvar Tamil Classic—English.

**பிற செய்திகள் :** மதுரையில் வழக்குரைஞராகவும் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் தமிழ்த்துறைத் தலைவராயும் பணியாற்றினார். இராமநாதபுரம், எட்டையபுரம், செட்டிநாடு அரசர்களால் போற்றிப் புகழப் பெற்றவர். தாய்மொழிப்பற்றும், முன்னேற்றவுணர்வும் கொண்டவர். இவர் நெஞ்சம் **தமிழ் நெஞ்சம்.**

**2. நூற்பெயர் :** மாரிவாயில்.

**காரணம் :** வாயில் என்பது வழி என்னும் பொருளுடையது. வழியை உண்டாக்கியவரையும் வழி என்று கூறலாம். தலைவனுக்கும் தலைவிக்கும் ஊடல் நேருமானால் ஊடலைத் தீர்த்து சமாதானம் செய்து வைப்பவர்களை **'வாயில்'** என்று கூறும் வழக்கு உண்டு. ஊடலையே யல்லாமல் ஒரு காரியத்தை முடித்து வைக்கிறவர்களையும் **'வாயில்'** என்று சொல்லலாம். ஒரு தலைவி தன் காதலனிடம் தன்னுடைய உள்ளத்துணர்ச்சிகளைத் தெரிவிக்க, ஒரு கிளியைத் தூதாக அனுப்பினாளேயானால் அந்தக் **கிளி** **'வாயில்'** என்று கருதப்பெறுகிறது. இவ்வாறே தலைவி ஒருத்தி, **மேகத்திடம்** தன் கருத்துக்களைக் கூறித் தலைவனிடம் **தூது** அனுப்புகிறாள். மாரி-மழையைத்தரும் **மேகம்-வாயில்**-தூது; **மேகவிடுதூது** என்பதே பொருள்.

**3. நூல் கூறும் பொருள் :** பாண்டவருள் ஒருவனான அருச்சுனன் பாண்டியன் மகளாக **'சித்திராங்கதை'**யை மணந்ததாக வரலாறு ஒன்று உண்டு. சித்திராங்கதை தன்னை மணந்து பிரிந்து சென்ற அருச்சுனனிடத்துக்குத் **தூதாக மேகத்தை** விட்டாள் என ஆசிரியர் கற்பனை செய்து கொண்டு பலவகைச் செய்திகளையும் அமைத்துக் கூறுகிறார்.

**4. நூல் அமைப்பு :** தமிழ் வணக்கம், தமிழ்த்தாய் வாழ்த்து, தமிழ்ப்பல்லாண்டு, அவையடக்கம் முதலியவை நீங்கலாக **221** விருத்தப்பாக்களால் அமைத்துள்ளார்.

**5. காலம் :** ஆசிரியர் காலமே நூலின் காலம். **கி.பி.1879—1959.**

## பாடப்பகுதி

சித்திராங்கதை அருச்சுனனிடம் சென்று செய்தி சொல்லுமாறு மேகத்தைத் தூது விடுகிறாள். அருச்சுனன் இருக்கும் இடத்திற்குச் செல்லுவதற்குரிய வழிகளைச் சொல்லும் போது **'நீலமலை'**யின் இயற்கை வளங்களைக் கூறுவதாக அமைந்த பகுதி இது. நீலமலை-நீலகிரி. உதகை என்று இப்போது வழங்கப் பெறும் மலை.

**மேகங்கள் நீங்காத மேன்மை**

யானைமலையிலிருந்து நீங்கிச் சென்றால், இளமையாகிய நிலவின் ஒளியை வீசுகின்ற பற்களாகிய வெண்முத்துக்கள் மலர்ந்திருக்கின்ற செம்மைநிறமும் அழகும் கொண்டிருக்கிற தாமரையினைப்போன்ற முகத்தை உடையவர்களாய் நாட்காலையில் தயிர்த் தாழியின் பக்கத்தேயிருந்து கடைவதற்காக மத்தினை இழுக்கும் ஆய்க்குலப் பெண்களின் அழகிய கூந்தலை மேகங்கள் ஒத்தனவாய் எங்கும் பரவியிருந்து நீங்கிச் செல்ல மாட்டாத நிலைமையை மகிழ்ந்து காணுவாய்.

**அங்கே அழகு அரசு வீற்றிருக்கும்**

உயிர்களுக்கு நோய் தருவதை என்றும் தம் வாழ்நாளில் அறியாத தண்மை (குளிர்ச்சி) பல்வகை வளமைகளை உண்டாக்க,

அசைந்தோடும் வெண்ணிற மேகங்கள் எங்கெங்கு நோக்கினும் அங்கெல்லாம் கவிந்து நிற்க,

'வசந்தம்' என்ற பருவம் ஒன்றே விருப்பத்துடன் அங்கே உலவிக் கொண்டிருக்க,

தடைகளையெல்லாம் வென்று பாய்ந்து ஓடிவரும் நீர்வீழ்ச்சியின் தாள அமைதிகொண்ட இசைக்கேற்ப மயில்கள் ஆட,

எல்லாப் பொருள்களையும் ஆராய்ந்து உண்மையை வெளியிடும் 'ஞானம்' 'அழகு' என்ற ஒன்றையும், அவ்வாறு ஆராய்ந்த அழகின் தன்மை இது என்று வெளியிடுவதற்காக நீண்ட நாட்களாக அழகு எங்கே எங்கே என்று ஞானத்தால் தேடப்பெறும் 'அழகு' அங்கே அரசு வீற்றிருக்கும்.

**அங்கே இயற்கைத் தெய்வம் அரசிருக்கும்**

அழிந்துபோகும் வளமைகளை அங்குள்ள இடங்களிற் கண்டறியப்பெற முடியாத நிலைமையினில்; வெறுப்பினைத் தரும் வெய்யிலின் வெம்மைத தன்மையை எப்பொழுதும் கண்டறியாத காட்டில்; மூங்கில் தரும் இயற்கைக் குழலில் காற்று ஊதி இசை எழுப்ப மென்மையான சிறகுகளை உடைய வண்டுகள் யாழொலி போன்ற ஒலியை எழுப்ப; மலையில் உயர்ந்த உச்சியிலிருந்து வரும் கலங்கல் நீர் பாட, இயற்கைத் தெய்வம் அரசபோகத்திற் சிறந்து வீற்றிருக்கும்.

## 1. மேகங்கள் நீங்காத மேன்மை

**உரை**

**இ திருமலையின் நீங்கின்** - (தூதாகச் செல்ல இருப்பது மாரியே (மேகம்) யாதலின் மாரியே!) இந்த அழகிய (யானை) மலையிலிருந்து நீங்கிச் செல்வாயானால்

**இள நிலவு எறிக்கும்** - இளமையான சந்திரவொளியை விட்டு விட்டு வெளிப்படுத்தும்,

**மூரல் முத்து**-பற்களாகிய முத்துக்களை,

**இருந்து அலர்ந்த** - தன்னிடத்தே அகப்பட வைத்துக் கொண்டிருந்து மலர்ந்திருக்கிற,

**செம்பொன் முளரியின்** - செம்மையையும் அழகையும் கொண்டு விளங்கும் செந்தாமரையைப் போன்ற,

**முகத்தர்** - முகத்தை உடையவராய்,

**வைகல்** - இரவுக் காலத்தை அழித்து, விடியற்காலம் வரும்

வரை காத்துக்கொண்டு தங்கியிருக்கும் நேரமாகிய வைகறையில்,
இருந்து-அழகு பெற அமர்ந்து,
மத்து இழுக்கும் - தயிர்ப் பானையோடு இணைக்கப்பெற்ற மத்தினை இழுத்துத் தயிர் கடைகிற,
ஆய மகளிர் - இடைக் குலத்துப் பெண்களின்,
அம் குழலை-அழகிய கூந்தலை,
ஒத்து இருந்த மாரி-நிறம் முதலியவற்றால் ஒப்புமை கொண்டு விளங்கித் தங்கியிருந்த மேகமானது,
ஒருவா - அவ்விடத்தை விட்டு நீங்காதிருக்கிற,
நீலமலையினை - நீலமலையை,
உவந்து-மகிழ்ந்து,
காண்பை-நீ காணும் பேறு பெறுவாய்.

## தெளிவுரை

யானை மலையிலிருந்து நீங்கிச் சென்றால் இளமையாகிய நிலவின் ஒளியை வீசுகின்ற, பற்களாகிய வெண் முத்துக்களைத் தன்னிடத்தே வைத்துக் கொண்டிருந்து மலர்ந்திருக்கிற செந்தாமரை மலரைப் போன்ற முகத்தை உடையவர்களாய், விடியலுக்கு முன்னுள்ள காலத்தே எழுந்து அழகு பெற அமர்ந்து தயிர்ப்பானையோடு இணைக்கப்பெற்ற மத்தினை இழுத்துத் தயிர் கடைகிற இடைக் குலத்துப் பெண்களின் அழகிய கூந்தலை நிறம் முதலியவற்றால் ஒப்புமை கொண்டு விளங்கித் தங்கியிருந்த மேகமானது அவ்விடத்தை விட்டு நீங்காதிருக்கிற மலையை நீ மகிழ்ந்து காண்பாய்.

## விளக்கவுரை

எறித்தல்-மின்மினி போல விட்டு விட்டுப் பிரகாசித்தல். மூரல்-பற்கள். முளரி-தாமரை. முகத்தர்-முகத்தை உடையவர். ஒருவா-நீங்கா.

சித்திராங்கதை இதற்கு முன் யானை மலையின் சிறப்பைத்தான் தூதுவிடும் மாரிக்கு(மேகம்)க் கூறிக் கொண்டிருந்தாளாதலின் யானை மலையை இத்திருமலை என்று சுட்டிக் கூறினாள் என்பதாம்.

ஆய்க்குல மகளிர்-இடைக்குலப் பெண்கள். இவர்களின் பற்கள், முகம், கூந்தல் ஆகிய மூன்றையும் சிறப்பித்துக் காட்டுகின்றார், பற்கள் முத்தைப் போன்றவை; இளமையாகிய நிலவின் ஒளியை விட்டுவிட்டு வெளிப்படுத்துகிறது. எப்பொழுதுமே சிரித்த முகத்தர் சிலர் (உதடுகளால் மறைக்கப் பெறாத நீண்டு தோன்றும் பற்களை உடையவர்) உண்டு. ஆனால் இப்பெண்கள் புன் முறுவல் கொள்ளும் போது பற்கள் சிறிதே வெளிப்படுதலும் பின்னர் மறைதலும் ஆக இருப்பதால் இளமையாகிய நிலவின் ஒளியைத் தருவது என்றும், இதழ் விரிந்த காலத்து வெளிப்பட்டு, குவிந்த காலத்து மறைதலின் விட்டுவிட்டு ஒளி செய்வனவாயின பற்கள். அதனால் இளநிலா எறிக்கும் என்றார்.

முகம்-செந்தாமரை மலர் போன்ற முகம். செந்தாமரைக்கு இல்லாத சிறப்பு ஒன்று உண்டு. தாமரையில் முத்து இருக்காது. இங்கே பற்களாகிய முத்துக்களை உள்ளடக்கி வைத்துக் கொண்டு அழகாக மலர்ந்திருக்கிற செம்மையையும் அழகையும் கொண்ட தாமரை மலர் போன்றது முகம்.

கூந்தல்-கூந்தலை ஒத்த மேகம் நீங்காத நீலமலை. ஆய்க்குலத்துப் பெண்களின் கூந்தலை அழகிய கூந்தல் என்றார். ஒரு புரட்சி: தயிர்

கடையும் ஆய்க்குலப் பெண்கள் தயிரும் வெண்ணெயும் ஆகியவை கள் பட்ட கையைத் தலையிலே துடைத்துக் கொள்ளும் வழக்கத்தால் முடை நாற்றம் வீசுவதாக இருக்கும் கூந்தல் என்று ஆண்டாள் காலம் முதல் சொல்லப்பெற்று வந்த ஒரு கருத்தை ஆசிரியர் மாற்றி அமைக்கின்றார்; அழகுடைய கூந்தல் என்று பாராட்டவும் செய்கிறார்.

"ஆகாத்து ஓம்பி ஆப்பயன் அளிக்கும்
கோவலர் வாழ்க்கை ஓர் கொடும்பாடு இல்லை',

என்று ஆய்க்குலத்தோர் வாழ்க்கை எத்தகைய குற்றமும் இல்லாத தூய வாழ்க்கை என்று பாராட்டுகின்றார் இளங்கோவடிகள்.

பிற குலத்துப் பெண்களும் 'நீலமலை'யில் வசிப்பார்களாக ஆய்க்குலப் பெண்களைப் பேசி அவர்கள் கூந்தலைப் போல இருக்கும் மேகம் என்று ஆசிரியர் சிறப்பிப்பதன் நோக்கம் என்ன?

குலத்தாலும் கொடுமை இல்லை; மேற்கொண்டு வாழும் வாழ்க்கையாலும் கொடுமை இல்லை. பசுவைக் காத்தல், பசுக்கள் தரும் பயனை மக்களுக்கு அளித்தல். கூந்தல், வாழ்க்கை நெறியைக் காட்டும் அடையாளம். பொய்யான ஆடம்பர வாழ்க்கை நெறியைக் காட்டும் அடையாளம். பொய்யான ஆடம்பர வாழ்வை நம்பி அதற்காக அல்லும் பகலும் பொய்யாக உழைத்து, பொய்யின்பம் துய்த்து வாழும் வாழ்க்கையை மேற்கொள்ளாமல் எளிய இனிய வாழ்க்கையை வாழ்ந்து காட்டும் ஆய்க்குலப் பெண்ணின் வாழ்க்கை ஆசிரியரை மெய்மறக்க வைக்கிறது. மேலை நாட்டவரும் நாகரிக நாரீமணிகளும் வந்து வாழும் வாழ்க்கையைக் காணும் அவர்கள் அவைகளால் ஈர்க்கப்பெறாமல் அமைதியாக வாழ்வதைக் காண்கிறார். பல்லின் வெண்மையால் அப்பெண்கள் நோயற்ற உடல் நலம் கொண்டவர்கள் என்றும்; முத்தினை உள்ளடக்கிய தாமரை மலர்ந்தாற்போன்ற முகம் என்பதால் ஒழுக்கத்தை அடிப்படையாகக் கொண்ட தெய்வ வாழ்க்கையை அவர்கள் வாழுகிறார்கள் என்றும் அவர்கள் கூந்தல் அழகைச் செய்யுமேயன்றி அழிவுக்குக் காரணமாக இருக்காது என்றும் கூறினார். பிறருக்குத் தீமை செய்யாது உதவி செய்தல் ஒன்றே குறிக்கோள் என்பதை அவர்கள் கூந்தல் உணர்த்திற்று. மேகங்கள் கூந்தலை ஒத்தனவா? இல்லை.

"கொடுப்பதூஉம் கெட்டார்க்குச் சார்வாய் மற்றாங்கே
எடுப்பதூஉம் எல்லா மழை"

கெடுப்பதும் வாழ வைப்பதும் ஆகிய இரண்டையும் கொண்டது மேகம். ஆய்ப் பெண்களின் கூந்தலைப் பார்த்ததும், பிறரைக் கெடுக்காமல் வாழ வைப்பது அல்லவோ அழகு என்று கருதி, நீண்ட நாள் பயிற்சி செய்து நீல மலையிலேயே தங்கியிருந்து சிறிது சிறிதாக மழை பெய்து காப்பது ஒன்றையே தன் குறிக்கோளாகக் கொண்டு அந்தக் கூந்தலழகோடு ஒப்புமையுடையதாயிற்று.

வெளியில் உள்ள மேகங்கள் வாழ வைப்பது கெடுப்பது ஆகிய இரண்டையும் செய்ய, நீலமலையில் உள்ள மேகங்கள் வாழ வைப்பது ஒன்றையே செய்யக் கற்றுக் கொண்டது; பழகியது; பண்பாகக் கொண்டு விட்டது. பண்பாகக் கொண்டால் மட்டும் போதுமா? பிற இடங்களுக்குச் சென்றால் அங்குள்ள மற்றை மேகங்களோடு சேர்தல் வேண்டும். சேர்ந்தால் பிறரைக் கெடுக்கக்கூடிய மழையை

தாமும் பெய்ய முற்பட்டு விடுவோம் சேர்ந்த இனத்தின் காரண மாக. அவ்வாறு ஆகக்கூடாது என்பதற்காகவே நீலமலையில் உள்ள மேகங்கள் வேறிடம் செல்லுவதை நீக்கிவிட்டு நீலமலையை விட்டு நீங்காமல் தங்கியிருக்கின்றன என்று குறிப்பிட்டார்.

சித்திராங்கதை இக்கருத்தை மனத்துட்கொண்டு, ஏ! என்னால் அனுப்பப்பெறும் மேகமே! அழிப்பதையும் காப்பதையும் செய்து வரும் மேகமே! அங்கே சென்று ஆய்க்குலப் பெண்ணின் அழகிய கூந்தலை ஒத்து அங்கே தங்கியிருந்து, அதைவிட்டு நீங்காத மேகத்தை நீ காண்பாய்; அப்போது உனக்கு ஒரு வியப்பு உண்டாகும் என்பதை உவந்து காண்பை என்று கூறினர்.

### இலக்கணம்

நீங்கின்-செயின் என் வாய்பாட்டு வினையெச்சம்.
மூரல் முத்து-உருவகம்.
செம்பொன்-உம்மைத் தொகை.
பொன்முளரி-இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன்தொக்க தொகை.
முளரியின்-உவமை உருபு.
முகத்தர்-குறிப்பு முற்றெச்சம்.
வைகல்-தொழிலாகு பெயர். (இரவை நீக்கி விடியல் வரும் வரை தங்கியிருக்கும் காலம் இரவு 2-முதல் காலை 6-மணி வரை)
ஒருவா-ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.
காண்பை-ஐயீற்று முன்னிலை ஒருமை வினைமுற்று

## 2. அழகு அரசிருத்தல்

### உரை

**நோய் தர அறியாச் சீதம் வளம் செய** - உயிர்களுக்கு நோயை உண்டாக்குவது என்பதை அறியாத குளிர்ச்சி (தண்மை) யானது எல்லா வளமைகளையும் அங்கே செய்ய,
**நுடங்கும் மஞ்சு வேய்தர** - தவழுகின்ற வெண்மேகங்கள் சூழ்ந்து கவிந்து கொள்ள,
**வசந்தம் ஒன்றே** - பருவங்களிற் சிறந்த வசந்த காலம் ஒன்றே,
**அவண் விழைந்து நிலவ** - அங்கே விருப்பத்தோடு பொருந்தியிருக்க,
**வென்று பாய்தரும்** - தடைகளை வென்று பாய்ந்து வந்து இறங்கும்,
**அருவி தாளப் பண்ணொடு** - நீர் வீழ்ச்சியின் தாளம் பொருந்த ஓசைக்கு ஏற்ப,
**மஞ்ஞை ஆல**-மயில்கள் ஆட,
**ஞானம் ஆய்தர தேடும் அழகு** - அறிவானது அழகைப் பற்றிய உண்மைகளை ஆராய்ந்து வெளிப்படுத்துவதற்காக வேண்டித் தேடிக்கொண்டேயிருக்கும் சிறப்புடைய அழகு,
**ஆங்கண்**-அந்நீலமலையில்,
**அரசு இருக்கும்** - அரசனை அமர்ந்திருக்கும்.

### தெளிவுரை

உயிர்களுக்கு நோய் தருவதை என்றும் தம் வாழ்நாளில் அறியாத குளிர்ச்சியானது பலவகை வளமைகளையும் உண்டாக்க

அசைந்தோடும் வெண்ணிற மேகங்கள் எல்லா இடங்களிலும் கவிந்து நிற்க; வசந்தம் என்ற பருவம் ஒவறே விருப்பத்துடன் அங்கே உலவிக் கொண்டிருக்க; தடைகளையெலலாம் வென்று பாய்ந்து ஓடிவரும் நீர் வீழ்ச்சியின் தாள அமைதி கொண்ட இசைக்கேற்ப மயில்கள் ஆட அழகின் உண்மைகளையும் ஆராய்ந்து முடிவு செய்ய வேண்டுமே என்று ஞானமானது அன்று முதல் இன்றுவரை தேடிக் கொண் டிருக்க, அந்த அழகு அங்கே அரசனென வீற்றிருக்கும்.

### விளக்கவுரை

சித்திராங்கதை கூறும் இரண்டாவது செய்தி. அங்கே குளிர்ச்சி உண்டு. ஆனால் அது மறறை இடங்களில் உள்ள குளிர்ச்சியைப் போல உயிர்களுக்குத் துன்பம் செய்ய அறியாதது. மஞ்சு-வெண் மேகம்.

குளிர் மிகுந்திருக்கும் ஏனைப் பருவங்களிலும் அங்கே உள்ளவர் கள் வசந்த காலத்தின் அருமையை எணணியே தங்கியிருப்பர் ஆதலின் வசந்த காலத்தைப் பற்றிய எண்ணமும் பேச்சும்தான் அங்கே எப்பொழுதும் நிலவியிருக்கும். நீலகிரியிற செய்யப்பெறும் எல்லா முன்னேற்றங்களும் வசந்த காலத்தை நினைப்பூட்டுவனவே.

ஞானம்-அறிவு. இது உலகில் உள்ள எல்லாப் பொருள்களையும் பல வகையாக ஆராய்ந்து இப்பொருள் இன்ன தன்மையுடையது என்று வரையறை செய்து கொடுத்து விடுகிறது, சுருங்கக் கூறினால் பொருளின் இலக்கணத்தை வரையறை செய்து கொடுத்து விடு கிறது. இத்தகைய ஞானம், 'அழகு' எப்படிப்பட்டது என்று ஆராய்ந்து வரையறை செய்து சொல்ல முற்பட்டு அழகைத் தேடி அலைந்து கொண்டே இருக்கிறது. ஞானத்தால் தேடித் தேடிக் கண்டு பிடிக்க முடியாத 'அழகு' இங்கே அரசு வீற்றிருக்கிறது என்றார்.

நீலமலையே அரசவையாக, துன்பம் செய்யாத குளிர்ச்சிச் சாதனம் அந்த அவையை மேலும் சிறப்புடையதாக ஆக்க, வெண் மேகம் மேலே விதானமாக வநது கவிந்து கொள்ள, இன்பந் துய்ப் பதற்குரிய பசுமை எண்ணங்களை வசந்தம் கொடுத்துக் கொண்டே யிருக்க, நீர்வீழ்ச்சியின் தாள அமைதியோடு கூடிய இசைக்கு ஏற்ப மயில்களாகிய ஆடல் மகளிர் நாட்டியமாட அழகு என்னும் அரசன் அமர்ந்து கண்டு ஆனந்திக்கிறான் என்று அமைத்துக் காட்டினார் ஆசிரியர்.

### இலக்கணம்

அறியாச் சீதர்-ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.
செந்தா ஒன்றே-எகாரம் பிரிநிலை.
செய, வேய்தர நிலவ, ஆல-செயவென் வாய்பாட்டு வினை யெச்சங்கள்.

## 3. இயற்கைத் தெய்வம் அரசிருத்தல்

### உரை

மாய்தரும்-அழிந்து போகும்,
வளம்-வளமை எது என்று ஆய்வு நடத்தி அத்தகையது ஒன்று உண்டு என்று,
அங்கு-அங்கே,
ஓரா மாவு செய்ய முடியாத,
மலையினில் நீலமலையில்,
காய்தரும்-வெறுப்பைத் தரும்,

**வெயிலின் வெம்மை** - வெய்யிலின் கொடுமையை,
**கண்டு அறியாத**-பார்த்தும் அறியாத,
**கானில்** காட்டில்,
**வேய்தரும் குழல்** - வண்டுகள் தொளைப்பதால் மூங்கிலில் இயல்பாக அமைந்த தொளைகளில்,
**கால்**-காற்றானது,
**ஊத** - சென்று இன்னோசையை எழுப்ப,
**மென் சிறை** - மென்மையான சிறகுகளைக் கொண்ட வண்டுகள்,
**மிழற்ற** - யாழொலிபோல் இசையெழுப்ப,
**வெற்பின்**: மலைகளின்,
**சேய்தரும்** - உயர்ந்த உச்சியிருந்து வரும்,
**கலுழி** கலங்கல் நீர்,
**பாட**-வாய்ப்பாட்டுப் பாட,
**இயற்கைத் தெய்வம்** - இயற்கை என்னும் தெய்வம்,
**சிறந்து**-சிறப்புற்று,
**அரசிருக்கும்** - அரசு வீற்றிருக்கும்.

## தெளிவுரை

அழியக்கூடிய வளமைகளை என்றும் கண்டறியாத அந் நீலமலையில்; வெறுப்பைத் தரும் வெய்யிலின் கொடுமையைப் பார்த்தும் அறியாத காட்டில், வண்டுகள் தொளைப்பதால் உண்டாகிய தொளைகளையுடைய மூங்கிலில் காற்றானது சென்று இன்னோசையை எழுப்ப; மென்மையான சிறகுகளைக் கொண்ட வண்டுகள் யாழொலிபோல் இசையெழுப்ப; மலைகளின் உயர்ந்த உச்சியிலிருந்து வரும் கலங்கல் நீர் வாய்ப்பாட்டினைப் பாட இயற்கை என்னும் தெய்வம் சிறப்பாக அரசிருக்கும்.

## விளக்கவுரை

என்றும் அழியாத, நிலைத்த வலிமைகளைக் கொண்டது நீலமலை. மழை பெய்யாமை, கடுங்காற்று, வெய்யிற் கொடுமை முதலியன இன்மையால் வளமைகள் அழியாதனவாக இருக்கின்றன. நீலமலைக் காடுகளில் வெளிச்சமே நுழைவதற்கு இயலாதவாறு மரச் செறிவு இருக்கும் ஏனைப் பகுதிகளில் வெய்யில் நுழைந்தாலும் அது வரவேற்கப்படக்கூடியதாக இருக்குமேயல்லாமல் வெறுப்பைத் தருவதாக இருக்காது என்பதாம்.

காற்று மூங்கிலில் இயல்பாக அமைந்த தொளைகளில் உள்புகுந்து வெளிவரும்போது குழலொலி உண்டானது என்பது அறிக.

கலுழி-கலங்கல் நீர். மலைகளின் உயர்ந்த உச்சியிலிருந்து வருவது. இதன் ஓசையை வாய்ப்பாட்டாக அமைக்கிறார் ஆசிரியர்.

## இலக்கணம்

**மாய் காய்**-முதனிலைத் தொழிற்பெயர்கள்.
**மாய்தரும் காய்தரும்**-இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன்தொக்க தொகை.
**ஓரா மலை**-ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.
**இயற்கைத் தெய்வம்**-உருவகம்.
**ஊத மிழற்ற பாட**-'செய' என் வாய்பாட்டு வினையெச்சங்கள்.
**மென்சிறை**-பண்புத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை.

# செய்யுள் வினு - விடை

# 1. புறநானூறு

**1. 'நரை நுமக்கில்லையாலோ' என்ற சான்றோர்க்குப் பிசிராந்தையார் கூறிய தைத் திணை துறைகளுடன் விளக்கி வரைக.**

நுமக்கு(ச் சென்ற) ஆண்டுகள் பலவாக இருக்கத் தலையில் நரை இல்லையே! இத்தன்மையை எப்படிப் பெற்றீர்? என்று கேட்பீராயின், என்னுடைய மாட்சிமை பொருந்திய குணங்களை உடைய மனைவியுடன் மக்களும் அறிவு நிரம்பப் பெற்றனர்; என்னுடைய ஏவலரும் யான் கருதியதனையே கருதுவர்; அரசனும் முறையல்லா தனவற்றைச் செய்யமாட்டான்; அறநெறிப்படி மக்களைக் காக்கின்றான். அதற்கு மேல், யான் வாழும் ஊரில் நற்குணங்களால் அமைந்து, பணிய வேண்டும் உயர்ந்தோரிடத்துப் பணிந்து, ஐம்புலனும் அடங்கிய கொள்கையினையுடைய சான்றோர் பலர் வாழ்கின்றனர். ஆதலால், எனக்குத் தலைமயிர் நரைக்கவில்லை என்று பிசிராந்தையார் கூறினர்.

இப் பாட்டின் திணை **பொதுவியல்;** வெட்சி முதலிய புறத்திணைகளுக்கெல்லாம் பொதுவான இலக்கணங்களையும், அத்திணைகளில் சொல்லப் பெறாத இலக்கணங்களையும் தொகுத்துக் கூறுவது.

துறை: **பொருண்மொழிக் காஞ்சி:** இம்மை மறுமைகளில் உயிருக்கு உறுதி தரும் நிலைத்த பொருள் இன்னது என்று முனிவரும் அவரைப் போன்ற பிறரும் அறிந்த பொருளை ஒருவனுக்கு எடுத்துச் சொல்வது.

வீட்டிலும் ஊரிலும் நாட்டிலும் இன்பமாக வாழ்தலே இம்மை வாழ்வில் பெறும் மிகச் சிறந்த இன்பமாகும். இவ் உண்மையை அனுபவித்து அறிந்த பிசிராந்தையார், அதனை இப் பாட்டில் கூறியுள்ளமையால் இது, பொருண்மொழிக் காஞ்சித் துறை ஆயிற்று.

**2. கணியன் பூங்குன்றனர் பாடிய பாடலின் பொருளைத் திணை துறைக் குறிப்புக்களுடன் விளக்கி வரைக.**

எல்லா ஊர்களும் எம்முடைய ஊர்களே! உலக மக்கள் எல்லாரும் எம்முடைய சுற்றத்தார்களே! எமக்கு வரும் கேடும் ஆக்கமும் தாமே வருவன; அவை பிறரால் தரப்படுவன அல்ல; துன்பப்படுதலும் அதிலிருந்து நீங்குதலும், கேடும் ஆக்கமும் போலத் தாமே வருவனவே; சாதலும் இந்த உலகத்தில் புதிய செய்தியன்று; கருவில் தோன்றிய நாளே, சாதல் தொடங்கியுள்ளது. வாழ்தலை இனியது என்று மகிழ்ச்சி அடைந்ததும் இல்லை; வாழ்வில் வெறுப்பு வந்த போது, வாழ்தலைக் கொடுமையுடையது என்று யாம் நினைப்பதும் இல்லை. மின்னலுடனே மழை, குளிர்ந்த துளியைப் பெய்ய, அதனால் அடங்கியிராமல் கல்லை மோதி ஒலிக்கும் வளம் பொருந்திய பெரிய ஆற்றில், நீரின் வழியே செல்லும் தெப்பம்போல, அரியஉயிர் ஊழின் வழியே செல்லும் என்பதனை நன்மையும் தீமையும் பகுத்து அறி

வோர் கூறிய நூலால் தெளிந்தோம். ஆதலால், நன்மையால் மிக்க வரை மதிப்பதும் இல்லை; சிறியோரைப் பழித்தலும் இல்லை என்று கணியன் பூங்குன்றனார், அவர் இயற்றிய பாட்டில் குறித்துள்ளார்.

இப் பாட்டில் அமைந்துள்ள திணை: **பொதுவியல்:** வெட்சி முதலிய புறத் திணைகளுக்கெல்லாம் பொதுவான இலக்கணங்களை யும், அத் திணைகளில் சொல்லப் பெறாத இலக்கணங்களையும் தொகுத் துக் கூறுவது.

துறை: **பொருண்மொழிக் காஞ்சி:** இம்மை, மறுமைகளில் உயிருக்கு உறுதி தரும் நிலைத்த பொருள் இன்னது என்று முனிவரும், அவரைப் போன்ற பிறரும் அறிந்த பொருளை ஒருவனுக்கு எடுத்துச் சொல்வதாகும்.

உயிர், ஊழ்வினையின்படியே செல்கின்றது; கேடும் ஆக்கமும் பிறர் தருவன அல்ல; தாமே ஊழ்வினையால் வருவன. அவ்வாறே நோதலும் தணிதலும் வருவன. சாதல் என்பது புதியதன்று; கருவிலே அமைந்து கிடைப்பது. வாழ்தல் இனியது என்று மகிழ்வ தும் இல்லை; கொடுமையானது என்று வருந்துவதும் இல்லை. எனவே பெரியோரைப் பாராட்டுவதும் இல்லை; சிறியோரை இகழ்வதும் இல்லை. என உயிரின் இயல்பையும் ஊழின் ஆற்றலையும் எடுத்துக் காட்டி, இம்மை மறுமைக்கு உரிய உறுதிப் பொருளைக் கூறியமை யால், இப் பாடல், பொருள் மொழிக் காஞ்சி என்னும் துறை ஆயிற்று.

**3. பக்குடுக்கை நன்கணியார் பாடிய பாடலின் பொருளைத் திணை துறை களுடன் விளக்கி வரைக.**

ஒரு வீட்டில் சாக்காட்டுப் பறை ஒலிக்கின்றது; மற்றொரு வீட்டில், மிகக் குளிர்ந்த முழவினது (மணப் பறையினது) ஓசை மிகுதியாக ஒலிக்கின்றது. காதலருடன் கூடி மகிழும் மகளிர், பூவால் ஆகிய மாலையினை அணிகின்றார்கள். காதலரைப் பிரிந்து வருந்தும் மகளிரது துன்பத்தைக் காட்டும் மையுண்ட கண்களிலிருந்து நீர் ஒழுகுகின்றது. இவ்வாறு துன்பமும் இன்பமும் ஒருசேர இவ் வுலகைப் படைத்தோன் யார் தெரியுமா? உறுதியாகப் பண்பில்லாத வனாகிய அப்படைப்புக் கடவுளாம் நான்முகனே ஆவான். இவ் வுலகத்தினது இயல்பு, கொடுமையுடையது ஆகும்; ஆதலால் இவ் வுலகத்தின் உண்மைத் தன்மையினை அறிந்தவர்கள், இவ் வுலக இன்பத்தினை விரும்பாமல், வீட்டின்பத்தினைத் தரும் நல்ல செய்கை களை அறிந்து செய்துகொள்க என்பது, பக்குடுக்கை நன்கணியார் பாடிய பாடலின் கருத்தாகும்.

இப் பாட்டின் திணை: **பொதுவியல்:** வெட்சி முதலிய புறத் திணைகளுக்கெல்லாம் பொதுவான இலக்கணங்களையும், அத்திணை களில் சொல்லப் பெறாத இலக்கணங்களையும் தொகுத்துக் கூறுவது.

துறை: **பெருங்காஞ்சி.** வீடுபேறு காரணமாக நிலையாமையை உணர்த்துவது.

ஒரு வீட்டில் சாப்பறை முழங்குகின்றது; மற்றொரு வீட்டில் மணப்பறை ஒலிக்கின்றது. காதலருடன் கூடியிருப்பவர்கள் மகிழ் கின்றார்கள்; காதலரைப் பிரிந்தவர்கள் வருந்துகின்றார்கள் என இவ்வுலக நிலையாமையைக் கூறி, வீட்டின்பத்தைத் தரும் நல்ல செயல்களை

அறிந்து செய்க என்று இப் பாட்டில் கூறியமையால் இது, பெருங் காஞ்சி என்னும் துறை ஆயிற்று.

### 4. சான்ருேரைப் பார்த்து நரிவெரூஉத் தலையார் கூறியன யாவை? திணை துறைகளுடன் விளக்கி வரைக.

சான்ருேரே! சான்ருேரே! மீனினது முள்ளைப் போன்ற நரை முதிர்ந்த சுருங்கிய கன்னத்தினையும் பயனில்லாத முதுமையையும் உடைய சான்ருேரே! மழுவாகிய கூரிய படைக்கலத்தினையும், மிகுந்த வலிவினையும் உடைய யமன், பாசக் கயிற்ருல் கட்டிக் கொண்டு போகும் காலத்தில், நீவிர் வருந்துவீர்; ஆதலால் நல்வினைகளைச் செய்ய மாட்டீராயினும், தீவினைகளைச் செய்தலை நீக்குங்கள். அதுதான் யாவரும் புகழ்வது; மேலும் நல்ல நெறியின்கண் செலுத்தும் வழியும் அதுவே! என்று சான்ருேரைப் பார்த்து நரிவெரூஉத் தலையார் கூறினர்.

இப் பாட்டின் திணை: **பொதுவியல்:** வெட்சி முதலிய புறத் திணைகளுக்கெல்லாம் பொதுவான இலக்கணங்களையும், அத்திணைகளில் சொல்லப் பெருத இலக்கணங்களையும் தொகுத்துக் கூறுவது.

துறை: **பொருண்மொழிக் காஞ்சி:** இம்மை மறுமைகளில் உயிருக்கு உறுதி தரும நிலைத்த பொருள் இன்னது என்று முனிவரும் அவரைப் போன்ற பிறரும் அறிந்த பொருளை ஒருவனுக்கு எடுத்துச் சொல்வது.

யமன் உயிரைக் கொண்டு போகும் காலத்தில் வருந்தும் சான்ருேர்களே! நீவிர் நல்வினைகளைச் செய்யமாட்டீராயினும் தீவினைகளைச் செய்தலை நீக்குங்கள். அதுதான் நல்ல நெறியில் செலுத்தும் வழி என்று மறுமையில் அடையும் இன்பத்திற்குக் காரணம் கூறியுள்ளமையால், இப் பாடல் பொருண்மொழிக் காஞ்சி என்னும் துறை ஆயிற்று

### 5. ஒக்கூர் மாசாத்தியாா பாடிய பாடலின் பொருளைத் திணை துறைகளுடன் விளக்கி வரைக.

முன்னுளில் நடைபெற்ற போரில், இவளுடைய தமையன், யானையைக் கொன்று தானும் போர்க்களத்தில் வீழ்ந்து மாண்டான்; நேற்று நடைபெற்ற போரில், இவளுடைய கணவன், பெரியவாகிய ஆநிரைகளைப் பகைவர்கள் கவர்ந்து செல்லாதவாறு குறுக்கிட்டுப் போர் செய்து அவ்விடத்தே மாண்டான். இன்றும் இவள், போருக்கு வருமாறு வீரரை அழைக்கும் பறையினது ஒலி கேட்டு, வீரத்தால் பெறும் புகழில் விருப்பம் கொண்டு, செய்வது அறியாது மயங்கினுள். ஒரு மகனைத் தவிர வேறு பிள்ளைகள் இல்லாத இவள், அவன் கையில் வேலினைக் கொடுத்தாள்; வெண்மை நிறமுள்ள ஆடையை விரித்து, அவனது அரையில் உடுத்தினுள்; அவனது கலைந்த தலைமயிர் பொருந்திய குடுமியில் எண்ணெயைத் தடவிச் சீவினுள்; போர்க்களம் நோக்கிச் செல்வாயாக எனச் சொல்லி அவனை விடுகின்ருள். இவளது சிந்தை கெடுக! இவளது துணிவு, நினைக்கவே அச்சம் பொருந்தியதாக உள்ளது! இவள் பழைய மறக்குடியில் பிறந்த மகளிர் என்பது, தகுதியுடையதே ஆகும் என்பது, ஒக்கூர் மாசாத்தியார் பாடிய பாடலின் பொருள் ஆகும்.

**இப் பாட்டின் திணை: வாகை:** வாகைப் பூவைத் தலையில் சூடிப் பகைவரைக் கொன்று போர்க்களத்தில் பெறும் வெற்றியைச் சிறப்பித்துக் கூறுதல்.

**துறை: மூதின் முல்லை:** மறக்குடியில் பிறந்த வீரருக்கே அன்றி, அக்குடியில் பிறந்த மகளிருக்கும் வீர உணர்ச்சி உண்டு என்பதனை மிகுத்துச் சொல்லுதல்.

தன் தமையனையும் கணவனையும் போரில் இழந்த பெண் ஒருத்தி, தன் ஒரே மகனை—இளஞ் சிறுவனைப் போர்க்களத்திற்கு அனுப்பினாள் என்று கூறியுள்ளமையால், இச் செய்யுள், மூதின் முல்லை என்னும் துறை ஆயிற்று.

## II. இடம் சுட்டிப் பொருள் விளக்குக.

1. ''மாண்டஎன் மனைவியொடு மக்களும் நிரம்பினர்
யான்கண் டனையர்என் இளையரும்...''

**இடம்:** இவ் வடிகள் புறநானூற்றுப் பாடல் ஒன்றில் உள்ளன. இப் பாடலைப் பாடியவர், பிசிராந்தையார் என்ற சங்கப் புலவர். பொதுவியல் திணையும் பொருண்மொழிக் காஞ்சித் துறையும் அமைந்த பாடல் இது.

**பொருள்:** என்னுடைய மாட்சிமை பொருந்திய குணங்களையுடைய மனைவியுடன் மக்களும் அறிவு நிரம்பப் பெற்றனர்; என்னுடைய ஏவலரும் யான் கருதியதனையே கருதுவர்.

மாண்ட-குணங்களால் மாட்சிமை பொருந்திய.
இளையர்-ஏவலர்.

**விளக்கம்:** கோப்பெருஞ் சோழன், வடக்கிருத்தல் பற்றிக் கேள்வியுற்ற பிசிராந்தையார், அவனைக் காண வந்தார்; அவர் வருவதற்குமுன் கோப்பெருஞ் சோழன் உயிர் நீத்தான்; அங்கு வந்த பிசிராந்தையார் மிகவும் வருந்தினார். இந்நிலையில் பிசிராந்தையாரைப் பார்த்த சான்றோர்கள், 'உங்களைப் பற்றிப் பல காலமாகவே கேள்விப்படுகின்றோம். ஆனால் உங்களுக்குத் தலையில் நரை இல்லையே! ஏன்' என்று வினவினர். அதற்குப் பிசிராந்தையார் விடை கூறுமிடத்தில் மேற்கண்ட வரிகள் உள்ளன.

நரை வருதற்குக் காரணம் முதுமை யன்று; மனக்கவலையே ஆகும். இம் மனக்கவலை பிசிராந்தையாருக்கு அறவே இல்லை. அவருடைய மாட்சிமை பொருந்திய மனைவியும் மக்களும் அறிவு நிரம்பப் பெற்றவர்கள். அவருடைய ஏவலாளர்கள், அவர் கருதியதனையே கருதுவர்; அவர் வாழும் நாட்டினை ஆளும் அரசன் முறையல்லாதன செய்யான். அறநெறிப்படி மக்களைக் காக்கின்றான். அவர் வாழும் ஊரில் சான்றோர் பலர் வாழ்கின்றனர். அதனால் அவரது தலைமயிர் நரைக்கவில்லை என்பதாம்.

'மாண்ட என் மனைவியொடு மக்களும்' என்றதனால்; மனைவியும் மக்களும் சிறந்த குணநலங்கள் வாய்க்கப் பெற்றவர்கள் என்பது விளங்கும். ''அறிவு நிரம்பினர்'' என்பதனால் அவர்கள் கல்வியறிவு மிக்கவர்கள் என்பது புலனாகும். ''இளையரும் யான் கண்டனையர்'' என்று கூறியதால், அவர்கள் குறிப்பறிந்து அவர் மனம்போல ஒழுகினர் என்பது பெறப்படும். எனவே அவரது வீட்டு வாழ்வு, இன்பமாக இருந்தது என்பது வெளிப்படும்.

"வாழ்தல்
2. இனிதென மகிழ்ந்தன்றும் இலமே முனிவின்
இன்னாது என்றலும் இலமே"

**இடம்:** இவ் வடிகள், புறநானூற்றுப் பாடல் ஒன்றில் உள்ளன. இப் பாடலைப் பாடியவர், கணியன் பூங்குன்றனார். பொதுவியல் திணையும் பொருண்மொழிக் காஞ்சித் துறையும் அமைந்த பாடல் இது.

**பொருள்:** வாழ்தலை இனியது என்று யாம் மகிழ்ச்சி யடைந்ததும் இல்லை. வாழ்வில் வெறுப்பு வந்தபோது வாழ்தலைக் கொடுமை யுடையது என்று யாம் நினைப்பதும் இல்லை.

முனிவு-வெறுப்பு; இன்னாது-கொடுமையுடையது.

**விளக்கம்:** உயிர், ஊழின் வழியே செல்லும் இயல்பினது என அறிஞர்கள் கூறிய உண்மையைக் கணியன் பூங்குன்றனார் நன்கு அறிந்திருந்தார். ஆதலால் கேடும் ஆக்கமும், துன்பமும் இன்பமும் பிறரால் தரப்படுவன அல்ல; தம்மாலேயே வருவன எனபதை உணர்ந்தார். மேலும் சாதல் என்பது புதிய செய்தியன்று; அது, கருவிலேயே உருவாகிவிட்டது என்றும் அறிந்தார். எனவே வாழ்தலை இனியது என்று மகிழவும் இல்லை; வாழ்வில் வெறுப்பு வந்த போது, வாழ்தல் கொடுமையுடையது என்று வருந்தவும் இல்லை என்பதாம்.

இதனால் அவர் வாழ்வில் வரும் இன்பத்தையும் துன்பத்தையும் ஒப்ப மதித்தார்; மதிக்குமாறு மக்களுக்கு அறிவுரை கூறினார் என்பது பெறப்படும்.

3. "இன்னா தம்ம இவ் உலகம்
இனிய காண்கிதன் இயல்புணர்ந் தோரே"

**இடம்:** இவ் வடிகள், புறநானூற்றுப் பாடல் ஒன்றில் உள்ளன. இப் பாடலைப் பாடியவர், பக்குடுக்கை நன்கணியார் என்னும் புலவர். பொதுவியல் திணையும், பெருங்காஞ்சித் துறையும் அமைந்த பாடல் இது.

**பொருள்:** இவ்வுலகத்தினது இயல்பு கொடிது; ஆதலால் இவ் வுலகினது தன்மையினை அறிந்தோர், வீட்டின்பத்தைத் தரும் நல்ல செயல்களை அறிந்து செய்க என்பதாம்.

**விளக்கம்:** ஒரு வீட்டில் சாப்பறை ஒலிக்கின்றது; மற்றொரு வீட்டில் மணப்பறை முழங்குகின்றது; காதலருடன் கூடி மகிழும் மகளிர் பூவால் ஆகிய மாலை அணிகின்றனர்; என்னே உலகம்! இவ்வாறு துன்பமும் இன்பமும் ஒருசேர இவ்வுலகைப் படைத்த நான்முகன் பண்பில்லாதவன். எனவே, இவ்வுலகத்தினது இயல்பு, கொடுமையுடையது ஆகும். ஆதலால் இவ்வுலகத்தின் உண்மைத் தன்மையினை அறிந்தவர்கள், இவ்வுலக இன்பத்தினை விரும்பாமல், வீட்டின்பத்தைத் தரும் நல்ல செய்கைகளை அறிந்து செய்க என்ப தாம்.

4. "நல்லது செய்தல் ஆற்றீர் ஆயினும்
அல்லது செய்தல் ஓம்புமின்."

**இடம்:** இவ் வடிகள், புறநானூற்றுப் பாடல் ஒன்றில் உள்ளன. இப் பாடலைப் பாடியவர். நரிவெரூஉத் தலையார் என்னும் புலவர்.

பொதுவியல் திணையும் பொருண்மொழிக் காஞ்சித் துறையும் அமைந்த பாடல் இது.

**பொருள்:** நல்வினைகளைச் செய்யமாட்டீராயினும், தீவினைகளைச் செய்தலை நீக்குங்கள் என்பதாம்.

அல்லது-தீயது; தீவினை.

**விளக்கம்:** சான்றோரைப் பார்த்து நரிவெரூஉத் தலையார் கூறுகின்றார். "சான்றோரே! சான்றோரே! யமன், உங்களைப் பாசக் கயிற்றால் கட்டிக்கொண்டு போகும் காலத்தில் நீவிர் வருந்துவீர்! அவ்வாறு வருந்தாமல் இருப்பதற்கு வழி ஒன்று கூறுகின்றேன். நல்வினைகளை உங்களால் செய்ய இயலாவிட்டாலும், தீவினைகளைச் செய்யாது நீக்குங்கள். அதுவே நல்ல, நெறியில்—வீட்டின்பத்தில் செலுத்தும் வழியாகும் என்று அறவுரை பகன்றார்.

5. "கெடுக சிந்தை கடிதிவள் துணிவே
மூதின் மகளிர் ஆதல் தகுமே."

**இடம்:** இவ் வடிகள், புறநானூற்றுப் பாடல் ஒன்றில் உள்ளன. இப் பாடலைப் பாடியவர், ஒக்கூர் மாசாத்தியார் என்னும் புலவர். வாகைத் திணையும் மூதின் முல்லைத் துறையும் அமைந்த பாடல் இது.

**பொருள்:** இவளது சிந்தை கெடுக; இவளது துணிவு, நினைக்கவே அச்சம் பொருந்தியதாக உள்ளது. ஆதலால் இவள் மறக்குடியில் பிறந்த மகளிர் என்பது தக்கதே ஆகும்.

**விளக்கம்:** இவ் வடிகள், மறக்குடி மகள் ஒருத்தியின் வீரத்தை வெளிப்படுத்துகின்றன. முன்னாளில் நடைபெற்ற போரில் அவளது தமையன் போர்க்களத்தில் இறந்தான். நேற்று நடைபெற்ற போரில் அவளுடைய கணவன் இறந்தான். இன்று போர்ப்பறை கேட்கின்றது. தன் மகன்—ஒரே மகன்—இளஞ் சிறுவன். அவனை அழைத்து வெள்ளாடை உடுத்து, குடுமியில் எண்ணெய் தேய்த்துச் சீவி, வேலைக் கையில் கொடுத்துப் போர்க்களம் போ என அனுப்புகின்றாள். இவளைக் கண்ட ஒக்கூர் மாசாத்தியாருக்கு வியப்பு மேலிடுகின்றது; இவளது சிந்தை கெடுக! இவள் துணிவு, அச்சம் பொருந்தியது! (உள்ளம் வாழ்க! துணிவு பாராட்டுக்கு உரியது! என்பது குறிப்பு) இவ்ள் மறக்குடியில் பிறந்தவள் என்று கூறுதல் பொருத்தமானதே என்று வாழ்த்துரைக்கின்றார்.

# 2. திருக்குறள்

*வாய்மை என்னும் தலைப்பினை விளக்கி அதுபற்றிய திருவள்ளுவர் கருத்துக்களைத் தொகுத்து எழுதுக.*

**வாய்மை:** வாயின் தன்மை; வாய்மையாவது, சொல்லின் தூய்மை. அதாவது சொல்லும் சொற்களில் பொய் கலவாமை; என்றும் உண்மையே சொல்லுதல் என்பதாம்.

**வாய்மையின் இலக்கணம்:** வாய்மை என்று சிறப்பித்துச் சொல்லப்படுவது எது என்று கேட்டால், அது பிற உயிர்களுக்கு ஒரு சிறிதும் தீமையை விளைவிக்காத சொற்களைச் சொல்லுதல் ஆகும்.

பிறருக்குக் குற்றமற்ற நன்மையை விளக்குமானால், பொய்யான சொற்களும் வாய்மை என்று கருதத்தக்க சொற்களின் தன்மையை உடையன.

**பொய் கூறற்க:** ஒருவன், தன்நெஞ்சம் அறிவதாகிய ஒன்றனைப் பிறர் அறிந்திலர் என்று எண்ணிப் பொய் சொல்லக்கூடாது. அவ்வாறு இல்லாமல் பொய் கூறினால், அதைக் குறித்துத் தன் நெஞ்சமே அப்பொய் சொன்ன பாவத்திற்குச் சாட்சியாக நின்று தன்னை வருத்தும்.

**வாய்மையின் பயன்கள்:** ஒருவன் தன் மனத்திற்கு ஏற்பப் பொய் கூறாது ஒழுகுவானாயின் அத்தகைய அவன், உலகத்தாரின் உள்ளங்களில் எல்லாம் நிலைத்து நிற்பான்.

ஒருவன், தன் மனத்தோடு பொருந்த உண்மை பேசுவானானால் அவன் தவமும் தானமும் ஒருங்கு செய்யும் துறவிகளைக் காட்டிலும் மேலான சிறப்புடையவன் ஆவான்.

ஒருவனுக்கு இப்பிறப்பிற்குப் பொய்யாமையைப் போன்ற புகழுக்கு வழி இல்லை; மறுமைக்கு அவனுக்கு எல்லா அறங்களையும் அப்பொய்யாமையே கொடுக்கும்.

ஒருவன் பொய்யாமை என்னும் வாய்மையாகிய அறத்தைத் தவறாமல் மேற்கொண்டால், அவன் வேறு அறங்களைச் செய்ய வேண்டா.

**புறத்தூய்மையும் அகத்தூய்மையும்:** ஒருவனுக்கு உடலின் தூய்மை, நீரினால் உண்டாகும்; அதுபோல மனத்தின் தூய்மை, வாய்மையால் உண்டாகும்.

**வாய்மையின் சிறப்பு:** புறத்திலுள்ள இருளைப் போக்குகின்ற ஞாயிறு, திங்கள், தீ என்னும் விளக்குக்கள் எல்லாம் விளக்குக்கள் அல்ல; பெரியோருக்கு விளக்காவது, மனத்தில் உள்ள இருளைப் போக்குகின்ற பொய்யாமையாகிய விளக்கே ஆகும்.

அறங்களைப் பற்றிக் கூறும் மெய்ந்நூல்களுள் வாய்மையைவிட எத்தன்மையாலும் மிகச் சிறந்தவைகளாகச் சொல்லப்பட்ட பிற அறங்கள் இல்லை.

2. வெகுளாமையாவது யாது? அது பற்றித் திருவள்ளுவர் கூறும் கருத்துக்களைத் தொகுத்து எழுதுக.

**வெகுளாமை:** கோபியாமை; கோபம் கொள்ளுதற்குக் காரணம் உண்டானபோதும் கோபம் கொள்ளாமை, வாக்கினால் பொய் சொல்லாதது போலவே மனத்தினால் குற்றமாகிய கோபத்தினையும் விடுதல் வேண்டும்.

**வெகுளாமல் காக்க வேண்டிய இடம்:** தன் கோபம் பலிக்கும் இடத்தில அது வராமல் தடுப்பவனே, சினத்தைக் காப்பவன் ஆவான்; சினம் பலிக்காத இடத்தில் சினத்தை வராமல் தடுத்தால் என்ன? சினம் வராமல் தடுக்காவிட்டால் என்ன?

**வெகுளியது தீங்கு:** ஒருவனுடைய கோபம், தன்னைவிட வலிமையுடையார் மேல் ஏற்பட்டால் அக்கோபம், அவனுக்கே தீதாம்; அக்கோபம், மற்றை எளியார் மேல் ஏற்பட்டாலும் அக்கோபத்தைவிடத் தீயவை வேறு இல்லை.

யாரிடத்தும் கோபம் கொள்ளாமல், அக்கோபத்தினை மறந்து விடல் வேண்டும்; ஏனெனில் தீமையான விளைவுகள் அக்கோபத்தால் ஏற்படும்.

கோபமானது, முகமலர்ச்சியையும் அகமகிழ்ச்சியையும் கொல்லும்; ஆதலால் அக்கோபத்தைவிட ஒருவனுக்கு வேறு பகைகள் இல்லை.

**வெகுண்டாருக்கு வரும் தீங்கு :** ஒருவன், தன்னைத்தானே துன்பம் வராமல் காத்துக்கொள்ள நினைத்தால், தன் மனத்தில் கோபம் வராமல் காத்துக்கொள்ள வேண்டும். அவ்வாறு காக்கா விட்டால், அக்கோபமானது அவனையே அழித்துவிடும்.

கோபம் என்று சொல்லப்படுகின்ற நெருப்பு, சினம் என்று சொல்லப்படுகின்ற இன்பத் தெப்பத்தையும் சுட்டு அழிக்கும்.

கோபத்தைச் சிறந்த குணம் என்று தன்னிடத்தே கொண்டவன் கெடுதல், நிலத்தை அறைந்தவனுடைய கை, அந்நிலத்திலே பட்டுத் துன்புறுதல் எவ்வளவு உறுதியோ அவ்வளவு உறுதியாகும்.

**வெகுளாதிருத்தலால் வரும் நன்மை :** பல சுடர்களையுடைய நெருப்பில் தோய்வது போன்ற துன்பத்தை ஒருவன் செய்தபோதிலும், கூடுமானால், அவன்மேல் கோபம் கொள்ளாதிருத்தல் நல்லது.

**வெகுளாதாருக்கு வரும் நன்மை :** ஒருவன் தன் மனத்தால் வெகுளியை நினையானாயின், அவன், தான் கருதிய பேறுகள் எல்லாவற்றையும் ஒருங்கே பெறுவான்.

**வெகுண்டவர் அடையும் பயனும் வெகுளாதார் அடையும் பயனும் :** கோபத்தில் மிகுந்தவர், உயிருடன் இருந்தாலும் இறந்தவரைப் போன்றவர்; கோபத்தை அடியோடு துறந்தவர், துறந்தவர்களைப் போன்றவர்.

3. இன்னா செய்யாமையாவது யாது? அதுபற்றித் திருவள்ளுவர் கூறும் கருத்துக்களைத் தொகுத்து எழுதுக.

**இன்னா செய்யாமை:** தனக்கு ஒரு பயன் விளையும் என்று கருதிச் சினம் காரணமாகவோ, சோர்வு காரணமாகவோ எந்த ஒருயிர்க்கும் இன்னாதனவற்றைச் செய்யாமை.

**பயன் நோக்கியும் இன்னா செய்யற்க :** சிறப்பைத் தருகின்ற செல்வங்களைப் பெறுவதாக இருந்தாலும், பிறருக்கு இன்னாதன செய்யாதிருத்தலே குற்றமற்ற தூய்மையுடையாரது கொள்கையாகும்.

**சினம் பற்றியும் இன்னா செய்யற்க :** தம்மேல் சினங்கொண்டு ஒருவன் இன்னாதனவற்றைச் செய்தவிடத்தும் அவனுக்குத் திரும்பத் தாம் இன்னாதனவற்றைச் செய்யாமையும் குற்றமற்ற தூய்மையுடையாரது கொள்கையாகும்.

தான் ஒன்றும் செய்யாதிருக்கத் தன்மேல் கோபம் கொண்டு தீங்கு செய்தவருக்கும், தான், இன்னாதனவற்றைச் செய்தால், அச்செயல் அவனுக்குக் கடக்க முடியாத துன்பத்தைக் கொடுக்கும்.

தமக்கு இன்னாதனவற்றைச் செய்தாரைத் தண்டித்தால், அவரே நாணும்படியாக அவருக்கு நல்லுதவி செய்து அவருடைய தீமையையும் அவருக்குத் தாம் செய்த நன்மையையும் மறந்து விடுதல் ஆகும்.

**சோர்வு பற்றியும் இன்னு செய்யற்க :** பிறிதோர் உயிருக்கு வரும் துன்பத்தினைத் தம்முடைய துன்பம் போக் கருதிக் காப் பாற்ருவிட்டால், பெற்றுள்ள அறிவினுல் ஆகும் பயன் உண்டோ?

**இன்னு செய்தல் எப்பொழுதும் கூடாது:** ஒருவன் துன்ப மானவை என்று தன் வாழ்க்கையில் கண்டு உணர்ந்தவைகளை மற்ற வனிடத்தில் செய்யாமல் தவிர்க்க வேண்டும்.

எவ்வளவு சிறிய துன்பச் செயலாயினும், எக்காலத்தும் எவரி டத்திலும் மனத்தால் எண்ணிச் செய்கின்ற துன்பச் செயல்களைச் செய்யாதிருத்தலே சிறந்த அறமாகும்.

தன் உயிருக்குத் துன்பமானவை இவை என்று உணர்ந்தவன், நிலைபேறுடைய பிற உயிர்களுக்கு அத் துன்பங்களைச் செய்தல் என்ன காரணத்தாலோ?

**இன்னு செய்தலால் வரும் குற்றம் :** முற்பகலில் பிறருக்குத் துன்பமானவற்றைச் செய்தால், பிற்பகலில் இன்னுதன பல, தாமாகவே தமக்கே வரும்.

துன்பம் எல்லாம் துன்பம் செய்தவரையே சார்வன; ஆதலால் துன்பம் இல்லாமல் வாழ விரும்புகின்றவர், பிறருக்குத் துன்பம் செய்யார்.

4. ஊழாவது யாது? அதுபற்றித் திருவள்ளுவர் கூறும் கருத்துக்களைத் தொகுத்து எழுதுக.

**ஊழ் :** ஊழ், பால், முறை, உண்மை, தெய்வம், நியதி, விதி என்பன ஒரு பொருளை உணர்த்தும் சொற்கள். நல்வினைப் பயனும் தீவினைப் பயனும் செய்தவனையே சென்று அடையும். அதற்குக் காரணமாக இருக்கின்ற நியதியே ஊழ் எனப்படும்.

**பொருட்குக் காரணமாகிய ஊழின் வலி :** கைப்பொருள் உண் டாவதற்குக் காரணமான ஊழால் சோர்வு இல்லாத முயற்சி உண் டாகும்; கைப்பொருள் போவதற்குக் காரணமான ஊழால் சோம்பல் உண்டாகும்.

ஒருவனுக்குக் கைப்பொருள் இழத்தற்குக் காரணமாகிய ஊழ் பொருந்திய இடத்து, அது அவனை அறிவற்றவனுக்கும்; கைப் பொருள் ஆதற்குக் காரணமாகிய ஊழ் பொருந்திய இடத்து, அது அவனுடைய அறிவைப் பெருக்கி அறிஞனுக்கும்.

ஒருவன் நுட்பமான நூல்கள் பலவற்றைக் கற்றாலும், அவனுக் குப் பின்னும் தன் ஊழானுகிய பேதைமை உணர்வே மேம்பட்டுத் தோன்றும்.

உலகத்தின் இயற்கை, ஊழின் காரணமாக இரண்டு பகுப்பினை உடையதாகும். ஆதலால் செல்வம் உடையவராதலும் வேறு: அறிவு உடையவராதலும் வேறு.

செல்வத்தை ஆக்குதற்கு நல்ல காலம், இடம், கருவி முதலிய எல்லாம் ஊழால், தீயவை ஆதலும் உண்டு; தீய காலம், இடம், கருவி முதலிய எல்லாம் ஊழால் நல்லவை ஆதலும் உண்டு.

ஊழால் தமக்கு உரியவை அல்லாத பொருள்களை வருந்திக் காப் பினும் அவை நில்லாமல் போகும். ஊழால் தமக்கு உரிய பொருள் களைப் புறத்தே கொண்டு போய்க் கொட்டினுலும் அவை தம்மை விட்டு நீங்கா.

**இன்ப துன்பங்களுக்குக் காரணமாய ஊழின் வலி :** ஊழ் ஏற்படுத்திய வகையால் அல்லாமல், முயன்று கோடிக் கணக்கான பொருள்களைச் சேர்த்தவர்களுக்கும் அவற்றை நுகர்தல் முடியாது.

அநுபவிக்க வேண்டிய துன்பங்களை அடைவிக்காமல் ஊழ் நீங்குமானால், வறுமையால் பொருளை அநுபவிக்கும் தன்மையில்லாதவர் துறவறம் மேற்கொள்வர். ஆனால் வறியவர்கள் துறவறம் மேற்கொள்ளவில்லை. இதற்குக் காரணம் ஊழே ஆகும்.

நல்வினை விளையும்போது நல்லவை எனக் கருதி மகிழ்கின்றவர், தீவினை விளையும்போது துன்பப்படுவது ஏனோ? அவ்வாறு துன்பப்படுதல், அறியாமையாகும்.

**இரு வகை ஊழின் வலி :** ஊழை விலக்குதற் பொருட்டு மற்றோர் உபாயத்தினை ஆராய்ந்தாலும், அங்கும் அவ்வூழே முற்பட்டு நிற்கும். ஆதலால், ஊழைப்போல மிக்க வலிமையுடையன யாவை உள? ஒன்றும் இல்லை.

5. இடஞ்சுட்டிப் பொருள் விளக்கம் செய்க.

**1. புறந்தூய்மை நீரான் அமையும் அகந்தூய்மை வாய்மையால் காணப்படும்.**

**இடம் :** இத்திருக்குறள், வாய்மை என்னும் அதிகாரத்தில் உள்ளது. அகத்தூய்மை எதனால் ஏற்படும் என்பதனை இத்திருக்குறளால் கூறியுள்ளார்.

**பொருள் :** ஒருவனுக்கு உடம்பு தூயதாகுதல், நீரினால் ஏற்படும்; அதுபோல ஒருவனுக்கு மனம் தூயதாகுதல் உண்மை பேசுதலால் உண்டாகும்.

**விளக்கம் :** நீரினால் உடலின் தூய்மை உண்டாகும்; வாய்மையினால் மனத்தின் தூய்மை உண்டாகும். உடல் தூய்மையாவது: உடலிலுள்ள அழுக்கு நீங்குதல் மனத் தூய்மையாவது: அறியாமை நீங்குதல்; மெய்யுணர்தல். உடலில் உள்ள அழுக்கு நீங்க, நீரில் குளித்தல் வேண்டும்; மனத்தில் உள்ள அறியாமை நீங்க, வாய்மை பேச வேண்டும்.

**2. சினமென்னும் சேர்ந்தாரைக் கொல்லி இனமென்னும் ஏமப் புணையைச் சுடும்.**

**இடம் :** இத்திருக்குறள், வெகுளாமை என்னும் அதிகாரத்தில் உள்ளது. வெகுண்டாருக்கு வரும் தீங்கினை இத்திருக்குறளால் கூறியுள்ளார்.

**பொருள் :** சினம் என்று சொல்லப்படுகின்ற நெருப்பு, இனம் என்று சொல்லப்படுகின்ற இன்பத் தெப்பத்தையும் சுட்டு அழிக்கும்.

**விளக்கம் :** சேர்ந்தாரைக் கொல்லி-நெருப்பு. நெருப்பு, தான் சேர்ந்த இடத்தை அழிக்கும் தன்மையது; ஆதலால் நெருப்புக்குச் சேர்ந்தாரைக் கொல்லி என்பது காரணப் பெயர். இந் நெருப்பினைப் போலவே சினமும் தான் சேர்ந்த இடத்தை அழிக்கும். ஆதலால் சினத்தைச் சேர்ந்தாரைக் கொல்லி எனக் கூறினர். ஒரு பொருளின் தன்மையை மற்றொரு பொருளின்மேல் ஏற்றிக் கூறுவது உருவக அணி எனப்படும். நெருப்பின் தன்மையைச் சினத்தின்மேல் ஏற்றிக் கூறினமையால், இது **உருவக அணி** எனப்படும்.

நெருப்பு, தான் சேர்ந்த இடத்தை மட்டுமே அழிக்கும்; ஆனால் சினம், தன்னைக் கொண்டவரை அழிப்பதோடு அவருக்கு இன்பம் பயக்கும் சுற்றத்தையும் அழிக்கும். இவ் வேறுபாட்டினை இக்குறளில் அமைந்திருப்பதால், இக்குறளில் வேற்றுமை யணியும் அமைந்துள்ளது.

**இனம் எனும் ஏமப்புணை :** இனமாகிய இன்பத் தெப்பம். இங்கே இனமென்றது, ஒருவன் பிறவிக் கடலில் அழுந்தாமல் அவனைக் காக்கும் மரக்கலம் போன்ற மெய்யறிவாளர்களை ஆகும். இத்தகைய இனமான மெய்யறிவாளர்களையும், சினம் அழிக்கும் என்று கூறவே, சினத்தின் ஆற்றலும், அதனால் வரும் தீங்கும் பெறப் படும்.

சினம், தன்னைக் கொண்டவரை இம்மை மறுமைத் துன்பங்களில் சேர்ப்பித்து, அழிப்பதோடு, அவருக்கு நன்மொழி கூறி அவரைக் கரையேற்றவல்ல நல்லோரையும் அழிக்கும்.

**3. பிறர்க்கின்னா முற்பகல் செய்யின் தமக்கின்னா பிற்பகல் தாமே வரும்.**

**இடம் :** இத்திருக்குறள், இன்னா செய்யாமை என்னும் அதிகாரத்தில் உள்ளது. இன்னா செய்தலால் வரும் குற்றம் யாது என்பதனை இத்திருக்குறளால் கூறியுள்ளார்.

**பொருள் :** முற்பகலில் பிறருக்குத் துன்பமானவற்றைச் செய்தால், பிற்பகலில் இன்னாதன பல, தாமாகவே தமக்கே வரும்.

**விளக்கம் :** ''முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும்'' என்பதாம். பிற்பகலில் தமக்கு வரும் துன்பம், முற்பகலில் தாம் செய்த துன்பத்திற்கு ஆட்பட்டவரால் வராது. அத்துன்பம், தாமாகவே தமக்கே வரும். ஆதலால் பிற்பகலில் வரும் துன்பத்தை அநுபவிக்க வருந்தும் மன இயல்பு படைத்தவர்கள், முற்பகலில் ஒருவருக்கும் துன்பம் செய்தல் கூடாது என்பதாம்.

**4. இருவேறு உலகத்து இயற்கை திருவேறு தெள்ளியராதலும் வேறு.**

**இடம் :** இத் திருக்குறள், ஊழ் என்னும் அதிகாரத்தில் உள்ளது. செல்வமும் அழிவும் ஊழால் ஏற்படும் முறைபற்றி இத் திருக்குறளில் கூறியுள்ளார்.

**பொருள் :** உலகத்தின் இயற்கை, ஊழின் காரணமாக இரண்டு பகுப்பினை உடையதாகும். ஆதலால் செல்வம் உடையராதலும் வேறு; அறிவு உடையவராதலும் வேறு.

**விளக்கம் :** ஒருவர் செல்வம் உடையர் ஆதலும் அறிவு உடையர் ஆதலும் வெவ்வேறு ஊழினால் விளைபவைகள் ஆகும். செல்வத்தினைப் படைத்தலும் காத்தலும் பயன் கொள்ளுதலும் அறிவுடையார்க்கு அல்லது ஏனையோருக்குக் கூடாத காரியமல்லவா? ஆயினும் அறிவுடையார் வறுமையில் வாடக் காண்கின்றோம்; அறிவில்லாதவர் செல்வத்தில் திளைக்கக் காண்கின்றோம். எனவே அறிவுடையராதற்கு வேண்டிய ஊழ், செல்வமுடையர் ஆதலுக்குத் துணை செய்யாது என்பதும், செல்வமுடையர் ஆதலுக்கு வேண்டிய ஊழ், அறிவுடையராதலுக்குத் துணை செய்யாது என்பதும் பெறப்படும்.

# 3. சிலப்பதிகாரம்

**1. கண்ணகி வாயிலோனிடம் அறிவித்தது என்ன ?**

வாயிலோனே! அறிவானது கீழற்றுப் போக, அறம் என்ற இயக்குங்கருவி அழிந்துபட்ட நெஞ்சத்தை உடையவனாய் அரச நீதியில் தவறு இழைத்தவனுடைய அரசவையின் வாயிலைக் காப்பவனே! பரல்களோடு கூடிய என்றும் இணைந்தே இருக்கின்ற சிலம்புகளுள் ஒன்றை மட்டும் ஏந்திய கையளாய், கணவனை இழந்தாள் ஒருத்தி வாயிலின் கண் வந்திருக்கிறாள் என்று அறிவிப்பாயே அறிவிப்பாயே என்று அறிவித்தாள்.

**2. வாயிலோன் அரசனிடம் கூறியது என்ன ?**

அரசன் முன் சென்ற வாயில் காவலன், வாழ்வாயாக, எம் கொற்கை நகரத்து அரசே வாழ்வாயாக; தெற்கின்கண் அமைந்த அழகிய பொதிமலையின் தலைவனே, வாழ்வாயாக; செழியனே வாழ்வாயாக; தென்புலம் காவல் செய்யும் பாண்டியனே வாழ்வாயாக; இழிவைத்தரும் பழிச் செயல்களோடு என்றும் பொருந்தாத பஞ்சவனே வாழ்வாயாக!

வெட்டப் பெற்ற வழியிலிருந்து தொகுதியாகச் செறிந்து மேல் நோக்கி எழுகின்ற இரத்தமானது அடங்காமல் பீறிட்டுக்கொண்டு வருகிற பச்சைத் துண்டமாகிய எருமை வடிவமைந்த அரசனின் கழுத்துடன் கூடிய தலையை ஆசனமாகக் கொண்டு ஏறிநின்று கொண்டிருக்கிற இளங்கொடி போன்றவளும் வெற்றியைத்தரும் வேலினைப் பெரிய கைகளில் ஏந்திக் கொண்டிருக்கிற கொற்றவையோ எனில் அவளும் அல்லள்; கன்னிப் பெண்கள் எழுவரில் இளையவளான பிடாரியோ எனில் அல்லள்; சிவனைத் தன்னுடன் போட்டியாக நிறுத்தி ஆடுமாறு செய்தருளிய வருத்தும் நிலையினளான பத்திரகாளியோ எனில் அவளும் அல்லள்; அச்சத்தைத் தருகிற காட்டைத் தனக்கு இடமாகக் கொண்டு விரும்பித் தங்கியிருக்கிற காளியோ எனில் அவளும் அல்லள்; தாருகனுடைய பெரிய மார்பைக் கிழித்த துர்க்கையும் அல்லள்; தன் உள்ளத்தில் பழிவாங்கும் எண்ணங் கொண்டவள் போலவும், மிக்க சினங் கொண்டவள் போலவும் தோற்றம் உடையவளாய், அழகிய வேலைப் பாடுகள் பொருந்திய ஒற்றைச் சிலம்பினை ஏந்திய கையள் ஒருத்தி கணவனை இழந்தவள் வாயிலின் முன்னிடத்தாள் என்றான்.

**3. யார் நீ என்று வினவிய பாண்டியனுக்குக் கண்ணகி கூறிய விடையை எழுதுக.**

மன்னர்களுக்குப் பொதுவாக இருக்க வேண்டிய ஆராய்ச்சியறிவுகூட இல்லாத அரசே! நீ கேட்ட கேள்விக்கு விடை சொல்லுவதும் உடையேன். இகழ்தல் சிறப்பினையுடைய தேவர்களும் வியப்படையுமாறு புறாவினது துன்பத்தைத் தீர்த்தவனாகிய சிபி, அவனேயன்றியும் அரண்மனை வாயிலிற் கட்டப் பெற்ற பெரிய மணியின் உள்ளே தொங்கும் நாக்கானது நடுக்கத்தோடு ஒலிக்க, அதனை இழுத்து அடிக்கும் பசுவின் கண்களின் ஓரத்திலிருந்து சிந்துகின்ற

கண்ணீர் தன்னுடைய நெஞ்சினைச் சுடவே, அரசனுகிய அவன் தானே தன்னுடைய பெறுதற்கரிய ஓரே மகனைத் தேர்ச்சக்கரத்தில் இட்டுக் கொன்ற மனுச்சோழன் ஆகியோர் சிறப்புற ஆட்சி செய்யப் பெற்ற புகழையுடைய புகார் நகரமே யான் பிறந்த ஊர்; அதே ஊரில் பிறரால் இகழப்பெருத சிறப்பினை உடையதும் புகழ் ஓங்க விளங்குவதும் ஆகிய பெருங்குடிக்கண் மாசாத்துவான் என்ற வணிகனின் மகனுகத் தோன்றி, பொருள் ஈட்டி வாழ்க்கை நடத்துதலை விரும்பியும், விதியானது எங்களைப் பின்னின்று செலுத்தவும், சுற்றியிருக்கும் சழல் அணிந்த அரசே! நின்னுடைய மதுரை மாநகர் புக்கு, என் காற் சிலம்பை விலை கூறி விற்றலை விரும்பிப் புறப்பட்டு நின்னிடத்து கொலைக்களத்தில் கொலை செய்யப்பெற்ற கோவலன் என்பானுடைய மனைவி ஆவேன். கண்ணகி என்பதே என் பெயர் என்று விடை கூறினுள்.

4. கண்ணகியின் வழக்கு நடைபெற்ற முறையையும் முடிவையும் தெளிய எழுதுக.

கண்ணகியானவள் தன்னுடைய வரலாறு கூறுமிடத்தே என்னுடைய காற் சிலம்பை விலை கூறுவதற் பொருட்டு வந்து நின்னிடத்துக் கொலைக்களத்துப்பட்ட கோவலன் மனைவி என்று கூறியதைக் கேட்ட பாண்டியன், பெண்ணே! கள்வனைக் கொல்லுதல் கொடுங்கோன்மை அன்று, போர்க்களத்தில் வேலாற் பெற்ற வெற்றியைப் போன்றது என்று எடுத்துக் கூறினுன். அதற்கு ஒளி பொருந்திய அணிகளை அணிந்த கண்ணகி, அறவழியிற் செல்லாத கொற்கை நகரத்து அரசனே! என்னுடைய காலில் அணிகின்ற பொன்னுற் செய்யப் பெற்ற சிலம்பினுடைய பரல்கள் மாணிக்கங்களே என்று கூற, மன்னன், தேன்போன்ற மொழியாளாகிய கண்ணகி, வழக்கை ஆராய்வதற்குத்துணை செய்யும்படியாகக் கூறிய வார்த்தையானது தீமை கலவாததும் அறத்தைச் சார்ந்ததும் ஆகிய மொழியாகும் என்று கூறி, எம்முடைச் சிலம்பினுடைய பரல்கள் முத்துக்களே என்று கூறி, சிலம்பினைக் கொண்டு வந்து தருக என ஏவலர்களைப் பணிக்க, அவர்கள் கொண்டுவந்து தந்த அச்சிலம்புகளைத் தானே கண்ணகியின் முன்னே வைக்க, கண்ணகியானவள் தன் அணியாகிய மாணிக்கப் பரலை உடைய காற்சிலம்பை எடுத்து உடைப்ப, அதில் உள்ள பரல்களாகிய மாணிக்கங்கள் அரசனுடைய முறை வழுவித் தீர்ப்புக் கூறிய வாயில் தெறித்து, கண்ணகிக்கு வெற்றியைத் தந்தன.

5. மணிகள் தெறித்தமை கண்ட மன்னனின் மாண்புறு செயலையும் எழுதுக.

கண்ணகியானவள் உடைத்த சிலம்பிலிருந்து வெளிப்பட்ட பரல்கள் மாணிக்கங்களாக இருந்தமையைக் கண்ட மன்னன் நீதியைப் பிழைத்தலால் தாழ்ந்து நிற்கின்ற குடையை உடையவன் ஆனேன்; தளர்ந்த செங்கோலை உடையவன் ஆனேன்; அமைச்சரோடு கூடி ஆராய்ந்து அவர்கள் சொல்வதைக் கேட்டு முறைசெய்ய வேண்டியவனுன நான் பொன் வேலை செய்யும் கொல்லன் கூறிய பொய்யுரையைக் கேட்டு நீதி வழங்கினேன் ஆதலின் யான் அரசன் ஆவேனே? கோவலன் சிலம்பை என் சிலம்பு என்று கூறிவிட்டதால் கள்வன் யானே; கோவலன் கள்வன் அல்லன்; மக்கட் கூட்டத்தைக்

காக்கும் தென்னாடு எனப்பெறும் பாண்டி நாட்டு ஆட்சி என்னை முதல்வனாகக் கொண்டு தவறு பட்டுவிட்டது; அழிவதாகுக என் வாழ் நாள் என்று கூறி மயக்கமடைந்து கீழே விழுந்தான்.

பாண்டியன் மனைவியாகிய கோப்பெருந்தேவியும் உள்ளம் நிலை யழிந்தவளாய் உடல் நடுங்கி, தந்தைதாய் முதலானோரை இழந் தார்க்கு அம்முறை சொல்லிப் பிறரைக் காட்டலாம். ஆனால் கண வனை இழந்த பெண்ணுக்கு அவ்வாறு முறைசொல்லிக் காட்டி ஆறு தல் கூற இயலாது என்று கருதி, கண்ணகிக்கு எத்தகைய ஆறுதலும் சொல்ல மாட்டாதவளாய், அக்கற்புடைத் தெய்வத்தின் இணையடி களைத் தொழுது நிலத்தில் விழுந்தாள்.

6. இடஞ் சுட்டிப் பொருள் விளக்கம் தருக;

(a) "நீர் வார் கண்ணை எம்முன் வந்தோய் யாரையோ நீ"

**இடம் :** வாயில் காவலன் மூலமாகத் தன் வருகையை அறிவித்த கண்ணகியை உள்ளே அனுப்பி வைக்குமாறு வாயிலோனிடம் கூறி னான் அரசன். வாயிலோன் வந்து கூறியதும் கண்ணகி கோயில் மன்னனைக் குறுகினளாகிச் செல்லும் போது மன்னன் கண்ணகியை நோக்கிக் கூறிய வார்த்தைகளே இவைகள்.

**விளக்கம் :** நீர் சிந்துகின்ற கண்களை உடையவளாய் எம்முன் வந்து நின்றவளாகிய நீ யார்? என்று மன்னன் கண்ணகியைக் கேட் டான்.

(b) "கள்வனைக் கோறல் கடுங்கோல் அன்று வெள்வேற் கொற்றங் காண்"

**இடம் :** நீ யார் என்று கேட்ட பாண்டியனுக்குக் கண்ணகி யானவள் விடை கூறும்போது என்காற் சிலம்பை விலை கூறுதற்காக வெளிப்பட்டு, நின்னிடத்துக் கொலைக் களத்தில் கொலை செய்யப் பெற்ற கோவலன் மனைவியே யான் என்றாள். அப்போது மன்னன் கூறிய வார்த்தைகளே இவை.

**விளக்கம் :** களவு செய்தவனைக் கொல்லுதல் என்பது கொடுங் கோலன்று; ஒரு அரசனுக்கு அது போர்க்களத்தில் வெள்ளிய வேலாற் பெறும் வெற்றியைப் போன்றது என்பதை நீ உணர்வாயாக என்று கூறினான் பாண்டியன்.

இதனுள் "கொலையிற் கொடியாரை வேந்து ஒறுத்தல் பைங்கூழ் களை கட்டதனோடு நேர்" என்ற திருக்குறள் கருத்தின் அடிப்படை இருக்கிறது.

(c) "தேமொழி உரைத்தது செவ்வை நன்மொழி"

**இடம் :** கண்ணகி தன்னுடைய வழக்கை எடுத்துரைக்கும் போது அரசன் ஆராயாமற் கொன்றான் என்பதை மெய்ப்பிக்க முற் படும்போது என்னுடைய சிலம்பில் அமைந்த பரல்கள் மாணிக் கங்கள் என்றாள். அதைக்கேட்ட மன்னன் கூறிய வார்த்தை இது.

**விளக்கம் :** தேன் போன்ற மொழியினை உடைய கண்ணகி கூறிய இவ்வார்த்தை வழக்கை ஆராய்வதற்கு மிகப்பெரும் துணை புரியும் தன்மைத்து ஆகையால் அவள் வார்த்தை தீமைகலவாததும் அறத்தைச் சார்ந்ததும் ஆகிய மொழி என்று கூறி மேலும் வழக்கைத் தொடரலானான்.

# 4. பெரிய புராணம்

1. சேக்கிழார் அப்பூதி அடிகளை நமக்கு எவ்வாறு அறிமுகம் செய்கிறார்? அல்லது

அப்பூதி அடிகளாரின் இயல்பும் அவர் திருநாவுக்கரசரிடம் கொண்ட அன்பும் பற்றி எழுதுக.

திங்களூரில் மறையவர் குலத்தில் தோன்றியவர் அப்பூதி அடிகள். தாண்டவமாட வல்லவரும் நம் எல்லாருக்கும் தலைவர் ஆனவரும் ஆகிய கூத்தப்பெருமானார்க்கு அன்பர். நிறைந்த புகழுடையவர். கணக்கிட முடியாதவாறு நிறைந்த தவவொழுக்கம் உடையவர் காமம், கோபம் முதலியவாக உள்ள குற்றங்களையெல்லாம் நீக்கியவர். இல்லற வாழ்க்கை நிலையைக் கொண்டவர். இறைவனால் ஆட்கொள்ளப் பெற்ற சிறப்பினை உடைய திருநாவுக்கரசரின் திருவடிகளையே என்றும் மனத்தில் நினைத்துக் கொண்டிருப்பவர். திருநாவுக்கரசர் இவரைப் பற்றி அறிவதற்கு முன்னமேயே, கண்ணுற்காணும் வல்லமையை உண்டாக்கும் காதலானது மெல்ல வளர்ந்து வர அவரிடம் காந்த அன்பினராக இருந்தார். அத்தகைய அன்பின் முதிர்ச்சியால் வீட்டிலுள்ள அளவைப் பொருள்கள், நிறுத்தற் பொருள்கள், தராசு, மக்கள், பசு, எருமை முதலாக உள்ள எல்லாப் பொருள்களுக்கும் 'திருநாவுக்கரசு' என்ற பெயரையே வைத்து அழைக்கும் ஒழுகலாற்றைக் கொண்டவர்.

திருநாவுக்கரசருடைய வடிவத்தைக் காணாதவர் ஆயினும் திருநாவுக்கரசரின் அடிமைத் தொண்டின் திறமும், இறைவன் அருள் சுரந்து ஆண்டுகொண்ட தன்மையையும் கேள்விப்பட்டு இவ்வுலகில் விளங்குகின்ற அறச் சாலைகள் தண்ணீர்ப் பந்தர்கள் முதலாக உள்ள எல்லையில்லாத அறக்கட்டளைகளை திருநாவுக்கரசரின் பெயரால் நிலைபெறுமாறு செய்து ஒழுக்கமுறையால் மேம்பட்டு விளங்கி வந்தார்.

2. வாகீசர் தண்ணீர்ப்பந்தரை வந்து அடைந்து, கண்ட காட்சியை விவரிக்க.

மலையரசன் மகளாகிய உமாதேவியாராகிய பெண்யானையுடன் கலந்து மகிழும் சிவபெருமான் என்னும் ஆண்யானைக்குச் சொந்தவான 'திருப்பழனம்' என்னும் தலத்தை வணங்கி, அங்கே திருப்பணியும் செய்து முடித்த, திருநாவுக்கசரர் மேலெழுந்து வரும் அன்பினால் தம்மை ஆளாகக் கொண்ட சிவபெருமான் தங்கியிருக்கும் பிறபகுதிகளையும் வணங்க வேண்டும் என்ற மகிழ்ச்சியினால் திங்களூரின் வழியாக அமைந்த வழியில் வருவாராயினர்.

அளவில்லாத மக்கள் போக்குவரத்து என்றும் குறையாத சாலையோரத்தில் 'அருளுடைய சான்றோரின் உள்ளம்' போன்ற குளிர்ச்சியை உடையதாய்; வெம்மையை மிகுவிக்கும் கோடைக் காலம் தருகின்ற துன்பங்கள் எல்லாவற்றையும் நீக்கி, குழியாக உள்ள இடம் முழுவதும் நிறைந்திருக்கிற நீர்த்தடாகம் போலக் குளிர்ச்சியை மிகுவிக்கும் இடப் பரப்புடையதாய், வளமை

பொருந்திய நிழலைத் தருவதாய் அமைந்த தண்ணீர்ப் பந்தலைக் கண்டு அங்கே வந்து சேர்ந்தார் வாகீசர்.

வந்த வாகீசர் அங்கே மெல்ல வருகின்ற குளிர்ந்த காற்றுடன் கூடிய பந்தரிடத்து அமுதம் என்று சொல்லலாம் தன்மையுடைய தண்ணீரையும் பார்த்து, மனம் வியப்படைந்து, ஒவ்வொன்ருகப் பார்த்துக் கொண்டே வருகின்றவர், 'திருநாவுக்கரசு' என்னும் பெயரை இன்ஞேசையுடையதாகவும் அழகாகவும் எழுதியிருப்பதை எல்லாப் பக்கங்களிலும் பார்த்தார்.

3. வாகீசர் பந்தரின் பெயரைப்பற்றி விஞவியதையும் மறு மொழிபெற்றதையும் எழுதுக.

தண்ணீர்ப்பந்தருக்குத் 'திருநாவுக்கரசு' என்ற பெயரைச் சூட்டி இவ்வாறு அமைத்தவர் யார்? என்று வாகீசர் அங்குள்ளவர்களைக் கேட்டார்.

அதற்கு அப்பந்தரைப் பற்றிய வரலாறுகள் முழுமையும் நன்ருக அறிந்தவர்கள் 'அப்பூதி அடிகளார்' என்பவர்தாம் இத் தண்ணீர்ப்பந்தல் மட்டுமல்ல, திங்களூரைச் சார்ந்துள்ள எல்லாப் பகுதிகளிலும் அமைந்த அறச்சாலை, திருக்குளம், சோலை முதலாக உள்ள அறக்கட்டளைகள் எல்லாவற்றுக்கும் இறைவஞல் ஆட்கொள் ளப் பெற்ற 'திருநாவுக்கரசு' என்னும் பெயரை வைத்து நிலைபெறு மாறு நடத்தி வருகிருர் என்ருர்கள்.

இம்மொழியைக் கேட்ட திருநாவுக்கரசர் இதற்குரிய கருத்து யாதாக இருக்கும் என மனத்தில் நினைத்து, அவர் எங்கே இருக் கிருர்? என்ருர். அதற்கு அவர்கள் "நிறைந்து விளங்குகின்ற பூணூல் விளங்குகின்ற மார்பையுடைய அப்பூதி அடிகளார் இப் பழைமையான திங்களூரிலேயே வாழ்ந்து வருபவர்; இப்பொழுது தான் வீட்டிற்குச் சென்ருர்; அவ்வீடும் தூரமான இடத்தில் இருப்ப தன்று; மிகவும் அண்மையிலேயே உள்ளது" என்ருர்கள்.

4. வாகீசரும் அப்பூதியடிகளாரும் சந்தித்த காட்சியை விவரி.

தண்ணீர்ப்பந்தரை விட்டு நீங்கி, அப்பூதி அடிகளார் தங்கும் வீட்டின் முன்சென்று வாகீசர் அவ்வீட்டு வாயிற்படிப் பக்கம் சார்ந் தாராக, தங்களுக்கெல்லாம் தலைவஞகிய சிவபெருமானின் அடியவர் ஒருவர் செழிப்பு நிறைந்த வீட்டு வாயிலின்கண் வந்தடைந்தார் என்று வாயிலோர் சொல்லக் கேட்டு உள்ளேயிருந்த திங்களூர் வாழ் வேதம் வல்லார்க்கெல்லாம் தலைவராகிய அப்பூதியடிகள் வெளியில் வந்தார்.

வந்த அப்பூதியடிகள் வாகீசரின் திருவடிகளில் விழுந்து வணங்க அவர் தம்முடைய திருவடிகளை வணங்குவதற்கு முன்னமேயே அவர் திருவடிகளை வணங்கும் வாகீசருக்கு முன்ஞல் நான் எல்லையில்லாத தவம் செய்தேன் போலும்; அதஞல்தான் முந்திப் பொழியும் கருணையை வளர்க்கின்ற வடிவுடைய தாங்கள் என்மனைக்கு எழுந் தருளியது என்று கூறி வந்தது என்னகாரணம்? என்று கேட்டார்.

"மேருமலையை வில்லாகக் கொண்ட சிவபெருமான் உறையும் திருப்பழனம் வணங்கி வருகின்ற நாம் சாலையோரத்தில் உம்மால் வைக்கப் பெற்ற வளம் தருகின்ற நிழலுடைய நண்ணீர்ப் பந்தரைக்

கண்டு அவ்வாறே நீவிர் செய்கின்ற பிற அறங்களையும் கேள்விப் பட்டு இங்கே வந்து சேர்ந்தோம்'' என்ருர் வாகீசர்.

**5.** தண்ணீர்ப்பந்தருக்கு வைத்த பெயரைப் பற்றி எழுந்த வாதங்களை முறைப்படி எழுதுக. அல்லது,

''வேறொருபேர்'' என்ற வாகீசரின் வாக்கு விளைவித்த செயல்கள் யாவை?

கங்கையைச் சடையிலணிந்த சிவனுடைய அடியவர்களுக்காக நீவிர் வைத்த தண்ணீர்ப் பந்தலில் உம்முடைய பெயரை எழுதாமல், வேறொருபேர் எழுதவேண்டிய காரணம் என்ன? என்று கேட்டார் வாகீசர்.

'வேறொருபேர்' என்ற வார்த்தையைக் கேட்டவுடன் நிலைதடுமாறிய மனம் உடையவராய், அறம் பொருந்திய வார்த்தைகளைத் தாங்கள் சொன்னீரல்லீர். நாணம் இல்லாத சமண சமயப் பாதகர்களுடன் இணைந்த மன்னவன் செய்த சூழ்ச்சிகளையெல்லாம் திருத்தொண்டின் முதிர்ச்சி ஒன்றினாலேயே வென்றவருடைய திருப்பெயரையா 'வேறொருபேர்' என்றீர்! உம்மையும் எம்மையும் ஆளாக உடையவருடைய திருவடியின் மேல் விருப்பங்கொண்டு செய்யும் திருத்தொண்டிற்கு ஒன்றினால் இத்துன்பம் நிறைந்த பிறவியிலும் நாம் பிழைத்துவிட முடியும் என்ற அருளுரையை என் போன்ற அறிவற்றவர்களும் தெளிவாக உணரும் வண்ணம் வாழ்க்கையிலேயே செய்து காட்டிய திருநாவுக்கரசரின் திருப்பெயரை யான் எழுதவும் அவ்வுண்மை அறியாது கொடுஞ் சொற்களை யான்கேட்குமாறு விளம்பினீரே!

பொங்குகின்ற கடலில் கல்லையே தெப்பமாகக் கொண்டு கரையேறிய அவர் பெருமையை இவ்வுலகத்தில் அறியாதவர் யார் உளர்? இவ்வேடம் வேறு தரித்துள்ளீர்! அவ்வேடத்துடன் நின்று இவ்வாறு கூறினீர். வேடமும் சொல்லும் பொருந்தாமையால் நீர் யார்? உம்மிடம் எது? என்ருர் அப்பூதி அடிகள்.

இவ்வுரைகளைக் கேட்ட திருநாவுக்கரசர் அப்பூதியடிகளின் பெருமையை அறிந்து, சைவம் அல்லாத வேறுதுறையிலிருந்து கரையேற்றுவதற்காக அருளிச் செய்யப்பெற்ற பெரிய சூலைநோயினால் என்னை இறைவன் அடிமையாகக் கொள்ள அவனை ஆண்டவனாக அடைந்து உயர்ந்தவனும் இன்று தாங்கள் வைத்த பெயரின் உட்கருத்து அறியாது 'வேறொருபேர்' என்று விளம்பிய அறியும் அறிவு இல்லாத இழிந்தவனும் யானே என்ருர்!

**6.** வந்தவர் திருநாவுக்கரசரே என அறிந்த அப்பூதி அடிகளாரின் நான்கு வகையான மகிழ்ச்சியின் வளர்ச்சிச் செயல்களை எழுதுக

1. ஆட்கொள்ள அடைந்துய்ந்த சிறுமையோன் யானே என்ற வாக்கினைக் கேட்ட அப்பூதியடிகளாரின் கைகளாகிய தாமரைகள் தலையின்மேல் சென்று குவிந்தன; கண்கள் அருவியென நீரைப் பொழிய, அது விரைந்து இழிந்தது; சொற்கள் தடுமாறின; உடம்பெல்லாம் மயிர்க்கால்கள் குத்திட்டு நின்றன; 'புளகம்' எனப்பெறும் ஒருவகைக் குளிர்ச்சி உடலிற் பரவியது; தரையின்மேல் விழுந்தார்;

திருநாவுக்கரசரின் திருவடிகளைத் தம் முடிக்கு அணியாக்கினர். இது **விம்மிதநிலை.**

2. கீழே விழுந்த அப்பூதி அடிகளாரை எதிர் வணங்கியவாகீசர் தம் கைகளால் தூக்கி நிறுத்தி, செல்வம் இல்லாதவர்களாய்ப் பின்னர் பெருநிதியம் பெற்றவர்போல் அப்பூதியடிகளார் உள்ளம் முழுவதும் களிப்புநிலை வளர்ந்து கொண்டேயிருக்க, நாவரசருக்கு முன்னால் நின்று கூத்தாடினர்; மேலும் மகிழ்ச்சி அதிகப்பட்டதால் நாவரசரைச் சுற்றிச் சுற்றி வளைய வந்து ஓடினர்; பாடினர். இது **களிமகிழ்நிலை.**

3. மேலும் பெருமகிழ்ச்சி பெருகுவதால் என்ன செய்வது என்பதை அறியாதவராய் வீட்டின் உள்ளே சென்று மனைவிக்கும் மக்களுக்கும் திருநாவுக்கரசு எழுந்தருளிவந்துள்ளார் என்ற மகிழ்ச்சிச் செய்தியைச் சொல்லி, அன்புக்கு அடுத்த நிலையான ஆர்வம் பொருந்தவே மற்றுமுள்ள பெருஞ் சுற்றத்தார்களை யெல்லாம் அழைத்து வருவதற்காகப் புறப்பட்டு ஓடினர். இது **பெருமகிழ்நிலை.**

4. மனைவியார் மக்கள் மற்றுமுள்ள சுற்றத்தார் எல்லாரையும் அழைத்துக் கொண்டு வந்து திருநாவுக்கரசர் பாதங்களில் விழவைத்துத் தானும் அவரவர்கள் விழும் பொழுதெல்லாம் விழுந்து வணங்கி, தணியாத காதலோடு திருநாவுக்கரசரை வீட்டின் உள்ளே எழுந்தருளச் செய்து அவருடைய திருவடிகளை நன்னீரால் கழுவி மலர்தூவிப் பூசை செய்து அத்தீர்த்தத்தை மேலே தெளித்தும் மலர்களைச் சூடியும் மகிழ்ந்தார். இது **ஆராத காதல் நிலை.**

7. அப்பூதி அடிகளார் வாகீசரை விருந்தோம்ப முற்பட்ட முறையை எழுதுக.

அப்பூதி அடிகளார் திருநாவுக்கரசரை அழைத்து ஒருபீடத்தில் அமரவைத்து, பூசைகள் செய்து, விருப்பத்துடன் மணம் நிறைந்த திருநீறு அவரால் கொடுக்கப்பெற அதனைத் தமக்குப் பாதுகாவல் தரும் கவசம் எனக் கொண்டு மெய்யிற் பூசி; மனம் மகிழ்ச்சியால் தழைப்ப, உலகம் உய்வதற்காகத் திருவவதாரம் செய்தருளிய திருநாவுக்கரசரைத் திருவமுது செய்விக்க வேண்டும் என்ற அன்பு மிகவே, அக்கருத்தை அவரிடம் விண்ணப்பம் செய்தார்; வாகீசரும் உடன்பட்டார்.

வாகீசர் இசைந்ததும் அப்பூதி அடிகளார் தம் மனைவியாரைப் பார்த்து இன்று நாம் பெற்ற பேறு நமக்காகக் காத்திருந்து நமக்குத் துணை செய்த தன்மைதான் என்ன! என்று வியந்து இது இறைவன் திருவருளினால் வந்தது ஆகையால் நாம் பிழைப்போம் என மகிழ்ந்து திருஅமுது தயாரிக்க முற்பட்டார்கள்.

தூய்மையும் நன்மையும் அமைந்த கறிகளை அறுவகைச் சுவையால் சுவையுண்டாமாறு செய்து, இனிய சோற்றையும் ஆக்கி, விருந்தோம்புவதற்கு உரிய முறைகளை அமைத்து வைத்தார்கள்.

8. மூத்த திருநாவுக்கரசின் பகுதியாக இவ்வரலாற்றில் நடந்தவைகளை எழுதுக? அல்லது,

திருநாவுக்கரசர் அப்பூதி அடிகள் இல்லத்தில் நிகழ்த்திய அற்புதச் செயலை எழுதுக.

அப்பூதி அடிகளாரின் மக்களுள் மூத்த பிள்ளையின் பெயர் மூத்த திருநாவுக்கரசு. அப்பூதி அடிகள் மனைவியாருடன் திருநாவுக்கரச ருக்குத் திருவமுது ஆக்கி உணவு முறைகளை ஒழுங்கு படுத்தி அமைத்த பின்னர், திருவமுது செய்வதற்கு உண்ணும் கலம்-பரிகலம் -இலை வேண்டும் என எண்ணி, தன் மூத்த பிள்ளையாகிய மூத்த திருநாவுக்கரசை அழைத்து அழகிய வாழைக்குருத்து ஒன்று கொண்டுவா என்று ஆணையிட்டார்.

நல்ல தாய் தந்தையர்களான படியால் எனக்கும் இவ்வடியவர் தொண்டில் ஒரு வாய்ப்புக் கிடைத்தது என்பதை எண்ணி எண்ணி மகிழும் மூத்த திருநாவுக்கரசு விரைந்து தோட்டத்தினுள் புகுந்து, பெரிய வாழைமரத்தின் வளம் பொருந்திய அழகிய குருத்து ஒன்றை அரியும்போது ஒளிபொருந்திய பாம்பு ஒன்று அவன் கையைத் தீண் டியது. பின்னர் அப்பாம்பு கையைத் தாவிப் பற்றி வளைத்து, படத்தை முன்னால் வைத்து மூத்த திருநாவுக்கரசை நேர்ப்பார்வை யாக அமைத்து பார்த்து கண்ணினால் நெருப்பைக் கக்கி வெம்மையை உண்டாக்கியது. மூத்த திருநாவுக்கரசு பதைத்து, கையை உதறி, பாம்பைக் கீழே வீழ்த்தி, நஞ்சின் வேகம் தலைக் கேறிக் கீழே விழு வதற்கு முன் வேகமாக ஓடி இக்குருத்தைக் கொடுப்பேன் என்று ஓடி வருகின்றான். நஞ்சின் வேகத்தைவிட இவனுடைய வருகையின் வேகம் அதிகமாக இருந்ததால் துன்பம் இருந்தபோதிலும் வீட்டை அடைந்து, அடியவர் அமுது செய்யக் காலதாமதம் ஆகுமாதலால் பாம்பு தீண்டியதை யார்க்கும் கூறேன் என்று மனவுறுதி செய்து கொண்டு மாளிகையின் உள்சென்றான்.

நெருப்பனைய நஞ்சு முறையே ஏழு தாதுக்களிலும் ஏறி ஏழாம் நிலையையும் வெற்றி கொண்ட பிறகு, அதன் வெளிப்புற அடையாள மாக, பல்லும் கண்ணும் மேனியும் கருகித் தீய்ந்தன. சொல் தடு மாறியது; ஆவி விட்டது. இந்நிலையில் மயங்கி வீழமுற்பட்டவன் உண்கலமாகிய வாழைக் குறுத்தைத் தாயார் பக்கல் வைத்து பூமியில் விழுந்தான்.

தளர்ந்து விழுகின்ற மகனைக் கண்ட தாயும் தந்தையும் உள்ளம் பதைத்து உற்றுப் பார்த்து இரத்தம் சிந்தும் உடம்பையும் உடம்பில் விளங்கும் அடையாளமும் கண்டு நஞ்சினால் [இறந்தான் என முடிவு செய்து மனநடுக்கம் இல்லாமல், தொண்டர் அமுது செய்ய வேண் டும் என்பதையே எண்ணி அவனை ஒரு பாயினுள் மறைத்து, வீட்டின் வெளியே உள்ள முற்றத்தின் ஒரு பகுதியில் வைத்துத் தொண்டர் அமுது செய்தருளுந் திறத்தில் ஈடுபடலானார்.

திருநாவுக்கரசர் அமுது செய்தருளும் முன் விபூதி வழங்கும் போது மூத்த திருநாவுக்கரசைக் காட்டு என்றனர். பின்னர் உண் மையை உணர்ந்து, முன் எழுந்து சென்று உயிர் நீங்கிய சவத்தைக் கண்டு, இறைவன் அருள் புரியுமாறு தேவாரப் பதிகம் பாடிப் பாம் பின் நஞ்சினை நீக்கினார்.

நஞ்சு நீங்கியவுடன் உய்ந்த மூத்த திருநாவுக்கரசு உறக்கம் நீங்கி விரைந்து எழுவானைப் போன்று எழுந்து திருநாவுக்கரசர் திருவடிகளை வணங்க, வாகீசரும் புனித நீறு அளித்து அருள் வழங் கினார் என்பதாம்.

9. மகன் இறந்த போதும் எழுந்த போதும் தாய் தந்தையர் கொண்ட மனநிலையை விளக்குக.

பாம்பு தீண்டியதால் நஞ்சு தலைக்கேறவே தளர்ந்து வீழ்கின்ற மகனைப் பார்த்த தாயும் தந்தையும் முதலில் உள்ள நடுக்கம் உற்றார்கள். இவன் இவ்வாறு வீழக் காரணம் என்ன? என்பதை உற்று நோக்கி அவனுடைய இரத்தம் வழிகின்ற உடம்பையும்; உடம்பில் காணப்படுகின்ற வேறு சில அடையாளங்களையும் கொண்டு இவன் நஞ்சினால் இறந்தான் என்று முடிவு செய்தபோது அவர்களுக்கு மனத்தில் எந்த விதமான அசைவும் இல்லை. தொண்டர் அமுது செய்வது ஒன்றையே குறிக்கோளாகக் கொண்டமையால் இவன் இறந்தமைக்காக அவர்கள் வருத்தப்படவில்லை. அவனைப் பாயினுள் வைத்து மூடி வீட்டின் தோட்டப்புறத்து ஒரு ஒதுக்கிடத்தில் வைத்து மறைத்துவிட்டு, இச்செய்தியை வெளியிட்டால் தொண்டர் அமுது செய்யக் காலம் தாழ்க்கும் என்று நிகழ்ச்சியை முழுவதும் மறைத்து, தொண்டரை அமுது செய்ய அழைக்கிறார்கள்.

இறந்தபோது துன்பப்படாமையைப் போன்றே அவன் திருநாவுக்கரசர் தேவாரப் பதிகம் பாடியவுடன் எழுந்தபோதும் மகிழ்ச்சிப் படவில்லை. ஆவி பிரிந்து பின் கூடிய நிலையில் எழுந்த பிள்ளையைப் பார்த்தாரேனும் தொண்டின் நெறியினைப் போற்றி வாழ்ந்த நிலைமை ஒன்றையே குறிக்கோளாகக் கொண்டு நின்றவர் ஆகையால் தொண்டர் அமுது செய்து அருளுவதற்கு இவன் சிறிது இடையூறு செய்தானே என்று அப்போதும் மனவருத்தத்தையே அடைந்தார்கள்.

அப்பூதி அடிகளார், மனைவியார், மூத்த திருநாவுக்கரசு ஆகிய மூவர் மனமும் ஒரே குறிக்கோளாகக் கொண்டவையே. தொண்டர் அமுது செய்தருளுவதற்குத் தொண்டு செய்வது என்பதே. அதற்குத் துணையாக இருப்பவையெல்லாம் அவர்களுக்கு மகிழ்ச்சியையும், தடையாக இருப்பன எல்லாம் அவர்களுக்கு வெறுப்பையும் தரும்.

10. அப்பூதி அடிகளார் இறந்த மகனை மறைத்த முறையையும்; மறைத்ததை வாகீசர் வெளிப்படுத்திய முறையையும் எழுதுக.

வாகீசர் அமுது செய்தருளுவதற்கு உண்கலமாக அமையும் வாழைக் குருத்தினைக் கொண்டு வந்து தாயின் பக்கத்தில் வைத்துத் தளர்ந்து வீழ்கின்ற மகனைத் தாயாரும் தந்தையாரும் கண்ணுற்று; மனம் பதைத்து, இவனுக்கு என்ன நேர்ந்தது என உற்று நோக்கி, இரத்தம் வழிகின்ற மேனியும், உடம்பில் அமைந்த வேறு சில குறிகளையும் கண்டு, இவன் நஞ்சினால் இறந்தான் என்று எண்ணி, மன வருத்தம் சிறிதும் இன்றி, வாகீசராம் தொண்டர் அமுது செய்வதைப் பற்றியே சிந்திக்க முற்பட்டார்கள்.

பெறுதற்கரிய புதல்வனைப் பாயினுள் போட்டு மூடி வீட்டுக்குப் புறத்தே அமைந்த முற்றத்தில் தனியாக அமைந்த ஒரு ஒதுக்கிடத்தில் மறைத்து வைத்துவிட்டு, இச்செய்தியைச் சிறிதும் தெரியாதவாறு மறைத்து, தொண்டரை அமுது செய்விப்போம் எனக் கருதி அவரிடம் விருப்பத்தோடு விரைந்து வந்து, அடியவர் வந்து அமுது

செய்வதற்குக் காலதாமதம் ஆகின்றதே என்று கருதி, அடிசில், கறி வகைகள் ஆகிய எல்லாவற்றையும் அழகாகவும் பொருத்தமாகவும் வைத்து, ஒப்பற்ற சிறப்பினையுடைய தொண்டனாரின் முன் சென்று பணிந்து எழுந்து, தாங்கள் அமுது செய்தருளி எம் குடி முழுவதையும் காப்பாற்ற வேண்டும் என்று கூறினார்கள்.

வாகீசரும் எழுந்து செல்ல, அவர்தம் திருவடிகளை நன்னீரால் அபிஷேகம் செய்து, வேறோர் நல்ல ஆசனத்தில் அமரச் செய்து, வேறோர் நல்ல ஆசனத்தில் அமரச் செய்து. உண்கலம் அமைத்துச் சரி செய்தற்கு முன்னால், நாவுக்கரசரும் வெண்ணீறு பூசி, அப்பூதி அடிகளாருக்கும் மனைவியருக்கும் பொருந்திய திருநீறு நல்கி, பிள்ளைகளுக்குத் திருநீறு வழங்க முற்படும்போது அப்பூதியடிகளாரைப் பார்த்து, இங்கே நிற்கும் பிள்ளைகளுக்கு மூத்தவரான பிள்ளையையும் காட்டு: அவனுக்கு முன்னே திருநீறு சாத்துதல் முறை என்று கூறினார் வாகீசர்.

இவ்வார்த்தையைக் கேட்ட அப்பூதி அடிகளார் நடந்த நிகழ்ச்சி ஒன்றையும் சொல்லவில்லை. "இப்போது இங்கு அவன் உதவான்" என்றார்.

அவ்வுரையைக் கேட்ட வாகீசர் இறைவன் திருவருளால் நடந்தவற்றையும், அப்பூதியடிகளாரின் அறம் நிலைத்த உள்ளத்தில் ஒரு தடுமாற்றம் இருப்பதையும் இணைத்து நோக்கி, "தாங்கள் சொல்லும் இந்த வார்த்தையை என் உள்ளம் ஏற்காது. அவன் இங்கு இப்போது உதவான் ஆவதற்கு ஒரு காரணம் இருக்க வேண்டும்; மெய்யாக நடைபெற்றதை விரித்துச் சொல்லும் என்று கூறினார் வாகீசர்.

வாகீசர் அமுது செய்தருளுவதைத் தடுப்பதற்கு என்று இப்படி ஒன்று வருவதை என்று கூறுதிருந்தாரேனும் அடியவர் கேட்டுவிட்ட பிறகு நடைபெற்றதைத் தெளிவாக எடுத்துச் சொல்லிவிட வேண்டும் என்ற ஒழுக்கத்தாலும் மனம் வருந்தி, வாகீசரை அன்புடன் வணங்கி, மூத்த திருநாவுக்கரசுக்கு நடந்ததை உரைத்தார்.

**11. அப்பூதியடிகள் வாகீசருக்கு அமுது செய்வித்தருளிய முறையை எழுது.**

வாகீசர் பதிகம் பாடியதும் மூத்த திருநாவுக்கரசு உறக்கம் தெளிந்து எழுவானைப் போன்று விரைந்து எழுந்து நாவரசரை வணங்க அவரும் திருநீறு கொடுத்தார். உயிர் பெற்றெழுந்த பிள்ளையைக் கண்டு தந்தையார் மகிழ்ந்தாரில்லை. அறிதற்கருமையான பெருமையையுடைய தொண்டர் அமுது செய்தருளுவதற்கு இவன் கொஞ்சம் இடையூறு செய்து விட்டான் என்று மனம் வருந்தி நின்றனர்.

அவ்விருவரின் மனவருத்தத்தை முகவாட்டத்தால் அறிந்த வாகீசர் மனையின் உள் சென்று, அமுது செய்தருளுவதற்காக ஓர் பக்கத்திருப்ப, பூணூல் அணிந்த மார்பையுடைய அப்பூதியடிகளார் முன் இருந்த மகிழ்ச்சியே அமைய வேண்டுவனவற்றை அமைத்த பிறகு,

நூல்களால் புகழப்பெற்ற பசுச் சாணத்தோடு கலந்த நீரினால் பூமியைப் பொலிவு பெறத் துடைத்து; ஒளி பொருந்திய உயர்ந்த சுண்ணத்தாற் கோலமிட்டு, தீபமேற்றி, இவ்வளவு நிகழ்ச்சிகளுக்கும்

காரணமாக இருந்த அதே வாழையிலைக் குருத்தை விரித்து, மகிழ்ச்சியோடு அதனை நன்னீரால் கழுவி, அரிந்த பக்கம் வலமாக இருக்க அப்பரிகலத்தை அமைத்தார்கள்.

நல்ல மணம் பொருந்திய நீரை அப்பூதி அடிகளார் எடுத்துக் கொடுக்க, திருக்கைகளைத் தூய்மைப்படுத்தும் திருநாவுக்கரசர் அப்பூதி அடிகளாரைப் பார்த்து புதல்வர்களும் தாங்களும் இங்கேயே அமுது செய்தருள்வீர் என்று சொல்ல அவர் ஏவலை மேற்கொண்டு, மைந்தர்களும் தாமும் பக்கத்தே இருந்து அமுது செய்ய, மனம் மிக மகிழும் மனைவியார் திருவமுதுக்கு வேண்டியவைகளை எடுத்துக் கொடுக்க (பரிமாற) தமிழ்ச் சிங்கம் எனப்பெறும் திருநாவுக்கரசர் திருவமுது செய்தருளினர்.

**12.** இடஞ்சுட்டிப் பொருள் விளக்கம் தருக.

(a) **"பொருப்பரையன் மடப்பிடியின் உடன்புணரும் சிவக்களிற்றின் திருப்பழனம்"**

**இடம் :** திருநாவுக்கரசர் திருப்பழனம் என்ற தலத்திலுள்ள சிவபெருமானை வணங்கிப் புறப்பட்டுத் திருப்பழனம் வருகிறார் என்று சொல்ல வந்த சேக்கிழார் திருப்பழனத்துக் கோயில் இறைவனை உருவகமாக அமைத்துக் காட்டுகின்றார்.

**விளக்கம் :** 'பழனம்' என்ற சொல் 'காடு' என்ற பொருளைத் தரும். திருப்பழனத்தைக் 'காடு' என்று எண்ணிய சேக்கிழார் சிவபெருமானையும் உமையம்மையாரையும் முறையே காட்டில் வாழ்கின்ற ஆண்யானை பெண் யானைகளாக உருவகம் செய்கிறார். உமையம்மை இமயமலையரசன் மகள் ஆதலின் மலைப்பகுதியும் உருவகத்துக்கு அழகு செய்தது. பொருப்பு-மலை; **பொருப்பரையன்**-மலையரசன். இவன் மனைவி மேனை.

இமயமலையரனின் மகளாகிய பெண் யானையுடன் இணைந்து வாழும் சிவமாகிய ஆண்யானைக்குச் சொந்தமாகிய காடு திருப்பழனம் என்பதாம்.

(b) **அருளுடையார்உள்ளமெனத் தண்ணளித்து.**

**இடம் :** திங்களூரார் ஆகிய அப்பூதி அடிகள் வைத்த தண்ணீர்ப் பந்தல் குளிர்ச்சியை உடையதாயிருந்தது என்பதை விளக்க இவ்வுவமையைக் கையாளுகிறார் சேக்கிழார்.

**விளக்கம் :** கருணையுடையவரின் மனம் போலக் குளிர்ச்சியை உடையது எனப் பொருள். அருள் உள்ளம் கொண்டவர் எத்தகைய துன்பம்-வறுமை வந்து தாக்கியபோதும் இது உலகத்து இயற்கை; என்று கருதி அவ்வறுமையிற் சிக்கித் தவிக்காமல் இறைவனுடைய திருவடிகளையே சிந்தித்துச் சிந்துத்துப் பசுமையாகத் தம் உள்ளத்தை வைத்துக் கொள்வார்கள். வறுமை தாக்கும்போதெல்லாம் இறைவனை நன்றாகத் துதிக்க முடிவது இவ்வறுமையால்தானே ! என எண்ணி மகிழ்வார்கள். அவ்வாறே எத்தகைய கோடைக்கால வெம்மையால் தாக்கப் பெற்றாலும் தண்ணீர்ப் பந்தல் குளிர்ச்சியையும் கருணையையும் உடையதாய் இருந்தது என்பதாம்.

(c) **வென்றவர் தம் திருப்பேரோ வேறொரு பேர் ?**

**இடம் :** திருநாவுக்கரசர் அப்பூதி அடிகளார் வைத்த தண்ணீர்ப்பந்தல் முதலாக உள்ள அறக்கட்டளைகள் எல்லாவற்றுக்

கும் அப்பூதி அடிகள் பெயரை வைக்காமல் திருநாவுக்கரசர் பெயரையே வைத்திருந்தார். வாகீசர் அப்பூதி அடிகளாரைப் பார்த்து, "நீர் வைத்த தண்ணீர்ப் பந்தலில் நும்பெயர் எழுதாமல் வேறொரு பேர் எழுதியது ஏன்?" என்றார். அப்பூதி அடிகளார் திருநாவுக்கரசரைப் பார்த்தது இல்லை. தாம் தெய்வமாகக் கொண்டொழுகும் நாவரசரின் பெயரை 'வேறொரு பேர்' என்று இவர் சொன்னாரே என்று சினம் வந்த இடத்தில் இவ்வாறு சொல்கிறார் அப்பூதி அடிகள்.

**விளக்கம் :** நாணம் இல்லாத சமணப் பாதகர்களுடன் ஒன்றியிருந்த பல்லவ மன்னன் செய்த சூழ்ச்சிச் செயல்களைத் திருத்தொண்டு என்ற ஒன்றின் முதிர்ச்சியாலேயே வென்று சைவ சமயத்தை வளர்வித்தவர் தம்முடைய பெயரையா **வேறொரு பேர்** என்று வெம்மை மொழியாற் கூறினீர் என்று உரைத்தார் அப்பூதியடிகள்.

(d) **அற்றவர்கள் அருநிதியம் பெற்றார் போல்.**

**இடம் :** திருநாவுக்கரசர் அப்பூதியடிகளாரிடம் தாமே அவர் எழுதி வைத்த பெயருக்கு உரியவர் என்பதைக் கூறியவுடனேயே அப்பூதியடிகள் மனம் மகிழ்ச்சியால் துள்ளியது. மகிழ்ச்சி மேன்மேற் பெருகிக் கொண்டே இருக்கிறது. அவர் மகிழ்ச்சியை விளக்க இவ்வுவமையை எடுத்தாளுகிறார் சேக்கிழார்.

**விளக்கம் :** முன் செல்வம் இல்லாதவர்களாக இருந்து பின் என்றும் அழியாத பெருஞ் செல்வத்தைப் பெற்றவர்களைப்போல அப்பூதி அடிகளாரும் மகிழ்கின்றார் என்பதாம்.

அப்பூதி அடிகளார் வேண்டுகோளுக்கு உடன்பட்டு நாவுக்கரசர் அவர் வீட்டில் திருவமுது செய்தருள இசைந்தார். இசைவைக் கேட்ட அப்பூதி அடிகளார் தம் மனைவியை நோக்கிக் கூறியது.

**விளக்கம் :** எய்திய பேறு. பெறுதற்கரிய பேறு எனப்பெறும். திருநாவுக்கரசர் திருவமுது செய்தருள உடன்பட்டது அவர் இல்லத்துக்கு எழுந்தருளிய பேற்றினை விட, மிகப்பெரும் பேறு ஆக இருந்தது. நம்மிடம் இப்போது வந்த பெரும்பேறு (உணவருந்த வாசீசர் உடன்பட்டது) நம் பக்கல் நீண்ட நாளாகக் காத்திருந்து துணை செய்த தன்மை தான் என்னே! என்று வியந்துரைக்கிறார்.

**இடம் :** வாகீசர் திருவமுது செய்தருளுவதற்கு உரிய உணவுகளைச் சமைத்து முடித்த பிறகு மூத்த திருநாவுக்கரசை அழைத்து உண்கலமாக அமையும் வண்ணம் அழகிய வாழையிலைக் குருத்து ஒன்று கொண்டு வா என ஆணையிட்டார் அப்பூதியடிகள். அப்போது மூத்த திருநாவுக்கரசு கூறிய சொற்கள் இவை.

**விளக்கம் :** வாகீசருக்குத் திருவமுது அமைத்துத் தரும் தொண்டில் தமக்கு ஏதும் வாய்ப்பு இல்லையே என்று கவலை கொண்டிருக்கிறான் மூத்த திருநாவுக்கரசு. தனக்கு விருப்பமாகிய தொழிலைத் தன் தாய் தந்தையர்களே செய்யச் சொன்னபோது மூத்த திருநாவுக்கரசருக்கு அது மிகவும் மகிழ்ச்சியாக இருந்தது. தாய் தந்தையர் கூறிய ஏவலைச் செய்தல் என்ற அறத்தைக் கடைப்பிடித்

தோம் என்ற அறம்ஒருபக்கம்; அவ்வறமும் தனக்கு மகிழ்ச்சியாகவே **அமைந்தது** என்ற இன்பம் ஒருபக்கம்; திருத்தொண்டில் ஈடுபட்ட தால் தந்தையின் கொள்கையைத் தானும் மரபு வழிக் கடைப்பிடித் தோம் என்ற கொள்கையில் வழுவாமை. சில தாய் தந்தையர் தம் பிள்ளைகளைப் பிச்சையெடுத்தல் முதலிய தீய செயல்களில் ஈடுபடுத்து தல் போலன்றி, சிவனடியவர் தொண்டில் ஈடுபடுத்தியதால் நல்ல தாய் தந்தை என்றார்.

### (g) "இப்போது இங்கு அவன் உதவான்"

**இடம்:** மூத்த திருநாவுக்கரசு பாம்பு தீண்டி இறக்க, அவனைப் பாயில் வைத்து மூடி வீட்டுத் தோட்டப்புற முற்றத்தின் ஓர் ஒதுக் கிடத்தில் மறைத்து வைத்துவிட்டு, இது தெரியின் அடியவர் அமுது செய்தல் தடைப்படும் ஆதலால் சிறிதும் தெரியாது மறைத்துவிடு வோம் என்று தமக்குள் முடிவு செய்து கொண்டனர் தாயும் தந்தை யும்.

திருநாவுக்கரசர் திருவமுது செய்யுமுன் அனைவருக்கும் திருநீறு வழங்க முற்பட்டுஅப்பூதி அடிகளாருக்கும்மனைவியாருக்கும்கொடுத்து விட்டு, பிள்ளைகளுக்கெல்லாம் கொடுக்கத் தொடங்கியவர் மூத்த திருநாவுக்கரசைக் காணாமையால், அப்பூதி அடிகளாரிடம் மூத்த திருநாவுக்கரசைக் காட்டு, அவனுக்கு முந்தத் திருநீறு அளிக்க வேண்டும் என்றார். அப்போது அப்பூதி அடிகள் **இப்போது இங்கு அவன் உதவான்'** என்றார்.

**விளக்கம்:** மூத்த திருநாவுக்கரசு இறந்ததைச் சொன்னால் அடியவர் திருவமுது கொள்வது தடைப்படும் என்று எண்ணி, அவனுக்கு விளைந்தவைகளிற் சிறு செய்தியையும் கூறாமல் **'இப்போது இங்கு அவன் உதவான்'** என்று கூறினார், 'உதவான்' என்ற சொல லின் பொருள்: அடியவர் மனக்கருத்தை முடிப்பதே உதவி. வாகீ சர் ஏவலை நிறைவேற்றிவைப்பதற்கு உரிய தொண்டில் அப்பூதி அடிகளாருக்கு அவன் உதவி செய்ய மாட்டான் என்பதாம்.

### (h) "யாவர் இத்தன்மை செய்தார்"

**இடம்:** மூத்த திருநாவுக்கரசுக்கு நடந்த நிகழ்ச்சிகள் எல்லா வற்றையும் வாகீசரிடம் கூறிவிட்டார் அப்பூதியடிகள். கேட்டுக் கொண்டிருந்த வாகீசர் கூறியது இது.

**விளக்கம்:** சிவனடியார் தொண்டு என்பதை மனத்தில் வைத் துக் கொண்டு நீவிர் செய்த செயல் மிகமிக நன்று. இவ்வுலகில் சிவனடியார் தொண்டில் ஈடுபட்ட மக்கள் பல்லோர் ஆவர். அவருள் இத்தகைய செயல் செய்தவர் எவரே இருக்கிறார் உம்மைத் தவிர என்று சிறிது கடிந்த முறையில் கூறினார் வாகீசர்.

### (i) "சிறிதிடையூறு செய்தான் இவன்"

**இடம்:** மூத்ததிருநாவுக்கரசின் ஆவிதீர் சவத்தை அணுகி, இறைவன் மேல் திருப்பதிகம் பாடி, இறைவனருளால் அவனை உயிர்ப்பித்தார் வாகீசர். பொருந்திய உறக்கம் நீங்கி விரைந்து எழுபவனைப் போல எழுந்த மூத்த திருநாவுக்கரசு முனிவராம் திரு நாவுக்கரசை வணங்க, அவரும் திருநீறு நல்கினர். உயிரை மீளவும் பெற்று எழுந்த மூத்த திருநாவுக்கரசை அப்பூதியடிகளும் மனைவி

யும் காண்கின்ருர்களாயினும், அவன் உயிர் பெற்றெழுந்தமைக்கு மகிழ்ச்சியடையாமற் கூறிய சொற்கள் இவை.

**விளக்கம் :** இந்த மூத்த திருநாவுக்கரசு முன்னே உயிரைவிட்டு இடையூறு செய்யப் பார்த்தான்; நாங்கள் தடுத்து மறைத்து விட்டோம். இப்போது அவனே உயிரைப் பெற்று, அடியவர் அமுது செய்தருளக் காலம் தாழ்க்கும் முறையில் 'சிறிது இடையூறு செய்தான்' என்ருர். அப்பூதி அடிகளாரின் மனம் தொண்டு நெறியில் இடையூறு நேராவண்ணம் பாதுகாத்து வாழும் உயர்ந்த வாழ்க்கையையே குறிக்கோளாகக் கொண்டது ஆதலின் மூத்த திருநாவுக்கரசு உயிர் பெற்றெழுந்ததால் அடியவர் அமுது செய்யக் காலம் தாழ்க்கிறதே என்பதைக் கருதி, 'சிறிது இடையூறு செய்தான்' இவன் என்ருர்.

# 5. கம்பராமாயணம்

## 1. தசரதன் அயோத்திக்கு மீளுங் காட்சியைக் கம்பர் எவ்வாறு அமைத்துக் காட்டுகின்ருர்?

**முன்னுரை**

சீதைக்கும் இராமபெருமானுக்கும் அமைந்த திருமண ஏற்பாட்டிற் கலந்து கொள்வதற்காக வந்த மன்னவன் இராமபிரானுடைய தம்பியர்களுக்கும் திருமணம் முடித்து வைக்க, இராமபிரான் தான் எடுத்த அவதாரத்துக்குப் பொருத்தமான வகையில் சனகன் தந்த பெண்ணுகிய சீதையுடன் பலவகையாக வந்து பொருந்துகிற இன்பங்களையும் அனுபவித்து வருகின்ற அச்சமயத்தில் கௌசிகமுனிவன் வேதங்களிற் கூறும் நெறி முறைகளையும் ஆசியுரைகளையும் அவர்களுக்குக் கூறிய பிறகு வடக்கேயுள்ள இமயமலைக்குப் போனுன்.

**தசரதன்புறப்பாடு.**

விசுவாமித்திரன் சென்ற பிறகு தசரதன் தம் சேனைகளை நோக்கி "நம் அயோத்திக்கு இப்போது புறப்படுக" என்று கூறவே அனைவரும் புறப்படலாயினர். அரசர் கூட்டம் தன் திருவடிகளை வணங்கிவர, தசரதன் தேர் ஏறினுன்.

**மிதிலை நகரத்தவர் வருத்தம்.**

தன் பிள்ளைகளும் மருமகப் பெண்களும் தன் திருவடிகளை வணங்கி உடன் வர, ஏனைர அரச குமாரர்களும் இடம் எங்கெங்கே இருக்கிறதோ அங்கங்கே மொய்த்து வர மிதிலை நகரத்துள்ள மக்கள் உடலைவிட்டு உயிர் பிரிவது போன்ற வருத்தம் எய்த தசரதன் அயோத்தி நகர்ச்சாலையை அடைந்தான்.

**செல்லும் அமைப்பு.**

தசரதன் முறைப்படி முன்னே செல்ல, மிதிலைநகரத்து உள்ளவர்கள் மனம் பின்னே செல்ல, இடையில் எல்லா வகையாலும்

தன்னையே பொருந்துமாறு ஒத்துள்ள தம்பியர்கள் தன்னைத் தழுவி வர இராமனுனவன் மின்னலை ஒத்த இடுப்பை உடையவளாகிய சீதையோடும் சென்றான்.

**முடிப்புரை.**

கௌசிகன் சென்றபின் புறப்பட்ட தசரதன் மிதிலை நகரத்து உள்ளவர்கள் எல்லாம் உயிரைப் பிரிவது போல் வருந்தி அவர்கள் மனம் பின்னே வர, தான் முன்னே செல்ல, இராமனும் தம்பியரும் இடையே வர அயோத்தியை நோக்கினான்.

2. தசரதன் வழியிடைக் கண்ட நிமித்தமும் பயனும் பற்றி எழுதுக.

மிதிலை நகரிலுள்ளார் மனம் பின்னே செல்ல, இராமனும் தம்பியரும் அவர்தம் மனைவியரும் நடுவே செல்ல முறைப்படி முன்னே செல்லும் தசரதன் அயோத்தியை அடைவதற்காகப் போய்க்கொண்டிருக்கும் போது மயில் முதலிய பறவைகள் நல்ல அறிகுறியாக வலப்புறமாகவும் காகம் முதலிய பறவைகள் தீய அறிகுறியாக இடப்புறமாகவும் பின் விளைவுகளை முன் அறிவிப்பன வாய் வந்தன. வந்த இருபகுதிப்பட்ட நிமித்தங்களுள்ளும் காகம் முதலியன முன்னிறுத்தித் தடை செய்வன ஆயின. இவைகளைப் பார்த்த தசரதன் 'தடை ஒன்று இருக்கிறது' என்று கருதியவனாய் மேலே செல்லாதவன் ஆனான்.

பின்னர் நிமித்தங்களை அடிப்படையாகக் கொண்டு நன்மை தீமைகளை அறிபவனாகிய ஒரு ஆய்வாளனை அழைத்து, இந்நிமித்தங்களால் உண்டாகும் விளைவு நல்லதோ அல்லது தீயதோ எனத் தசரதன் கேட்க, அந்நிமித்திகன் ஆராய்ந்துணர்ந்து "இப்பொழுதே தீமைவரும் அது முடிவில் நல்லதாக அமைந்துவிடும்" என்றுகூறினான்.

3. பரசுராமன் வருகையை முறைப்படுத்தி எழுதுக.

**முன்னுரை**

இராமன் சீதையைக் கடிமணம் புரிந்து அயோத்தி மீளும்போது பரசுராமன் போர் தொடுத்து வந்து இராமனிடம் தோற்றுச் சென்றான் என்பது பொது வரலாறு. அதன்படி வரும் பரசுராமன் வருகையைக் கம்பர் அமைத்துக் காட்டுகின்றார்.

**(அ) பரசுராமன் உருவ அமைப்பு.**

அயோத்தி செல்லும் வழியில் தீநிமித்தம் தோன்றுவதைக் கண்டு தசரதன் சிறிதே நிற்க, அப்போது ஆகாயத்தே பொருந்திய இருள் சிதையும் வண்ணம் ஒளி செய்து விளங்கிப் பக்கத்தில் பரந்து வீசும் சடைமுடி, கோடாலிப்படை, மகாமேருமலை நடந்து வந்தால் எப்படியோ அப்படி வரும் நடை, ஆகியவைகளை உடையவனாய் சுவாசத்தால் நெருப்பைக் கக்குபவனாய் நெருப்பை உமிழும் கண்களை உடையவனாய், இடியைப் போல முழங்கும் உவமை சொல்ல முடியாத கடுஞ்சொல்லை உடையவனாய் வந்தான்.

**(ஆ) வில்லை வளைத்து நாண் ஏற்றும் வீரம்**

கடலில் சிக்கித் தவிக்கும் மரக்கலங்களைப் போல இவ்வுலகில் உள்ள அசையும் பொருள் அசையாப் பொருள் ஆகிய எல்லாம் நடு நடுங்கித் தடுமாறவும் உலகை எட்டுத் திசைகளிலும் நின்று தாங்கும்

பெருமையை உடைய திக்கு யானைகள் அச்சத்தால் அசைவற்று நின்று பின் தளர்ச்சி அடையவும், கடலானது நிலைகலங்கிக் கொந்தளித்துக் கொதித்துக் கரைபுரளவும், தேவர்கள் அஞ்சியோடவும், தன்னுடைய ஒப்பற்ற பொன் மயமான வில்லை வளைத்து நாண் ஏற்றி, கூரிய நுனிகளை உடைய அம்புகளைத் தெரிந்து எடுப்பவன் ஆகி வந்தான்.

**(இ) இவன் கோபம் எதைக் கருதியதோ என்று எண்ணும்படி அமைந்த சீற்றம்.**

புண்ணைக் கிழித்துக் கொண்டு இரத்தம் நிணநீர் முதலியன பெருகி வருகின்றன போலக் கண்ணைக் கிழித்துக் கொண்டு பெருகி வருகிற கோபமாகிய நெருப்பை உடையவன். இவனுடைய கோபத்துக்குக் காரணம் சுவர்க்க லோகம் பூமியில் வந்து விழுந்துவிட வேண்டும் என்பதா? இப்பூமி தலைகீழாக மாறவேண்டும் என்பதா? அல்லது எண்ணிக்கையை அழித்த உயிர்கள் எல்லாவற்றையும் இயமனது வாயில் போடவேண்டும் என்பதா? இவையல்லாமல் வேறு எதுவோ? என்று பக்கத்தில் உள்ளவர்களெல்லாம் எண்ணி அஞ்சியோடுமாறு சீற்றம் கொண்டு வருபவன் ஆனான்.

**(ஈ) பரசுராமன் உடம்பிலிருந்து புறப்படும் வெய்ய ஒளி.**

போர்க்களத்தில் எப்படைகள் எதிர்த்தாலும் அழித்து மேலெழும் வீரம் வாய்ந்த மழுவாயுதத்தின் ஒப்பற்ற உச்சியானது புகையைக் கக்கவும், தேரின் மேலேறி மேருமலையைச் சுற்றிவரும் சூரியனும் பரசுராமனிடத்திலிருந்து வருகின்ற நெருப்பின் வெம்மையால் முறையாகச் செல்லும் வழியிலிருந்து மாறுபட்டுச் செல்லவும், கடலில் குதிரை முகவடிவில் அமைந்த ஊழித்தீயானது பரந்த ஆகாயத்தைத் தொடும்படி விரைந்து சென்று பூமியின் மேல் வருகின்ற ஒப்பற்ற முறைமைபோல வெம்மை வாய்ந்த ஒளி அவன் உடம்பிலிருந்து வெளிப்பட அவன் வந்தான்.

**(உ) உலகை ஊழிமுடிவில் அழிக்கவரும் சங்கார சிவனை ஒப்ப வந்தான்.**

வலிமை உடைய தோள்கள் உயர்ந்த திசைகளின் எல்லையிலே சென்று அடைய, பக்கங்களிற் பரவும் உச்சிக் கொண்டை எனப் பெறும் சடைமுடியானது ஆகாயத்தைச் சென்று தொட, பக்கத்தில் வெண்ணிறமுள்ள சந்திரன் தோற்றத்தைக் கொடுக்க, கடலென அமைந்த நீரும், நெருப்பும், காற்றும், நிலமும், ஆகாயமும் என்ற இவைகள் அழியுமாறு உண்டாகும் யுகத்தின் இறுதியில் திரிகின்ற பார்வதியின் கணவனாகிய சிவனை ஒப்ப வந்தான்.

**(ஊ) கார்த்த வீரியார்ச்சுனனை வெட்டிய கோடாலி.**

அறல் எனப் பெறும் கருமணல் சூழ்ந்த கடல் வளைந்த பெரிய நிலம் முழுவதும் பொருந்துமாறு தனித்துச் செல்லும் வலிமை மிகுந்த படைகளை உடையவனான பரசுராமன், கொல்லும் தன்மை வாய்ந்த வீரம் பொருந்திய அரசர்களின் திலகம் போன்றவனான கார்த்த வீரியார்ச்சுனன் உயிருடன் கூடிய ஒரு மரம் நின்றதுபோல் நிற்க, அவனுடைய ஓராயிரம் உயர்ந்த தோள்களாகிய வயிரம் வாய்ந்த கிளைகளை வெட்டும்படித் தொட்டு வீசப்பெற்ற கூர்மை

யான நுனியை உடைய கோடாலி என்னும் ஆயுதத்தை உடைய வனாய் வந்தான்.

(எ) குருதிக் குளத்தில் குளித்து நீராடியவன்.

அரச குலம் முழுவதுக்குமே ஒப்பற்ற பழிச்சொல் ஒன்று பொருந்த, அதனால் நிலவுலகத்தை ஆளுகின்ற அரசகுலம் முழுவதை யும் வேரற்று ஒழியுமாறு மழுவாயுதத்தால் களை வெட்டுவதுபோல வெட்டி, உயிர்களைக் கவர்ந்து, இருபத்தொரு படிகளோடு அமைந்த குளத்தில், கடல்போல் அலைவீசுகின்ற இரத்தமாகிய தண்ணீரில் அமிழக் குளித்துத் தனிநின்று நீராடியவன் வந்தான்.

(ஏ) குருகு பெயரிய குன்றம் தொலைத்தவன்.

மூங்கிலை ஒத்த ஒப்பற்ற தவமும், எரிகின்ற நெருப்பை ஒத்த கோபமும் பெரிதும் பொருந்துமாறு கொண்டவன்; தன் எதிரில் தளர்வடைந்து, தான் மேற்கொண்ட செயலை விட்டுவிடுதற்கு முருகன் எண்ணும்போது, கோபங் கொண்டவனாய் உயர்ந்த பறவை யாகிய அன்னங்களுக்கு இனிமையுடைய வழியாக அமையும்படி உயர்ந்த சிகரத்தை உடைய கிரௌஞ்சம்—(குருகு) என்னும் பெய ருடைய மலையை ஊடுருவிச் செல்லுமாறு ஒப்பற்ற கூர்மையான அம்புகளை ஆராய்பவன் (வந்தான்.)

(ஐ) வரும் முறைமை.

மேலே கூறப்பெற்ற அமைப்புகளை உடைய பரசுராமன் மலைகள் நிலத்தில் புகுமாறு கடல்கள் மேலெழுந்து பொங்க, உலகின் இயற் கையே தன்னைத் தழுவும்படி முயல்பவனாய் பெயருக்கு ஏற்ற தன்மை யினால் உயர்ந்து வளர்கின்ற மலையாகிய கிரௌஞ்சத்தை அழித்த கோடாலிப் படையை உடைய பரசுராமன் வந்தான்.

4. பரசுராமன் தசரதனை மதியாமல் இராமனிடம் சென்று நின்ற முறையை விளக்கி எழுது.

**தசரதன் எண்ணம்**

மழுவாளவனாகிய பரசுராமன் மிகுந்த கோபங்கொண்டு வந்து கொண்டிருக்கும்போது, வேள்வி முதலியன செய்து அரிதில் முயன்று இராமபிரானை மகனாகப் பெற்ற தசரதன் பரசுராமனைப் பார்த்து, கொடியவனாகிய இப்பரசுராமன் இங்கே வருவதற்குக் காரணம் என்ன? என்று எண்ணும் சமயத்தில்,

**பரசுராமன் வருகை**

மகிழ்ந்து சென்று கொண்டிருக்கும் தசரதன் படைகள் பயந் தோட, கிளர்ந்தெழும் புருவங்கள் வளைய, கண்கள் நெருப்புப் பொறி யைச் சிந்த, ஆண் இடிபோல முழக்கம் செய்து கொண்டு, சிங்கம் எனத் தேரில் வருகின்ற இராமன் முன்போய் நின்றான்.

**இராமனின் எண்ணம்**

அருள்பொழியும் கண்களை உடையவனான இராமபிரானும் இவன் யாரோ? என்று எண்ணும் சமயத்தில்,

**தசரதனை மதியாமை**

தசரதன் பரசுராமனிடத்தில் வந்து இனிமையுடன் அவனுக்குப் பூசைகளைச் செய்பவனாகி, மணம் வீசும் தன்னுடைய முடியானது பூமியிலும் அவன் திருவடிகளிலும் படியுமாறு நிலத்தில் விழுந்து வணங்கவும் கோபம் தணியாதவனாகி ஊழிக்கால நெருப்பைக் கக்கு பவன் போல முரசத்தினது முழக்கத்திற்கு ஒப்பாக ஒலியை உண் டாக்கிக் கொண்டு இராமபிரானுக்கு எதிரில் நின்று,

**இராமனிடம் பேசுதல்**

"நான் உன்னால் ஒடிக்கப்பட்டு விழுந்த வில்லின் தன்மையை அது முன்னேயே ஒடிக்கப் பெற்றது என்ற இரகசியத்தை அறிவேன். இனிமேல் உன்னுடைய அழகிய தோளின் தன்மையைச் சோதனை புரியும் விருப்பம் உடையேன். அரசர்களை அழித்து மேம்படுதலால் திரண்ட என் தோள்களிற் சிறிது தினவும் உண்டு; வேறு எக்காரிய மும் இங்கே எனக்கு இல்லை; இதுவே என்னுடைய வருகைக்குக் காரணம்" என்று கூறினான்.

5. தசரதன் பரசுராமனை வேண்டிக் கூறியவைகள் யாவை?

**முன்னுரை**

தசரதன் தான் வணங்கிக் கூறியவைகளைப் பொருட்படுத்தாது இராமனிடம் நேரே சென்று போர் முரசு கொட்டும் பரசுராமனைப் பார்த்து, இராமன் மேல் வைத்த பேரன்பினாலும், பரசுராமனின் வலிமையின் பெருமையாலும் என்ன விளையும் என்பதை நினைத்து, கோபம் தணிக என பரசுராமன் திருவடிகளின் விழுந்து வேண்டினான்.

**(அ) மும்மூர்த்திகளே உனக்கு நிகராகார்; மனிதர் எம்மாத்திரம்**

இராமனிடம் சென்று போர் வீரம் பேசும் சமயத்தில் தசரதன் சோர்வு கொண்டவனாகி, பரசுராமனை நோக்கி, இப்பூவுலகம் முழுமையையும் வெற்றி கொண்டு, ஒரு முனி வனாகிய காசிபனுக்கு வழங்கிய அருள் உடையவனே! சிவனும் திருமாலும் நான்முகனும் உனக்கு ஒரு பொருளாக ஆக மாட்டார் கள் என்றால், கேவலம் சிறிய மனித இனத்தில் தோன்றிய நாங்கள் ஒரு பொருளாவோமா! ஆகோம். **"இவனும் எனதுயிரும் உனது அடைக்கலம்."**

**(ஆ) சினப்பதற்குரிய தீமை செய்தானில்லையே; வலியவர் அல்லேம்**

நெருப்பைக் கக்குகின்ற ஒளியையுடைய கோடாலிப் படை யைத் தாங்கியவனே! சினங் கொள்ளுபவர் சினங்கொள்ளுவதென் பது தீவினை செய்தவர்களிடம் அல்லவா! இந்த இளையவனான இராமன் கல்வி முதலியவற்றால் உண்டான செருக்கினால் தங்களிடத் தில் அறிவு சோர்ந்து செய்த குற்றப்பாடான காரியங்கள் எவை யேனும் உண்டா? சண்டை செய்வதற்கு உரிய வலிமையை உரியவர் களிடத்தேயன்றி எளியவர்களாகிய எங்களிடத்தில் வலிமை மிக்க வராகிய தங்கள் போன்றாரது வலிமை என்ன பயனுடையது ஆகும்!

**(இ) தனிநாயகம் உடையவனே! தணித்த கோபத்தை எழுப்பாதீர்!**

மிகுதியும் சிறந்த தவத்தை உடையவனே! நான் கொடுக் கிறேன். இதனை ஏற்றுக்கொள் என்று காசிப முனிவனுக்கு நீ

கொடுக்கும் ஏழு பகுதிப்பட்ட இவ்வுலகம் முழுமைக்கும் ஒப்பற்ற தலைமைத் தன்மை உடையவனே! ஒரு பொருளுக்கும் உதவாத எங்கள் மேற் சினப்பதை விட்டு விடுவீராக. குளிர்ந்த நீண்ட கடல் சூழ்ந்த இந்நிலவுலகில் வாழ்கிற நரர்களாகிய மனிதர்களைக் காப்பவரான அரசர்களை அழிப்பது என்ற கோபத்தை இப்பொழுது தானே தணித்துக் கொண்டாய்; மீளவும் கோபிப்பது முறையாகுமா?

**(ஈ) நின்செயல் வீரமும் வலிமையும் உடையது அன்று**

வெளியில் நின்றவர் இகழ்ந்து கூறுமாறு நடுநிலைமையிற் பொருந்தாத வலிமை என்பது என்ன பயனுடையது ஆகும்! அச் செயல் சிறந்த அறத்தினால் விளைந்த செயலாகுமா? உலகில் நிலைபேறு பெற்ற அறம் எவ்வழி நிற்கின்றதோ, அவ்வழியில் நிலை பெற்று நின்று உயர்ந்த புகழைப் பொருந்துவது அல்லவா வீரம்! ஆகையால் வீரனே! காலில் விழுந்து அபயம் என்று சரணடைகிற எங்களையே கொல்ல முற்படும் இது வலிமை என்று சிறப்பித்துச் சொல்லப்பெறும் வலிமை ஆகுமா?

**(உ) அடிமைகளாகிய எங்கள் குலத்தை வேரறுக்காதே என வேண்டல்**

கல் தூணோடு மாறுபட்ட தோளை உடையவனே! என் மகனாகிய இராமன் உன்னிடத்திற் பகைமையோடு பொருந்தியவன் அல்லன். அப்படிப்பட்டவனுடைய உயிர் உடம்பை விட்டு நீங்குமானால், என்னுடைய சுற்றத்தவர்களோடும், யான் ஆளும் நாட்டைச் சார்ந்தவர்களோடும், உயர் வாழ்வு எனப்பெறும் விண்ணுலகத்தைப் பொருந்துமாறு இறப்பேன்; புகழ் வீரம் முதலியவற்றால் உயர்ந்தவனே! தங்களின் அடிமையாகிய யான் குல முழுவதும் வேரோடு அழிந்து போகும்படி என்னை அழிக்காதே? இவ்வேண்டு கோளைத் தங்களிடம் விண்ணப்பித்துக் கொண்டேன் என்றான்.

**முடிவுரை**

மேற்சொன்னவாறு குறையிரந்து அவன் காலில் விழுந்து வணங்குபவனாகிய தசரதனையும் இகழ்ந்து, நெருப்பு எழுமாறு கோவித்து, பொன்னுடையை அணிந்து கொண்டிருக்கிற இராமனுக்கு நேராகச் சென்ற பரசுராமனுடைய நிலையை உணர்ந்து, தன்னால் இனிச் செய்யக்கூடிய செயல் ஒன்றும் இல்லை என்பதை நினைத்து உயிர் தளர்ந்து இடியோடு கலந்து வருகின்ற மின்னலினால் தளர்ச்சியுறும் ஒளி பொருந்திய பாம்புபோல மனம் வெம்பினான் தசரதன்.

6. பரசுராமன் இராமனிடம் சென்று கூறியன யாவை?

அல்லது

*பரசுராமன் இராமனிடம் கூறிய வில்லின் வரலாற்றையும் வழிப்பகை முடித்த வரலாற்றையும் எழுது.*

அல்லது

*மிதிலையில் இராமன் முறித்தது ஊனவில் என்பதையும் வழிப்பகை உடையேன் உம்மிடம் என்பதையும் பரசுராமன் இராமனிடம் எவ்வாறு உறுதிப்படுத்தினான்?*

**முன்னுரை**

தசரதன் வணங்கி வேண்டும் குறைபாட்டினை மதியாது இராமனிடம் சென்ற பரசுராமன் வில்லின் வரலாற்றையும், அரசர்களிடம்

தாம் வழிப்பகை கொண்ட வரலாற்றையும், இப்போது வந்திருக்கிற வரலாற்றையும் முறைமை பெற எடுத்துக் கூறினான்.

**பரசுராமன் கூறத் தொடங்குதல்**

மானத்தையே உடைமையாகக் கொண்ட முடி மன்னவனாகிய தசரதன் அறிவு சோர்வதைத் தன்னுள்ளே சிறிதும் கருதாதவனாய், தானே அவ்வாறு அறிவு சோர்ந்து அவலப்பட இருப்பதற்குரிய சூழ்வினை இருக்கிறது என்று அறிந்து அதனை விலக்கும் வகையற்றவனாய், இராமனை நோக்கி, உடுக்கையைக் கையிற் கொண்டவனும் உமையை மணந்தவனும் ஆகிய சிவபெருமானை அக்காலத்திற் பொருந்திய வில்லானது குறையுடையது; அவ்வில்லின் பழைய வரலாற்றை நீ கேள்' எனத் தொடங்கினான்.

**வில்லின் வரலாறு**

**(அ) தெய்வ தச்சன் செய்த விற்கள் இரண்டு**

ஒற்றைச் சக்கரத்தையுடைய தேரின்மேல் வருகின்ற சூரியனாகும் என்று சொல்லும்படியாக ஒளியை வீசுவன; தண்ணீராகிய கருப்பத்தினை மிகுதியும் கொண்டதால் வருந்தி வரும் மேகங்கள் தவழ்கின்ற வடக்கின்கண் உள்ள மகா மேரு மலையினுடைய வலிமையை ஒத்தன; நிலவுலகத்தில் உள்ளவர்களால் அணுகிப் பார்ப்பதற்கும் இயலாத தெய்வத்தன்மை வாய்ந்த சிற்பத் தொழிலைச் செய்யும் விசுவகருமனாற் செய்யப்பெற்றவை; எவற்றையும் தமக்கு உவமையாகப் பொருந்தாதவை; ஆகிய இரண்டு விற்கள் முன்னாளில் இருந்தன.

**(ஆ) திருமாலும் சிவனும் ஏற்றுக் கொண்டமை**

அவற்றுள் ஒன்றை உமையின் கணவனான சிவபெருமான் விரும்பி ஏற்றுக் கொண்டான்; திருவிக்கிரமன் என்ற வடிவம் எடுத்து நின்று இவ்வுலகம் முழுவதையும் ஈரடியால் வென்றவனும் சக்ராயுதத்தை உடையவனும் ஆகிய நெடியவன் எனப்பெறும் திருமால் மற்றைய ஒரு வில்லைத் தன் அங்கையில் ஏற்றுக் கொண்டான். இருவரும் இரண்டு விற்களையும் ஏற்றுக் கொண்டார்கள் என்ற செய்தியை அறிந்த தேவர்கள், இரண்டனுள் வலிமையைப் பொருந்துவது எது? என்ற வினாவைப் பிரமனிடம் அக்காலத் தேவை,

**(இ) பிரமனால் சிவன் திருமால் போர் மூளல்**

தேன் ஒழுகுகின்ற அழகிய தாமரை மலரில் வீற்றிப்பவனாகிய பிரமனும் தேவர்களுடைய எண்ணம் சிறந்தது என்பதை எண்ணி, பொருந்துவதாகிய ஒரு தந்திரத்தினால் எல்லாரினும் மேம்பட்டவர்களாய், காரண நிலையில் ஒருவராய், காரிய நிலையில் இருவராய் அமைந்த சிவன் திருமால் ஆகிய இருவரையும் வலிமை பொருந்திய கொடிய வில்லைக் காரணமாக வைத்து ஒரு பெரும் போரில் ஈடுபடும்படிச் செய்து விட்டான்.

**(ஈ) சிவனுடைய வில் ஒடிதல்**

பிரமனுடைய ஏற்பாட்டின்படி, திருமாலும் சிவனும் இரண்டு விற்களையும் வளைத்துத் தனித்தனியே நாண் ஏற்றினர். எழுவகைப்

பட்ட உலகங்களும் பயப்பட, திசைகள் நிலைகுலைய, வெம்மையான கோபத் தீயானது பொங்கியெழ, கடுமை சிறிது சிறிதாக அதிகப் படும்படிப் போரைச் செய்கின்ற சமயத்தில், முப்புரங்களையும் எரியூட்டிய சிவபெருமான் கைக்கொண்ட கட்டமைந்த வில் சிறிதே ஒடிந்தது ஆக,

### (உ) சிவன் இந்திரனிடத்தும் திருமால் இரிசிகனிடத்தும் விற்களைத் தருதல்

சிவன் கோபம் கொண்டு மீண்டும் போரைத் தொடங்கும் சமயத்தில் தேவர்கள் இடை நின்று தடுக்கவே, நெற்றிக் கண்ணனாகிய சிவபெருமான் தேவர்களுக்கு அரசனாகிய இந்திரன் கையில் அவ்வில்லைக் கொடுத்தான்; வெற்றியை வெளிப்படுத்திக் காட்டிய திருமாலும் அந்த வில்லைத் தவத்திற் சிறந்த 'இரிசிகன்' என்னும் முனிவனிடம் கொடுத்தான்.

### (ஊ) தன்னிடம் இருப்பது திருமால் வில் எனல்

இரிசிக முனிவன் தன் மகனும் என் தந்தையும் ஆகிய ஜமதக்னி முனிவனிடம் கொடுக்க, என் தந்தை எனக்குக் கொடுக்க வந்த வரலாற்றையுடைய கட்டமைந்த வில்லாகும் இது.

[இதுவரை பரசுராமன் வில்லின் வரலாறு கூறுதல். தனி வினாவாக வந்தால் இத்துடன் எழுதி முடிக்க.]

நீ இவ்வில்லை எளிமையாக வளைப்பாயானால் வலிமை வாய்ந்தவனே! உன்னோடு ஒப்பாகும் பெருமை வாய்ந்த மன்னர்கள் இல்லை. யான் நினைத்து வந்த போரையும் உன்னோடு செய்ய மாட்டேன். இன்னும் யான் சொல்ல விரும்புவது ஒன்று உண்டு. அதையும் கேட்பாய்.

## வழிப்பகை கொண்டதும் தணித்ததும் இராமனிடம் வந்ததும்

### (அ) வழிப்பகைக்குக் காரணம்

பெருமை உடையவனே! முன்னமேயே ஒடிந்து பழுதுபட்ட வில்லை ஒடித்த உன் வலிமையை ஆராய்ந்து பார்ப்பது மனவூக்கத்தைக் கொடுக்கும் செயல் அன்று. வேறும் உண்டு. கேள். அரசன் வழிவந்த உம்மிடம் தொடர்ந்து வரும் வழிப்பகையும் உடையேன். முற்காலந் தொட்டு வரும் ஞானிகளும் நூல்களும் குற்றம் இல்லாதவன் என்றும், சினத்தை அறவே ஒழித்தவன் என்றும் என் தந்தையைப் பற்றிப் புகழா நிற்கவும் அவற்றை நோக்காமல் கொடிய அசுரனைப் போன்ற மன்னன் ஒருவன் என் தந்தையைக் கொல்ல, யான் மலங் கலங்கி,

### (ஆ) வழிப்பகை தணித்தல்

இருபத்தொரு தலைமுறை நிலவுலகத்திலுள்ள முடியுடை அரசர்களையெல்லாம், பொருந்தி எழுகின்ற கோடாலி என்னும் படையின் கூறிய நுனியினால் வேர் அற்றுப் போகும்படி பயிர்களுக்குக் களை பறித்தல் போல அழித்து, அவ்வரசர்களுடைய தசையிலிருந்து எழுகின்ற இரத்த வெள்ளம் ஆகிய நீர்த்துறையிலே வேத விதிப்படி என் தந்தைக்குச் செய்ய வேண்டுவனவான நீர்க்கடன்களைச் செய்து முடித்தேன். அது முதலாகத் தடுப்பதற்கரிய என் கோபத்தை அடக்கி வந்துள்ளேன்.

### (இ) இராமனிடம் வந்தது

என்னுல் வெற்றி கொள்ளப்பெற்ற இவ்வுலகம் முழுவதையும் காசிப முனிவனுக்குத் தானமாகக் கொடுத்தேன்; மிக்கெழுந்த பகைவர்களை யெல்லாம் ஒடுக்கினேன் ; அளவற்ற பெருந் தவங்களைச் செய்து ஒப்பற்ற அருமையான மகேந்திர மலையில் தங்கி இருந்தேன். நீ மிதிலையில் வில்லை ஒடித்ததனுல் உண்டாகிய சப்தத்தை அவ்விடத்தே என் செவியில் வந்து படுதலால் அறிந்து கோபங்கொண்டு வந்தேன். வலியை உடையையாளுல் உன்னெடு போர் செய்வேன்; வளைத்திடு என் வில்லை'' என்று கூறினுன்.

**முடிப்புரை**

இவ்வாருகப் பரசுராமன் வில்லின் வரலாற்றையும், தான் மன்னர்களோடு வழிப்பகை கொண்ட வரலாற்றையும் இப்போது இராமனிடம் வந்த வரலாற்றையும் எடுத்துக் கூறினுன்.

### 7. இராமன் பரசுராமனை வெற்றிகொண்ட முறையை எழுதுக:

பரசுராமன் வில்லின் வரலாற்றையும், மீண்டும் சினங்கொண்ட வரலாற்றையும் கூறியபின், இராமன் புன்முறுவல் செய்து, அறம் ஒளிவீசுகின்ற முகத்தையுடையவனுகி,திருமால் தன் வலிமைதோன்ற எடுத்துப் பயின்றதும், வெற்றியைத் தந்ததும் ஆகிய அந்த வில்லைத் தருக என்று இராமன் கூற, அவ்வில்லைப் பரசுராமன் கொடுத்தான். வீரனுகிய இராமபிரான் அவ்வில்லை எளிமையாக வாங்கி, கையிற் கொண்டவனுகி, நெருங்கிய பெரிய சடையை உடைய பரசுராமன் அஞ்சும்வண்ணம் அவ்வில்லைத் தன் தோள் வலிமை பொருந்த வளைத்து,

பரசுராமனைப் பார்த்து, ''நிலவுலகில் உள்ள அரசர்கள் எல்லாரையும் கொன்ருய்; நான் அதையே காரணமாக வைத்து உன்னைப் பழி வாங்க வேண்டும் என்று கருதிக் கொல்லலாம். ஆயினும் நீயோ வேதங்களை உணர்ந்து தெளிந்த மேன்மை மிக்க ஜமதக்னி முனிவனின் மைந்தன்; அன்றியும் தவவேடம் மேற்கொண்டுள்ளாய். ஆகையால், உன்னைக் கொல்லுவது முறையன்று; எனினும், யான் இவ்வில்லில் வைத்த இந்த அம்பானது குறி தவறிப் பிழைப்பது அன்று. எனவே இந்த அம்புக்குக் குறிப் பொருளாவது யாது? விரைவாகச் சொல்லுக'' என்றனன்.

தான் கொடுத்த வில்லை எளிமையாக வாங்கி, வலிமையாக வளைத்த செயலைக்கண்டு அஞ்சிய பரசுராமன், ''உன்னுல் விடப்பெற இருக்கிற இந்த அம்பானது இப்பொழுது குற்றம் அடையாதவாறு என்னுல் செய்யப்பெற்ற தவங்கள் எல்லாவற்றையும் தனக்கு இலக்காகக் கொண்டு அழிக்கக்கடவது'' என்றுகூற அப்பொழுது இராமன் தன்னுடைய கையைச் சிறிதே தளர்த்த, அந்த அம்பும் விரைந்து சென்று அப்பரசுராமனின் குற்றமற்ற தவத்தையெல்லாம் வாரிக் கவர்ந்து கொண்டு மீண்டது,

இவ்வாருக இராமன் பரசுராமனை வென்ருன்.

### 8. பரசுராமன் இராமனை வணங்கிக் கூறியன யாவை?

வில்லைத் தருக என்றதும் பரசுராமன் கொடுத்தான். தான் கொடுத்த வில்லை எளிமையாக வாங்கி வலிமையாக வளைத்த செய

லேக்கண்டு அஞ்சிய பரசுராமன், இராமனைப்பார்த்து, "அறநெறியை மேற்கொண்டவனே! என்மேற் சினவாது ஒழிக. நீயே இவ்வுலகில் உள்ளார் யாவர்க்கும் ஆதி என்பதை இப்பொழுதே யான் அனுபவத்தால் தெரிந்து கொண்டேன். துளசி மாலையையும் சக்கரப் படையையும் கொண்டவனே! வெண்மையான பிறைச் சந்திரனை உடைய சிவபெருமான் முன்னே கையிற் பிடித்த வில்லானது வெவ்வேருக நொறுங்கி அழியுமேயல்லாமல் பேராற்றலுடைய உம் கையாற் பிடித்தற்கும் அமையக் கூடியதோ!

பொன்ஞற் செய்து கட்டப்பெற்ற வீரக் கழலையும் அழகைக் கொண்ட தோளையும் உடையவனே! நீ ஒளி விடுகின்ற சக்கரப் படையை உடைய திருமால் என்பது உண்மையே. ஆகையால் இவ்வுலகத்துக்குத் துன்பம் என்பது யாது உள்ளது? என்றால் இப்போது கொடுக்கப்பெற்ற உன்னுடைய வில்லும் உன் வலிமைக்கு ஏற்றது ஆகாது.

நன்ருகக் கழுவித் தூய்மை செய்யப்பெற்ற நீலமணியின் நிறத்தை ஒத்த மேனியனே! வளப்பம் அமைந்த துளசி மாலையை அணிந்தவனே! எவ்வுயிர்க்கும் ஆதரவாளன் என நின்ற புண்ணியனே! நீ கருதிய பொருள்கள் எல்லாம் கருதியவாறே இனிது முடிவனவாகுக" என்று இவ்வாருகப் பாராட்டுதல்கள் கூறி விடை பெற்றுப் போனுன்.

9. இராமனுல் துயரந் தீர்க்கப்பெற்ற தசரதனின் மகிழ்ச்சி நிலையை விவரிக்க.

### இராமன் தசரதன் துயர் தீர்த்தல்

பரசுராமன் செருக்கும் தவமும் அழிந்து சென். பிறகு குற்றமற்றவனுகிய இராமன் ஐந்து வகையான அறிவும் அழியப் பெற்று, உயிரும் வருந்தி, தனக்காக மனம் கசிந்து கொண்டிருக்கும் தந்தையாகிய தசரதனை எல்லையின்றிக் கரைபுரண்டெழுகின்ற பேரன்புடன் வணங்கி, அவனுக்கு முன்னுல் சென்று நின்று அவன் இறங்கியிருந்த பெரிய துயரமாகிய கடலிலிருந்து கரையேறும்படி செய்தான்.

### தசரதன் துன்பக் கடலிலிருந்து இன்பக் கடலில் விழுதல்

பரசுராமன் வருகையால் ஐந்து வகைப்பட்ட அறிவையும் இழந்திருந்து மீண்டும் வெளிப்படும் உணர்வை உடையவனும், துன்பம் நீங்கிக் களிப்பை மிகுவிக்கின்ற மதம் பொருந்திய யானைப் படைகளை உடையவனும் ஆகிய தசரதன் நடுவிற் சிறிது நேரம் மூழ்குவதற்கு அருமையான துன்பமாகிற பெருங் கடலின் எல்லையைக் கண்டறிந்தவன், இப்போது களிப்பு என்னும் கரையில்லாத கடலிடையே மீண்டும் மூழ்கினுன்.

### தசரதன் மகிழ்ச்சிச் செயல்

அன்பு சிறிதும் இல்லாத உள்ளத்தையுடைய அப்பரசுராமன் கையிலிருந்த கட்டமைந்த வில்லைத் தான் வாங்கிக் கொண்டு, அவனுக்கு ஒப்பற்ற பழியை நல்கிய உயர்ந்தவனுகிய இராமனை அணைத்து நின்று உச்சி மோந்து அருவிபோல நீர் பெருகுகின்ற தன்னுடைய கண்கள் என்று சொல்லப்பெறும் கும்பங்களால் நீராட்டினுன்.

**தசரதன் மகிழ்ச்சிக் கூற்று**

இச் சிறு வயதில் வஞ்சனை கலவாமல் செய்து முடித்த இவ்வாண்மைக்குக் காரணமான செயலை அம்மூவுலக மக்களும் ஒன்றாகச் சேர்ந்து முயன்று செய்து முடிக்க எண்ணினாலும் செய்து முடிக்கக் கூடியதோ! முடியாது. இவ்விளைஞனாகிய இராமனே நல்வினை தீவினைகளைச் செய்தவர்களுக்கு இவ்வுலகப் பயனையும் மறுவுலகப் பயனையும் வகுத்துத் தருபவனாகிய மெய்ப்பொருள்; பரம் பொருள் என்று மகிழ்ந்து கூறினான்.

## 10. பரதன் பாட்டன் வீடு சென்ற முறையை எழுதுக

பரசுராமன் தோற்றுச் சென்றதும் தேவர்கள் வந்து பூ மழை பொழிந்தனர். வந்த தேவர்களுள் ஒருவனான வருணனிடம் பரசுராமன் தந்த வில்லைக் கொடுத்துப் பாதுகாக்க என்று சொல்லிய இராமன் அனைவரோடும் அயோத்தி புகுந்தான்.

அயோத்தியை அடைந்து எல்லாரும் தத்தமக்குரிய இன்ப வாழ்வை அனுபவித்து வரும் நாளில் ஒரு நாள் தசரதன் பரதனைப் பார்த்துப் பொருள் பொதிந்த செய்தி ஒன்றைச் சொல்ல முற்பட்டான்:

"ஐயனே! நின்னுடைய பாட்டனாரின் கட்டளை ஒன்று உண்டு. நும்மைக் காண்பதற்கு விரும்பிய ஒரு கருத்துடையர் ஆகையால் அணிகலன்கள் ஒளி செய்யும் மார்பை உடைய பரதனே! குளத்தில் சங்கு ஒலிக்கின்ற நீர் வளஞ் சூழ்ந்த கேகய நாட்டை அடைக என்று கூறினான் தசரதன்.

தசரதன் கட்டளையிட்ட அளவில் பரதன் தசரதனை வணங்கிச் சென்று இராமபிரானுடைய திருவடிகளாகிய பூக்களைத் தலையிலே அழகு பெற அணிந்து கொண்டு சென்றான். அந்த இராமபிரானை அல்லாமல் தனக்கு வேறு உயிர் அங்கே இல்லையாகையால் நீங்குதல் இல்லாத உயிரை விட்டுப் பிரிந்து உடம்பு மட்டும் தனியே சென்றாற் போலப் பரதன் இராமனை விட்டு விட்டுப் போய்விட்டான்.

பிடரி மயிர்கள் விரிந்த குதிரைகள் பூட்டிய தேரினையுடைய 'யுதாசித்து' என்று சிறப்பாகக் கொண்டாடப் பெறுகிற சேனைகளையுடைய அரசன் பக்கத்தில் வரச் சென்று இளையவனாகிய சத்துருக்கனோடும் ஏழு நாட்களிற் சென்று, குளிர்ந்த நீர்வளத்தையுடைய கேகய நாட்டை அடைந்தான்.

## 11. இடஞ் சுட்டி விளக்குக.

### (அ) இன்றே வரும் இடையூறது நன்றாய்விடு மென்றான்

**இடம் :** தசரதன் மிதிலையில் இராமன் சீதை ஆகியோர்களுக்குத் திருமணம் முடித்து, கௌசிகன் வடநாடு நோக்கிச் சென்றபின், சேனைகளோடும் மக்கள் மருமக்களோடும் புறப்பட்டு அயோத்தி நோக்கி வருகிறான். வரும்போது மயில் முதலிய வலமும், காகம் முதலிய இடமும் சென்று தீய குறியை உண்டாக்கின. அப்போது நிமித்தம் வல்லவனைக் கூப்பிட்டு இதன் கருத்து யாது என்று தசரதன் கேட்க, நிமித்திகன் கூறிய வார்த்தை இது.

**விளக்கம் :** நின்றே எல்லாப் பறவைகளின் மனத்தோடும் தன்னை இணைத்துவரக் கூடியவைகளைத் தெரிந்துரைக்கும் ஆற்றல்

சான்ற நிமித்திகன் இக்குறிகளைக் கண்டு இப்பொழுதே ஒரு இடையூறு வரும்; ஆனால் அது நமக்கு நன்மையாகவே முடியும் என்றான். இது பரசுராமன் தடையாக வருவதையும் அவனால் இராமனுக்கு நாராயணன் வில் கிடைப்பதாகிய நன்மையையும் உணர்த்தியது.

(ஆ) ''இவனும் எனதுயிரும் உனதபயம் இனி''

**இடம் :** தசரதன் இராமனோடு அயோத்தி சென்று கொண்டிருக்கும்போது பரசுராமன் வருகிறான். பரசுராமன் வரவுகண்டு அஞ்சிய தசரதன் காலில் விழுந்து வணங்கவும் மதியாதவனாகி நேரே இராமனிடம் செல்லுகிறான். பரசுராமனால் இடையூறு வரும் என்று கருதிய தசரதன் பரசுராமனை நோக்கிக் கூறிய தொடர் இது.

**விளக்கம் :** பரசுராமனே மும்மூர்த்திகளும் உன் வலிமைக்கு முன் எம்மாத்திரம்? அவ்வாறிருக்க சிறு மானிடர்கள் உனக்கு ஒரு பொருளாகும் தன்மையினரோ? இல்லை. எனவே எங்களை அழிக்க வேண்டாம். இந்த இராமனும் என்னுடைய உயிரும் உன்னுடைய அடைக்கலப் பொருள் என்று கூறினான்.

(இ) ''எளியோரிடை வலியார்வலி என்னாகுவது''

**இடம் :** பரசுராமன் வருகையைக் கண்ட தசரதன் மிகவும் அஞ்சி அவன் காலில் விழுந்து கெஞ்சவும் மதியாது இராமனிடம் சென்று நின்றதைக் கண்ட தசரதன் பலவாறாக அவனிடம் கெஞ்சிக் கதறி இராமனை விட்டு விடுக என்று வேண்டும்போது இவ்வாறு கூறுகிறான்.

**விளக்கம் :** கோபம் கொள்வது என்று சொன்னால் அது தீமை செய்தான் இல்லை. அடுத்து வலிமை காட்டிப் போர் செய்வது என்பது ஒத்த நிலையில் வலிமை செய்தவர் மேல்தான். இவன் தீமை உடையவர்களிடத்தில் அமைய வேண்டுமேயல்லாமல் வலியவர்கள் எளியவர்கள் மேல் போர் செய்து காட்டும் வலிமை என்ன வலிமை எனப் பெயர் பெறும். என்று கூறி எளியவர்களாகிய எங்களிடம் தங்கள் வலி என்ன பயனுடையதாகும்; ஒரு பயனும் உடையதாகாது என்றான்.

(ஈ) ''குலத்தோடற முடியேல் இதுகுறை கொண்டனென்''

**இடம் :** மேலே உள்ளனபோல் எழுதுக.

**விளக்கம் :** தசரதன் பரசுராமனைப் பார்த்துக் கல்லினும் வலிய தோளையுடையவனே! இங்கே நிற்கும் என் மகன் தீவினையோடு—பகைமையோடு தொடர்புடையவனல்லன். இவன் இறந்தானேயானால் என்னுடைய சுற்றத்தாரோடும், என்னுடைய நிலத்தில் வாழ்கின்ற மக்களோடும் யான் இந்நிலவுலகை விட்டு உயர்ந்த வாழ்வு எனப்பெறும் மேலுலகம் சென்று விடுவோம். (இறந்து விடுவோம்) எனவே நெடியவனே! உன்னுடைய அடியவனாகிய என்னைக் குலத்தோடு வேரற்றுப் போகுமாறு செய்து முடிக்க வேண்டாம்; இதுவே என்னுடைய வேண்டுகோள் என்று வணங்கிக் கூறினன்.

(உ) ''மலைகுவென் வல்லையாயின் வாங்குதி தனுவை''

**இடம் :** சீதையை மணந்து அயோத்தி திரும்பும் இராமனைப் பரசுராமன் வழியில் எதிர்ப்பட்டு, நீ வில் முறித்த சபதம் கேட்டு வந்தேன் என்பது முதலாகத் தன் வில்லின் வரலாற்றையும், தான் வந்த வரலாற்றையும் கூறி, இவ்வாறு கூறுகிறான்.

**விளக்கம் :** பரசுராமன் தன் வரலாறு கூறிய பிறகு ஓட்டை வில்லை ஒடிப்பது வீரமாகாது. நான் வெற்றியால் பெற்ற இவ்வுலகை முனிவனுக்குத் தானமாக ஈந்தவன். நீ வல்லவன் என்பது உண்மையானால் உன்னோடு யானும் சண்டை செய்வேன்; இந்த வில்லை வாங்கி வளைப்பாய் என்று கூறினன்.

(ஊ) "வேதியா விறுவதே யன்றி வெண்மதிப்
பாதியான் பிடித்த வில் பற்றப் போதுமோ"

**இடம் :** சினந்தெழுந்து வந்த பரசுராமன் தன் வரலாறு தன் வில் வந்த வரலாறு எல்லாம் கூறி நின்றபோது, இராமன் தருக வில்லை என்றான். பரசுராமன் கொடுத்தான். எளிமையாக அவன் வாங்கியதையும், வலிமையால் வளைத்தமையையும் கண்ட பரசுராமன் இத்தொடர்களைக் கூறினன்.

**விளக்கம் :** இராமனே! உன்னை யான் அறியாது கூறினேன். இவ்வுலகுக்கெல்லாம் ஆதிகாரணன் நீயே! என்பதை இப்போது அனுபவமாகக் கண்டேன். சிவன் தந்த வில் ஒடிந்து அழிந்து போகுமே யல்லாமல் உம்மால் பற்றிப் பிடிப்பதற்கு உரிமை உடையதாக ஆகுமோ? ஆகாது என்பதாம். வெண்மதிப் பாதியான்—வெண்மையான பிறைச் சந்திரனை அணிந்தவன்.

(எ) எண்ணிய பொருளெலாம் இனிது முற்றுக

**இடம் :** பரசுராமன் இராமனிடம் தோற்று, தன் தவம் முதலினைவகளோடு செருக்கையும் இழந்து, உண்மை உணர்வு வந்ததும், வந்தவன் இராமனல்லன்; இறைவனே என்பதையும் உணர்ந்து, தொழுது விடை பெற்றுப் போகும்போது இவ்வாறு கூறிச் சென்றான்.

**விளக்கம் :** இராமனாக என் முன் நிற்கும் நீயே ஆதிப்பொருள். அனைத்துயிர்களையும் காவல் செய்பவனாகிய நீயே ஏதோ காரணம் பற்றி நேராக எழுந்தருளி வந்திருக்கின்றாய். உனக்கு ஆசி கூறுவார் யாருளர்? உனக்கு என்று ஒன்றும் வேண்டிலாய்! ஏதோ ஒரு காரியத்தை நிறைவேற்றுவான் வேண்டி இங்கே வந்துள்ளாய்; நீ எண்ணிய காரியங்கள் இனிமையுடையனவாக முற்றுப் பெறுவனவாகுக" என்று சொல்லிச் சென்றான் பரசுராமன்.

# 6. கலிங்கத்துப்பரணி

**1.** சோழர் படைகளும் கலிங்கர் படைகளும் எதிர்த்து நின்ற முறையைப் பொதுமுறையில் கலிங்கத்துப் பரணி ஆசிரியர் எவ்வாறு காட்டுகிறார்?

கலிங்கத்துப் பரணியில் போர்பாடியது என்ற தலைப்பில் காளிக்கு ஒரு கலிங்கப் பேய் கூறுவதாக அமைத்து, கலிங்க நாட்டில் சோழர் படைக்கும் கலிங்கப் படைக்கும் நடைபெற்ற போர்முறையை அமைத்துக் காட்டுகிறார் ஆசிரியர் செயங்கொண்டார். முதல் ஐந்து தாழிசைகளில் ஆசிரியர் இருதிறத்துப் படைகளும் எவ்வாறு

எதிர்த்து நின்று போர் புரியத் தொடங்கின என்பதைப் பொது முறையாக அமைத்துக் காட்டுகின்றார்.

(1) கலிங்கப் படைகளும் சோழப் படைகளும் தொடங்குக போரை, தொடங்குக போரை என்று முழக்கமிட்ட மாறுபாட்டை உண்டாக்கும் பேரொலி, கடலொலியை வென்றது; குதிரைக் கூட்டத்தை விடுங்கள், யானைக் கூட்டத்தை விடுங்கள் என்று எழுப்பும் பேரொலி முன் சொன்ன ஒலியினும் சிறந்து விளங்கிறது.

(2) அச்சம் உண்டாகும்படி வீரர்கள் கோடுகளை உடைய வில்லிற் பூட்டிய கயிற்றை இழுத்து ஒலி செய்தார்கள். அவ்வொலியினால் திசையிடங்கள் பிளவுபட்டன; இளைஞர்களாகிய வீரர்கள் போர்க்களத்தில் உண்டாக்கிய பெருமுழக்கம் உலகினர் காதுகளைச் செவிடுபடச் செய்தது.

(3) கடலோடு கடல் மோதுவதுபோல இருதிறத்து (க் காலாட்) படைகளும் தம்முள் எதிர்த்தன. மறித்து வீசும் அலைகளோடு அலைகள் சண்டை செய்வன போன்று குதிரைகளோடு குதிரைகள் சண்டையிட்டன.

(4) பெரிய மலைகளோடு மலைகள் போர்முனையிடத்து எதிர்ப்பது போல மதம் பொருந்திய யானைகளும் யானைகளும் முனைத்தன. கூட்டமாகிய மேகங்கள் மேகங்களோடு எதிர்த்தனபோல் தேர்களும் எதிர்த்து நின்றன.

(5) தம்முள் இனம் ஒத்த புலிகள் புலிகளோடு தம்முள் ஓசையிட்டுச் சண்டை செய்வனபோல, ஒத்த வீரர்களோடு வீரர்கள் விற்றொழிற் சண்டையை மேற்கொண்டார்கள். சிங்கங்களோடு சிங்கங்கள் அடர்த்தெழுந்து போர் புரிவனபோல அரசரும் அரசரும் தேர்களும் எதிர்த்தனர்.

இவ்வாறாக இருதிறத்துப் படைகளும் ஒன்றோடொன்று எதிர்த்து நின்று போர் புரிந்த முறையை எடுத்துக் காட்டினார் ஆசிரியர் செயங்கொண்டார்.

2. செயங்கொண்டார் கலிங்கப்போர் நிகழ்ந்த போர்க்களத்தை மழைக்களமாக ஆக்கிக் காட்டுவதை எடுத்து எழுதுக.

(1) போர்க்களத்தில் வீரர்களின் கண்களிலிருந்து முதிர்ச்சி பெற்ற சினமாகிய தீயானது தோன்றியது. அத்தீயிலிருந்து மின்னலாகிய ஒளி பிறந்தது. அம்புகளை விளைவிக்கும் வில்லிலிருந்து உண்டாகும் நாண் ஒலி இடியோசையென இடித்தது. கூர்மை செய்யப் பெற்ற அம்புகள் எனப் பெறும் பெரிய மழை பொழிந்தது.

(2) இரத்தமாகிய நதி, போர்க்களத்தில் பரந்தது. இரத்த வெள்ளத்தில் குடல் வரிசைகள் நுரைபோல மிதந்தன. யானையினுடைய துணிக்கப்பட்ட உடல் துண்டங்கள், குருதியாற்றுக்காக அடுக்கி வைக்கப்பெற்ற கரைகளைப் போல இரு பக்கங்களிலும் கிடந்தன.

இவ்வாறாக, செயங்கொண்டார் போர்க்களங்களில் நடைபெறும் பொது நிகழ்ச்சிகளை வைத்தே மேகம், இடி, மின்னல், மழை, ஆறு, அதிற் படிந்தோடும் நுரை, அவ்வாற்றின் கரை முதலியவைகளைச் சுவைபெற அமைத்துக் காட்டினார்.

**3. கலிங்கத்துப் பரணியில் போர்க்களத்தைத் தீக்களமாக அமைத்துக் காட்டும் முறையை விளக்குக.**

**1. யானைப் போரால் உண்டாகும் நெருப்பு**

மலைகளே இவைகள் என்று கண்டோர் கூறும் வண்ணம் உள்ள யானைகள் தந்தங்களோடு தந்தங்கள் எதிர் நிற்கப் பொருதன. அவ்வாறு போர் செய்யும் மதம் பொருந்திய யானைகளின் தந்தங்களின் இடையே உண்டாகும் நெருப்போடு நெருப்பும் எதிர் மோதும்போது ஒளியையுடைய நெருப்புப் பொறிகள் தெறித்து விழுகின்றன. அப்பொறிகளால் யானைமேல் இருந்து நிழலைச் செய்யும் கொடிகள் நெருப்புப் பற்றி எரிந்தன.

**2. குதிரைகள் முகமாகிய நெருப்பு**

விரைவாக வீசுகின்ற காற்றின் தன்மையை அடிப்படையாகக் கொண்டு யுகத்தின் கடைசிக் காலத்தில் உலகம் முழுவதையும் உண்ணுவதற்காக ஒளிவிட்டு எழுகின்ற, விரைந்து செல்லுகின்ற வடவைத் தீயைப் போர்க்களத்தில் சண்டை செய்தற்குப் பொருந்திய குதிரைக் கூட்டத்தின் முகத்தில் வைத்திருந்தது.

**3. தீக்களம் தீப்படு கழைவனமாதல்**

கடல் அலைகளைப்போன்ற படை வரிசைகள் அணியாக அமைத்து வைக்கப்பற்ற போர்க்களம் தீக்களம் எனவே அமையும். மேலும், ஒப்பு இல்லாத விற்படைகளிலிருந்து வரும் அம்புகளின் முனைகள் மோதும்போது அவைகள் எரிகின்றன. எரிகிற நெருப்பினில் அப்போர்க்களம் தீப்பற்றிய மூங்கிற் காட்டை ஒத்திருப்பினும் இருக்கும்.

இவ்வாறாக, செயங்கொண்டார் யானைகளின் கொம்புகள் உராய்வதால் எழும் நெருப்புக்கள் தங்களுக்குள் மோதுவதால் எழும் சிறு துண்டுகளின் செயலும், குதிரை முகத்தில் உள்ள நெருப்பும் இணைந்து போர்க்களம் தீக்களயாகும் காட்சியை விவரித்ததோடன்றி, அது மேலும் தீப்பற்றிய மூங்கிற்காட்டை ஒத்து விளங்குகின்றது என்றும் வருணித்துக் காட்டியுள்ளார்.

**4. கலிங்கத்துப் பரணியில் வீரர்கள் சிறப்பான முறையில் செய்து காட்டிய தீரச்செயல்களை விவரித்து எழுது.**

**1. வில் வீரர் காட்டிய வீரம்**

தீப்பட்டு எரிகின்ற மூங்கிற் காட்டில் எப்படியோ அப்படியே சடசட என்று ஒலி எழவும், அம்புப் படையானது நெருப்பைத் தோற்றும் புகையைப் பொழியவும், சில வீரர்கள் கொல்லுவதற்குரிய வில்லில் அம்பினைத் தொடுத்து இழுத்து விடுவாராயினர்.

**2. குதிரை வீரர் காட்டிய வீரம்**

குதிரை வீரர்களின் கால்களையும் தலைகளையும் பகைவர்கள் துணித்ததால் அவை கீழே விழத் தொடங்குமுன் தம் கால்களையும் தலைகளையும் அரிந்த அம்புகளை மார்பில் அணைத்துப் பற்றினர். நீண்டனவாக இருந்த சில அம்புகளை அவ்வாறு கைக்கொண்டவர்கள் நிறைந்த அம்புகளை உயர்ந்து செல்லுமாறு விடுதலால் எதிரே நின்ற அப்பகைவர் உடம்புகள் துணிக்கப் பெற்றன.

**3. வாள் வீரர் காட்டிய தீரச்செயல்**

குதிரை வீரர்கள் கால்களும் தலைகளும் துணிக்கப் பெற்ற வாள் வீரர்கள், காட்டுப் புதர்களை அழிப்பவர் போல எதிரே யிருக்கிற கட்டப்பெற்ற வீரக்கழலை உடைய வீரர்களின் செருக்கு அழியுமாறு வெட்டின காரணத்தால் அவர்களுடைய உடம்பு முழுவதும் இரண்டு பிளவுகள் ஆயின.

**4. யானை வீரர்களின் அறந்தழுவிய வீரச்செயல்**

போர் செய்து கொண்டிருக்கிற வீரர்களின் மார்புக்கு நேராகக் குனிகின்ற யானையின் நெற்றியில் வீரர்கள் தம் ஆயுதங்களால் அடிப்பவர்கள், இக்களிறு எம்முடையது என்று சொல்லி இரு கண்களையும் விழித்து நோக்க; யானைமேல் இருந்த வீரர்கள் இவர்கள் கண் விழிப்பதைப் பார்த்து அச்சத்தால் இவ்வாறு விழிக்கிறார்கள் என நினைத்து அப் படையையுடையவர்களோடு போரிடுவதற்கு வெட்கங் கொண்டு, யானையை அவர்கள் மேல் விடாமல் வேறு பக்கந் திருப்பி ஓட்டிப் போயினர்.

இவ்வாறு வில்வீரர், குதிரை வீரர், வாள் வீரர், யானை வீரர்கள் தனித்தனியே காட்டிய தீரச் செயல்களை ஆசிரியர் சிறப்புற அமைத்துக் காட்டினார்.

5 கருணாகரத் தொண்டைமான் யானை போர்க்களத்தில் முன்னேறியபோது கலிங்கர் நடுங்கிய நிலையை எழுதுக.

அளவு கூறப் பெறாத நிலையில் போரின் நிலைமை முற்றியபோது வண்டை நகரத்தவர்களுக்கு அரசனும்; அரசர்களுக்கெல்லாம் தலை வணங்கிய குலோத்துங்க சோழனின் அமைச்சனும் ஆகிய உலகத்தவரால் புகழப்பெறும் **கருணாகரன்** என்ற பெயருடையவன் தனது ஒரு துதிக்கையையும் இரண்டு கொம்புகளையும் உடைய யானையை முன்னேறச் செல்லுமாறு செலுத்தினான்.

யானை முன்னேறி வருவதைக் கண்ட கலிங்க வீரர், ஒருவர் ஒருவரைவிட வேகமாக ஓடுவதற்கு முந்திக் கொண்டார்கள். அவ்வாறு ஓடுகிறவர்கள் தம் உடலின் நிழலையே, தம்மைத் துரத்தி வரும் பகைவர்களாகிய தமிழர் என்று நினைத்து, மேலும் ஓடுவதற்குப் பயந்தவர்களாய்த் தமிழர்காள் அபயம்; தமிழர்காள் அபயம் என உடல் நடுங்கக் கத்திக்கொண்டு விழுந்து வணங்குபவர் ஆனார்.

6. தோல்வியுற்ற கலிங்க வீரர் சோழனது படைக்கு அஞ்சி உயிர் தப்பிப் பிழைத்த வகையை வரைக.

**1. சமணர் எனச் சொல்லிப் பிழைத்தவர்**

மலைகளையுடைய கலிங்கநாட்டையும் பெரும்பழியையும் ஒன்றாக இணைந்திருக்கச் செய்த புதர்கள் வழியாக விழுந்தடித்து ஓடுவதால் வலிய புதர்கள் இழுத்துப் பறித்த காரணத்தால் சென்றன போக எஞ்சியுள்ள குறை மயிர்களையும் எடுத்துவிட்டு, அப்புதர்களாலேயே இடுப்பிலுள்ள ஆடை உரிக்கப் பெற்றவர்களாய் உள்ள கலிங்கர்கள் தம்மைச் சமண சமயத்தவர் என்று சொல்லிப் பிழைத்தார்கள். இவ்வாறு பிழைத்தவர் பலர்.

**2. வேதியர் எனக் கூறி உயிர் பிழைத்தவர்**

வடிவத்தில் எவ்விதக் குறையாடும் இல்லாமல் இருப்பதற்காகக் கொடிய வில்லின் நாணை மடித்து முப்புரி நூலாக (பூணூல்) ஆக்கிப் போட்டுக் கொண்டு வேதம் விதித்த முறைப்படிக் கங்கையில் நீராட வந்தோம்; வழியில் இங்கே அகப்பட்டுக் கொண்டோம்; எங்களைக் காப்பாற்றுவதோடு இரக்கமுங்காட்டுங்கள் என்று கைகுவித்து இறைஞ்சி உயிர் பிழைத்தார் பலர்.

**3. சாக்கியரை அறியீரோ எனக் கூறித் தப்பித்தனர்**

இரத்த நீரிற் படிந்து கிடந்த கொடிச் சீலையை எடுத்து இதுவே அடையாளமாக அமையும் என்று புதிய காவியாடையாக அமைத்துக் கொண்டு உடுத்தி, மேலேயும் போர்த்துக்கொண்டு, தம்முடைய தலைமுடியை எடுத்து முண்டிதம் செய்துகொண்டு, சாக்கியர்களாகிய எங்களை இவ்வுடையைப் பார்த்தவுடனேயே நீங்கள் அறியமாட்டீர்களோ? என்று கூறுவதோடு நில்லாமல் பொய்யான எடுத்துக்காட்டுக்களையும் காட்டித் தப்பினார்கள் பலர்.

**4. பாணர் எனப் பிழைத்தார் பலர்**

சேனைகள் மடிந்து கிடக்கும் போர்க்களத்தைப் பார்த்துத் திகைத்து நின்றோமாகிய நாங்கள் தெலுங்கர்கள் என்று சொல்லி, வில்லுடைய கலிங்கர்களுடைய யானையின் மணியைத் தாளமாகப் பிடித்துப் பாடி ஆடி நாங்கள் 'பாணர்' வகுப்பினர் என்று சொல்லிப் பிழைத்தார் பலர்.

**5. சுவர் ஓவியங்கள் பிழைத்தன**

மேற்சொன்னவர்களைத் தவிர வேறு எவருமே பிழைத்தாரிலர். ஏழு பகுதியைச் சார்ந்த கலிங்கம் முழுவதிலும் சுவர்களில் ஓவியர்கள் எழுதி வைத்த உயிரற்ற உடல்களைத் தவிர மற்றை எல்லா உடம்புகளையும் தொட்டு இழுத்துப் பிடித்து அறுத்தார்கள் வீரர்களான தமிழர்கள்.

7. இடஞ்சுட்டி விளக்குக.

**(அ) "அழல்படு கழைவனம் ஒக்கினும் ஒக்கும்"**

**இடம் :** கலிங்கத்துப் பரணியில் 'போர் பாடியது' என்ற தலைப்பில் போர்க்கள நிகழ்ச்சியை விவரிக்கிறார். போர்க்களம் சற்றேறக் குறையத் தீக்களமாகவே தோன்றுகிறது என்று குறிப்பிடும் ஆசிரியர் போர்க்களம் **"அழல்படு கழைவனம் ஒக்கினும் ஒக்கும்"** என்று கூறுகிறார்.

**விளக்கம்:** கடல் அலைகளைப் போன்ற படை வரிசைகள் அணியாக அமைத்து வைக்கப்பெற்ற போர்க்களம் தீக்களம் எனவே அமையும். மேலும் ஒப்பு இல்லாத விற்படைகளிலிருந்து வரும் அம்புகளின் முனைகள் மோதும்போது அவைகள் எரிகின்றன. விற்கள் எல்லாம் மூங்கிலில் செய்யப்படுவன ஆகையால், அவைகள் எரியும்போது அப் போர்க்களம் தீப்பற்றிய மூங்கிற்காட்டை ஒத்திருப்பினும் ஒக்கும் என்றார். தழல்-நெருப்பு; கழைவனம்-மூங்கிற்காடு.

**(ஆ) "கங்கையாடப்போந்தகப்பட்டோங் காத்தோம் பென்று"**

**இடம் :** சோழர் படைகளும் கலிங்கர் படைகளும் மோதிப் போரிட்டன. சோழர் படைகள் வெற்றியை எய்தியபோது கலிங்கர் ஓடிப் பிழைத்தனர். ஓடிப் பிழைத்தபோது பல வகையான கோலங்களில் நின்று இசைந்தவற்றைச் சொல்லிப் பிழைத்தோடுகின்றனர். அப்படிப் பிழைத்தவர்களுள் ஒரு சிலர் **"கங்கையாடப் போந்து அகப் பட்டோம் காத்தோம்பு"** என்று சொல்லிப் பிழைத்தார்கள்.

**விளக்கம் :** வடிவத்தில் எந்தவிதமான குறைபாடும் இல்லாமல் இருப்பதற்காகக் கொடிய வில்லின் நாணை மடித்து முப்புரிநூலாக ஆக்கிப் போட்டுக்கொண்டு வேதம் விதித்த முறைப்படிக் கங்கையில் நீராட வந்தேம் வழியில் இங்கே அகப்பட்டுக் கொண்டேம். எங்களைக் காப்பாற்றுவதோடு இரக்கங் காட்டுங்கள் என்று கைகுவித்து இறைஞ்சி உயிர் பிழைத்தார்கள் பலர்.

**(இ) "அறியீரோ சாக்கியரை உடை கண்டால்**

**இடம் :** கலிங்கத்துப் பரணியில் போர் பாடியது என்ற பகுதியில் கலிங்க வீரரும் சோழ வீரரும் செய்த போரை அமைத்துக் காட்டினர். போர் முடிவில் கலிங்க வீரர் பயந்தோடினர். பயந்தோடும் போது ஒரு சிலர் **"அறியீரோ சாக்கியரை உடை கண்டால்"** என்று சொல்லி உயிர் பிழைத்தனர்.

**விளக்கம் :** சில கலிங்கர்கள், இரத்த நீரில் படிந்து கிடந்த கொடிச் சீலையை எடுத்து இதுவே அடையாளமாக அமையும் என்று காவியாடையாக அமைத்துக் கொண்டு உடுத்தி, மேலேயும் போர்த்துக்கொண்டு, தம்முடைய தலைமுடியை எடுத்து முண்டிதம் செய்து கொண்டு, "சாக்கியர்களாகிய எங்களை இவ்வுடையைப் பார்த்தவுடனேயே நீங்கள் அறிய மாட்டீர்களோ" என்று கூறுவதோடு நில்லாமல் பொய்யான எடுத்துக் காட்டுக்களையும் காட்டிப் பிழைத்தார் சிலர்.

# 7. வில்லி பாரதம்

1. நாட்டைப் பெறுவதற்காகப் பாண்டவர் கூட்டிய அவையில் நடைபெற்றன யாவை?

(அல்லது)

தருமன் உலூக முனிவனைத் தூது அனுப்பிய வரலாற்றை எழுது.

(அல்லது)

இழந்த நாட்டைத் திரும்பப் பெறும் முயற்சியிற் பாண்டவர் செய்த முதற் செயல் என்ன?

**முன்னுரை**

பாண்டவர்கள் பன்னிரண்டு ஆண்டுகள் காட்டு வாழ்க்கையும் ஓராண்டு கரந்துறை வாழ்க்கையும் முடித்து வெளிப்பட்ட பிறகு உபப்பிலாவிய நகரம் என்ற இடத்திற் கூடி, கண்ணன் பலராமன்

ஆகியோரையும் மற்றுமுள மன்னர்கள் பலரையும் அழைத்து ஆலோசனை செய்தார்கள்.

**கண்ணன் உரை**

கரிய மாமுகில் எனப் பெறும் கண்ணன் சூதாட்டத்தினால் துரியோதனன் கொண்ட நாட்டை மறுபடியும் சூதாட்டத்தினாலேயே அடைதல் அல்லாமல் விற்போர் செய்து உரிமையைப் பெறுவோம் என்று எண்ணினால் அது அரச நீதியன்று. துரியோதனனின் இது பற்றிய கருத்தை ஒரு தூதுவனை அனுப்பிச் சொல்லுதல் மூலமாகத் தெரிந்து கொள்ளலாம். அதுவே நாம் செய்யக் கூடியது என்று கூறினான்.

**பலராமன் உரை**

கண்ணன் கூறிய கட்டுரையைக் கேட்டபின் காமபாலன் எனப் பெறும் பலராமன் "பரியவனான துரியோதனன் இத்தருமனை அச்சபையில் வந்து சேர்ந்த அனைவரும் காணும்படியாக, பெருஞ்சூதாட்டத்தினால் வென்று அவனுக்குரிய அழகிய நாட்டைத் தனக்குரிமை உடையதாக ஆக்கிப் பல ஆண்டுகள் அந்நாடு தன் அடிமை நாடாக இருக்குமாறு ஆட்சி செய்து வந்தான். வெற்றியால் பெற்றது; பல்லாண்டுகள் ஆட்சி செய்த, உரிமை உடையது ஒன்றை வன்மையால் கவர்வதற்கு எண்ணும் இக்கெட்ட புத்தி மிகவும் கொடுமையுடையது என்று கூறினான்.

**சாத்தகியின் உரை**

பலராமனுக்கும் கண்ணனுக்கும் இளையவன் சாத்தகி. பலராமன் கூறியதைக் கேட்ட இளையவனான சாத்தகி பலராமனைப் பார்த்து, உன்னுடைய இதயம் மிகக் கருமை உடையது ஆயினும், உனது நாக்கிலிருந்து வெளிப்பட்ட வார்த்தை உன் வடிவத்தைவிட மிக வெள்ளையாக இருக்கிறது என்று மனம் வருந்தும்படியான வார்த்தைகள் பலவற்றை எடுத்து உரைத்தான்.

**கண்ணன் இடைமறித்தலும் முடித்தலும்**

பலராமனும் சாத்தகியும கூறும் வார்த்தைகளைக் கேட்டவனான, பொருந்தியவர் துன்பங்களை வேரறக் களையும் பெருமழை எனப் பெறும் கண்ணன், முதலாவதாக இருவரையும பார்த்து நீங்கள் இருவரும் உங்கள் வார்த்தைகளை நிறுத்திவிடுங்கள் என்று கூறிச் சந்து செய்து வைத்தபின், கட்டப்பெற்ற உரலையும் இழுத்துச் சென்று இரு மரங்களைச் சாய்த்து, மரமென நிற்குமாறு சாபமடைந்திருந்த இருவருக்கும் நற்கதியருளிய தண்ணளியனான கண்ணன் அவண் அமர்ந்திருந்த சிறப்புக்கள் மிக்க உலூக முனிவனை நோக்கி, உயர்ந்த பிறப்புடைக் குதிரை, வலிய தேர், உரலை நிகர்த்த கால்களையுடைய யானை ஆகியவற்றின் படைகளைக் கொண்ட திருதராட்டிரனிடம் தூதாகச் சென்று, இப்பாண்டவர் மனக் கருத்தைச் சொல்லி அவர் மனம் தெரிந்து மீள்க என்று சொல்லித் தம் பதியாகிய துவாரகைக்குச் சென்றான்.

**அரசர்கள் அன்புரை**

கண்ணன் இவ்வாறு சொல்லிச் சென்ற பிறகு அவையில் வீற்றிருந்த மன்னர்கள் தருமபுத்திரனை நோக்கி, "முரசக் கொடியோனே!

இவ்வுலூக முனிவன் நீ கூறியவைகள் எல்லாவற்றையும் இயல்போடும் இனிமையோடும் திருதராட்டிரனிடம் எடுத்துக் கூறிய பின்னரும் அத்திருதராட்டிரன் நினக்குச் சேரவேண்டிய நாட்டைத் தர மறுத்தானாகில் அச்செய்தியைக் குறிப்பிட்டு முன்னதாகவே எங்களுக்குத் திருமுகம் அனுப்புக" என்று கூறிவிட்டு தத்தம் மாநகர் நோக்கினர்.

**தருமன் உலூகனைத் தூதனுப்புதல்**

அரசர்களும் சென்ற பிறகு, தருமன் கண்ணன் கூறிய கட்டளை தவறுபடாத வகையில் உலூக முனிவனை நோக்கி, தாங்கள் அத்தினாபுரம் சென்று வருக எனக் கூறித் தொழுது வணங்கி, மணம் பொருந்திய மாலையையுடைய வீடுமன் எம்பெரிய தந்தை திருதராட்டிரன், மெய்ஞ்ஞானியாகிய விதுரன், வேதியர்க்கரசனாகிய துரோணர் ஆகியோர்களின் திருவடிகளை நாங்கள் வணங்கினோம் என்பதை முதலாவதாகக் கூறிப் பின்னர் எம் உரிமையை வெளிப்படுத்தும் சொல்லைப் பணிவோடு கூறியருள்க என்று சொல்லி உலூகனை அனுப்பி வைத்தான்.

2. உலூக முனிவன் கூறிய தூதுரையை எழுது.

(அல்லது)

பாண்டவர் கருத்தைத் திருதராட்டிரன் அவையில் உலூகன் எவ்வாறு வெளிப்படுத்தினான்?

(அல்லது)

'வந்தவாறு உரைத்தருள்க' என்று வீடுமன் முதலியோர் கேட்டபோது உலூகன் கூறியது என்ன?

**முன்னுரை**

நான்கு வேதங்களிலும் வல்லவனும், வேதம் வல்லார்க்கெல்லாம் முந்தி இருக்கும் தகுதி வாய்ந்தவனும் ஆகிய உலூகன் திருதராட்டிரன் அவையை அடைந்ததும் துரியோதனன் எதிர்கொண்டு வணங்கி உபசரித்து அவனை ஓர் ஆசனத்து இருத்தினான். விந்தம் அன்ன தோள் வீடுமன் முதலியோர் அவனை அன்புடன் வணங்கித் "தாங்கள் இவண் எழுந்தருளியதற்கு என்ன காரணம்" என்று கேட்டார்கள்.

**உலூகன் கூற்று**

(1) பன்னிரண்டாண்டுகள் காட்டு வாழ்க்கையும் ஓராண்டுக் காலம் கரந்துறை வாழ்க்கையும் முடித்துப் பாண்டுவின் மக்களாகிய ஐவரும் வெளிப்பட்டனர் அக்காலத்தில் அரசவையிற் கூடியிருந்த அரசர்களுக்கு முன்னால் சூதுபோர் நடத்தித் தோற்று அதன் மூலமாக உமக்கு அளித்திட்ட காரணத்தால் நீவிர் பெற்று ஆண்டுவந்த நாட்டை உம்முடைய மொழிப்படி அவர்களுக்கு நீங்கள் அளிக்கப் போகிறீர்களா? அளிக்க மாட்டீர்களா?

(2) முன்னேயும் நீங்கள் மேற்கொண்டது சூதாட்டம் என்னும் போரே; சேனைகள் மோதிச் செய்யும் சண்டையை எண்ணாமல் இன்னமும் சூதுபோரே செய்து இப்பொழுதும் வெற்றி தோல்வியை நிச்சயிக்கலாம் என்று கருதினாற் சூதுபோரையே செய்திடலாம்.

அதனால் மாறுபாடும் விளையாது; இனி முன்போலவே வாழ்வும் பெருமையுறும்.

(3) சூதுபோரை எண்ணாமல் மோதுபோரை எண்ணிப் பாண்டவர்களோடு சண்டை செய்வோம் என்று உங்களுக்கு நேரக்கூடிய அழிவைக் கருதாமல் வெற்றியையே நினைத்து எதிர்த்தீர்களேயானால் உங்களால் அவர்களை வெல்லுதல் முடியாது. வலிமை பொருந்திய வீமனும் அர்ச்சுனனும் மனம் வெதும்பிச் சினங்கொண்டு போர்க்களம் புகுந்தால் நீங்கள் எல்லாரும் அழிந்தே போய்விடுவீர்கள். இது திண்ணம் முனிவனாகிய யான் கூறிய வார்த்தையும் பொய்க்குமோ? பொய்க்காது.

### முடிவுரை

மேலே கண்டவாறு உலூக முனிவன், உங்கள் மொழியைக் காப்பாற்றுங்கள்; இல்லையேல் வழிகள் இரண்டே; ஒரு வழிதான் உங்களுக்குரியது; மற்றைவழி உங்களின் அழிவழி எனக் கூறி முடித்தான்.

3. உலூகனின் தூதுரையைக் கேட்டு வெகுண்ட துரியோதனனுக்குக் கூறப்பெற்ற அறிவுரைகள் யாவை?

(அல்லது)

தூதுரை கேட்டு வெகுண்ட துரியோதனனுக்கு விதுரன், துரோணன் வீடுமன் கூறிய அறிவுரைகள் யாவை?

### முன்னுரை

உலூக முனிவன் தூதுரையைக் கூறும்போது துரியோதனனைப் பார்த்து, சூதுபோர் கருதாமல் மோதுபோர் கருதினால் நீங்கள் அனைவரும் அழிந்தே போவீர்கள் என்று கூறிய வார்த்தைகளைக் கேட்டதும் துரியோதனன் வெகுண்டு பூனையைப்போல் இருந்த இடத்தில் இருந்து கொண்டு பேசுதல் வீரம் ஆகாது. நெருங்க இருக்கும் போரில் ஆண்மையும் தோள்வலிமையும் யாருக்கு உண்டு என்பதைக் கண்ணாற் கண்டு கொள்ளலாம் என்று உரைத்தான்.

### விதுரன் அறிவுரை

கல்வியறிவும் அனுபவ அறிவினால் தூய்மை செய்யப்பெறாத நெஞ்சமும் இல்லாத அத் துரியோதனன் கூறிய மொழிகளைக் கேட்டுவில் விதுரன் துரியோதனனைப் பார்த்து, "இவ்வுலூகன் மொழிப்படியே பாண்டவர்களுக்குரிய நாட்டை வழங்காமல், அற்பத் தன்மை வாய்ந்த விதூஷகர்களிலும் தாழ்ந்தவர்களும் அறிவில்லாதவர்களும் ஆகியோர் சொல்லும் வார்த்தைகளை நீ கேட்டு நடக்கத் தொடங்கினால், இலக்குமி தூரத்தே நீங்குவாள் ஆவாள்! உன் சுற்றமும் சேனையும் கெடும்" என்று அறிவுரை கூறினான்.

### துரோணன் அறிவுரை

"நிலையான பொருள் ஒன்று உண்டு. அது யாராலும் எப்பொழுதும் அழிக்க இயலாதது அது வகுத்த வாய்மை நெறியில் வழுவாது சென்றாலே எல்லா வெற்றியையும் அடைய முடியும். அவ் வாய்மையைத் தவறி சேனைகளையும் வலிமையையும் துணையாகக் கொண்டு, அவ்வாய்மை நெறி தவறாதவர்களுடன் வாட்போர் செய்ய எண்ணுதல் பெரும் பிழை. அத்தகைய போரில் இறங்குவா

யாஞல் அர்ச்சுனனுடைய வில்லானது அம்பு தைத்த இடங்களிலெல்லாம் இரத்தம் பீறிட்டெழுமாறு அம்புகளை விடும்'' என்று துரோணன் கூறினான்.

**வீடுமன் அறிவுரை**

கங்கை மகனான வீடுமன் துரியோதனனைப் பார்த்துக் கூருமல் திருதராட்டிரனைப் பார்த்துக் கூறுகிருன். அரசனே! காட்டில் இத்துணைக் காலம் வாழ்ந்தவர்களும் நின் மக்களே. அவர்களுக்கு வரையறை செய்யப்பெற்ற காலமும் கழிந்துவிட்டது. இன்னும் அவர்களுக்குரிய நாட்டினைக் கொடாமல் வெம்மையாகிய போரினைச் செய்ய விரும்பினை யென்ருல், நாளை வர இருக்கும் போரில் அருச்சுனனுக்கு எதிர் நின்று வளைந்த வில்லை எடுத்து வளைப்பதற்கு வல்லமையுள்ளவர் உன் பக்கத்தில் யார் இருக்கிருர்கள் என்று வெகுண்டு கூறினான்.

**முடிவுரை**

இவ்வாருக விதுரன், துரோணன், வீடுமன் முதலியோர் துரியோதனனுக்கு நேராகவும் திருதராட்டிரன் மூலமாகவும் அறிவுரை கூறினர்.

**4. வீடுமன் வெகுண்டுரையால் விளைந்த விபரீதங்கள் யாவை?**

(அல்லது)

**கன்னனுக்கும் வீடுமனுக்கும் நேர்ந்த வாதங்களை எழுது.**

(அல்லது)

**கன்னன் வீடுமனை எதிர்த்துக் கூறியது என்ன? அதற்கு வீடுமன் கூறிய பதிலுரை என்ன?**

**முன்னுரை**

வீடுமன் திருதராட்டிரனை நோக்கி வெகுண்டுரைக்கும்போது "நாளை வர இருக்கும் போரில் அருச்சுனனுக்கு எதிர் நின்று வில்லை வளைக்கும் ஆற்றல் உள்ளவர் எவர் இங்கே இருக்கிருர்கள்? என்று குறிப்பிட்டான். இச்சொற்களே கன்னனுக்கும் சினத்தை உண்டாக்கின.

**கன்னன் எதிருரை**

கண் சிவந்த கன்னன், "நீ (வீடுமனே) முன்னேயே நகம் இழந்து போன புலியைப்போல இராமபிரானுல் வலிமை யழிக்கப்பெற்ற பரசுராமனை அவனிடத்தில் கற்ற வித்தையாலேயே அவனை வென்ருய் என்ற ஒன்றைத் தவிர வேறு என்ன வீரச்செயல் செய்து இந்நாட்டைப் பெருமைப் படுத்தியுள்ளாய்? எந்த வீரச்செயலை நீ செய்ததாக வைத்துக் கொண்டு நீ எல்லாரையும் இகழ்ந்து பேசுவது? என்று எதிர்த்துக் கூறினான்.

**வீடுமன் பதிலுரை**

கன்னன் கூறியதைக் கேட்ட வீடுமன், அவனைப் பார்த்து, அடா! வேள்விக் குண்டத்தில் தோன்றிய திரௌபதியின் சுயம்வரத்தில் நீங்கள் அனைவரும் கூடியிருந்த சபையில் திரௌபதி அருச்சுனனுக்கு மாலையிட்டாள். உடனே நீ மற்றை அரசர்களோடும் சேர்ந்து

அந்த அர்ச்சுனனோடும் வில்லை வளைத்து நாண் ஏற்றிப் போர் செய்தாயே! வெற்றியல்லவா பெற்றாய்!

அது கிடக்க, பாண்டவர்கள் காட்டில் வாழ்ந்தபோது தன் பெருமையை விளம்பரப்படுத்திக் கொள்வதற்காக ஆடம்பரத்தோடு சென்ற துரியோதனனை இந்திரன் ஏவலால் சித்திரசேனன் பிடித்துத் தூக்கிக்கொண்டு போகும்போது, அவனை மேற்கொண்டு செல்லாதவாறு தடுத்து நிறுத்தி, அவனை வெற்றி கொண்டு, அவன் பிடியிலிருந்து துரியோதனனை வீமன் மீட்டபோது நீ எங்கேயிருந்தாய்! ஆமாம் ஆமாம்! வலிமையை விளக்கும் போர்முனையில் வீமனையும் வெற்றிக் கொண்டவனல்லவா நீ!

விராட நகரத்தில் பாண்டவர்கள் மறைந்து வாழ்ந்தபோது, இங்கேதான் பாண்டவர் இருக்க வேண்டும் என நினைத்து, அந்நாட்டின்மேற் படையெடுத்து, பசுக் கூட்டங்களையெல்லாம் நீங்கள் கவர்ந்து கொண்டு வரும்போது ஒன்று தெரியாத இளைஞனை உத்தரன் தேர் ஊர்ந்துவர ஒருவனாக வந்து நீங்கள் கவர்ந்துவந்த பசுக்களையெல்லாம் ஒரு நொடிப்பொழுதில் மீட்டுக்கொண்டு சென்றானே அப்போதும் நீ அவன்முன் நெடுநேரம் எதிர்த்துப் போர் புரிந்தாய்! ஆனால் நாளை மணமும் தேனும் உமிழும் துளசியை அணிந்தவனும் எல்லாவற்றுக்கும் மூல காரணமானவனும் ஆகிய கண்ணனே தேர் செலுத்த, அஞ்சியோடுபவர்களின் மேல் அம்பு விடுதல் இல்லை என்ற போர் அறத்தில் வழுவாதவனாய் அர்ச்சுனனே நாளைப் போரில் சண்டை செய்ய வந்து நிற்கும்போது அவனை வெல்லக்கூடியவர்கள் உன்னைத் தவிர வேறு யாரேனும் இருக்கிறார்களா? இல்லை.

முடிவுரை

இவையே வீடுமன் வெகுண்டுரையால் விளைந்த விபரீதங்களாம்.

5. இடஞ்சுட்டி விளக்குக.

**(அ) "வேத்து நீதியது அன்றால்"**

**இடம்:** பாண்டவர்கள் கூட்டிய சபையில் கண்ணன், பலராமன், மன்னர்கள் ஆகியோர் மந்திராலோசனைக்கு வரவழைக்கப் பெற்றிருந்தனர். அப்போது கண்ணன் முதல் முதலாகப் பேச முற்படும்போது 'அரச நீதி இது' என்பதைச் சுட்டிக்காட்டிப் பேச முற்பட்டான். இது கண்ணன் கூறிய வார்த்தைகள்.

**விளக்கம்:** முள்ளை முள்ளால் எடுத்தல் போல; வஞ்சனையை வஞ்சனையால் வெல்ல வேண்டும் என்பதுபோல, "சூதாட்டத்தினால் துரியோதனன் கவர்ந்த நாட்டைச் சூதாட்டத்தினாலேயே கொள்ளுதல் வேண்டுமேயன்றி, விற்போரினால் சண்டை செய்து மீட்போம் என்பது அரச நீதியாகாது" என்று கண்ணன் தருமன் அவையில் முந்துற எடுத்து மொழிந்தான்.

**(ஆ) "வன்புற வாங்குதற்கு எண்ணும் இத் தீமதி கொடிது"**

**இடம்:** கண்ணன் துரியோதனன் சூதினால் கவர்ந்த நாட்டை மீளவும் நாம் பெறுவதற்குச் சூதாட்டத்தை மேற்கொள்ளலே முறை ஆயினும் துரியோதனன் கருத்தை ஒரு தூது அனுப்புதல் மூலமாகத் தெரிந்துகொள்ளலாம் என்று கூறியபோது கண்ணனுக்கு அண்ணனாகிய பலராமன் கூறிய வார்த்தைகள் இவை.

**விளக்கம் :** "தருமனை அன்று சபையில் மன்னர் பலரும் காணு மாறு துரியோதனன் பெருஞ் சூதாட்டத்தால் வென்று, அதனுற் கிடைத்த பயனுகிய நாட்டைப் பல ஆண்டுகள் தம்முடைய ஆட்சி யின்கீழ் வைத்து ஆண்டான். இப்பொழுது வலிமை காரணமாக அந்த நாட்டை அபகரிக்க நினைக்கும் இததீய அறிவு மிகவும் கொடு மையானது என்று பலராமன் கூறினன்.

சூது போராயினும் மோது போராயினும் வெற்றியால் விளைந்த பயனை—மேலும் பல்லாண்டுகள் அனுபவித்த உரிமையுடையதாகிய அப்பயனை வலிமையால் மீளவும் கைக்கொள்ள நினைத்தல் தவறு என்பது பலராமன் கருத்து.

**(இ) "நாவில் விளையும் மாற்றம் நின் திருவடிவினும் மிக வெள்ளை யாகியது"**

**இடம் :** பலராமன் துரியோதனனிடமிருந்து நாட்டை வலிமை யாற் கவர எண்ணும் தீய மதி மிகவும் கொடுமையுடையது என்று கூறியபோது இளையவனுன சாத்தகி என்பான் பலராமனைப் பார்த்து "நின் நாவில் விளையும் மாற்றம் நின் திருவடிவினும் மிக வெள்ளை யாகியது என்ருன்.

**விளக்கம் :** பலராமன் உடல் நிறம் வெள்ளை. வெண்மை என்ப தற்கு வேறும் ஒரு பொருள். அறிவு இல்லாமை.

சாத்தகி இகழ்ச்சியாக, உன்னுடைய இதயம் மிகக் கருமை யுடையதே என்ருலும் உன் வாயிலிருந்து வருகிற வார்த்தை உன் வடிவத்தைவிட மிக வெள்ளையாக இருக்கிறது. அதாவது பொரு ளற்ற வார்த்தை என்ற குறிப்புப்பட எடுத்து மொழிந்தான்.

**(ஈ) பின்னமும் பிறவாது இனிப் பண்டுபோற் பீடுறும் பெருவாழ்வும்**

**இடம் :** உலூக முனிவன் கண்ணன் கட்டளைப்படியும் தருமன் வேண்டுகோளின்படியும் தூதுரைப்போனுகச் செல்ல உடன்பட்டு அத்தினபுரத்தை அடைந்து துரியோதனன் அவையில் தூது உரைக் கும்போது இவ்வார்த்தைகளை எடுத்தியம்புகின்ருன்.

**பொருள் :** உலூகன் துரியோதனனைப் பார்த்து, நல்ல வளமை யான நாட்டை உடையவர்களே! முன்னேயும் நீங்கள் மேற்கொண் டது சூதுபோரே. மோதுபோரைக் கருத்திற் கொள்ளாமல் சூது போரையே செய்ய வேண்டும் என்று கருதினுற் பொருதிடும். அவ் வாறு சூதுபோரையே மேற்கொண்டால் உங்களுக்குள் வேறுபாடு இனிமேல் தோன்ருது. மேலும் முன்போலவே உங்களுடைய பெரு மையமைந்த வாழ்வும் மேலும் பெருமையை அடையும் என்று கூறினன்

**(உ) முனிவர் சொற் பொய்க்குமோ? பொய்யாதே**

**இடம் :** உலூக முனிவன் தூது உரைக்கும்போது அவர்களுக் கெல்லம் சந்தேகத்தை உடைய ஒன்றை வன்மையாக எடுத்துச் சொல்லி, ஒருவேளை அவர்கள் இதை ஒத்துக் கொள்வார்களா? மாட்டார்களா? என்ற ஐயம் உண்டானபோது இத்தொடரை எடுத்துக் கையாளுகின்ருன்.

**விளக்கம் :** உலூகன் துரியோதனனைப் பார்த்து, உங்களுக்கு அடுத்தது சூதுபோரே. அதைவிடுத்துப் பாண்டவர்களோடு மோது

போரையே செய்வோம் எனக் கருதி அதனால் உங்களுக்கு வரும் அழி வைக் கருதாமல் வெற்றியையே நினைத்துச் சண்டைக்கு வந்தால் உங்களால் வெற்றிபெறுதல் இல்லை. வலிமை பொருந்திய வீமனும் விசயனும் மனம் வெம்பிப் போர்க்களம் புகுந்தார்களானால் நீங்கள் அனைவரும் அழிந்தே போய்விடுவீர் என்று சொல்லிய பிறகு, சொல் பவன் முனிவன்; முனிவன் சொல் பொய்யாகுமோ? ஆகாது என்று இறுதியில் முடித்துக் கூறினான்.

**(ஊ)** "பூசைபோல் இருந்துழி உரைக்கும் ஈது இகலதன்று இருவர்க்கும் துன்று பூசலிற் காணலாம் ஆண்மையும் தோள் வலிமையும்"

**இடம் :** உலூக முனிவன் தூதுரை கூறும்போது துரியோத னனைப் பார்த்து, சூதுபோர் நீங்கள் முன்னரும் பொருதுளது; மோது போர் கருதினால் உங்களால வெல்லுவது அரிது. வீமனும் விசயனும் போர்க்களம் புகுந்தால் நீவிர் அனைவரும் பொன்றியே போய் விடுவீர்! நான் முனிவன் முனிவன் சொன்ன சொல் பலித்தே தீரும் என்று கூறினான். இதைக் கேட்ட துரியோதனன் கூறிய வார்த்தைகளே இவைகள்.

**விளக்கம் :** "களத்துக்கு வராமலேயே களத்தில் வந்தால் நாங்கள் வென்றுவிடுவோம் என்று பேசுதல் பூனையின் செயல். இருந்த இடத்தில் இருந்து கொண்டே உறுமுவது பூனையின் செயல். அவ் வாறே நாங்கள் வெல்லுவோம் என இருந்த இடத்தில் இருந்து கொண்டே பேசுதல் வெற்றியாகாது. இருதிரத்தாருக்கும் பொருந் தும் போரில் யார் ஆண்மையும் தோள் வலிமையும் உடையவர் என்பதைக் காணவேண்டுமேயல்லாமல் இவ்வாறு பேசுதல் ஆண்மை யன்று" என்று துரியோதனன் கூறினான்.

**(எ) புல் விதூடகரினும் உணர்விலாதவர் புகலும் வாசகம் கேட்டல்**

**இடம் :** உலூக முனிவன் தூதுரையைக் கேட்டுச் சினங் கொண்டு போர் நிகழ்வதற்கு முன்னமேயே வெற்றியைப் பற்றிப் பேசுவது வீரம் ஆகாது: இது பூனையின் செயல் என்று கூறிய துரி யோதனன் வார்த்தையைக் கேட்ட விதுரன் கூறிய வார்த்தைகள் இவை.

**விளக்கம் :** **விதூஷகன்**-பெரிய அரசவைகளில் மன்னர்க்கு அவ் வப்போது சிரிப்பை உண்டாக்குவதையே பொருளாகக் கொண்டு, பிறரை நிந்தித்துப் பேசுவதையோ பரிகசித்துப் பேசுவதையோ கொள்வார்கள். இவர்கள் புல்லின் தன்மை வாய்ந்தவர்கள். புல்லின் தன்மை மேலே வயிரம் உடையதாக இருந்து உள்ளே தொளை புடையதாக இருத்தல். இவர்கள் மேல் நோக்கில் பல்துறைப் புலமை உடையவர்களாகத் தோற்றுவார்கள். உள் நுழைந்து பாரத் தால் அறிவற்றவர்களே.

விதுரன் துரியோதனனுக்கு அறிவுரைக் கூற முற்பட்டபோது துரியோதனா இந்த முனிவன் வார்த்தையைக் கேட்டு நட; அவ்வாறு இல்லாமல் இழிந்த தன்மையுடைய விதூஷகன் போன்ற அறிவில்லா தவர் வார்த்தைகளைக் கேட்டு நடக்க முற்பட்டால் திருமகள் உன்னை விட்டு நீங்கி வெகு தூரத்திற்குப் போய்விடுவாள். சுற்றமும் சேனை யும் கெடும் என்று கூறினான்.

**(எ) "முன்னமே உகிர் இழந்த வெம்புலி என"**

**இடம் :** வீடுமன் திருதராட்டிரனுக்கு அறிவுரைகளை வெகுண்டுரைக்கும்போது, அரசனே! பாண்டவர்களும் நின் புதல்வர்களே! அவர்களுக்கு விதித்த காலவரையறை கடந்த பிறகும் தராமல் போரை நினைப்பது தகுதியாகாது. போர் நேர்ந்தால், அருச்சுனற்கு எதிராக வில்லை வளைப்பவர் உன் பக்கத்தில் யார் இருக்கிறார்கள்? என்றான். அதைக் கேட்ட கன்னன் வெகுண்டு வீடுமனைப் பழித்துரைக்கும்போது இவ்வுவமையைக் கையாளுகிறான்.

**விளக்கம் :** உகிர்-நகம்; நகம் இழந்துபோன கொடிய புலி. வீடுமன் பரசுராமனை வெற்றி கொண்டவன். முன்னமேயே தசரத ராமனால் தவமெல்லாம் கவர்ந்துகொள்ளப் பெற்றுவிட, தவவலிமை ஒன்றும் இல்லாதவனாக இருந்த பரசுராமனை, அவனிடம் கற்ற வில் வித்தையைக் கொண்டே எதிர்த்து வென்றாய். உன்னுடைய வீரம் ஒரு வீரமா? என்ன வீரத்தை நீ சாதித்துவிட்டதாக எண்ணிக் கொண்டு மற்றவர் வீரத்தை இழித்துப் பேசுகிறாய் என்று வெகுண்டுரைத்தான். தசரத ராமனானவன் தவவலிமை முழுவதையும் வாங்கிக் கொண்டுவிடவே தவவலிமை இல்லாத பரசுராமன் நகம் இழந்த புலியைப் போன்றவன் என உவமையாக அமைத்தான்.

**(ஐ) என்ன சேவகம் கொண்டு நீ யாரையும் இகழ்ந்துரைப்பது?**

**இடம் :** வீடுமன் திருதராட்டிரனுக்கு அறிவுரை கூறும்போது, நின் பிள்ளைகளாகிய பாண்டவர்க்கு அரசு தராமல் போரை எண்ணினால் அது தகுதியன்று. போர் மூளுமேல் அருச்சுனற்கு எதிராக நின்று வில்லை வளைக்க யார் இருக்கிறார்கள் என்று கூறியவுடன் கன்னன் சினந்தெழுந்து கூறிய மாற்றம் இவை.

**விளக்கம் :** சேவகம்-வீரச் செயல். "நீ (வீடுமன்) நகமிழந்த புலியென தவமிழந்த பரசுராமனை அவனிடம் கற்ற வித்தையை வைத்தே வென்றாயல்லாமல் இரு குருகுலத்தவர் நன்மைக்காக நீ என்ன வீரச்செயல் செய்திருக்கின்றாய்? என்ன வீரச் செயலை அடிப்படையாக வைத்து நீ எல்லாரையும் இகழ்ந்து பேசுவது" என்று கனன்று கூறினான் கன்னன்.

**(ஒ) "எமதே பார் தங்கள் கானகம் தமது"**

**இடம் :** வீடுமன் அறிவுரை கூற, அதை அடிப்படையாக வைத்துக் கன்னன் வெகுண்டு கூற, அதை எதிர்த்து வீடுமன் கன்னனை இகழ்ந்து கூறியபின், துரியோதனன் முடிவுரையாகக் கூறிய தொடர் இது.

**விளக்கம் :** நாடு எங்களுடையதே; இதுவரை அவர்கள் வாழ்ந்து வருவதற்குத் துணையாக இருந்த காடு அவர்களுடையதே என்று கூறி உலூக முனிவனிடம் நாட்டைத் தர முடியாது என்று முடிவாகக் கூறினான் துரியோதனன்.

6. நும் பாரதப் பாடப் பகுதியிலிருந்து அறியப்பெறும் முற்காலப் போர் நீதிகள் யாவை?

I. சூதினால் கவர்ந்த நாட்டை சூதினாற் பெறவேண்டுமேயல்லாமல், சண்டையாற் பெற எண்ணின் அது அரச நீதியன்று என்று கன்னன் பாண்டவர் அரண்மனையில் நடந்த ஆலோசனையிற் கூறினான்.

II. போர் எதுவாயினும் சரியே. வெற்றி என்று தெரிந்து நாட்டையும் நீண்ட நாட்கள் உரிமை பெற ஆட்சி செய்து வந்த பிறகும் வன்மையால் அந்நாட்டைக் கவர்வது முறையன்று. இதைப் பலராமன் கூற்றால் அறிகிறோம்.

III. இஞ்சி ஓடுகிறவர்கள் மேல் வெற்றிதரும் அம்பினை எய்வது அரச நீதியன்று என்பதை வயவாளி வெருநர் மேல்விடா விசயனை என்று சுட்டுவதால் உணரலாம்.

IV. நிலையான பொருள் என்ற ஒன்று உண்டு. அதுவே சத்யம். அதன் தன்மையே வாய்மை. எனவே சத்ய நெறி தவறாமல் நடப்பவனுக்கே பிற வலிமைகளும் துணை செய்யும். சத்யத்துக்கு மாறாக நடப்பவன் எவ்வளவு வலிமையும் சேனையும் கொண்டிருந்தாலும் வெற்றி அடையான். இக்கருத்துத் துரோணாசாரியின் வாயிலாக வெளிப்படுத்தப்படுகிறது.

# 8. முத்தொள்ளாயிரம்

1. முத்தொள்ளாயிரத்தில் சேரனைப் பற்றிய செய்திகளாக அறிந்தவைகளை எழுது.

(இதற்கு விடை, உரை விளக்கப் பகுதியில் 'சேரன்—தொகுப்புரை' என்ற தலைப்பில் கொடுக்கப்பட்டுள்ளது.)

2. சோழனுடைய நாடு, ஊர், கொடை ஆகியவை பற்றி முத்தொள்ளாயிரத்தால் அறியப்படுவன யாவை?

(இதற்கு விடை, உரை விளக்கப் பகுதியில் 'சோழன் தொகுப்புரை' என்ற தலைப்பில் கொடுக்கப்பெற்றுள்ளது.)

3. பாண்டிய நாட்டின் விளைபொருள்களையும், தலைமைத் தன்மையையும், பாண்டியனின் தெய்வத் தன்மையையும் எழுது.

**முன்னுரை**

பாண்டியன் தமிழ் நாட்டு மூவேந்தருள் ஒருவன். சிவன், உமை, முருகன் ஆகிய மூவராலும் ஆட்சி செய்யப்பெற்ற நாட்டையுடையவன். சங்கம் வைத்துத் தமிழாராய்ந்த பெருமை உடையவன், மீனக் கொடியையும் வேப்பமலர் மாலையையும் உடையவன், செழியன், மாறன், வழுதி, தென்னவன் முதலியன அவனைக் குறிக்கும் பெயர்கள்.

**நாட்டின் விளைபொருள்**

பாண்டியன் நிலத்தில் தோன்றுவன செம்மை சான்ற பல வகை உலோகங்களான இரும்பு, செம்பு, வெள்ளி பொன் முதலியன; ஊரின்கண் தோன்றுவன முத்தமிழ் நூல்கள்; கடலின்கண் தோன்றுவன வெண் சங்கும் முத்துக்களும்; மலைச்சாரலில் கிடைப்பன மதம் பொருந்திய யானைகள்; அவனுடைய கூரிய வேலின் நுனியில் படுவன பகைமன்னர் தம் மாலையணிந்த மார்புகளே.

பாண்டியன் ஐவகை நிலங்களையும் தனக்கு உரிமையாகக் கொண்டு ஆட்சி செய்பவன் ஆதலின் ஐவகை நிலத்துப் பொருள் களும் அவன் முயற்சியின்றியே அவனுக்குக் கிடைப்பன ஆயின என்பதாம். இப்பகுதியில் அவனுடைய ஆட்சிச் சட்டங்களை வரையறுப்பது முத்தமிழ் நூல் என்பதை ஆசிரியர் சுட்டிக் காட்டு கிறார்.

**தலைமைத் தன்மை**

முத்துக்களால் அழகு செய்யப்பெற்ற வெண்கொற்றக் குடையையுடைய பாண்டியனின் நாடு சங்குப் பூச்சிகள் சிந்திய இளங் குஞ்சுகளும், புன்னை மரங்கள் சிந்திய அவற்றின் குவிந்த மொட்டுக்களும் பந்தலைப் போல அழகு செய்யும். இளமை மிகுந்த பாக்கு மரங்களின் பாளைகளிலிருந்து சிந்தின குரும்பைகளும் விளங் கிய முத்துக்களைப் போல் தோற்றமளிக்கும். இவ்வாறு இவைகள் தோற்றமளிப்பதற்குக் காரணமான தலைமைத் தன்மையை உடை யது அந்த நாடு என்பதாம்.

சேர்ந்த இடத்தின் காரணமாகப் பொருள் சிறப்புத் தன்மை எய்துவது போன்று பாண்டிய நாட்டில் அமைந்த தலைமைத் தன்மை யால் சங்குப் பூச்சிகளின் குஞ்சுகள் போன்றவைகளுங்கூட முத்தினைப் போல் தோற்றமளிக்கின்றன என்பது நாட்டின் தலைமைத்தன்மை.

**தெய்வத்தன்மை**

போரின் தொடக்கத்திலேயே நிலைபெற்று விளங்குகின்ற வெற்றி யையும் நிறைந்த ஒளி வீசும் வேலையும் உடைய பாண்டியனை இன் தமிழால் ஆசிரியர் பாடும்பாட்டு, வீரத்திற் குறையாத மயிலை ஊர்தி யாக உடைய முருகனை நாள்தோறும் கடம்ப மலர்மாலையைக் கொண்டு வணங்கித் துதித்தாற் போன்றது.

பாண்டியனை வாழ்த்துவதே இறைவனை வாழ்த்துவதாயிற்று. கடம்ப மலர்மாலை முத்தியளிப்பதன் சின்னமாக அணியப்படுதலின் பாண்டியனைப் பாடும் பாட்டின் பயன் முத்தியே என்பதாம்.

**முடிவுரை**

பாண்டியன் ஐவகை நிலங்களையும் ஆளும் தன்மை பெற்றவன் என்றும் அவன் நாடு உயர்ந்த தலைமைத் தன்மையுடைமையால் அவனைச் சேர்ந்தால் உயர்வு பெறுவோம் என்பதும் பாண்டிய னுடைய தெய்வத்தன்மை முருகனைக் கொண்டு வந்து முன்னே நிறுத்தி முத்தியை அளிக்கவல்லது என்பதாம்.

4. இடஞ்சுட்டி விளக்குக.

**(அ) "புள்ளினந்தன் கைச்சிறகாற் பார்ப் பொடுக்குங்**
**கவ்வை யுடைத்தரோ"**

**இடம்:** முத்தொள்ளாயிரத்தில் ஆசிரியர் சேரனுடைய நாட்டு வளத்தைச் சிறப்பித்துப் பாடுகையில் சேர மன்னனுடைய நாடு போர் ஆரவாரம் போன்ற ஆரவாரம் இல்லாதது என்று கூறிப் பறவை ஆரவாரமே உடையது என்று சுட்டிக் காட்டும்கோது இவ்வரிகளைப் பாடுகிறார்.

**விளக்கம் :** பறவைக் கூட்டங்கள் தம்முடைய கைகளாகிய சிறகுகளால் தம் குஞ்சுகளை அடக்கிக் கொள்ளுவதால் எழுகின்ற ஒலியை உடையது சேரனுடைய நாடு.

சேர நாட்டு வயல்களில் சேறும் நீரும் நிறைந்துள்ளதுன. செவ்வாம்பல் மலர் நீரின்மேல் இதழ் விரித்து மலர்ந்தது. அதனைக் கண்ட பறவைக் கூட்டங்கள் தண்ணீர் நெருப்புப் பிடித்துக்கொண்டது என்று பயந்து தம்முடைய கைகளினால் குஞ்சுகளை அணைத்துக் கொள்ளுகின்றன. அதனால் பெரிய ஆரவாரம் உண்டாகிறது. அப்படிப்பட்ட ஆரவாரத்தை உடையது சேரனுடைய நாடு.

இது தற்குறிப்பேற்ற அணி.

### (ஆ) "விற்பயில் வானகம் போலுமே"

**இடம் :** முத்தொள்ளாயிரத்தில் ஆசிரியர் சோழனுடைய நகரமாகிய உறையூரின் சிறப்பைக் கூறும்போது அவ்வூர் வீதிகள் விற்பயில் வானகம் போல இருந்தது என்றார்.

**விளக்கம் :** உறையூர்த் தெருக்களில் முதல்நாள் மாலையில் பூ விற்பவர்கள் மாலை தொடுப்பதற்காகப் பலவகையான பூக்களைக் கிள்ளிப் போடுகிறார்கள். அடுத்த நாள் காலையில் அவைகளைப் பார்க்கும் போது இந்திர வில் அமைந்திருக்கிற வானம்போல் இருக்கிறது என்று கூறுகிறார்.

பல நிறப் பூக்கள்—பல நிறம் கொண்ட இந்திர வில்.
வீதி—வானம்.

### (இ) "என்னே சிலம்பிதன் கூடிழந்தவாறு"

**இடம் :** சோழனுடைய கொடைச் சிறப்பினைச் சிறப்பித்துக் கூறவந்த முத்தொள்ளாயிர ஆசிரியர். அவன் தன்னுடைய பிறந்த நாளிற் செய்த கொடையின் சிறப்புக்களைக் கூறிவிட்டு இறுதியில் "என்னே சிலம்பிதன் கூடிழந்தவாறு" என்று முடிக்கிறார்.

**விளக்கம் :** சோழன் தன் பிறந்த நாளான இரேவதியில் அந்தணர்களுக்குப் பசுவொடு பொன் ஈந்தான்; நாவலர் களிறூர்ந்தார் என்று கூறி என்னே! சிலம்பிதன் கூடிழந்தவாறு! என்று முடித்தார்.

சோழர்கள் இன்று இவ்வளவு பெருஞ் செல்வம் பெற்று பேரும் புகழும் சிறக்க விளங்குவதற்குக் காரணம் முற்காலத்தில் திருவானைக் காவில் ஒரு சிலந்தி இறைவனுக்கு விதானமாக ஒரு கூடு கட்டியது. அங்கே பூசை செய்ய வந்த வெள்ளானை அதை அழித்தது. கோபங் கொண்ட சிலந்தி அதன் துதிக்கையினுள் புகுந்து கடிக்க, இரண்டும் இறந்தன. அச்சிலந்தியே மறுபிறப்பில் சோழனாகப் பிறந்தது. அச் சிலந்தி கூட்டை இழந்ததனால் பெற்ற பெருஞ்செல்வமல்லவா இது! என்று ஆசிரியர் வியந்துரைப்பாராயினர்.

# 9. சரபேந்திர பூபாலக் குறவஞ்சி

1. நேரி மலையைக் குறவர் தமது உறைவிடமாகக் கொண்டமைக்கும் ஏனைய மலைகளைக் கொள்ளாது ஒழிந்தமைக்கும் குறத்தி கூறும் காரணங்களைப் புலப்படுத்து.

**முன்னுரை**

தஞ்சையை ஆண்டு வந்த சரபோஜி மன்னன் தஞ்சைப் பெரு வீதி வழியாக உலா வந்தார். அவனைக் கண்டு காம மயக்கங் கொண்ட மோகினி என்னும் மதனவல்லி அவனை அடையப் பெறுவோமோ என ஏங்கித் துடித்துக் கொண்டிருக்கும்போது குறி சொல்லும் குறத்தி ஒருத்தி சரபோஜி மன்னன் புகழ் பாடிக் கொண்டு அவ்விடம் வருகிறாள். அவனை மோகினியானவள் தடுத்து நிறுத்தி உன் ஊர் எது? உன் மலை எது? என்று கேட்கிறாள். குறத்தியும் தன் மலை எது? என்று கூறத் தொடங்கி, பிற மலைகளை வேண்டாம் என்று தள்ளி வந்ததையும் தான் வாழும் மலையின் சிறப்புப் பற்றியும் கூறுகிறாள்.

அம்மே! நாங்கள் குடிசை அமைத்து வாழ்வதற்காக முதன் முதல் பொன்மயமான மகாமேரு மலையை அடைந்து அங்கே தண் குடிசை கட்டத் தொடங்கினோம். அங்குள்ளவர்கள் இது 'சாபமலை' என்று கூறக் கேட்டு இம்மலையில் தங்கினால் இது நம்மையும் சபித்து விடும் என்று வந்து விட்டோம்.

அடுத்தபடியாக, சங்கரனார் தங்கியிருக்கும் வெள்ளி மலையாகிய திருக்கயிலாய மலையை அடைந்தோம். அங்கே மிகுதியான பூதக் கூட்டங்கள் இருந்தன. இது சிவபெருமானுக்கே விருப்பமுடைய மலை என்று கருதி அங்கிருந்து வேறிடம் சென்றோம்.

பின்னர்த் திருக்காளத்தி மலையைக் கண்டு அதை விரும்பி அங்கே சென்றோம். அங்குள்ளவர்கள் திண்ணனைக்கண் பறித்தது இம்மலை என்றார்கள். நம்முடைய கண்களையும் கவர்ந்து விடும் என்று பயந்து வந்து அழகு பொருந்திய திருக்குற்றால மலையை அடைந்து குடிசையிட நினைத்தோம் அங்குள்ளவர்கள் அருவியில் மூழ்கிடுவீர்' என்றார்கள். 'அருவியில் மூழ்கினால் நாம் இறந்து போவேமே என எண்ணி அப்பொழுதே நழுவி விட்டோம்.

அடுத்து, வடக்கேயுள்ள வேங்கட மலை மேல் ஏறிக் குடிசையிட இடம் பார்த்தபோது, அங்குள்ளவர்கள் அதனை 'மால் கொண்ட மலை' என்றார்கள். இது மயக்கம் கொண்ட மலையென்றால் நமக்கும் மயக்கத்தைக் கொடுத்துத் துன்புறுத்தும் என எண்ணி வந்து பழனி மலையை அடைந்தோம். அது இனிமையுடையதுதான்; ஈறில்லாத புகழுடையதுதான். ஆனால் அதை 'இடும்பன் மலை' என்றார்கள். பிறரை அச்சங் கொள்ளச் செய்பவன் இடும்பன் ஆதலின் நம்மையும் அடிக்கடி அச்சங் கொள்ளுமாறு செய்வான் என எண்ணி மீண்டு விட்டோம்.

பின்னர், நீர்த்துளியை வழங்கும் மேகம் சூழ்ந்த தூயமலை (ஆனைமலை) யொன்றைக் கண்டு அதன் அடிவாரத்தை நெருங்கி

ளும். அப்போது அங்குள்ளவர்கள் 'இது தூங்கல் மலை என்றார்கள். இது தூங்கும் தன்மையையுடைய மலையாக இருந்தால் நம்மையும் தூங்குமாறு செய்துவிடும் என்று எண்ணி அங்கிருந்து வெளியேறி, அடுத்துள்ள சேரன் குவட்டுக்குச் சென்றோம். அங்குள்ளவர்கள் 'இது கொல்லி மலை' என்றனர். அதைக் கேட்டு இம்மலை நம்மையும் கொன்று விடுமே என்று எண்ணிப் பயங்கொண்டு வந்து விட்டோம்.

விராலிமலை, சோலைமலை, சுவாமிமலை ஆகிய மூன்று மலைகளும் எங்கள் குலம் விளங்கும் கொடியாகிய வள்ளிக்கு நாங்கள் சீதனமாகக் கொடுத்த மலைகள் அங்கே சென்று நாங்கள் குடிசையமைத்து வாழ இயலாது. பிரான்மலை, திருச்சிராப்பள்ளி மலை அவை போன்ற பிற மலைகள் பிறைச் சந்திரனை முடியிற்கொண்ட சிவனுக்கு உவந்த மலைகள் ஆகையால் நாங்கள் தங்கவில்லை.

இவ்வாறு குறத்தி பிற மலைகளில் தங்காமைக்கு உரிய காரணங்களை எடுத்துக் கூறினாள். இவ்வாறு பிற மலைகளை விலக்கிய குறத்தி நேரி மலையை வாழ்விடமாகக் கொண்டமைக்கு உரிய காரணத்தைக் கூறுகிறாள்.

நிலவுலகில் வாழ்கின்ற மக்கள் எல்லாரும் வணங்கித் துதி செய்யுமாறு பொருந்திய தஞ்சையில் எக்காலத்தும் நின்று நிலவும் புகழ் பெற்றுத் தங்கியிருக்கிற சரபோஜி மன்னர் மனம் மகிழ்ந்து ஆட்சி செய்யும் பழமை வாய்ந்த பெருமையுடையது இம்மலை; புகழ் மிக்க தவச் சான்றோர்கள் முன்னிட்டுக் கொண்டு வந்து தங்குவதற்கேற்ப எல்லா வளங்களாலும் பொருந்தி வளர்கின்ற பெருமையுடையது இம்மலை; இம்மலை நேரிமலை எனப் பெயர் பெறும். இதுவே எங்கள் சிறந்த மலை.

இத்தகைய நேரிமலை புகழாலும் பெருமையாலும் நீடும் மலை. எங்கள் குடியைத் தழைக்க வைத்த இம்மலையில் விண்மீன்களைப் போல முத்துக்கள் ஒளி வீசும். சந்தன மரங்கள் அடர்ந்து செறிந்த இம்மலையே எங்கள் சொந்த மலை, இம்மலையின் மேலேயே எங்கள் தண் குடிசை அமைத்து நிலைக்க வைத்தோம் என்று குறத்தி கூறினாள்.

**முடிவுரை**

குறத்தி தன் சொந்த மலையாக நேரி மலையைக் கொள்வதற்கு முன்னால் பல மலைகளையும் சென்று பார்த்து அவைகள் தனக்குப் பொருந்தாதவை என்று காரணங்காட்டி விலக்கி விடுகிறாள். நேரி மலையைச் சிறந்தது என்று பாராட்டியும் சொந்தமலை என்று உரிமை கொண்டாடியும் பேசினாள்.

2. இடஞ்சுட்டி விளக்குக.

(அ) ''சாபமலை என்றுரைத்தார் தாபமொடு விடுத்தோம்''

**இடம் :** சரபேந்திர பூபாலக் குறவஞ்சியில், சரபேந்திரமன்னன் தஞ்சைப் பெருவீதி வழியே உலா வருகிறான். அவனைக் கண்டு காமுற்ற மோகினி என்னும் மதனவல்லி அவனை எவ்வாறு அடையப் பெறுவோம் என்று எண்ணி ஏங்கி நிற்கையில், குறத்தி ஒருத்தி அங்கே வருகிறாள். சரபேந்திர மன்னன் புகழ் முதலியவற்றைக் கூறி வரும் அவளிடம் உன் நாடு எது? மலை எது? என்று கேட்கிறாள் மோகினி தன் சொந்த மலையைப் பற்றிக் கூறுவதற்குமுன் தான் போய்த் திரும்பிய மலைகள் எலலாவற்றின் பட்டியலையும் அவற்றை வெறுத்ததன் காரணங்களையும் கூறி வருகிறாள்.

குறத்தியானவள் மகாமேருமலைக்குச் சென்றாள். அங்கே குடிசை அமைக்கலாம் என எண்ணும்போது அங்குள்ளவர் கூறியதையும் தம் கருத்தையும் இணைத்து "சாபமலை என்றுரைத்தார் தாபமொடு விடுத்தோம்" என்றாள்.

விளக்கம் : குறத்தி மேருமலையை அடைந்தபோது அங்குள்ள வர்கள் இது சாபமலை என்றார்கள். உடனே குறத்தி இது சாபமலை யாயின் நமக்கும் சாபம் கொடுத்து அழித்துவிடும் என்று துன்பத் தோடு வந்து விட்டார்கள் குறத்தி முதலானோர்.

நயம் : மேருமலையைச் சிவன் ஒரு முறை வில்லாக ஆக்கிக் கையிற் கொண்டான். வில்லுக்குச் சாபம் என்ற பெயர் உண்டு. அதைக் கருத்திற் கொண்டு 'சாபமலை' என்றார்கள். இவளோ சாபம் கொடுக்கும் மலை என எண்ணி வெறுத்தாள்.

**(ஆ) திண்ணன் கண்ணைப் பறித்தது முன் இன்னது என்றார் பயந்தோம்**

இடம் : (முன்னே காட்டிய முன்னுரையை எழுதிக் கொள்க.)

குறத்தியானவள் காளத்தி மலைக்குச் சென்றாள். அங்குள்ளவர் கள் திண்ணனுடைய கண்ணை முற்காலத்தில் பறித்தது இம்மலைதான் என்றனர் என்பதைக் கூற வரும்போது இத்தொடரைக் கூறுகிறாள்.

விளக்கம் : திண்ணன் கண்ணை முற்காலத்தில் பறித்தது இம் மலைதான் என்று குறத்தியிடம் அங்குள்ளோர் சொல்ல, அப்படி யாயின் நம் கண்ணையும் பறித்துக் கொண்டால் என் செய்வது என்று பயந்து அம்மலையை வாழ்விடமாகக் கொள்ளாமல் வந்து விட்டாள் அவள்.

நயம் ; கண்ணப்ப நாயனாரின் இளமைப் பெயர் திண்ணன். கண்ணப்ப நாயனார் கண்ணைத் தோண்டி இறைவன் மேல் அப்பிய கதை நடந்த மலை இம்மலைதான் என்று அவர்கள் குறிக்க இவள் கண்ணைத் தோண்டியது இம்மலையின் பண்பாக இருந்தால் நம் கண்ணையும் தோண்டி விடுமே என அஞ்சிச் சென்றாள்.

**(இ) "அருவியில் மூழ்கிடுவர் என்றார் நழுவிவரலானேம்"**

இடம் : (முன்னே காட்டிய முன்னுரையை எழுதிக் கொள்க)

குறத்தியானவள் குற்றால மலையை அடைந்தபோது அங்குள்ள வர் கூறியதையும் தான் மறுத்த காரணத்தையும் வெளியிடும்போது "அருவியில் மூழ்கிடுவீர் என்றார் நழுவி வரலானேம்" என்று கூறினாள்.

விளக்கம் : குறத்தி குற்றால மலையை அடைந்தபோது அங்கிருந் தோர் 'அருவியில் மூழ்கிடுவீர்' என்று கூறினார்கள். அருவியில் மூழ்கினால் இறந்துபோவோமே என்று எண்ணிய குறத்தி அங்கிருந்து நழுவி விட்டாள்.

நயம் : குற்றால மலையில் வற்றாது பொழியும் நீர்வீழ்ச்சியில் முழுகி இன்பம் பெறுவீர் என்று அவர்கள் சொல்ல, மூழ்கினால் இறந்து போய்விடுவோம் என்று எண்ணிப் போய்விட்டாள்.

**(ஈ) இன்னது மால் கொண்டமலை என்றுரைத்தார் தீர்த்தோம்**

இடம் : (முன்னே காட்டிய முன்னுரையை எழுதிக் கொள்க.)

குறத்தியானவள் திருவேங்கட மலைக்குப் போனபோது அங்கு

நடந்தவைகளைக் கூற முற்படுகிறவள் "இன்னது மால் கொண்ட மலை என்றுரைத்தார் தீர்த்தோம்" என்றாள்.

**விளக்கம் :** குறத்தி திருவேங்கட மலைக்குச் சென்று அங்கே குடிசை அமைக்க எண்ணியபோது அங்குள்ளோர், "இன்னது மால் கொண்ட மலை" என்றார். மால் என்ற சொல்லுக்கு மயக்கம் என்ற பொருளைக் கொண்டு இம்மலை மயக்கங்கொண்ட மலையானால் நமக்கும் மயக்கத்தைக் கொடுத்துத் துன்பத்தை உண்டாக்குமே என்று எண்ணி அம்மலையை வாழ்விடமாகக் கொள்ளவில்லை.

**நயம் :** திருமால் தங்கிய மலை என்று அங்குள்ளோர் கூற மயக்கங்கொண்ட மலை எனக் குறத்தியானவள் பொருள் கொண்டாள்.

### (உ) இடும்பன் மலைஎனப் புகன்றார் திடங்கொளதை வெறுத்தோம்

**இடம் :** (முன்னே காட்டிய முன்னுரையை எழுதிக் கொள்க.)

குறத்தியானவள் பழனிமலையை அடைந்தபோது அங்கே நிகழ்ந்தவற்றைக் கூறுகையில் இடும்பன்மலை எனப் புகன்றார் திடங் கொளதை வெறுத்தோம் என்றாள்.

**விளக்கம் :** பழனி மலையின் பெருமை உணர்ந்து அதை வாழ் விடமாகக் கொள்ள எண்ணிய குறத்தி அங்கே அடைந்தவுடன் அங்குள்ளோர் 'இடும்பன் மலை' என்றார்கள். கேட்டதும் இடும்பன் என்றால் துன்பத்தைச் செய்பவன் என்ற பொருள்படும். ஆதலால் நமக்கும் இவன் துன்பத்தைச் செய்வான் என்று எண்ணி, வன்மை யைக் கொண்ட அம்மலையை வெறுத்தோம் என்று கூறுகிறாள்,

**நயம் :** 'இடும்பன்' என்பான் முருகனின் பக்தன். அவன் வைத்த மலை ஆதலின் இடும்பன் மலை என்று கூறியதைக் குறத்தி இவ்வாறு பொருள் கொண்டாள்.

### (ஊ) தூங்கல் மலை ஈங்கிதென்றார் ஆங்கதனை விட்டோம்

**இடம் :** (முன்னே காட்டிய முன்னுரையை எழுதிக் கொள்க.)

குறத்தி யானை மலையை அடைந்தபோது அங்கே நடந்தவை களைக் கூறும்போது "தூங்கல் மலை" ஈங்கிதென்றார் ஆங்கதனை விட்டோம்" என்று கூறினாள்.

**விளக்கம் :** யானை மலையை அடைந்த குறத்தியிடம் அங்குள் ளோர் தூங்கல் மலை என்றனர். இம்மலையை தூங்கும் தன்மையை உடையதானால் நமக்கும் தூக்கத்தைக் கொடுத்துத் துன்பத்தை உண்டாக்கும் என்று கருதி இம்மலையை வெறுத்தாள்.

**நயம் :** தூங்கல் என்ற சொல்லுக்கு யானை என்றும் தூங்குதல் என்றும் இருபொருள் உண்டு 'யானை மலை' என்ற பொருளில் அங்குள் ளோர் தூங்கல்மலை என்று கூற, குறத்தி தூங்குதலையுடைய மலை என்று மாறாகப் பொருள் செய்தாள்.

### (எ) "கொல்லிமலை என்றுரைத்தார் தள்ளிவந்தோம் இப்பால்"

**இடம் :** (முன்னே காட்டிய முன்னுரையை எழுதிக் கொள்க.)

குறத்தியானவள் சேரன் குவட்டுக்குச் சென்று அணைந்தபோது அங்குள்ளார் கூறியதையும் தன் கருத்தையும் இணைத்துக் "கொல்லி மலை என்றுரைத்தார் தள்ளி வந்தோம் இப்பால்" என்றாள்.

விளக்கம் : குறத்தியானவள் புகழ்மிக்க சேரனுக்குச் சொந்தமான மலையை அடைந்தாள். அங்குள்ளவர்கள் இது 'கொல்லிமலை' என்றுரைத்தார். கொலை செய்யும் தன்மையுடைய மலை என்று பொருள் கொண்ட குறத்தி, நம்மையும் இம்மலை கொன்றாலும் கொல்லும் என்று எண்ணி அப்பொழுதே அவ்விடம் விட்டுச் சென்றாள்.

நயம் : 'கொல்லி' என்பதை மலையின் பெயரெனக் கொள்ளாது கொலை செய்யும் தன்மையுடையது என்று கருதி விட்டாளாதலின் இவ்வாறு நேர்ந்தது.

# 10. மாரிவாயில்

1. மாரிவாயிலால் அறியப்பெறும் நீலமலையின் சிறப்புக்கள் யாவை?

யானைமலைக்கு அடுத்துள்ளது நீலமலை. ஆயர்குல மக்களின் வாழ்க்கையினைச் சிறப்பாகக் கொண்டு விளங்குவது அம்மலை. ஆயர் குலப் பெண்களின் பற்களைப் போன்ற முத்துக்கள் தாமரையில் தங்க; அத்தாமரையின் மலர்களைப் போல மலர்ந்திருக்கும் அப் பெண்களின் முகம். அவர்களின் கூந்தலை ஒத்திருக்கும் மேகங்கள், நீலமலையை விட்டு நீங்காமல் இருப்பன.

நோய் தராத குளிர்ச்சி அங்கே உண்டு; அதுவே வலிமைக்குக் காரணம். வெண்மேகங்கள் கவிந்து வணங்கும்; பருவங்களில் உள்ள வசந்த காலம் ஒன்றே அங்கு நீங்காத நினைவை எழுப்பிக் கொண்டிருக்கும்; நீர்வீழ்ச்சிகள் தாளம் தவறாத இசையை எழுப்ப; அவ்விசைக்கு ஏற்ப மயில்கள் ஆடும். ஞானத்தால் தேடியும் காணப் பெறாத 'அழகு' அங்கே அரசு வீற்றிருக்கும்.

அழியும் வளமைகளுக்கு அங்கே இடம் இல்லை. வெறுப்பைத் தரும் வெய்யிலை எப்பொழுதும் கண்டறியாத காடு. அங்கே மூங்கிலில் இயற்கையாக அமைந்த தொளைகளில் காற்றானது புகுந்து வெளிவரும்போது குழலோசை கேட்கும். வண்டுகள் யாழோசையை இசைக்கும். உயர்ந்த மலையுச்சியிலிருந்து வரும் கலங்கல் நீரின் இசை வாய்ப்பாட்டாக இருக்கும்.இயற்கை என்னும் தெய்வம் அங்கே அரசு வீற்றிருக்கும்.

2. இடஞ்சுட்டி விளக்குக.

I. மாரி ஒத்திருந்து ஒருவா நீலமலையினை உவந்து காண்பை

இடம் : சித்திராங்கதை மாரியை (மேகம்) அருச்சுனனிடம் தூதனுப்புகிறாள். அது செல்ல வேண்டிய வழிகளை முறையாகக் கூறி வருகிறவள் நீலமலை வளத்தைக் கூற முற்படுகிறாள். அப்போது மேகங்கள் ஒத்திருந்து நீங்கா நீலமலையினை நீ உவந்து காண்பை என்று கூறியனுப்புகிறாள்.

விளக்கம் : நீலமலையில் மேகங்கள் ஆய்க்குலத்துப் பெண்களின் கூந்தலை ஒத்துக் கருமையுடையனவாய் நெறியுடையனவாய் இருந்த

நீலமலையை விட்டும் எங்கும் நீங்கிச் செல்லாமல் இருக்கும். அத்தகைய மேகம் சூழ்ந்த நீலமலையை மகிழ்ந்து காண்பாய் என்று கூறினாள்.

## II. "ஆய்தர ஞானம் தேடும் அழகு அரசிருக்கும்"

**இடம் :** சித்திராங்கதை மாரிக்கு நீலமலையின் வளப்பங்களைக் கூறிக் கொண்டு வரும்போது இவ்வரியைக் கூறுகிறாள்.

**விளக்கம் :** ஞானம் என்றால் அறிவு. அது உலகில் உள்ள எல்லாப் பொருள்களையும் ஆராய்ந்து, இப்பொருள் இன்ன தன்மை உடையது என்று வரையறை செய்ய வல்லது. அத்தகைய அறிவு 'அழகை'யும் ஆராய்ந்து வறையறை செய்ய வேண்டும் என்று கருதி இன்றளவும் தேடிக்கொண்டிருக்க, அந்த அழகானது நீலமலையே அரசவையாக, துன்பம் செய்யாத குளிர் சாதனம் தண்மை நல்க; வெண்மேகம் மேலே விதானமாக அமைய; இன்பம் துய்ப்பதற்குரிய பசுமை எண்ணங்களை வசந்தம் கொடுத்துக் கொண்டேயிருக்க, நீர்வீழ்ச்சியின் தாள அமைப்போடு கூடிய இசைக்கு ஏற்ப, மயில்களாகிய ஆடல் மகளிர் நாட்டியமாட, அரசு வீற்றிருக்கிறது.

## பகுதி II - தமிழ்

# கட்டுரைத் திரட்டு

## (Selections in Prose—Detailed)

### பிரிவு—அ

## 1. உதிர்ந்த மலர்கள்

**முன்னுரை :** சங்க இலக்கியங்களில் பெரும்பாலானவற்றை ஆராய்ந்து பதிப்பித்தவர் டாக்டர் உ. வே. சாமிநாத ஐயர் அவர்கள் ஆவார்கள். இவர்கள், பத்துப் பாட்டு என்னும் தொகை நூலினை ஆராய்ந்து 1889ஆம் ஆண்டு வெளியிட்டார்கள. அப்போது பத்துப் பாட்டில் ஒன்ருகிய 'குறிஞ்சிப் பாட்டு' என்னும் பாட்டினைச் செப்பம் செய்து கொண்டபோது ஏற்பட்ட இடையூற்றினை இக் கட்டுரையில் விளக்கியுள்ளார்கள்.

**குறிஞ்சிப் பாட்டு :** பத்துப் பாட்டில் எட்டாவது பாட்டாக இருப்பது குறிஞ்சிப் பாட்டு. இது கபிலரால், ஆரிய அரசனுகிய பிரகத்தன் என்பவனுக்குத் தமிழின் நயத்தைக் கூறும் பொருட்டுப் பாடப் பெற்றது. இதன் கண், தலைவி ஒருத்தி, தலைவன் ஒருவனைக் கண்டு, காதல் கொண்டு அளவளாவிய செய்தியாகிய களவொழுக்கம், மிகவும் அழகாகச் சொல்லப்படுகின்றது.

மலைவாணர் மகளாகிய தலைவி ஒருத்தியை, அவளுடைய தாய், தினைக் கொல்லையைக் காத்து வருமாறு தோழியுடன் அனுப்பினுள். தலைவியும் தோழியும் தினைக்கொல்லைக்குச் சென்றனர். பரண்மேல்இருந்து கிளி முதலியவற்றை ஓட்டிக் கொண்டிருந்தனர். பின்னர், அருவியில் விளையாடியும், பாட்டுக்கள் பாடியும், மலர்கள் பறித்துப் பாறையில் குவித்தும், தழைகளை எல்லாம் ஆடைபோலக் கட்டி உடுத்தும், மாலை தொடுத்து அணிந்தும், இடையிடையே கிளிகளை ஓட்டியும் பொழுது போக்கினுர்கள்.

அப்போது தலைவன் ஒருவன், அங்கு வந்தான். அவன் அழகும் வீரமும் உடையவன். தன் தலைமயிரில் எண்ணெயும் மயிர்ச் சாந்தும் பூசியிருந்தான். அகிற்புகையினுல் தலைமயிரை உணர்த்தினமையால் அதில் வாசனை கமழ்ந்தது. எனவே வண்டுகள் குடுமியில் மொய்த்தன. பல மலர்கள் அவன் தலையில் அணிந்திருந்தான்; காதில் அசோகந் தளிரைச் செருகியிருந்தான். பூமாலையும் ஆபரணமும் அவன் மார்பில்

விளங்கின. கையில் வில்லும் அம்புகளும் ஏந்தியிருந்தான்; இடையில் கச்சையும் காலில் வீரக் கழலும் அணிந்திருந்தான்.

அவனோடு நாய்கள் சில வந்தன. அந்நாய்களால் தலைவிக்கும் தோழிக்கும் அச்சம் ஏற்பட்டது; அதனால் வேறிடம் செல்ல முயன்றார்கள். அப்போது அவன் அவர்களின் அழகைப் பாராட்டினான்; எப்படியேனும் அவர்களோடு பேசவேண்டும் என்று விரும்பினான். அதனால், 'நான் வேட்டையாடி வந்தேன்; யானை முதலிய சில விலங்குகள் எனக்குத் தப்பி இங்கே வந்தன. அவற்றைப் பார்த்தீர்களா?' என்று பொய்யாக வினவினான். அவர்களோ நாணத்தால் விடை கூறாது நின்றனர். இந்நிலையில் அவன், 'என் வினாவுக்கு விடை கூறாவிட்டாலும், ஒரு வார்த்தை யாவது என்னோடு பேசக்கூடாதா' என்று கூறி, நாய்களை அடித்து அடக்கினான்.

அப்போது வேடனால் துரத்தப்பட்ட மதங்கொண்ட யானை ஒன்று அங்கு வந்தது. மகளிர் இருவரும் அஞ்சினர்; நாணத்தையும் மறந்து அவ்வீரனின் அருகில் சென்றனர். அவன் அம்பைத் தொடுத்து யானையை ஓட்டி அவர்களின் அச்சத்தை நீக்கினான். இந்நிலையில் தலைவனுக்கும் தலைவிக்கும் இடையே அன்பு ஏற்பட்டது.

பின்னர், மகளிர் இருவரும் மலையருவியில் நீராடியபோது, கால் தளர்ந்து நீரால் இழுத்துச் செல்லப்பட்டனர். தலைவன் விரைந்து சென்று அவர்களைக் காப்பாற்றினான். தலைவியைத் தழுவிக் கொண்டான். இந் நிகழ்ச்சிகளின் தொடர்பாக இருவரும் காதலர் ஆயினர். அதனால், தலைவன், தலைவியை நாள்தோறும் கண்டு அளவளாவினான்; தலைவியும் அவனைக் கண்டு பேசி மகிழ்ந்தாள்.

பின்னர், தினைக் கதிர் விளைந்தது; தலைவிக்குத் தினைப் புனக் காவலும் ஒழிந்தது. இதனால் வீட்டிலேயே இருந்த தலைவியைக் காணத் தலைவன் இராப் பொழுதில் சென்று கொண்டிருந்தான். இரவுக் காலமாதலால் தலைவனுக்கு ஏற்படும் இடையூறுகளை எண்ணித் தலைவி வருந்தினாள். இதனால் தலைவி மெலிந்து காணப்பட்டாள். இதனைக் கண்ணுற்ற தாய் முதலியோர், இதற்குக் காரணம் யாதாக இருக்கலாம் என எண்ணினர். மருந்தால் இந்நோய் தீராது என்று கடவுளுக்குப் பூசை போட்டனர். உண்மைநிலை அறியாமல், தன் தாய் முதலியோர் வருந்துவதைத் தலைவி உணர்ந்தாள்; இந்நிலையில் தன் காதலை வெளிப்படுத்தாவிட்டால், தன் காதலுக்கும் கற்புக்கும் குறைநேரும் என்று எண்ணினாள். ஆபரணங்கள் உடைந்துபோனால் மீண்டும் ஆபரணங்கள் ஆக்கிவிடலாம். ஒழுக்கமும் கற்பும் வழுவினால் மீண்டும் அமைத்துக் கொள்ள முடியுமா? எனவே தன் நிலையைத் தாய்க்குத் தெரிவித்துவிட வேண்டும் என்று கருதி, தோழியிடம் இதனைக் கூறினாள். தோழி, தலைவியின் விருப்பத்திற் கேற்பச் செவிலித் தாய்க்குத் தலைவியின் காதல் வரலாற்றை எடுத்துக் கூறினாள்.

மேற்கண்ட இச்செய்திகள், சிறு கதைபோல் குறிஞ்சிப் பாட்டில் அமைந்துள்ளன.

**தொண்ணூற்றொன்பது மலர்கள் :** குறிஞ்சிப் பாட்டில் காணப் படும் வருணனைகள், மனத்தைக் கவரும் இயல்பின. தலைவியும் தோழியும் மலர்களைப் பறித்துப் பாறையில் குவித்த செய்தியைக் கூறும் இடத்தில் 99 மலர்களின் பெயர்கள் காணப்படுகின்றன. தமிழர்கள் இயற்கையின் எழிலை உணர்ந்தவர்கள்; நிலப் பாகுபாடுகளையும் மரஞ்செடி கொடிகளின் இயல்புகளையும் நன்கு அறிந்தவர்கள் என்னும் உண்மைகளை ஆரிய அரசனுக்கு எடுத்துக் கூறுவதற்காகவே 99 மலர்களைக் கபிலர் அடுக்கிக் கூறியுள்ளார்.

**மாலைக் காட்சி :** செங்கதிரோன் மாலையில் மலையில் மறை கின்றான்; மான்கள் மரத்தடியில் கூடுகின்றன; பசுக்கள் வயிறார மேய்ந்து கன்றுகளை நினைந்து மந்தைகளில் புகுகின்றன. அன்றில் பறவை, தன் துணையை அழைக்கின்றது. பாம்பு, இரை தேடுவதற்காக மணியை உமிழ் கின்றது. இடையர்கள், புல்லாங்குழல் வாசிக்கின்றனர். ஆம்பல்கள் மலர்கின்றன. வீடுகளில் இல்லத்தரசிகள் விளக்கேற்றுகின்றனர். அந்த ணர்கள், அந்திக் கடன் செய்கின்றனர் வேடர்கள் கொடிய விலங்குகளை அச்சுறுத்தக் கொள்ளிக் கட்டையால் தீ உண்டாக்குகின்றனர். மேகங்கள் மலையைச் சூழ்கின்றன; எங்கும் இருள். காட்டில் கல்லென்ற ஒலி கேட்கின்றது. பறவைகள் தத்தம் கூடுகளில் வந்து ஒலிக்கின்றன.— இவ்வளவு அழகாக மாலைக் காட்சியை ஓவியப்படுத்துகின்றார்.

**உதிர்ந்த மலர்கள் :** பத்துப் பாட்டை முதலில் உ. வே. சா. அவர்கள் பதிப்பிக்கும்போது மூலம் (செய்யுள்) உள்ள ஏடு கிடைக்க வில்லை. பதவுரை மட்டும் உள்ள ஏடுகளே கிடைத்தன. பதவுரைகளில் அமைந்துள்ள மூலப் பகுதிகளைக் கொண்டு செய்யுட்களை அமைத்துக் கொண்டார். அந்த நிலையிலும் அவருக்கு ஓர் இடையூறு ஏற்பட்டது. குறிஞ்சிப்பாட்டில் மலர்களை வரிசையாகச் சொல்லும் பகுதியில் இடையே சில அடிகள் விட்டுப்போயிருந்தன. அந்த இடங்களில் ஏட்டில் இடமும் விடப்பட்டிருந்தது. செங்காந்தட் பூ முதல் செம்பூ வரையில் மலர்கள் பல சொல்லப்படும் வரிசையில் செங்கோடுவேரி என்னும் பூவுக்கும், கூவிளம் பூவுக்கும் இடையில் அச் சிதைவு காணப்பட்டது. இச் சிதை வால் உதிர்ந்த மலர்கள் எத்தனையோ? அவை கிடைக்குமா? என ஏங்கினர் உ. வே. சா. அவர்கள். அப்போது தமிழும் சைவமும் வளர்த்த தருமபுர ஆதீனத்தின் நினைவு, அவர்களுக்கு ஏற்பட்டது.

**தருமபுரத்தில் தமிழ் :** அக்காலத்தில் திருவாவடுதுறை ஆதீனத் திற்கும் தருமபுர ஆதீனத்திற்கும் வழக்குகள் நடந்தன. அதனால் திருவா வடுதுறை ஆதீனத்தைச் சேர்ந்த உ. வே. சா. அவர்கள், தருமபுரம் செல்லத் தயங்கினர். ஆயினும், தமிழ்ப் பணிக்காகச் செல்லத் துணிந்தார். அப்போது திருவாவடுதுறையில் அம்பலவாணதேசிகர் என்பவர், ஆதீனத்

தலைவராக விளங்கினார். அவரிடம் தம் கருத்தைக் கூறினார். அவரும் விடை கொடுத்து அனுப்பினார்.

உ. வே. சா. அவர்கள், தருமபுரம் மடத்திற்குச் சென்றார்கள். அங்கே அப்போது ஆதீனத் தலைவராக விளங்கியவர் ஸ்ரீ மாணிக்க வாசகதேசிகர் என்பவர். அவரிடம் சென்று, 'நான், கும்பகோணம் கல்லூரியில் தமிழ் ஆசிரியனாகப் பணியாற்றுகின்றேன். பத்துப்பாட்டைப் பதிப்பிக்கும் முயற்சியில் ஈடுபட்டுள்ளேன். ஆனால் அதில் ஒரு பகுதி சிதைந்துள்ளது. பல இடங்களில் தேடியும் கிடைக்கவில்லை. கந்தபுராணச் சுருக்கம் பாடிய சம்பந்த சரணாலயர், துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமி களின் ஆசிரியர் வெள்ளியம்பலவாண முனிவர் முதலிய அறிஞர்கள் வாழ்ந்த இந்த ஆதீனத்தில் ஏட்டுச் சுவடிகள் இருக்கும். ஆதலால் இங்குக் கிடைக்கலாம் என்ற துணிவுடன் வந்துள்ளேன். இந்த நன்றியை என்றும் மறவேன்' என்று கூறினார்கள். இவ்வளவும் கேட்ட மாணிக்க வாசக தேசிகர் 'நாளை வரலாமே' என்றார். அனுமதி கிடைத்ததும் உ. வே. சா. அவர்கள், மாயூரம் சென்றார்கள்; முன்சீப் வேதநாயகம் பிள்ளையின் வீட்டில் இரவு தங்கியிருந்து மறுநாள் காலை தருமபுரம் மடத் திற்குச் சென்றார்கள். ஆதீனத்தின் காறுபாறாக இருந்த சாமிநாதத் தம்பிரான் என்பவருடன் சென்று ஆதீனத் தலைவரைச் சந்தித்தார்கள். அவர்களின் ஆணைப்படி சில ஓதுவார்கள், சில கணக்குப் பிள்ளைகள் ஆகியோரின் உதவியுடன், ஆதீனப் புத்தகசாலைக்குச் சென்றார்கள். அங்கே ஆயிரக் கணக்கான ஏட்டுச் சுவடிகள் இருந்தன. அவைகளை யெல்லாம் ஒவ்வொன்றாகப் பார்த்தார்கள். பல நூறு சுவடிகளைப் பார்த்தும், பத்துப்பாட்டு மட்டும் அகப்படவில்லை. ஞாயிறும் மறைந்தது. குறிஞ்சிப் பாட்டில் உள்ள மலர்கள் எல்லாம் ஒரு மாலையாக அவரின் அகக்கண்முன் தோன்றின; அம் மாலையின் இடையே சில மலர்கள் உதிர்ந்தமையால், அம் மாலை, குறையுடைய மாலையாக இருப்பதையும் கண்டார்கள். இம் மனநிலையில், இரவும் வந்தது. இரவு ஒன்பது மணி ஆயிற்று.

அப்போது ஆதீனத் தலைவரான ஸ்ரீ மாணிக்கவாசக தேசிகர் அங்கே வந்தார். 'ஏதாவது கிடைத்ததா' என்று கேட்டார். 'ஏராளமான ஏட்டுச்சுவடிகள் இருக்கின்றன; ஆனால் எது வேண்டுமோ அது கிடைக்க வில்லை' என்றார் உ. வே. சா.

'இருந்திருக்கும்; யாராவது கொண்டு போயிருப்பார்கள்'—என்றார் ஆதீனத் தலைவர்.

'இந்த இடத்தைத் தவிரச் சுவடிகள், இம்மடத்தில் வேறு எங்காவது இருக்கின்றனவா'—என்றார் உ. வே. சா.

அப்போது அங்கு வந்த காறுபாறு சாமிநாதத் தம்பிரான், 'சில நாட் களுக்கு முன்னால் பதினெட்டாம் பெருக்கில் காவிரியில் கொண்டுபோய்

விடுவதற்காகப் பல ஏட்டுச் சுவடிகளைக் கட்டிச் சிறிய தேரில் வைத்துக் கொண்டு போனார்கள். அதில் சில பழைய ஒற்றை ஏடுகளைக் கண்டேன். அதை மடத்துத் தஸ்தாவேஜாக இருக்கலாம் என்று எண்ணி அவைகளை மட்டும் எடுத்துக் கட்டி என் பீரோவில் வைத்துள்ளேன். அவைகளில் இருக்கிறதா என்று பார்க்கலாம்' என்றார்.

பார்க்கிறேன் என்று உ. வே. சா. கூறியதும், சாமிநாதத் தம்பிரான் கொண்டுவரச் செய்தார். அவற்றில் ஓர் ஏடு, பத்துப் பாட்டு ஏடாக இருந்தது. மணி பத்துக்கு மேல் ஆயினமையால் அவ் ஒற்றை ஏடுகளை ஆதீனத் தலைவரின் உத்தரவுப்படி உ. வே. சா. அவர்கள் எடுத்துக் கொண்டு கும்பகோணம் சென்றார்கள்.

மறுநாட் காலையில் கும்பகோணம் வந்ததும் கொண்டுவந்த ஒற்றை யேடுகளைப் பிரித்துப் பார்த்தார்கள். அவற்றில் ஓர் ஏட்டில் குறிஞ்சிப் பாட்டில் உதிர்ந்த மலர்களைப் பார்த்தார்கள். இழந்த குழந்தையைக் கண்டெடுத்த தாய்க்கு உண்டாகும் மகிழ்ச்சியை அடைந்தார்கள்.

**முடிவுரை:** விடுபட்ட மலர்கள் மூன்று என்பதை உ. வே. சா. கண்டார்கள். அவை, தேமா, செம்மாணிப் பூ, பெருமூங்கிற் பூ என்பன. உதிர்ந்த இம் மலர்கள், கிடைக்காவிட்டால், பத்துப்பாட்டு முழு உருவத்தோடு வெளிவந்து மணம் தந்திருக்க முடியுமா?

## 2. தமிழ் இசை

**முன்னுரை:** சென்னைத் தமிழ் இசைச் சங்கத்தின் மூன்றும் ஆண்டு விழாவில் திரு. வி. க. அவர்கள், அரங்கத்தைத் திறந்து வைத்து ஆற்றிய சொற்பொழிவே இக் கட்டுரை. இக் கட்டுரையில் இசையின் ஆற்றல், தமிழ் இசையும் தமிழ் இசை இயக்கமும், தமிழ் இசை வளர்ச்சி, தமிழ் இசை மரபு முதலியன அழகிய எளிய நடையில் எடுத்துரைக்கப் பட்டுள்ளன.

**இசையின் ஆற்றல்:** இக்கால உலகம் வெவ்விய பரபரப்புக்கும், தீய கிளர்ச்சிக்கும், இரத்தப் புரட்சிக்கும் இரையாகி வருகின்றது. இந் நிலை மாறவேண்டும். இம் மாற்றத்திற்கு உரிய வழிகள் பலவற்றுள் இசையே பொருத்தமானது.

கலைகள் பல திறத்தன. அவற்றுள் சிறந்தது இசைக் கலை. இக் கலையே ஏனைய கலைகளின் உயிர் நாடி. இக் கலை, எல்லாக் கலைகளிலும் கலந்தும் தனித்தும் இயங்கும் தன்மை வாய்ந்தது. இக் கலையால் மனிதனிடத்தில் அமைந்த விலங்கியல்பு அழிந்து இறைத் தன்மை அரும்பும்:

இதனைக் கண்ணன் குழலிசையும், ஆயனார் குழலிசையும், பாணர் யாழிசையும் நன்கு விளக்கும்.

ஓர் அழகிய சோலையில் குரங்குகள் சில புகுந்தன. சோலையைச் சூறையாடின. அப்போது அங்கே ஒரு குயில், தன் இனிய குரலால் பாடியது. குயிலின் இசைகேட்டு மயில் ஆடியது. குரங்குகள் தம் செயல் மறந்து ஆடல் பாடல்களில் ஈடுபட்டன. இசையின் பெருமைக்குரிய இவ்வினிய காட்சியைச் சீத்தலைச் சாத்தனாரும் சம்பந்தரும் பாடியுள்ளனர். குரங்கின் குறும்புகளையே தகர்த்தெறியும் இசை, மனிதக் குரங்கின் குறும்புகளை நீக்கும் ஆற்றல் வாய்ந்தது என்பதில் ஐயம் இல்லை.

இசையின் முதன்மை, நாதம் என்று தத்துவ ஞானிகள் கூறுகின்றனர். யோக நூல் ஆசிரியர்களும் இதனை ஒப்புக்கொள்கின்றனர். உலகங்கள் எல்லாம் தோன்றுதற்கும், மீண்டும் அவை ஒடுங்குதற்கும் இடமாக இருப்பது நாதம் ஆகும். இந் நாதத்திற்கு மொழி இல்லை; இசையின் வண்ணமாக ஒலிக்கின்றது. எனவே இவ்வோசை, நுண்மையானது என்பது விளங்கும். இவ் இசையை விளக்கப் பயன்படுத்தப் படும் பருமை உடலே மொழியாகும். உயிர், இசையாகும். நாடுகளின் தட்ப வெப்ப நிலைக்கு ஏற்றவாறு மொழிகள் பலப் பலவாகின்றன. இம் மொழிகளில் அவ்வந் நாட்டில் இயற்கையாய் அமைந்த மொழியைத் தாய் மொழி என்கிறோம். இத் தாய்மொழியில் அமைந்த இசை, உயிரினும் மேலானது.

**தமிழ் இசையும், தமிழ் இசை இயக்கமும் :** தமிழ் இசை தொன்மை வாய்ந்தது; எந்நாளில் தோன்றியது என அறுதியிட்டுக் கூற இயலாதது; காலம் கடந்து நிற்பது. பல நாட்டினர், இசை நுட்பம் முழுமையும் அறிந்திருந்தனர். இதற்குச் சான்றாகக் கோயில்களும் காவியங்களும் ஓவியங்களும் உள்ளன. சுருங்கக் கூறின் 'தமிழ் நாடே ஓர் இசை நிலையம்' என்று சொல்லலாம். இத்தகைய தமிழ் நாட்டில் பிறந்த தமிழனுக்குத் தமிழ்ப் பாட்டே சுவைக்கும். இஃது இயற்கை. இந் நிலையில் இசையில் மொழிப் போரை ஏற்படுத்துவது அறியாமையும் அநாகரிகமும் வாய்ந்ததாகும்.

கலையில் சிறந்த தமிழ்நாடு, தனது பெரும் கலைச் செல்வங்களை இழந்துவிட்டது. இசைக்கலையில் பல கூறுகளை இழந்துவிட்டது. நம்மவர்கள் இழந்த இசைக் கலைக்கு ஆக்கம் தேடும் வகையில், தமிழ் இசை இயக்கம் தோன்றியுள்ளது. இத் தமிழ் இசை இயக்கத்தைத் தோற்றுவித்து இதன் வளர்ச்சிக்காகப் பாடுபட்டு வரும் ராஜா சர் அண்ணாமலைச் செட்டியார், டி. கே. சிதம்பரநாத முதலியார், சர். ஆர். கே. சண்முகம் செட்டியார், ராஜாஜி ஆகியோர்களுக்குத் தமிழகம் என்றும் கடமைப்பட்டிருக்கின்றது.

தமிழ் இசை இயக்கம் தோன்றியதால், தமிழ் இசை வேட்கை மிகுந்துள்ளது. இந்நிலையில் தமிழ் நாட்டில் ஆங்காங்கே தமிழ் இசை மன்றங்கள் தோன்றியுள்ளன. இன்னும் பல மன்றங்கள் தோன்ற வேண்டும். இம் மன்றங்கள் எல்லாம் விளம்பரக் கூடங்களாக இல்லாமல் தொண்டு செய்வதில், இசை வளர்த்தலில் ஈடுபட வேண்டும்.

**தமிழ் இசை வளர்ச்சி கோயிலில்:** தமிழ் நாட்டில் கலைகளை வளர்ப்பதற்கு என்று ஏற்பட்ட நிலையங்கள் பல. அவற்றுள் கோயில் சிறந்தது. கோயில் வாயிலாக இசை வளர்ந்தது. கோயிலே இசைக் கழகமாக இலங்கியது. கோயில்களில் ஆடலும் பாடலும் நடைபெற்றன. அவை வெறும் களியாட்டங்கள் அல்ல; மக்களைச் செந்நெறிப் படுத்தும் திறத்தன.

ஆண்டவனை வழிபட அமைந்த தமிழ்மறை, இசைக் களஞ்சியமாக இலங்குகின்றது. இசைஞாயிறு காஞ்சிபுரம் சுட்பிரமணியபிள்ளை போன்ற இசைப் புலவர்கள், தமிழ் மறைகளை இசையுடன் பாடி மகிழ்வித்துள்ளனர். சிறப்பாகத் திருஞானசம்பந்தரின் தமிழ் மறையில் முத்தமிழும் முழங்குகின்றது. திருஞானசம்பந்தர், இறைவனை இயல், இசை. நாடகமாக்கித் தந்துள்ளார். இவர், உள்ளத்தில் இறைப் பற்றும், வாயில் இசையும், கையில் தாளமும், காலில் நடமும் கொண்ட முத்தமிழ் விரகர்.

ஆழ்வார்கள் பாடியருளிய திவ்வியப் பிரபந்தம் பண்மயமானது; தெய்வத்தன்மை வாய்ந்தது. அதன் இசை உணராமல் அதனை இன்று கோயில்களில் ஓதுகின்றனர். இந்நிலை மாற வேண்டும். கோயில்கள் மீண்டும் கலைக்கூடமாக—இசைக் கழகமாக விளங்குதல் வேண்டும்.

**ஓவியமும் இசையும்:** இசைப் புலமைக்கு ஓவிய உணர்வு இன்றியமையாதது. ஓவிய உணர்வு பெருகப் பெருக இசைப் புலமையும் பெருமையும் பெருகும். அருகரின் அருள் ஓவியம்; புத்தரின் அற ஓவியம்; கண்ணனின் குழல் ஓவியம்; கிறிஸ்துவின் சிலுவை ஓவியம்; தட்சிணாமூர்த்தியின் மோன ஓவியம் ஆகிய இவற்றை நோக்கினால் இசையின் பெருக்கை இனிது உணரலாம்.

ஓவியம் என்பது ஊமையன்று; அது பேசாமல் பேசுவது: இப்பேச்சின் பொருளினை உணர்வோன், இசைக்கலைஞன் ஆவான். ஓவிய உணர்வு பெற்ற இசைக்கலைஞன், உடையின்றி நிர்வாணியாக ஆடினாலும் பாடினாலும் மனிதர் உள்ளத்தில் தீய எண்ணம் தோன்றாது. இன்பமே ஏற்படும். ஓவிய உணர்வு பெறாத இசைக் கலைஞன் நல்லாடை புனைந்து ஒப்பனை செய்து ஆடினாலும் பாடினாலும் தீய எண்ணமே மிகும். இதனால் ஓவிய வழி வரும் இசையின் பெருமையை உணரலாம்.

**தமிழிசை மரபு :** முத்துத் தாண்டவர், கோபாலகிருஷ்ண பாரதியார், அருணாசலக் கவிராயர் முதலியோர் பொருளும் இசையும் உடைய கீர்த்தனைகள் பாடியுள்ளனர். கீர்த்தனை என்பது தமிழகத்திற்குப் புதிதாக வந்ததே. ஆயினும் மேற்கண்டவர்களால் இக் கீர்த்தனை, தமிழ் மரபினைப் பெற்று அழகு பெற்றது. ஆனால் இவர்களுக்குப் பின் வந்தோர் கீர்த்தனைகளின் சிறப்பைக் கெடுத்துவிட்டனர். இவ்வாறு தமிழ் இசை மரபு கெடுதல், இசை வளர்ச்சிக்குத் தீங்கு பயக்கும்.

தமிழ்ப் பாட்டுக்களை இசையின் வழியே கற்பித்தல் வேண்டும். இதுவே மரபு. இம் மரபினைக் காக்க வேண்டுவது தமிழாசிரியர்கள் கடமை.

**முடிவுரை :** தமிழ்நாடு எத்துணை வழிகளிலெல்லாம் வேறுபாடுற முடியுமோ அத்துணை வழிகளிலும் வேறுபாடு கொண்டுள்ளது; இவ் வேறுபாடுகளுக்கு உட்பட்ட தமிழர்களை ஒன்றுபடுத்தும் ஆற்றல், தமிழ் இசைக்கே உண்டு. எனவே தமிழ் இசை இயக்கம், தமிழ் மக்களின் ஒருமைப்பாட்டுக்கு உரிய திருப்பணியில் முன்னணியில் நிற்குமாக.

## 3. பாட்டினியல்பு

**முன்னுரை :** பத்துப்பாட்டு என்னும் சங்கத் தொகை நூலினுள் அமைந்த முல்லைப் பாட்டு என்னும் பாட்டுக்கு மறைமலையடிகள் ஆராய்ச்சியுரை எழுதியுள்ளார். அவ் ஆராய்ச்சியுரைக்கு அமைந்த முன்னுரையே பாட்டினியல்பு என்னும் கட்டுரை. இக் கட்டுரையில் பாட்டின் இயல்பினை விளக்கியுள்ளார். பண்டைக் காலப் புலவர், பாட்டு என்பதன் இயல்பினை நன்கு அறிந்து செய்யுட்கள் இயற்றினர். பிற்காலத் தமிழ்ப் புலவர், பாட்டு என்பதன் இயல்பினை அறியாமல் புதுப்புது முறையால் சொற்களைக் கோத்துப் பொருள் ஆழமின்றிச் செய்யுட்கள் இயற்றுகின்றனர். இவ் வுண்மையை உணர வேண்டுமாயின் பாட்டின் இயல்பை முதலில் புரிந்துகொள்ள வேண்டும் என்பர் மறைமலையடிகள்.

**பாட்டின் இயல்பு :** உலக இயற்கையில் புலன்களுக்கு விளங்கும் அழகையெல்லாம் உள்ளடக்கி வைத்திருப்பது; அவற்றைப் பின் அறிவினிடத்தே புலப்படுமாறு தோற்றுவிப்பது; பொருள் நிகழ்ச்சியொடு மாறுபடுதல் இல்லாத இனிய ஓசையுடன் இசைந்தது; இதுவே பாட்டு; இன்னும் நம் அறிவை வசப்படுத்தும் பேரழகும் பேரொளியும் பெருந் தன்மையும் எங்கெங்கெல்லாம் உண்டோ அங்கங்கெல்லாம் பாட்டு உண்டு.

**உலக இயற்கையில் பாட்டு, நுண்பொருள்:** அழகுடைய அரசி, தான் போர்த்திருந்த பட்டாடையினைச் சிறிது சிறிதாக நீக்கி—துயில் நீக்கித் தன் அழகு முகம் காட்டி எழுந்ததைப்போல, இருளானது கடலில் சென்று அடங்கிவிடுமாறு காலைக் கதிரவன், உருக்கித் திரட்டிய பொன் னுருண்டைபோலக் கிழக்குத் திசையில் தோன்றினான். அத் திசையின் பரப்பெல்லாம் பொன்னுரைத்த கல்போலத் திகழ்ந்தது. நீலம், சிவப்பு, வெண்மை முதலான நிற வேறுபாடுகள் உள்ள பொன் வெள்ளிகள் உருகி ஓடுகின்ற நிலம்போல வானம், பல வண்ணமாய் விளங்கியது. கரிய முகில்கள், செவ்வரக்குப் பூசிய திரைச் சீலைகள் போலவும், வெண்மையான மேகங்கள், பொன்னுடை போலவும் திகழ்ந்தன. இத் தகைய அழகோடு உலகமாகிய பெண் சிரித்தாற்போல விடியற்காலம் அழகாகத் தோன்றும். இவ் அழகே பாட்டு ஆகும். இவ் விடியற்கால அழகினைக் கண்டு களிக்கும் செம்படவனைக் காட்டிலும் சிறந்த புலவன் ஒருவனும் இல்லை.

விடியற்காலையில் முல்லை நிலத்து ஆயர்கள், ஆன் கன்றுகளைத் தொழுவத்தில் கட்டிவைத்து, ஆனிரைகளை மலைச்சாரலில் கொண்டு போய்ப் புல்தரையில் மேயவிடுவர்; அவர்கள் மரநிழலில் சாய்ந்திருப்பர்; எதிரே பச்சிலைப் போர்வையைப் போர்த்துக் கொண்டு கரிய முகில்கள் நெற்றி தழுவிடப் பெருந் தன்மையோடு வானோங்கி வளர்ந்து நிற்கும் மலையினை அண்ணாந்து பார்த்து அச்சமும் மகிழ்ச்சியும் அடைவர். இதுவே பாட்டு ஆகும்.

காதலனும் காதலியும் பூஞ்சோலைகளில் களிப்பாய் உலவும்போதில் தூக்கணங் குருவிகள் கூடுகட்டுதலையும், மணிப்புறாக்கள் கூவுதலையும், ஆண் மயில்கள் தோகை விரித்துப் பெண்மயில்கள் காணுமாறு ஆடு தலையும், அருவி நீர் சோலையின் பக்கமுள்ள ஆழ்ந்த குளத்தில் நிரம்பச் செந்தாமரை மொட்டுக்கள் இதழ்களை விழித்து மிகச்சிவப்பாய் விரிதலை யும் கண்டு மனம் மகிழ்வர். பின்னர் மணப் பூக்களைப் பறித்துக் கூந் தலில் மாறிமாறி அணிந்தும், சிவந்த இதழ்கள் அழுந்த முத்தம் வைத்தும் இனிய அன்பு மொழிகளைப் பேசிக் களிப்பர். இவர்கள் செல்லுமிட மெல்லாம் பாட்டினைக் காணலாம்.

இவ்வாறு உலக இயற்கையில் காணப்படும் பேரழகு எல்லாம் பாட்டு ஆகும். இப்பாட்டு, வடிவம் இல்லாத நுண்பொருள் ஆகும். இவ் அழகினை—நுண் பொருளினை நம் உள்ளத்தில் பதியுமாறு கூறும், சொல்லின் தொகுதியாகிய பாட்டு, பருப் பொருளாகும்.

**பருப் பொருளாகிய பாட்டு :** நம் நினைவுகள், உணவுதேடுவதிலும் பொருள் சேர்ப்பதிலும், மனைவி, மக்கட்கு வேண்டுவன திரட்டிக் கொடுப்பதிலும், பிறருக்கு ஊழியம் செய்வதிலும் கழிந்துவிடுகின்றன, இத்தகைய நினைவுகளும் சொற்களும் செயல்களும் நமக்கு இன்பம் தருவன அல்ல. இவற்றிற்கு வேறாய் உலக இயற்கை அழகில் ஈடுபட்டுத்

நினைக்கும்போது நம் அறிவில் அரிய பெரிய கருத்துக்கள் தோன்றுகின்றன. இக் கருத்துக்களின் கோவையே பருப் பொருளாகிய—வடிவம் பெற்ற பாட்டாகும்.

மக்களின் வாழ்நாள் நீரோடை போன்றது; அவர்களுடைய வறிய நினைவுகள், அந்நீரோடையில் பெருகிச் செல்லும் கலங்கல் நீர் போன்றது; உலக இயற்கை என்றும் மலைக் குகைகளில் அரிந்து எடுத்து வந்த அருங் கருத்துக்கள், நீரோடையின் அடிநிலத்தில் கிடக்கும் பொற்றுகள்கள் போன்றன. இப் பொற்றுகள்களைப் புலவன் என்னும் அரிப்புக்காரன், ஒன்ருகச் சேர்த்துத் தன் அறிவுக் கூர்மை என்னும் நெருப்பில் இட்டு உருக்கிப் பசும்பொற் பிண்டமாகத் திரட்டித் தருகின்ருன். இதுவே பருப் பொருளாகிய பாட்டு ஆகும்.

மக்களின் அறிவு என்னும் அமுதம், பல வகையான குற்றங்களுடன் கலந்து தூய்மை இழந்து விடுகின்றது. நல்லிசைப் புலவன், தன் பேரறிவால் அதனைத் தெளிய வடித்து சுவை மிகுந்து நாம் பருகத் தருகின்ருன். இவ்வாறு புலவன் கொடுக்கும் இனிய அறிவின் விளக்கமும் பருப் பொருளாகிய பாட்டே ஆகும். 'பாட்டென்பது மக்களின் மன அறிவினின்றும் வடித்து இறக்கப்பட்ட தூய அமிழ்தம்' என்பர் மிலிட்டனும்.

**நல்லிசைப் புலவனும் ஓவியப் புலவனும் :** உலக இயற்கையினை நுணுகி நோக்கிப் பாடும் நல்லிசைப் புலவனுக்கும், உலக இயற்கையினைப் பலவகை வண்ணங்களால் குழைத்து வரைந்து காட்டும் ஓவியப் புலவனுக்கும் மிகுந்த ஒற்றுமை உண்டு. ஆனல் ஓவியப்புலவன் வரைகின்ற ஓவியம், கண்ணுக்கு மட்டுமே தோன்றும். நல்லிசைப் புலவன் அமைக்கின்ற பாட்டு, உள்ளத்தில் சென்று தோன்றும். ஓவியப் புலவன், பொருளின் தோற்றத்தை நன்கு உணர்ந்து வரைய வேண்டும். விளக்கமாக எழுதவேண்டும். சிறிது தவறு ஏற்பட்டாலும் அவ் ஓவியத்தைப் பாராட்டமாட்டோம். ஆனல் நல்லிசைப் புலவன், ஒவ்வொன்றையும் விரிவாக விளக்கிக் காட்டவேண்டும் என்பதில்லை. அதனுல் அவன் பாட்டில் தவறு இருக்காது. ஓவியப் புலவன், அறிவைப் பற்றி நிற்பவன்; நல்லிசைப் புலவன், மன அறிவைப்பற்றி நிற்பவன்.

புலனறிவு, பருப்பொருள்களை விரித்து அறியும் இயல்பினது; மன அறிவு, நுண் பொருள்களை விரைந்து அறியும் ஆற்றல் உடையது. மன அறிவு, அணுவை ஒரு நொடியில் மலைபோலப் பெருகச் செய்யும். மறுநொடியில் மலையை அணுவினுள் குறுகச் செய்யும். இத்தகைய ஆற்றல் வாய்ந்த மன அறிவு, புலனறிவைவிடச் சிறந்தது.

ஓவியப் புலவன் பெரிய காட்டினை வரைய வேண்டுமாளுல் பல காலும் இயற்கையினை அறிந்து, காட்டில் உள்ளவாறே பல வண்ணங்களைக் குழைத்து, துணியின்மேல் மிகவருந்தி எழுதுதல் வேண்டும். இது ஓவியனுக்குப் பல நாள் செய்யும் செயலாக முடியும். ஆனல் நல்லிசைப்

புலவனோ 'பரிய மரங்கள் அடர்ந்தோங்கிப் பிணைந்து நிற்கும் இருண்ட காடு' என்று சில சொற்களைச் சேர்த்துத் திறம்படக் கூறிவிடுவான். புலவனுக்கு இது மிக எளிது. ஆனால் இம் மன இயல்பின் நுட்பம் உணர்ந்து பாடும் புலவர் உலகில் மிகச் சிலரேயாவர்.

**முடிவுரை :** ஓமர், தாந்தே, செகப்பிரியர், மில்ட்டன், கதே, காளிதாசர் முதலிய பிறமொழிப் புலவர்களும் திருவள்ளுவர், நக்கீரர், இளங்கோ, சாத்தனார், மாங்குடி மருதன், கபிலர், சேக்கிழார் முதலிய தமிழ் மொழிப் புலவர்களும் மன இயல்பின் நுட்பத்தினை நன்கு அறிந்த நல்லிசைப் புலவர்கள் ஆவர்.

# 4. மணிமேகலை

**முன்னுரை :** மணிமேகலை என்னும் காப்பியத்தைச் சீத்தலைச் சாத்தனார் இயற்றியுள்ளார். இக் காப்பியத்தில் மணிமேகலையின் வரலாறு கூறப்பட்டுள்ளது. இதனைப் பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியார் அவர்கள் இக்கட்டுரையில் தொகுத்துக் கூறுகின்றார்.

**மணிமேகலையின் துன்பம் :** ஆயிரத்து எண்ணூறு ஆண்டுகளுக்கு முன் காவிரிப்பூம்பட்டினத்தில் கோவலன் என்பவன் வாழ்ந்தான். இவன் ஆடல், பாடல்களில் திறமைபெற்ற நாடகக் கணிகையாகிய மாதவியைக் காதலித்தான்; அவளுடன் வாழ்ந்தான். அவனுக்கு அவள் வயிற்றில் மணிமேகலை பிறந்தாள். இவள் பருவம் எய்தினாள். இவளைத் தகாத ஒழுக்கத்தில் ஈடுபடுத்த இவளின் பாட்டியாகிய சித்திராபதி எண்ணினாள். இச்செய்தியைத் தோழி மூலமாக சித்திராபதி மாதவிக்குத் தெரிவித்தாள். அது கேட்ட மாதவி, மாபெரும் பத்தினியாகிய கண்ணகியின் மகள் மணிமேகலை, தவ வழியில் செல்லுதற்கு உரியவள்; ஆதலால் தீய வழியில் செல்லமாட்டாள் என்று கூறி அனுப்பினாள். அப்போது தன் தந்தையாகிய கோவலனும், தாயாகிய கண்ணகியும் அடைந்த துன்பங்களை எண்ணி மணிமேகலை வருந்தினாள். உலக இன்பத்தில் பற்றுதல் ஒழிந்தாள். இத் துன்பத்தைப் போக்கச் சுதமதி என்னும் தோழி, மணிமேகலையை உபவனம் என்னும் பூஞ்சோலைக்கு அழைத்துச் சென்றாள்.

**காதல் உள்ளம் :** மணிமேகலையின் அழகில் ஈடுபாடு கொண்ட உதயகுமரன் என்னும் அரசகுமாரன, காமவேட்கையால் உபவனம் சென்றான். அப்போது மணிமேகலை, பளிக்கறையுள் புகுந்து கொண்டாள். எனவே அவன் சுதமதியிடம் மணிமேகலையைப் பலவாறு பாராட்டினான். பின்னர்ச் சுதமதியால் தெருட்டப்பட்டு மீண்டும்

அவளையடையலாம் என்ற துணிவுடன் திரும்பினான். இந்நிலையில் மணி மேகலைக்கு உதயகுமரனிடம் சிறிது அன்பு ஏற்பட்டது. இதனை மணி மேகலை, சுதமதியிடம், 'உதயகுமரன் என்னைக் கற்பில்லாதவள்; தவ உணர்ச்சி இல்லாதவள்; குலத்துக்கேற்ற ஒழுக்கமில்லாதவள்; பொரு ளுக்கு உடலை விற்பவள் என்று இகழ்ந்தான். அவ்வாறு இருந்தும் அவனிடம் என் நெஞ்சம் ஈடுபட்டது. இதுதானோ காமத்தின் இயல்பு' என்று கேட்டாள். மணிமேகலையின் உள்ளம் உதயகுமரனைக் காதலித்த தற்குக் காரணம், பண்டைப் பிறப்புக்களில் இவ்விருவரும் கணவனும் மனைவியுமாக வாழ்ந்து வந்த தொடர்பே ஆகும்.

**அறச் செல்வி:** காமத்தீச் சிறிது பற்றினும் பெரிதாக வெதுப்பும். ஆதலால், மணிமேகலையைக் காமத் தொடர்பிலிருந்து நீக்குதற்காக மணிமேகலையின் குலதெய்வமாகிய மணிமேகலா தெய்வம், மணிபல்லவத் தீவிற்கு மணிமேகலையைக் கொண்டு சென்றது. அத் தெய்வம் மணி மேகலையை நோக்கி, "சிறந்த கந்தசாலி என்னும் விதை, உவர் நிலத்தில் விழுந்து வீணாகுதல் போல, அறத்தின் வித்தாகிய நீ, இழிந்த காமத்திற்கு இலக்காகுதல் தக்கது அன்று" என்று கூறிப் புத்தபீடிகையைத் தரிசிக்கச் செய்தது.

மணிபல்லவத் தீவில் தீவதிலகை என்பவளின் உதவியால் கோமுகி என்னும் பொய்கையிலிருந்து அமுதசுரபி என்னும் அட்சய பாத்திரத் தைப் பெற்றாள். அப்போது தீவதிலகை, "பசிப்பிணி என்னும் பாவி யானது குடிப்பிறப்பின் மேன்மையை அழிக்கும்; சிறப்பினைக் கெடுக்கும். கல்வி என்னும் தெப்பத்தை நீக்கும்; நாணத்தைப் போக்கும். அழகினைச் சிதைக்கும்; மனைவியோடு பிறர்வாயிலில் நிறுத்தும். ஆதலால் பசிப் பிணியைப் போக்கியவர்களின் பெருமை சொல்லும் தரத்ததன்று; இவ்வுலகில் வாழ்வோர்க்கெல்லாம் 'உண்டி கொடுத்தோர் உயிரைக் கொடுத்தோர் ஆவார்' என்று மணிமேகலைக்கு அறிவுரை கூறினாள். அதற்கேற்ப மணிமேகலை, அமுதசுரபியிலிருந்து அள்ள அள்ளக் குறையாத உண்டியை எளிய மக்களுக்கு வழங்கும் அறப்பணியில் ஈடு பட்டாள். செல்வருக்கு உணவு படைத்தல் அறமாகாது; அது ஆடம்பர மாகும் என உணர்ந்து குருடர், முடவர், செவிடர், நோய்வாய்ப் பட்டோர் ஆகிய எளிய மக்களுக்கு உணவு படைக்கும் செயலில் ஈடுபட்டாள். அதற்கு உரிய இடமாகக் காவிரிப்பூம் பட்டினத்தில் உள்ள 'உலக அறவி' என்னும் ஊரம்பலத்தைத் தேர்ந்தெடுத்தாள்.

**சிறைக்கோட்டம் அறக்கோட்டமாக்கினாள்:** உதயகுமரன் தன் மேல் காதலுடையவனாதலால் அவனால் தனக்குத் தீங்குவரும் என்று எண்ணிக் காயசண்டிகை என்னும் வித்தியாதரப் பெண்ணின் உரு வத்தை மணிமேகலை மேற்கொண்டாள். இச் சமயம், உதயகுமரன், காயசண்டிகை வடிவம் கொண்ட மணிமேகலையைக் காதலித்தான். இந்நிலையில் அங்கு வந்த காயசண்டிகையின் கணவனான காஞ்சனன்

என்பவன், தன் மனைவியை உதயகுமரன் காதலித்ததாகத் தவருக எண்ணி உதயகுமரனைக் கொன்ருன். இச் செயலினை அறிந்த உதய குமரனின் தந்தையாகிய அரசன், மணிமேகலையைச் சிறைப்படுத் தினன்.

அரசனின் மனைவியாகிய இராசமாதேவி, மணிமேகலையைத் துன்புறுத்துவதற்காக அவளைச் சிறையிலிருந்து விடுவித்தாள். மயக்கும் மருந்தை உணவிற் கலந்து ஊட்டினள். புழுக்கறையில் அடைத்தாள்; காமுகன் ஒருவனை விடுத்துப் பழியுண்டாக்க முயன்ருள். ஆனல் மணிமேகலை, தான் பெற்ற சித்திகளால் இவ் இடையூறுகளைக் கடந்தாள். இதனைக் கண்ட இராசமாதேவி, மணிமேகலையைப் பொறுத்தருளுமாறு வேண்டினள். மணிமேகலை, அரசிக்கு அருளறத்தை எடுத்துக் கூறினள். "உன் மகன் இறந்ததால் நீ அழுகின்ருய். உடலுக்கு அழுதனையோ? உயிருக்கு அழுதனையோ? உன் மகனின் உடலுக்காக அழுதால், அவ் வுடலைச் சுடுகாட்டில் இடக் கொடுத்தது நீதானே? உயிருக்காக அழுதால் அவ்வுயிர் நித்தியமானது. ஆதலால் அது செய்த வினைக் கேற்ப வேறு ஓர் உடலை எடுத்திருக்கும். அவ்வுடல் இன்னது என நம்மால் தெரிந்து கொள்ள இயலாது. ஆதலால் அவ் உயிருக்கு அன்பு செய்ய எண்ணினல் உலகத்தில் உள்ள எல்லா உயிர்களுக்கும் அன்பு செய்ய வேண்டும். அவ்வாறு செய்தால் அவ்வுயிர்களுள் உன் மகனின் உயிரும் ஒன்ருக இருக்கும்" என்று காரிய காரண முறைப்படி எடுத் துரைத்தாள். ஒருவன் தனகுத் துன்பம் செய்தால் அவர் நாணுமாறு நன்மை செய்தலே அவரைத் தண்டித்ததாகும் என்னும் திருக்குறளுக்கு ஏற்ப இராசமாதேவியை மணிமேகலை அன்பால் தண்டித்தாள். பின்னர் தன் ஆற்றலால் சிறைச்சாலைக்குச் சென்று அங்குப் பசியால் வாடிய மக்களுக்கு உணவு அளித்து அவர்களுக்கு அறவுரை பகர்ந்து, சிறைச் சாலையை அறச்சாலையாக்கினள். அரசனைக் கொண்டு புண்ணியச் செயல்கள் நடைபெறுமாறு செய்வித்தாள்.

**மணிமேகலையின் தொண்டு:** மணிமேகலை தன் வாழ்நாள் முழுவதையும் பிறருக்கு நலம் செய்தலிலேயே கழித்தாள்; தன் உள்ளத்தைக் காமநிலையில் செல்லவிடாது அடக்கினள்; தனக்குத் தீங்கு செய்தவர்க்கும் நன்மையே செய்தாள்; அறிவுக் கலக்கமுற்ருரை அறிவுரைகள் கூறித் தேற்றினள்; அருளறத்தை மேற்கொண்டொழு கினள். தனக்கு நேர்ந்த பலவகைத் துன்பங்களையும் பொறுத்துப் பிற உயிர்களுக்கு ஒரு சிறிதும் துன்பம் செய்யாத தவப் பெருஞ் செல்வியாகத் திகழ்ந்தாள்.

மணிமேகலை சாவக நாடு, இலங்கை முதலிய அயல் நாடுகளுக்கும் வஞ்சி, காசி முதலிய உள்நாடுகளுக்கும் சென்று பற்பல அறங்கள் புரிந்தாள்; தவச் செல்வர்களிடத்தில் உபதேசங்கள் பெற்ருள்; பௌத்தமத உண்மைகளை உணர்ந்து ஒழுகினள்; சமயவாதிகள்

பலரைக் கண்டு உண்மைநிலை அறிதற்காக வாதிட்டாள்; மாறுபட்ட சமயக் கொள்கையுடையவர்களைத் திருத்தினாள்.

காட்சியளவை ஒன்றைமட்டும் ஏற்றுக்கொண்டு அனுமானப் பிரமாணத்தை ஏற்றுக்கொள்ளாதவர் பூதவாதி எனப்படுவர். ஒரு சமயம், பூதவாதி ஒருவனைக் கண்டு, "நின் தந்தை தாயார் யார்?" என்று மணிமேகலை கேட்டாள். அதற்கு அப் பூதவாதி, தன் தாய் தந்தையரைக் காட்டினான். உடனே மணிமேகலை, "காட்சியளவை ஒன்றையே கடைப்பிடிக்கும் நினக்கு இவர்கள் எப்படித் தாய் தந்தையர் ஆவர்? இதனைக் காட்சியில் வைத்து எவ்வாறு காண முடியும்" என்று கேட்டாள். உடனே பூதவாதி கலக்கமுற்றான். அவனுக்கு மணிமேகலை அனுமான அளவையின் ஆற்றலை உணர்த்தி அவனைத் தெளிவித்தாள். இதனால் இவளின் சமயத் தொண்டு வெளிப்படும்.

மணிமேகலை, இளமை நிலையாமை, யாக்கை நிலையாமை முதலியவற்றைப் பிறருக்கு எடுத்துக்காட்டி நல்வழிப்படுத்தினாள். தன்மேல் காதல் கொண்ட உதய குமரனுக்கு இளமை நிலையாமையை அறிவுறுத்த எண்ணினாள். அப்பொழுது அங்கே வந்த கிழவி ஒருத்தியைக் காட்டி "இவள், முன்பு வனப்புடையவளாக இருந்தாள். இப்போது இவளின் உறுப்புக்கள் அழகிழந்து விட்டன. கருமணல் போன்றிருந்த இவளது கூந்தல், வெண்மணல் போல மாறிவிட்டது. இவ்வாறு உறுப்புக்கள் மாறுபாடு அடைந்திருத்தலைக் காண்பாயாக." என்று கூறினாள்.

சாவக நாட்டரசனாகிய புண்ணியராசனைக் கண்டாள். அவன் முற்பிறப்பில் ஆபுத்திரனாக இருந்து அருளறம் புரிந்ததை எடுத்துக் காட்டினாள். பின்னர் அவனுக்குத் தரும உபதேசம் செய்து அவனை நல்வழிப் படுத்தினாள்.

**முடிவுரை :** இவ்வாறு பலவகையாலும் பலருக்கும் உதவி செய்து இறுதியாக வஞ்சி நகரம் சென்றாள்; சமயவாதிகள் பற்பலரோடு வாதம் புரிந்தாள். பின்னர் காஞ்சிபுரத்திற்குச் சென்று அறவண அடிகளிடம் தத்துவஞானம் பெற்றுப் பிறவியை ஒழிக்கும் தவச்செயலில் ஈடுபட்டாள். மணிமேகலையின் வாழ்க்கை வரலாறு, நன்னெறிச் செலுத்தும் சிறந்த வழிகாட்டியாகும்.

## 5. கடற்கரையிலே

**முன்னுரை :** இலங்கையில் உள்ள ஈழக்கரைக்கு எதிரே அமைந்தது பாண்டி நாட்டுக் கிழக்கரை. இவ்வூரில் மகமதிய வகுப்பினர் வர்த்தகம் செய்து வளமாக வாழ்கின்றனர். இவ்வூரைச் சேர்ந்தவர்

உமறுப் புலவர். இவர் எட்டயபுரம் கடிகை முத்துப் புலவரிடம் கல்வி பயின்றவர்; நபிநாயகத்தின் வரலாற்றைச் சீறாப் புராணம் என்னும் காவியமாகப் பாடியவர்; சீதக்காதியின் நண்பர். இவர் முதுமையுற்ற நிலையில், சீதக்காதியின் பெருமைகளைப் பேசுவதாக இக் கட்டுரையை ரா. பி. சேதுப்பிள்ளை வரைந்துள்ளார்.

**சீதக்காதியின் சிறப்பு :** பாரிவள்ளல் வாழ்ந்ததால் பறம்புமலை புகழ் பெற்றது; சடையப்ப வள்ளலின் கொடைத் திறத்தால் வெண்ணெய் நல்லூர் விளக்கமுற்றது; சீதக்காதியால் கீழக்கரை சிறப் புற்றது. அவர் வணிகர்; பெருஞ் செல்வர்; இல்லை என்னாது வாரி வழங்கியவர்; காட்சிக்கு எளியவர்; கருணையின் உருவம். ஒரு காலத்தில் பாண்டி நாட்டில் பருவமழை பெய்யாது பஞ்சம் ஏற்பட்டது. அப்போது நெல் வைத்திருந்தவர்கள் மனம், கல்லாக ஆயிற்று. ஓர் தட்டிலே பொன்னும் ஓர் தட்டிலே நெல்லும் வைத்து விற்றார்கள். இந்நிலையைக் கண்டார் சீதக்காதி. "கார் தட்டினால் என்ன? பஞ்சம் முற்றினால் என்ன? என் களஞ்சிய நெல்லை—அல்லா தந்த நெல்லை அனைவருக்கும் தருவேன்" என்று மார் தட்டினார்.

சீதக்காதியின் புகழை வடநாட்டை ஆண்ட அவுரங்கசீப் என்னும் அரசன் அறிந்தான். சீதக்காதியை வடநாட்டுக் கலீபாவாக அரசாங்க அலுவலில் அமர்த்தினான். சிறிது காலம் அவ்வலுவலைப் பார்த்த சீதக்காதி தமிழின்மீது கொண்ட வேட்கையால் அரசனிடம் விடை பெற்றுத் தென்னாட்டிற்கு வந்தார். தென்னாட்டு முத்துக்களை அவுரங்க சீப்புக்குக் கையுறையாக அனுப்பினார். அவுரங்கசீப், சீதக்காதிக்குச் சந்தனமும் தேயிலையும் அனுப்பினான்.

சீதக்காதி, மகமதிய மதத்தில் பற்றுடையவர்; பரந்த நோக்கம் கொண்டவர்; சாதிமதம் பாராது அனைவரையும் ஆதரிப்பவர்; சைவ சமயத்தைச் சார்ந்த கந்தசாமிப் புலவரையும் நமசிவாயப் புலவரையும் பாராட்டிப் பரிசுகள் வழங்கியவர்; கற்றவரைச் சுற்றமாகக் கருதிய செம்மல். சதக்கத்துல்லா என்னும் சான்றோரை உயிர் நண்ப ராகப் பெற்றவர். உமறுப் புலவரைச்சதக்கத்துல்லாவிடம் ஆற்றுப்படுத்திய அண்ணல்.

சீதக்காதி இறந்தது கேட்டுப் புலவர்கள் அழுதனர்; கவிஞர்கள் கதறினர்; "கோமான்—கொடை மிகுந்த சீமான்—இறந்திட்டபோதே புலமையும் செத்ததுவே" என்று சரமகவி பாடினர். 'செத்தும் கொடை கொடுப்பான் சீதக்காதி' என்று மனம் உருகிப் போற்றினர். இவ்வாறு போற்றி அவர் சமாதியில் இன்றும் இரந்து நிற்பவர் பலர்.

**சீறப்புராணம் தோன்றிய வரலாறு :** சதக்கத்துல்லா, இசுலாமிய உலகத்தில் புகழ் பெற்றவர்; சான்றோர்; சீதக்காதிக்கு ஆன்ம நெறி புகட்டிய அறிஞர்; அல்லாவின் பெருமையைத் தமிழ்நாட்டார்

அனைவரும் அறிய வேண்டும் என விரும்பியவர்; இவரின் அறிவுரையைக் கேட்கும் பேறு, உமறுப் புலவருக்குக் கிடைத்தது. இவரின் அறிவுரையால் காந்தத்தின் வாய்ப்பட்ட இரும்புபோல் ஆயினர் உமறுப் புலவர்; நபிநாயகத்தின் மார்க்கத்தை நன்கு உணர்ந்தார். உமறுவின் நிலையினை அறிந்த சதுக்கத்துல்லா, "அப்பா! நபிநாயகத்தின் சேவைக்கு நீ ஆளாகி விட்டாய். அவர் பெருமையைத் தமிழகத்தார் அறியும் வண்ணம் ஒரு பெருங்காவியம் செய்க" என உமறுப் புலவரிடம் பணித்தார். உமறுப் புலவர், அவர் காலடியில் விழுந்து வணங்கிச் சீறப்புராணம் பாடத் தொடங்கினர். இப் புராணம், ஐயாயிரம் திருவிருத்தங்களைக் கொண்டது.

**முடிவுரை :** சீதக்காதி, கொடை கொடுத்தார்; சதக்கத்துல்லா மெய்யறிவு நல்கினர்; உமறுப் புலவர், சீறப்புராணம் பாடினர்.

## 6. செல்வங்கள்

**முன்னுரை :** திருவள்ளுவர் அன்பு, அறிவு, ஊக்கமுடைமை, பணிவுடைமை, அறம், கல்வி, கேள்வியுடைமை, பொருள், அருள், வேண்டாமை முதலியவற்றைச் செல்வங்களாகக் கூறியுள்ளார். இவற்றை விளக்கி டாக்டர் அ. சிதம்பரநாதன் எழுதியதே இக் கட்டுரை.

**அன்புச் செல்வம் :** இடம், பொருள், ஏவல் ஆகியவை இருந்தாலும் ஒருவரிடத்தில் அன்பு இல்லை என்றால் தக்க பயன் விளையாது. எனவே அன்பு, சிறந்த செல்வம் என்பது பெறப்படும். அன்பு என்பது, அறிந்தாரிடத்தில் தோன்றும் உள்ள நிகழ்ச்சி. இவ்வன்பின் அடிப்படையில் விருப்பமுடைமை தோன்றும்; விருப்பமுடைமையின் அடிப்படையில் நட்புத் தோன்றும். இந் நட்பு ஒரு பெருஞ் செல்வம். இது தோன்றுதற்குக் காரணம், அன்பே ஆகும்.

முன்பின் அறியாதவரிடத்துத் தோன்றும் அன்பையும் இரக்கத்தையும் அருள் என்று கூறுவார்கள். இவ் அருளினை, அன்பினுடைய குழந்தை என்பார் வள்ளுவர். பிறர்படும் துன்பத்தைப் பார்க்கும்போது ஏற்படும் அன்பே இவ் அருள் எனப்படும். அருளும் ஒரு செல்வமாகும். எனவே, அன்புச் செல்வத்திலிருந்து நட்புச் செல்வமும் அருட் செல்வமும் தோன்றும் என்பது பெறப்படும்.

**அறிவுச் செல்வம் :** அறிவுச் செல்வம் உடையவர்கள், எல்லாச் செல்வங்களையும் உடையவர்கள் ஆவர்; அறிவு இல்லாதவர், ஏனைய செல்வங்களை உடையவர்களாக இருந்தாலும் செல்வம் உடையவர்

அல்லர் என்று திருவள்ளுவர் கூறியுள்ளார். இதனால் அறிவுச் செல்வம், செல்வங்கள் பலவற்றிலும் சிறந்தது என்பது தெளிவாகும்.

**ஊக்கமுடைமை—செல்வம் :** பொருளுடைமை, சிறந்த செல்வம் அன்று. பொருள் ஒருகாலத்தில் நீங்கி விடவும் கூடும். ஆனால் பொருள், குறைவாக இருந்தாலும் ஒருவரிடத்தில் ஊக்கம் இருந்தால், பொருளை உண்டாக்கிக் கொள்ளுதல் இயலும். ஆதலால் ஊக்கமுடைமையே சிறந்த செல்வமாகும். "ஒருவருக்கு ஊக்கமுடைமையே நிலையான செல்வம்; ஏனைய செல்வம், நிலையில்லாது நீங்கிவிடும்" என்பது வள்ளுவர் கருத்து. மேலும் ஒருவருக்கு ஊக்கம் எவ்வளவு பெருகுகின்றதோ அவ்வளவு செல்வம் பெருகும். இதனை வள்ளுவர் "உரம் ஒருவற்கு உள்ள வெறுக்கை" என்று கூறியுள்ளார். எனவே ஒவ்வொருவரும் ஊக்கமுடன் உழைத்தல் வேண்டும். உழைத்தால் செல்வம் சேரும். 'முயற்சி திருவினையாக்கும்' என்பது திருவள்ளுவரின் நம்பிக்கை.

**பணிவுடைமை—செல்வம் :** பணிய வேண்டியவர்களிடத்தில் பணிய வேண்டும்; இதுவே பணிவுடைமை ஆகும். பணிந்தால் செல்வத்தினைப் பெருக்கிக் கொள்ளலாம். எனவே பணிவுடைமையும் செல்வமாகக் கருதப்படுகின்றது. பணிவுடைமை அனைவருக்கும் வேண்டும். ஆயினும் சிறப்பாகப் பொருட் செல்வம் உடையவர்களுக்கே பணிவுடைமை, இன்றியமையாதது. செல்வம் உடையவர், பணிவுடையவராக நடந்தால், அவரிடம் அனைவரும் நட்புக் கொள்வர்; அன்பு செலுத்துவர்; அதனால் செல்வம், மேன்மேலும் பெருகும்.

**அறச் செல்வம் :** அறத்தைத் திருவள்ளுவர் ஆக்கம் என்று கூறுவார். ஆக்கம் என்பது செல்வம். எனவே அறமும் செல்வம் ஆகும். அறம், சிறப்பைத் தரும்; செல்வத்தையும் தரும். ஆதலால் அறத்தைக் காட்டிலும் உயிருக்குச் சிறந்த செல்வம் யாது? எனக் கேட்பார் திருவள்ளுவர். இவ் அறவழியில் வரும் செல்வம், மேலும் மேலும் வளரும்.

**கல்விச் செல்வம் :** கல்விச் செல்வத்தைக் கேடில் விழுச் செல்வம் என்பார் திருவள்ளுவர். பொருட் செல்வத்தை அள்ளிக் கொடுத்தால் குறையும்; கல்விச் செல்வம் அள்ள அள்ளக் குறையாது; மாறாகக் கொடுக்கக் கொடுக்க வளரும். பொருட் செல்வத்தைப் பிறர் கவர்ந்து கொள்ளுதலும் உண்டு; இச் செல்வம் தீயினால் நீரினால் அழிந்துபடுதலும் உண்டு. ஆனால் கல்விச் செல்வமோ தீயினால் நீரினால் அழியாது; பிறரால் கவர்ந்து கொள்ளுதல் இயலாதது. ஒருவன் கற்ற கல்வி, அவனிடத்திருக்கும் அறியாமையையும் பிறரிடத்திருக்கும் அறியாமையையும் நீக்கும். மேலும், இக் கல்வியால் ஒருவர், இருந்த இடத்தில் இருந்து கொண்டே பல நாடுகளிலும் பல காலங்களிலும் நடந்தவற்றையும், நடக்கின்றவற்றையும் உணரமுடியும். இவற்றால் கல்வியைச் சிறந்த செல்வமாக நம் முன்னோர்கள் கருதினர்.

**கேள்வியுடைமை — செல்வம்:** அறிவு என்பது இயற்கை அறிவு; கல்வி என்பது கற்பதனால் வரும் அறிவு; கேள்வி என்பது, சான்றோரிடத்துக் கேட்பதால் வரும் அறிவு. இக் கேள்வி யறிவினைச் செல்வத்துட் செல்வம் என்றும் செல்வத்துள் சிறந்தது என்றும் வள்ளுவர் கூறுவார். ஒருவர் வீடுபேறு பெற்றபின் அங்கே பேசுவதும் இல்லை; கேட்பதும் இல்லை. பேசுவதும் கேட்பதும் இவ்வுலகில் நிகழ்வன. ஆதலால் மக்கள் பெற்றுள்ள சிறப்புக்களில் கேள்வியறிவு, தனிச் சிறப்பு வாய்ந்ததாகும். எனவே இது சிறந்த செல்வமாக மதிக்கப் பட்டது.

**பொருட் செல்வம்:** பொருட் செல்வம், இவ்வுலகத்துள்ள மக்களுக்கு மிகவும் பயன்படுவது ஆகும். இச் செல்வம் இல்லாதவர்கள், இவ்வுலக இன்பங்களை அநுபவிக்க முடியாது. மேலும், மதிப்பில்லாதவரையும் பொருட் செல்வம் மதிப்புடையவராகச் செய்துவிடும். இந்த ஆற்றல் பொருட் செல்வத்திற்கே உண்டு. எனவே ஒவ்வொருவரும் பொருளீட்ட வேண்டும். பொருளீட்டும்போது நல்வழியில் அது ஈட்டப்படவேண்டும். பிறரைத் துன்புறுத்திப் பொருள் சேர்த்தல் கூடாது. அருளோடும் அன்போடும் பொருளைச் சேர்த்தல் வேண்டும். இவ்வாறு பொருளைச் சேர்த்தால் அறமும் இன்பமும் ஆகிய இரண்டு செல்வங்களும் அவருக்குக் கிடைக்கும். அருளும் அன்பும் இல்லாமல் சேர்க்கும் பொருள், சிறந்த பொருளாகாது. அவ்வாறு பொருள் ஈட்டுதலை விரும்பவும் கூடாது.

ஒருவரிடம் செல்வம் இருக்கும் காரணத்தினால் அவரை நல்ல குணம் உடையவர் என்று கூற முடியுமா? இதனாலேயே வள்ளுவர், "திருவேறு தெள்ளியர் ஆதலும் வேறு" என்று கூறினர். எனவே பெருஞ் செல்வம் உடையவர்கள் நல்ல குணம் வாய்க்கப் பெற்றவர்களாகத் திகழவேண்டும். அவ்வாறு திகழப் பெருஞ் செல்வர்கள் பிறருக்குக் கொடுத்துத் தாமும் துய்க்கவேண்டும். அவ்வாறு இல்லாமல் பொருளைச் சேர்த்து வைப்பதால் பயன் இல்லை. பொருளைச் சேர்த்து வைத்துப் பாதுகாப்பவர்கள் பேயைப் போன்றவர்கள். இவர்கள் சேர்த்து வைக்கும் பொருட் செல்வம், ஊர் நடுவில் பழுத்த நச்சு மரத்தைப் போன்றது. நச்சு மரத்தின் பழங்களால் பயன் இல்லை; மேலும் அவை உயிர்களின் கையில் அகப்பட்டு அவ் உயிர்களால் உண்ணப்பட்டால் தீமைகூட ஏற்படும். அதுபோல நல்ல முறையில் செலவு செய்யாதவர்கள் கையில் அகப்பட்ட செல்வம், நல்லவர்களுக்குப் பயன்படாது. அச் செல்வத்தால் பயனும் இல்லை. மேலும் அச் செல்வம் தீயவர் கையில் அகப்படுவதால் நல்லவர்களுக்குத் தீமையும் விளையும்.

செல்வம், பாலைப் போன்றது. பால் வைக்கின்ற பாண்டம் நல்லதாக இல்லாமல் இருந்தால் பால் திரிந்துவிடும். அதுபோலச் செல்வம், பண்பில்லாதவர்கள் கையில் அகப்பட்டால் தீயது பயக்கும். எனவே செல்வத்தை நல்வழியில் பயன்படுத்தல் வேண்டும். நல்லவர்

களுக்கு ஏற்பட்ட வறுமையைக் காட்டிலும் கல்லாத கயவர்களிடத்தில் உள்ள செல்வம், மிகவும் துன்பம் செய்யும் என்பார் திருவள்ளுவர். கல்லாத கயவர்களிடத்தில் செல்வம் இருந்தால், அச் செல்வத்தால் சுற்றத்தார்களுக்கும் நல்லவர்களுக்கும் பயன் இல்லை; மற்றையோரே பயன் பெறுவர். இதனாலேயே கல்லாத கயவர்களிடத்தில் உள்ள செல்வம் தீயது பயக்கும் என்று கூறினர். இதனால் செல்வம், பிறருக்குப் பயன்பட வேண்டும் என்பது தெளிவாகும். இவ்வாறு பயன் படும் செல்வம், ஊர் நடுவே பழுத்த பயன் மரம் போன்றது. இத்தகைய பொருட் செல்வமே, உண்மையான செல்வமாகும்.

**அருட் செல்வம் :** பொருட் செல்வம் இல்லாதவர்களுக்கு இவ்வுலக இன்பம் இல்லை. அருட் செல்வம் இல்லாதவர்களுக்கு மேலுலக இன்பம் இல்லை. அருட் செல்வம் என்பது, ஒருவரிடத்து இரக்கம் கொண்டு அவருக்கு உதவுவதாகும். இவ் அருட் செல்வமே பொருட் செல்வத்தைக் காட்டிலும் உயர்ந்தது; செல்வங்களுள் செல்வமானது; ஏனெனில் பொருட் செல்வம், தகுதியில்லாதவரிடத்தும் உள்ளது. அதனால் அப் பொருட் செல்வம், பெருமை இழந்துவிடும். ஆனால் அருட் செல்வம், தகுதியுடைய—இரக்க உணர்ச்சியுடைய பெருமக்களிடத்திலேயே தோன்றும்.

இல்லறத்தாருக்கு அன்பு வேண்டும்; துறவறத்தார்க்கு அருள் வேண்டும். இறைவன் மக்களிடத்துக் காட்டும் அருள், பேரருள் என்று சொல்லப்படும். இறைவன் எல்லோரிடத்தும் அருள் செலுத்து கின்றான். அவனுடைய பேரருளால் ஆட்கொள்ளப்பட்டவர் மணி வாசகர். அவர் இறைவனுடைய பேரருளை எண்ணி எண்ணி இன் புற்றவர்; அவ் அருள் என்றும் நிலைத்திருக்கவேண்டும் எனக் கருதியவர். இந் நோக்கத்துடன் பின் வருமாறு இறைவனை வேண்டுகின்றார். “எட்டுத் தோள்களையும் மூன்று கண்களையும் உடைய எம் தலைவனே! உமை யம்மையை ஒரு பாகத்தில் உடையவனே! எம் கோவே! மலையை ஒத்த குற்றங்களையும் நீ குணமாகக் கொண்டால் கெட்டது என்ன? ஒன்றற்கும் பற்றாத நாய் போன்ற என்னை அன்று ஆட்கொண்ட பேரருள், இன்று இல்லாமல் போயிற்றா? இறைவனே! திருவுள்ளம் இரங்குவாயாக” என்பதாம். இதனால் இறைவனின் பேரருள், இணை பற்றது என்பதும், குற்றங்களை யெல்லாம் பொடியாக்கிக் குணமாக மாற்றிக்கொள்ளும் இயல்புடையது என்பதும் விளங்கும்.

**வேண்டாமை—செல்வம் :** வேண்டாமை என்பது சிறந்த செல்வம்; இவ்வுலகில் அதற்கு இணையாக வேறு ஒரு செல்வம் இல்லை. கடவு ளிடத்திலும்கூட ஒன்று வேண்டாமல் இருப்பது நல்லது. கடவுள், ஒருவர் வேண்டுவது முழுதையும் அறியக் கூடியவர்; அறிந்து அவற்றைத் தரக் கூடியவர். இது வேண்டும், அது வேண்டும் என்று இடைவிடாது வேண்டிக்கொண்டேயிருக்கின்ற திருமாலுக்கும் நான்முகனுக்கும் அருமை

யானவர். அவரே விரும்பி வேண்டுவன கொடுப்பார். இக் கருத்துக் களை மணிவாசகர், திருவாசகத்தில் அழகாகக் கூறியுள்ளார். ஒன்றை விரும்பாமல் இருப்பது நல்லது. விரும்பி அது கிடைக்கவில்லை என்றால் ஏமாற்றம் ஏற்படும்; இவ் ஏமாற்றத்தினால் துன்பப் படுபவர் பலர் ஆவர். எனவே எந்தப் பொருளின்மீதும் விருப்பம் இல்லாத வேண்டாமையே போற்றத்தக்க செல்வமாகும் என்பது பெறப்படும்.

**முடிவுரை :** செல்வம் பலவிதப்படும். அவற்றுள் கேள்விச் செல்வம், அறிவுச் செல்வம், கல்விச் செல்வம், அருட் செல்வம் என்பன உயர்ந்தன. வேண்டாமை என்பது மிகச் சிறந்த செல்வம் ஆகும். பொருட் செல்வம் உடையவர், பொருளைச் சேர்த்து வைக்காமல் தாமும் துய்த்துப் பிறரும் இன்பமுறச் செய்யவேண்டும்.

# 7. கல்வெட்டுக்கள்

**முன்னுரை :** எகிப்து, சீனம், பாபிலோனியா முதலிய நாடுகளில் தோன்றிய நாகரிகங்கள் மிகப் பழமையானவை. இந் நாடுகளில் கிடைக்கும் எழுத்தின் வளர்ச்சிக் குறிகளையும், மெக்ஸிகோ, ஈஸ்டர் தீவுகள் முதலியவற்றில் காணப்படும் எழுத்துக் குறிகளையும் ஆய்வாளர்கள் ஆராய்ந்து, 'இவ்வெழுத்து முறைகளின் தோற்றமும் வளர்ச்சியும் ஒரு படியினவாகவே காணப்படுகின்றன' என்று கூறியுள்ளனர். இவர்களின் ஆராய்ச்சியால் பண்டையெழுத்துக்களைப்பற்றி அறிந்து கொள்கின்றோம்.

**பண்டை எழுத்துக்கள் :** முதலில் உடும்பைக் குறிக்க உடும்பின் உருவம் வரையப்பட்டது. இது 'உருவெழுத்து' எனப்படும். பின்னர் இவ் உடும்பின் உருவம், உடும்பைக் குறிக்காமல், அது வாழ்ந்த நிலத்தைக் குறிக்க வரையப்பட்டது. இது சித்திர சங்கேதக் குறி (குழூஉக் குறி) எனப்படும். சீனம், எகிப்து முதலிய நாடுகளில் இச் சங்கேதக் குறிகள் கிடைத்துள்ளன. நடையைக் காட்டக் கால்கள், பார்வையைக் காட்டக் கண்கள், அதிகாரத்தினை உணர்த்தக் கை, பலத்தை உணர்த்தத் தோள் எனச் சங்கேதக் குறிகள் வரையப்பட்டன. நாளடைவில் ஒரு பொருளைக் குறிக்க வரையப்பட்ட சித்திரம், அப்பொருளின் பெயரைக் குறிப்பதாக மாறியது. சான்றாக, வேல் என்பதை உணர்த்தும் சித்திரம், வேல் என்னும் பெயரைக் குறிக்கத் தொடங்கியது. இதுவே 'ஒலி எழுத்து' எனப்படும்.

சங்கேதக் குறிகளைக் கொண்டு கருத்துக்கள் முழுமையும் உணர்த்த இயலவில்லை. இதனால் வார்த்தைகளை அசைகளாகவும் சீர்களாகவும்

பிரித்து ஒவ்வொன்றிற்கும் ஒவ்வோர் உருவத்தை எழுதினர். இம் முறையிலும் இடையூறு ஏற்பட்டது. எனவே ஒவ்வொரு சொற்களையும் உணர்த்த ஒவ்வொரு குறியைத் தேர்ந்தெடுத்தனர். இவ்வாறு தோன்றி வளர்ந்ததே 'வரிவடிவம்' ஆகும்.

**தமிழ்நூற் சான்றுகள் :** சிந்துவெளி நாகரிகப் புதை பொருள்கள் மீது சித்திர சங்கேதக் குறிகள் பொறிக்கப்பட்டுள்ளன. எனவே இக் குறிகள், இந்தியாவிற்குப் புதியன அல்ல. இந்தியாவிலும் தமிழ் நூல்களில் எழுத்துக்களைப் பற்றிய செய்திகள் விரிவாகக் கூறப்பட்டுள்ளன. வேறு எந்த மொழி நூல்களிலும் இவ்வளவு விரிவான செய்திகளைக் காண முடியாது. நன்னூல் என்னும் இலக்கண நூலுக்கு உரை எழுதிய மயிலை நாதர், எழுத்துக்களை (1) உருவெழுத்து, (2) தன்மையெழுத்து, (3) உணர்வெழுத்து, (4) ஒலியெழுத்து என்று பிரித்துள்ளார். ஓவியன் தீட்டும் ஓவியத்தைப்போல எழுதுவது, உருவெழுத்தாகும். ஒரு குறியால் அக் குறிக்கு உரிய பொருளை உணர்த்துவது உணர்வெழுத் தாகும். செவிக்குப் புலனாவது ஒலியெழுத்தாகும். முதற்காரணமும் துணைக்காரணமும் துணைக் காரணத்தொடு தொடர்ந்த உணர்வும் ஆகிய இவற்றோடு கலந்த உதானன் என்னும் காற்றால் கருத்து வழியாகத் தோன்றி ஒலிப்பது தன்மையெழுத்தாகும். இவ் விளக்கங்களை யாப்பருங் கலம் என்னும் நூலின் இறுதிச் சூத்திர உரையால் அறிகின்றோம். சிலப்பதிகார காலத்தில் சித்திரவெழுத்துக்கள், குறிப்பிட்ட சில காரியங் களுக்குப் பயன் படுத்தப்பட்டன என்று தெரிகின்றது.

**இந்திய எழுத்துக்கள் :** ஆராய்ச்சியாளர்கள் ஒப்புக்கொண்ட இந்திய எழுத்துக்கள் (1) பிராமி, (2) கரோஷ்டி, (3) திராவிட (4) யவனாணியா என்னும் நான்காகும். யவனாணியா என்பது கிரேக் கரும் அவரைச் சார்ந்தவரும் பயன்படுத்திய எழுத்துக்கள் ஆகும். வடமேற்கு இந்தியாவின் ஒரு பகுதியில் கி. மு. 4ஆம் நூற்றாண்டில் வழக்கில் இருந்த எழுத்து முறை, கரோஷ்டி எனப்படும். அசோக னுடைய கல்வெட்டுக்களிலும் தென்னிந்தியக் குகைகளிலும் காணப்படும் எழுத்துமுறை, பிராமி என்று கூறப்படும். யவனாணியா, கரோஷ்டி என்னும் இரண்டுக்கும் மாறுபட்டது பிராமி ஆகும். இப் பிராமி எழுத்து முறையினைத் தமிழுக்கு என அமைக்கப்பட்ட எழுத்து முறை என்று ஆய்வாளர்கள் கருதுவர். வட்டெழுத்து, உருவெழுத்து முதலிய நிலைகளைத் தாண்டி அகரவரிசை எழுத்துக்களைப் பெற்ற பிராமிலிபி, கி. மு. 3ஆம் நூற்றாண்டில் தமிழகத்தில் புகுந்தது. தமிழ் நாட்டு நிலைக் கேற்பச் சிறிது சிறிதாக வளர்ச்சி பெற்றது; வட்டெழுத்தாக மாறியது. இதுவே திராவிட என்பது ஆகும். இவ் வட்டெழுத்து முறை, ஒரு காலத்தில் தமிழகம் முழுமையும் பரவியிருந்தது. பல்லவராட்சி ஏற்பட்ட பின், பிராமிலிபியின் வழிவந்த கிரந்தமும், கிரந்தத் தமிழும் தொண்டை நாட்டிலும், காவிரி வரையுள்ள தமிழ்நாட்டிலும் வழங்கப்பட்டன. இக்

காலத்தில் பாண்டிய—சேர—கொங்கு நாடுகளில் வட்டெழுத்துப் பயன் பட்டது. பல்லவர்க்குப் பின், சோழர் காலத்தில் கிரந்தத் தமிழ், பெரிதும் வழக்கில் இருந்தது. விஜய நகர அரசர் காலத்திலும், மகாராஷ்டிர மன்னர்கள் காலத்திலும் நாகர எழுத்துக்கள் பயன்படுத்தப்பட்டன.

**இந்திய சாசனங்கள் :** அசோகன் காலத்துக் கல்வெட்டுக்கள், பிராமி எழுத்துக்களால் ஆனவை; பௌத்த சமய உண்மைகளைப் பரப்ப எழுந்தவை. அவைகளுக்குப்பின் தோன்றிய பட்டயங்களும் கல்வெட்டுக் களும் அறிஞர்களுக்கும், வீரர்களுக்கும், கோயில்களுக்கும் தானங்கள் வழங்கியபோது வரையப்பட்டவை. இக் கல்வெட்டுக்களால் இலக்கிய உண்மைகள் பலவற்றை நாம் உறுதி செய்ய முடிகின்றது. அவைகளைக் காண்போம்.

1. கி. மு. 170இல் கலிங்கப் பேரரசனாக இருந்த காரவேலன் என்பவன், உதயகிரியில், ஹதிகும்பா தூணை நாட்டினான். இத் தூணில் பொறிக்கப்பட்ட கல்வெட்டில் தனக்கு 117 ஆண்டுகட்கு முன், தமிழக வேந்தர் ஒற்றுமையுடன் வலிமை பெற்றிருந்தனர் என்று குறித்துள்ளான். இவ்வாறு தமிழரசர்கள் இருந்த காலம் கி. மு. 3ஆம் நூற்றாண்டு என்பது, இக் கல்வெட்டால் தெரிகின்றது. சங்க நூல்களில், மோரியர்கள் தமிழ கத்தின் மீது படையெடுத்துப் படுதோல்வியடைந்தார்கள் என்று கூறப் பட்டுள்ளது. மோரியர்கள் தோல்வியடையக்காரணம், தமிழரசர்களின் ஒற்றுமையே ஆகும். காரவேலனின் கல்வெட்டுக் கூறும் செய்தியும் சங்க நூல்கள் கூறும் செய்தியும் ஒன்றென்றே கருதலாம். எனவே மோரி யர்கள், தமிழகத்தின் மீது படையெடுத்த காலம், கி. மு. 3ஆம் நூற்றாண்டு என்று தெரிகின்றது.

2. கி. பி. 340இல் சமுத்திரகுப்தன், தென்னிந்தியாவின் மீது படை யெடுத்து வந்தான. அவன் பெற்ற வெற்றியை அலகாபாத்தில் அமைந்த தூணில் உள்ள கல்வெட்டு ஒன்று குறிப்பிடுகின்றது. அக் கல்வெட்டில், காஞ்சியை விஷ்ணு கோபன் என்ற பல்லவன் ஆண்டு வந்தான் என்ற குறிப்பு உள்ளது. பல்லவர் என்ற சொல், சங்க இலக்கியங்களில் இல்லை. இச் சொல், கி. பி. 340இல் கல்வெட்டில் குறிக்கப்பட்டிருத்தலால், இச் சொல் இல்லாத சங்க இலக்கிய இறுதிக் காலம், கி. பி. 300 என்று கொள்ளலாம்.

3. இரண்டாம் புலிகேசி, கி. பி. 642இல் நரசிம்மவர்ம பல்லவனிடம் தோற்றான். அவனைத் தோற்கடித்தவர் நரசிம்மவர்மபல்லவனின் படைத் தலைவரான சிறுத்தொண்டர் ஆவார். இவர் இவ்வெற்றியைக் குறிக்க வாதாபியில் ஒரு வெற்றித் தூணை எழுப்பினார்; வெற்றி பெற்றதை அத் தூணில் பொறித்தார். இவரின் பெருமைகளைச் சேக்கிழார் பெரிய புராணத்தில் கூறியுள்ளார். வாதாபியில் உள்ள தூணில் காணப்படும் கல்வெட்டால் சிறுத்தொண்டர் காலம், கி. பி. ஏழாம் நூற்றாண்டு

என்பது உறுதிப்படும். மேலும் இதனல் அவர் காலத்தில் வாழ்ந்த திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர், நின்ற சீர் நெடுமாறன் முதலியோர் காலமும் உறுதியாகின்றது.

மேற்காட்டியவாறு மூன்று எடுத்துக்காட்டுக்களிலிருந்து வரலாற்றை எழுத, இலக்கியத்திற்கு உறுதுணையாக இந்திய சாசனங்கள் விளங்குகின்றன என்பது பெறப்படும்.

**மெய்க்கீர்த்தி :** பிற்காலச் சோழப் பேரரசர்களுள் முதலாம் இராசராசன் 'மெய்க்கீர்த்தி'யை ஏற்படுத்தினன். அரசர்கள் பெற்ற வெற்றிகளை விரிவான முறையில் முறைப்படுத்திக் கூறுவது இம் மெய்க்கீர்த்தியாகும். இவற்றைத் தென்னிந்தியக் கல்வெட்டுக்களிலும் பட்டயங்களிலும் காணலாம். இம் மெய்க்கீர்த்தி முறையை இராசராசனுக்குப் பின் வந்த சோழப் பேரரசர் அனைவரும் பின்பற்றினர். இராசராசன் மெய்க்கீர்த்தி ஒன்றனைக் காண்போம்.

''ஸ்வஸ்திஸ்ரீ திருமகள்போலப் பெருநிலச் செல்வியும், தனக்கே உரிமை பூண்டமை மனக் கொளக், காந்தளூர்ச்சாலை கலமறுத்தருளி, வேங்கை நாடும் கங்கபாடியும், நுளம்பபாடியும், குடமலை நாடும், கொல்லமும், கலிங்கமும், முரட்டொழில் சிங்களர் ஈழமண்டலமும், இரட்டபாடி ஏழரையிலக்கமும், முன்னீர்ப் பழந்தீவு பன்னீராயிரமும், திண்டிறல் வென்றித் தண்டாற் கொண்ட, தன்னெழில் வளர் ஊழியுள் எல்லா யாண்டும், தொழுதகை விளங்கும் யாண்டே செழியரைத், தேசுகொள் ஸ்ரீ கோ ராஜகேசரி வர்மரான ஸ்ரீ ராஜராஜ தேவர்க்கு யாண்டு 25 வது...''

இம் மெய்க்கீர்த்தியால் இராசராசன் தன் 26 ஆம் ஆட்சியாண்டுக்குள் சேரநாடு, வேங்கைநாடு, கங்கபாடி, நுளம்பபாடி, தடிகைபாடி, குடமலைநாடு, கொல்லம், கலிங்கம், ஈழமண்டலம், இரட்டபாடி ஏழரையிலக்கம், முன்னீர்ப் பழந்தீவு பன்னீராயிரம் ஆகியவற்றை வென்றான் என்பது விளங்கும். இத்தகைய வரலாற்றுச் செய்திகளுக்கு மெய்க்கீர்த்தி, துணையாக இருக்கின்றது.

**கல்வெட்டுக்கள் :** சோழப் பேரரசர்கள், சமய உணர்ச்சி மிக்கவர்கள்; அவர்கள் காலத்தில் கோவில்கள் சிறப்புப் பெற்றன. அரசன் முதல் சாதாரணக் குடிமகன் வரை அனைவருமே கோவிலை உயிராகக் கருதினர்; அவற்றின் வளர்ச்சிக்குத் தம்மால் இயன்ற அறங்களைச் செய்தனர். அவ்வறங்களைப் பின் வந்தோர் அறிந்து கொள்வதற்காகவும் செம்மையாகச் செய்வதற்காகவும் அவ் அறச் செயல்களைக் கல்வெட்டுக்களில் பொறித்தனர். இத்தகைய கல்வெட்டுக்கள் சோழர் காலத்தில் ஆயிரக் கணக்கில் ஏற்பட்டன.

**கல்வெட்டுக்கள் உணர்த்துவன :** கல்வெட்டுக்கள் அனைத்தும் வேந்தரின் போர்ச் செயல்கள், அரசியல் அமைப்பு, கொடைச் சிறப்பு, சமய நிலை, நாட்டு நடப்பு, உள்நாட்டு வெளிநாட்டு வாணிகம், கைத் தொழில், பயிர்த் தொழில், நாட்டுப் பொருள்கள், அயல் நாட்டுறவு, நாட்டில் வழங்கிய எண்ணல் எடுத்தல் அளவைகள், பலவகை ஆடைகள் அணிகள் முதலியன பற்றி விரிவாகக் கூறுகின்றன; இலக்கியங்களில் விளங்காத பகுதிகள் பலவற்றை விளக்குகின்றன. சிறுத்தொண்டர், வாதாபியை வென்ற காலத்தை வாதாபிக் கல்வெட்டால் அறிவதால், கால ஆராய்ச்சிக்கு உதவுகின்றன; மேலும் இலக்கியப்படைப்புக்கும் இக் கல்வெட்டுக்கள் துணையாக அமைகின்றன. சான்றாக ஒன்றனைக் காண்போம்.

மனுவேந்தன், மிகச் சிறந்த நீதியாளன். அவன் மகன் தேரூர்ந்து செல்லும்போது, பசுக்கன்று தேர்க் காலில் அகப்பட்டு இறந்து விட்டது. இதனையறிந்த மனுவேந்தன், தன் மகனைத் தேர்க்காலில் இட்டுக் கொல்லுமாறு அமைச்சனுக்குப் பணித்தான்; மனம் வராத அமைச்சன் தற்கொலை செய்து கொண்டான். பின்னர் மனுவேந்தனே, தன் மகனைத் தேரூர்ந்து கொன்றான்.—இச் செய்தி, திருவாரூர்க் கோயிலில் உள்ள பெரிய கல்வெட்டில் உள்ளது. இச் செய்தியைப் படித்த சேக்கிழார், இச் செய்தியை விரிவாகப் பெரிய புராணத்தில் பாடி யுள்ளார். சேக்கிழார், இரண்டாம் குலோத்துங்கனின் காலத்தவர். இரண்டாம் குலோத்துங்கனின் தந்தை விக்கிரம சோழன். இவனுடைய அமைச்சன், மனுவேந்தனின் ஆணையை நிறைவேற்றாது உயிர் விட்ட அமைச்சனது பரம்பரையில் வந்தவன்; பாலையூருடையான் சந்திரசேகரன் ஆதிவிடங்கனான குலோத்துங்க சோழ மாவலிவாணராயன் என்னும் பெயருடையவன். இவனை அமைச்சனாகக் கொண்ட விக்கிரமசோழன் காலத்திலேயே மேற்கூறிய கல்வெட்டுப் பொறிக்கப் பெற்றது. எனவே சேக்கிழாருக்குச் சிறிது முன்னர் இக் கல்வெட்டு வெளியிடப்பட்டது என்பதும், அதனையறிந்து சேக்கிழார் தம் இலக்கியப் படைப்பில் ஒரு பகுதியை உருவாக்கினார் என்பதும் பெறப்படும். சுந்தரமூர்த்தி நாயனாரின் தாயார் இசைஞானியார்; இவ்வம்மையார், திருவாரூர்க் கோயில் தலைமை அர்ச்சகரான ஞானசிவாசாரியாரின் மகளார் என்பனவும் திருவாரூர்க் கோயில் கல்வெட்டாலேயே தெரிகின்றன.

இவ்வாறு கல்வெட்டுக்கள் உணர்த்தும் செய்திகள் மிகப் பல. இவற்றை அக்கால மக்கள் போற்றி வந்தனர்; சிறிதும் பழுதாகாதபடி எண்ணெய் பூசிக் காத்தனர். கல்வெட்டுக்களுக்குச் செப்பேடுகளில் படியும் எடுத்து வைத்தனர்; பழுதுற்ற கோயிலைப் பழுது பார்க்கும்போது அவற்றில் உள்ள கல்வெட்டுக்களைப் பனையோலைகளில் எழுதிக் கொண் டனர். பின்னர், திருப்பணி முடிந்ததும், ஊரவையோர் காணக் கோவிற் சுவர்களில் பொறித்தனர்.

**கல்வெட்டுக்களில் ஆராய்ச்சி :** இடைக் காலத்தில் கல்வெட்டுக்களை யாரும் கவனிக்கவில்லை. ஆங்கிலேய ஆட்சி ஏற்பட்டபின், இந்தியாவிற்கு வந்த மேனுட்டறிஞர்கள் பலர், இந்திய சாசனங்களைப் படித்தறிய முற்பட்டனர்; அவற்றைப் படியெடுத்தனர். "இண்டியன் ஆண்டிகுவரி" முதலிய ஆங்கிலத் தாள்களில் வெளியிட்டனர்; ஆராய்ச்சிகளும் எழுதினர்; அவர்களுள் ஃபிலீட், பேராசிரியர் வெப்பர், எம். ஏ. பாரத், எச். ஜே. ஸ்டோக்ஸ், மெக்கன்ஸி, சர். டபிள்யூ, எலியட், சி. பி. பிரௌன் என்பவர்கள் குறிப்பிடத்தக்கவர்கள். இக் காலத்தில் டாக்டர் உல்ஸ் என்ற ஜெர்மானியர் இந்தியாவிற்கு வந்தார். ஆயிரக் கணக்கான கல்வெட்டுக்களைப் பார்த்தார். அப்போது இந்தியாவில் அரசப் பிரதிநிதியாக இருந்த ரிப்பன் பிரபுவிடம் (1884—1888) இந்தியக் கல்வெட்டுக்களின் அருமைகளைக் கூறி, கல்வெட்டு இலாகா ஒன்றை ஏற்படுத்தினர். இவ் இலாகா, கல்வெட்டுக்களைப் படியெடுத்து ஆராய்ச்சி செய்யும் பணியில் ஈடுபட்டது. இதன் பயனுகத் "தென்னிந்தியக் கல்வெட்டுக்கள்" என்னும் பெயருடன் ஆராய்ச்சி விளக்கங்களுடன் மூன்று தொகுதிகள் வெளிவந்தன. உல்ஸ் துரை மகனுருக்குப் பின், பத்துத் தொகுதிகள் வெளிவந்தன.

# கட்டுரைத் திரட்டு

(Selections in Prose—Detailed)

## பகுதி II — தமிழ்

### பிரிவு 'ஆ'

## 8. ஊஞ்சல் திருவிழா

**முன்னுரை :** குவாரிட்ச் வேல்ஸ் என்பவர், சயாம் அரண்மனைச் சடங்குகள் என்னும் நூலொன்று எழுதியுள்ளார். இந்நூலில் சடங்குகளைப் பற்றிய செய்தி மிக விரிவாகக் காணப்படுகிறது. இவர், இந்தியப் பண்பாடு, சயாம் வரை பரவியது என முடிவு கூறுகின்றார். அவ்வாறு பரவிய பண்பாட்டுச் சடங்குகளில் ஊஞ்சல் திருவிழா ஒன்று.

**ஊஞ்சல் :** சயாம் நாட்டின் தேசியத் திருவிழாவை 'லோஜின் ஜா' என்பர். இதற்கு 'ஊஞ்சலை வலிப்பது' என்பது பொருள். இத்திருவிழாவிற்கென்றே நிலையாக இரண்டு தேக்குத் தூண்கள் உள்ளன. ஒவ்வொன்றும் 80 அடி உயரம் இருக்கும். இவ்விரண்டு தூண்களையும் உச்சியில் உள்ள குறுக்குமரங்கள் ஒன்றுக்கி நிற்கும். அத்தூண்கள், உச்சிப் புறத்து உட்பக்கமாகச் சிறிது வளைந்து தோன்றும். குறுக்கு மரத்திலிருந்து கயிறுகட்டி ஊஞ்சற் பலகையைத் தொங்கவிடுவார்கள். இவ் ஊஞ்சல்மரம், முற்காலத்தில் பார்ப்பனர் கோயில்களுக்கு எதிரேயிருந்த புல்வெளியில் அமைக்கப்பட்டிருந்ததாம். பிற்காலத்தில் அந்த இடத்திலிருந்து 300 அடி தூரத்தில் வெட்டவெளியில் அமைக்கப்பட்டதாம்.

**ஊஞ்சலாட்டம் :** ஊஞ்சல் திருவிழா, மூன்றுநாட்கள் நடைபெறும். முதல் நாள் காலையில் ஊர்வலமாக ஊஞ்சல் இருக்கும் இடத்திற்கு வருவார்கள்; சில சடங்குகள் நடைபெறும். பின்னர் ஊஞ்சலாட்டம் தொடங்கும். இதற்கு முன் கோயிலிலிருந்து பார்ப்பனர்கள் ஊஞ்சற் பலகையைக் கொண்டுவருவார்கள். அதனைத் தொங்கவிடுதல் போன்ற சடங்கு ஒன்றனை நிகழ்த்துவார்கள். பின்னர் அப்பலகையைக் கொண்டுசென்று விடுவார்கள். பின் வேறொரு பலகையில் ஊஞ்சலாட்டம் தொடங்கும்.

ஊஞ்சல் திருவிழாவில் ஊஞ்சலாடுவோர் பாம்புமுடி அணிந்திருப்பர். இதனால் இவர்களை நாகவழிபாட்டோடும் நாகர்களோடும் தொடர்புபடுத்திக் கூறுவர். பன்னிரண்டு பேர்கள் ஊஞ்சலாட வருவார்கள். இவர்கள் நான்குபேர் கொண்ட மூன்று பிரிவுகளாகப் பிரிந்திருப்பார்கள்,

ஒன்றன்பின் ஒன்றாக இம்மூன்று பிரிவுகளும் ஊஞ்சலில் ஆடும். ஊஞ்சல், கிழக்கு மேற்காக அமைந்திருக்கும். ஊஞ்சலுக்குச் சிறிது மேற்குப் புறத்தில் ஒரு மூங்கில் கழி இருக்கும். அதில் ஒவ்வொரு குழுவும் ஆடும் போதும் ஒரு பொற்கிழி கட்டுவார்கள். முதற் பிரிவினர் ஊஞ்சற் பலகையில் ஏறியதும், அப்பலகையிலிருந்து கட்டப்பட்ட கயிற்றை ஒருவன் கீழிருந்து இழுப்பான்; ஊஞ்சல் ஆடும். அப்போது ஊஞ்சற் பலகையில், பொற்கிழியை நோக்கி முன்னால் அமர்ந்திருப்பவன், அப்பொற்கிழியைத் தன் பல்லால் கடித்திழுக்க முயல்வான். அவனுடன் இருப்பவர்கள், பொற்கிழியை எட்டும்படி ஊஞ்சலை விரைவாக உந்துவார்கள். முன்னால் அமர்ந்திருப்பவன், கோமாளி வேடிக்கையெல்லாம் காட்டிப் பொற்கிழியைப் பல்லால் கடித்து இழுத்து விடுவான். உடனே கீழே உள்ளவர்கள் தாளம் கொட்டுவார்கள்; சங்கம் முழங்குவார்கள்; மகிழ்ச்சி ஆரவாரம் செய்வார்கள், பொற்கிழியை எடுப்பவன் தவறிக் கீழே விழுந்துவிட்டால் அது நாட்டிற்கு ஏற்படப் போகும் தீமையைக் காட்டுவதாக எண்ணுவார்கள்.

முதற் பிரிவினர் ஆடிப் பொற்கிழியைப் பெற்றபின், இரண்டாம் பிரிவினரும், பின்னர் மூன்றும் பிரிவினரும் ஆடிப் பொற்கிழியை எடுப்பார்கள். இத்திருநாளில் இரண்டாம் நாளில் ஊஞ்சலாட்டம் நிகழாது; மூன்றும் நாள் காலையிலும் நிகழாது; மூன்றும் நாள் மாலை மீண்டும் நடைபெறும். இந்த ஊஞ்சலாட்டம், சிவன் கோயில், பெருமாள் கோயில் கட்டடங்களுக்குள்ளும் நடைபெறுகின்றது. அப்போது கடவுளின் திருமேனியை அக்கோயிலினுள் அமைந்த ஊஞ்சலில் வைத்து ஆட்டுவார்கள்.

**ஊஞ்சல் திருவிழாவும் டோலோ யாத்திரையும் :** வங்காளத்தில் நடைபெறும் திருவிழா ஒன்றிற்கு 'டோலோ யாத்திரை' என்ற பெயர் வழங்கப்படுகின்றது. டோலோ—ஊஞ்சல்; யாத்திரை—திருவிழா. எனவே இதன் பொருள் ஊஞ்சல் திருவிழா என்பதாம். இத்திருவிழாவும் சயாம் நாட்டில் நடைபெறும் 'லோஜின் ஜா' என்னும் திருவிழாவும் ஒன்று போல் தோன்றுகின்றது என்பர். சயாம் மொழியில் 'லோஜின் ஜா' என்பதற்கு 'ஊஞ்சலை இழுப்பது' என்பது பொருள். ஊஞ்சலைக் கீழே யுள்ள ஒருவன் கயிற்றினால் இழுப்பதால் இப்பெயர் ஏற்பட்டுள்ளது. என்றாலும் டோலோ யாத்திரையும் லோஜின் ஜாவும் ஒன்று என்றே கருதலாம்.

வங்காள நாட்டு மன்னர்கள், கிழை நாட்டுத் தீவுகளில் கலைவளர்ச்சியில் ஈடுபட்டிருந்தார்கள். அப்போது வங்காள நாட்டுப் பண்பாடு, கிழை நாட்டுத் தீவுகளிலும் பரவியது. அவ்வாறு பரவியதால் சயாமில் ஏற்பட்டதே ஊஞ்சல் திருவிழா என்று நினைக்கலாம்.

**கோயில்கள் :** சயாமில் மூன்று கோயில்கள் உள்ளன. அவை நீண்ட சதுரக் கட்டடங்களாகக் காணப்படுகின்றன, வடபுறத்தில்

திருமாலின் கோயிலும், தென்புறத்தில் சிவன் கோயிலும், இவை இரண்டுக்கும் இடையில் கணேசர் கோயிலும் அமைந்துள்ளன. கோயில்களின் வாயிற்புறம் கிழக்கு நோக்கியிருக்கும். கோயிலுக்குள் மேற்கு எல்லையில் கடவுள் திருமேனிகள் அமர்ந்த நிலையில் உள்ளன. கோயிலுக்குள் நடுவே ஊஞ்சற் கம்பங்கள் நடப் பெற்றிருக்கின்றன. சிவன் கோயிலில் பல திருமேனிகள் உள்ளன. சிவனும் உமையும் வெள்ளை நிற மேற் கட்டியின்கீழ் இருக்கக் காணலாம். நான்கு பக்கங்களிலும் பட்டுத்திரை தொங்கும். இத்திருமேனிகளுக்கு முன்னால் பூ முதலியன வைப்பதற்கு உயர்ந்த மணைப் பலகை இருக்கும். இருபுறங்களிலும் "எருதேறும் நாயனார்" உருவம் உண்டு. இதற்குமுன் ஹரிஹரர் உருவம் இருந்ததாம். இந்த வடிவம் பத்தாம் நூற்றாண்டைச் சேர்ந்தது என்றும், சோழர்கள் அமைத்த உருவத்தோடு ஒத்தது என்றும் கருதுவர். திருமால் கோயிலில் திருமாலின் வடிவமே பழையது; அவருக்கு இருபுறங்களிலும் உள்ள நாச்சிமார் உருவங்கள் பின்னர்க் கொண்டுவரப்பட்டனவாம்.

**சிவனார்:** இத்திருவிழாவின் போது சிவனார் என ஒருவர் வருவார்; அரசரே அவ்வாறு வருவாராம். பிற்காலத்தில் உழவுத்துறை அமைச்சர் சிவனாராக வந்தார். அவருக்கு நிறைய வேலை இருந்தமையால் அரசியலைச் சேர்ந்த ஓர் உயர்குடிப் பெருமகன் அவ்வாறு வந்தார். இவ்வாறு வருபவர், மூன்று நாட்கள் சிவனாராக இருக்க வேண்டும். இம்மூன்று நாட்களிலும் அரசருடைய பொற்களஞ்சியம் இவர் கையில் இருக்கும். எனவே இவரை "மூன்று நாள் அரசர்" என்று கூறலாம்.

ஊஞ்சல் திருவிழா, அந்நாட்டவருக்கு உரிய ஆண்டின் முதல் திங்களில் நடைபெறும். வளர்பிறைச் சத்தமி அல்லது ஏழாம் நாட்காலையில் சிவனார் ஊர்வலமாக வருவார். ஊர்வலம் ஊஞ்சற் கம்புகள் நடப்பட்ட வெட்டவெளியை அடையும். சிவபெருமான், அப்போதுதான் உலகத்தில் வந்துள்ளார் என்று எல்லோரும் கொள்வர். சிவனாராக வருபவர் நீண்ட கூரிய முடியொன்று அணிந்திருப்பார். அரசனைப் போல நீண்ட கஞ்சுகம் அணிந்திருப்பார். இவரின் உடைக்கோலம், அர்த்த நாரீசுர வேடத்தின் உடைக்கோலம் போலத் தோன்றும். சிவனார் பல்லக்கில் ஏறிச் செல்வார்; அரசரின் விருதுகள் இவருடன் வரும்.

இவருக்குப் பின்னர், பலப்பல வேடங்கள் தாங்கிப் பலர் ஆடியும் பாடியும் வருவர். இத்தகைய வேடம் பூண்டு வருபவர்களை, சிவபெருமானின் பூதகணங்களைக் குறிப்பவர்களாகக் கருதலாம். சிவனார் வடகிழக்கு மூலையில் வந்து இறங்குவார். அது சாலை எனப்படும். அங்கு மூன்று பந்தல்கள் இருக்கும். இம்மூன்று பந்தலில் மேற்குக் கோடியில் உள்ள பந்தலினுள் சிவனார் செல்வார். அங்குச் சிவனார் வீற்றிருக்கும் நிலை, தட்சிணாமூர்த்தியின் வீராசனத்தை நினைவூட்டும். தட்சிணாமூர்த்திக் கருகே நான்கு வீரர்கள் நிற்பதுபோலச் சிவனாருக்கு வலப்புறத்தில் நான்கு பார்ப்பனர்கள் நிற்பார்கள். சிவனார் இங்கு வந்ததும் புத்தர் கோயி

லுக்கு வழிபாட்டுப்பொருளை அனுப்புவார்கள். சிலசமயங்களில் சிவனாரே புத்தர் கோவிலுக்குச் சென்று வருவார். இவையெல்லாம் புத்தமதம் செல்வாக்குப் பெற்றபோது ஏற்பட்ட சடங்குகள் ஆகலாம்.

பின்னர் முன் குறித்த ஊஞ்சலாட்டம் நடைபெறும். ஊஞ்சல் ஆடத் தொடங்குமுன்னும் ஆடிமுடித்த பின்னும் சிவனாரை வணங்குவார்கள். பின்னர்ச் சிவனார் சிவிகையில் அமர்ந்து திரும்பச் செல்வார். நன் கொடைகள் வழங்குவார். சில சமயங்களில் அரசர் அவ்விழாவைக் காண வந்தால், சிவனாராக வேடம் கொள்பவர். முடிவில் அரசரை வணங்குவார். அன்று மாலையிலும் மறுநாளிலும் கோயில் வழிபாடுகள் மட்டும் நடைபெறும். மூன்றும் நாள் மாலையில் மீண்டும் ஊஞ்சல் திரு விழா நடைபெறும். அப்போது சிவனார் சாலையில் வந்து இறங்காமல் நேராக மேற்குக் கோடியில் உள்ள பந்தலினுள் சென்று விடுவார். ஊஞ்ச லாட்டம் நடைபெறும். இதனுடன் திருவிழா முடிவு பெறும்.

**மழைத் திருவிழா :** ஊஞ்சலைத் தொடர்ந்து மற்றொரு சடங்கு நடக்கும். அது உலகின் பலபாகங்களில் நடைபெறும் மழைத் திரு விழா போன்றது என்று கருதலாம். மூன்றும் நான் ஊஞ்சலாடி முடிந்த பின் ஊஞ்சலாடிய நாகர்கள், சிவனாருக்கு முன் செல்வர். சிவனார் அமர்ந் திருக்கும் பந்தலில் ஒரு பெரிய பித்தளைப் பாத்திரத்தைக் கொண்டு வந்து வைப்பார்கள். அதற்குக் கல் சாகரம் என்று பெயர்; அது நிறையத் தண்ணீர் இருக்கும். நாகர்கள் அதைச் சுற்றி நடனம் ஆடிக்கொண்டு மும்முறை வருவார். ஒவ்வொருவரும் எருமைக் கொம்பொன்றைக் கையில் சுற்றிக்கொண்டே ஆடி வருவர். மூன்றும் முறை சுற்றிவரும் போது அக்கொம்பில் நீரை நிரப்பிக் கொள்வர். அச்சுற்று முடிந்ததும் அக்கொம்பில் உள்ள நீரினை ஒருவர் மேல் ஒருவர் வீசியெறிந்து கொள்வர். பின்னர்ச் சிவனார் இரண்டாம் பந்தலுக்குச் செல்வார். அங்கும் இவ்வாறு நீர்விழா நடைபெறும். பின்னர்ச் சிவனார் மூன்றும் பந்தலுக்குச் செல்வார். அங்கும் இவ்வாறே நடைபெறும். முடிந்ததும் சிவனார் ஊர்வலமாகத் திரும்புவார். இத்திருவிழா, ஹோளிப் பண்டி கையை நினைவூட்டுகின்றது.

**உறியடி :** தமிழ் நாட்டில் ஊஞ்சல் திருவிழாவிற்குப் பதிலாகக் கண்ணன் பிறந்த நாளன்று இரவில் உறியடித் திருவிழா நடைபெறு கின்றது. இவ்விழாவிற்காக இரண்டு பெருங்கம்பங்களை நடுவார்கள். இரண்டையும் குறுக்குக் கம்பம் ஒன்றாக இணைக்கும். அதில் கண்ண னுக்கு விருப்பமான வெண்ணெய் முதலிய பொருள்களைப் புதுத்துணி யில் கட்டித் தொங்கவிடுவார்கள். இதனைச் சில இடங்களில் ஏறியும் சில இடங்களில் அலக்குகொண்டும் பற்ற முயல்வார்கள். அப்போது அருகிலுள்ளவர்கள், பற்ற முயல்பவர்மீது மூச்சுத் திணறுமாறு மஞ்சள் நீரை வீசுவார்கள்; பீச்சாங்குழல் கொண்டு பீச்சுவார்கள். இத்திருவிழா கண்ணன் வெண்ணெயைக் கவர்வதும், ஆய்ச்சியர்கள் தடுப்பதும்,

கண்ணன் மீறி உறியில் உள்ள வெண்ணெயைக் கவர்வதும் ஆகிய கதையைக் குறிக்கும் என்பர். இவ் உறியாட்டு, சயாமில் நடைபெறும் ஊஞ்சல் திருவிழாவை ஒத்தது; உறியாட்டில் நீரை வீசியெறிவது மழைத் திருவிழாவை ஒத்தது.

**மாந்திரிகம்:** மழை பெய்வதுபோல நீரை வாரி இறைத்தால் மழையே ஏதோ ஒருவகையால் கட்டப்பட்டுப் பெய்து விடுகிறதாம்: போலி நிகழ்ச்சி, உண்மை நிகழ்ச்சியினை விளக்கும் என்பது பழங்கால நம்பிக்கை. மாந்திரிகச் சடங்குகளும் இந் நம்பிக்கையின் அடிப்படையில் எழுந்தனவே. எனவே நீரை வீசி இறைத்துக்கொள்வது, மழை பெய்வதற்காகச் செய்யப்படும் ஒரு சடங்கே என்பது பெறப்படும்.

**முடிவுரை:** சயாம் நாட்டில் நடைபெறும் ஊஞ்சல் திருவிழாவும், மழைத் திருவிழாவும் தமிழ் நாட்டில் நடைபெறும் உறியாட்டு விழாவினை நினைவூட்டுகின்றன. இந்தியாவில் நடைபெறும் ஹோளிப் பண்டிகையை ஓரளவு சார்ந்தன.

# 9. பண்டைத் தமிழர் பண்பாடு

**முன்னுரை:** கல் தோன்றி மண் தோன்றாக் காலத்தே வாளோடு முன் தோன்றிய மூத்த குடி மக்கள், தமிழர்கள். இவர்கள் வாழ்ந்த நாட்டைப் பனம்பாரனுர் என்பவர், தமிழ்கூறு நல்லுலகம் என்று கூறியுள்ளார். மேலும், அவர், தமிழகம் வேங்கடத்தை வட எல்லையாகவும் குமரியைத் தென் எல்லையாகவும் உடையது என்றும் குறிப்பிட்டுள்ளார். இவ்வெல்லைக்கு உட்பட்ட தமிழகம் நற்குண நற்செயல்கள் நிறைந்ததாய் நல்வாழ்வு மிக்கதாய் விளங்கியது. இவ்வுலகம் உலகத்திலேயே மிகவும் பழமையானது என்று நில நூல் வல்லார்கள் கூறுகின்றனர். இவ்வுலகில் வாழ்ந்த தமிழ் மக்கள் பண்பாடு மிக்கவர்கள்; இவர்களின் பண்பாடு மிகவும் தொன்மையானது.

**தமிழர் பண்பாட்டின் தொன்மை:** தமிழர் பண்பாட்டை அறிய இன்று நமக்குக் கிடைத்துள்ள நூல் தொல்காப்பியம். இதற்கு முற்பட்ட நூல்கள் நமக்குக் கிடைத்தில. இத் தொல்காப்பியத்தின் வாயிலாகத் தமிழர் பண்பாட்டினை அறிகிறோம். இந் நூல் மிகவும் பழமை வாய்ந்தது. தமிழ் மொழிக்கு அயல் மொழிகளான மொழிகளில் அமைந்த நூல்களிலும் தமிழர்களைப் பற்றிய குறிப்புக்களைப் பார்க்கிறோம். அக் குறிப்புக்கள் தமிழர்கள் பண்பாடுடையவர்கள் என்பதை உணர்த்துகின்றன. வட மொழியில் உள்ள தொல்காப்பியத்திற்கு முற்பட்ட ஸ்மிருதிகள், தமிழ் நாட்டின் வடவெல்லை துங்கபத்திரை என்று குறிப்பிடுகின்றன. இது

புதுமையாகும். ஸ்மிருதிகளில் பயிற்சி மிக்க சுந்தரரும் தமிழ்நாட்டின் வடவெல்லை துங்கபத்திரை என்று சுட்டுகின்றார். எனவே தொல்காப்பியத்தாலும் அறியப்படாத துங்கபத்திரை தமிழ் நாட்டின் வடவெல்லையாக ஒரு காலத்தில் அமைந்திருந்தது. எனவே, தமிழர் பண்பாடு காலத்தால் முற்பட்டது. துங்கபத்திரை ஆற்றங்கரை வரை பரவியிருந்தது என்பது புலனாகின்றது.

**தெய்வக் கொள்கை:** தமிழர் பண்பாட்டின் அடிப்படை, தெய்வ வழிபாடாகும். கடவுள், இறை, இயவுள், தெய்வம் என்ற தமிழ்ச் சொற்கள், தெய்வவழிபாட்டு அடிப்படைப் பண்பாட்டின் உண்மையையும், உயர்வையும் எடுத்துரைக்கின்றன. இவற்றுள் தெய்வம் என்னும் சொல், தேவு என்ற முதல் நிலை அடியாகப் பிறந்த தமிழ்ச் சொல்லாகும். கடவுள் என்னும் சொல் மன, மொழி, மெய்களைக் கடந்து நிற்பது என்னும் பொருளை உடையது. இறை என்னும் சொல், யாண்டும் நீக்கமின்றி நிறைந்து இலங்குவது என்னும் பொருளையுடையது. இயவுள் என்னும் சொல், நம் உள்ளத்திலிருந்துகொண்டு கருவி கரணங்களை இயக்குவது என்னும் பொருளையுடையது. இம் மூன்று சொற்களாலும் முதற் பொருளின் உண்மையை உணரலாம். இம் முதற்பொருளை நம் உணர்வாலோ கண்ணாலோ அறியமுடியாத வரையில் அதனால் நமக் கொன்றும் பயனில்லை என்று அதனைக் கைவிட்டுவிடுதலாகாது. ஏனைய பொருள்கள் போல, அதுவும் நம்மால் கொள்வதற்கு உரிய பொருளே என்பதைத் தேவு என்ற முதனிலை அடியாகப் பிறந்த தெய்வம் என்ற சொல் உணர்த்தும். முதற்பொருளை எந்த வடிவமாகக் காண விழைகிறோமோ அந்த வடிவமாக அது வந்து காட்சியளிக்கும். இச் செய்தியை இடைக்கால நூல்கள் தெளிவாகக் குறிப்பிடுகின்றன. தெய்வத்தைக் கொள்ளுதற்கு உரிய பொருளாக நினைக்க வேண்டும். அவ்வாறு நினைத்தால் அது தெய்வக் கொள்கையாகும். இத் தெய்வக் கொள்கை உடையவர்களுக்கு அருவமாக நிற்கும் முதற்பொருள் உருவமாகத் தோன்றும். இவ்வாறு தெய்வத்தைக் கொள்ளுதற்கு மூல மந்திரமோ பீஜாக்ஷரமோ பண்டைத் தமிழகத்தில் பயன்பட்டதாகத் தெரிய வில்லை, அன்பொன்றையே அவர்கள் துணையாகக் கொண்டனர், அத் துணையால் தாம் நினைந்த வடிவில் வரையறுத்துக்கொண்ட இடத்தில் காட்சி தரவேண்டும் என வேண்டினர். முதற்பொருளும் அவ்வாறே தெய்வமாய் வந்து காட்சி தந்து அவர்கள் வேண்டிய நலன்களையெல்லாம் அருளியது. இச் செய்திகள் சங்கநூல்கள் எல்லாவற்றிலும் காணப் படுகின்றன.

முதற் பொருளை உருவமாகக் கொள்ளுமிடத்திலும் திருத்தமான முறையில் அதனைக்கொள்ள இயலாதவர்கள் இருந்தனர். அவர்களுக்காகக் கோயில்கள் எடுத்து மாயோன், சேயோன், முக்கண்ணன் முதலிய உருவங்களைப் பண்டைத் தமிழ்ச் சான்றோர் அமைத்துக்கொடுத்தனர்.

அந்த உருவங்களில் தமக்கு விருப்பமான ஒன்றை உள்ளத்தில் பதிவு செய்துகொண்டு அவ்வாறு காட்சி தரவேண்டும் என்று அன்போடு வேண்டினால் அவ்வுருவமாகத் தெய்வக் காட்சி காணலாம்; விரும்பும்பேறு பெறலாம் என எண்ணினர். திருமுருகாற்றுப்படையில் இந்த உண்மைகள் நன்கு விளக்கப்பட்டுள்ளன. முருகன் உறைவிடம் குன்றுகளாகும். மேலும் குன்றுதோறும் அவனைக் காணலாம். காடு, சோலை, ஆற்றிடைக்குறை, குளக்கரை, சந்தி, சதுக்கம், கடம்பமரம், மன்றம், பொதியில், கன்றுடைநிலை, முதலிய இடங்கள் எங்கு வேண்டுமானாலும் அவனைக் காணலாம். உள்ளத்தில் அவன் உருவைப் பதித்துக் கொண்டு கை கூப்பி அன்போடு வணங்கினால், அவன் பெயர்களைச் சொல்லி அழைத்தால், அவன் தெய்வத்து இளநலங்காட்டி, அஞ்சாதே! நின் வரவினை அறிவேன்! என்று கூறி ஒப்பற்ற நிலையை அடையுமாறு பரிசு பல தருவான். இவ்வாறு திருமுருகாற்றுப்படை குறிப்பிடுகின்றது. இதுவே தெய்வத்தைக் கொள்ளும் முறையாகும். இம்முறையைக் கடைப்பிடிப்பதற்கு உயர்ந்தோர் தாழ்ந்தோர், ஆண் பெண் என்ற வேறுபாடு இல்லை. இத் தெய்வ வழிபாட்டு முறையால் குரவர்கள் பலிதூவி மழைபெற்று மழை போதும் போ என்றனுப்பிவிடும் ஆற்றல் பெற்றிருந்தார்கள் என்பதைச் சங்க நூல்கள் கூறுகின்றன. தமிழர் பண்பாட்டில் தெய்வக் கொள்கை சிறந்த பண்பாடாகும்.

இத் தெய்வக் கொள்கையில் ஈடுபடாமல் பரமேது? வினைசெய்யும் பயனேது? என்று முரண்பட்ட மொழிகளைக் கூறிக்கொண்டு தாம் கண்டதே காட்சி, கொண்டதே கோலம் எனத் திரிபவர்களைத் திருவள்ளுவர் கயவர் என்பார். தொல்காப்பியர் இவர்களை மக்கள் என்று சொல்லலாகாது; அஃறிணை மாக்கள், விலங்குகள் என்று கூறவேண்டும் என்பார். இதனால் மக்கள் உடம்புபெற்றவர்களுள்ளும் உயர்திணை அஃறிணை என்ற இரு திணையுண்டு என்று போற்றிய பண்டைத் தமிழர் பண்பாட்டினை அறியலாம்.

**கல்விக் கொள்கை :** மக்கள் உடம்பு பெற்ற கயவர்கள், மக்களாக உயரும் வாய்ப்பு உண்டு. அதற்கு ஒரே வழி, கல்வி கற்றலேயாகும். மக்கள் உடம்பு எடுத்தவர்கள் கல்வி கற்காவிட்டால் விலங்கை ஒப்பர். அவர்கள் முகத்தில் இருப்பது கண் அல்ல, புண். கல்வி கற்றவர் உயர்வு பெறுவர். இச் செய்திகளைப் பண்டைத் தமிழ்ச் சான்றோர் நன்கு அறிந்திருந்தனர். "தன் மக்களிடம் ஒத்த அன்பு காட்டும் தாயும்கூடக் கற்றவனிடம் மிகுதியாக அன்பு காட்டுவாள். வயதால் மூத்தவருக்கு மதிப்புத் தராது, கற்ற இளையவனுக்கு மதிப்புத் தந்து அவனை வரவேற்று, அவன் கூறும் அறநெறியை அரசனும் கடைப்பிடிப்பான். மேற்குலத்தில் பிறந்த ஒருவன், கீழ்க் குலத்தில் பிறந்த கல்வி கற்ற ஒருவனிடம் தலை வணங்கி நிற்பான். ஆதலால் உற்றுழி உதவியும், உறுபொருள் கொடுத்தும் ஆசிரியனுக்கு வழிபாடு செய்தல் நல்லது" என்று பாண்டியன் ஆரியப்

படை கடந்த நெடுஞ்செழியன் கூறியுள்ளான். "கல்வி, இம்மையில் அறம், பொருள், இன்பம் பயக்கும்; மறுமையில் வீடு பயக்கும். கற்றவனுக்கு யாதும் ஊர், யாவரும் கேளிர். மன்னவனுக்குத் தன் நாட்டில் மட்டும் சிறப்புக் கிடைக்கும், கற்றோனுக்குச் சென்றவிடமெல்லாம் சிறப்புக் கிடைக்கும். ஆதலால் ஒருவன் சாகும் துணையும் கற்க வேண்டும். பாடை ஏறினும் ஏடது கைவிடேல்"—என்பன தமிழ்ச் சான்றோர் அறிவுறுத்திய கல்விக் கொள்கைகள். மக்கள் உடம்பு பெற்றவர்கள் அனைவரும் கல்வி கற்றற்கு உரியவர் என்பது தொல்காப்பியர் காலத் தமிழ் மக்களின் பண்பாடாகும். கல்வி கற்றற்கு உரியவர், அல்லார் என்ற பாகுபாடு கற்பிக்கத் தகுதியற்ற ஆசிரியர்கள், கல்வி உலகைக் கைப்பற்றிய காலத்தில் ஏற்பட்டதாதல் வேண்டும். இளஞ்சிறவர்கள் பெற்றோர்களின் அரவணைப்பில் வீட்டுச் சூழலில் வாழ்ந்து ஓரளவு உணர்வு பெறுகிறார்கள். அவ்வாறு உணர்வு பெற்றவர்களே ஆசிரியனை அடைகிறார்கள். எனவே, ஆசிரியர்கள் தம்மிடம் வந்த மாணவனின் உணர்வாற்றலை அறிந்து படிப்படியாக அவன் உணர்வைப் பெருக்கும் முறையில் கற்பிக்கவேண்டும். இவ்வாறு கற்பித்தால் மாணவர்கள் அனைத்தையும் உணர்ந்துகொள்வர். தொல்காப்பியர், 'உணர்ச்சி வாயில் உணர்வோர் வலித்தே' என்று கூறியுள்ளார். உணர்ச்சியது வழி, உணர்வோரது உணர்வை வலியாக உடையது என்பது இதன் பொருள். எனவே, உணர்வோரது உணர்வை உணர்ந்து உணர்த்தினால் அவர்கள் நன்கு உணர்ந்து கொள்வர். தொல்காப்பியர் இவ்வாறு பயிற்றும் முறையை நான்கைந்து நூற் பாக்களில் கூறியுள்ளார். எனவே, பண்டைத் தமிழரிடம் இருந்த கல்வியுலகப் பண்பாடு ஒப்புயர்வற்றது என்று கூறலாம்.

களி, மடி, மானி, கள்வன் ஆகியோருக்குப் பாடம் சொல்லிக் கொடுத்தல் கூடாது என்பர். இது பெருங் கொடுமை. ஆசிரியருக்கு அஞ்சி, கல்வியில் வெறுப்புற்றுப் பிற சூழல்களில் சிக்கிய மாணவர்களே களி, மடி, இன்னோரன்னவர் ஆகின்றனர். எனவே, அதற்கு முன்னாலேயே மாணவர்களை அவ்வாறு பிரிப்பது தவறு உடையதாகும். தொல்காப்பியர் காலத்தில் இவ்வாறு பிரிக்கும் நிலையில்லை. அக்காலம் கல்விக் கொள்கையில் மிகவும் சிறப்புற்று விளங்கியது. அனைவரும் கல்வி கற்று, முகத்திற் புண்ணுடையவர் என்ற குறையில்லாமல் உண்மைக் கண்களுடையவர்களாகத் திகழ்ந்தனர்.

**ஆட்சிக் கொள்கை:** அரசன் குடிதழுவிக் கோலோச்சினான். அமைச்சர்கள் மதி நுட்பமும் நூலறிவும் உடையராக இருந்து அரசனுக்கு உறுதி கூறினார்கள். மானம் பெரிதென எண்ணும் வீரர்களும் படைத் தலைவர்களும் இருந்தார்கள். பகை வேந்தரிடம் சென்று அஞ்சாது உரையாடிவரும் தூதுவர்கள் இருந்தார்கள். இவர்களை அரசன் உறவாகப் பெற்றிருந்தான். காட்சிக்கு எளியனாய், கடுஞ்சொல்லன் அல்லனாய், முறை கேட்டும், குறை நீக்கியும் கோலோச்சினான். அதனால் மக்கள்

அரசனைத் தெய்வமாக மதித்தனர். தமிழ்நாட்டை முடிமன்னர் மூவர் ஆண்டனர்; அவர்கள் மூவரும் ஒரே மொழி, ஒரே முறை, ஒற்றுமை முதலியவற்றைப் போற்றிக் குடிகளைக் காத்தனர். அவர்கள் புலவர்கள் பாடும் பெருமையைப் பெரிதென மதித்தனர். போர் ஏற்பட்டால் மன்னர்களும் முன்னணியில் நின்றனர். புறங்காட்டாமை, போர் தொடங்குமுன் ஆவையும் அந்தணரையும் பெண்டிரையும் பிணியுடையோரையும் மக்களைப் பெருதோரையும் தமக்குக் காவலான இடத்திற்குப் போய்விடும்படி அனுப்புதல், புறங்காட்டியவர்மீது படைக்கலம் விடாதிருத்தல், மலையரண், காட்டரண் முதலியவற்றால் தம் நாட்டைக் காத்தல், வென்ற படை வீரர்களுக்குச் சிறப்புச் செய்தல் ஆகியவை தமிழ் அரசர்கள் மேற்கொண்ட கொள்கைகள் ஆகும். இதனால் தமிழகப் பண்பாட்டினை அறியலாம்.

**வளம் பெற்ற நாடு :** தமிழ்நாடு கடல் வாணிகத் துறையிலும் கப்பல் கட்டும் தொழிலிலும் கடற்போரிலும் சிறந்திருந்தது; நிலவளம் மிக்க நாடாக விளங்கியது. எனவே உழவுத் தொழில் சிறந்த தொழிலாகக் கருதப்பட்டது. பிடித்தெருவும் வேண்டாது நிலத்தை வளப்படுத்தும் முறையைத் தமிழர்கள் நன்கு அறிந்திருந்தனர். இவ்வுழவுத் தொழிலால் உணவுப்பொருள் மிகுதியாகக் கிடைத்தது. எனவே, விருந்தோம்பல் தலையாய அறமாகக் கொள்ளப்பட்டது. இவ்வறம் தமிழர்களின் உயர்ந்த பண்பாட்டினைக் காட்டும்.

**இல்லறமும் துறவறமும் :** நல்லாட்சியில் மக்கள் இன்பமாக வாழ்ந்தார்கள். அறனெனப்பட்டதே இல்வாழ்க்கை என்பதே தமிழர் பண்பாடு. எனவே, இல்வாழ்க்கையை மதித்தனர். கணவனும் மனைவியும் ஓர் உயிராய் வாழ்ந்தனர். ஆணும் பெண்ணும் பிறர் அறியாமல் தமக்குத் தாமே அறியுமாறு நுகர்ந்த இன்பம், களவின்பம் எனப்பட்டது. இது களவொழுக்கமாகும். இவ்வொழுக்கத்தில் நின்றவர்கள், பின்னர் ஒருவரையொருவர் பிரியாமல் ஒரே வீட்டில் வாழ்ந்து இல்லறத்தை நடத்துதல் கற்பு எனப்பட்டது. இது கற்பொழுக்கம் எனப்படும். கல் போலத் திண்மையாக இருப்பதே கற்பாகும். கற்பென்னும் திண்மை என்பரிர் வள்ளுவரும், பெண்ணுக்கே அன்றி ஆணுக்கும் இக் கற்பு இருக்கவேண்டும். இயல்பாகவே ஆடவர்கள் கல்போலத் திண்மை உடையவர்களாக இருத்தலால், இயல்பில் திண்மையில்லாத பெண்களுக்கே இது வற்புறுத்தப்பட்டது. இதனை வலியுறுத்தவே மணவினைச் சடங்கில் அம்மிக்கல் மிதித்தல் என்னும் சடங்கு ஏற்பட்டது. கற்போடு வாழ்ந்து இல்லறம் பேணும் வாழ்க்கையைத் தமிழர்கள் உயர்ந்ததாகக் கருதினர்.

கலப்பில்லாத பொன் போன்றது சிவம். பொருளைக் களிம்புண்ட செம்பு போன்றது சீவன். அறியாமையோடு கலப்புண்ட சீவன், கடமைகளாகச் சில செயல்கள் ஆற்றுதலால் அறியாமையிலிருந்து நீக்கம்

பெறலாம். இதற்கெனவே, ஓர் உயிர், இரண்டு உடல் பெற்றுக் கணவனும் மனைவியும் ஆகிறது. இவ்வாறு ஈருடல் பெற்ற காலத்துக் கடமை ஆற்றி அறியாமை நீங்கினால், ஈருடல் பெற்ற காலத்திலேயே ஓருயிராக நிற்கும் நிலை வந்துவிடும். இதுவே உண்மைத் துறவு நிலை. இத்தகைய பண்டைத் தமிழர் பண்பாட்டினை அறியாதவர்கள், மனைவியை விட்டுத் துறந்து கானகம் சென்று வாழ்வதே துறவு என்று சொல்லுகின்றனர். இது உண்மைத் துறவு ஆகாது. இப்போலித் துறவினால் மீண்டும் மீண்டும் பிறவியே ஏற்படும். எனவே தமிழர்கள் இப்போலித் துறவை ஏற்க வில்லை. இல்லறத்தில் வாழ்ந்து கடமையைச் செய்து, நிறைவு பெற்ற வாழ்க்கையையே துறவு என்றனர். இத்தகைய பண்பாட்டினை வேறு எங்குக் காணுதல் இயலும்?

**மக்கட்பேறு :** உலகத்தில் பெறும் பேறுகளுள் அறிவறிந்த மக்கட் பேறே உயர்ந்தது. தாம் அறிந்தோ அறியாமலோ செய்யும் செயல்களைத் தம் மக்களும் பார்த்து அவ்வாறே செய்வர். எனவே, பெற்றோர்கள் தம் குழந்தைகள் எங்கே செய்துவிடுவார்களோ என்பதற்காகத் தீய செயல் களைச் செய்யமாட்டார்கள். இதனால் பெற்றோர்கள் குறைகளை உணர்த்தும் ஆற்றல் குழந்தைகளுக்கு உண்டு. இதனாலேயே திருவள்ளுவர், "பெறும வற்றுள் யாமறிவதில்லை அறிவறிந்த மக்கட்பேறு அல்ல பிற" என்று சிறப் பித்துள்ளார். இத்தகைய நன்மக்களைப் பெறுவதில் தமிழ் மக்கள் பெரு விருப்புக் கொண்டனர். இதனால், தமிழர் பண்பாட்டை அறியலாம்.

பெற்றோர்களால் நன்கு வளர்க்கப்பட்ட மக்கள், நல்ல குடிமக்களாகத் திகழ்வார்கள். அவர்கள் எல்லாக் கலைகளையும் பயின்றால், நாட்டில் எல்லாக் கலையும் வளர்ப்பார்கள். அவர்கள் ஒழுக்கத்தை உயிரினும் சிறந்ததாகப் போற்றினால், நாட்டு மக்கள் நோயும் கவலையுமின்றி வாழ்க்கை நடத்துவார்கள். எனவே, மக்கட்பேறு சிறந்தது. அம்மக்கட் பேற்றைப் பண்டைத் தமிழகம் பெரிதாக மதித்தது.

**முடிவுரை :** தமிழர்கள் தெய்வக்கொள்கை, கல்விக் கொள்கை, ஆட்சிமுறை, உழவுத்தொழில், இல்லறம், துறவறம், மக்கட்பேறு ஆகிய வற்றை நன்கு அறிந்திருந்தார்கள். இவற்றின் அடிப்படையாக உயர்ந்த பண்பாளராக விளங்கினார்கள்.

## 10. சிற்றிலக்கியச் சிறப்பு

**முன்னுரை :** தமிழ் பல்லாற்றானும் சிறப்புற்று விளங்குவது; இனிமையும் தொன்மையும் வாய்ந்தது. ஒப்புயர்வற்ற இலக்கியங்களைப் பெற்று இலங்குவது. இத்தமிழ் இடைக்காலத்தே சில நூற்றாண்டுகள் வேற்றார் வரவால் போற்றுவாரற்றுக் கிடந்தது. அயலவர் ஆட்சி அகன்ற

பின் தமிழ் மீண்டும் மறுமலர்ச்சி பெற்றது. எழுத்துத்துறை, பேச்சுத் துறை முதலிய அனைத்துத் துறைகளிலும் தமிழில் மறு மலர்ச்சி ஏற்பட்டது. சிறந்த தமிழ் நூல்கள், சிறந்த முறையில் வெளியிடப்பட்டன. இப் பெரும் பணியைச் சைவசித்தாந்தக் கழகம் நிறைவேற்றி வருகின்றது. இக் கழகத்தினர், சிற்றிலக்கிய மாநாடுகள் நடத்திச் சிற்றிலக்கியங்களின் பெருமைகளை உலகுக்கு உணர்த்தி வருகின்றனர்.

**சிற்றிலக்கியம் :** தொல்காப்பியர் காலத்தில் இலக்கியங்கள் அகம், புறம் என்று பிரிக்கப்பட்டன. மேற்கணக்கு, கீழ்க்கணக்கு என்றும் வகுக்கப்பட்டன. திருமுறைத் தமிழ், பெருங்காப்பியம், சிறுகாப்பியம், சிற்றிலக்கியம், பேரிலக்கியம் என்னும் பிரிவுகளும் தமிழகத்தில் ஏற் பட்டன. சிற்றிலக்கியம், பேரிலக்கியம் என்னும் பிரிவு அண்மைக் காலத்து ஏற்பட்டதேயாம். அடிகள் மிகுந்து, பொருள்களால் சிறந்து, மக்கள் வாழ்வையொட்டி, மக்கள் வாழ்வைச் செம்மைப்படுத்தி, இன்பம் நல்குவன பேரிலக்கியங்களாகும். அடிகளால் குறைந்து, கற்பனை மிகுந்து, கடவுளர்களையும், செல்வர்களையும் தலைவர்களாகக்கொண்டு இயற்றப் பட்டன சிற்றிலக்கியங்களாகும். இவற்றைப் பிரபந்தம் என வடமொழி யில் கூறுவர். இவற்றிற்கு உரிய இலக்கணங்களைப் பன்னிரு பாட்டியல், நவநீதப் பாட்டியல் முதலான பாட்டியல் நூல்கள் கூறுகின்றன.

சிற்றிலக்கியங்கள் கி. பி. எட்டாம் நூற்றாண்டுமுதல் வளரத் தொடங்கின. அவை கோவை, உலா, பரணி, பிள்ளைத்தமிழ், அந்தாதி, கலம்பகம் எனப் பலவகையாகும். இவைகள், உலகியல் கடந்த கற்பனை நிகழ்ச்சிகளும் உயர்வு நவிற்சியணிகளும் திரிசொல் ஆட்சிகளும் நிறைந்து கற்பவர் உள்ளத்தைக் கவரும் இயல்பின. இலக்கியங்கள் வாழ்வின் குறிக்கோளை இயம்புவன. வாழ்வின் குறிக்கோள்கள் நூற்றாண்டுதோறும் மாறுபடும். அம் மாறுபாட்டுக்கு ஏற்ப இலக்கியங்களும் வளர்ச்சிபெறும். இவ்வாறு வளர்ச்சி பெற்ற வாழ்க்கை முறையினைச் சிற்றிலக்கியங்களால் அறியலாம்.

**பரணி :** பரணி நட்சத்திரத்தில் கொண்டாடும் போர் வெற்றி விழாவைச் சிறப்பித்துப் பாடுதலால் பரணியென்னும் பெயர் பெற்றது. போர்க்குரிய கடவுள் கொற்றவை. கொற்றவைக்குரிய நாள் பரணி. பரணி நாளில் கொற்றவைக்குப் படையலிட்டு வெற்றி விழாக் கொண்டாடுதல் மரபு. இதனைக் கலிங்கத்துப் பரணியாலும் தொல்காப்பியம் பேராசிரியர் உரையாலும் அறியலாம். போரில் வெற்றி பெற்ற பெருவீரனைப் பாடுதலைப் பொருளாகக் கொண்டதே பரணியென்னும் நூலாகும். இதில் புறத்திணைத் துறைகள் பலவும் பயின்றுவரும். "ஆனை ஆயிரம் அமரிடை வென்ற மானவனுக்கு வகுப்பது பரணி" என்று கூறுவர். இதனால் ஆயிரம் யானைகளைக் கொன்ற பெருவீரனைச் சிறப்பிப்பதே பரணி எனப் படும் என்பது புலனாகும். ஆயினும், பரணிக்குப் பெயரிடும்போது தோற் றோரைச் சார்ந்தே பெயரிடப்பட்டுள்ளது. கலிங்கத்துப்பரணி என்பது

தோல்வியுற்ற, கலிங்க மன்னன் நாட்டின் பெயரால் அமைந்தது அல்லவா? எனவே, தோல்வியுற்றவரைப் பெருமைப்படுத்தும் பண்பு, தமிழருக்கு உண்டு என்பது விளங்கும்.

இப்பரணி நூல்வகைத் தோற்றம் மிகத் தொன்மையுடையது. பரணி நூலில் கூறப்படும் செய்திகள் சங்க நூல்களிலும் தொல்காப்பிய உரையில் பல இடங்களிலும் காணப்படுகின்றன. பரணி பாடும் பொருநர் எனப் பொருநருள் ஒருவகையார் இருந்தனர் என்பர். இவர்கள் பழைமையான மரபைச் சேர்ந்தவர். எனினும் பண்டைக் காலத்தில் பாடப்பெற்ற பரணி நூல்கள் ஒன்றும் இப்போது நமக்குக் கிடைக்கவில்லை. இப்போது கிடைத்தவற்றுள் கலிங்கத்துப் பரணியே பழமையும் தலைமையும் உடையதாகும்.

**பரணிக்கு உரிய யாப்பு :** பொருளுக்கு ஏற்பச் சந்தம் இருந்தால் கற்றவர்களுக்கு இன்பம் ஏற்படும். இத்தகைய இன்பத்தை ஏற்படுத்துவது கலித்தாழிசையாகும். இக் கலித்தாழிசையால், பரணியின் யாப்பு அமைந்துள்ளது. இத்தாழிசை, கொச்சக ஒரு போகின் வகையான தேவ பாணி என்று அழைக்கப்பெறும்.

**பரணியின் உறுப்புக்கள் :** கடவுள் வாழ்த்து, கடைதிறப்பு, காடு பாடியது, பேய்களைப் பாடியது, பேய்முறைப்பாடு, காளிக்கு கூளி கூறியது, போர் பாடியது, களம் பாடியது, வாழ்த்து முதலியன பரணியின் உறுப்புக்களாகும். இவ்வுறுப்புக்களைப் பற்றிய செய்திகளைப் பாட்டியல் நூல்கள் கூறுகின்றன.

**பரணியின் தோற்றம் :** இன்று நமக்குக் கிடைத்துள்ள பரணிகளை ஆராய்ந்தால், அவை செய்ந்நன்றி அறிதல் காரணமாகவும், கடவுட்பற்று காரணமாகவும், ஞானஉணர்வு காரணமாகவும், தோன்றியன என்பது பெறப்படும். கலிங்கத்துப்பரணியும், தக்கயாகப்பரணியும் செய்ந்நன்றி காரணமாக அரசர்களைத் தலைவர்களாகக் கொண்டு பாடப்பெற்றன. பிற் காலத்தில் அரசர்பால் செலுத்தப்பட்ட அன்பு கடவுளின்பால் செலுத்தப் பட்டது. அப்போது தோன்றியவை, கஞ்சவதைப்பரணி, இரணியவதைப் பரணி முதலியன. ஆசிரியர்களையே கடவுளர்களாகக் கருதும் காலம் ஏற்பட்டது. அப்போது தம் ஞானசிரியர்களைப் பாராட்டுதற்காகத் தோன்றியவை அஞ்ஞவதைப்பரணி, மோகவதைப்பரணி, வாசவதைப் பரணி என்பன.

**பள்ளு :** உழவர்கள் காலப்போக்கில் உழுதுண்ணும் வேளாளர், உழுவித்துண்ணும் வேளாளர் என இருவகைப்பட்டனர். உழுவித்துண் போர் பண்ணையார் என்றழைக்கப்பட்டபோது, உழுதுண்ணும் வேளாளர்கள் பள்ளர்கள் என்று அழைக்கப்பட்டனர். இப்பள்ளிகளின் வாழ்க்கையை அடிப்படையாகக் கொண்டு எழுந்ததே பள்ளு என்னும் இலக்கியமாகும். தொல்காப்பியத்தில் ஏரோர் களவழி என்னும் துறை

கூறப்பட்டுள்ளது. சிலப்பதிகாரத்தில் கானல்வரியில் ஆற்றுவரி கூறப் படுகிறது. மேலும் சிலப்பதிகாரத்தில் பல இடங்களில் உழவர் வாழ்வு சுட்டப்படுகின்றது. இத்தகைய உழவர் பாட்டு, ஏர்மங்கலம் என்றும் இலக்கியங்களில் அழைக்கப்படுகின்றது. பின்னர், உழவர் பாட்டு என்றும், உழத்தியர் பாட்டு என்றும் அழைக்கப்பட்டது. உழவுத்தொழில் புரிவோர் பள்ளர் என்றழைக்கப்பட்டபின், அவர் பாட்டைப் பள்ளுப் பாட்டு என்று அழைத்தனர்.

**பள்ளு நூல்கள் :** "நெல்லுவகையை எண்ணினாலும், பள்ளு வகையை எண்ண முடியாது" என்பது பழமொழி. இப்பழமொழிக்கு ஏற்ப, பள்ளு நூல்கள் தமிழில் மிகுதியாக உள்ளன. முக்கூடற்பள்ளு, திருவாரூர்ப்பள்ளு, திருமலைப்பள்ளு, வைசியப்பள்ளு, சீர்காழிப்பள்ளு, தென்காசிப்பள்ளு முதலியன பள்ளு நூல்களாகும்.

பள்ளுநூல், பள்ளர் வாழ்க்கையையும் பண்ணையார் வாழ்க்கையை யும் அடிப்படையாகக்கொண்டு எழுந்தது. எனவே, அவர்கள் உரை யாடும் வழக்குமொழி, இந்நூலில் மிகுதியாகக் காணப்படும். இப்பேச்சு மொழியைத் தொல்காப்பியர், சேரிமொழி என்று சொல்லுவர். இச் சேரி மொழியால் இயற்றப்படும் இயல்பைப் புலன் என்றும் கூறுவர். எனவே, பள்ளு இலக்கியம், தொல்காப்பியர் கூறும் புலன் வகையைச் சார்ந்தது என்பது புலனாகும்.

இந்நூல்வகை கலிப்பா, விருத்தம், சிந்து போன்ற சிற்றடி, பேரடிகளால் இயற்றப்படும். இப்பாடல்கள் இசைப்பாடல்களாகப் பாடுதலுக்கும் ஏற்றதாக அமைந்திருக்கும். எனவே, பள்ளு இலக்கியம், இனிமை பயப்பதாக விளங்குகின்றது.

**குறவஞ்சி :** மலையும் மலைசார்ந்த இடமும் குறிஞ்சி எனப்படும். இங்கு வாழ்பவர்கள் குறவர் எனப்படுவர். இக்குறவர் பெண்ணுக்குக் குறவஞ்சி என்று பெயர். இப்பெண்ணுக்குத் தலைமை கொடுத்துப் பாடப்படுவதே குறவஞ்சி என்னும் இலக்கியமாகும். தலைவர் ஒருவர் நகர் உலா வருவார். அவரைக் கண்ட எழுவகைப் பருவப்பெண்களும் உணர்விழந்து வருந்துவர். அவர்களுள் தலைவி எனக் கூறத்தகும் சிறப் புடைய பெண் ஆராக் காதலால் வருந்துவாள். அப்போது குறவஞ்சி, அங்குத் தோன்றுவாள். அப்பெண்ணின் கைக்கோடுகளைப் பார்த்து, அவள் விரும்பும் தலைவனை அவள் அடைவது உறுதி என்று குறி சொல்லுவாள். இதுவே, குறவஞ்சி இலக்கியம் கூறும் பொருளாகும். குறவஞ்சி குறி கூறும் பகுதி மிக்க சுவை உடையது. ஆதலால், இவ் விலக்கியத்திற்குக் குறவஞ்சி என்று பெயர் அமைந்துவிட்டது. பாடப் படும் தலைவரின் பெயரையும் ஊர்ப்பெயரையும் சார்த்தி இந்நூல்வகைக்குப் பெயரிடுவர். குற்றாலக் குறவஞ்சி, திருவாரூர்க் குறவஞ்சி என்பன தலைவரின் ஊர்ப்பெயரோடு சார்த்தப்பட்டன. சரபேந்திர பூபாலக்

குறவஞ்சி, மீனுட்சியம்மை குறம் என்பன தலைவர் பெயரால் அமைந்தன குறவஞ்சியின் அமைப்பும், பள்ளு நூல்போல இசைத் தமிழும், நாடகத் தமிழும் கலந்து, சேரி மொழியும் விரவிப் படிப்போர்க்கு உவகையூட்டும் பான்மையது ஆகும். விருத்தப்பாவும், கண்ணிகளும், இசைப்பாடல் களும், இவ்விலக்கியத்தில் இடம் பெறும்.

பள்ளும் குறவஞ்சியும் தோன்றிய காலத்தில் தமிழகத்தில் பேரரசர் கள் இல்லை. பெருநிலச் செல்வர்களே தமிழைப் போற்றினர். தமிழ்ப் புலவர்களைப் பேணினர். எனவே, அவர்களின் இன்பப் பொழுது போக்குக்காகவே இசையும் பிறவும் இயற்றப் பெற்றன. இதனாலேயே குறவஞ்சியில் காதல்சுவை மிகுந்து காணப்படுகின்றது.

**மூவகை இலக்கியங்கள் :** பரணியும், பள்ளும், குறவஞ்சியும் சிற்றிலக்கியங்கள் என்றழைக்கப்பட்டாலும் இலக்கிய நோக்கில் அவை சிறுமை உடையன அல்ல. அவை, காதலும் வீரமும் கொடையும் பற்றிக் கூறுவன. பல்வகைச் சுவைகளும் அணிகளும் பொருந்தியன. கற்போர் உள்ளத்தில் களிப்பூட்டும் தன்மையன. சங்க இலக்கியங்களைப்போல மக்கள் வாழ்க்கையை ஒட்டி முழுதும் செல்லவில்லையென்றாலும் அவைகள் மக்கள் வாழ்க்கைக்கு அப்பாற்பட்டுச் செல்லவில்லை. வரலாற்றை அடிப் படையாகக் கொண்டு தோன்றியுள்ளன. அவ்வரலாறுகள், நாட்டைப் பற்றியோ கடவுளைப்பற்றியோ மக்களைப்பற்றியோ அமைந்ததாக உள்ளன.

**காதற்சுவை:** காதலே உலகின் உயிர். காதல் இல்லையேல் உலகமே அழியவேண்டியதுதான். பரணிகளில் கடைதிறப்பு என்னும் பகுதி, காதற் சுவையை இனிமை பொருந்த விளக்குவதாகும். நிலா முற்றத்தில் காதலனும் காதலியும் கலவியின்பத்தில் திளைத்து அப்படியே உறங்கினர். உறக்கத்தில் ஆடை நெகிழ்ந்தது. உறக்க மயக்கத்தோடு விழித்த நங்கையின் கை, நெகிழ்ந்த ஆடையைப் பற்றக் கருதி, நிலவின் ஒளியைப் பற்றி இழுக்க முயல்கின்றது. இச்செயலைப் பார்ப்போர் முகத்தில் நகைதோன்றுவது இயல்புதானே! இத்தகைய காதற் காட்சிகளைக் கலிங்கத்துப்பரணி காட்டுகின்றது. சிவஞானம் பெற்ற செயலைக்கூற வந்த பாசவதைப்பரணிகூட, ஞானத்திற்குரிய பெருமக்களை, மகளிர்களாக மாற்றிக் காதற் சுவையை அளிக்கின்றது.

**இலக்கியச் சுவை :** ஒரு பள்ளன்; அவனுக்கு மூத்த பள்ளி, இளையபள்ளி என இரு மனைவியர். இருவரும் பள்ளனிடத்தில் கொண் டுள்ள காதலால் அவனை அடைய முயல்கின்றனர். மூத்த பள்ளி, தன்னைப் பள்ளன் மறந்துவிட்டதாக நினைக்கின்றாள். அதனால் தோன்றிய வருத்தத்தால் தன் ஆண்டையிடம் முறையிடுகின்றாள்.

> ''ஏச்சுக்குப் பிறந்தான்—வரவரக்
> கூச்சத்தை மறந்தான்—இளையவள்

இளமையைக் குறித்தான்—முதிருமென்
வளமையைப் பறித்தான்''

இவ்வாறு அவள் முறையிடும்போது அமையும் பேச்சு மொழி கற்போர் உள்ளத்தைக் களிப்பில் ஆழ்த்துகின்றது.

காதல் மிகுதியால், காதல் நோயுற்ற நங்கை மதியை நோக்கிப் புலம்புவதாகப் பாடல் இயற்றுவது பிற்காலக் கவிஞர் இயல்பு. அதில் பொருட்சுவையும் சொற்சுவையும் மிகுந்து இன்பமளிக்கும். இத்தகைய பாடல்களைக் குறவஞ்சியில் காணலாம்.

**நாட்டுப்பற்றும் மொழிப்பற்றும் :** பரணி, பள்ளு, குறவஞ்சி முதலிய நூல்களில் நாட்டுப்பற்றை ஊட்டும் பாடல்களைக் காணலாம். நாட்டுப் பற்றும், மொழிப்பற்றும் உடலும் உயிரும் போல்வன. எனவே, நாட்டுப் பற்றுடையவர் மொழிப்பற்றுடையவராக இருத்தல் இயல்பே. மேற்கூறிய இலக்கியங்களை இயற்றியவர்கள், நாட்டுப்பற்றுடையவர்களாக இருந்தனர். "மாதம் மூன்று மழையுள்ள நாடு, வருடம் மூன்று விளைவுள்ள நாடு" என்பது குறவஞ்சி கூறும் நாட்டுப்பற்றாகும். "பொன்னித் துறைவனை வாழ்த்தினவே, பொருநைக் கரையனை வாழ்த்தினவே, கன்னிக் கொழுநனை வாழ்த்தினவே, கங்கை மணாளனை வாழ்த்தினவே" என்பது கலிங்கத்துப்பரணி ஆசிரியர் காட்டும் நாட்டுப்பற்றாகும். இத்தகைய நாட்டுப்பற்றுக் கொண்ட கலிங்கத்துப்பரணியின் ஆசிரியர், தம் நாடும் வாழ வேண்டும், உலகமும் வாழவேண்டும் என்று கருதுகின்றார். "யாவரும் களி சிறக்கவே—தருமம் எங்கும் என்றும் உளதாகவே" என்பனபோல அவர் கூறும் வாழ்த்துப்பகுதிகள், உலகம் வாழ வேண்டும் என்னும் அவருடைய உயர்ந்த உள்ளத்தைக் காட்டுகின்றன.

**முடிவுரை :** நம் நாடும் வாழ வேண்டும், உலகமும் வாழவேண்டும் என்ற பெரு நோக்கில் நாமெல்லாம் ஈடுபடவேண்டும். நாட்டுப் பற்று உலகப்பற்றுக்கு வேறுபட்டதன்று. இவ்வுண்மையைச் சிற்றிலக்கியங்கள் காட்டுகின்றன. அவற்றை அறிந்து நாமும் உலகமும் வாழ வாழ்த்துவோம்.

## 11. வாணிகம்

**முன்னுரை :** ஒரு நாட்டின் நன்மைக்கு மூன்றுவகையானவர் கட்டாயமானவர். அவர்கள், தாழ்விலாச் செல்வர் என்று குறிக்கப் படுவர். வணிகர், உழவர், சான்றோர் என்பவரே அவர்களாவர். உழவர்கள், உழவுத் தொழில் செய்துவர வேண்டும். சான்றோர்கள், சான்றாண்மையைப் பரவச் செய்து வரவேண்டும். வணிகர்கள், ஓரிடத்தில் உண்டாகும் விளைபொருள்களை அவை உண்டாகாத இடங்களுக்கு

அனுப்பி உதவி வளங்களை உண்டாக்கி வரவேண்டும். மூவரும் இவ்வாறு கடமைகளைச் செய்தால், நாடு, விரும்பத்தக்க அழகிய இடமாக இருக்கும். இவர்களுள் வணிகரைப் பற்றிக் காண்போம்.

**வணிகர்கள் :** ஒரு நாட்டில் மேலும் மேலும் பெருக்கமாய் விளங்கும் செல்வர்கள் வணிகர்கள் ஆவர். இவர்கள், அரசருக்கு அடுத்த பெருஞ் செல்வர்களாகப் பண்டு விளங்கினர்கள. இதனால் இவர்களுக்கு இளங்கோக்கள் என்ற பெயர் உண்டு. இவர்கள் எட்டி முதலிய சில பட்டங்களையும், பொற் பூக்களையும் அரசர்களால் பெற்றுச் சிறப்புற்றனர். வணிகர்கள், வாணிகம் செய்வது என்பதை உலக உதவியாகவே கருதினர். தமது உழைப்புக்குச் சிறிது பொருள் ஒதுக்கிக் கொள்ளுதலை இரண்டாம் நோக்கமாகவே எண்ணினர். காவிரிப்பூம்பட்டினத்திலிருந்த வணிகர்கள், தமக்கு உண்டாகும் ஊதியத்தை வெளிப்படையாகக் காட்டிப் பண்டங்களை விற்றார்கள் என்று பட்டினப்பாலை கூறுகின்றது. மேலும், பிறர் பொருளை மிகுதியாகக் கொள்ளாமலும், தம்முடைய பண்டங் களைக் குறைத்துக் கொடுக்காமலும் நடுவுநிலைமையோடும் உண்மை யோடும் வாணிகம் செய்வார்கள் என்றும் பட்டினப்பாலை குறிப்பிடு கின்றது. இதனால், பண்டைக்கால வணிகர்கள் பொருள் ஈட்டுதலில் மட்டும் நாட்டமில்லாமல் பிறருக்கு உதவி செய்வதிலேயே கண்ணும் கருத்துமாக இருந்தார்கள் என்பது பெறப்படும்.

**வணிகம் :** வணிகம் என்னும் சொல்லுக்கு வன்மை செய்தல் என்பது பொருள். தமிழகத்தில் இவ்வணிகத் தொழில் மிகவும் சிறப்பாக நடைபெற்றது. காவிரிப்பூம்பட்டினத்துத் தெருவில் இந்தியா முழுமையி லிருந்து வந்து குவிந்து கிடந்த பண்டங்கள் நெருங்கிக் கிடந்தனவாம். இவற்றை அப்பண்டங்கள் கிடைக்காத வேறு இடங்களுக்கு வாணிப முறையில் அனுப்பினார்களாம். மேலும், வெளிநாட்டுக் குதிரைகள் கடல் வழியாகக் கப்பல்களில் வந்தனவாம். இவற்றிலிருந்து நிலத்தின் வழியாக வும், கடல் வழியாகவும் பண்டைக்கால வாணிகம் நடைபெற்றது என்பது தெளியப்படும்.

**கடல் வாணிகம் :** இவ்விருவகையான வாணிகங்களுள் கடல் வாணிகம் மிகவும் சிறந்தது. தமிழகத்தில் கடல் வாணிகம் நல்ல நிலையில் இருந்தது. ஈழம், காழகம், கடாரம், சீனம், சோனகம், யவனம் முதலிய நாடுகளோடு நம்மவர்கள் வாணிகம் செய்துவந்தார்கள். நம் நாட்டு வைடூரிய மணிகள் இங்கிருந்து மெசபத்தோமியாவுக்குச் சென்றிருக்கின் றன. இம்மணிகள் தென்னாட்டின் மேற்கு மலையில் கிடைத்து வந்தன. இம்மலைப் பக்கங்களை வடமொழி நூல்கள் வைடூரிய நிலம் என்று குறிப்பிடு கின்றன. தமிழ்நாட்டு மலைக்குடி மக்கள் தம் உணவுக்காக மலைப்பக்கங் களில் கிழங்குகள் அகழும்போது இம்மணிக் கற்களைக் கண்டெடுத் தார்கள் என்னும் குறிப்பு, குறுந்தொகைச் செய்யுளில் வருகின்றது. அக நானூற்றிலும் இச் செய்தியைக் காணலாம்.

பஞ்சு, ஆடைகள் முதலியனவும் நம் நாட்டில் இருந்து சில நாடுகளுக்கு சென்றிருக்கின்றன. மூங்கிலின் தோல் போன்ற மெல்லிய ஆடைகள் ஐரோப்பாவுக்கு முன்பு மிகுதியாக ஏற்றுமதி செய்யப்பட்டன. கிரீஸ், உரோம் முதலிய நாடுகள் நம் நாட்டு ஆடை அணிகலன்களை மிகுதியாக விலைக்கு வாங்கின. உரோம் அரசர்களின் நாணயங்கள் வைகையாற்றங்கரைகளிலும், கோயம்புத்தூர் பக்கங்களிலும் தோண்டி எடுக்கப்பட்டிருத்தல் இதற்குச் சான்றாகும். மயில்தோகை, அரிசி, தந்தம், முத்துக்கள், நீலம், தேக்குமரம், மிளகு, பொன் முதலிய பொருள்கள் நம் நாட்டிலிருந்து பிற நாடுகளுக்கு அனுப்பப்பட்டன. பாலத்தீனம், சாலடியா, சீனம் முதலிய நாடுகளில் இவற்றிற்கேற்ற அடையாளங்கள் காணப்படுகின்றன. தேக்குமரமும், முத்தும், தமிழகத்திற்கு உரிய சிறப்பான பொருள்களாகும். பொன் என்னும் உலோகம், முதன் முதலாக தமிழ் நாட்டிலியே காணப்பட்டது என்று மக்ளீன் முதலான ஆராய்ச்சியாளர்கள் கருதுகிறார்கள். நம் நாட்டிலிருந்து கப்பல்கள் தங்கங்கள் கொண்டுபோனதாகச் சாலடி நாட்டின் பட்டயம் ஒன்று கூறுகிறது.

தமிழ் மக்கள் ஏறக்குறைய ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன்னமேயே வாணிபத்தில் சிறந்திருந்தனர் தொல்காப்பியத்தில் கடல் வழியாகச் செல்லும் வழக்கம், முந்நீர் வழக்கம் என்று குறிப்பிடப்பட்டுள்ளது. பொறுக்க முடியாத பெருந்துன்பத்திற்குக் கலங்கவிழ்ந்து வருந்தும் வணிக மக்களின் நிலைமையைத் தமிழ் நூல்கள் உவமையாக எடுத்துக் கூறியுள்ளன. இதனால், கடல் வாணிகத்தின் இயல்பு புலனாகும். கப்பலுக்குத் தமிழ் மொழியில் பல பெயர்கள் உள்ளன. பலவகையான கப்பல்கள் தமிழகத்தில் செய்யப்பட்டன. 'கலம்செய் கம்மியர்' என்றே தொழிலாளருள் ஒருவகையினர் இருந்தனர். புணை, பரிசல், கட்டுமரம், தோணி, திமில், ஓடம், படகு, அம்பி, வங்கம், கப்பல், நாவாய் முதலிய பலவகையான கப்பல்கள் செய்யப்பட்டன. பெரிய கப்பல்களும் செய்யப்பட்டன. ஒவ்வொரு பெரிய கப்பலும் ஒரு மதில்சூழ்ந்த மாளிகைபோன்று தோன்றுமாம்.

அயல்நாட்டுக் கப்பல்கள், நம் நாட்டுத் துறைமுகங்களுக்குப் பொன்னோடு வந்து, பொருளோடு திரும்பின. தொண்டி, கொற்கை, காவிரிப்பூம்பட்டினம் முதலியன சிறந்த துறைமுகங்களாக விளங்கின. இத்துறைமுகங்களின் வழியாக அயல்நாட்டு வாணிகம் நடைபெற்றது. அயல்நாட்டு வாணிகத்தால் ஊதியம் மிகுதி.

**உள்நாட்டு வாணிகம்!** உள்நாட்டு வாணிகத்தில் வணிகர்கள் கூட்டங்கூட்டமாகச் சென்றார்கள். தம் வாணிகப் பண்டங்களைச் சுமப்பதற்கு எருது, கழுதை முதலிய விலங்குகளைப் பயன்படுத்தினார்கள். வாணிகம் நன்றாக நடைபெறுவதற்குரிய நல்ல முதலும் நாணயமும் நற்குணமும் கொண்டு விளங்கினார்கள்.

**கடைத்தெருக்கள் :** தமிழ்நாட்டு நகரங்களின் கடைத்தெருக்கள், இலக்கியங்களில் அழகாகக் கூறப்பட்டுள்ளன. மதுரையின் கடைத் தெருவில் தோற்பண்டம், படங்கள், மரப் பொருள்கள், மணிகள், உலோகப்பொருள்கள், மணப்பொருள்கள், வகைவகையான மலர் மாலைகள், ஆடைகள், முதலியன எல்லாம் விற்கப்படுகின்றன என்றும், மணிகள், பொன், ஆடைகள், தானியங்கள் முதலியவற்றை விற்பதற்குத் தனித்தனியாகக் கடைத்தெருக்கள் இருந்தன என்றும் சிலப்பதிகாரம் கூறும். மேலும், வாணிகப் பொருள்களை விற்பனை செய்வதோடு அவ்வப்போது மக்களுக்குப் பயன்படக்கூடிய புதிய புதிய பொருள்களைக் கண்டுபிடித்து வாணிகம் செய்துவந்த செய்தியும் சிலப்பதிகாரத்தால் புலனாகின்றது. மதுரைக் காஞ்சியிலும், மதுரை நகரின் கடைத்தெருவைப்பற்றி விரிவாகக் கூறப்பட்டுள்ளது. காவிரிப்பூம்பட்டினத்தில், கடைகள், காலைக் கடை, மாலைக்கடை என இருவகையாகப் பிரிக்கப்பட்டன; அவை நாளங்காடி, அல்லங்காடி என்று சொல்லப்படும். பகற் காலத்தில் இன்ன இன்ன கடையில் இன்ன இன்ன பொருள் விற்கப்படும் என்பதற்கு அடையாளமாகக் கொடிகள் கட்டியிருந்தனர். இரவுக் காலத்தில் அதனை வெளிப்படுத்த விளக்கின் ஒளியைப் பயன்படுத்தினர். கடைத் தெருக்களில் விற்பவரின் ஓசையும், வாங்குவோரின் ஓசையும் சிறப்பாக இருந்தது. இவ்வாறே வஞ்சி முதலிய நகரங்களிலும் கடைத்தெருக்கள் இருந்தன என்று தமிழ் நூல்கள் கூறுகின்றன.

வணிகர்கள் கூலவாணிகர், அறுவை வாணிகர், பொன்வாணிகர், மணிவாணிகர் முதலிய பல பிரிவினராக இருந்தனர். இருந்து விற்பாரும், திரிந்து விற்பாரும் இருந்தனர்.

**பெரும்போக்கு :** பண்டைக்கால வாணிகர்கள், வாணிகத்தோடு மட்டுமல்லாமல் நாட்டின் பொதுநலங்களிலும் ஈடுபட்டார்கள். வள்ளல்களாக விளங்கினார்கள். அரசனுக்கு உதவியாகத் தூது செல்லுதல் போன்ற தொழில்களில் ஈடுபட்டார்கள். மேலும், வணிகர்களில் பலர் புலவர்களாகவும் விளங்கினர். சீத்தலைச்சாத்தனார், இளவேட்டனார், பொன்வாணிகனார், இளந்தேவனார் முதலியோர் அவ்வாறு விளங்கிய புலவர்கள் ஆவர்.

**முடிவுரை :** பண்டைத் தமிழகத்தில் வாணிகம் சிறப்பாக நடைபெற்றது. உள்நாட்டு வாணிகமும், கடல் வாணிகமும் நன்கு நடைபெற்றன. இவற்றால், நாடு செல்வ நிலையை எய்தியது.

## 12. சங்கப்புலவர் குறிக்கோள்

**முன்னுரை :** தம்மைச் சார்ந்தவர்களை உயர்த்த வல்ல பேரறிவு வாய்ந்தவர்கள் புலவர்கள் ஆவர். இவர்களின் தொழில், மக்களுக்கு அறிவுரைகள் வழங்கி நல்வழிப்படுத்துதலேயாகும். இவர்களின் கடமை,

இலக்கண இலக்கிய வரம்புகோலித் தமிழ் மொழியைப் போற்றி வளர்த்தல் ஆகும். இவர்கள் கொண்ட கடமையால் தமிழ் மக்களுடைய கல்வி, வீரம், புகழ், கொடை என்னும் பண்பாடுகள் நன்கு வளர்ந்தன. இவ்வளர்ச்சிக்குத் துணை புரிந்த சங்கப் புலவர்கள், சிறந்த குறிக்கோள் உடையவர்களாக விளங்கினர்.

**நடுவுநிலைமை :** உலகில் காணப்படும் வேற்றுமைகளைக் கடந்து விளங்குவது புலமையாகும். இத்தகைய புலமையுடையவர்கள் வேற்றுமைகளை ஒரு பொருளாக எண்ணமாட்டார்கள். பகைவர் இவர், நண்பினர் இவர் என்னும் வேறுபாடு கருதாமல் மக்கள் குலம் வாழச் சங்கப் புலவர்கள் தொண்டு புரிந்தார்கள். எனவே தமிழ்ப் புலவர்களைத் தமிழர் அனைவரும் போற்றினர். தம்முள் பகைகொண்ட தமிழ் வேந்தரிடையேகூடத் தமிழ்ப் புலவர்கள் நடுவுநிலையுடையவர்களாக இருந்தனர்.

**வறுமையில் செம்மை :** கல்வியில் கருத்துடையராக இருந்ததால், புலவர்கள் வறுமையில் உழன்றனர். இதனையறிந்த மன்னர்களும் மக்களும் பரிசில் தந்து அவர்களைப் பாராட்டினர். இப்பரிசிலுக்காகப் பெருமையில்லாத மக்களைப் பண்டைப் புலவர்கள் உயர்த்துக் கூறுவது இல்லை. இது அவர்களின் உயர்ந்த குறிக்கோளாக இருந்தது. மேலும் தம் அறிவுரையைக் கேட்பவரையே அவர்கள் மதித்தனர். அறிவுரையைக் கேட்காதவர் மன்னராக இருந்தாலும் அவரை மதியாது இகழ்ந்தனர்.

**வள்ளன்மை :** பெருஞ்சித்தனர் என்னும் புலவர் வறுமையில் பெரிதும் வாடியவர். இவர் குமணனிடத்துச் சென்று பெரும் பரிசில் பெற்று வந்தார். அப்பொருளைத் தமக்கென வைத்துக்கொள்ளாது தம் போல வறுமையால் வாடும் யாவராயினும் அவர்களுக்கெல்லாம் வரையாது வழங்குமாறு தம் மனைவிக்கு அறிவுறுத்தினர். இச் செயலால், வறுமையால் வாடிய அக்காலத் தமிழ்ப் புலவர்களின் வள்ளன்மை இனிது புலனாகும்.

**நட்புடைமை :** பண்டைக்காலப் புலவர் பெருமக்களின் கருத்துப் படி தமிழ் வேந்தர்கள் தங்கள் ஆட்சிமுறையினை அமைத்துக்கொண்டார்கள். ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன், 'அறிவுடையோன் ஆறு அரசும் செல்லும்' என அறிவுறுத்தியது இதற்குத்தக்க சான்றாகும். பழைய தமிழ் வேந்தர்கள் பெரும் புலவர்களை நண்பர்களாகப் போற்றியும், தம்மினும் உயிர்நிலையில் வைத்து வழிபட்டும் ஆதரித்தார்கள். பிசிராந்தையாருக்கும் கோப்பெருஞ் சோழனுக்கும் அமைந்த நட்பு, நட்புக்கு ஒரு சிறந்த எடுத்துக் காட்டாகும். கபிலர், பாரியிடம் கொண்டிருந்த நட்பும் அத்தகையதே ஆகும். பாரி இறந்த பின், பாரி மகளிரைத் தம் மகளிராகக் கருதி அவர்களைப் பார்ப்பார் இல்லில் வளரக் கபிலர்

ஏற்பாடு செய்த செய்தி, திருக்கோவலூர்க் கல்வெட்டில் பொறிக்கப் பட்டுள்ளது.

புலவர்களை நண்பர்களாகக் கொண்ட நாடாளும் மன்னர்கள் பலர் இருந்தனர். நாடாளும் மன்னர்கள் வெகுளியினால் மனம் திரிந்து பழி யுடைய செயலைச் செய்யத் துணிதலும் உண்டு. அப்போது புலவர் பெரு மக்கள் அறிவுரை புகன்று அவர்களை நல்வழிப்படுத்தினார்கள். கோப் பெருஞ்சோழன், அவனது மக்கள்மேல் போர்செய்யப் புறப்பட்டபோது புல்லாற்றூர் எயிற்றியனார் என்ற புலவர் அவனுக்கு அறிவுரை கூறிப் போர் நிகழாது தடுத்தார். சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன் என்பவன், தன் பகைவனாகிய மலையமான் பெற்ற இளங் குழந்தைகளை யானையின் காலால் இடரச்செய்ய முற்பட்டபோது கோவூர் கிழார் அறிவுரை கூறி அக்குழந்தைகளைக் காப்பாற்றினார்.

பண்டைப் புலவர்கள் விருப்பு வெறுப்பு இன்றி எல்லா மக்களையும் ஒப்பக் கருதி அறிவுரை வழங்கினர். தமிழ் வேந்தர்கள் தங்களுக்குள் பகைமைகொண்டபொழுது ஒருபக்கம் சாராது இரு திறத்தாரையும் பகை தீர்த்து ஒற்றுமைப்படுத்தும் கடமை, தமிழ்ப்புலவர்களுக்கு உரியதாக இருந்தது. சோழன் நலங்கிள்ளியினால் ஆதரிக்கப்பெற்ற இளந்தத்தனார் என்னும் புலவர், பகையரசனாகிய நெடுங்கிள்ளியால் ஆளப்படும் உறை யூருக்குச் சென்றார். அப்புலவரை ஒற்றர் என்று கருதிய நெடுங்கிள்ளி, அவரைக் கொல்லும்படி கட்டளையிட்டான். இதனை உணர்ந்த கோவூர் கிழார், புலவர்களின் இயல்பினை நெடுங்கிள்ளிக்கு எடுத்துரைத்து இளந்தத்தனாரைக் காப்பாற்றினார். இதனால் புலவர்களிடையே இருந்த நட்பு உணர்ச்சி பெறப்படும்.

**நல்ல நாடு :** சங்கப் புலவர்கள் பிறரிடம் பரிசு பெறுதலை விரும்பாது தாமே பெருஞ்செல்வர்களாகவும் தொழிலினர் ஆகவும் உரிமையுடன் வாழ்ந்தனர். அவர்கள் பாடிய செய்யுட்கள், மக்கள் வையத்துள் வாழ் வாங்கு வாழும் நல்வாழ்க்கை முறையினை விளக்குகின்றன. அவர்களால் இயற்றப்பட்டன தொல்காப்பியம், பத்துப்பாட்டு எட்டுத்தொகை, திருக் குறள், சிலப்பதிகாரம் ஆகிய நூல்களாகும். இந் நூல்களில் அவர்கள் கண்ட தமிழகத்தை வாய்மொழிகளால் உருவாக்கிக் காட்டியுள்ளனர். அவர்கள் எதிர்காலத் தமிழ்நாடு, எவ்வாறு அமைய வேண்டும் என்றும் எண்ணினார்கள். அதனை அவர்களின் நூல்களில் காணலாம்.

திருவள்ளுவர், நாடு என்னும் ஒரு அதிகாரம் கூறியுள்ளார். அதில் சிறந்த நாடு எவ்வாறு இருக்க வேண்டும் என்று அறிவுறுத்துகின்றார். குறையாத உணவுப் பொருளை விளைவிக்கும் உழவர்கள், நடுவு நிலைமை வாய்ந்த சான்றோர்கள், தாழ்விலாச் செல்வர்கள் மூவரும் ஒருங்கு வாழ் வதற்கு நிலைக்களமாக இருப்பதே நாடு என்று குறிப்பிடுகின்றார். அள விறந்த பொருளுடைமையால், எல்லா நாட்டினராலும் விரும்பத்தக்கதே

நாடு என்றும் குறிப்பிடுகின்றார். நிற வேற்றுமையும் சமய வேற்றுமையும் இன்றிப் பசியும் பிணியும் பகையும் நீங்கி மக்கள் இசைபெருக இன்புற்று வாழும் நாடே உயர்ந்த நாடு என்றும் வள்ளுவர் கருதுகின்றார்; இத்தகைய நாடாகத் தமிழகம் அமைய வேண்டும் என்பது புலவர்களின் உட்கோளாகும். செல்வர்கள் வறியவர்களுக்கு மனம் விரும்பிக் கொடுக்க வேண்டும். வறியாரது பசியை அகற்ற வேண்டும். மக்கள் தமக்குரிய வாழ்நாள் அளவும் நோயின்றி வாழ வேண்டும் என்பன பண்டைத் தமிழ்ப் புலவர்களின் குறிக்கோள்களாகும். அரசர்கள் முறை தவருது ஆட்சி புரிதலால் வேண்டும் பொழுது மழை பெய்யும். நோயும் பசியும் நீங்கி நாடு பொலிவு பெறும் என அக்காலப் புலவர்கள் அரசர்களுக்கு அறிவுரை வழங்கி அரசியல் செம்மையினை விளக்கினுர்கள். இதனல் சங்கப்புலவர்கள் நல்ல நாட்டினை உருவாக்குவதில் மிகவும் ஆர்வம் கொண்டிருந்தார்கள் என்பது பெறப்படும்.

**இரக்க உணர்ச்சி :** வேந்தர்களின் போர்த்திறமையைப் பாராட்டிய புலவர்கள், போரினுல் பகைவர் நாடு பாழாயின செய்தியை எடுத்துக் கூறியும் வருந்தினுர்கள். வெற்றியால் மகிழ்ந்த வேந்தனின் உள்ளத்தில் பகைவர் நாட்டின்பால் இரக்க உணர்ச்சியைத் தோற்றுவிக்கும் பொருளுடைய செய்யுட்களைப் பதியுமாறு எடுத்துக் கூறினுர்கள். போரின்றி அமைதியாக வாழும் ஆட்சி முறையினை விரும்பினுர்கள். குறுங்கோழியூர்க் கிழார் என்பவர் சேரமான் யானைக்கட் சேய் மாந்தரஞ் சேரல் இரும்பொறை என்பவன் நடத்திய அமைதியான ஆட்சி முறையைப் பாராட்டிப் பாடுகின்ருர்.

**முடிவுரை :** பழந்தமிழ்ப் புலவர்கள் ஒருவரோடொருவர் இகலின்றிக் கலந்து வாழ்ந்தார்கள். தாங்கள் பெற்ற பெருஞ்செல்வத்தை ஏனைய கலைஞர்களும் பெற்று மகிழ வேண்டும் என எண்ணி அவர்களை வள்ளல்களிடம் வழிப்படுத்தினுர்கள். இவ்வாறு வழிபடுத்தி வாழ்வித்த செய்யுட்கள் ஆற்றுப்படை என்ற பெயரால் சங்க இலக்கியங்களில் காணப்படுகின்றன. அயலார் இயல்பறிந்து அவருக்குத் தீங்கு செய்யாது நன்மையே புரிந்து ஒழுகும் பண்புடையவர்களாகப் பண்டைப் புலவர்கள் வாழ்ந்தனர். அவர்களால் உருவாக்கப் பெற்ற தமிழகம், இப் பண்புடைமையையே உயிர்நாடியாகக் கொண்டு விளங்கியது.

## 13. பாரதியும் பெண்மையும்

**முன்னுரை :** புலவர்கள், பூமி, நதிகள், விண்மீன்கள், எண்வகைச் செல்வம் முதலியவற்றைப் பெண்களாகக் குறிப்பிட்டுள்ளனர். சமணர்கள், வீட்டுலகத்தைக் கைவல்ய மடந்தை எனப் பெண்ணுகவே

அழைக்கின்றனர். பாரதியார், கண்ணனைக் கண்ணம்மா என்கிறார். மேலும் பல பெண் தெய்வங்களுக்கு வணக்கம் செலுத்தியுள்ளார். இவர் புதுமைப் பெண்களைப் பற்றிப் போற்றிப் பாடியுள்ளார். மற்ற புலவர்கள் பெண்களை வெறும் கற்பனையாக வர்ணித்துள்ளார்கள். ஆனால் பாரதியார் பெண்களின் பழங்கால நிலை, இடைக்கால நிலை, அவர்களின் குணங்கள், அவர்கள் செய்யக்கூடிய காரியங்கள் முதலியவற்றை விளக்கிக் கூறுகின்றார்.

**அடிமைப் பெண் :** கல்விக்குத் தெய்வம் கலைமகளாக இருக்க, பெண்கள் ஏட்டைத் தொடுவது கூடாது என்று வீட்டுக்குள் பூட்டிவைத்தனர். அடுப்பூதும் பெண்களுக்குப் படிப்பு எதற்கு?என்னும் பழமொழியை உண்டாக்கினர். இவற்றால், பெண்கள் படிப்பதற்கும் அருகதை அற்றவர் என எண்ணினர். இசை, நடனம், முதலிய கலைகள் பொது மகளிர்க்கே உரியன என்று கூறிப் பெண்களின் அறிவு வளர்ச்சியைத் தடுத்தனர். இதனால் கலைவளர்ச்சி தடைப்பட்டது. பெண்களுக்கு உரிமை தரவும் மறுத்தனர். அடிமைகளாக அவர்களை நடத்தினர். பணங்கொடுத்து வாங்கி வந்த மாட்டைத் தொழுவத்தில் கட்டுவதுபோல், அவர்களைக் கட்டுப்படுத்தி மாடுபோல் உழைக்கச் செய்தனர். இவற்றையெல்லாம் பாரதியார் கண்டார். அந்த நாள் மலையேறி விட்டது. ஆண் இன்றிப் பெண் இல்லை. பெண் இன்றி ஆண் இல்லை. இருவரும் சமம். ஏட்டையும் பெண்கள் தொடுவது தீமை என்று எண்ணியிருந்தவர் மாய்ந்துவிட்டார் என்று பாடி அடிமைப் பெண்களின் விலங்கை ஒடித்தார்.

நாயினிடம் யோசனை கேளாமல் அதை விற்பது போல, பெண்களையும் பிள்ளை வீட்டாரிடம் பணம் பெற்றுக்கொண்டு விற்றார்கள். இதனைக் கண்ட பாரதியார்,

> "நல்லவிலை கொண்டு நாயை விற்பாரந்த நாயிடம்
> யோசனை கேட்பதுண்டோ
> கொல்லத் துணிவின்றி நம்மையு மங்கிலை கட்டி வைத்தார்."

என்று உள்ளம் குமுறினார். முற்காலத்தில் போட்டி ஏற்படுத்தி அதன் மூலம் ஒரு பெண், தன் கணவனைத் தேர்ந்தெடுக்கும் வாய்ப்பு இருந்தது. இடைக் காலத்தில் அந்நிலை மாறியது. கல்வியறிவற்றவனுக்கும், வயது சென்றவனுக்கும், பிணியாளனுக்கும் பெண்ணைக் கொடுத்தனர். ஏனெனில் பணம்தான் அவர்களுக்கு முக்கியம். இந்நிலை பிற்காலத்தில் ஏற்பட்டது. பழம் தமிழ் இலக்கியத்தை நோக்கினால், குணம், குலம், கல்வி, முதலிய பத்துப் பொருத்தங்கள் அமைந்து இருப்பவனுக்கே பெண்ணைக் கொடுத்தனர் என்பது விளங்கும். எனவே, முற்காலத்தில் இல்லாத பெண்டிமை பிற்காலத்தில் புகுந்தது. அதனைப் பாரதியார் தீவிரமாக எதிர்த்தார்:

**புதுமைப்பெண் :** பெண்ணின் அடிமைத்தனத்தை எதிர்த்த பாரதியார், புதுமைப்பெண் எப்படி இருக்க வேண்டும் என்று கூறினார். திமிர்ந்த நன்னடை, நேர்கொண்ட பார்வை, நிலத்தில் யாருக்கும் அஞ்சாத நெறிகள், திமிர்ந்த ஞானச்செருக்கு, இவற்றில் சிறிதும் திறம்பாமல் இருப்பவளே புதுமைப்பெண் என்று கூறினார். இத்தகைய பெண்ணுக்கு ஞானம், நல்லறம், வீர சுதந்திரம், ஆகியவை குணங்களாக அமைய வேண்டும் என்றும் குறிப்பிட்டார். மூத்த பொய்மைகள் யாவையும் அழிக்க வேண்டும், மூடக் கட்டுக்கள் யாவையும் அழிக்க வேண்டும். இதுவே, செய்யக்கூடிய காரியங்கள் என்றும் சுட்கின்றார். பாரதி கண்ட புதுமைப்பெண் பட்டங்கள் ஆள்வதும், சட்டங்கள் செய்வதும் ஆகிய காரியங்களைச் செய்யவேண்டும் என்று விரும்புகின்றார். மங்கம்மாள், பாண்டி நாட்டை ஆளவில்லையா? கவியரசி சரோஜினி நாயுடு சிறந்த கவியரசியாக விளங்கியதுடன் மத்திய மாகாணத்தை ஆட்சி புரியவில்லையா? அகில இந்திய மாதர் சங்கம் உலக முன்னேற்றத்திற்கான வழிகளை ஆராயவில்லையா? இவற்றால், "தொட்டிலை ஆட்டுங்கை, தொல்லுலகை ஆளுங்கை" என்னும் பழமொழி எவ்வளவு உண்மையானது என்பது புலனாகின்றது. பெண்கள் வேதம் படைக்கவும், நீதிகள் செய்யவும், வந்ததாகப் பாரதியார் கூறுகிறார். மைத்ரேயி என்னும் பெண் வேதத்தைக் கற்றுச் சிறப்பும் பெற்றார். இதனால், பெண்கள் வேதங் கற்றமை பெறப்படும். கிரேக்க நாட்டில் நீதிக்குரிய தெய்வம் பெண்தெய்வமாகும். இதனால், பெண்களும் நீதி வழங்கிய காட்சி தெரிகின்றது.

சிவாஜியும் நெப்போலியனும் வீரர்களாகத் திகழ்வதற்குக் காரணம், அவர்களின் தாய்மார்களே ஆகும். எனவே, பாரதியார், "சூரப் பிள்ளைகள் தாய் என்று போற்றுவோம்" என்று புதுமைப்பெண்ணைப் பாடுகின்றார். எனவே, புதுமைப் பெண்களால் தேவசாதி படைக்கவும் கூடும் என்பது தெரிகிறது. இளங்குழந்தைகளை உருவாக்கும் சிற்பியாக விளங்குபவள் தாய்; எனவே, தாயினிடமே எதிர்கால உலகம் அமைந்திருக்கிறது. அவ்வுலகத்தைப் புதுமைப்பெண் படைத்துத் தர வேண்டும் எனப் பாரதி விரும்பினார்.

**முடிவுரை :** பெண்ணொருத்தி கணவனை அடைந்து தனது துன்பங்களில் பங்கு பெற்று, பழங்கால மாதர்கள் செய்து வந்த அறங்களைச் செய்து சிரிய முறையில் வாழ்க்கை நடத்த வேண்டும் என்பதே பாரதியாரின் விருப்பம். இவளே புதுமைப் பெண். இப் புதுமைப் பெண்ணைப்போல எல்லாப் பெண்களும் நடப்பார்களானால், உலகம் முன்னேறும்.

# 14. பத்தொன்பதாம் நூற்றாண்டில் பயண இலக்கியம்

**முன்னுரை :** தமிழில், பத்தொன்பதாம் நூற்றாண்டில் பயண இலக்கிய நூல்கள் தோன்றின; அவை கூறும் செய்திகள் சுவையுடையன. வரலாற்றுச் செய்திகள் பலவற்றை அறிதற்கு ஆதாரமாக அமைவன.

**முதல் பயண நூல் :** தமிழில் ஏனுகுல வீராசாமி ஐயர் என்பவர், கி.பி. 1832இல், அவர் செய்த காசி யாத்திரையை விவரமாக அச்சிட்டார். இதுவே தமிழில் முதல் முதலாக எழுதப்பட்ட பயண நூல் ஆகலாம். இந்நூல் இப்போது கிடைக்கவில்லை. ஆனால் இந்நூல் பற்றிய செய்தியைக் "காசி இராமேஷ்வர யாத்திரை" என்னும் நூலை எழுதிய சென்னை சிந்தாதிரிப்பேட்டை கொ. சண்முக சுந்தர முதலியார் குறிப்பிட்டுள்ளார். இந்நூல் 1903இல் வெளியிடப்பட்டது.

**கங்காயாத்ராப்ரபாவம் :** இந்நூல் கவித்தலம் துரைசாமி மூப்பனார் அவர்களால், 1887இல் இயற்றப்பட்டது; 132 பக்கங்கள் கொண்டது. பம்பாய் நகரைப் பற்றிச் சொல்லும்போது, "அந்திப் பொழுதில் ஆவணத் தெருவில் எள் விதைப்பினும் விழா. கவிச் சக்கரவர்த்தியார், இக் கடைத் தெருவைக் கொண்டே இப் பாடல் அருளிச் செய்தார் போலும்" என்று கிஷ்கிந்தா காண்டம் பம்பைப் படலத்தில் உள்ள களனவிலன்ன" என்னும் பாடலைக் கூறியுள்ளார்." இந் நகரில் வண்டியோட்டுவோரெல்லாம் வெகு யோக்கியர். ரூபாய் ஒன்று சத்தம் பேசி, வாங்கும்போது பேசினது ரூபாய் இரண்டு என்பர்" என்று பூனாவைப் பற்றி நகைச் சுவையாக எழுதியுள்ளார்.

**திவ்விய தேச யாத்திரையின் சரித்திரம்:** சேலம் பகடாலு நரசிம்மலு நாயுடு அவர்களால் 1885இல் இயற்றப்பட்டது. அளவிலும் விஷயத்திலும் பெரிய நூல். 1885இல் பம்பாயில் நடைபெற்ற முதலாவது இந்திய தேசிய காங்கிரசுக்குச் சென்னையிலிருந்து இருபத்திரண்டு பிரதிநிதிகள் சென்றனர். அவர்களுள் நாயுடும் ஒருவர். எனவே இவருடைய பயண நூலில் தலயாத்திரை, அரசியல், மதம், பொருளாதாரம், சமூகச் சீர்திருத்தம் முதலிய எல்லாத் துறைகள் பற்றிய கருத்துக்களையும் காண லாம். இந்திய தேசிய காங்கிரஸ் சபையை ஸ்தாபித்த மிஸ்டர் ஹியூம், ஏழைகளின் துயர் போக்கப் பாடுபட்ட தாதபாய் நவ்ரோஜி முதலியவர் களைப் பற்றிப் பாராட்டி எழுதியுள்ளார்; புகைவண்டிக் கட்டணங்கள் பற்றிய விவரங்களும் கொடுத்துள்ளார். இக் கட்டணங்களைப் பார்த்தால் இப்போது நாம் செலுத்தும் கட்டணம் பல மடங்கு உயர்ந்திருக்கக் காணலாம். ரெய்ச்சூரில் இருந்த குளிரைப் பற்றிக் குறிப்பிடும்போது, "ஆயிரம் தேள்கள் ஒரே சமயத்தில கொட்டினால் எப்படியிருக்குமோ அப்படியிருந்தது குளிர்" என்கின்றார்.

**தட்சிணமிருந்து உத்தர யாத்திரை போய் வரும் விபரம் :** கோயிலூர் ஸ்ரீ முத்துராமலிங்க சுவாமிகள் ஆதீனத்தில் 1886இல் வெளியிடப் பெற்றது; இரண்டாம் பதிப்பு 1888இல் வெளிவந்தது. காசிக்குச் செல்லும்போது புகை வண்டி செல்லும் வழியில் உள்ள தலங்கள் இதில் குறிப்பிடப்பட்டுள்ளன.

**கட்டுரைகள் :** ஜனவிநோதினி, ஜநா நந்தினி, விவேக சிந்தாமணி ஆகிய பத்திரிகைகளில் 'மகாபலிபுரம்', 'செஞ்சிக் கோட்டை', 'ஸ்ரீரங்க பட்டணத்'தின் தற்கால நிலைமை போன்ற சுமார் 20 கட்டுரைகள் வெளிவந்துள்ளன.

மேலே குறிப்பிடப் பெற்றவை உள்நாட்டு யாத்திரை பற்றியன. இனி, வெளிநாட்டு யாத்திரை பற்றிய நூல்களையும் கட்டுரைகளையும் காண்போம்.

**இங்கிலாந்து சென்று வந்த ம. ா. ா. ஸ்ரீ சேலம் இராமசுவாமி முதலியார் அவர்களின் நல்வரவைக் கொண்டாடக் கூடிய மகாஜன சபையின் பிரதாப சங்கிரகம் :** இது 1886இல் மொழிபெயர்த்து வெளியிடப் பெற்றது; வெளிநாட்டு யாத்திரையைப் பற்றிக்கூறும் முதல் நூல். லண்டனில் உள்ள போலீஸ்காரர்களின் திறமை, உதவி, நற்குணம் முதலியவற்றைப் பற்றிப் புகழ்ந்து கூறியுள்ளார்.

**லண்டன், பாரீஸ் நகரங்களின் விநோத சரித்திரம் :** இது 1889இல் வெளியான தமிழ் நூல். மெட்ராஸ் ஸ்டாண்டர்டு என்னும் ஆங்கில நாளிதழின் ஆசிரியர் ஜி. பரமேசுவரம் பிள்ளை, மேநாடுகளுக்குச் சென்ற தம் அநுபவங்களைப் பன்னிரண்டு கடிதங்களாக இவ்விதழில் வெளியிட்டுள்ளார். அவற்றைத் தமிழாசிரியர் ச. கங்காதரம் பிள்ளை தமிழில் மொழிபெயர்த்துள்ளார்.

"பஸ் கம்பெனிக்காரர்களுக்குச் சொந்தமான குதிரை பூட்டிய பஸ்களும் உண்டு. தனித்த ஆட்களும் சில வண்டிகள் வைத்துள்ளார்கள். இவர்கள் வாடகை என்ற பெயரால் பணத்தைப் பறிப்பார்கள். இவ்வண்டிகளுக்குப் 'பயிரேட்ஸ்' என்று பெயர். இச்சொல்லுக்குத் 'திருட்டுத் தனம் பண்ணுகிற வண்டிகள்' என்று பொருள். இவைகளில் போய்த் தப்பித் தவறி அகப்பட்டுக்கொள்ளக் கூடாது" என்று இவர் குறிப்பிட்டிருப்பது, நினைக்கத் தக்கது.

**"நான் இங்கிலாந்துக்குப் போனது" :** சுதேசமித்திரன் ஆசிரியர் ஜி. சுப்பிரமணிய ஐயர் 1897இல் லண்டனுக்குப் போய் வந்து எழுதிய கட்டுரையே இது. இக்கட்டுரையில் ஆங்கிலேயர்களின் உழைப்பினை மிகவும் பாராட்டியுள்ளார்.

**"தென்னாப்பிரிக்காவிலிருந்து ஒரு கடிதம்" :** இக் கடிதம் 4—8—1898இல் சுதேசமித்திரன் நாளிதழில் வெளியாயிற்று. இதனை

எழுதியவர், சென்னையிலிருந்து, தென்னாப்பிரிக்கா சென்ற டர்பன் அமளாஸி கோர்ட் இண்டர்பிரடர் வி. ரா. இராஜரத்தின முதலியார் என்பவர். இவர் தென்னாப்பிரிக்காவில் இந்தியர்களுக்கு உதவியாக இருந்த M. K. கேண்டி என்ற அட்வகேட்டைப் பற்றி விரிவாக எழுதியுள்ளார். M. K. கேண்டி என்று குறிப்பிடுவது மகாத்மா காந்தியடிகளையே ஆகும். மாகாத்மா காந்தியடிகளைப் பற்றி, தமிழ்ப் பத்திரிகைகளில், ஏன் இந்தியப் பத்திரிகைகளில் வெளியான முதலாவது செய்தி இதுவாகத்தான் இருக்கும் என்று தெரிகின்றது.

**சுதேசமித்திரனில் வெளியான கடிதங்கள் :** ஆர். நாராயண ஐயர், ஆர். சாமிநாத ஐயர் ஆகிய இருவரும் 1898இல் இங்கிலாந்தில் கல்வி பயின்றார்கள். அவர்கள் தம் தந்தையாருக்கு எழுதிய கடிதங்கள், அவ்வப்போது சுதேசமித்திரனில் வெளியாயின. 'ஜனங்கள் பூட்ஸ்களுடன் பனிக்கட்டியில் நடக்கிறார்கள் நாங்களும் கொஞ்ச தூரம் நடந்து போனோம். திரும்பி வீட்டிற்கு வருவதற்குள் கால் முதல் தலை வரையில் நம்முடைய சுவாமிநாத சுவாமி விபூதி அபிஷேகம்போல், பனிக்கட்டி எங்களை மூடிவிட்டது' என்று குறிப்பிட்டிருப்பது, மிகவும் சுவையாக உள்ளது.

**முடிவுரை :** பயண நூல்களையும், பயணக் கட்டுரைகளையும், கடிதங்களையும் படிக்கும்போது பல சுவையான செய்திகளை அறிந்து கொள்கின்றோம். வரலாற்று நிகழ்ச்சிகள் பலவற்றையும், வெளிநாட்டு வாழ்க்கை அனுபவங்களையும் தெரிந்து கொள்கின்றோம்.

## பகுதி II—தமிழ்

# துணைப் பாட நூல்

## (Non—Detailed Prose)

### கதைக் கொத்து

## 1. பவள மல்லிகை

*(அம்புஜம்...அழகான பெண் குழந்தை. கண்ணன் என்றால் அவளுக்கு உயிர். வேறொருவர் வீட்டுத் தோட்டத்திற்குச் சென்று பவள மல்லிகை பொறுக்கி மாலைகட்டிக் கண்ணனுக்குச் சாத்துவாள். அவளின் தெய்வீக உள்ளத்தைப் பவள மல்லிகை இருந்த தோட்டத்திற்கு உரியவர் உணரவில்லை. அதனால் அவர் அக் குழந்தையைத் தோட்டத்திற்கு வரக் கூடாது என்றார். ஒருநாள், அவரின் கொடூர உள்ளமும் அக்குழந்தையின் தெய்வீக உள்ளத்தால் தெளிவுற்றது. அக் குழந்தையின் உள்ளத்தைக் கருவாக வைத்துச் சித்திரிக்கப்பட்டதே இக்கதை.)*

அம்புஜம் குழந்தைப்பெண். கண்ணன் என்றால் அவளுக்கு உயிர். எங்காவது பாகவத உபந்நியாசம் நடந்தால் அவள் தன் பாட்டியுடன் போய்க் கேட்பாள். பள்ளியில் ஐந்தாவதோ, ஆறாவதோ படிக்கிறாள். தகப்பனார் பள்ளியில் ஆசிரியர். தாய் இல்லை. அவளுக்கு இரண்டு தம்பியர்கள் உண்டு. அம்புஜம் நாள்தோறும் பூவைக் கோத்து மாலை கட்டிக் கண்ணனுக்கு அலங்காரம் செய்வாள். அதற்காக அவள், தான் இருந்த பெரிய தெருவிலிருந்து குப்புமுத்து முதலி தெருவுக்குப் பூப் பொறுக்குதற்காக நாள்தோறும் வருவாள். அத் தெருவில் கல்யாணி என்னும் அம்மையார் ஒரு வீட்டில் வாடகைக்கு இருந்தாள். அந்த அம்மையாரின் வீட்டுத் தோட்டத்திற்கு அம்புஜம் நாள்தோறும் வருவாள். அம்புஜத்தின் தெய்வ பக்தியைக் கண்ட கல்யாணி அம்மையாருக்கு அம்புஜத்தின் மீது அளவு கடந்த பற்று ஏற்பட்டது. இந்நிலையில் வீட்டுக்குச் சொந்தக்காரர் வடக்கேயிருந்து அங்கே வந்துவிட்டார். அவர் பிராமணர்; கிழவர். ஆயினும் மீசை வைத்துக்கொண்டு பொல்லாதவரைப்போல இருந்தார். அவருடைய மனைவி மிகவும் சாது.

ஒருநாள், அம்புஜம் வழக்கம்போல் பூப்பொறுக்குதற்காக அங்கு வந்தாள். அப்போது அக் கிழவர், "இந்தக் குட்டி யார்" என்று கேட்டார். உடனே அம்புஜம், "பெரிய தெருவிலிருந்து

வருகிறேன் தாத்தா" என்று கூறினாள். தாத்தா என்று அவள் கூறியது, அக் கிழவருக்கு என்னவோ போல் இருந்தது. உடனே அவர், 'என்ன போக்கிரிப் பெண்ணாக இருக்கிறாயே' என்று கோபத்தோடு கூறினார். இதனைக் கேட்டுக்கொண்டிருந்த கல்யாணி, அம்புஜத்திடம் இனி அவரைத் தாத்தா என்று கூப்பிடாதே என்று சொன்னாள்.

இரண்டு நாட்கள் சென்றன. அம்புஜம் வழக்கம்போல் பூப் பொறுக்கத் தோட்டத்திற்கு வேகமாகச் சென்றாள். அப்போது அக் கிழவர், "ஏ குட்டி, என்ன சுதந்திரத்தோடு நீபாட்டுக்குப் போகிறாயே! யாரைக் கேட்டுக்கொண்டு போகிறாய்?" என்று கேட்டார். "கல்யாணி மாமியைக் கேட்டேன்" என்றாள் அம்புஜம். உடனே அவர், "என்னை அல்லவா கேட்க வேண்டும்" என்று உரிமையோடு முழங்கினார். உடனே அம்புஜம், "சரி இனிமேல் கேட்கிறேன்; எங்கள் கண்ணனுக்குப் பூமாலை கட்டிச் சாத்துதற்காகத்தான் பூப்பொறுக்குகிறேன். இப் பூ இறைவனுக்காகத்தானே ஏற்பட்டது! ஆதலால், அதை நாம் வைத்துக்கொள்ளக் கூடாது" என்று குழந்தை உள்ளத்தோடு கூறினாள். அதைக் கேட்ட கிழவர், இந்தக் குட்டி வாயாடியாக இருக்கிறதே என்று சொல்லிப் போய் விட்டார்.

ஒருநாள் ஞாயிற்றுக்கிழமை. அக்கிழவர் கல்யாணி அம்மையாரின் கணவனோடு பேசிக்கொண்டிருந்தார். வீட்டை ரிப்பேர் செய்ய வேண்டுமென்றும், முக்கியமாகத் தோட்டத்தை ஒழுங்குபடுத்தவேண்டும் என்றும், கூறி அதற்காக அந்தப் பவள மல்லிகை மரத்தை வெட்டிவிட வேண்டும் எனச் சொன்னார். உடனே கல்யாணி அம்மையாரின் கணவர் "அம் மரம் நிறையப் பூக்கிறது. அதை வெட்டலாமா என்றார்?" அதற்குக் கிழவர் "காலையில் எழுந்தவுடன் குளிக்கிற இடத்தில் கிழவிகளும் குழந்தைகளும் வந்தால் நாம் எப்படி நம் வேலையைப் பார்ப்பது? எனவே மரத்தை வெட்ட வேண்டியதுதான" என்றார் மறுநாள் பூப்பொறுக்க வந்த அம்புஜத்திடம் மரத்தை வெட்டப்போகிறேன் நாளை முதல் இங்கே வந்து பூப் பொறுக்கக் கூடாது என்று கடுகடுப்பாகச் சொன்னார். அப்புஜம் பதறி ஓடிவிட்டாள். மறுநாள் முதல் அம்புஜம் பூப்பொறுக்க வரவில்லை. சுந்தரமூர்த்தி விநாயகர் கோயில் தெருவில் அவளுடைய சிநேகிதி வீட்டில் பவளமல்லிகை இருந்தது. அங்குச் சென்று பூப் பொறுக்கி வந்து கண்ணனுக்குச் சாத்தினாள். ஒருநாள் அவள் பூப் பொறுக்கப் போகும்போது ஒரு கார் அவள் மேல் ஏறிவிட்டது. அதனால் அவளது காலில் கட்டுக் கட்டியிருந்தார்கள். அம்புஜத்தைப் பார்க்கக் கல்யாணி அம்மையார் வந்தார். வந்ததும் அம்புஜத்திற்கு ஏற்பட்ட விபத்தை அறிந்தாள். வீட்டிற்குத் திரும்பி ஆத்திரத்தோடு வீட்டுக் காரரின் கொடுமையைப் பற்றி வேண்டுமட்டும் உறக்கக் கத்தினாள். அன்று மாலை, அக் கிழவரின் மனைவி, கல்யாணியிடம் வந்து அக் குழந்தையின் வீடு எங்கேயிருக்கிறது என்று கேட்டுத் தெரிந்துகொண்டு

அம்புஜத்தைப் போய்ப் பார்த்துவந்தாள். மறுநாள் காலை அவ்வீட்டுக் கார அம்மாள், பவளமல்லிகை மரத்திற்கு அடியில் பூப்பொறுக்கிக் கொண்டிருந்தாள். அக்கிழவர் நாழிகையாகி விட்டது என்று சொல்லிக் கொண்டிருந்தார். இருவரும் சில நிமிஷங்களில் பூவோடு அம்புஜத்தின் வீட்டிற்குச் சென்றார்கள். சென்று, அக்கிழவர் அம்புஜத்தைப் பார்த்து விக்கி விக்கி அழுதார். "இனிமேல் என் வீட்டிற்கு நாள்தோறும் பூப் பொறுக்க வா என்று அன்போடு கூறினார். இனிமேல் என்னைத் தாத்தா என்றே சொல். மரத்தை நான் வெட்டமாட்டேன். நெடு மரமாக இருக்கும் என்னை வெட்டினாலும் வெட்டலாம், அம்மரத்தை வெட்டுவது பெரும் பாவம்" என்று தன்னை அறியாமலேயே உணர்ச்சி ததும்ப உரைத்தார்.

அம்புஜத்தின் கால் குணமடைந்து விட்டது. அவள் நாள்தோறும் அக்கிழவரின் வீட்டிற்குப் பூப்பொறுக்கச் சென்றாள். அக் கிழவரைப் பார்த்து, இரண்டொரு வார்த்தைகள் பேசினாள். அவளின் காலில் தழும்பு ஏற்பட்டது. அதைக் காட்டிலும் அக்கிழவரின் உள்ளத்தில் ஆழமான தழும்பு ஏற்பட்டது.

## 2. பெரிய இடத்துச் சம்பந்தம்

(ஜமீன் சபாபதிப்பிள்ளையின் மகன் சிவசங்கரன். அவன் பெரிய இடத்துச் சம்பந்தம் வேண்டும் என எண்ணினான். திவான்பகதூர் குமாரசாமிப் பிள்ளையின் மாப்பிள்ளையானான். பாவம்...சம்பந்தம் பெரிய இடத்தில் கிடைத்ததே தவிர, அவனுக்கு அந்தஸ்து கிடைக்கவில்லை. அதனால் அவன் அடைந்த துன்பங்களும் பல. அவன் கட்டிய மனக் கோட்டை இடிந்து மண்ணோடு மண்ணாய்ப் போய்விட்டது. இதனை விளக்குவதே இக்கதை.)

பூண்டி ஜமீனின் உரிமையாளர் சபாபதிப் பிள்ளை. இவர் மனைவி அம்மணி அம்மாள். சபாபதிப்பிள்ளை பெருத்த அளவில் அரிசி வியாபாரம் செய்துகொண்டிருந்தார். இவரின் மகன் சிவசங்கரன், சென்னைக்குச் சென்று உயர்தரப் படிப்புப் படித்தவன். இவன் படிப்பை முடித்ததும் ஊருக்கு வந்தான். இவனுக்குப் பட்டம் பதவிகளில் விருப்பம் அதிகம். அரசியல்வாதிகளுடனும், அரசாங்க அதிகாரிகளுடனும் பழகு வதை மிகவும் விரும்புவான். அரசாங்கப் பதவி ஒன்றில் எப்படியாவது அமரவேண்டும் என்று ஆசைப்பட்டான். இங்கிலையில் கல்யாணத் தரகர் ஒருவர் சபாபதிபிள்ளையிடம் வந்து திவான்பகதூர் குமாரசாமிப் பிள்ளைக்கு ஒரு மகள் இருப்பதாகவும், சம்மதமிருந்தால் சிவசங்கரனுக்குத்

திருமணம் செய்து வைக்கலாமென்றும் கூறினர். திவான்பகதூர் குமாரசாமிப்பிள்ளை என்பவர் சென்னையில் பெரும் புகழுடன் விளங்குபவர். அவரின் அரசியல் சொற்பொழிவுகளைச் சிவசங்கரன் பலமுறை கேட்டிருக்கின்றுன். ஆதலால் அவரின் மகளையே மனஞ் செய்து கொள்ள வேண்டும்; அவ்வாறு மணஞ் செய்து கொண்டால் உயர்ந்த உத்தியோகம் கிடைக்கும் என்று எண்ணினுன். ஆனல் அவனின் தந்தையார் பெரிய இடத்துச் சம்பந்தம் நமக்கு வேண்டாம் என்று பிடிவாதமாகக் கூறினர். என்றுலும் சிவசங்கரன், குமாரசாமிப் பிள்ளையின் மகளையே மணஞ்செய்து கொள்வேன் என்று ஒருகாலில் நின்றுன். அவனின் எண்ணத்தை மாற்றமுடியாமல், குமாரசாமிப் பிள்ளையின் மகள் தமயந்தியைச் சிவசங்கரனுக்கு மணஞ் செய்து வைத்தார்.

திருமணம் முடியும்வரை குமாரசாமிப்பிள்ளையின் குடும்பத்தார், சபாபதிப்பிள்ளை வீட்டாருடன் மரியாதையாக நடந்து கொண்டனர். அதன்பின் அவர்கள் தங்கள் குணத்தைக் காட்டத் தொடங்கினர். அக் குடும்பத்திலுள்ள ஒவ்வொருவரும் தங்கள் அகம்பாவ உணர்ச்சியை வெளிப்படுத்தினர். பிள்ளை வீட்டாரை அவர்கள் மனிதர்களாகவே நினைக்கவில்லை. திருமணத்தை நாலுபேர் பாராட்டும்படி குமாரசாமிப் பிள்ளை தடபுடலாகச் செய்தாரே தவிர, மறுவீடு, சீர்வரிசை முதலியன சரியாகச் செய்யவில்லை அதுபற்றியெல்லாம் சபாபதிப்பிள்ளையோ சிவசங்கரனே குறைப்பட்டுக்கொள்ளவில்லை. இருந்தும், குமாரசாமிப் பிள்ளையின் குடும்பத்தார் சபாபதிப்பிள்ளையுடன் அடிக்கடி தகராறு செய்துகொண்டே இருந்தனர். தமயந்தியைச் சிவசங்கரனுடன் அனுப்பி வைக்கவும் மறுத்தனர். இறுதியாக உறவினர்களின் பஞ்சாயத்தால், குமாரசாமிப்பிள்ளை, தம் பெண்ணைச் சிவசங்கரனுடன் கிராமத்திற்கு அனுப்பிவைத்தார். அப்படி அனுப்பினுலும் அதிக நாள் அங்குத் தங்க விடுவதில்லை. நாலைந்து நாட்களில் யாரையாவது அனுப்பிப் பெண்ணை அழைத்துக்கொண்டு வந்து விடுவார். இப்படி ஏழு எட்டு முறை நடந்தது. பின் அதுவும் நின்று போய்விட்டது. "மனைவி வேண்டுமானல், சிவசங்கரன் சென்னையில் வந்து இருக்கட்டும்" என்று கண்டிப்பாகக் குமாரசாமிப்பிள்ளை கூறிவிட்டார். சபாபதிப்பிள்ளைக்கு இவையெல்லாம் ஆத்திரத்தை ஏற்படுத்தின. ஆயினும் சம்பந்தம் வைத்துக் கொண்டபின், மனம் கசந்து கொள்வதில் பயனில்லை என்று எண்ணிச் சிவசங்கரனைக் குமாரசாமிப் பிள்ளையின் வீட்டிற்கு அனுப்பிவைத்தார்.

குமாரசாமிப்பிள்ளையின் வீட்டிற்குச் சென்ற சிவசங்கரனைக் குமார சாமிப்பிள்ளையின் குடும்பத்தார் தாழ்வாக நடத்தினர். அவன் அங்குச் சிறையிலிருப்பதுபோல் இருந்தான். தன் தேவைகளுக்கு எல்லாம் வேலையாட்களின் தயவை எதிர்பார்த்து வாழ்ந்தான். தமயந்தியும் அவனிடம் பெருமிதத்தோடு நடந்து கொண்டாள். அவளுக்கு ஆசை

ஏற்படும்போது மட்டும் அவனோடு கொஞ்சிக் குலாவுவாள். வெளியில் போவதாக இருந்தால் அவனை டிரைவர் பக்கத்தில் உட்கார வைத்து விட்டு தான், தன் வீட்டில் உள்ளாருடன் பின்னால் உட்கார்ந்து கொள் வாள். இந்நிகழ்ச்சிகளெல்லாம் சிவசங்கரனைக் கொதிப்படையச் செய்தன. ஆனாலும் அவன் தான் செய்த முட்டாள் தனத்திற்கு இத் தண்டனை வேண்டியதுதான் என்று எண்ணி அமைதி அடைந்தான்.

இந்நிலையில், சபாபதிப்பிள்ளை எதிர்பாராத வகையில் மரணமடைந் தார். அச்சமயத்தில் தமயந்தி ஆண் குழந்தை ஒன்றைப் பெற்றாள். சபாபதிப்பிள்ளை இறந்தது, குமாரசாமிப்பிள்ளை வீட்டாருக்கு மகிழ்ச் சியைத் தந்தது. கிராமத்திலுள்ள எல்லாவற்றையும் விற்றுவிட்டுப் பண மாகக் கொண்டுவந்து விடுமாறு குமாரசாமிப்பிள்ளை, சிவசங்கரனிடம் யோசனை கூறினார். ஆனால் சிவசங்கரன் அவ்வாறு செய்யவில்லை.

சபாபதிப்பிள்ளை இறக்கும்போது உயில் ஒன்று எழுதிவைத்தார். அதில் தன் மனைவியின் பிற்கால வாழ்விற்காகத் தம் சொத்தில் ஒரு பகுதியை எழுதிவைத்தார். மற்றவை மகன் பெயருக்கு எழுதி வைத்தார். அவன் விருப்பம்போல் செய்துகொள்ளலாம் என்ற உரிமையையும் கொடுத்திருந்தார். இவ்வுயிலைப்பற்றிக் குமாரசாமிப் பிள்ளை அறிந்த போது மிகவும் அதிர்ச்சி அடைந்தார். தன் மகளிடம் சொல்லி மாப்பிள்ளையைச் சரிக்கட்ட வேண்டும் என்று எண்ணினார். ஆனால் சிவ சங்கரன் அவர்களின் வலையில் சிக்கவில்லை. தன் எண்ணம்போல் நடந்தான். தன் ஊரிலேயே தங்கி ஜமீன் விவகாரங்களைக் கவனித்து வந்தான். எப்போதாவது எண்ணம் வந்தால், தன் குழந்தையைப் பார்ப்பதற்காகக் குமாரசாமிப்பிள்ளையின் வீட்டிற்குச் சென்று வருவான். இந் நிலையில் ஒருநாள், அவன் குமாரசாமிப்பிள்ளை வீட்டிற்குச் சென் றிருந்தபோது, டைபாய்டு ஜுரம் அவனுக்கு வந்துவிட்டது. படுத்த படுக்கையாக இருந்தான். அவனுக்கு டைபாய்டு ஜுரம் என்பதை அறிந்ததும் குமாரசாமிப்பிள்ளை தன் மகளைக்கூட அவன் இருக்குமிடத் திற்குச் செல்லக்கூடாது என்று கூறிவிட்டார். எப்போதாவது நினைத்துக் கொண்டால் தமயந்தி கணவனின் நிலைமையை நர்ஸ் மூலம் கேட்டுத் தெரிந்து கொள்வாள். சிவசங்கரன் ஜுரத்தினால் துன்புறுவதை அவ னுடைய தாய்க்குக்கூட குமாரசாமிப்பிள்ளை சொல்லியனுப்பவில்லை. சிவ சங்கரனுக்கு ஜுரம் உச்ச கட்டத்தை அடைந்தது. அவன், "அம்மா அம்மா" என்று பிதற்றினான். அதனால் டாக்டர் அவனுடைய தாய்க்குச் செய்தி சொல்லி அனுப்புமாறு குமாரசாமிப்பிள்ளையிடம் கூறினார். இவ்வாறு டாக்டர் சொன்னது, குமாரசாமிப்பிள்ளைக்குப் பலவிதமான யோசனைகளை ஏற்படுத்தியது. எனவே, தம் நண்பரான அட்வகேட் இராமசேஷனை வரவழைத்தார். மாப்பிள்ளையின் தாயாதிகள் வந்து வழக்காடுவதற்கு இடமில்லாதபடி ஜமீன் சொத்து அனைத்தும் தமயந்தி யைச் சேருமாறு உயில் எழுதவேண்டுமென்று கேட்டுக்கொண்டார்,

இராமசேஷனும் அவர் சொல்லியவாறே உயில் எழுதலானுர். இவ் வேற்பாட்டைச் செய்ததும் குமாரசாமிப்பிள்ளை, அம்மணி அம்மாளுக்குத் தகவல் சொல்லியனுப்பினுர். இதற்கிடையில் சிவசங்கரனைப் பார்க்க அவனுடைய உறவினர்கள் வந்தனர். அவர்களைக் குமாரசாமிப்பிள்ளை யும், தமயந்தியும் தொல்லை கொடுக்காதீர்கள் என்று விரட்டிவிட்டனர். உயிலில் கையெழுத்து வாங்கும்வரை யாரையும் நெருங்கவிடக்கூடாது என்று குமாரசாமிப்பிள்ளை உத்தரவிட்டார். ஆதலால் யார் வந்தாலும் அவர்களைக் குமாரசாமிப்பிள்ளையின் குடும்பத்தினர், கண்காணித்து வந்தனர். உயில் எழுதப்பட்ட அன்று சிவசங்கரன் தமயந்தியைப் பார்த்து அம்மா ஏன் என்னைப் பார்க்கவரவில்லை என்று கேட்டான். தமயந்தி சலிப்போடு, மாமியாரைக் குறைகூறினுள். இதைக்கேட்ட சிவசங்கரன் திகைத்துப்போய், மயக்கமடைந்தான். இந்நிலையில் அவனிடம் உயிலில் கையெழுத்து வாங்க குமாரசாமிப்பிள்ளை முயன்ருர். அது பலிக்கவில்லை. இரண்டு மூன்று நாட்கள் முயற்சி செய்தும் முடியாமல் போய்விட்டது. நான்காம் நாள், இராமசேஷன் அங்கு வந்தார். அவருடன் குமாரசாமிப் பிள்ளையும் சிவசங்கானிடம் சென்று, "ஒன்றுமில்லை, இதில் ஒரு கையெழுத்துப்போடு" என்று உயிலைக்காட்டிப் பேனுவை நீட்டினுர். சிவ சங்கரன், எதற்கு என்று கேட்டான். உன் ஆஸ்தியை யாரும் எழுதி வாங்கவில்லை. சும்மா போடு என்று குமாரசாமிப்பிள்ளை கடுமையாகக் கூறினுர். அவரின் கடுமையை உணர்ந்த சிவசங்கரன், எது எப்படிப் போனுல் என்ன என்ற எண்ணத்துடன் விரக்தியோடு கையெழுத்துப் போட முயன்ருன்.

அச் சமயத்தில் வெளியில் ஏதோ அரவம் கேட்டது. அவனுடைய தாய் அம்மணி அம்மாள் வந்திருந்தாள். தன் மகன் எங்கே என்று ஆவலாகக்கேட்டாள். தமயநதியும், தமயந்தியின் தாயும் அம்மணி அம்மாளை எப்படியாவது இந்தச் சமயத்தில் சிவசங்கரனைவிட்டுப் பிரித்து வைக்க வேண்டும் என்று எண்ணி ஏதேதோ செய்துபார்த்தனர். தமயந்தி, தன் குழந்தையைக கொண்டுவந்து காட்டினுள். இவையெல்லாம் அம்மணி அம்மாளுக்கு ஒரு பொருட்டாகப் படவில்லை. எப்படியாவது தன் மகனைக் காணுதல் வேண்டும் என்று எண்ணினுள். இச்சமயத்தில் சிவசங்கரன் தன் தாய் வந்திருக்கிருள் என்பதைமட்டும் உணர்ந்துகொண்டான். ஆகவே, அவன் தன் மாமனுர் காட்டிய இடத்தில் கையெழுத்துப் போட்டு விட்டு, அம்மாவை உள்ளே வரவிடுங்கள் என்று துயரத்தோடு கூறினுன். குமாரசாமிப்பிள்ளை உயிலை மறைத்துக்கொண்டு இராமசேஷனுடன் வெளியேறினுர். அம்மணி அம்மாள் உள்ளே நுழைந்தாள். மகனின் உருக்குலைந்த தோற்றத்தைக்கண்டு அவனைச் சேர்த்துக் கட்டிக் கொண்டாள். அவன், இதயத்தின் வேதனையெல்லாம் தோன்ற "அம்மா" என்று கூறினுன்.

# 3. உறக்கம் தந்த ஓவியம்

*(குழந்தைப் பருவத்தில் பார்க்கும் காட்சியும், பதியும் உணர்ச்சியும் அக்குழந்தையின் மனத்தில் எங்கேயோ அடித்தளத்தில் மறைந்துகிடக்கும். அவை அக்குழந்தை வளர்ந்ததும் அவனை அறியாமலேயே உறக்கத்தில் வெளிப்படும்—என்பது மனோதத்துவக் கொள்கை. இதனை ஒருவனின்—வேலுசாமியின் வாழ்வின் மூலம் எடுத்துக் காட்டுவதே இக் கதை.)*

சுந்தரம், மருத்துவக் கல்லூரி மாணவன். வேலுசாமி, ஓவியக் கலைப் பள்ளி மாணவன்; இருவரும் சென்னையில் ஒரே மாணவர் விடுதியில், ஒரே அறையில் தங்கியிருந்தனர்; உயிருக்கு உயிராகப் பழகினர். கற்கண்டையும் அதன் இனிப்பையும் பிரித்து வைத்தாலும் வைக்கலாம்; ஆனால், இவ்விருவரையும் பிரித்துவைக்க முடியாது என்று மற்ற மாணவர்கள் பேசிக்கொண்டனர். இவ்விருவரையும் ஓவிய மருத்துவ இரட்டையர்கள் என்றே மற்றவர்கள் அழைத்தனர்.

வேலுசாமியின் தாய் தந்தையர் அவனுடைய குழந்தைப் பருவத்திலேயே இறந்துவிட்டார்கள். அவனுடைய தாத்தாவே அவனுக்குத் தாயும் தந்தையுமாக விளங்கினார். அவர் கொங்குநாட்டில் ஈரோட்டுக் கருகிலுள்ள ஒரு கிராமத்தில் உழவுத் தொழிலில் ஈடுபட்டுத் தனியாக வாழ்க்கை நடத்தி வந்தார். அதில் வரும் வருவாயைக்கொண்டு வேலுசாமியை படிக்க வைத்தார். சுந்தரமும் வேலுசாமியும் இணை பிரியா நண்பர்களாக வாழ்ந்தனர். ஒருநாள் வேலுசாமி இரவில் படுக்கையை விட்டு எழுந்து பலமணிநேரம் ஓவியம் தீட்டினான். சுந்தரம் இதைக் கவனித்தான். உறக்கம் வராத காரணத்தாலோ, புதிய கற்பனை தோன்றியதாலோ ஓவியம் தீட்டுகின்றான் என்று சுந்தரம் எண்ணிக் கொண்டான். ஆனால், வேலுசாமி பலநாட்களாக இவ்வாறு இரவில் ஓவியம் தீட்டினான். மின்சார விளக்கின் உதவியில்லாமல், நிலவின் மங்கிய வெளிச்சத்தில் அவ்வோவியத்தைத் தீட்டினான். அவ்வோவியம் தீட்டிய பிறகு, அவ்வோவியம் வரைந்த திரைச் சட்டத்தை ஓரிடத்தில் மறைவாக வைத்துவிட்டுப் படுத்துக்கொள்வான். இவையெல்லாம் சுந்தரத்திற்கு ஐயத்தை ஏற்படுத்தின. ஓர் இரவு வேலுசாமி படுக்கையை விட்டு எழுந்து ஓவியக் கருவிகளை எடுத்துவைத்துத் தன் முயற்சியில் ஈடு பட்டான். அப்போது, சுந்தரம், "என்ன வேலு? இரவிலே கூடவா ஓவியம்" என்று கேட்டான். அக்கேள்வி, வேலுவின் காதில் விழவில்லை; மேலும், தன் பக்கத்தில் நின்று பார்த்துக்கொண்டிருக்கும் சுந்தரத்தின் உருவமும் வேலுவின் கண்ணில் படவேயில்லை. ஓவியம் தீட்டுவதிலேயே முனைந்தான். அவ்வோவியம் அச்சம் தரும் ஓவியமாக இருந்தது. அதனைப் பார்த்த சுந்தரம், நடுங்கிப்போய்விட்டான். வேலுசாமிக்கு உறக்கத்தில் நடமாடும் நோய் வந்துள்ளதோ என்று ஐயம் கொண்டான். உறக்க நிலையில், நடமாடும் நோய் உடையவர்கள் ஏதாவது ஒரு செயலைத் தம்மை

அறியாமல் செய்வார்கள் என்று அவன் மருத்துவ நூலில் படித்திருக்கிறான். அந்நோய் வேலுசாமியைப் பீடித்துள்ளதோ என்று சந்தேகப்பட்டான். வேலுசாமி தீட்டிய அந்தக் கோர உருவத்தை எடுத்துப் பார்த்தான். கள் வெறியும் கொலை வெறியும் துள்ளுகின்ற கண்களோடு ஓர் ஆடவன் தன் கையில் ஒரு பெரிய முக்காலியை ஓங்கிக்கொண்டு உயிரோடு எதிரே நிற்பதுபோல் அவ்வோவியம் தோன்றியது. அவ்வோவியத்தைப் பார்க்கவே சுந்தரத்திற்கு அச்சமாக இருந்தது. அவ்வோவியத்தை வேலுசாமி எவ்வாறு தீட்டினான் என்பது அவனுக்கு விளங்கவில்லை; ஆதலால், உடனே வேலுசாமியின் தாத்தாவைப் புறப்பட்டு வருமாறு கடிதம் எழுதினான். சுந்தரத்தின் கடிதம் கிடைத்ததும் அவர் சென்னைக்கு வந்தார். சுந்தரமும் வேலுசாமியும் அவருடன் பேசி மகிழ்ந்தனர். பின்னர் வேலுசாமி பள்ளிக்குச் சென்றுவிட்டான். சென்றதும், சுந்தரம், உறக்க நிலையில் ஓவியம் தீட்டும் வேலுசாமியின் விபரீதத்தை அவருக்கு எடுத்துரைத்தான். அந்த ஓவியத்தை அவரிடம் காட்டினான். அதைக் கண்டதும் அவர் அலறினார். துயரம் அவர் நெஞ்சை அடைத்தது. வேலுசாமி இந்த ஓவியத்தைப்பற்றி என்ன சொல்லுகிறான் என்று சுந்தரத்திடம் கேட்டார். அவனுக்கு இதைப்பற்றி ஒன்றுமே தெரியாது என்று சுந்தரம் கூறினான். இதைக்கேட்டதும், ஆறுதல் அடைந்த அவர், அவ்வோவியத்தைச் சின்னபின்னமாகக் கிழித்தெறிந்தார். இதனைக் கண்ட சுந்தரம், "ஐயையோ அற்புதமான இவ்வோவியத்தைக் கிழித்துவிட்டீர்களே; வேலுசாமிக்கு இதனால் அழியாத புகழ் வந்திருக்குமே" என்று படபடப்புடன் கூறினான். அதற்கு அவர், இதனால் அவனுக்கு வரும் புகழைக் காட்டிலும் துயரம்தான் பெரிது என்றார். எப்படி என்றான்? சுந்தரம்.

உடனே அவர் ஒரு நிகழ்ச்சியைக் கூறினார். "என் மகன்—வேலுசாமியின் தந்தை மிகுந்த குடிப்பழக்கம் உடையவன். அவன் ஒருநாள் இரவு மிதமிஞ்சிய குடி வெறியால் தன் மனைவியை முக்காலியால் ஓங்கி மண்டையில் அடித்துக் கொன்றுவிட்டான். அப்போது வேலுசாமிக்கு வயது இரண்டு. தாயின் பக்கத்தில் படுத்திருந்த அவன் வீறிட்டு அழுதான். ஆனால், அவனுக்கு இந்நிகழ்ச்சி தெரியாது. அடுத்த ஆண்டில் அவனுடைய தந்தையும் இறந்துவிட்டான்" என்று சொன்னார்.

"குழந்தைப் பருவத்தில் வேலுசாமியின் மனத்தில் தோன்றிய அந்தக் கோரக் காட்சியும், பய உணர்ச்சியும் மனத்தில் எங்கேயோ அடித்தளத்தில் மறைந்துகிடந்தன. அவை உறங்கும் நிலையில், அவனை அறியாமலேயே வெளிப்பட்டு ஓவியமாக உருவெடுத்தன. இவ்வாறு அவை வெளிப்பட்டுவிட்டதால், இனி அவனுக்கு இந்த மனக்கோளாறு ஏற்படாது" என்று மருத்துவம் பயிலும் சுந்தரம் கூறினான்.

# 4. போலி

(சத்தியானந்தா—உண்மையான துறவி. வேல்சாமி—போலித் துறவி. சத்தியானந்தா மக்களை ஏமாற்ருமல் ஏமாற்றுகின்ருர். வேல்சாமி வேண்டுமென்றே ஏமாற்றுகின்ருர். இவர்களின் பின்ஞல் மக்கள் ஓடுகின்ருர்கள். இந்நிலை ஏன்? இதனைச் சிந்திக்க வைக்கும் சிறுகதையே 'போலி'.)

வேல்சாமிகளை அறியாதவர் எவரும் இல்லை. அவரைப் பற்றிக் 'கண்கண்ட சித்தர் வேல்சாமிகளின் வரலாறு' என்ற புத்தகம் வெளி யாகியிருந்தது அதில் அவர் நிகழ்த்திய எத்தனையோ சித்துக்கள் விளக் கப்பட்டிருந்தன. அவர் இமயமலையில் பனிக்கட்டிகளால் மூடப்பட்ட குகையில் நூறு ஆண்டுக் காலம் உணவின்றித் தவம் செய்தவர். அதன் பின் தெற்கே வந்து மேற்குத் தொடர்ச்சி மலையின் ஒரு பகுதியான கும்ப மலைச் சாரலில் தவம் செய்தார். அவர் மூலிகை ஆராய்ச்சி தொடங்கிய போது இந்திய நாட்டில் வெள்ளையர் ஆட்சி ஏற்பட்டது. கும்பமலையில் ஐம்பது ஆண்டுகள் தவம்செய்து எண்வகைச்சித்திகளும் கைவரப்பெற்ருர். அங்கிருந்து உருவமில்லாமல் வானவெளியாக வெளிநாடுகள் சென்று வந்தார்; அவரால் சாதிக்க முடியாதது எதுவும் இல்லை. தீராத நோய் களைத் தீர்ப்பார். நினைத்த காரியத்தைக் கைகூடச் செய்வார். வெறுங் கையில் பொன்னையோ மணியையோ வரவழைப்பார். மண்ணைச் சாம்பிராணியாக்குவார்; கல்லைக் கற்பூரமாக்குவார்; அஷ்டகிரகச் சேர்க்கையின்போது இவ்வுலகைக் காப்பாற்றியவர் அவரே. இதனை அமெரிக்க அறிவாளிகளும், ஒப்புக் கொண்டுள்ளனர். அவருக்கு அணு குண்டு செய்யவும், அது வெடித்தால் துரும்புக்கூட சேதம் ஏற்படாமல் காக்கவும் தெரியும். இவ்வாறு அவரைப் பற்றிய பல செய்திகளை அந் நூலில் காணலாம். வேல்சாமியின் சீடர்கள தமிழ்நாட்டின் ஒவ்வொரு ஊரிலும் வேல்சாமியைப் பற்றிப் பிரசாரம் செய்துவந்தார்கள். "அவருக்கு வயது 240; தலை நரைக்கவில்லை; பல் விழவில்லை;" என்றெல்லாம் எடுத் துரைத்தார்கள். இவற்றை உண்மையென நம்பி மக்கள் வேல்சாமிகளைத் தரிசிக்கக் கூட்டம் கூட்டமாகச் சென்றனர்.

வேல்சாமிக்குப்பின்ஞல், மக்கள் சென்று ஏமாறுவதைச் சுவாமி சத்தியானந்தா என்பவர் அறிந்தார். அவர் உண்மையான துறவி; அதனல், மனம் மிகவும் வருந்தினுர். உலக மக்களுக்கு உண்மையை எவ்வாறேனும் எடுத்துரைக்க விரும்பினுர். வேல்சாமிகள் திருக்குற்ருலத் தில் தங்கியிருக்கும் சமயத்தில சுவாமி சத்தியானந்தாவும் திருக்குற்ருலம் சென்ருர். வேல்சாமிகள் தங்கியிருந்த மடததில் மக்கள கூட்டம் கூட்ட மாகச் செல்வதைப் பார்த்தார். அம்மக்களிடம் உண்மையை உணர்த்த எண்ணினுர். படித்தறிந்த மக்களும் வேல்சாமிகளைப் பார்த்து ஏமாறு வதை அறிந்து மிகவும மனம் நொந்தார். இந்நிலையில் வேல்சாமிகளை

நேரில் கண்டு உண்மையை உணர வேண்டும் என விரும்பினார். ஒரு நாள் இரவு ஒன்பது மணிக்கு வேல்சாமிகள் இருக்குமிடத்திற்குச் சத்தியானந்தா சென்றார்.

சுவாமி சத்தியானந்தாவைக் கண்டதும் வேல்சாமிகள் வணங்கினார். சத்தியானந்தா, வேல்சாமியைப் பார்த்துத் தனியே சந்திக்க வேண்டும் என்று கூறினார். இருவரும் தனியாக ஓர் அறைக்குச் சென்றனர். தங்களுக்கு வயது என்ன? என்று சத்தியானந்தா கேட்டார். "முப்பத்தாறு; வெளியில் இருநூற்று நாற்பது என்று சொல்லிக்கொள்ளுகிறேன்" என்றார் வேல்சாமிகள். இதைக்கேட்டதும், சத்தியானந்தா அதிர்ச்சியடைந்தார். தாங்கள் சித்து விளையாட்டுக்கள் செய்வது உண்மையா? என்று அடுத்துக்கேட்டார். முழுப்பொய் என்றார் வேல்சாமிகள். உடனே சத்தியானந்தா அப்படியானால் அவ்வாறு சொல்லி மக்களை ஏமாற்றுவது அதர்மம் அல்லவா என்று கேட்டார். உடனே வேல்சாமிகள் அதர்மம்தான். அந்த அதர்மத்தினால் மக்களுக்கு அநுகூலம் கிடைக்கிறது. எனக்கு வருமானம் கிடைக்கிறது என்று கூறினார். சுவாமி சத்தியானந்தா, "அதர்மத்தினால் அனுகூலங்கள் கிடைக்குமா" என்றார்.

மக்கள் காணிக்கை செலுத்தி ஆசீர்வாதம் பெறுகிறார்கள். தாயத்து வாங்குகிறார்கள். இவ்வாறு அவர்கள் செய்வதற்குக் காரணம் தாம் நினைத்த காரியம் கைகூடும் என்ற நம்பிக்கையாகும். அந் நம்பிக்கையினால் அவர்களுக்கு ஊக்கமும் எதிர்கால நம்பிக்கைகளும் ஏற்படுகின்றன. சோர்வை உதறித்தள்ளி முயற்சியில் ஈடுபடுகிறார்கள். இவையே அநுகூலங்கள் என்றார் வேல்சாமிகள் மேலும் அவர் மக்கள் என்னிடம் எதற்காக வருகிறார்களோ அதற்காகத்தான் உங்களிடமும் வருகிறார்கள். பட்டம், பதவி பெற வேண்டும், செல்வம் பெருக வேண்டும், கல்யாணம் நடக்க வேண்டும், குழந்தைப்பேறு கிட்ட வேண்டும், நோய் தீரவேண்டும், நினைத்த காரியம முடிய வேண்டும் என்பதே மக்களின் பிரார்த்தனைகள். ஒரு கோவிலுக்குப் போனால் அல்லது ஒரு மகானைத் தரிசித்தால் இத்தனையும் நடக்கும் என்று நம்புகிறார்கள். ஆதலால், அவர்களின் நம்பிக்கை வீண் போகாமல் நானும் வரங்கொடுத்துக் கொண்டிருக்கின்றேன். உண்மையான மெய்ஞ்ஞானியை, ஞான மார்க்கத்தைக் காட்டி மேல் நிலைக்கு உயர்த்தும் துறவியை மக்கள் ஏற்றுக்கொள்வதில்லை. சித்து விளையாட்டுக்களும், அற்புதங்களும் நிகழ்த்தித் தம் நம்பிக்கைகளை நிறைவேற்றும் போலிச் சாமியாரின் வடிவத்தில்தான் மெய்ஞ்ஞானிகளையே மக்கள் ஏற்றுக்கொள்கிறார்கள். ஆதலால், மக்கள் தங்களை வணங்குகிறார்கள் என்றால், தங்களையும் போலிச் சாமியார் என்றுதான் கருதுகிறார்கள். எனவே, மக்களை ஏமாற்றாமல் ஏமாற்றும் தாங்கள் போலித்துறவியா? வேண்டுமென்றே ஏமாற்றும் நான்போலித் துறவியா? என்று வேல்சாமிகள் சத்தியானந்தாவைக் கேட்டார். சத்தியானந்தாவின் மனம் குழம்பியது, நான் வருகிறேன் என்று புறப்பட்டுத் திருக்குற்றாலத்தை விட்டே சென்று விட்டார்.

# 5. ஐம்பொன் மெட்டி

(குணநாதபூபதி......ஒரு நாட்டின் பேரரசர்; ஓவியம் தீட்டுவதில் வல்லவர். அவர், இளவரசராக இருந்த காலத்தில் சுனையில் நீராடும் போது அச்சுனையில் ஐம்பொன்மெட்டி (ஐம்பொன்னுலாகிய கால் மோதிரம்) ஒன்றை எடுத்தார். அது, அவர் வாழ்வைப் பிணித்தது. அதனால் அவர் வாழ்வில் ஏற்பட்ட மாற்றங்களை உணர்த்துவதே ஐம்பொன்மெட்டி.)

குணநாதபூபதி அரச குடும்பத்தில் பிறந்தவர். அவருக்குச் சித்திரக் கலையில் அளவுகடந்த தேர்ச்சியிருந்தது. சிறுவயதில் மகுடத்தை ஒரு கையிலும், இறகை மற்றொரு கையிலும் வைத்துக்கொண்டு பொழுது போக்குவார். சித்திரம் என்றால் அவருக்கு உயிர். ஒருநாள் காலை அவர் தமது நண்பர்களுடன் பொன்னகரச் சுனையில் நீராடச்சென்றார். அப்போது தண்ணீருக்குள் பாதத்தில் ஏதோ குத்தியது; முங்கி யெடுத்தார். அது ஓர் ஐம்பொன் மெட்டி. அந்த மெட்டியின் அழகைக் கவனித்தார். அதன் அழகிலிருந்து அந்த ஐம்பொன் மெட்டியை அணிந்த பெண் பேரழகியாயிருக்க வேண்டும் என்று எண்ணினார். அன்றுமுதல் அவருடைய செயல்களில் மாறுதல் ஏற்பட்டது. நண்பர்களுடன் உலாவச் செல்வதை நிறுத்தினார். மாலைநேரங்களில் ஆடும் சிலம்பினையும் வாட் பயிற்சியினையும் விட்டுவிட்டார். அவரின் உள்ளத்தில் ஐம்பொன் மெட்டியை அணிந்த அழகியின் உருவமே தெரிந்தது. அந்த அழகியின் உருவத்தை ஓவியத்தில் சித்தரித்தார். அந்த ஓவியத்தை அவரின் நண்பர்கள் பலரும் பார்த்தனர். அந்தப் பெண்ணின் அழகைப் பாராட் டினர். ஓவியத்தைப் புகழ்ந்தனர். சித்திரத்தை வரைந்த குணநாத பூபதியின் காதல் உள்ளத்தை வியந்தனர். ஆனால் குணநாதபூபதியோ அப்பெண்ணைத் தேடிக் காண்பதிலேயே எண்ணத்தைச் செலுத்தினார். தாம் வரைந்த சித்திரத்தை ஆருடம் வல்லவர்களிடம் காட்டி அப்பெண் எங்கே இருக்கின்றாள் என்று கேட்டார். அவர்களெல்லாம் மௌனமாக இருப்பதுகண்டு எவ்வாறேனும் அப்பெண்ணை அடைந்தே தீருவது என்று எண்ணினார். நாட்கள் கழிந்தன. குணநாதபூபதியின் தந்தை முதுமை அடைந்தார். அவர் தன் மகனுக்கு மகுடாபிஷேகம் செய்ய எண்ணினார். மகுடாபிஷேகம் செய்ய வேண்டுமானால், திருமணமாகி யிருக்க வேண்டும். எனவே அரசர் குணநாதபூபதிக்கு மணமுடிக்க எண்ணினார். ஆனால் குணநாதபூபதியோ ஐம்பொன் மெட்டியை அணிந்த பெண்ணின் வடிவத்தையே உள்ளப் பலகையில் எழுதியிருந் தார். எனவே என்ன செய்வது என்று குணநாதபூபதி சிந்தித்தார்.

குணநாதபூபதி மாறுவேடம் பூண்டு அதிகாலையில் ஐம்பொன் மெட்டியைக் கண்டெடுத்த சுனைக்குச் சென்றார். அங்கு வந்த பெண் களில் அப்பெண் இருப்பாளோ என்று எண்ணினார். ஆனால், அப்

பெண்ணைக் காண இயலவில்லை. எத்தனையோ நாட்கள் யோசித்தார். கடைசியில் ஒரு நாள் மாறுவேடத்தில் பொன்னகரத்து வீதிக்குள் புகுந்தார். கையில் ஒரு கிளிக் கூண்டை வைத்துக்கொண்டு வீடு வீடாக ஏறி இறங்கினார். "நான் வழிப்போக்கன்; இந்தக் கூண்டைத் தலை மாட்டில் வைத்துக்கொண்டு மரத்தடியில் சற்று உறங்கினேன். எழுந்து பார்த்தால் கிளியைக் காணோம். அது இங்கு பறந்து வந்ததா" என்று கேட்டுக்கொண்டே வீடு வீடாகச் சென்றார். அவ்வாறு செல்லும்போது ஒரு மாடி வீட்டை அடைந்தார். அங்குத் திண்ணையில் வலது கால் முடமான ஒரு வாலிபன் கட்டிலில் சாய்ந்திருந்தான். அவனுக்கு அருகே ஒரு பெண் நின்றுகொண்டிருந்தாள். அவளைக் கண்டதும் குணநாத பூபதியின் உடம்பில் விஷம் ஏறியதுபோல் ஒரு அதிர்ச்சி ஏற்பட்டது. அந்தச் சமயத்தில் பொன்னகரத்து நாட்டாண்மைக்காரர், "என்னையா வழிபோக்கரே! உள்ளே நுழைந்தவர் அப்படியே நின்றுவிட்டீரே" என்று கேட்டுக் கொண்டே வீட்டினுள்ளிருந்து வெளியே வந்தார். "ஒன்று மில்லை. கூண்டிலிருந்த கிளியைக் காணோம், இந்தப் பக்கம் எங்காவது பறந்து வந்ததா? என்று பார்த்தேன் என்றார். அதற்கு நாட்டாண்மைக் காரர், நீர் சரியான புத்திசாலிதான். கிளி பறந்து வீட்டிற்குள்ளா வரும்? காடு மலை என்று போகுமா? நாட்டாண்மைக்காரர் வீட்டில் நியாயம் கேட்க வருமா?" என்று கூறிச் சிரித்தார். உடனே முடமான இளைஞன், "நீங்கள் வாருங்கள். எப்பொழுதும் மாமாவுக்குப் பரிகாசம்தான். எந்த ஊர்? உட்காருங்கள்" என்று கூறினான். இதைக் கேட்டதும் நாட்டாண்மைக்காரர், "என் மாப்பிள்ளை மாடியிலிருந்து விழுந்தது முதல், நடமாட்டம் இல்லாமலிருக்கிறார். ஆதலால் பேச்சுத்துணைக்கு ஆள் கிடைத்ததால் இவருக்குப் போதும்" என்று கூறினார். குணநாதபூபதி திண்ணையில் அமர்ந்தார். "அஞ்சுகம், இவருக்கும் கொஞ்சம் பானகம் கரைத்துக் கொண்டுவா" என்றான் முடவன். அவன் சொல்லி வாய் மூடுவதற்குள் அஞ்சுகம் கிளியாகப் பறந்து உள்ளே சென்றாள். பஞ்ச லோகத்தால் ஆன அழகான கிண்ணத்தில் பானகம் கொண்டுவந்து குணநாதபூபதியின் முன்னால் வைத்தாள். அந்தக் கிண்ணத்தில் அழகையே, குணநாதபூபதி பார்த்துக்கொண்டிருந்தார். அப்போது நாட்டாண்மைக்காரர், "என்ன? கிண்ணத்தைப் பார்த்தவாறு யோசனை யில் இருக்கிறீர். இந்தப் பானகத்தைக் குடித்துவிட்டு மேலைக்காட்டிற்குள் போனால், எத்தனையோ கிளி அகப்படும்; இந்தத் தர்ம ராஜ்ஜியத்தில் கிளிக்கா பஞ்சம்" என்று கூறினார். இந்த வார்த்தைகளைக் கேட்டதும், குணநாதபூபதியின் உள்ளம் உணர்ச்சியால் நிறைந்தது. புனிதமான மனைவி, முடமான கணவன், வயோதிகத் தந்தை—இப்படி மூன்று இதயங்களைப் பாசம் என்ற சரடுகொண்டு விதி கட்டி வைத்திருக்கிறதே! அதில் நாலாவது இதயம் புகுந்தால் சரடு அறுந்துவிடுமே என்று குணநாதர் எண்ணினார். முடவனிடத்தில் மனைவிக்கு அன்பிருந்தால் அது புனிதமானது, தெய்வீகமானது. அதை வளர்க்க வேண்டும் என்று எண்ணிக்கொண்டு கைகூப்பி விடைபெற்றார்.

அரண்மனைக்குச் சென்றதும் அவருடைய அந்தரங்கமான உணர்ச்சிகள் தாமாக மறைந்தன. கடமையில் அவர் ஈடுபட்டார்; தன் தந்தையிடம் கூறி அவர் சேர்ந்தெடுக்கும் இராஜகுமாரியை மணந்துகொண்டு மகுடாபிஷேகம் செய்துகொண்டார். அன்றுமுதல் அவர் உள்ளத்தில் தளர்ச்சியுண்டாகும்போதெல்லாம், அவர் வரைந்த அந்தப் பெண்ணின் ஓவியத்தைப் பார்த்துக்கொள்ளார். அவ்வோவியம் அவருக்குக் கடமைகளை உணர்த்திக்கொண்டேயிருந்தது. முடமான கணவனுக்கு, அப்பெண் செய்யும் கடமைகள் அவரின் கண்முன் தோன்றின. எனவே, அப்பெண்ணின் ஓவியத்தைத் தெரியாமல் படுக்கையறையில் வைத்திருந்தார். இந்த ஓவியத்தைக் குணநாதபூபதியின் மனைவி பார்த்து ஐயுற்றாள்; கேட்பதற்கு அஞ்சினாள். அவள் மரணத்தறுவாயிலிருக்கும்போது அவனை அறியாமலேயே அந்த ஓவியத்தைப் பற்றிக் கேட்டுவிட்டாள். குணநாதபூபதியும் அதை அவருக்கு விரிவாகச் சொல்லி ஆறுதல்பெற வைத்தார்.

## 6. மாவிலைகள்

(ரேகா...பருவம் வந்தவள். பசுமையான குளிர்ச்சியான மாவிலை போன்றவள். அவள் ஒருவனை விரும்பினாள். அவனும் அவளை விரும்பினான். ஆனால் அவன் வேறொருத்தியுடன் தொடர்பு கொண்டிருந்தான். அதனை ரேகா உணர்ந்தாள். அந்தப் பசிய உள்ளம் பட்ட பாட்டினை எவ்வாறு சொல்வது? அதனைச் சொல்ல முற்படுவது, "மாவிலைகள்").

ரேகா கல்லூரியில் படித்துக்கொண்டிருந்தாள். ரேகாவின் தாய் கமலமும் தந்தையும் வேறு ஊரில் அலுவலாக இருந்தார்கள். ரேகா விடுமுறைக்குத் தாய் தந்தையைப் பார்க்கச் சென்றாள். அவள் பருவம் வந்தவள். கமலத்திற்கு ஒரே மகள். எனவே, ரேகாவின் தாய் அவளிடம் அளவற்ற பாசத்தோடு அவளை நேசித்தாள். ரேகாவின் தந்தைக்கு அடிக்கடி ஊர்மாற்றம் ஏற்படும். இந்த விடுமுறையிலும் அவர் அவ்வாறே வேறோர் ஊருக்கு மாறியிருந்தார். அவ்வூரில் அவர்கள் ஓர் வீட்டின் மாடியில் குடியிருந்தார்கள். அவ்வீட்டில் அழகான அடர்ந்த மாமரம் ஒன்று இருந்தது. அந்த மாமரம் மாடியைத் தொட்டுக்கொண்டு வளர்ந்திருந்தது. மாடிக்குக் கீழே கோவாக்காரர் ஒருவரும் அவர் மனைவி துரைசானியும் குடியிருந்தார்கள். துரைசானிக்கு, ரீதா என்று ஒரு பெண் குழந்தையிருந்தது. ரேகா மாடியில் மாமரத்து இலைகளைப் பார்க்கும்போது அளவு கடந்த மகிழ்ச்சியடைவாள்; அவற்றின் பசுமையில் ஈடுபடுவாள். அவள் ஒருநாள் தற்செயலாகக் கீழே பார்த்தபோது,

ரீதாவைப் பார்த்துவிட்டாள். அந்தச் சின்னஞ்சிறு குழந்தையின் அழகான உடலும், மென்மையான உள்ளமும் மழலை மொழியும் ரேகாவை மயங்க வைத்துவிட்டன. எனவே, அடிக்கடி ரீதாவை அவள் அன்போடு பார்த்தாள். கொஞ்சினுள், மகிழ்ந்தாள். ஒருநாள் ரீதாவின் தாயும் தந்தையும் வெளியூர் போய்விட்டார்கள். அப்போது ரீதாவின் சிற்றப்பன் அங்கு மரத்தடியில் வந்து நின்ருன். அவன் இருபத்தைந்து பிராயம்கூட மதிக்கமுடியாத இளைஞன். கடற்படையில் பணியாற்றுபவன்; பயிற்சி முகாமுக்காக இங்கு வந்திருந்தான். முறுகிய பாலின் நிறமேனி யில், புடைத்த தசைகள் தெரியும் வண்ணம் மொட்டைப் பனியனும், வெள்ளைப் பைஜாமாவும் அணிந்திருந்தான். அவன் கழுத்தில் மெல்லிய பொற்சங்கிலி மின்னியது. அவனையே ரேகாவும் பார்த்தாள். இதனைக் கண்ட கமலம் ரேகா, ரேகா என்று கூப்பிட்டாள். உடனே ரேகா கையிலிருந்த புத்தகத்தைப் படிப்பவள்போல் பாசாங்கு செய்தாள். "ஏனம்மா இங்கு புழுக்கமாக இல்லையா" என்று கேட்டாள் கமலம். இல்லையம்மா, என்று சொன்னுள். கமலத்திற்கு ரேகாவின் உண்மை புரிந்துவிட்டது. பேசாமல் சென்றுவிட்டாள். மறுநாளும் ரேகா மாமரத்தி னடியில் நின்று கொண்டிருக்கும் அவனையே பார்த்தாள். அவன் ரீதாவை வைத்துக் கொஞ்சிக்கொண்டிருந்தான். ரீதாவை ஏதேனும் சொல்லச் சொல்லி ரேகாவைக் கேலிசெய்துகொண்டிருந்தான். ரேகாவும் அதற்குப் பதில் சொல்லிக்கொண்டிருந்தாள். இவற்றையெல்லாம் கவனித்த கமலம், "யாருடனம்மா பேசிக்கொண்டிருக்கிருய்?" என்று கேட்டுக் கொண்டே அங்கு வந்தாள். ரேகா, ஏதுமறியாதவள்போல் விழித்தாள்; பின், "என்னம்மா படுத்துத் தூங்கிக்கொண்டிருந்தாயா, சொப்பனம் கண்டாற்போல் ஓடிவருகிருயே" என்ருள். "இல்லை ரேகா! அப்பா கடைக்குப் போகவேண்டுமென்ருர்! அந்த நினைவு வந்தது. எழுந்து வந்தேன். இந்தத் தடவை நீ ஊருக்குப்போனுல் என் மனம் சரியாக இருக்காது. அப்பாவோ உன்னை ஹாஸ்டலில் சேர்த்துவிட வேண்டு மென்று கூறுகின்ருர்" என்ருள் கமலம். உடனே ரேகா, "ஏனம்மா, நான் இந்த ஊர்க் கல்லூரியிலேயே சேர்ந்து படிக்கிறேன்" என்று கூறினுள். கமலம் கனிவோடு ரேகாவை நோக்கினுள். ரேகா நாணத்தால் தலையைக் குனிந்து கொண்டாள். ஒருநாள் கமலமும் ரேகாவும் உல்லாசமாகப் பொழுதுபோக்க 'கொளங்கூட்' கடற்கரைக்குச் சென்ருர்கள். அங்கே வண்ண வண்ணக் குடைகளின் கீழ் ஒலிப்பெருக்கியிலிருந்து வரும் இசையை ரசித்துக்கொண்டு ஜோடி ஜோடியாகச் சிலர் அமர்ந்துகொண் டிருந்தார்கள். அவர்களில் ஒருவனுக ரீதாவின் சிற்றப்பனும் இருப்பதை ரேகா பார்த்தாள். அவன் தனக்குத் திருமணம் ஆகவில்லை என்று கூறியதையும் எண்ணினுள். அவளுக்கு என்னவோ போல் இருந்தது. உடனே வீட்டிற்குத் திரும்பினுள். தான் கண்டு மகிழ்ந்த மாமரக் கிளைகள் வளர்ந்திருந்த பால்கனிக்கு வந்தாள். ஒரு கையில் கலலூரியி லிருந்து வரவழைத்த அச்சுக் காகிதங்களைப் பிடித்திருந்தாள். மற்ருெரு

கையால், மா இலைகளைக் கிள்ளிக் கிள்ளி, திருகித் திருகிப் போட்டுக் கொண்டிருந்தாள். அந்த இலைகள் குத்துயிரும் குலை உயிருமாகத் தரையெங்கும் விழுந்திருந்தன. மறுநாள் விடிந்ததும், ரேகா அம்மாவிடம் சென்றாள். இந்த ஊர் எனக்குப் போரடிக்கிறது. நான் ஊருக்குப் போகப் போகிறேன் என்று சொல்லிப் போய்விட்டாள்.

## 7. தமிழன் என்று சொல்லடா

(திருவாளர் குமரகுருபரம்பிள்ளை தமிழை நன்கு பயின்றவர். அவர் வெள்ளைக்கார நீதிபதி ஒருவருக்குத் தமிழ் சொல்லிக் கொடுத்தார். நாட்கள் கடந்தன. டெபுடி கலெக்டர் சாம்பசிவத்தின் போதனையால், நீதிபதி குமரகுருபரம்பிள்ளையை அவமதித்துவிட்டார். மானம் பெரிதென எண்ணிய குமரகுருபரம்பிள்ளை நீதிபதியை எதிர்த்துப் பேசிவிட்டுப் போய்விட்டார். உண்மையைப் பிறகு உணர்ந்த நீதிபதி, குமரகுருபரம் பிள்ளையிடம் மன்னிப்புக் கேட்டார். தமிழ் வென்றது; ஆசிரியப் பதவி பெருமை பெற்றது. இவற்றைக் கதை வடிவில் காட்டுவதே 'தமிழன் என்று சொல்லடா').

வெள்ளைக்காரன் ஆட்சி நடைபெற்ற காலம். இங்கிலாந்தின் கெண்ட் மாகாணத்தில் ஆங்கில ஞானம், சட்டஞானம், உலகஞானம் எல்லாம் பெற்ற மிஸ்டர் ஸ்டோன் ஐ. சி. எஸ். என்பவர் நெல்லை மாவட்டத்தின் நீதிபதியாகப் பதவியேற்றார். இவர் உலக மொழிகளில் ஆங்கிலம் நிகரற்றது என்னும் இறுமாப்பு உடையவர். இவருக்குக் குமர குருபரம்பிள்ளையின் தொடர்பு ஏற்பட்டது. குமரகுருபரம்பிள்ளை திருநெல்வேலி கொக்கிரகுளம் முன்சிப் கோர்ட் குமாஸ்தாவாகப் பணியாற்றிக்கொண்டிருந்தார். அவர் தமிழை நன்கு பயின்றவர். தன்னேரிலாத தமிழ் என்ற பெருமை கொண்டவர். ஆயினும் வறுமையால் வாடினார். ஆங்கிலம் உயர்ந்தது என்னும் ஸ்டோன் துரையும் தமிழ் உயர்ந்தது என்னும் குமரகுருபரம்பிள்ளையும் நண்பர்களாயினர்.

ஸ்டோன்துரை தமிழ் கற்க எண்ணினார். பப்ளிக் பிராசிக்யூட்டரிடம் இதுபற்றிக் கூறினார். பப்ளிக் பிராசிக்யூட்டர், குமரகுருபரம்பிள்ளையை அழைத்துத் துரைக்குத் தமிழ் கற்றுக்கொடுக்குமாறு வேண்டினார். குமர குருபரம்பிள்ளை பயந்தார். அதற்குப் பப்ளிக் பிரசிக்யூட்டர், "துரை ரொம்ப நல்லவர்; ஒரு வாரம் பாருங்கள். பிடிக்காவிட்டால் வேறு நபரைச் சிபாரிசு செய்கிறேன்" என்று கூறினார். குமரகுருபரம்பிள்ளையும் ஒப்புக் கொண்டார். மாதம் 10 ரூபாய் சம்பளம். குமரகுருபரம்பிள்ளை, துரைக்குத் தமிழ் கற்றுக்கொடுக்கத் தொடங்கினார். ஸ்டோன் துரைக்கு

முன்னால் குமரகுருபரம்பிள்ளை க்ளோஸ்கோட், தலையில் டர்பன், நீண்ட அங்கவஸ்திரப் பட்டை மடிப்பு, இடையில் பஞ்சகச்சம, திருநீறு இலங்க, சந்தனப்பொட்டுப் பளிச்சிட வணக்கம் என்று சொல்லிக்கொண்டு துரையின் பங்களாவிற்கு வந்தார். துரையும் சிரமத்தோடு வணக்கம் என்று சொல்லிப் பிள்ளையை வரவற்றார். பிள்ளைக்கு நாற்காலி கொடுத்து உட்காரச் சொன்னார். துரை நின்றுகொண்டே பாடங் கேட்டார். இம்முறையில் நாட்கள் நகர்ந்தன. துரை, குமரகுருபரம் பிள்ளையிடம் அளவுகடந்த மரியாதை வைத்திருந்தார். ஒருநாள் மழைத் தூறல் விழுந்ததால், தம் காரிலேயே பிள்ளையை வீட்டிற்கு அனுப்பி வைத்தார். அதற்கு மேலும் நீதிமன்றத்தில் அடிக்கடி தமிழின் இனிமை, நயம் இவற்றைத் துரை அரைகுறையாகச் சொல்ல ஆரம்பித்தார். சில வழக்குகளில், "என் ஆசிரியர் குமரப்பிள்ளை கூறியது" என்று தம் உணர்ச்சியை வெளியிடுவார் இதனால் குமரகுருபரம பிள்ளையின் மதிப்பு சுற்றுவட்டாரம் எங்கும் பரவியது தமிழ்மீது ஆர்வம் கொண்ட துரையை மக்கள் கல்லாடனார் என்றே கூற ஆரம்பித்தனர்.

குமரகுருபரம்பிள்ளைமீது ஸ்டோன் துரை வைத்திருக்கும் மதிப்பினைப் பார்த்த சாம்பசிவம் மிகவும் பொறுமைப்பட்டார். சாம்பசிவம் திருநெல் வேலிக்கு டெபுடி கலெக்டர். அவர் கிரிக்கெட் ஆடுவார். நீதிபதி ஸ்டோன் துரையும கிரிக்கெட் விளையாட்டில் பைத்தியம் உடையவர். எனவே துரை, தமக்கு உரிய கடுகடுப்பு, கண்டிப்பு, கரார் தன்மைகளை, மறந்து டெபுடி கலெக்டரோடு பழகினார். ஸ்டோன் துரை அடக்கவொடுக்க மாகப் பாடம் கேட்பதும், பஞ்சை ஆசிரியனாகிய குமரகுருபரம்பிள்ளை இரைந்து பாடம் சொல்வதும் சாம்பசிவம்பிள்ளைக்கு மிகுந்த பொறாமையை உண்டாக்கின. குமரகுருபரம்பிள்ளை துரைக்குப் பாடஞ்சொல்லும் நேரத்தில், சாம்பசிவம் சென்றால் உடனே ஸ்டோன் துரை, "மன்னியுங்கள் ஆசிரியரே, என் நண்பரை ஒரு விநாடியில் அனுப்பிவிட்டு வருகிறேன்" என்று கூறி வெளியே வந்து சாம்பசிவத்திடம் பேசி அனுப்பிவிடுவார். சாம்பசிவம் நீதிபதியின் வீட்டிற்கு வரும்போது குமரகுருபரம்பிள்ளை எழுந்து மரியாதை செய்து தாம் அமர்ந்திருந்த நாற்காலியைக் கொடுக்காம லிருந்தார். இதனால் சாம்பசிவத்திற்கு வேதனை ஏற்பட்டது. "முன்சீப் கோர்ட் குமாஸ்தா எழுந்து தமக்கு நாற்காலி தரவில்லை; தரவேண்டாம். நீதிபதியின் முன்னிலையில் உட்கார்ந்திருக்கிறார்; என்ன நெஞ்சழுத்தம். இவரை எப்படியாவது விரட்டிவிட வேண்டும் என்று திட்டமிட்டார் சாம்பசிவம். ஸ்டோன் துரையின் மனத்தைச் சாம்பசிவம் இலகுவாகக் கரைக்க ஆரம்பித்தார். ஆட்சி வெறியிலும் அலங்காரத்திலும் திமிர் பிடித்த வெள்ளைக்காரப் பரம்பரையில் வந்த ஸ்டோன் துரையின் மனம் இளக ஆரம்பித்தது. ஒரு வாரத்திற்குப்பின் வழக்கம்போல் குமரகுருபரம் பிள்ளை துரையின் மாளிகைக்குப் போனார். பழகிவிட்ட உரிமையால் தடதடவென அறைக்குள் நுழைந்தார். மேசையின் அருகிலுள்ள நாற்

காலியில் அமரப் போனார். அதற்குள் அறைக்குள்ளிருந்து வந்த துரை, அந்த நாற்காலியில் அமர்ந்துகொண்டார். உடனே குமரகுருபரம்பிள்ளை, "டேய் முனுசாமி என் நாற்காலி எங்கே? ஒரு நாற்காலி கொண்டு வா" என்று அதிகாரக் குரலில் கத்துவதுபோல் கத்தினார்; அவருக்கு நீதிபதியின் பங்களாவில் இருக்கிறோம் என்ற பயம் துளிகூட இல்லை. இதை ஏதும் கவனிக்காததுபோல், நீதிபதி பாடத்தை ஆரம்பிக்கலாம் என்றார். உடனே பிள்ளை, "எனக்கு நாற்காலி வரட்டும். அல்லது நீங்கள் வரவழையுங்கள்" என்றார். சும்மா நின்றுகொண்டே பாடஞ் சொல் லுங்கள் என்றார் துரை. உடனே குமரகுருபரம்பிள்ளை "சீ, எழுந்து நில்" என்று கூறினார். ஸ்டோன் துரை நிமிர்ந்து பார்த்தார். "நீ யார் என்பதை எண்ணிப்பார்" என்று கூறினார். உடனே குமரகுருபரம்பிள்ளை, 'நீர் என் மாணுக்கன், நான் தமிழாசிரியன்" என்று கூறினார். இருவரது வார்த்தைகளும் மோதின. நீ ஒரு முன்சீப் கோர்ட் குமாஸ்தா என்றார் துரை. இது ஆபீஸ் இல்லை, நீர் என் மாணவர் என்றார் குமரகுருபரம் பிள்ளை. நான் நினைத்தால் என்ன நடக்கும் தெரியுமா? இன்று முதல் நின்றுகொண்டே பாடம் நடத்த வேண்டும் என்றார் துரை. தமிழ் மரபுக்கு இது ஒவ்வாது, இந்த அவமானமான வேலையை நான் செய்யமாட்டேன் என்றார் குமரகுருபரம்பிள்ளை. அதற்குத் துரை, "பாவம், பிள்ளை குட்டிக்காரர்; என்னை அவமானப்படுத்தினுல் வயிறு கிழிந்துவிடும்" என்றார். அதற்குப் பிள்ளை, மானம் பெரிது; நான் தமிழ் படித்தவன். மரியாதைதான் என் முதல் சொத்து. இந்தப் பதவி எனக்கு வேண்டாம் என்று கூறிவிட்டு வீரனைப் போல் வெளியே சென்றுவிட்டார். அப்போது அங்கு வந்த சாம்பசிவம் தமிழ் ஐயா நலம்தானு? பாடங்கள் ஒழுங்காக நடக்கின்றனவா என்று கேட்டார். உங்கள் வேலைதானு இது. தமிழுக்குத் துரோகி வெள்ளையன் அல்ல; உங்களைப் போன்ற கருப்புத்துரைகளே என்று கூறிச் சென்றுவிட்டார். அவரின் மனத்தில் இந்த உலகம், தமிழ்ப்பற்று, முன்சீப் கோர்ட் குமாஸ்தா வேலை, 10 ரூபாய் சம்பளம், திடீரென ஏற்பட்டகௌரவம், தமிழாசிரியருக்குள்ள பெருமை ஆகியவை யாவும் தோன்றி மறைந்தன.

ஸ்டோன் துரை, தன் பூங்காவில் உலவிக்கொண்டிருந்தார். அவர் மனம் எதையோ எண்ணியது: நம் சாம்ராஜ்ஜியத்திற்கு எத்தனையோ புகழ் உண்டு. உலகம் முழுவதிலுமுள்ள ஆங்கில மாணவர்கள் தன் ஆசிரியரைக் கௌரவம் செய்யத் தவறுவதில்லை. எந்த வயதில் பாடஞ் சொன்னாலும் கேட்டாலும் போதிக்கும் ஆசிரியருக்கு இழுக்குத் தருவது பெரிய தவருகும். நாம் குமரகுருபரம்பிள்ளையை அவமரியாதை செய்த தால் அவர் நம் வெள்ளைக்கார இனத்தையே மரியாதை இல்லாத பயல்கள் என்றுதானே எண்ணுவார், என்றெல்லாம் எண்ணி மனம் புழுங்கினார். டெபுடி கலெக்டர் சாம்பசிவத்தால் மனம் மாறியதை நினைத்து வருந்தினார். அப்போது அவர் மனைவி, "அந்தத் தமிழாசிரியர்

நீங்கள் கூறியவாறே நின்று கொண்டு பாடஞ்சொல்லியிருந்தால், அவர் மிகவும் கோழை; ஆசிரியர் என்னும் தகுதிக்கு அருகதையற்றவர். ஆயினும் ஏழைக்கும் தன் மொழி பெரிது. அவர் தன்னைவிடத் தாய் மொழியைப் பெரிதாக மதிப்பவர். ஆதலால் நாம் அவரை வணங்க வேண்டும்'' என்று கூறினர்.

உடனே நீதிபதியும் அவர் மனைவியும் காரில் ஏறிப் புறப்பட்டுக் குமரகுருபரம்பிள்ளை வீட்டிற்குச் சென்றனர். குமரகுருபரம்பிள்ளையிடம் ஸ்டோன்துரை மன்னிப்புக் கேட்டார். நாளை முதல் என் பங்களாவிற்குத் தாங்கள் வரவேண்டும். கார் அனுப்புகினறேன். 10 ரூபாய் சம்பளமும் நான் செய்த குற்றத்திற்குத் தண்டனையாக 10 ரூபாய் அபராதமும் மாதந் தோறும் தருகிறேன் என்றார் ஸ்டோன்துரை. தமிழ் வென்றது. தமிழன் வென்றான்.

# 8. நெல்லூர் அரிசி

(கள்ளமார்க்கட் செய்பவர்களுக்கு அறிவு புகட்டும் நோக்கத்தில் எழுதப்பட்டதே 'நெல்லூர் அரிசி'.)

சென்னை மைலாப்பூரில் கந்தசாமி என்பவர் வாழ்ந்து வந்தார். அவர் அஞ்சலகம் ஒன்றில் வேலை பார்த்துவந்தார். அவர், அவர் மனைவி, நான்கு குழந்தைகளையும் சேர்த்து ஆறு பேர்களுள்ள குடும்பம் அது. அந்தத் தெருவிலுள்ளவர்கள் அவரைத் தருமரட்சக சபைச் செயலாளர் கந்தசாமி என்றே கூறுவார்கள். அந்தச் சபையின் வாயிலாக அவர் தருமத்தைப் பரப்பிக் கொண்டிருந்தார். சான்றோர்களைக் கூப்பிட்டு அச்சபையின் வாயிலாகக் கூட்டங்கள் நடத்துவார். கதா காலட்சேபங்கள், பஜனைகள் முதலியவற்றிற்கு ஏற்பாடு செய்வார். அவர் உண்மையிலேயே நல்ல மனிதராக வாழ முயன்றார். நியாயத்திற்குக் கட்டுப்பட்டு எளிய வாழ்க்கையில் அக்கம்பக்கத்தாரிடம் அன்பு செலுத்தி வந்தார். அவருக்கு ஒரே ஓர் ஆசை மட்டும் இருந்தது. நெல்லூர் அரிசி என்றால், அவருக்குச் சபலம். ஒருநாள் செய்தித்தாளில் நெல்லூர் அரிசி சென்னைக்கு வந்தி ருப்பதாகவும், பங்கீட்டுக் கடைகளில் சில வாரங்களுக்கு அது கிடைக்கும் என்றும் செய்தி வந்திருந்ததைப் பார்த்ததும் மிகவும் மகிழ்ச்சி அடைந் தார். தன் மனைவியைக் கூப்பிட்டு நெல்லூர் அரிசி வந்துவிட்டதா என்று கேட்டார். அந்த அம்மையார் ரேஷன் கடையிலிருந்து வாங்கி வந்த அரிசியை முறத்தில் கொட்டி நெல்லூர் அரிசி வரவில்லை, கல்லூர் அரிசி தான் வந்திருக்கிறது என்று குமுறினாள். ஏன்? நெல்லூர் அரிசி வரவில்லையா என்று கேட்டார் கந்தசாமி. அது வந்ததா இல்லையா

என்பது கடைக்காரனுக்கும், கடவுளுக்கும்தான் வெளிச்சம் என்று கூறினாள் அவரது மனைவி மீனாட்சி. அதற்கு மேலும், கந்தசாமியின் தர்மக் கொள்கையையும், உபதேசத்தையும் பற்றி அவள் குறைகூறினாள். நிலைமையை உணர்ந்துகொண்ட கந்தசாமி அறைக்கு வந்து நிலைமையை ஆராயத் தொடங்கினார். தன்னை மீனாட்சியின் கட்சி வக்கிலாகவும், எதிர்க் கட்சியின் வக்கிலாகவும் எண்ணிக்கொண்டார். தமக்கு எதிரில் படத்தி லிருந்த காந்தியடிகளை நீதிபதியாக ஏற்றுக்கொண்டார். ஒரு காகிதத்தை எடுத்தார். அதில் குறிப்பெழுதும் வக்கிலைப்போல (1) நெல்லூர் அரிசி வரவில்லையா அல்லது வந்தும் கடைக்காரர் கொடுக்கவில்லையா? (2) இந்தக் கல்லூர் அரிசியின் கலப்படத் தயாரிப்பு எங்கே நடைபெறு கிறது? என்று எழுதினார். முதலில் குறித்த செய்தியைத் தீவிரமாக விசாரித்து அறிந்துகொள்ள முடியும் என்ற நம்பிக்கை அவருக்கு ஏற்பட்டது. ஆனால் இரண்டாவதாக எழுதிய கலப்பட ரகசியம்தான் அவருக்கு மிகவும் சிக்கலாகத் தோன்றியது. கடவுள் படைக்கும்போது நெல்லுக்குள் கல்லை வைத்துப் படைப்பதில்லை, ஆகவே, அவர்மீது கலப்படக் குற்றம் சாட்டமுடியாது. எனவே ஒன்று நெல்லை அரிசியாக அரைக்கும் மில்லில் கலப்படம் செய்திருக்க வேண்டும். அல்லது மொத்த மாக வாங்கி வைத்தவர்கள் இவ்வாறு செய்திருக்க வேண்டும். அல்லது ரேஷன் கடையில் இவ்வாறு செய்திருக்க வேண்டும். இந்த மூன்று இடங்களில் எந்த இடத்தில் நடந்தது என்று எவ்வாறு கண்டுபிடிப்பது? கண்டு பிடித்தாலும் என்ன செய்யமுடியும்? என்று எண்ணினார். எனவே, இரண்டாவது பிரச்சினையை விட்டு விட்டு, முதல் விஷயத்தில் மனத்தை ஈடுபடுத்தினார். நேரம் ஆகியது. களி போன்ற உணவுப்பொருளைச் சாப்பிட்டுவிட்டு விரைவாக வீட்டைவிட்டு வெளிக்கிளம்பினார். தனக் குரிய செல்லையாவின் ரேஷன் கடைக்கு முன்னால், ஒரு சிறு கூட்டம் இருப்பதைக் கண்டார். கூட்டத்தினர் கோபமாகச் செல்லையாவைத் திட்டினர். செல்லையாவும், கூட்டத்தோடு சேர்ந்துகொண்டு தமக்கு அரிசி கொடுப்பவர்களைத் திட்டினார் இந்தச் சமயத்தில் அங்கு வந்த கந்தசாமியைக் கண்டது. செல்லையாவுக்குச் சுருக்கென்று குத்தியது. "இப்பத்தான் காலையிலே நம்ம வீட்டிற்கு அரிசி அனுப்பினேனே" என்று இழுத்தார் செல்லையா. அரிசி வந்து.,....என்று கந்தசாமி இழுத் தார். நாங்கள் என்ன செய்வது; அவங்க கொடுப்பதைத் தானே போட முடியும் என்றார் செல்லையா. இந்த அரிசிதான வந்திருக்கிறது என்று கேட்டார் கந்தசாமி நான் ஏன் பொய் சொல்லணும் என்றார் செல்லையா. செல்லையா பொய் சொல்லுகிறார் என்பதில் கந்தசாமிக்குச் சிறிது சந்தேகம் ஏற்பட்டது. எனவே ஒரு டாக்சியில் ஏறிக்கொண்டு ராயப்பேட்டைக்குச் சென்றார். அங்கே தனக்குப் பழக்கமான சோமசுந்தரம் என்னும் ரேஷன் கடைக்காரரிடம் நெல்லூர் அரிசி வந்திருக்கிறதா என்று கேட்டார். "நெல்லூர் அரிசி வந்திருக்கிறது. இரண்டு மூன்று வாரத்திற்குக் கிடைக்கும். எல்லா ரேஷன் கடைகளுக்குமே நெல்லூர் அரிசி கொடுக்கப்

பட்டிருக்கிறது. செல்லையா கடையிலேதானே உங்களுக்கு ரேஷன். அவரும் வாங்கி வந்தாரே'' என்றார் சோமசுந்தரம். உடனே கந்தசாமி ஒருகணம் மௌனமாக இருந்துவிட்டு தம்முடைய சட்டைப் பைக்குள் மடித்து வைத்திருந்த காகிதத்தைப் பிரித்து அரிசியைச் சோமசுந்தரத்திடம் காட்டினார். அதைப் பார்த்ததும் சோமசுந்தரம் இந்த அரிசி, கொத்தவால் சாவடியில் விட்டர் அரை ரூபாய் விலைக்கு மூட்டை மூட்டையாகக் கிடைக்கிறது. புடைத்து எடுத்தால், படிக்குப் பாதிகூடத் தேறாது என்றார். இவற்றையெல்லாம் கேட்ட கந்தசாமி, அலுவலகத்திற்குச் சென்றார். அரிசி வழங்கும் அலுவலகத்திறகுத் தொலைபேசி மூலம் பேசி, செல்லையாவிற்கு நெல்லூர் அரிசி கொடுக்கப்பட்ட விஷயத்தை உறுதிப் படுத்திக் கொண்டார். அலுவலக வேலைகளையெல்லாம் முடித்துக் கொண்டு 6 மணிக்கெல்லாம் வீட்டிற்கு வந்து சேர்ந்தார். காந்தியடி களின் படத்திற்கு முன்னால் அமர்ந்து மோனத்தில் ஆழ்ந்தார். விளக்கு வைக்கும் நேரம் ஆகிவிட்டது. அவர் மனைவி மீனாட்சி அவருக்கருகில் வந்து செல்லையாவின் கடைத் தள்ளு வண்டி எதிர்வீட்டுக் கதவு வழியே புகுந்து அதிலிருந்து மூட்டைகள் இறக்கப்படுவதைக் காட்டினாள். படிக்கு எட்டணா அதிகம் வைத்து செல்லையா விற்பதாக மீனாட்சி கூறினாள். மீனாட்சியின் சொற்கள் அவரை உலுக்கின. இங்கிலையில் காந்தியடிகளின் பிறந்தநாள் வந்தது. அந்நாளைக் கொண்டாட தர்மரட்சக சபையில் மக்கள் கூடினர். அச்சபையின் செயலாளரான கந்தசாமி எழுந்து உணர்ச்சி ததும்பப் பேசினார். நெல்லூர் அரிசியின் கதையை விரிவாகக் கூறினார். சான்றுகளோடு உண்மையை விளக்கினார். இதற்குப் பரிகார மாகச் செல்லையாவின் கடையை நாம் ஒரு வாரமாவது அரிசி வாங்குவதை நிறுத்திப் போராட்டம் நடத்த வேண்டும் என்று கூறினார். உடனே கூட்டத்திலிருந்த ஒருவர் அந்த ஒரு வாரத்திற்குப் பட்டினி கிடக்க முடியுமா? என்று கேட்டார். அப்போது செல்லையா, நம்முடைய சபை உறுப்பினர்களே செல்லையாவிடம் அதிகப் பணம் கொடுத்து அரிசியை மொத்தமாக வாங்கியிருக்கிறார்கள். அவர்கள் ரேஷன் விலைக்கு அதை நமக்குப் பகிர்ந்து தருவார்கள். அவ்வாறு தருமாறு அவர்களைக் காந்தியடி களின் பெயரால் கைநீட்டிக் கேட்கிறேன் என்று கூறினார். உடனே நான் தருகிறேன் என்று முன்வந்தார் ஒருவர். நான் தருகிறேன் என்றார் வேறொருவர். கூட்டத்தினரின் கண்களில் ஆனந்தக் கண்ணீர் கசிந்தது. மீண்டும் காந்தியடிகள் தோன்றிவிட்டதுபோல் ஓர் உணர்ச்சி கந்தசாமிக்கு ஏற்பட்டது. அவரின் மனைவி மீனாட்சிக்கு, ஆண்மை மிக்க ஒரு வீரருக்கு வாழ்க்கைப் பட்டோம் என்ற பெருமிதம் அலைமோதியது.

# 9. அரசும் அமைதியும்

(பூதப் பாண்டியன், ஒல்லையூரைப் போரில் வென்றான்; போர் கடுமையாக நடந்தது; போரில் பலர் மாண்டனர். ஒல்லையூரின் சிற்றரசன் ஒல்லைவேள் சிறைப்பட்டான். செய்திகளைப் புலவர் மதுரைப் பேரால வாயர் அறிந்தார். இவர் ஒல்லைவேளின் நண்பர். பூதப்பாண்டியன் வீராபிஷேகம் செய்து கொள்ளும் நாளன்று, பேராலவாயரும் சென்றிருந்தார். பாண்டியனைப் பாடினார்; அரசு அமைதியாக இருத்தல் வேண்டும் என அறிவுரை புகட்டினார். புலவரால் பாண்டியன் புத்துணர்ச்சி பெற்றான்; வென்ற நாட்டை ஒல்லைவேளிடம் கொடுத்தான். புலவரின் பொன்னுரையால் அமைதி ஏற்பட்டது. இதனை விளக்குவதே இக்கதை).

கடைச் சங்க காலத்துப் பாண்டிய மன்னனான பூதப் பாண்டியன் மாவீரன்; புலமையாளன். இவன் இயற்றிய பாடல்கள் அகநானூற்றிலும் புறநானூற்றிலும் சேர்க்கப்பட்டுள்ளன. இவனுடைய உயிர் நண்பர்கள் மாவன், ஆந்தை, அந்துவஞ்சாத்தன், ஆதனழிசி, இயக்கன் என்பவர்கள். இவர்களும் சிறந்த புலமையாளர்கள். பூதப்பாண்டியன் மனைவி பெருங்கோப் பெண்டும் புலமை மிக்கவள்.

பூதப்பாண்டியன் காலத்தில் ஒல்லையூர் சிறந்த சிற்றரசாக விளங்கியது; புலவர் பெருமக்கள் போற்றும் நாடுகளுள் ஒன்றாகத் திகழ்ந்தது. இந்நாடு நிலவரண், நீரரண், மலையரண், காட்டரண் என்னும் நான்கு அரண்களை உடையதாக இருந்தது. இதனை ஒல்லைவேள் என்பவன் ஆண்டுவந்தான். இவன், பகைவர் நாணும்படித் தன்னைப் பெருவீரனாகப் பறைசாற்றிக்கொண்டான். இதனைக் கண்ட பூதப்பாண்டியன் வியந்தான். ஒல்லைவேளின் அகந்தையைக் கெடுக்க ஒல்லையூரின்மேல் படையெடுத்துச் சென்றான். செல்லுமுன், தன் மனையாளிடம் வஞ்சினம் கூறினான். "பகைவனைப் புறங்கொடுத்து ஓடச்செய்யா விட்டால் என் மனைவியை விட்டுப் பிரிவேனாக! கொடுங்கோலன் ஆவேனாக! மாவன், ஆந்தை, அந்துவஞ்சாத்தன், ஆதனழிசி, இயக்கன் ஆகிய நண்பர்களுடன் பகிர்ந்து கொள்ளும் மகிழ்ச்சியிலிருந்து விலகுவேனாக! அடுத்த பிறவியில பாண்டியக் குடியில் பிறக்காமல் வேறு குடியில் பிறப்பேனாகுக!" என்பதே அவ்வஞ்சினம். இவ்வஞ்சினத்தில் தமிழ் மரபின் நாகரிகத்தை நன்கு உணரலாம்.

பூதப்பாண்டியனுக்குத் துணையாக மாவன், ஆந்தை, அந்துவஞ்சாத்தன், ஆதனழிசி, இயக்கன் ஆகியோரும் போருக்குச் சென்றனர். போர் கடுமையாக நடந்தது. ஒல்லையூர் நாட்டின் போர்க்களம், செங்களமாகக் காட்சியளித்தது. பூதப்பாண்டியன் வென்றான். ஒல்லைவேளைச் சிறையில் அடைத்தான். ஒல்லையூரில் வீராபிஷேகம் செய்துகொள்ள எண்ணினான். அப்போது தன் மனைவியும் உடனிருக்க

வேண்டும் என்று நினைத்தான். வஞ்சினம் கூறும்போது "தோற்றால் மனைவியை விட்டுப் பிரிந்தேனாகுக" என்று கூறியவனல்லவா? எனவே மதுரையிலிருந்து மனைவியை வருமாறு ஆணையிட்டான். வெற்றிக் களிப்பில் மூழ்கியிருந்த மதுரையிலிருந்த பெருங்கோப்பெண்டு, ஒல்லையூர் வந்தாள். பூதப்பாண்டியன், ஒல்லையூர் மலையரணில் மகுடம் தரித்து மனையாளுடன் வீராபிஷேகம் செய்துகொண்டான். மங்கல இசை ஒலித்தது; புலவர்கள் பாடிப பரிசில் பெற்றனர்.

இச் சமயத்தில் மதுரைப் பேராலவாயர் என்னும் புலவர் அங்கு வந்தார். பூதப்பாண்டியன், அரியணையை விட்டெழுந்து ஓடோடி வந்து வரவேற்றான். பெருமதிப்பளித்தான். அமரச் செய்தான். ஆனால் பேராலவாயர் அமரவில்லை. சினத்தோடு காணப்பட்டார். பூதப் பாண்டியனை அலட்சியமாக நோக்கினார். பூதப்பாண்டியன் நடுங்கினான். 'புலவர் பெருமானே! ஆதுரத்துடன் வந்த தாங்கள் அமராது நிற்பது எங்களுக்கு அவமானமாக இருக்கிறது' என்றாள் பெருங்கோப்பெண்டு. அவள் கூறியும் அவர் அமரவில்லை. பெருங்கோப்பெண்டு தன் கணவரை நோக்கினாள். அப்பார்வையைப் புரிந்துகொண்ட பூதப்பாண்டியன், "தமிழ்த் தெய்வமே! தாங்கள் நாடிவந்த காரியத்தை ஓடிவந்து தர விழைகின்றேன்" என்றான். புலவரின் சீற்றம் சிறிது தணிந்தது. 'பாண்டி மன்னா, இரந்து நிற்க யாம் வரவில்லை. யாம் பெற்ற தமிழ்ப் பேற்றை நீ கேட்டு நின்றதில்லை; யார்கேட்டுத்தான் இதுவரை நின்றீர்கள்? எனவே, பலர் கேட்கும் பேற்றினை இப்போது பெறப் போகிறீர்கள். அதே நேரத்தில் நானும் பரிசு பெறப்போகின்றேன்' என்று புலவர் கூறினார். புலவரின் உரை கேட்டுப் பூதப்பாண்டியன் கரம் கூப்பினான்; அவையில் உள்ளவர்கள் மனம் மகிழ்ந்தனர். புலவர் பாடத் தொடங்கினார். அவர் பாடிய முதல் பாட்டு, போரின் வெறித் தாண்டவத்தால் உண்டான அநீதிகளை எடுத்துக் காட்டியது; குங்குமம் இழந்த பெண்கள், தந்தையை இழந்த பிள்ளைகள், மகனை இழந்த தாயார்கள் ஆகியோர்களின் அவலத்தை வருணித்தது; இதுதானோ போர்? இதுதானோ வெற்றி என்ற கேள்விக் குறியை எழுப்பியது. பூதப் பாண்டியன் திகைத்தான். அவை கலைந்தது; பேராலவாயர் மண்டபத்தை விட்டு அகன்றார்.

இரண்டாம் நாள், நீரரணில் மண்டபம் கூடியது. பூதப்பாண்டியன் ஒல்லையூர் அரசியலின் நிலைமைகளைக் கவனித்துக் கொண்டிருந்தான். முதல்நாள் பரிசு பெறாமல் திரும்பிய பேராலவாயர், வந்தார்; பூதப் பாண்டியன் பண்பு குறையாமல் வரவேற்றான். பேராலவாயர் அவனை எதிர்பார்க்காமலேயே இரண்டாம் பாடலைப் பாடத் தொடங்கினார். அப் பாடல் வெற்றிக்கு விளக்கம் கேட்டது போல் அமைந்தது. எது வெற்றி? எது தோல்வி? என்ற கேள்விக்குறியை எழுப்பியது. "குருதி வெள்ளத்தில் கொடி நாட்டுவது வெற்றியா? அல்லது குத்துயிரும் கொலையுயிருமாய்க்

கிடக்கும் சடலங்கள் கண்டது தோல்வியா? மனையாள் நெற்றியிலே இடப் பட்ட குங்குமம் வெற்றியா? அல்லது போர்க்களத்தில் மாண்டவர்களது பெண்களின் வெறிச்சோடிய நெற்றிகள் கண்டது தோல்வியா? மன வெற்றியா? மனித வெற்றியா? அறிவின் வெற்றியா? அகந்தையின் வெற்றியா? புலன்களின் வெற்றியா? பொழுதின் வெற்றியா? ஒல்லை யூரானுக்கு வேண்டுமானால் தோல்வியாக இருக்கலாம். ஆனால் உனக்கு நீயே தோல்வி கண்டாய்'' என்று இடித்துரைத்தார். பாண்டியன் வருத்தத்துடன் மண்டபத்தை விட்டுச் சென்றான்; புலவரும் சென்றார்.

மூன்றாம் நாள், நிலவரணில் மண்டபம் கூடியது. வழக்கம்போல் பேராலவாயர் வந்தார். பாடத் தொடங்கினார். மனிதன் போராட வேண்டிய உரிமையே வேறு என்னும் கருத்தினை மையமாகக் கொண்டு அப்பாடலைப் பாடினார். அப்பாட்டின் வாயிலாக, 'போதும் என்ற மனமே பொன் செய்யும் மருந்து.'' ஆதலால் அவனவனுக்குக் கிடைத்ததைக் கொண்டு ஆறுதல் பெற வேண்டும்; ஒற்றுமையுடன் கலந்து உறவாட வேண்டும். ஒற்றுமை நிறைந்த வாழ்க்கையே உண்மையான மனித வாழ்க்கை என்னும் கருத்துக்களை எடுத்துக் கூறினார். பாடல் முடிந்ததும் அவரே வெளியில் சென்றுவிட்டார்.

நான்காம் நாள், காட்டரணில் மண்டபம் கூடியது. பூதப்பாண்டி யனும் மற்றவர்களும் வருவதற்குமுன்பே பேராலவாயர் வந்திருந்தார். இதனால் எல்லோரும் அதிர்ச்சி அடைந்தனர். பூதப்பாண்டியன் ஆசனத் தில் அமரச் சென்றான். பேராலவாயர், 'நீயும் மன்னன் தானோ' என்று பாடலைத் தொடங்கினார். அமைதியின் இலக்கணங்களை எடுத் துரைத்தார். அமைதியினால் சாதிக்க முடியாத ஒன்றைப் போர் சாதித்து விடாது; அமைதியே இறைவடிவம்; அதைப் பின்பற்றுபவனே மனிதன்; அவனே வழிபாட்டிற்கு உரியவன் என்னும் கருத்துக்களைப் பாட்டின் வாயிலாகக் கூறினார். பாடல் முடிந்தது. பாண்டியன், மனமாரப் புலவரைப் போற்றினான். அமைச்சரை அழைத்தான். என்னுடைய ஆணை வரும்வரை, ஒல்லையூர் எல்லையைவிட்டு ஒருவரும்-என்னுடைய தேவியும்கூட நகரக் கூடாது என்று கட்டளையிட்டான்.

இரவு வந்தது. பூதப்பாண்டியன் புலவரைப்போல மாறுவேடம் பூண்டு சிறைக்கோட்டம் சென்றான். ஒல்லைவேளானைக் கண்டான், தான் மதுரையைச் சார்ந்தவன் என்றும் தன் பெயர் பூவாதப்புலவன் என்றும் கூறினான். மேலும், 'மதுரைப் பேராலவாயர், பூதப்பாண்டியனின் திருமுழுக்கிற்கு எழுந்தருளினார். பூதப்பாண்டியன் அவரிடம் பெருமதிப்பு உடையவன். அவனுக்கு முன்னால் பேராலவாயர், போரின் வெறித் தாண்டவத்தைப் பற்றிப் பாடினார். இவ்வாறு நான்கு நாட்கள் பாடினார்; 'அரசும் அமைதியும்' என்ற கருத்துச் செறிந்த பாடல்களைப் பாடினார். பூதப்பாண்டியன் நான்கு பாடல்களுக்கும் நான்கு அரண்களை அன்பளிப் பாகக் கொடுத்துவிட்டான். அதற்குமேலும் பாண்டியனின் திருமுழுக்கின்

போது, அவன் மனைவி பெருங்கோப்பெண்டும் உடன் இருந்தாள். எனவே, ஒல்லையூரில் இருந்த பாண்டியக் குடிகள் அனைத்தும் பேரால வாயருக்குச் சொந்தமாக்கப்பட்டுவிட்டன. பூதப்பாண்டியனே புலவருக்குச் சொந்தமாகிவிட்டான். நாளைப் பேராலவாயர், உன்னை விடுதலை செய்யப் போகிறார் பூதப்பாண்டியன், அவன் மனைவி, அமைச்சர்கள், வீரர்கள் அனைவரும் உன் காலடியில் நிற்கப்போகின்றார்கள். அதற்கு முன் ஒன்றே ஒன்று வேண்டுகின்றேன். பேராலவாயருக்குச் சொந்தமாக்கப்பட்ட பாண்டியக் குடிகளை மட்டும் விட்டுவிட வேண்டும் என்று யாசிக்கின்றேன் என்று கூறினான். இவற்றைக் கேட்ட ஒல்லைவேளான், பூதப்பாண்டியன் தமிழுக்குத் தலைவணங்கிய பண்பை நினைத்து மகிழ்ந்தான். "பாண்டியனைக் கண்டு கட்டித் தழுவி உரையாட வேண்டும்; தன்னுடைய அகந்தையாலேயே இந்நிலை ஏற்பட்டது என்பதைப் பூதப்பாண்டியனிடம் எடுத்துச் சொல்ல வேண்டும்" என்று பூவாதப் புலவராகிய பூதப்பாண்டியனை வேண்டினான். பூதப்பாண்டியன் மாறுவேடத்தைக் களைத்தான்; ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியனாகக் காட்சியளித்தான்.

# 10. நீல ரிப்பன்

*(அச்சகத் தொழிலாளி ஒருவன், தன் மைத்துனி கேட்ட நீல ரிப்பன் வாங்கிக் கொடுக்க முடியாமல் திணறினான்; அவன் மனைவி, வயிற்றுக்கில்லாவிட்டாலும், கௌரவத்தைக் காப்பாற்ற வாங்கியே கொடுத்தாக வேண்டும் என்றாள். அவனும் கௌரவத்தைப் பற்றிச் சிந்தித்தான். அந்த ஏழைக் குடும்பத்தின் கௌரவம் என்ன ஆயிற்று? இதனை விளக்குவதே நீல ரிப்பன்.)*

கேசவன் சென்னையில் அச்சுக்கூடம் ஒன்றில் கம்பாஸிடராக வேலை பார்த்தான். அவன் சென்னைக்கு வந்து இரண்டு வருடங்களுக்கு மேலாகிவிட்டது. அவன் மனைவி பார்வதி, மிகவும் நல்லவள். அவளுக்குச் சென்னையைச் சுற்றிப் பார்க்க வேண்டும் என்ற ஆசை மிகுதியாக இருந்தது. ஆனால் அதற்கு அவனுடைய பொருளாதார நிலை இடம் தரவில்லை. அவனும் எவ்வளவோ துன்பப்பட்டுச் சம்பாதித்தான்; ஓவர்டைம் பார்த்தான். அப்படிச் சம்பாதித்தும் வயிற்றுக்குக் கூடப் போதவில்லை; இந்நிலையில் சென்னையை எப்படிச் சுற்றிப் பார்ப்பது?

இச் சமயம், பார்வதியின் தங்கை பரிமளம் பட்டணத்து வேடிக்கைகளைப் பார்ப்பதற்காக ஊரிலிருந்து வந்திருந்தாள். எனவே பட்டணத்தைச் சுற்றிக்காட்டுவதற்கு மைத்துனியுடன் தன் மனைவியையும் அழைத்துச்

செல்லவேண்டும் என்று விரும்பினான். அடுத்தவாரக் கூலியில் மூன்று ரூபாய் முன்பணமாக வாங்கினால் போதும். ஹோட்டல் செலவு ஒரு ரூபாய்; சினிமாவுக்கு இரண்டு ரூபாய். இவ்வாறு திட்டமிட்டுக் கொண்டான். அச்சுக்கூட முதலாளியிடம் பணம் கேட்கலாம் என்று சென்றான். அவரோ கோபத்துடன் இருந்தார். மேலும் அன்றுமுதல், தொழிலாளிகள் அச்சகத்தில் வேலை நிறுத்தம் தொடங்கியிருந்தார்கள். கேசவனுக்கு வேதனையாக இருந்தது. வாரா வாரம் கூலி வாங்கி அன்றாடம் வயிறு கழுவும் அவனுக்கு ரேஷன் வாங்க என்ன செய்வது என்ற கவலை வேறு வாட்டியது.

அன்று ஞாயிற்றுக்கிழமை. பட்டணம் பார்க்க வேண்டும் என்று மனைவி நீண்ட நாட்களாக ஆசைப்பட்டதைக் கேசவன் நிறைவேற்ற எண்ணினான். கேசவன், பார்வதி, பரிமளம் மூவரும் சைனாபஜாரிலிருந்து ஹைகோர்ட் கடற்கரைக்கு நடந்து சென்றார்கள். கடற்கரையின் மணற் பரப்பில் அவன் அமர்ந்து கொண்டு தன் இதய அலைகளோடு போட்டி யிடும் கடலலைகளையே பார்த்துக் கொண்டிருந்தான். பார்வதியும் பரிமளமும் சற்றுத் தொலைவில் சிரித்துப் பேசிக் கொண்டிருந்தனர். சிறிது நேரத்தில் பார்வதி, கேசவனிடம் வந்தாள். நாளை பரிமளம் ஊருக்குப் போகின்றாள். அவள் வரும் வழியில் குவித்து வைத்திருந்த ரிப்பனைப் பார்த்து ஆசைப்படுகிறாள். நீல ரிப்பன் நன்றாக இருக்கிறது என்று கூறுகின்றாள். எனவே அந்த ரிப்பனையாவது வாங்கிக் கொடுக்க லாமே? என்றாள் பார்வதி. ஹூம்......என்று வாயசைத்துவிட்டு ஏதோ நினைவில் ஆழ்ந்தான் கேசவன். அவனுக்கு நாளை ரேஷனுக்குத் துட்டு இல்லையே என்ற வருத்தம் மிகுந்திருந்தது.

அந்தி மயங்கி இருள் பரவியது. மூவரும் வீட்டிற்குத் திரும்பினார்கள். வரும் வழியில் ரிப்பன் கடை, விளக்கின் ஒளியால் பிரகாசித்துக் கொண்டிருந்தது. பரிமளம், 'அக்கா......நீல ரிப்பன்' என்றாள். அவன் பத்திரிகைக் கடையில் ஒட்டியிருந்த சுவரொட்டியைப் படித்துக்கொண் டிருந்தான். "என்ன? பேசாமல் இருக்கிறீர்களே! குழந்தை கேட்குது" என்றாள் பரிமளம். அவன், 'ரிப்பனும் ரிப்பன்......வாரையா இல்லையா?' என்று சிறி விழுந்தான். விளக்கின் ஒளியில் அவனுடைய முகத்தில் ஆடிய கோபத்தின் தாண்டவம் அவருக்கு நன்றாகத் தெரிந்தது. என்ன செய்வது? ஒரு ரிப்பன் கூடப் பட்டணத்தில் இருக்கும் தன் அக்காவால் வாங்கித்தர முடியவில்லையே என்று பரிமளம் எண்ணுவாளே எனப் பார்வதி நினைத்தாள்.

மூவரும் வீட்டிற்கு வந்தார்கள். இரவெல்லாம் கேசவனுக்குப் பலவித எண்ணங்கள் தோன்றின. 'ஸ்டிரைக் என்ன ஆகுமோ' என்று எண்ணினான். அதற்கு மேல் அந்த 'ரிப்பன்' அவனை வாட்டியது. 'மைத்துனி விரும்பிக்கேட்ட ரிப்பனைக்கூட வாங்கிக் கொடுக்க முடிய வில்லையே! அவள் என்ன நினைப்பாள். அத்தானிடம் காசு இருந்தும்

வாங்கித்தர மனம் இல்லை என்று எண்ணுவாள்; ஊருக்குப் போய் எல்லாரிடமும் சொல்வாள்; என்னிடம் காசு பணம் இல்லை என்பது யாருக்குத் தெரியும். அவள் ரிப்பன் கேட்டபோது, காசு இல்லை என்று ஏன் சொல்லியிருக்கக்கூடாது. அவ்வாறு சொன்னால் கௌரவம் போய் விடும் என்றல்லவா நினைத்தேன்? என்ன கௌரவம்! என்று பலவாறு எண்ணிக்கொண்டே யிருந்தான். காலையில் எழுந்தான். பரிமளம் அன்று ஊருக்குப் போகின்றாள். கேசவன், பார்வதியிடம், 'எட்டு மணிக்கு வீட்டுக்கு வருகிறேன்; வராவிட்டால் நீ பரிமளத்தை அழைத்துக் கொண்டு ஸ்டேஷனுக்குப் போய்விடு; நான் அங்கு வந்து பார்க்கிறேன். என்று கூறிவிட்டு அலுவலகம் செல்வதுபோல் கிளம்பினான். எங்கெங் கெல்லாமோ சுற்றினான். ஒரு செல்லாத காசுகூடக் கிடைக்கவில்லை. மணி ஏழு. எதையோ பறிகொடுத்தவனைப் போல அலைந்து கொண் டிருந்தான். அப்போது ஒருவர், அவனைக் கூப்பிட்டு, பழக்கூடையை பஸ் ஸ்டாண்டுவரை எடுத்துவரச் சொன்னார். ஒரு கணம் யோசித்தான். கௌரவம்! கௌரவமாவது மண்ணாங் கட்டியாவது என்று எண்ணிய வனாய்க் கூடையைச் சுமந்து சென்றான். ஆறு அணக் கிடைத்தது; பசி காதை அடைத்தது. அவன் அதைப் பொருட்படுத்தவில்லை. அரையணாவுக்கு மல்லிகைப்பூ வாங்கினான்; நீல ரிப்பன் ஒன்று வாங்கி னான்; ஸ்டேஷனுக்கு ஓடினான். அவன் வருகையை எதிர்பார்த்துக் கொண்டிருந்த பார்வதி, அவன் கையில் சிறு பொட்டலத்துடன் வருவதைப் பார்த்தாள். கேசவன், வந்ததும், பரிமளத்தின் தலையைத் திருப்பினான். அவள் தலையில் நீல ரிப்பனும் மல்லிகைப் பூவும் இருப்பதைக் கண்டான். பரிமளத்தையும், பார்வதியையும் மாறிமாறிப் பார்த்தான். வண்டி கிளம்பிவிட்டது! "அத்தான் போய் வர்ரேன்; அக்கா போய் வர்ரேன்" என்று பரிமளம் விடைபெற்றுக் கொண்டாள்.

கேசவனும் பார்வதியும் வீட்டிற்கு வந்தனர். 'ஸ்டேஷனில் ஏன் அப் படிப் பார்த்தீர்கள்? நீங்கள் வாங்கிக் கொடுக்காவிட்டாலும் நான் சும்மா இருக்க முடியுமா? ஓரணா அரையணா என்று எட்டணா சேர்த்து வைத்திருந் தேன். அக்கா, ரிப்பன்கூட வாங்கித்தரவில்லை என்று பரிமளம் ஊரில் போய்ச் சொல்ல மாட்டாளா? கௌரவம் என்னுகிறது; எனவே சுய கௌரவத்தைக் காப்பாற்ற நினைத்தேன். அந்த எட்டணாவில் நானே நீல ரிப்பனும் பூவும் வாங்கிக் கொடுத்துவிட்டேன்' என்றாள் பார்வதி' கேசவனுக்கு என்ன பேசுவதென்று புரியவில்லை. தான் வாங்கி வந்த நீல ரிப்பனைப் பார்வதியின் பின்னல் நுனியில் கட்டினான்; பூவைத் தலையில் சூட்டினான். அவளின் முகம் வெட்கத்தால் சிவந்தது; அவன் மனத்தில் பெரும் நிம்மதி ஏற்பட்டது.

# 11. அவன் வருவான்

*(ராம்பகதூர்சிங்......கடமையில் கண்ணும் கருத்துமாக இருப்பவன். அவன் பிறந்த கூர்க் இனத்திற்குப் பெருமை தேடித் தரும் முறையில் பணியாற்றுபவன். அவனை விரும்பியவர்கள் பலர். ஆனால், விற்பனை வரி அதிகாரி ஒருவரின் பங்களாவில் மட்டும் அவனுடைய காவல் ஏற்றுக் கொள்ளப்படவில்லை. அப் பங்களாவில் இருந்த 'நாயும்' அவனைக் கண்டால் சீறியது. ஒருநாள், அந்நாய் அவனைக் கடித்துவிட்டது. ஐந்து மாதங்களுக்குப் பின் அவன் இறந்துவிட்டான். அவனிடம் அன்புடைய வர்கள் 'அவன் வருவான்' என்று எண்ணிக் கொண்டிருந்தனர். அவன் எங்கே வரப்போகிறான்?—இக் கதையின் வாயிலாகக் கடமை நிறைந்த இனத்தையும் அதில் ஒருவனையும் கண்முன் நிறுத்துகின்றார் ஆசிரியர்.)*

பக்கத்தில் உள்ள நாட்டவர்கள் சிலர், இங்கு வந்து குறிப்பிட்ட தொழிலில் கொடி நாட்டியிருக்கின்றார்கள். அவர்களுள் நேப்பாளத்தி லிருந்து வரும் கூர்க்காக்கள் காவல் காக்கும் தொழிலில் வல்லவர்கள். அவர்களிடம் கல்வியறிவு கிடையாது; தொழில் திறமையும் குறைவு; வியாபாரத் திறமையற்றவர்கள்; உடலை வருத்தி உழைக்கவும் பயிற்சி யில்லாதவாகள். ஆனால் அவர்களின் உயிரிலும் உடலிலும் சத்தியமும் நேர்மையும் கலந்திருக்கின்றன. இவற்றின் சேர்க்கையால் அஞ்சா நெஞ்சம் அவர்களுககு ஏற்பட்டிருக்கின்றது. ஊர்க்காவல், உடைமைக் காவல், உயிர்க்காவல் இம் மூன்றுக்கும் உரிய போலீஸ் இலாகாவே. கூர்க்காக்களைக் காவல் புரிய அனுமதித்திருக்கிறது. இதனால் அவர்களின் நேர்மை,உண்மை, சத்திய உணர்ச்சி ஆகிய இவற்றை நன்கு உணரலாம். அவர்கள் வேலை தேடி வெளிநாடுகளுக்குச் செல்கிறார்கள். வேலை கிடைக்கவில்லையே என்பதற்காக அவர்கள் பிச்சை எடுப்பது இல்லை. தம் வறுமையை நடை உடை பாவனைகளில்கூட அவர்கள் காட்டுவதில்லை. அவ்வளவு தன்மானம் உடையவர்கள். அதனால் அவர்கள் வேலை கிடைக்கும்வரை தமக்குத் தெரிந்த காவல் தொழிலில் தாமாகவே ஈடுபடுகின்றார்கள்; பல மணி நேரம் கண் விழிக்கின்றார்கள்; கால் கடுக்க நடக்கின்றார்கள். மாதம் முடிந்ததும் அவற்றைச் சொல்லிக் கூலி கேட்கின்றார்கள்.

மாதச் சம்பளத்தில் வேலை பார்ப்பவன் சீனியர்; வேலை இல்லாமல் ரோந்து சுற்றுபவன் ஜூனியர், என்பது கூர்க்காக்களில் உள்ள பிரிவு. கூர்க்காக்களுக்கெல்லாம் தலைவன் ஒருவன் இருப்பான். அவன் எங்கெங்கு வேலைக்கு ஆள் தேவை என்று தெரிந்து கொள்வான். அவனிடம் ஜூனியர் கூர்க்காக்களின் பட்டியல் இருக்கும். அதன்படி காவல் ஆள் தேவைப்படும் இடங்களுக்கு ஒவ்வொருவனாக அனுப்பி வைப்பான். அவ்வாறு ஜூனியருக்கு வேலை கிடைத்துவிட்டால், அவன் பார்த்த ரோந்து சுற்றும் காவல் வேலையைப் புதிதாக வந்திருக்கும்

கூர்க்காவுக்குக் கொடுப்பான். சீனியராகப் போகின்றவன் ஜூனியரை அழைத்துக்கொண்டு போய், தான் ரோந்து சுற்றிய தெருக்களையும் அவற்றில் உள்ள கடைகளையும் வீடுகளையும் காட்டிவைப்பான். அவ்வாறு வேலைக்கு வந்தவர்களுள் ராம்பகதூர்சிங் ஒருவன். அவன் குள்ள மானவன்; ஆனால் வலிமை வாய்ந்தவன். அவனுக்கு இருபத்தேழு அல்லது இருபத்தெட்டு வயதிருக்கும். நேபாளத்தின் தலைநகரான காட்மாண்டுவிலிருந்து வந்தவன். அவனுக்குத் தாயும் மனைவியும் மூன்று வயதில் ஓர் ஆண் குழந்தையும் காட்மாண்டுவில் இருக்கின்றார்கள். அவன் சென்னைக்கு வந்து இரண்டு ஆண்டுகளாகி விட்டது. இன்னும் ஒருமுறைகூட அவன் தன் சொந்த நாட்டுக்குப் போகவில்லை. ஆனால் மாதந்தோறும் இருபது ரூபாய் அவர்களுக்கு அனுப்பி வந்தான். அவன் இங்கு இராக்காவல்காரனாகப் பணியாற்றினான். இரண்டு பெரிய சாலைகள், ஐந்தாறு தெருக்கள், ஏழெட்டுச் சந்துகள் கொண்ட அந்த வட்டாரத்தை அவன் காத்துவந்தான். அவனை யாரும் காவல்காரனாக நியமிக்கவில்லை. அவன் தன்னைத்தானே அவ்வாறு நியமனம் செய்து கொண்டான். நாள்தோறும் இரவு பதினொரு மணி முதல் காலை நான்கு மணி வரையில் தெருக்களைச் சுற்றி வருவான். காக்கிச் சட்டை, அரைக் கால் சராய், காக்கி நிற மேஜோடு, கனத்த பூட்சு, இடுப்பில் பளபளப் பான பெல்ட், அதில் உறைவாள், தலையில் தொப்பி, ஒரு கையில் குறுந்தடி, மற்றொரு கையில் டார்ச் லைட்–இவையே அவனுடைய திருக் கோலம். அவன் பீடி குடிப்பான்; ஆனால் ரோந்து சுற்றும்போது பீடியைத் தொடுவதுகூட இல்லை. காவல் முடிந்ததும் ஒரு 'டீ' வாங்கிக் குடித்து விட்டுத் தங்கும் இடத்திற்குச் சென்றுவிடுவான். அவன், மெயின்ரோடில் தெற்குப் பார்த்து அமைந்த ஒரு பழைய செட்டுக்கூரை வீட்டுத் திண்ணையில் உள்ள அறையில் தங்கியிருந்தான். அவனோடு வேறு நான்கு கூர்க்காக்களும் தங்கியிருந்தனர். அந்த அறைக்குப் பத்து ரூபாய் வாடகை. அதில் இரண்டு ரூபாயை ராம்பகதூர்சிங் கொடுத்தான். மற்றைய நால்வரும் எட்டு ரூபாய் கொடுத்தார்கள். அவர்கள் நல்ல இடங்களில் அலுவல் பார்த்தார்கள். அவர்கள் எல்லாம் இவனுக்குச் சீனியர்கள். அந்த ஐந்து பேர்களையும் அந்த வீட்டில் சேர்ந்தாற்போல ஒருநாளும் பார்க்க முடியாது. காலையில் மூன்றுபேர் இருப்பார்கள். மாலையில் மூன்று பேர் இருப்பார்கள். இரவில் யாருமே இருக்க மாட்டார்கள். அவர்களிடையே பேச்சு மிகக் குறைவாகவே இருக்கும். உண்ணும் நேரம், உறங்கும்நேரம் தவிர மற்றைய நேரங்களில் பட்சுகளுக்கும் பெல்ட்டுகளுக்கும் பாலிஷ் போடுதல், துணி துவைத்தல், கிழிந்த ஆடைகளைத் தைத்தல், முகச்சவரம் செய்துகொள்ளுதல் ஆகிய தொழில்களில் ஈடுபட்டிருப்பார்கள். ராம்பகதூர்சிங், அவர்களுக்கு ரொட்டி சுட்டுக்கொடுப்பான். இது அவனுடைய வீட்டுக் கடமை. அவ்வாறு ஜூனியர்கள் செய்யவேண்டும் என்பது அவர்களுக்குள் உள்ள நியதி.

இத்தகைய கட்டுப்பாட்டோடு வாழ்ந்த ராம்பகதூர்சிங், குறித்த நேரம் தவருமல் ரோந்துக்குப் புறப்பட்டுவிடுவான். தெருக்களைச் சுற்றி வருவான். கையில் உள்ள குறுந்தடியால் டொக்டொக்கென்று தட்டுவான்; விசில் ஊதுவான். அவன் வாழ்ந்த தெருவின் இடதுபுறி வரிசையில் ஏழாவதாக ஒரு மாடி வீட்டுக்கு உரியவர் டாக்டர் வாசுதேவன். அவர் நகரில் பெரிய மருத்துவ மனையொன்றில் கௌரவ சர்ஜனுக இருக்கின்ருர். அவர், இரவு நேரங்களில் மருத்துவமனைக்குச் சென்ருல் இரவு ஒரு மணிக்குத்தான் வருவார். அவர் வருவதற்கும் ராம்பகதூர்சிங் அந்த வீட்டுக்கருகில் சென்று கம்பால் தட்டி விசில் ஊதுவதற்கும் சரியாக இருக்கும். எனவே டாக்டரின் மனைவியும், மகளும் ராம்பகதூர்சிங்கிடம் மிகுந்த அன்பாக இருந்தார்கள்.

டாக்டரின் வீட்டுக்கு அடுத்து ஒரு பங்களா இருந்தது. அதில் விற்பனைவரி அதிகாரி ஒருவர் இருக்கிருர். அவர் செல்வர்; தடபுடலான வாழ்க்கை உடையவர். மனைவி மக்கள், உறவினர்கள் எனப் பெரிய பட்டாளமே அந்த வீட்டில் இருந்தது. மேலும் லாப்ரடர் இனத்தைச் சேர்ந்த நல்ல ஜாதிநாய் ஒன்றும் அவர் வீட்டில் இருந்தது. அவர் வீட்டுக்குக் காவலர்கள் பலர் இருந்தமையால், ராம்பகதூர்சிங்கிற்கு மாதப் பணம் கொடுக்க மறுத்துவிட்டனர். ஆனாலும் நாள்தோறும் அவன் அவ்வழியாகப் போகும்போது தரையைத் தட்டி விசில் ஊத மறப்பதில்லை. ஒருநாள் பங்களா தோட்டக்காரன் ராம்பகதூர்சிங்கைக் கூப்பிட்டு, இங்கே வரும் போது விசிலை ஊதாதே! ஆபீசர் தூக்கம் கெட்டுப்போகிறதாம் என்ருன். அதற்கு மேலும் அந்த நாய், சிங்கைக் கண்டால் உர்ர் என்று உறும ஆரம்பித்துவிடும். இவற்ருல் சிங், அந்தப் பங்களாவிற்கு அருகில் சென்ருல் மட்டும் விசில் ஊதுவதில்லை.

அந்தத் தெருவிற்கு அடுத்த தெருவில் ஒரு விறகுக் கடை இருந்தது. அந்தக் கடையில் விறகு பிளப்பவன், மட்டும் இரவில் இருப்பான். ராம்பகதூர்சிங் அந்த முன்ருல் சாத்திக் கிடந்த மூங்கில்படல் கதவைக் குறுந்தடியால் தட்டுவான். விறகு பிளப்பவன் ஊம்! ஊம்! என்பான். விசிலை ஊதிக்கொண்டே அந்த விறகு தொட்டிக்குப் பக்கத்தில் வளர்ந்திருந்த வேப்ப மரத்தைத் தட்டுவான். முதலில் நாய் ஒன்று உறுமும். அடுத்து 'இன்னு கூர்க்கா' என்று குரல் கேட்கும். அந்த மரத்தடியில் கண்ணம்மா, அவளின் மகன் ரங்கன், நாய் மூவரும் வாழ்ந்தார்கள்.

மாலை வேளைகளில் எப்பொழுதாவது ராம்பகதூர்சிங் தெருக்கள் வழியாக உலா வருவான். ஒவ்வொரு வீட்டிற்கும் சென்று சலாம் வைப்பான். அவ்வாறு செல்லும் காலத்தில் ஒருநாள் மாலை, விறகுத் தொட்டியின் முதலாளிக்கு ராம்சிங் சல்யூட் அடித்தான். அதனைப் பார்த்த சிறுவன் ரங்கனும் ராம்சிங்கிற்குச் சல்யூட் அடித்தான். ராம்சிங்கிற்கு ஒரே மகிழ்ச்சி. அன்றுமுதல் ரங்கனைக் கண்டால் அவனுக்கு உற்சாகம் பிறந்துவிடும். தன் ஜேபியில் நொறுவைத் தீனியாகப்

பேர்ட்டுக்கொண்டு வரும் ரொட்டித் துண்டையும் வேகவைத்த உருளைக் கிழங்கையும் அவனுக்குக் கொடுப்பான். அச்சிறுவனுக்குப் பக்கத்தில் நிற்கும் நாய்க்கும் கிள்ளிப்போடுவான். நாயும் அவனைக் கண்டால் நட்புப் பாராட்டத் தொடங்கிவிடும். இத் தொடர்பால், கண்ணம்மா, ரங்கன், நாய் மூவரிடத்தும் ராம்சிங்கிற்குப் பாசம் ஏற்பட்டது.

டாக்டரின் வீடு, விறகுக்கடை, வேப்பமரம் இவைகள் ராம்சிங்கின் உள்ளத்தில் ஆழப் பதிந்துவிட்டன. வழக்கம்போல் அவன் ரோந்து சுற்றிவரும் நாளில்—சித்திரை மாதம் இரண்டாம் வாரத்தில் ஒருநாள் ரோந்துக்குப் புறப்பட்டான். மணி பதினொன்று. அப்போது துளசிகிரி என்னும் கூர்க்கா அவனைக் குசலம் விசாரித்தான். துளசிகிரியைக் கண்டால் எல்லாக் கூர்க்காக்களுக்கும் வெறுப்பு. துளசிகிரி தனக்குச் சம்பளம் தர மறுத்த ஒருவரின் வீட்டில் திருடிவிட்டான். ஆதலால் அவனைக் கூர்க்காக்கள் யாரும் விரும்புவதில்லை. அவன் சினிமாத் தியேட்டர் ஒன்றில் காவல்காரனாகப் பணியாற்றுகின்றான்; அவன், ராம்சிங்கிடம், தான் சினிமாத் தியேட்டரில் பார்க்கும் வேலையை விட்டு விடப் போவதாகவும், அந்த வேலைக்கு ராம்சிங் போவதானால் போகலாம் என்றும் கூறினான். ஆனால், ராம்சிங், எனக்கு அங்கெல்லாம் வேலை செய்ய விருப்பமில்லை என்று சொல்லிப் போய்விட்டான். ராம்சிங்கின் இலட்சியமெல்லாம், லண்டனுக்குச் சென்று பிரிட்டிஷ் அரசியின் விசேஷப் படைகளில் ஒன்றான கூர்க்காப்படைப் பிரிவில் சிப்பாயாக இருக்க வேண்டும் என்பதே. அதற்காக அப்படையில் வேலைபார்த்த தன் சகோதரனுக்கு அடிக்கடி கடிதம் எழுதிக்கொண்டிருந்தான். எனவே துளசிகிரி கூறியதில் அவன் மனம் செல்லவில்லை. லண்டன் மாநகர வீதியில் ஒருநாள் வீர நடைபோட்டு நடக்கவேண்டும் என்ற நினைவோடு தன் காவல் பணியைச் செய்வதற்காக நடக்கத் தொடங்கினான். டாக்டர் வாசுதேவன் வீட்டைத் தாண்டியதும், விற்பனை வரி அதிகாரியின் பங்களாவிற்கு முன் சென்றான். தார் போட்ட தரையை இலேசாகத் தட்டினான். அப்போது அவன் கண்ணுக்கு, பங்களாவின் இரும்புக் கேட்டுக்கு ஓரமாகக் கண்ணம்மாவின் நாய் படுத்திருந்தது தெரிந்தது. தன் தடியால் அந்த நாயை மெல்லத் தட்டினான். அவ்வளவுதான். பங்களாவின் உள்ளே இருந்த லாபரடர் நாய் தாவிக் குதித்து வெளியே வந்து ராம்சிங்கின் வலதுக்கால் தொடையை ஒரே கவ்வாகக் கவ்வியது. ராம்சிங் அலறினான். டாக்டர் வாசுதேவன் அந்த அலறலைக்கேட்டு அங்கு வந்தார். தம் வீட்டுக்கு ராம்சிங்கை அழைத்துச் சென்று நாய்க்கடி ஊசி மருந்து செலுத்தினார். தம் காரிலேயே அவனை ஏற்றிக் கொண்டு போய் அவனை அவன் அறையில் விட்டுவிட்டு வந்தார்.

மாதங்கள் ஐந்து சென்றன. ஒருநாள் வழக்கம்போல் ரோந்துக்குச் சென்றான். இரவு ஒரு மணிக்குமேல் பலத்த மழை பெய்தது; ராம்சிங், ஒரு 'பங்க்' கடையை நோக்கி ஓடினான். அங்கு நின்று கொண்டான். அந்தப்

பேய்மழையின் கொடுமை தாங்காமல் வேப்பமரத்தடியில் இருந்த சிறுவன் ரங்கன் அம்மோவ்! அம்மோவ்! என்று அலறினன். ராம்சிங் அவசரமாக ஓடினன். கண்ணம்மாள் எங்கேயோ போயிருந்தாள். சிறுவன் ரங்கனைத் தூக்கி அணைத்துக் கொண்டு விறகுக் கடைக்கு ஓடிவந்தான். உள்ளே சிறுவன் ரங்கனைப் போகச் சொல்லிவிட்டு வேகமாகத் திரும்பித் தன் அறையை நோக்கி நடந்தான். அவன் தெப்பமாக நனைந்துவிட்டான். அதனுல் நாயால் கடிக்கப்பட்ட அவன் இறந்துவிட்டான். மறுநாள் டாக்டர் வாசுதேவன், இறந்த அவனுடைய உடலைப் பரிசோதித்து விட்டுச் சர்ட்டிபிகேட்டில் கையெழுத்தும் செய்துவிட்டு இரவு ஒன்றரை மணிக்கு வீட்டிற்கு வந்தார். அவர் மனைவி 'இன்றைக்குக் கூர்க்கா வரவில்லையே' என்று கேட்டாள். "அவன் ஏன் வரவேண்டும்" என்ருர் டாக்டர். "இது என்ன கேள்வி என்ருள் அவள். டாக்டரின் கண்களில் நீர்மல்கியது. ஏதோ சொல்ல வாயெடுத்தார். பின்னர் நினைத்ததைச் சொல்ல விரும்பாதவர்போல "அவன் வருவான்" என்று முணுமுணுத்த வாறே மாடிக்குச் சென்றுவிட்டார்.

## 12. முற்றிய கனவு

(பதினைந்து வயதுப்பெண்; முப்பத்தாறு வயது ஆண். இருபத்தொரு ஆண்டுகள் இடைவெளி! அந்த ஆண், அந்தப் பெண்ணை இரண்டாவது மனைவியாக மணந்து கொண்டான். இவர்களின் வாழ்வில் ஏற்பட்ட மனக் குழப்பத்தை மையமாகக் கொண்டு படைக்கப்பட்டதே முற்றிய கனவு.)

அவன் முப்பத்தாறு வயது ஆடவன். அவன் மனைவி அபிராமி இறந்துவிட்டாள். அவளின் நினைவுச்சின்னமாக மேகலா என்னும் பெண் குழந்தையை இந்த உலகத்தில் விட்டு விட்டுப் போயிருந்தாள். அவன், பதினைந்து வயது உடைய ராஜீ என்பவளை இரண்டாம் மனைவியாக மணந்து கொண்டு வாழ்க்கை நடத்தினன். மேகலா, மணப் பருவம் எய்தினள். மேகலாவை மணம் செய்து கொடுக்க எண்ணினன். ஆனல் அதற்கேற்ற பணவசதி அவனிடம் இல்லை. எனவே தன் மகள் மேகலாவை முப்பத்தெட்டு வயது உடைய பணக்காரன் ஒருவனுக்குத் திருமணம் செய்து கொடுக்க எண்ணினன்.

ஒருநாள், ராஜீயிடம் இதுபற்றிக் கேட்டான், உடனே அவள், மேகலாவுக்கு இரண்டாம் தாரம் வேண்டாம் என்று கூறி, வீட்டின் உள்ளே சென்றுவிட்டாள். அவள் கூறிய பதில் அவனை வாட்டியது. 'இரண்டாம் தாரம் வேண்டாம் என்று கூறியது. அவள் தன்னுடைய வாழ்வை எண்ணித்தானே? அவள் எண்ணிய ஆசைகள் நிறைவேருமல் போயிருக்குமோ? அதிருப்தி அடைந்திருப்பாளோ? எட்டு ஆண்டுகளாக

அவள் முகம் கண்டு மகிழ்ந்ததெல்லாம் ஏமாற்றக் கனவா?' எனப் பலவாருக எண்ணிக் கொண்டிருந்தான்.

இச் சமயம், ராஜி, காபி டம்ளரை மேசைமீது வைத்துவிட்டுத் திரும்பினுள். அவன், ராஜி என்றுன். போகத் திரும்பிவிட்ட அவள், சட்டென்று திரும்பிக் குனிந்தாள். மெல்ல வாய் திறந்து 'நான்......நான்' என்று திணறினுள். அவன் நிமிர்ந்து அவளை நேராகப் பார்த்தான். அவள் உள்ளே ஓடிவிட்டாள். "என்னேடு இரண்டறக் கலந்துவிட்ட அவள், என் மன ஏட்டில் நடந்தபோது, அவள் உள்ளத்தில் மட்டும் இரண்டாம் தாரம் என்ற எண்ணம் பதிந்திருந்ததோ" என்று கலங்கினுன்.

மேகலாவை என்ன செய்வது? இரண்டாம் தாரமாகக் கொடுக்காமல் இருப்பதா? நம் பொருளாதார நிலையில் வேறென்ன செய்ய முடியும்? ராஜியையே நேராகக் கேட்டால் என்ன என்று எண்ணினுன்.

ராஜி, இந்த வரனை வேண்டாம் என்று சொல்லிவிடவா? என்று அவன் கேட்டான்; வேண்டாம் என்று சொல்லி விடுங்கள் என்றுள் அவள்.

அபிராமி இறந்ததுக்குப்பின் அவன் வாழ்வும் முற்றுப்பெருமல் அரை குறையாக நின்ற எல்லாப் பொறுப்புக்களையும் ஏற்று, முற்றிய கனவாகவே ராஜி விளங்கினுள். அவள் மனத்திலும் ஏதோ குறை ஒளிந்திருக்கிறது என்று அவன் நினைத்தான். அவன் மனம், அவள் கூறிய சொற்களையே எண்ணிச் சுழன்றது. இரவும் வந்தது. தரையில் துண்டை விரித்துக் கையைத் தலைக்கு அணையாக வைத்துப் படுத்துக் கொண்டு வானத்தை நோக்கிக் கொண்டிருந்தான். அவனது மனக் கண்முன், ராஜியை மணந்துகொண்டது முதல் ஏற்பட்ட நிகழ்ச்சிகள்— அடக்கமும் அன்பும் பாசமும் தவழ அவள் நடந்துகொண்ட நிகழ்ச்சிகள் தோன்றின. இச் சமயத்தில் ராஜி அங்கு வந்தாள். தலையணையை எடுத்து வந்து அதில் அவன் தலையைத் தூக்கி வைத்தாள்; சென்று விட்டாள்.

பொழுது புலர்ந்தது. தரகர் வந்தார். ஒரு என்ஜினீயர் வரன் இருப்பதாகவும், ஆனுல் கையில் ரொக்கம் தர வேண்டும் என்று கேட்ப தாகவும் கூறினுர். அவன் ராஜியைக் கூப்பிட்டான். ராஜி வந்தாள் தரகர், என்ஜினீயர் பையனைப் பற்றிக் கூறினுர். 'ஆஸ்தி இல்லை. பெண்ணையும் கொடுத்துப் பணத்தையும் கொடுக்க வேண்டும்' என்றுர்.

அதனுல் பரவாயில்லை. 'பணத்தைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம்; விசாரித்து வாருங்கள்' என்றுள் ராஜி. தரகர் சென்றுர்.

அவன், அவள் முகத்தைப் பார்க்காமலேயே, பணத்திற்கு...என்றுன். அவள், 'என் நகைகளைவிற்றுப் பணமாக்கலாம்' என்று கூறி உள்ளே போய் விட்டாள்.

இரண்டாம் தாரத்திற்கு ஆட்பட்ட ராஜியின் துயரம், அவனை வாட்டியது; அவளுக்குத் தீங்கு செய்ததுபோல் அவன் மனம் துடித்தது. அலுவலகத்திற்குச் செல்லும் நேரம் வந்ததும் அவன் போகாமல் இருந்தான். 'என்ன ஆபீசுக்கு டயமாகவில்லையா' என்று கூறிக்கொண்டே வந்து அவனுடைய தோளைத் தொட்டாள்; நெற்றியைத் தொட்டாள், அவன் உடம்பு சுட்டது; காய்ச்சல். மேகலாவை அனுப்பி டாக்டரை அழைத்துவரச் சொன்னாள். தன் மாங்கல்யத்தை எடுத்துக் கண்களில் ஒற்றிக் கொண்டாள். அபிராமியின் படத்தைப் பார்த்துத் தொழுதாள்.

அவன் ஜுரமாக இருந்த மூன்று நாட்களில் ராஜி மிகவும் இளைத்து விட்டாள். இதனைப் பார்த்த அவன், 'என் உடம்பைப் பார்க்க உன் உடம்பைக் கெடுத்துக் கொள்வதா' என்று கேட்டான். ராஜி தலையைக் குனிந்தபடியே சொட்டு சொட்டாகக் கண்ணீரை உதிர்த்தாள். அவன் பதறினான். என்ன ராஜி இது என்று கேட்டான்.

நீங்கள் ஜுரமாக இருக்கும்போது நான் நினைக்காததையெல்லாம் நான் நினைத்ததாக எண்ணி உளறினீர்கள்? என்றாள் ராஜி. 'அப்படியா? அதில் என்ன தவறு. நீ இரண்டாம் தாரமாக வந்தது தவறு என்று எண்ணி, இன்னும் மறுகுகிறாய் அல்லவா? அதனால்தான் மேகலாவுக்கு இரண்டாம் தாரம் வேண்டாம் என்றாய்' என்றான் அவன். 'நான் அவ்வாறு நினைக்கவில்லை. நினைத்தாலும் இனிப் பயன் என்ன' என்றாள் ராஜி. 'நீ விரும்பிய இன்பங்களை என்னால் தர முடியவில்லையே' என்றான் அவன்.

"அப்படியொன்றும் இல்லை! நமக்குள் உள்ள வயது வித்தியாசம் தான் எனக்குப் பயத்தைத் தந்தது. தங்களுக்குச் சிறு தலைவலி வந்தாலும் நான் தெய்வத்திடம் முறையிடுவேன். எனக்குரிய மங்கலங்களை இழக்காமல் உங்களுக்கு முன்னதாக இறந்துவிட விரும்பினேன். உங்களை இழந்துவிடுவேனோ என்ற அச்சமே என் வாழ்க்கையாகி விட்டது. ஆதலால் மேகலாவும் அவ்வாறு நினைத்து நினைத்து அஞ்சும் வாழ்வு வாழக்கூடாது என்று எண்ணினேன். செயலின் கொடுமையைக் காட்டிலும் எண்ணத்தின் கொடுமைதான் மிகப் பெரியது" என்றாள் ராஜி.

ராஜியின் உண்மையான உள்ளத்தை அவன் உணர்ந்தான். வாழ்வின் உயர்ந்த இன்பங்களைக் கூடத் துறக்கும் துணிவுபடைத்த அவளின் மனத்தை எண்ணினான். "ராஜி, இனி உனக்காகவே இந்த உடம்பை மிகவும் ஜாக்கிரதையாகப் பார்த்துக்கொள்ளப் போகின்றேன்" என்றான் அவன்.

ராஜி நிமிர்ந்து பார்த்தாள். அந்தப் பார்வையில் ஆழ்ந்த பாசம் சுரந்திருந்தது; தெய்வீக மணம் கமழ்ந்தது.

# மாதிரி வினத் தாள்–I

## P. U. C.

### Paper—I

### Part—II Tamil

**Prescribed Texts and Grammar**

Time 3 hrs] [Marks 100

1. எவையேனும் மூன்று வினக்களுக்கு விடை எழுதுக:—

(அ) பிசிராந்தையார் பாடிய புறநானூற்றுப் பாடலின் பொருளைத் தருக. அப் பாட்டின் திணை, துறைகளையும் விளக்குக.

(ஆ) வெகுளாமை பற்றித் திருவள்ளுவர் கூறும் கருத்துக்களைத் தொகுத்து எழுதுக.

(இ) கண்ணகி வழக்குரைத்து வென்றமையை விளக்கி வரைக.

(ஈ) அப்பூதி அடிகளின் பண்புகளைத் தொகுத்து எழுதுக.

(உ) பரசுராமனைத் தசரதன் பணிந்து இரந்து வேண்டியவற்றை விளக்குக.

(ஊ) உலூக முனிவன் திரிதராட்டிரனது அவைக் களத்தில் கூறிய அறிவுரைகளைத் தொகுத்து வரைக. 36

2. எவையேனும் மூன்றனை இடந்தோன்ற விளக்குக.

(அ) "கெடுக சிந்தை கடிதிவ டுணிவே
மூதின் மகளி ராத றகுமே"

(ஆ) "உள்ளத்தாற் பொய்யா தொழுகி னுலகத்தா
ருள்ளத்து ளெல்லா முளன்"

(இ) "யானோ அரசன் யானே கள்வன்"

(ஈ) "இன்றே வரும் இடையூறது நன்றாய் விடும்"

(உ) "முனிவர் சொற் பொய்க்குமோ? பொய்யாதே"

(ஊ) "கொல்லியது வென்றுரைத்தார்
தள்ளி வந்தோ மிப்பால்" 24

3. கோடிட்டவற்றுள் எவையேனும் ஐந்தனுக்கு இலக்கணக் குறிப்புக்கள் தருக :— 10

அல்லவை செய்யான்

பொய்யா விளக்கு

நகையும் உவகையும்

அறிவிப்பாயே அறிவிப்பாயே

கள்வனைக் கோறல்

கழல் பணிய

மும்மையின் உலகு

அருவர் எ(ற)

உலூகலமுடன் தவழ்ந்தவன்

4. நும் பாட நூலைத் தழுவிக் கீழ் வருவனவற்றிற்குக் கட்டுரை எழுதுக. 30

(அ) உதிர்ந்த மலர்கள் **அல்லது** கல்வெட்டுக்கள்

(ஆ) ஊஞ்சல் திருவிழா **அல்லது** வாணிகம்

# மாதிரி வினாத் தாள்-II

## Part—II

### Tamil—Paper—II

### Composition and Translation

Time 3 hrs] [Max. Marks 100

1. பின் வருவனவற்றுள் ஒன்று பற்றி இரண்டு பக்க அளவில் கட்டுரை வரைக :— 30.

   (அ) "மாணவரும் பொதுநலத் தொண்டும்"

   (ஆ) "நீவிர் விரும்பும் தமிழ்க் கவிஞர்"

   (இ) "விஞ்ஞானத்தால் ஏற்படும் நன்மை தீமைகள்"

2. பின்வரும் தலைப்புக்களில் ஒன்று பற்றி இரண்டு பக்க அளவில் கட்டுரை எழுதுக. 30

   (அ) "பவள மல்லிகை"

   (ஆ) "உறக்கம் தந்த ஓவியம்"

   (இ) "மாவிலைகள்"

3\. தமிழில் மொழி பெயர்க்க : 

Like almost every thing else, the air is always moving, move or less, and the changes in the direction of its movements are due to many different things. There is, for instance, the movement of the earth on itself, and also its changing position in regard to the sun, as it goes round the sun. These movements mean that different parts of the earth are exposed to the sun at different times, and that means, of course, that different parts of the air are exposed to the sun at different times. When the sun shines on the air, it makes it warm, and warm air is lighter than cold air, and will rise while cold air will flow in to take its place. But there is a great deal more in it than this. Besides the fact that the surface of the earth is not smooth, but has mountains and hills that turn the wind as the earth turns and tracts of water which cool the air as it passes over them, there are all sorts of electrical changes always going on in the air, and these possibly affect its weight - perhaps even the proportion of the various gales in it even has much as the heat of the sun affects it.